# குறளமுதம்



வெளியீடு

தமிழ் வளர்ச்சித் துறை




# குறளமுதம்

கன்னியாகுமரி
திருவள்ளுவர் சிலை திறப்பு விழா
சிறப்பு வெளியீடு
திருவள்ளுவராண்டு 2030 மார்கழி 17
1. 1. 2000

# குறளமுதம்

தொகுப்பாசிரியர்

முனைவர் இ. சுந்தரமூர்த்தி

பொதுப் பதிப்பாசிரியர்

முனைவர் ம. இராசேந்திரன்
தமிழ் வளர்ச்சி இயக்குநர்



வெளியீடு

தமிழ் வளர்ச்சி இயக்ககம்
குறளகம், சென்னை — 600 108

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | குறளமுதம் |
| வெளியீட்டாளர் | : | இயக்குநர்<br>தமிழ் வளர்ச்சி இயக்ககம்<br>குறளகம், சென்னை - 600 108 |
| தொகுப்பாசிரியர் | : | முனைவர் இ. சுந்தரமூர்த்தி |
| பதிப்புரிமை | : | தமிழ்நாடு அரசு |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| விலை | : | ரூ. 130 |
| பக்கம் | : | 624 |
| படிகள் | : | 2000 |
| வெளியிடப் பெற்ற நாள் | : | திருவள்ளுவராண்டு 2030<br>மார்கழி 17 (1.1.2000) |
| தாள் | : | என். எஸ். மேப்லித்தோ 18.6 |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| வடிவமைப்பு<br>அச்சிட்டோர் | : | வே. கருணாநிதி<br>தி பார்க்கர்<br>சென்னை - 14, 821 5684 |
| நூல் கிடைக்குமிடம் | | ○ தமிழ் வளர்ச்சி இயக்ககம்<br>குறளகம், சென்னை - 600 108.<br>○ உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை - 600 113. |

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை – 600 009
நாள்: 29.12. 1999

## வாழ்த்துரை

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார் - நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி

என்று கல்லாடர் வள்ளுவருக்குச் சொற்கோலம் தீட்டியுள்ளார். சாதி, மதம் கடந்து தமிழகமே சமத்துவபுரமாக மாற வேண்டும் என்ற எண்ணம் மலர்ந்து வரும் இக்கால கட்டத்தில் வள்ளுவருக்குச் சிலை திறப்பது பொருத்தமாக அமைகிறது.

திருக்குறள் மூலம் உலக மக்களுக்குத் தமிழை அடையாளம் காட்டித் தெரியப்படுத்திய திருவள்ளுவருக்கு நமது அன்பின் காணிக்கையாக வள்ளுவர் கோட்டமும், சிலையும் விளங்குகின்றன.

கடந்த இரண்டாயிரம் ஆண்டுச் சிந்தனை வளத்திற்கு ஊற்றுக் கண்ணாக விளங்கி இனிவரும் நூற்றாண்டுகளின் சிந்தனைக் களத்திற்குத் தளம் அமைத்துத் தந்துள்ளது திருக்குறள். திருக்குறள் தொடர்பாக 20ஆம் நூற்றாண்டில் வெளிவந்த குறிப்பிடத்தக்க கட்டுரைகளின் தொகுப்பாகக் 'குறளமுதம்' தந்துள்ள அனைவரும் பாராட்டுக்குரியவர்கள். நூலாக உருவாக்கித் தந்துள்ள தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சருக்கும் உழைப்பு நல்கியுள்ள மற்றவர்களுக்கும் என் வாழ்த்துக்கள்.

(மு. கருணாநிதி)



முனைவர் மு. தமிழ்க்குடிமகன்
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு
இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009
28. 12. 1999

# அணிந்துரை

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது நம் தமிழ்நாடு. ஆம். அதனால்தான் திருக்குறள் உலகப் பொதுமறை எனப் போற்றப்படுகிறது. வள்ளுவத்தின் மாண்பு சொல்லிலடங்காது. இதன் சிறப்பு கருதியே இந்திய மொழிகளும், உலக மொழிகள் பலவும் திருக்குறளைத் தம்வயமாக்கிக் கொண்டுள்ளன. இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பு வள்ளுவப் பெருந்தகை எடுத்துரைத்த கருத்துகள் இன்றைக்கும் - ஏன்? - என்றைக்குமே பொருந்தக் கூடியனவாயுள்ளன. வள்ளுவத்தில் கட்டுக்கடங்காத கற்பனை இல்லை; பொய்யும் புரட்டுமில்லை; மனிதன் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய வழிமுறைகளையே வள்ளுவர் வகுத்துரைக்கிறார். அவற்றை நயமான - நம்பும்படியான கற்பனையுடன் புனைந்துள்ளார். வள்ளுவம் ஒரு வாழ்வியல் நூல். உலகத்தின் எந்த மூலையில் உள்ள எவரும் பின்பற்றத் தக்க கருத்துக் களஞ்சியம். ஆயிரக்கணக்கான வழிநூல்கள் தோன்ற இடம் தந்து, அள்ள அள்ளக் குறையாத பெட்டக மாய்த் திகழ்வதுதான் திருக்குறளின் தனிச்சிறப்பு.

தமிழின் பெருமையை - தமிழரின் மாண்பை உலகிற்கு எடுத்துக்காட்டும் ஒளிவிளக்காம் திருக்குறளைத் தந்த திருவள்ளுவப் பெருந்தகைக்குத் தமிழகத்தின் தலைநகரில்

□

கோட்டம் அமைத்துத் தமிழ் மக்களின் அன்புப் பெருக்கினை மாண்புமிகு தமிழக முதல்வர் முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்கள் வெளிப்படுத்தினார்கள். தற்போது தமிழகத்தின் தென்முனையில் - கன்னியாகுமரியில் வள்ளுவப் பெருந் தகைக்கு 133 அடி உயரத்தில் மாபெருஞ் சிலை நிறுவி இரண்டாயிரமாவது ஆண்டின் தொடக்க நாளன்று திறந்து வைத்துப் பெருமை சேர்க்கிறார்கள். இது வரலாற்றுச் சிறப்பு மிக்க செய்தியாகும். இவ்விழாவின் ஒரு நிகழ்ச்சியாகத் தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் உருவாக்கப்பட்டுள்ள 'குறளமுதம்' எனும் இந்நூல் 1901ஆம் ஆண்டு முதல் 1999ஆம் ஆண்டுவரை திருக்குறள் பற்றி வெளிவந்துள்ள சான்றோர் களின் குறிப்பிடத்தக்க கட்டுரைகளின் தொகுப்பாகும். இந்நூல் வள்ளுவத்தின் சிறப்பை வையகத்திற்கு எடுத்துக் காட்டும் வகையில் அழகுற அமைந்துள்ளது.

தமிழ்ப் பணிகளில் என்னை ஆற்றுப்படுத்தி ஆக்கம் நல்கும் மாண்புமிகு தமிழக முதல்வர் முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலினைச் சீரிய முறையில் உருவாக்கி யுள்ள தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களையும், ஒத்துழைப்பு நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ, கட்டுரைகளைத் தொகுத்தளித்து உதவிய சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் இ. சுந்தரமூர்த்தி ஆகியோரையும் பாராட்டி மகிழ்கிறேன். தமிழுலகம் இந்நூலினை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் என நம்புகிறேன்.

(மு. தமிழ்க்குடிமகன்)

முனைவர் ம. இராசேந்திரன்
தமிழ் வளர்ச்சி இயக்குநர்




குறளகம்
சென்னை – 600 108
29. 12. 1999

# நன்றியுரை

இலக்கியத்திற்குப் பல்குரல் தன்மை வேண்டும் என்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட திருக்குறளே சான்றாக உள்ளது. காளிங்கர், பரிதியார், மணக்குடவர் என்று காலந்தோறும் திருக்குறளுக்கு உரையாசிரியர்கள் தோன்றிய வண்ணமே உள்ளனர். கடுகை அல்லது அணுவைத் துளைத்து ஏழ்கடலையும் உள்புகட்டிக் குறுகத் தறித்திருக்கிற திருக்குறள் தொடர்பாக இருபதாம் நூற்றாண்டில் வெளிவந்த கட்டுரைகளைத் தொகுத்தபோது வியப்பளித்தது. எந்த ஒரு தனி நூலும் இந்த அளவிற்கு ஆய்வுக்குட்படவில்லை. அவ்வளவு கட்டுரைகளையும் ஒரே தொகுதியாகப் போட இயலாத நிலையில் குறிப்பிட்ட சில கட்டுரைகள் இதில் இடம்பெறுகின்றன. கட்டுரைகள், எழுதப்பட்ட கால வரிசைப்படி இதில் இடம்பெற்றுள்ளன.

இவ்வாறு வெளியிடும் திட்டத்திற்குக் கேட்ட அளவிலேயே இசைவளித்து ஆக்கம் நல்கி வாழ்த்துரை வழங்கியுள்ள மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்ள நெறிப்படுத்தி வழி நடத்திச் செல்லும் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களுக்கும், உற்ற வகையில் ஆணைகளை வழங்கியுதவும் தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் அவர்களுக்கும், இந்நூலில் இடம் பெறும் கட்டுரைகளைத் தொகுத்தளித்துதவிய பேராசிரியர் முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச. சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும், நூல் உருவாக்கப் பணிகளில் உடனிருந்து ஒத்துழைத்த தமிழ் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர்கள் திரு. வை. கண்ணபுரக் கண்ணன், திரு.கூ.வ. எழிலரசு மற்றும் ஒப்பச்சர் திரு. சு. எத்திராசன் ஆகியோருக்கும் அச்சகத்தாருக்கும் நன்றி.

ம. இராசேந்திரன்

□

முனைவர் இ. சுந்தரமூர்த்தி
தமிழ்ப் பேராசிரியர்
சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை – 600 005
28. 12. 1999

# தொகுப்பாசிரியர் உரை

இருபதாம் நூற்றாண்டு நிறைவுற்று, புதிய நூற்றாண்டின் புதிய ஆயிரத்தாம் ஆண்டின் புத்தாண்டுத் தொடக்க நாளில் - வான்புகழ் பெற்ற வள்ளுவருக்கு வானளாவிய சிலை இந்திய நாட்டின் தென் கோடியில் - கன்னியாகுமரியில் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் அரிய முயற்சியால் நிறுவப்பெற்றுள்ளது. இமயத்தின் இமயமென .உயர்ந்து நிற்கிறார் திருவள்ளுவர். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னரேயே ஏற்றத்தாழ்வற்ற சமனிலைச் சமுதாயத்தை உருவாக்க விழைந்தவர். 'மேலிருந்தவரும் மேலல்லர், கீழிருந்தவரும் கீழல்லர்' என்ற உரத்த சிந்தனையின் மூலம் உலகறத்தை உணர்த்திய பெருந்தகையாளர். பண்பையும் அறிவையும் முதன்மைப்படுத்திச் சமுதாயச் சிக்கல்களுக்குத் தீர்வு காண விழைந்தவர். 'மானுடம்' அவர்தம் பாடுபொருளாக விளங்கியதால் தான் ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் அவரை நினைந்து போற்றுகின்றோம். இந்திய மொழிகளிலும், உலக மொழிகளிலும் திருவள்ளுவரின் எண்ணங்கள் காலந்தோறும் ஏற்றம் பெற்று விளங்குகின்றன.

தமிழரின் பண்பாட்டுக் கூறுகளைத் தனித்தன்மையாகக் கொண்டு தன்னையும், தன் மொழியையும், தன் மக்களையும், தன் நாட்டையும் அடையாளப்படுத்திக் காட்டுகின்ற அறிவுச் சுடராகத் திருவள்ளுவம் விளங்குகின்றது. திருக்குறள் தோன்றிய காலந்தொட்டு இன்றுவரை அதன் பாடுபொருளைப் பன்முகப் பார்வை கொண்டு ஆய்ந்தோர் பலர். திருக்குறளுக்

குப்பின் எழுந்த பல்வேறு இலக்கியங்களும் அதன் கருத்துச் செறிவையும், சொல்லாட்சித் திறத்தையும் பயன்படுத்திக் கொண்டன. திருக்குறளின் விளக்கங்களாக, உரை மரபின் முன்னோடிகளாக, பழந்தமிழ்ச் செய்யுள் இலக்கியங்களாக அவை விளங்கின. அவற்றிற்குப் பின்னர் இலக்கியங்களின் நுட்பத்தை அறிய விழைந்த உரையாசிரியர்கள் திருக்குறளில் மூழ்கி அவற்றின் தொடரிலும், சொற்புதுமையிலும், எளிமை யிலும் நுட்பம் கண்டு மகிழ்ந்தனர். திருக்குறளுக்கு உரை விளக்கம் தந்த பழைய உரையாசிரியர்களேயன்றி, பிற இலக்கிய இலக்கண உரையாசிரியர்களும், புத்துரையா சிரியர்களும் திருக்குறளைத் தம் விளக்கத்திற்கு விளக்காகப் பயன்படுத்தினர். காப்பியங்களும் சிற்றிலக்கியங்களும் திருக் குறளின் கருத்தைப் போற்றின; வளர்த்தன. 'சமயந்தொறும் நின்ற தனிநூலாக'த் திருக்குறள் விளங்கியது. சைவமும் வைணவமும் சமணமும் பௌத்தமும் கிறித்தவமும் பிற சமயங்களும் திருவள்ளுவரைத் தம்மவராகவே ஏற்றிப் போற்றின. திருவள்ளுவரின் குறள்ஈரடிகளைத் தாம் ஏத்தும் இறையாகவே போற்றினார் சிவப்பிரகாசர். மேலை நாட்டு வரவின் பயனாகத் திருக்குறள் ஓலையினின்றும் அச்சுருவிற் குப் பெருமாற்றம் கொள்கின்றது. 1812ஆம் ஆண்டில் முதன் முதல் திருக்குறள் அச்சேற்றப் பெறுகின்றது. தஞ்சை ஞானப் பிரகாசரும், அம்பலவாணத்தம்பிரானும் இந்த முதல் பதிப்பைத் தமிழில் அச்சேற்றி இலக்கிய உலகில் பெருமை பெறுகின்றனர். அச்சுருவம் பெற்ற பின்னர், கடந்த இரு நூற்றாண்டுகளாகத் திருக்குறளுக்கு எழுந்த நூல்கள் பல ஆயிரம். பதிப்புகளாகவும், பல்பொருள் ஆய்வுகளாகவும் நாள்தோறும் இன்றும் தோன்றிக் கொண்டேயுள்ளன. கணினி யுகத்திலும் குறள் குறுந்தகடுகளாக உருப்பெற்றுப் புதிய பொலிவில் கோலம் கொள்கிறது.

திருக்குறள் எழுந்த காலச்சூழலின் பின்னணியை ஆராய்ந்த அறிஞர் பெருமக்கள் தமிழின் பண்பாட்டை நிலை நிறுத்தத்

திருவள்ளுவர் மீட்டெடுத்த புதிய மரபுகளை ஆய்ந்து வெளியிட்டனர். தமிழ் அகமரபிலும் புதிய சிந்தனையைக் கண்ட புத்திலக்கியச் சிற்பியாகப் போற்றினர். அறத்தின் பல்வேறு வீறுகளையும் மானுட வாழ்க்கைக்குப் பொருத்திக் கண்ட வள்ளுவரின் சிந்தனைப் போக்கை விவரித்தனர். உலகியலும் உளவியலும் சார்ந்த வள்ளுவ நெஞ்சம் மானுட மேம்பாட்டையே போற்றி வலியுறுத்தியது என்பதை ஆய்வாளர் திறம்படச் சுட்டினர். பல்வேறு சமய, அரசியல், பண்பாட்டு இயக்கங்களும் வள்ளுவத்தின் பொதுமையை உணர்ந்து தழுவிச் சிறப்புப் பெற்றன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்த தமிழ் இதழ்கள் பலவும் திருக்குறளையே 'குறிக்கோள் தொடராகக்' கொண்டு வரலாற்றில் இடம் பெற்றன. தங்கள் இயக்கத்திற்கு வலிமை சேர்க்கும் கருத்துக் களஞ்சியமாகவும் திருக்குறளை மேற்கோள்காட்டி மகிழ்ந்தனர். விடுதலைக்கு முன்னும் பின்னும் தேசிய இயக்கங்களும் பகுத்தறிவு இயக்கங்களும் வான்புகழ் வள்ளுவரின் கருத்தைப் பரப்புவதில் பெருமுயற்சி எடுத்துக்கொண்டன. இந்திய விடுதலை வரலாற்று நிகழ்வுகளிலும் தலைவர்களும், அறிஞர்களும் திருக்குறளின் கருத்துகளைப் பரப்பினர்.

விடுதலைக்கு முன்னரே தந்தை பெரியார் குறட்பாவைத் தமிழர்தம் அடையாளச் சின்னமாக எடுத்துக் காட்டினார். விடுதலைக்குப்பின்னர் அறிஞர் அண்ணா 'திருக்குறளைத் திருப்பணி'யாகவே கொண்டு எழுச்சியுறச் செய்தார். குறளோவியம் கண்ட மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் சொல்லிலும் கல்லிலும் திருவள்ளுவரை வடித்துக் காட்டித் திருவள்ளுவருக்கு என்றும் அழியாத சின்னத்தை உருவாக்கியுள்ளார். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திருவள்ளுவரின் சிலையை வியந்து பாடிய (1904) திருமணம் செல்வக்கேசவராயரின் எண்ணத்தை எதிரொலிக்கும் வண்ணம் முக்கடல்கள் இணையும் தமிழ் மண்ணில் மனித

சிந்தனையின் தூயஉருவமாகத் திகழும் திருவள்ளுவரின் திருவுருவம் கம்பீரமாக எழுந்துநின்று புதிய ஆயிரத்தா மாண்டிற்கு நல்வரவு கூறுகின்றது.

வரலாற்றுச் சிறப்புப் பெற்ற இந்த நிகழ்ச்சியில் வெளி யிடப்படும் 'குறளமுதம்' ஒரு நூற்றாண்டு காலம் வள்ளுவ ஆய்வுகளைப் பதிவு செய்யும் முயற்சியின் ஒருமுன்னோடி நூல்.

திருக்குறள் குறித்து இந்த நூற்றாண்டின் அறிஞர் பெரு மக்கள் பலரும் திருக்குறள் ஆய்விற்குத் தம் பங்களிப்பைச் செய்துள்ளனர். நூற்றுக்கணக்கான அறிஞர்கள் இத்துறை யில் உழைத்துள்ளனர். அனைத்து ஆய்வு முயற்சிகளையும் பதிவு செய்ய வேண்டியது இன்றியமையாதது எனினும் கால வரையறைக்குள் ஒருசிலவே இடம் பெற்றுள்ளன. இடம் பெற வேண்டிய கட்டுரைகள் இன்னும் நூற்றுக்கணக்கில் உள. இத்தகைய முயற்சிகள் மேலும் பெருக இந்நூல் துணை நிற்கும்.

வரலாற்றுச் சிறப்புமிக்க இந்நூலில் இடம்பெறும் கட்டுரைகளைத் தொகுத்தளிக்கும் பணி எனக்கு அளிக்கப் பெற்றமைக்கு நான் பெரிதும் மகிழ்கிறேன். இந் நல்வாய்ப் பினை வழங்கிய மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களுக்கும், மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க் குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**இ. சுந்தரமூர்த்தி**

## பொருளடக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருக்குறள் ஆராய்ச்சி<br>மறைமலையடிகள் | 1902 | 17 |
| 2. | திருவள்ளுவர்<br>திருமணம் செல்வக் கேசவராய முதலியார் | 1904 | 35 |
| 3. | திருவள்ளுவரைப் பற்றிய<br>குறிப்புகள்<br>மு. இராகவையங்கார் | 1909 | 57 |
| 4. | திருக்குறள் வீட்டின் பால்<br>ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை | 1909 | 69 |
| 5. | திரிக்குறள்<br>அயோத்தி தாசர் | 1914 | 87 |
| 6. | குறள் தமிழ்முதனூலா தரும்<br>சாத்திர சாரத்திரட்டா?<br>சோமசுந்தரபாரதியார் | 1929 | 109 |
| 7. | திருக்குறள் அறத்துப்பால்<br>நாகை சொ. தண்டபாணிப்பிள்ளை | 1933 | 119 |
| 8. | குறள்.. குறளும் நானும்<br>தந்தை பெரியார் | 1935 | 125 |
| 9. | திருவள்ளுவரும் திருக்குறளும்<br>உ.வே. சாமிநாதையர் | 1936 | 141 |
| 10. | திருக்குறள் விரிவுரை<br>திரு.வி. கலியாண சுந்தரனார் | 1939 | 161 |
| 11. | நம் பண்டைய நீதி நூலாசிரியர்<br>பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | 1941 | 177 |
| 12. | வள்ளுவர் உள்ளம்<br>கி.ஆ.பெ. விசுவநாதம் | 1945 | 185 |
| 13. | வள்ளுவர் தந்த இன்பம்<br>இராய. சொக்கலிங்கனார் | 1947 | 207 |

| | | | |
|---|---|---|---|
| 14. | காதல் வாழ்க்கை<br>மு. வரதராசன் | 1948 | 227 |
| 15. | தெய்வப்புலவர் திருவள்ளுவர்<br>ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை | 1949 | 247 |
| 16. | திருக்குறள் -ஓர் திருப்பணி<br>அறிஞர் அண்ணா | 1949 | 261 |
| 17. | திருக்குறள் குழந்தையுரை<br>புலவர் குழந்தை | 1949 | 275 |
| 18. | வள்ளுவர் கொள்கையும்<br>வடவர் கொள்கையும்<br>இறையனார் | 1949 | 289 |
| 19. | திருக்குறளும் சமதர்மமும்<br>அ. சக்கரவர்த்தி நயினார் | 1949 | 307 |
| 20. | வள்ளுவர் நெஞ்சம்<br>வ. சுப. மாணிக்கம் | 1950 | 323 |
| 21. | திருக்குறளும் பொது<br>நோக்கமும்<br>புலவர் சரவண ஆறுமுக முதலியார் | 1951 | 349 |
| 22. | வள்ளுவர் - தெய்வ ஒளி<br>ச. வையாபுரிப்பிள்ளை | 1953 | 363 |
| 23. | வழி வழி வள்ளுவர்<br>சிலப்பதிகாரத்திலே வள்ளுவர்<br>ரா.பி. சேதுப்பிள்ளை | 1953 | 375 |
| 24. | பாரதிதாசன் திருக்குறள் உரை<br>வள்ளுவர் உள்ளம்<br>பாரதிதாசன் | 1955 | 391 |
| 25. | வள்ளுவர் காலம்<br>சாமி. சிதம்பரனார் | 1956 | 403 |
| 26. | வள்ளுவரின் உள்ளம்<br>நாமக்கல் கவிஞர் | 1956 | 409 |
| 27. | குறளோவியம்<br>கலைஞர் மு. கருணாநிதி | 1956 | 423 |

| | | | |
|---|---|---|---|
| 28. | வள்ளுவர் கண்டகாமம்<br>தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் | 1957 | 433 |
| 29. | திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்<br>ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் | 1959 | 445 |
| 30. | வள்ளுவர் வாசகம்<br>இராஜாஜி | 1960 | 463 |
| 31. | திருவள்ளுவர் காலம்<br>மா. இராசமாணிக்கனார் | 1963 | 481 |
| 32. | குறள் காட்டும் இயற்கை<br>ச. தண்டபாணிதேசிகர் | 1968 | 501 |
| 33. | திருவள்ளுவர் தமிழகத்தின் முதல் புரட்சியாளர்<br>இலக்குவனார் | 1970 | 517 |
| 34. | திருக்குறள் மணி விளக்கவுரை<br>கா. அப்பாத்துரை | 1971 | 527 |
| 35. | மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடைமை<br>ஞா. தேவநேயப் பாவாணர் | 1973 | 545 |
| 36. | சான்றோர்கண்ட திருவள்ளுவர்<br>க. த. திருநாவுக்கரசு | 1979 | 557 |
| 37. | உலகப் பொதுமறை திருக்குறள்<br>வீ. முனிசாமி | 1983 | 575 |
| 38. | வாக்காளர்களுக்கு வள்ளுவரின் அறிவுரைகள்<br>குன்றக்குடி அடிகளார் | 1988 | 587 |
| 39. | வள்ளுவர் வகுத்த நெறியில் வாழ்ந்த அறிஞர்<br>பேராசிரியர் க. அன்பழகன் | 1999 | 603 |
| 40. | உன்னைத் திருத்து<br>முனைவர் மு. தமிழ்க்குடிமகன் | 1999 | 613 |

# 1

# திருக்குறள் ஆராய்ச்சி

**1902**

**மறைமலையடிகள்**

## திருக்குறள் என்னும் பெயர்க்காரணம்

தமிழ்மொழியில் மிகச்சுருங்கிய வெண்பா யாப்பிற்குக் குறள் என்று பெயர். இஃது எழுசீரான் வந்த இரண்டு அடி உடையது. எழுசீரான் வருங்குறள் வெண்பாவினை ஆசிரியர் தொல்காப்பியனார் குறுவெண்பாட்டு என்பர்.[1] தமிழில் இதனினுஞ் சிறிய யாப்புக் காணப்படுவதில்லை. தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் தங்கருத்தினை விளக்கு தற்கு மிகச் சுருங்கிய இவ்வெண்பா யாப்பினைத் தெரிந் தெடுத்தவா றென்னையெனின்:- மக்கள் உயிர்க்கு இன்றி யமையாது வேண்டப்படும் உறுதிப் பொருள்களைத் தங் கூரிய அறிவினான் நன்கு ஆராய்ந்து, அவை தம்மை அவர் அறிவிற்பதியச் சுருக்க வகையான் விளக்குதற் பொருட்டு ஆசிரியர் இதனையே எடுத்துக் கொள்வாராயினர். நுண்ணிய பொருள் ஒன்றை ஒருவற்கு விளக்கலுறின், அதனைக் கேட்போன் உணர்வு சலியாவண்ணம் நன்கெடுத்துப்

புகட்டுதல் வேண்டும். அவ்வாறன்றிக் கேட்போனுணர்வு இளைப்புற்று ஒழிய வாளாது விரித்துச் சொல்லப்படுமாயின் அப்பொருள் எத்துணை நுண்ணிதாயினும் அஃது அவன் உள்ளத்தின்கண் அழுந்தமாட்டாதாய்ப்போம். மக்களுயிர்க்கு வேண்டப்படும் பொருட்டுறைகளெல்லாம் விரித்துரைப் போமெனப் புகுந்த வடமொழி மிருதிநூல்கள் வரம்பின்றி விரிந்தமையாற்றான் பயன்படுதலின்றி வழக்கு வீழ்ந்து ஒழிந்தன. உயிர்க்கு உறுதிப் பொருள் நாடி அவற்றை யெல்லாந் தொகுத்து உரைக்க ஒருப்பட்ட திருவள்ளுவனார் இந்நுட்பம் தேர்ந்து தாங்கருதிய பொருளைக் கருதியவாறே தெரித்தற்குச் சிறந்த கருவியாக இக்குறள் வெண்பாவினால் நூல் இயற்று வாராயினர்.

ஒருவன் அறிவை மயக்கி அவனைத் தன்வயப்படுத் தலும், ஒருவற்கு ஒரு பொருளின் உண்மைத் தன்மை காட்டி அவனறிவை நன்கு விளக்கி அவனைத் தன்வயப்படுத்தலும் என நூல்களாற் கொள்ளப்படும் முறை இருவகைத்தாம். இதனை ஓர் எடுத்துக்காட்டின்கண் வைத்துக் காட்டுதும். ஒரு பெண், பொற்பூ இடைமிடைந்து பொற்சரிகை விளிம்பு கோத்து மிளிரும் நீலப்பட்டாடை நலம்பெற உடுத்து, நிறந் தெரிந்த முழுமணிகள் அழுத்தி, நறிது முற்றிய நல்லணிகலன் அணிந்து, புழுகு நெய்யும் நானமும் விரைகமழ நறுங்கூந் தலில் உரைத்து, உறுப்புத் திருத்தி ஒய்யாரங் காட்டி உவகை பொருத்தி உரிய அன்பின் சில்லுரை இன்புற மொழிந்து ஓர் ஆண்மகனைத் தன்வயப்படுத்தல்போல்வது முதலில் கூறிய முறை. இரண்டாவது முறையோ அவ்வாறன்றி, இயற்கை யழகு வாய்ப்பப் பெற்றாள் ஒரு திருமகள் செயற்கை நலம் பெறாளாய்க் கருகி நீண்ட விரிகுழற் கற்றையும், சேலெனப் பிறழும் பெருமதர் விழியும், முல்லை மொக்குள் போன்ற மெல்லிய மூக்கும், கொவ்வைப் பழத்தைப் பழித்த செவ்விய இதழும், யானை மருப்பிற்பொலியும் இசைந்த எயிறும், கடைந்துருட்டியதன்ன பச்சிளந் தோளும், பூங்கொம்பு போல் துவளும் ஒசிவும் உடையவளாய்க் கள்ள நோக்கமின்றி உள்ளஞ் செவ்வியளாய்க் கிளியென மிழற்றி மயிலென

உலவித் தன்மாட்டு முதிர்ந்த அன்புடைய காதலன் பாற்றானும் உள்ளம் உருகி ஒருமித்து அவனைத் தன்பாற் படுத்தல் போல்வதாம். இவ்வாறு இருதிறப்பட்ட நூன்முறைகள் ஓர் உண்மையைப் பலவகையாற் புனைந்து விரித்துரைக்கும் நெறிமழுங்கிய அறிவினார் பொருட்டும் ஓர் உண்மைப் பொருளைக் கிடந்தவாறே எடுத்துச் செவ்விதின் விளக்கி அறிவுகொளுத்து நெறிமிக்க நுண்ணுணர்வினார் பொருட்டும் நூல்களான் மேற்கொள்ளப்பட்டன. இவ்விரண்டினுள்ளும் பிற்கூறிய நெறியே சிறப்புடைத்தாதல் எல்லார்க்குந் தெற்றென விளங்கும்.

ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் மக்களுயிர்க்கு உறுதிப் பொருளாவனவற்றைத் தொகுத்தெடுத்து, மற்று அவைதம்மைப் பலவகையாற் புனைந்து கூறுதற்கு இசையாராய், உண்மைத் தன்மை உள்ளவாறே புலப்படத் தெளித்துக் கூறுகின்றாராகலின், இந்நூல் நுண்ணறிவு விளங்கப் பெறுதலுடைய மாணாக்கரை நோக்கி எழுந்ததென்றுணர்க. இன்னோர் நல்லறிவிற்குப் பொருந்தச் சுருங்கத் தெரித்தல்வல்ல யாப்புக் குறுவெண்பாட்டையன்றிப் பிறிதொன்று காணப்படாமையின், இதுவே இந்நூலுக்கு இணங்கிய கருவியாயிற்று என்க. மற்றைப் பாவிலும் பாவினங்களிலும் இங்ஙனம் ஓர் உண்மைப் பொருளைச் சொற்சுருங்க ஓதி அவ்வுண்மை மட்டுமே புலப்படுத்தல் ஒருவாற்றானும் முடியாமை காண்க. இது தெரிதற்பொருட்டு இந்நூலின்கண் ஒரு செய்யுளை நாலடியாரிற் செய்யுளொன்றனோடு ஒப்பவைத்து விளக்கிக் காட்டுவாம். அறிவுடையார் நட்பு நாடோறும் பெருகுதலும் அறிவிலார் நட்பு முன்கொண்ட அளவிற்றேய்ந்து அருகுதலும் உணர்த்துதற்கு ஆசிரியர்,

[2]நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு

என்று கூறியருளினார். இதன் பொருள்: நீரவர் கேண்மை பிறை நிறை நீர' எனவும், 'பேதையார் நட்பு மதிப்பின் நீர' எனவும் பிரித்து இயைத்து, 'அறிவுடையார் கேண்மை முன்

கொண்ட அளவிற்றன்றிப் பிறை நாடோறுங் கலை வளர்தல் போல வளரும் இயற்கைத்தாம்; அறிவில்லார் கேண்மை அவர் அது கொள்ளுங்காலத்துப் பெரிதாய்ப் பின் நாட்களிற் கலைமுற்றியமதியந் தேய்ந்து அறுதல்போலத் தேய்ந்தொழி யுந் தன்மைத்தாம்' என்க. பிறை' நேயம் வளர்தலை யுணர்த்து தற்கும், 'மதி' அது தேய்தலையுணர்த்துதற்கும் உவமைகளாய் எழுந்தன. 'பிறை' 'மதி' என்னுஞ் சொற்களானே ஆசிரியர் கருதிய பொருள் இனிது விளங்குமாகவும், 'நிறை' என்னும் ஒரு சொல் வேண்டா கூறலாமெனின்:- 'மதி பின் குறை நீர' எனப் பின்னுற்ற சொற்றொடர்ப் பொருள் நிரம்புவதற்கு வருவிக்கப்படுங் 'குறை' என்னுஞ் சொல் அதனாற் பெறப்படு தலானும், உவமைக்கும் பொருளுக்குமுள்ள பொதுத்தன்மை யினை விளக்குதற்கு அச்சொல் இன்றியமையாது வேண்டப் படுதலானும் அது வேண்டா கூறலாவது யாங்ஙனமென மறுக்க. 'நிறை' என்னும் அச்சொல் இல்வழியும் 'பிறை' 'மதி' என்பவற்றால் 'நிறை' 'குறை' என்னுஞ் சொற்கள் உயர்த் துணர்ந்து வருவிக்கப்படுமாகலின், அது வேண்டா கூறலே யாம் பிறவெனின்:- அற்றன்று. சொற்றொடர்ப் பொருட்கு வேண்டும் யாதானும் ஒரு சொல் நின்று மற்றொன்றனை வருவிப்பதன்றி அஃதின்றியே அவை வருவிக்கப்படுமென்றல் பொருந்தாக்கூற்றாம். அற்றன்று. 'பிறை' 'மதி' என்பவற்றால் அவை உய்த்துணரப்படுதல் ஒருதலையாகலின் அச்சொல் நின்று பயமின்றேயெனின்;-முழுவதும் வருவிக்கற்பாலதனை உய்த்துக் கொண்டுணர்தல் ஒரு சொல் இல்வழியே யன்றி உள்வழிப் பொருந்தாதெனச் [3]சேனாவரையரு முரைத்தா ராகலின், அங்ஙனங் கடாவுதல் இசையாதென விடுக்க. இனி, அச்செய்யுட் பொருளையே விளக்க நாலடியாரில்,

> [4]பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
> வரிசை வரிசையா நந்தும் – வரிசையால்
> வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
> தானே சிறியார் தொடர்பு.

என்றொரு செய்யுள் வருகின்றது. இச்செய்யுட்கண் பெரியவர் கேண்மை என்பது மேலைத்திருக்குறளில் 'நீரவர் கேண்மை'

என்பதிலும், 'பிறை போல நாளும் வரிசை வரிசையா நந்தும்' என்பது 'பிறைநிறை நீர்' என்பதிலும், 'சிறியார் தொடர்பு' என்பது 'பேதையார் நட்பு' என்பதிலும், 'வரிசையால் வானூர் மதியம் போல் வைகலுந்தேயுமே', என்பது 'மதிப்பின் நீர' என்பதிலும் அடங்குதல் காண்க. இச்செய்யுளிற், போல, வைகலும், தேயுமே, தானே முதலிய சொற்கள் வேண்டா கூறலாய் நிற்றல் காண்க. அற்றேல் இச்செய்யுள் குற்றம் படுமோவெனின்:- படாது. என்னை? அச்சொற்களெல்லாம் ஓர் அணியியல் குறித்து மழுங்கிய உணர்வினார்க்கு மகிழ்ச்சி தருமாகலானும், நுணுகி யறிய வேண்டாது எளிதிலே அவர்க்குப் பொருள் புலப் படுத்தலானுமென்க. வானூர் மதியம் என்பது 'குழவியூர்தலை' நினைப்பித்தலின் அஃது ஓரணியியலாயிற்று. இந்நாலடியாரிற் செய்யுள் வாயகன்ற பொன் வள்ளத்தில் நிரப்பிய பனிநீர் போல்வதாம். மற்று அத் திருக்குறட்பாவோ மாணிக்கச் செப்பினுட் பொதிந்திட்ட நானம் போல்வதாம். மாணிக்கச் செப்பு விலையேறப் பெறுத லுடன் செய்தமைத்தற்கும் அருமை யுடைத்தாம்; பொற் கிண்ணம் விலை குறையப் பெறுவதுடன் செய்தமைப்பதற்கும் எளிதின் நெகிழ்தலுடைத்தாம்; நாலடியார் செய்யுளியற்கை குணஞ்சிறிதாதலுடன் புலவனாற் பாடுதற்கும் எண்மை யுடைத்தாம்; திருக்குறு வெண்பாட்டோ குணம் பெரிதாத லுடன் அமைத்தற்கும் அருமையுடைத்தாம். இனி, அப்பொன் வள்ளத்தில் நிறைத்த பனிநீர் நெகிழ்ந்த வுருவின் விரைந்தழி யும் மணமுடைமை போல், நாலடியாரிற் செய்யுட் பொருளுங் கேட்கும் பருப்பொருளறிவினார்க்குச் சில கணங்கண் மாத்தி ரையே மகிழ்ச்சி பயந்து பின் அவருள்ளத்தே நிலைபேறின்றி ஒழியும்; மாணிக்கச் செப்பினுட் செறித்து வைத்த நானங் கட்டுருவினால் நிலைபெறக் கமழும் நறுமணமுடைமை போலத் திருக்குறட் பொருளுங் கேட்கும் நுண்ணுணர் வினார்க்கு நினைத்தோறும் உரைத்தொறும் மகிழ்ச்சி பயந்து அவருள்ளத்தே ஆழ்ந்து நிலைபெறுவதா மென்க. இதனால், நாலடியார் முதலான நூல் யாப்புகள் பொதுவறிவினார்க்கு அறிவுறுத்தும் பொருட்டுப் புனைந்துரை வகையாற் சொற்

பொருள் நெகிழ்ந்து ஒழுகும் முறை பற்றிச் செய்யப்பட்டனவா மென்பதூஉம், திருக்குறள் யாப்பு நுண்ணுணர்வினார் பொருட்டுச் சொற்சுருக்கமும் பொருட் செறிவும் பொதுள இறுகிய நுண்நிலையால் அமைக்கப்படும் நெறி தழுவி வந்ததாமென்பதூஉம் நன்கறியப்படும் என்க. மக்களுயிர்க் குறுதிப்பொருள் விளக்குதலே உள்ளுறை யாக் கொண்டு எழுந்த காப்பிய நூல்கள் புனைந்துரை வகை பற்றி வந்தனவே யாமென்க. அற்றேற், காப்பிய நூல்களுஞ்சொற்செறிவு பொருட் செறிவு நன்கமைந்து விளங்கக் கொண்டு மாகலின், அவை யெல்லாம் நெகிழ்ந்தொழுகும் புனைந்துரை நெறிப்பற்றி வந்தனவென்றுரைத்தல் பொருந்தாதாம் பிற வெனின்; நன்று கூறினாய், அக்காப்பிய நூல்கள் தம்மிற்றாழ்ந்தவற்றை நோக்கச் சொற்செறிவு பொருட் செறிவு உடையவெனப்படுமல்லது தம்மின் மிகவுயர்ந்த இத் தெய்வத் திருக்குறள் நூலை நோக்க நெகிழ்ந்த நிலையினவே யாம் என்க.

## திருக்குறள் தோன்றிய காலநிலை

### ஆரியர் வரவும் வாழ்க்கையும்

இனி, இங்ஙனஞ் சொல்லும் பொருளுஞ் செறிந்து ஆழ்ந்த திருக்குறள் யாப்பிற்கும், அஃது எழுந்த கால நிகழ்ச் சிக்கும் நிரம்ப ஒற்றுமை யுண்டென்பதூஉம் காட்டுவாம். வடக்கே ஆசியாக் கண்டத்தின் இடையிலிருந்து தமிழ்நாடெனப்படும் இவ்விந்திய தேயத்துட்புகுந்த ஆரியர் தமிழருடன் ஒற்றுமை யாய் வாழத் தொடங்கிய காலம் கிறித்து பிறப்பதற்கு ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயாம். அவ்வோராயிர ஆண்டுகட்கு நெடுநாள் முன் ஆரியர் நாகரிக மில்லாத நிலையிலிருந்தனர். சிந்துநதி ஓடும் தேயங்களில் அவ்வாரியர் தம்நிலைக்கு ஒவ்வாத் தமிழரொடு மலைந்து மாறுபட்டு நின்றுழி, உலக இயற்கையிற் றோன்றுந் தோற்றங்களை மருண்டு வணங்கித் தம்மோடு எதிரிய தமிழரை அழிக்கும்படி வேண்டினர். இதனை இருக்கு வேதத்தின் இரண்டாம் மண்டிலத்து இருபதாவது பண்ணிற் போந்த ஆறாவது ஏழாவது பாட்டுக்களான,

> 'அரிய காரியங்களை முடிப்பவனும் மிகப் புகழ் பெற்ற கடவுளுமான இந்திரன் ஆரிய மகனை உயர்த்துகின்றான். வலிமையும் ஆற்றலும் வெற்றியும் உடையோனாய் அவன் அருவருக்கப்படுந் தாசனைத் தலைகவிழச் செய்கின்றான்.

'விருத்திரனைக் கொன்றவனும் நகரங்களை யழிப்பவனுமான இந்திரன் அறிவில்லா மக்களான தாசருடைய படைகளைச் சின்ன பின்னமாக்குகின்றான். அவன் ஆரிய மகனுக்கு என்று நீரையும் நிலத்தையும் படைத்து, வேள்வி செய்வோர் விரும்பியவற்றைத் தருகின்றான் என்பவற்றானும். ஏழாவது மண்டிலத்துத் தொண்ணூற்றாறாவது பண்ணிற் பதின்மூன்று முதற்பதினைந்து வரையிலுள்ள பாட்டுக்களான.

'விரைந்து செல்கின்ற கரிய மறவன் அஞ்சுமதி யாற்றங் கரையில் பதினாயிரம் படைகளுடன் இருந்தான். இந்திரன், உரத்து ஊளையிடுகின்ற இத்தலைவன் இருப்பை அறிந்து, ஆரியமக்களின் நன்மைக்காக அக்கொள்ளைக் கூட்டத்தாரை அழித்தனன்.

'மாசியிற் பகலவன் மறைந்திருத்தல்போல அஞ்சுமதி யாற்றங்கரைப் பக்கங்களில் அக்கரிய மறவன் ஒளிந்திருத்தலைக் கண்டேன். ஓ மருத்துக்களே! நீங்கள் அவனுடன் முலைந்து அவனை அழிக்கும்படி விரும்புகின்றேன்' என்று இந்திரன் கூறினான்.

'அக் காரியமறவன் பிறகு அவ் வஞ்சுமதி யாற்றங்கரையில் விளங்கித் தோன்றினான். இந்திரன் பிருகற்பதியைத் தன்னுடன் கூட்டிக் கொண்டுபோய் இரக்கமில்லாத அப்படையை அழித்தனன்' என்பவற்றானும் நன்கு அறியலாம். ஆரியர் இங்ஙனந் தமிழரொடு மலைவு கொண்டிருக்கையில் தமக்கு வலிவு ஏறுதற் பொருட்டும் தமக்கு துணைசெய்யும் இந்திரன், மருத்துக்கள் முதலான தேவர்க்கு உரம் பெருகுதற் பொருட்டும் சோமச்சாற்றையும் நெய்யையுஞ் சொரிந்து அளவிறந்த விலங்குகளைக் கொன்று வேள்விகள் வேட்டு வந்தனர்.

இவைகளைச் சீர்பெற நடத்துதலிலும், இவற்றிற்கு வேண்டும் பெரும் பொருளைத் திரட்டுதலிலும் மிக முயன்றனர். இவ்வாறு வேள்விச் சடங்குகட்கு முதன்மைத்து ஆரியர் ஒழுகிய நாட்களில் மெய்ப் பொருட்டன்மை காட் டும் நூல் ஒன்றேனும் அவர்களால் வரையப்படவில்லை. இங்ஙனம் அவ்: மிக முயன்று செய்யும் வேள்விச்சடங்கிற்கு ஒரு சிறிதும் ஒருப்படாத தமிழ் மக்கள் தம்வழியே மெய்ப் பொருளா ராய்ச்சியிற்றலைப்பட்டு விளங்கினர். வடநாட்டிற் செங்கோ லோச்சிய தமிழ் அரசர்கள் ஆரிய மக்கள் மாட்டு மாறுபடுதல் இலராயினும், அவர் செய்யுங் கருமச் சடங்கிற்கு ஒருவகையால் இணங்கிப் பெரும்பாலுந் தமக்குரிய மெய்ப்பொருளா ராய்ச்சியிலேயே நிலைபெற்று நின்றனர். ஆரியரோ வேள்வி களின் உயர்வும் அவற்றை வேட்கு முறைகள் பலவும்மிக விரித்து ஆய்ந்து பிராமணங்கள் எழுது வாராயினர். ஆரிய மக்கள் தாஞ்சார்ந்துநின்ற தமிழவரசர்கள் பலர்க்கும் அவ் வேள்விச் சிறப்பினை உணர்த்தி அவரும் அது செய்யுமாறு வலியுறுத்துதற்குப் புகுந்தனர். புகுத, ஒரு சிலர் அதற்கு ஒருப் பட்டார்; ஒரு சிலர் அது செய்தற்கு உடன் படாராயினர். விதேகர்கட்கு வேந்தனான சனகன் என்னும் அரசன் அவைக் களத்தில் ஆரியக் குருக்கண்மார் பலர் இடம் பெற்றனர். அவருள் மிகச்சிறந்த யாஞ்ஞுவற்கியர் என்னும் ஆரிய குரு, அவ்வேந்தன் உதவியால் வடமொழிப் பயிற்சி யினைப் பெருகச் செய்து எசுர் வேதத்தினைப் பாகுபாடு செய்து ஒழுங்குபடுத்தினார். அவராற் பாகுபடுத்தப்பட்ட எசுர்வேத பாகம் இக்காலத்துச் சுக்கில எசுர்வேதமென்று பெயர் பெறு கின்றது. இவ்வெசுர்வேத பிராமணத்திற்கு விரிந்தஓர் உரையும் இவரால் இயற்றியிடப்பட்டது.

## ஆரிய முனிவர்க்குத் தமிழ் மன்னர் மெய்ப்பொருள் தேற்றினமை

இங்ஙனஞ் சிறந்த இவ் யாஞ்ஞுவற்கிய முனிவரையுள் ளிட்டு ஆரியக்குருக்கண்மார் மூவர், இச்சனக வேந்தன்

வினாவிய தத்துவப் பொருள்களை அறிய மாட்டாராய்த் தலைதாழ்க்கப் பட்டுப்போக, யாஞ்ஞுவற்கியர் மட்டும் பின்னும் அப்பொருள் நுட்பந்தேரும் வேட்கை பெரிது முடையராய்ச் சனகனுக்குக் குற்றேவல் புரிந்து, அவன் தேரிற் செல்கையில் அவனுடன் சென்று அதனால் அவ் விரகசியப் பொருள் அறிவுறுக்கப்பட்டுத் தெளிந்தா ரென்பதும், [5]காசிக் குடிகட்கு இறைமகனான அசாதசத்துரு என்பவனோடு பாலாகி என்னும் ஆரியக்குரு ஒருவர் செருக்குற்றுச் சென்று வழக்காடி அவன் வினாவியவற்றிற்கு இறை தரமாட்டாராய் வாளாதிருப்ப அவன் அவரை நோக்கி, 'ஓ பாலகி இவ்வளவு தான் நீர் அறிவீர்!' என, அக்குருவும், 'ஓம் அவ்வளவுதான்' என, அவ்வரசன். 'ஓ பாலாகி, இவை எல்லாச் சடங்கிற்கும் முதல்வனாய் எல்லாவற்றையும் படைக்க வல்லனான இறைவன் ஒருவனே அறிந்து வழிபடற் பாலன்' என்றவர்க்கு உணர்வுகொளுத்தினானென்பதும், [6]சுவேதகேது வென்னும் மற்றும் ஓர் ஆரியக்குரு பாஞ்சாலர் கூடிய பேரவையிற் சென்று, அங்குச் சைவலி என்னும் ஒருவனோடு வழக்கிட்டுத் தோல்வியடைந்து வருந்திய வுள்ளமுடையோனாய் அவ்வுண் மைப் பொருளைத் தனக்கு அறிவுறுத்துகவென்று அவ்வரச னைக் குறையிரப்ப, அவனும் அவற்கு அதனை விளங்க வுரைத்தும், பின்னும், 'நினக்கு முன்னே, இவ்வரிய ஞானப் பொருள் பிராமணர் எவர்க்குஞ் சொல்லப் பட்டிலது; இந்த ஞானபோதனை இவ்வுலக மெங்கணும் எம்முடைய வகுப்பி னர்க்கே உரித்தாயுள்ளன. பிறரதனை அறியார்' என்று கூறினா னென்பதும் [7]உபநிடதங்களிற் பொருள்பெறக் கிளந் தோதப்பட்டமை காண்க. இவற்றாற், பிராமணரின் வேறாகப் பிரித்துரைக்கப்பட்ட அரசவகுப்பினர் ஆரியரல்லாமையும் பிராமணர் இயற்றிய வேட்டல் நெறிகள் அவரால் ஏற்றுக் கொள்ளப்படாமல் மறுக்கப்பட்டமையும், பிராமணர் அறியாத மெய்ப் பொருளாராய்ச்சி அவ்வரச வகுப்பினர்க் கேயோர் உரிமைப் பொருளாயிருந்தமையும், அந் நுண்பொருள் வழக்கு நேர்ந்துழியெல்லாம் பிராமணர் மருண்டு அவரால் தெளிவுறுத்தப்பட்டமையும் நன்குபெறக் கிடந்தன.

## ஆரியர் தமிழரைப் பகைத்தமை

இன்னும் இருக்குவேதந் தொகுத்துப் பாகுபடுத்தப் பட்ட காலத்தே ஆரியக் குருக்கண்மார்க்குந் தமிழக் குருக் கண்மார்க்கும் மாறுபாடு பெரிதாயிற்றென்பது. இருக்கு வேதத்தின் மூன்றாவது மண்டிலத்தை இயற்றிய விசுவாமித்திர ரென்னும் அரசவகுப்பினர்க்கும் அதன் ஏழாம் மண்டிலத்தை இயற்றிய வசிட்டரென்னும் ஆரியவகுப்பினர்க்கும் இடை நிகழ்ந்த பொறாமையே சான்றாமென்பது. இவ்வாறே ஆரியவகுப்பினரிற் சேர்ந்த சமதக்கினி என்னும் இருடிக்குப் புதல்வராய்ப் பிறந்த பரசிராமர் திராவிட வகுப்பிற்குரியரான அரசரை யெல்லாம் வேரொடு அழிக்க வேண்டுமென் னும் வஞ்சம் முதிர்ந்து திரிந்ததூஉங்காண்க. தசரதன் என்னும் வேந்தனும் அவனருமைப் புதல்வர்களான சீராமன் முதலி யோருந் திராவிட தேயத்துத் திராவிட அரசர்களே என்பது கொழும்பிற் புகழோங்கிய அறிஞரான வி. ஜே. தம்பிப் பிள்ளையவர்கள் எழுதிய [8]“இராமரும் குரங்கு வீரர்களும்' என்னும் ஆராய்ச்சியுரையானும் நன்கு துணியப்படும். இஃ தென்னை? வடநாட்டிற் பிறந்து வடமொழியே வழங்கி வட நூல்களே எழுதிய விசுவாமித்திரர், சனகன் முதலியோரைத் தமிழரெனக் கூறியது ஒரு சிறிதும் பொருந்தாதாம். பிற வெனின், அற்றன்று; ஆரியர் இவ்விந்திய நாட்டிற் புகுதன் முன் ஈண்டுறைந்தார் தமிழரே என்பது வரலாற்று நூல் வல் லார்க் கெல்லாம் ஒப்ப முடிந்தமையின், வடநாட்டிலிருந்த தமிழர் ஆரியர் வந்தபின் அவரோ டொருமித்திருந்தும், அவரொடு மறுதலைப்பட்டு மலைந்தும் உழிதருகையில், அவர் சொல்லைத் தாங்கற்று அவர்க்குடன்படாது மாறாடு வாராயினராகலான் தமிழர்க்கும் வடசொல் உரித்தாயிற்று. இடவேறுபாட்டானுஞ் சொல்வேறுபாட்டானும் ஒரு சாதி யரைப் பிற சாதியாராகக் கருதல் அளவை நூல் வழக்கன்று. வங்காளத்து இந்தியர்கள் பலர் ஆங்கில மொழியினைத் திறம்படக் கற்று ஆங்கிலநாட்டிற் சென்று உறைதல் பற்றி அவரெல்லாம் ஆங்கில சாதியாரென்றே கொள்ளப்படுவரோ? படாரன்றே. ‘குலவிச்சை கல்லாமற் பாகம் படும்' என்றவாறு,

அவரவர் குலத்திற்குரிய குணமும் ஒழுக்கமும் இயற்கையிலே உளவாம். ஆகவே, 'நிலத்திற் கிடந்தமை கால் காட்டுங் காட்டுங், குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்' என்னும் அருட்டிருமொழி யின்படி அவரவர் ஒழுகலாற்றான் மட்டும் அவரவர் குல வியற்கை அறியற்பாலதாகுமென்க. பண்டைக் காலம் தொட்டுத் தமிழ் மக்களியற்றிய நூல்களிலெல்லாம் ஆழ்ந்த மெய்ப் பொருளாராய்ச்சியே காணக்கிடக்கின்றது. தொன்றுதொட்டு ஆரியமக்களியற்றிய நூல்களிலெல்லாம் இயற்கைத்தோற்ற வழிபாடும் வேட்டன் முதலான கருமங் களியற்றுதலில் உறைப்புமே காணப்படுகின்றன.

## தொல்காப்பியமும் இருக்கு வேதமும்

இவ்வாறு இவ்விருசாதியார்க்குரிய சிறப்பியல்புகளை அறியல்வேண்டிற்றமிழர்க்குத் தொல்காப்பியமும் ஆரியர்க்கு இருக்கு வேதமுங் கருவியாயிருந்து உதவுகின்றன. தமிழர்க்குத் தொல்காப்பிய மொன்றுமே மிகப்பழைய நூலென்பது, உரையாசிரியர் நச்சினார்க்கினியர், 'சில்வாழ்நாட் பல் பணிச் சிற்றறிவினோர் அறிதல் வேண்டி வியாதர் வேதங்களை நான்கு கூறாகப் பகுக்க முன்னரே தொல்காப்பிய மியற்றப் பட்டது'[9] என்று ஓதுமாற்றால் நன்குணரப்படும். இங்ஙனம் மிகப் பழையதான தொல்காப்பியம் நூல் எழுத்துச் சொல்லியல்பு களை நன்காராய்ந்துணர்த்தியபின், மக்களுயிர்க் குறுதியென நாடப்படும் எல்லாப் பொருள்களையும் அகம், புறம் எனப் பகுத்து முறைவழாது தெரித்துச் செவ்விதின் விளக்கி, அவ்வாறு விளக்கும் பகுதிக்குப் பொருளியல் என்னும் பெய ருங்காட்டித் திகழுகின்றது; அது மக்கள் மனவறிவு புறத்தே விரிந்து சென்றறியும் பொருட்பகுதியினை இனிது விதக்கு மாறு போலவே, அவ்வறிவு அகத்தே குவிந்து மடங்கி உலகிற்கு முழு முதற்பொருளான இறைவன்பால் ஒருங்கு பட்டு நிற்றன்மரபும், அங்ஙனம் ஒருங்குபட்டு நிற்றற்கு நிலைக்கள னான அம்முதற்பொருள் 'ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவங்கடந்த பொருளாங்கந்தழி[10] யினியற் கையுந் தெளிவுபெறக் குறித்து நின்றது. இவ்வாறு நுனித்

தறியப்படும் பொருள் மலிந்து பாகுபாடுற்று நடைபெறுந் தொல்காப்பிய முழுமுதனூலோடு ஒத்துப் பார்க்குமிடத்து, ஆரியர்க்கு மிகப்பழையதாயுள்ள இருக்கு வேதம் மிகத்தாழ்ந்த தொன்றேயாதல் நடுநிலையாளர்க்கெல்லாம் நன்கு விளங்கும். இருக்கு வேதத்தில் நிரம்பிய பொருளெல்லாம் ஆரியர் தமக்குரிய ஆடு மாடுகள் பல்கல் வேண்டியும், தாமுறையும் நிலஞ் செழிக்கல்வேண்டியும், தாம் மக்கள் மனைவியரோடு நன்கு வாழல் வேண்டியும், தியூ, வருணன், மித்திரன், இந்திரன் என்பவரைக் குறையிரந்து பாடின பாட்டுக்களும், வேள்வி வேட்குமுறைகள் சிலவுமேயாம். இது பத்து மண்டிலங்க ளுடையது. இவற்றுள் முதன் மண்டிலமும் பத்தாவது மண்டி லமும் இருடிகள் பலராற் செய்யப்பட்ட பாட்டுகள் ஒருங்கு தொகுக்கப்பட்ட பகுதிக ளாம். இரண்டாவது மண்டிலம் பிருகு குடியினரைச் சேர்ந்த கிரிச்சமதரால் தொகுக்கப்பட்டது. மூன்றாவது மண்டிலம் விசுவாமித்திரராற் றொகுக்கப்பட்டது. நான்காவது மண்டிலம் வாமதேவராற் றொகுக்கப்பட்டது. ஐந்தாவ்து மண்டிலம் அத்திரியாற் றொகுக்கப்பட்டது. ஆறா வது மண்டிலம் பாரத்துவாசராற் றொகுக்கப்பட்டது. ஏழா வது மண்டிலம் வசிட்டராற் றொகுக்கப்பட்டது. எட்டாவது மண்டிலம் கண்ணுவராற் தொகுக்கப்பட்டது. ஒன்பதாவது மண்டிலம் ஆங்கீரசால் றொகுக்கப்பட்டது. விசுவாமித்திரராற் றொகுக்கப்பட்ட மூன்றாவது மண்டிலத்தில் மிகச்சிறந்த காயத்திரி மந்திரமான 'ஓம்தத்சவிதுர் வரேணியம், பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோயோ நஹ் ப்ரசோதயாத்' என்பது காணப்படுகின்றது. இம் மந்திரவுறையுளிற் பெறப்படுகின்ற பொருள், 'அன்பினாற் செய்யப்படும் எம் வேள்வி முறைகளை நடை பெறுவிக்குந் தெய்வத்தன்மையுடைய சாவித்திரியின் விழை யத்தக்க ஒளியையாம் வழிபடுகின்றோம்' என்பதே யாம். இங்ஙனஞ்சிறந்த மந்திரவுறையுளான காயத்திரியிலும் ஞாயிற்றின் வழிபாடே காணப்படுகின்றது. இப்பெற்றித் தாகிய இருக்குவேதம், ஆழ்ந்த நுண்பொருளுடைய தொல் காப்பிய நூலோடு ஒப்புப்பெறுதலும் அதனினும் உயர்தலு மில்லையாதல் தேற்றமேயாம். இதுவேயுமன்றித், தொல்

காப்பிய நூலோடு ஒப்புப்பெறும் விழுப்பமுடைய பழைய நூல் உலகத்திற் பரந்துகிடக்கும் எம்மொழியிலும் இல்லை யென்பது துணிபொருள். ஆகவே, இவ்விரு நூல்களின் வாயி லாக அறியப்பட்ட இவ்விரு சாதியாரின் சிறப்பியல்புகள் விரவிக் காணப்படும் நூல்கள் எந்த மொழியிலே எழுதப்பட் டிருப்பினும், அவை அவ்விருவர்க்கும் உரிமையுடையவா தற்கு இழுக்கில்லை யென்க. இருக்கு வேதத்தின் பின்னெ ழுந்த ஆரியமொழி நூல்களிலெல்லாம் இவ்விரு வகைச் சாதி யார்க்குமுரிய இருவேறு அறிவுத்திறங்களும் விரவிக்கிடத்த லால், அவ்விருவேறு அறிவுமுடைய அவரிருவரும் ஒருங்கு விராய் உறைந்த காலத்தில் அவை இயற்றப்பட்டன வென்பது தெற்றெனப் புலப்படும். இவ்வாறு இவர்தம் இருவேறு அறிவுத்திறங்களுள் தமிழர்க்குரிய உண்மை நுண்பொருளா ராய்ச்சியின் ஏற்றம் உயர்ந்து, ஆரியர்க்குரிய வேட்குமுணர்வு சுருங்கிய காலத்தில் சாந்தோக்கியம் முதலான உபநிடதங்கள் எழுந்தன. இவ் உபநிடதங்களெல்லாம் ஒருமுகமாய் நின்று ஆரியர் இயற்றிப்போந்த வேள்விப்-பயன்களை மறுத்து அறிவுப்பொருளை விதந்தெடுத்து விரித்து வரையுறுத்து கின்றன. இது கிடக்க.

## சூத்திரங்களின் தோற்றம்

இனி, இவ்வுபநிடத ஞானகாண்டப் பொருள் ஆங்காங்கு மலிந்து பரவுதலும் அந்த ஞானகாண்டப் பொருளொடு பெரிதும் இகலிவேதங்களின் கன்மகாண்டப் பொருளே உறுதிப் பொருள்களௌன வலியுறுத்தற் பொருட்டு, ஆரியர் தமக்குள் மனவெழுச்சி மிகவுடையராய் வழக்கு நிகழ்த்துகை யில், அவர்களுட் சிறந்த சைமினி என்னும் ஆரிய முனிவர் ஒருவராற் பூருவமீமாஞ்சை எனப்படும் ஒருநூல் இயற்றப் பட்டது. இவ்வாறு - சைமினி முனிவர் கன்ம காண்டப் பொருள் நிறுவற்கெழுந்து அப்பொருள் தெரிக்கும் வேதப் பகுதிகளை நிரம்பவும் உயர்த்தெடுத்துப் பாராட்டுவராயினர். இதுகண்டு தமிழர்க்குள் அக்காலத்து நிரம்பச் சிறந்த சான்றோராய் விளங்கிய கபிலர், 'கன்ம காண்டப் பொருள்

போதிக்கும் வேதங்கள் அசுத்தம் பெரிதுடைய வென்றும், அப்பெற்றிப்பட்ட அவ்வேதத்தை ஒரு பெரும் பிரமாணமாகக் கோடல் வழுவாமென்றுஞ், சைமினி மதம் ஒரு சிறிதும் பொருந்தாதென்றும் விளங்கக் காட்டி, நிலம் முதல் உயிரீறாகக்கிடந்த மெய்ப்பொருள்களினியற்கையை உள்ளவாறு அறிந்து அறியாமையினை நீக்கிப் பற்றறுத்தலே பேரின்பம் பெறுதற்கேதுவா மென்று அறிவுறுத்திச் சாங்கிய சூத்திரம் இயற்றிட்டார். இவர் சகேத நாட்டரசனான சுசதா என்பவன் காலத்திருந்தார் என்றும், அவ்வரசன் கௌதம சாக்கியர் பிறப்பதற்கு முந்நூறு ஆண்டுகட்கு முன்னிருந்தானென்றும் இதனால் இவர் காலம் இற்றைக்கு இரண்டாயிரத்துத் தொள்ளாயிர ஆண்டுகட்கு முன்னதாமென்றும் மகாபோதியிற் பண்டிதர் வித்யாபூஷண மென்பவர் நன்கு விரித்துக்காட்டினார். சாங்கியசூத்திரம் அருளிச்செய்த கபிலர் கடவுளிருப்பைப் பற்றி ஏதும் மொழிந் திடாமையின் அதனையும் நிறுவிச் சைமினி சூத்திரப் பொருளையும் மறுத்தற் பொருட்டுப் பதஞ்சலி முனிவரானும் வாதராயண வியாசரானும் முறையே யோகசூத்திரமும், வேதாந்த சூத்திரமும் அருளிச்செய்யப் பட்டன. இக்காலத் திங்ஙனந் திரவிட வாசிரியர், சைமினியற்றிய பூருவமீமாஞ்சைப் பொருண்மறுப்பாய்ச் சாங்கிய சூத்திர முதலியன இயற்றுவாராக, இவர் செய்த ஆராய்ச்சித் திறங்களை அளந் தறித்தற் கருவியாகக் கௌதமரால் நியாய சூத்திரமுங் கணாதரால் வைசேடிக சூத்திரமுஞ் செய்யப் பட்டன. சைமினி சூத்திரம் ஒழித்து ஒழிந்த ஐவர் நூல்களும் மெய்ப்பொரு ளாராய்ச்சித்திறன் வலியுறுத்தி மக்கட்கு நலம் பயப்பவாயின.

இவ்வாறு இச்சூத்திரங்கள் நிலை பெறலாகி விரிந்து விளங்கும் பொழுது, அரியரொடு மறுதலைப்பட்ட தமிழச் சாதியார் மனவெழுச்சி மேன்மேன் மிகப்பெற்றாராய்த் தமக்கு இயற்கையே தோன்றிய கொல்லாமை, புலாலுண்ணாமை, பிறர்க்குதவுதல் முதலிய அறத்தின் கூறுகளை ஆங்காங்கு விரித்துரைநாட்டுதற்குத் தலைப்பட்டனர். கபிலவாஸ்து வென்னும் நகரத்திலிருந்த கௌதமசாக்கிய ரென்னுந்

திராவிட அரசிளைஞரும் அறம்பொருள் விழுப்பந் தோன்ற ஆரியர்க்குப் பிறர்க்கும் அறிவு கொளுத்திப் புகழ் பெறுவா ராயினர். தமிழர் தம் நுட்பமதியாற் கண்ட கடவுளிருப்பு, உயிர்களிருப்பு, மாயையிருப்பு என்னும் முத்திறமும், இவற் றோடு உடன் எண்ணப்படுவனவாகும். இருவினை, மறுபிறவி, துறக்க நிரயங்கள், கொல்லாமை, புலாலுண்ணாமை முதலி யவும் அவரெல்லார்க்கும் உரிய கொள்கைகளாகும். இவற்றுள் ஏனைப்பிறவற்றைக் கபிலர் முதலான தொல்லாசிரியர் விளக் குதல் பற்றி அவற்றை விடுத்து அறத்தின் சிறப்பைமட்டுங் கௌதமபுத்தர் எடுத்துரைப்பாராயினர்.[11] இப்பெற்றி தேறாத இவர் சீடர் நால்வரும் இவர்க்குப்பின் இவர்தம் உள்ளக் கருத்தினியல்பறியாது முரணி நால் வகை மதங்கள் கட்டி நடத்தினர். இவர் நால்வரும் புத்தர்க்கு மாணாக்கராதல்பற்றி இந்நால்வர் பிரித்த மதங்கள் ஒருங்கி யைந்து பௌத்தம் எனும் பெயரால் வழங்கப்பட்டன. இது கிடக்க.

இனி, மேலே கூறிய வரலாற்றினாற் பண்டைக்கால நூல் வரலாறு மூன்றுகூறாக வரையறுக்கப்படுதலும் அறியற்பாற்று, அவை வேதகாலம், உபநிடதகாலம், சூத்திரகால மென்பன வாம். இவற்றுள் வேத காலம் என்பது கிறித்து பிறப்பதற்கு முன் 3400 ஆண்டு முதல் 2400 - வரையுமாகும். ஈண்டு யாங் கணக்கிட்டகாலம் உரோமேஷ் சந்திரதத்தர் முதலான நூலா சிரியர் வரையறுத்த காலவளவைக்கு மேல் ஆயிரத்து நானூறு ஆண்டுகள் மேற்படினும், பாலகங்காதர திலகர் அரிய தோர் நுட்பவாராய்ச்சி செய்து வெளியிட்ட 'வேதங்களின் வடநில இருப்புகள்'[12] என்னும் நூன்முடிபுக்கு பெரும்பான்மையும் பொருந்துதலானும், இங்ஙனங் கணக்கிடுவதற்கு காரணங் கள் பலவுளவாதலானும் அவ்வாறு வரையறுப்புச் செய்தா மென்க. இக்காலத்தில் ஆரியருந் தமிழரும் போர் மலைந்து அலைப்புண்டு சிறுகச் சிறுக ஒருமை யுறுதற்குத் தொடங்கினர்.

இனி உபநிடத கால மென்பது கி.மு. 2400 ஆண்டு முதல் 1400 வரையுமாகும். இக்காலத்தில் ஆரியருந் தமிழருங் குடியி ருப்பளவிலே ஒருமையுறினுங் கருத்தொருமையுறாது சிறிது

சிறிதாய் ஒருவர் கருத்தினை மற்றவர் தழுவுதற்குத் தொடங்கினர். இக்கால இறுதியில் தமிழர்க்குரிய மெய்யுணர்ச்சி மிகுந்து தலையெடுத்தமையால் ஆரியர்க்குரிய பண்டை வேள்வி ஆற்றும் கடப்பாட்டுணர்ச்சி சுருங்குவதாயிற்று.

இனிச் சூத்திர காலமென்பது கி.மு.1400 முதல் கி.பி. துவக்கம் வரையுமாகும். இக்காலத் தொடக்கத்தில் சைமினி என்னும் ஆரிய முனிவரெழுந்து உபநிடதப்பொருளை மறுத்துப் பண்டை வேதபாகத்திற்கு உயர்வுகற்பித்து ஆரவாரிப்பவே, அவர் தம்மை மறுத்து அறிவுப்பொருளை நிறுவுதற் பொருட்டுச் சாங்கிய சூத்திர முதலாயின கிளர்ச்சியுற்று எழுந்தன. இக்காலத்துக் கௌதமசாக்கியர் மேற்கொண்ட அறவுரையும் ஆங்காங்குப் பன்முகமாய் விரிந்து பரவி மெய்யுணர்ச்சிக்கொரு பெருந் துணையாயிற்று.

இனி, இங்ஙனம் போந்த சூத்திர காலத்திலேதான் செந்தமிழ்த் தென்னாட்டின் தலைநகரான மதுரையிற் கடைச் சங்கம் நிலைபெற்று விளங்கிற்று. இப்போது தமிழென்னும் நங்கை வளர்ந்து முற்றுதற்குரிய உறுப்பின்வளனெல்லாந் திரண்டு பேரெழிற்றோற்ற முடையளாய்க் கண்டார் கண் ஆற்றாப் பேரொளி வீச விளங்கினள். அவள் அருமைக் கொழுநனான இறையனாரால் இறையரனாகப் பொருட் சூத்திரமும், அருமைப் புதல்வரான தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரால் திருக்குறள் என்னும் ஒப்புயர்வில்லா அரிய பெரிய நூலும் அருளிச்செய்யப்பட்டன. நன்றறிந்தேன், இவ்விரு நூல்கட்கும் இவையெழுந்த காலத்திற்கும் நிரம்ப ஒற்றுமை யுண்டென்றதனை அறிதல் வேட்கை மிகவுடையேனெனிற் கூறுதும்.

வேதகாலத்தில் எழுந்த நூல்களெல்லாம் பலராற் பல வகையால் எழுதப்பட்டு ஒருதுறைப்படுதலின்றி ஒன்றோடொன்று இணங்காவாய் வாளா விரிந்துகிடந்தன. உபநிடத காலத்தில் எழுந்தனவோ ஆழ்ந்த நுண்ணறிவுடைய சிலரால் எழுதப்படினும் நுண் பொருள் மாத்திரையே கிளந்துரைத்தற் கடப்பாடுடையவாய்க் கிடந்தன; இவற்றில் நுண் பொருள்

ஒருதுறைப்படுமாறு நன்கமைக்கப்படாது சிதர்ந்து விளங்கின; இவ்வாறு இறைந்து ஒழுங்கின்றி எழுதப்பட்ட அந்நூல் நுண்பொருள் தேறமாட்டதார் தாந்தாம் வல்லவாறு அவற் றிற்குத் தாங்கருதிய பொருளை ஏற்றி இடர்ப்படுவாராயினர்.[13] மற்றுச் சூத்திர காலத்திலோ இங்ஙனம் ஞானகாண்டப் பொருள் தெரிவுறுக்கும் உபநிடதங்கள் அறியார் பலரால் அலைத்துப் பொருள் செயப்படுதலோர்ந்து அவற்றின் பொருள் உறுதி பெறுவித்தற் பொருட்டுச் சொற்சுருங்கிய விழுமிய யாப்பினாற் பொருட்டிட்ப நுட்பஞ் செறியப் பாகுபாடு நனிவிளக்கிச் சூத்திரங்கள் எழுதப்பட்டன. இச்சூத்திரங் களில் வேண்டா கூறுதலான அடைமொழி ஒன்றுதானுங் காணப்படுவதில்லை. பொருளுணர்த்துதற்கு வேண்டு மாத் திரையே சொற்கள் திறம்படு முறையால் வாய்ப்பப் பொருத் தப்பட்டன. இச்சூத்திரங்களெல்லாம் ஈண்டைத் திருக்குறள் போலவே பெரும்பான்மையாற் சொற்சுருக்கமும் பொருட் பெருக்கமும் வாய்ந்து சூத்திர அடைவு அதிகார அடைவு நனிதுலங்கி நடைபெறுகின்றன. பண்டைக் காலத்திருந்த வெறுஞ் சொல்லாரவார விரிவெல்லாம் ஒருங்கே மறைந்தன. தமிழிலேயும் அகப்பொரு ளிலக்கண விரிவெல்லாஞ் சுருக்கி அறுபது சூத்திரவுருவிலே இறையனராகப் பொருள் இயற்றப் பட்டமையும் மக்களுயிர்க்குறுதி பயப்பனவாகும். எல்லாப் பொருளும் மெய்பெறத் தெரித்து மிகச் சுருங்கிய ஆயிரத்து முந்நூற்று முப்பது குறுவெண் பாட்டுக்களிலே திருக்குறள் இயற்றப்பட்டமையுங் கடைப்பிடித் துணருங்கால் இச்சூத்திர காலத்திற்கும் இதன்கண் எழுந்த களவியல், திருக்குறள் என்னும் இரண்டு நூல்கட்கும் நிரம்ப வொற்றுமை யுண் டென்பது மலைவின்றிப் பெறப்படுதல் காண்க. இன்னும் வடமொழியி லெழுதப்பட்ட அவ்வறுவகைச் சூத்திர நூல் களினும், இத்திருக்குறள் மாட்சி பெரிதுடைத்தாம். என்னை? அந்நூல்களெல்லாம் ஓரோவொரு பொருளையே மரபு வழாது நன்கெடுத்துக் குறிப்பனவாக, மற்றுத் திருக்குறளோ அவற்றாலுணர்த்தப்படுவனவும் படாதனவுமாகிய எத்திறப்

பொருளும் நலம் பெருகக் கோத்தெடுத்து அமிழ்தெனஞ் சுவை முதிரக் கூறுதலா லென்க. இம் முறையால் தெய்வத் திருக்குறளுக்கும் அஃதெழுந்த காலத்திற்கும் ஒற்றுமை உண்டென்பதனை நிறுவல் வேண்டி இத்துணையும் விரிந்த தென்றுணர்க. இதனால் றிருக் குறணூல் சுருங்கிய குறுவெண் பாட்டால் யாக்கப்பட்டதற்குப் பிறிதொரு காரணமும் புலப் படுவதாயிற்றென்க.

## குறிப்புகள்

1. தொல்காப்பியம், செய்யுளியல், 159 ஆவது சூத்திரம், பேராசிரியர் உரை.
2. திருக்குறள், 79 - 2
3. தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம் 11ஆவது சூத்திரவுரை.
4. நாலடியார், தீவினையச்சம் 5 ஆவது செய்யுள்.
5. சதபத பிரமாணம், 11, 4, 5.
6. கௌஷீதகி உபநிஷத் - 4.
7. சாந்தோக்கிய உபநிஷத், 5, 9.
8. Rama and The Monkey Heroes.
9. தொல்காப்பியம் எழுத்து, பாயிரவுரை.
10. தொல்காப்பியம், பொருள் 88 ஆவது சூத்திரம்.
11. Vide Dr. Rhys Davids, Buddhism, Ch. IV.
12. Vide The Arctic Home in the Vedas.
13. Vide Dr. Thibaut's Introduction to his Eng. Translation of the Vedanta Sutras with Sankara Bhashya: from page, cii.

— ஞானசாகரம்

# 2

# திருவள்ளுவர்

*1904*

## திருமணம் செல்வக்கேசவராய முதலியார்

### துதி

திருமுடி மிசையார் மயிர்முடி யழகும்
தீர்க்கபுண் டரநுத லழகும்
திரண்மணி புயந்தை வருஞ்செவி யழகும்
திகழ்நெடுந் தாடியி னழகும்
அருமுடி செபமா லிகைசின்முத் திரைசே
ரபயநேர் வலக்கையி னழகும்
அமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வரத
மமைதரு மிடக்கையி னழகும்

கருமுடி யோகப் பட்டையி னழகும்
கடிகொள்கீட் கோவண வழகும்
கழல்களிற் றிகிரி வளைவரை யழகும்
கமலநல் லாதனத் தழகும்
தருமுடி முகிறோய் மயிலையி னிடைமா
தவர்கள்கண் டிறைஞ்சிவீற் றிருக்கும்

தழைபுகழ்த் திருவள் ளுவரெனு நாம
சற்குரு சரணமே சரணம்.

தமிழ்க்குக் கதியாவார் இருவர் எனச் சில புலவர் புகல்வதுண்டு. கதி என்பதில் ககரத்தைக் கம்ப நாட்டாழ்வாருக்கும், திகரத்தைத் திருவள்ளுவருக்கும், ஞாபக சூத்திரமாகக் கொள்ளல் வேண்டும், கம்பர் தமது ராமாயணம் அரங்கேறுகையில், தமக்கு முற்பட்ட சிறந்தநூல் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் அகப்பை அள்ளிக்கொண்டதாகக் கூறினரென்று ஆசிரிய பரம்பரையில் நாம் கேட்டுவருகிறோம். பழைய நூல்களிற் பயிற்சி மிக்கவர்கள் இதன் உண்மையை நன்குணர்வர். திருவள்ளுவர்க்குப் பிற்பட்டவர்களுள், திருக்குறளில் ஓர் அகப்பையாயினும் அள்ளிக்கொள்ளாத சிறந்த பாவலர் ஒருவருமிலர் என்பதும் நாம் நன்கறிவோம். 'கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே' என வாகீசரே ஓர் அகப்பை அள்ளிக்கொண்டா ரென்றால், வேறு கூறவேண்டா. பண்டை நாட் கவிச்சுவை யெல்லாம் வாரிக் கொணர்ந்து ஓரிடத்தே பொதிந்து, இற்றைநாட் கவிராயரெல்லாம் கொள்ளை கொள்ள வைத்த கவிச்சக்கரவர்த்தியையும் அவர் கவித்திறத்தையுஞ் சுட்டிச் சிலவாண்டுகளுக்கு முன்னே ஒரு சங்க முன்னிலையில் சிறிதெடுத்துரைத்தேன். வேட்டவேட்ட பாவலரும் நாவலரும் வேணவா அடங்க அள்ளிக்குடிக்கும் ஊற்றுக் குழியான உத்தரவேதத்தையும் அதனை உரைத்தருளிய திருவள்ளுவரையுஞ் சுட்டி, எனக்குத் தாயகமான இவ்விராச தானிக் கல்லூரியின் தமிழ்ச்சங்க முன்னிலையில், இற்றை ஞான்று என்னாலியன்றதை எடுத்துரைப்பான் வந்தேன்.

செப்பலோசையைத் தழுவி முதலடி நாற்சீராயும் ஈற்றடி முச்சீராயும் ஒரு விகற்பத்தானும் இருவிகற்பத்தானும் வருகிற ஈரடிவெண்பாக் குறள்வெண்பா எனப்படும். இது குறள் எனவும் வழங்கும். கலிப்பாவாற்றொகுத்த நூல் ஆகுபெயரிலக்கணத்தாற் கலியென வழங்குமாறு போலக் குறட்பாவானியன்ற

நூல் குறள் என வழங்குவதாயிற்று. திரு என்பது அழகு என்னும் பொருட்டுத் திருக்குறள் என்பது அழகிய குறள் என்றவாறு. இது முற்காலத்தில் ஆசிரியர் பெயரால் திரு வள்ளுவர் என்றும் திருவள்ளுவரால் இயற்றப்பட்டு எல் லார்க்கும் எல்லாப் பயனையும் அளித்தலின் திருவள்ளு வப்பயன் என்றும் வழங்கியது. சங்கப்புலவரிற் பதின்மூவர் இதனை முப்பால் எனச் சிறப்புப்பாயிரம் உரைத்தனர். பதி னெண் கீழ்க்கணக்கை வரையறுத் துரைக்கும் பழம்பாட்டும் இதனை முப்பால் என்றே உரைக்கின்றது. சிலர் இதனை வள்ளுவர் வாய்ச்சொல் என்றும், வள்ளுவர் வாய்மொழி யென்றும் வழங்கினர். தெய்வநூலென்றும், பெய்யாமொழி யென்றும், வாயுறை வாழ்த்தென்றும், தமிழ்மறை யென்றும், பொதுமறை யென்றும் ஓரொருவர் புனைந்துரைத்தனர். ஆயினும் இந்நூல் நெடுநாளாகத் திருக்குறள் என்று வழங்கி வருகின்றது. தமது நூலை மாணாக்கர்கட்கு உபதேசிக்கும் உருவமாக பிரதிட்டிப்பித்திருக்கும் திருவள்ளுவருடைய அர்ச்சாவிக்கிரகத்தில் இடக்கையில் ஏட்டுச்சுவடி பிடித்தி ருப்பதாகக் காட்டி அதன்மேல் திருக்குறள் என்ற பெயர் தீட்டியிருக்கின்றது.

திருவள்ளுவருடைய திருவுருவத்தின் தோற்றப் பொலிவை அறிய அவாவுகின்றவர்கள் திருமயிலையில் அவருடைய திருவாலயத்திற்குச் செல்வாராக. மேலே ஸ்வரூபஸ்துதியிற் கூறியபடியே, தலையிற் சடையை முடித்திருக்கும் முடியி னழகும், அடர்ந்த மீசையினழகும் அலைந்து மார்பிற் புரள் கின்ற தாடியினழகும், அகத்தினழகைக் காட்டுகின்ற முகத் தினழகும், ஆஜாநுபாகுவாய் அகன்ற மார்பையுடைய திடகாத்திரமும் காண்பவர்க்கு, யூரோப்பியரிற் சிறந்த ஞான வான்களான ஸாக்கிரெடிஸ், ப்ளேடோ என்பவர்களை நினைவூட்டுகின்றனவாய் இருக்கின்றன. வலக்கையில் ஜப மாலிகையும் இடக்கையில் தமிழ்மறையுமாக கமலாசன மிட்டு வீற்றிருப்பதை நோக்கின், அகத்தியர்க்கு இரண்டாவ

தாக எண்ணத்தக்க தமிழ் முனிவரோ இவர் என்பது தோன்றும். தமிழ்ப் புலவர்கள் இவரை அகத்தியருடைய பிரபௌத்திரராகவே வமிசாவளி வரையறுத்துக் காட்டியிருக்கின்றனர்.

மதியூகிகளான சில தமிழாசிரியருடைய தற்காலவாராய்ச்சியாலும், சிலப்பதிகாரம் மணிமேகலையென்னும் பெருங்காப்பியங்களிற் கிடைக்கலான ஆதரவுகளாலும், பிறவாற்றாலும், திருவள்ளுவர், ஏறக்குறையச் சாலிவாகன சகாப்தத்தின் தொடக்கத்தில், அதாவது, கி.பி. முதனூற்றாண்டில் இருந்தவரென்பது துணியப்படுகின்றது. அதனினும் முற்பட்டவர் எனத் துணிந்துரைத்தற்கான ஆதாரங்கள் அகப்படவில்லை. எங்ஙனமாயினும் இன்றளவும் நின்று நிலவுதலான தமது நூலை, வள்ளுவனார் வரையறுத்து வகைப் படுத்திக்கொண்டு. 'செய்யுந் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்க்கில் நெய்யுந் தொழிலுக்கு நிகரில்லை' யென்று, மயிலைமா நகரிலே உதரநிமித்தமாகத் தமது தறியின்மேல் தலைகுனிந்து சீலை நெய்யா நிற்கையில், யூரொபியருடைய அந்தகாரகாலம் அப்பாற்பட்டதில்லை; மத்திய காலமும் உதயமாயிற்றிலை; துருக்கருடைய மகம்மதிய மதம் தோன்றிற்றுமில்லை. கிறிஸ்தவ மதம் அப்போதுதான் முளை கிளம்பிக்கொண்டிருந்தது. இந்தியாவிலும், சைவம், அத்து விதம், வைணவம் என்னும் சமய பேதங்களுக்குரிய சமயாசாரி யர்கள் எல்லாரும், வள்ளுவனார்க்கு நெடுங்காலம் பிற்பட்டு அவதரித்தவர்கள். வள்ளுவர் காலத்தில் தமிழ்நாடு பேரும் பலமும் அடைந்து, உச்சதசை உற்றிருந்தது. மேலும், தமிழ் நாடானது, வடக்கிலும் குடக்கிலும் குணக்கிலும் உள்ள பல தேயத்தரும் வந்து வாணிகஞ் செய்யும் பெரிய வியாபார ஸ்தலமாகவும் இருந்தது. அதற்கு நெடுங்கால முன்னரே ஆரிய பிராமணர்கள் திராவிட தேசத்தில் குடியேறி நிலை பெற்றும், தமிழ்நாட்டு மூவேந்தரிடத்திலும் அமாத்தியாரும் புரோகிதருமாக உத்தியோகித்தும், ஆலயங்களில் அர்ச்சகராக அமர்ந்தும், ஆரியக் கோட்பாடுகளை ஆங்காங்குப் பரவுவித்தும் இருந்தனர். அக்காலத்துத் தென்

இந்தியாவின் சர்வகலா சங்கமான கடைச்சங்கமும் மதுரை யில் நன்கு நடந்துவந்தது. சேர சோழ பாண்டியர்களுடைய பிரதான பட்டணங்களில், சைவ வைணவ ஆலயங்களுக்கு அணித்தாக, ஜைன புத்த ஆலயங்கள் விளங்கியிருந்தனவென்று அக்காலத் திலக்கியங்களால் அறிகிறோம். இந்திரன் பல தேவன் பிரமன் முதலான தேவதைகளுக்கும் அக்காலத்தில் ஆங்காங்கு ஆலயங்கள் உண்டு. அக்காலம், சமய வேறுபாடு களில் க்ஷாத்திரம் சாதிப்பதில்லையாய், அவரவர் இராஜபய மின்றித் தத்தமது வழிபடு கடவுளை நிர்ப்பயமாக வணங்கி வந்த காலமாக இருந்தது. பிரபுக்களும் வீரர்களும் அரசர் களும் அரிய புலவரை ஆதரித்துவந்தனர். கவிதா சிருஷ்டி விசேஷித்திருந்தது. சிற்பம் ஓவியம் முதலானலளித வித்தை களும் வெகுவாய்ச் சன்மானம் பெற்றுவந்தன. நீராவி அச்சியந்திரம், மின்சாரம் என்பவற்றின் தற்காலவதிசயங்கள் தவிர, ஏனை யெவ்வாற்றானும், அக்காலமானது நனிநாகரிகத் தான் மேம்பட்ட இந்நூற்றாண்டின் பிரதிசாயலென்று உரைக்கலான காலமாகவே இருந்தது.

இன்னோரன்ன காலத்தில் இன்னோரன்ன நாட்டில் கர்ணபரம்பரையில் வழங்குமாறு, திருமயிலையில் ஆதிபகவன் என்பவருடைய மக்கள் எழுவரில் இளைஞராய்ப் பிறந்தார் நமது திருவள்ளுவர். இவரைப்பற்றி வழங்கிவருகிற சரித்திரம் முற்றும் புலவர்களில் வழங்கிவருகின்ற கர்ண பரம்பரையே யாதலின், இதில் கொள்ளற்பாலது இதுவென் றும் தள்ளற் பாலது இது வென்றும் துணிவது கூடாது காரியமாக இரா நின்றது. இருமுதுகுரவராலே திருமயிலையில் விடப்பட்ட இவரை, மகப்பேறில்லாத வேளாளன் ஒருவன் கொண்டுபோய் வளர்த்து வாசுகி யென்னும் ஒரு பெண்ணை மணஞ்செய் வித்துக் காலகதி அடைந்தனனென் றும் இவருடைய மனை மாட்சி வசிட்டருடைய மனை மாட்சியோடொத்ததென உலகினர் புகழ்ந்துவந்தனரென்றும், இவர்

ஊரிலுள்ளவரொடு வாழாமல் ஊர்ப்புறஞ் சேரிசார்ந்து
தெள்ளுசொற் புலமைவாய்ந்து சேலைநெய் திருந்தவாற்றல்
வள்ளுவர் என்றார் பல்லோர் வளமையோ னெனலோராரே

என்றும் புலவர் புராணம் உரைக்கின்றது. அன்றியும் அப் புராணம்,

பாதிவான் மதிவாழ்சென்னிப் பரமனே பரமென்றோர்ந்து
சோதிட மாதிநூல்கள் தூயன வாகச்சொல்லி
நீதிமுற் றுணர்த்தும்பெட்பால் நிகமமே இதுவாமென்னத்
தீதின்மெய் யறிஞர்போற்றத் திருக்குற ணூலுஞ்செய்தான்

என்றும் இயம்புகின்றது. இப்புரணத்திற் கூறும் ஏனை வரலா றனைத்தும் கர்ணபரம்பரையை ஒத்தேயுள்ளது. ஆயினும், வள்ளுவரை, 'இல்லறமென்னும் பொன்னுக்கிய லுரையாணி' என்றும் இவர் நூலின் ஏற்றத்தைச் சமய வேறு பாடின்றி,

நால்வர் சொல் சைவர் வேதம்,
நளிர்குரு கூரன் சொல்லைப்
போல்வலார் சிலர்தாஞ் சொல்லும்
பொருவில்பா கவதர் வேதம்,

வால்வளை யுலவும் வீதி
மயிலைவள் ளுவன்சொல், யார்க்கும்
மேல்வழி யுணர்த்திக் கீழ்மை
விலக்குநல் வேத மாமே

அஃதாவது, சைவ சமயாசாரியர்கள் அருளிய தேவார திரு வாசகங்களும், வைணவ ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்வியப் பிரபந்தமும், வள்ளுவர் குறளும், உல கினர்க்குக் கீழ்மையை விலக்கி மேல்வழியை உணர்த்தும் நல்ல வேதங்க ளாம் என்றும், இந்நூலில் உரைத்த தருமங் களிற் கொலை மறுத்தலே முக்கியமான தருமம் என்பதைக் குறித்து,

இந்திர பதவிக் கேற்றும் இவுளியா
கமும் பொல் லாதென்

றுந்திய கருணை வாய்ந்தோர்க் குறுதியுண்
டாகத் தோற்றும்
சந்திர வதனத் தாதி தருமகா
ரெழுவர் தம்மில்
பிந்திவள் ளுவப்பேர் தாங்கும் பெரியவன்
பேசு நூலே

என்றும்,

பறந்த வோதிமப் புள்ளிமறை யாதியர்
பகர்ந்தசொற் குறித்தேனும்
இறந்த ஊனுமுண் பதுதகா தென்பதே
இயற்றமிழ் மறைக்கோளே

என்றும் அப்புராணம் பகர்கின்றது.

இனி இவருடைய திருநாமத்தைப்பற்றி மேற்கூறிய புலவர் புராணம், வளமையோன் என்று கூற அறியாத பாமரர்கள் வள்ளுவன் என வழங்கிவிட்டனரென்று கூறுவது கண்டோம். திருவள்ளுவ மாலைக்கு உரையியற்றிய திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர், 'வள்ளுவர் என்பது வண்மையுடையவர் என்பதை விளக்கி நின்றதாகலின், அது வேதத்தில் இலை மறை காய்கள்போல் பல விடங்களினும் மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களையெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத்து அருள்செய்தவர் என்னுங் காரணம் பற்றி வந்த பெயராயிற்று' என்றனர். கபிலர் இயற்றிய அகவலில்,

தொண்டைமண் டலத்தில் வண்டமிழ் மயிலைப்
பறைய ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்

என்றுரைத்திருக்கின்றது. சில பிரதிகளில் திருவள்ளுவ மாலையின் அனுபந்தமாகத் திருவள்ளுவர் வரலாற்றை யுரைக்கும் அகவலில்,

மைப்புய லணிபொழின் மயிலாப் பூரில்
வள்ளுவர் மனையிடை வள்ளுவர் வளர்ந்தனர்

என்று கூறியிருக்கின்றது. பிங்கல நிகண்டில்,

வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னற்
குள்படு கருமத் தலைவற் கொன்றும்

என்றும், பிற்பட்ட சூடாமணி நிகண்டில்,

வருநிமித்திகன்பேர் சாக்கை வள்ளுவ னென்றுமாகும்

என்றும் வருவது முறையே கன்மத்தலைவன் ஜோசியன் எனப்பொருள்படுகின்றதாயினும், உலகவழக்கில் வள்ளுவன் என்பது பறையர்களுக்குக் குருவாய் ஜோசியமே ஜீவனமாக இருக்கும் வள்ளுவஜாதியிற் பிறந்தவனையே குறிக்கின்றது. சங்கப்புலவர்கள் இவரைத் தேவர், முதற்பாவலர், மாதாநு பங்கி, செந்நாப்போதார் எனப் பலவகையாகப் புனைந் துரைத்தன ரேனும்,

அறம்பொரு ளின்பம்வீ டென்னும் அந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை – மறந்தேயும்
வள்ளுவன் என்பானோர் பேதை அவன்வாய்ச்சொல்
கொள்ளார் அறிவுடையார்.

என்கிற பாட்டில் காகுஸ்வரம் என்கிற ஒலிக்குறிப்பினாலே, சாதியிழிவு தோன்ற, 'வள்ளுவனென்பான்' என்பதாக உரைத் திருத்தலின், இவர்க்கு வள்ளுவரோடு உண்டான தொடர் பால் தோன்றிய காரண விடுகுறியே போலும், வள்ளுவர் என்னுந் திருநாமம்.

தமது திருக்குறள், சங்கத்தார் முன்னிலையில் அரங்கேறிய பின்னர், வள்ளுவர் மயிலைக்கு மீண்டு மனைவியோடு இல்லற நடாத்திவருநாளில், மனைவி காலகதியடைந்துவிட்டனர். இம் மனைவியாருடைய கற்பின் திறத்தைக்குறித்துச் சிற்சில வரலாறுகள் வழங்குகின்றன. தனது தவம் சித்தியுற்றதா என்ற றியவிரும்பித் தன்மீது எச்சமிட்ட ஒரு கொக்கைக் கண் விழித்து எரித்துவந்த கொங்கணமுனிவர், மயிலையில் வள்ளு

வருடைய வீட்டில் பிக்ஷைக்குச் சென்ற போது, வள்ளுவர் மனைவியார், தமது பர்த்தாவுக்குத் தொண்டுசெய்து கொண்டிருந்தமையால் பிக்ஷையிடச் சிறிதுகாலந்தாழ்க்கவே, கோபத்துடன் விழியை உருட்டிப்பார்த்த அந்த முனிவரை நோக்கி, 'கொக்கென்று நினைத்தையோ கொங்கணவா?' என்று கேட்ட மாத்திரத்தில், முனிவர் திடுக்கிட்டு அவருடைய கற்பின் திண்மையை மிகவும் மெச்சினர் என ஒரு வரலாறுண்டு. அம்மனைவி துஞ்சியபோது வள்ளுவர்.

அடிசிற் கினியாளை அன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை – அடிவருடிப்
பின்தூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தால்
என்தூங்கும் கண்க ளெனக்கு

எனப் புலம்பிய வெண்பாவாலும், அவர் மனைமாட்சி நன்கு புலப்படும். வள்ளுவர் சரிதத்தைப் பலர் சாற்றக்கேட்ட கச்சி விட்டலையரசன், மயிலைசென்று ஒரு சிற்பனால் வள்ளுவருருச் செய்து பிரதிட்டிப்பித்துப் பூஜை செய்யும்படி இலிங்கதாரணர்க்கீந்தான் எனப் புலவர் புராணம் புகல்கின்றது. இதுகாறும் அம்மரபினரே பூஜைநடத்திவருகின்றனர்.

வள்ளுவரிடத்தில் எலேலசிங்கர் என்பவர் ஈடுபட்டு மெய்யன்புடையவராக இருந்த வரலாற்றினுக்கு உலக வழக்கிலே 'ஏலேலசிங்கன் பொருள் ஏழுகடல் போனாலுந் திரும்பும்' என்கிற பழமொழியும், 'எலேலோ எலவலி' என்று சுமையிழுக்கிற ஆட்கள் பாடுகிற பாடலுமேயன்றி, நூல்களின் வாயிலான சான்று ஒன்றுமில்லை.

இனி, 'இடையாலும் கடையாலும் சங்கம் அழிவதாக,' அஃதாவது, இடைக்காடராலும் திருவள்ளுவராலும் மதுரையிலுள்ள கடைச்சங்கம் அழிவதாக என்னும் சாபவார்த்தைக்குப் புலவர்களுடைய கர்ணபரம்பரை யன்றித்தக்க சான்றுகள் பிறவில்லை. உள்ள சான்றுகளெல்லாம், வள்ளுவர் தமது

நூலை அரங்கேற்றிய பின்னரும் சங்கம் செழிப் புற்றிருந்த தற்கே ஆதாரமாகின்றன. அவைகளை ஈண்டு விரிப்பதாயின் இந்த வியாசமும் விரிவுறும், பொழுதும் இல்லை. திருவள்ளுவ மாலையில் பாயிரங் கூறிய புலவர் களனைவரும் ஏககாலத்தில் இருந்தவரு மல்லர். புறநானூறு முதலானவற்றின் சார்பைக் கொண்டு ஆராயுமிடத்தில், பதின்மர் பன்னிருவர் ஏககாலத் தவராக இருத்தல்கூடும் என்பது தெளியப்படுகின்றது. எங்ஙன மாயினும், சங்கப் புலவர்கள் ஓரோர் காலத்தில் திருக்குறட்குக் கூறிய பாயிரத்தைப் பின்எவரோ ஒருவர் திருவள்ளுவ மாலையாகத் தொகுத்தனர் என்பதே தேற்றம்.

திருக்குறளும் தொல்காப்பியமும் ஆகிய இரண்டுமே, சிதைவுறாமல் இப்பொழுது வழங்கும் நூல்கள் எல்லாவற் றினும் முற்பட்டனவாம். திருக்குறளுக்குப் பன்னெடுநாள் பிற்பட்டவை யெல்லாம் எத்தனையோ வேறுபாடுற்றுப் பற்பலவிடங்களில் ஆசிரியர் வாக்கு இதுவேயென்று துணிய லாகாதவாறு மாறிவிட்டனவாகவும், ஆயிரத்தெண்ணூறு யாண்டுகளாகச் சிறிதுஞ் சிதைவுறாமல் வழங்கிவருவதே இந்நூலின் பெருமையை உணர்த்துவதன்றியும் இஃது என் றும் அழியாது நின்று நிலவும் என்பதற்கும் சான்றாகின்றது. இஃது இங்கிலிஷ், ப்ரெஞ்ச், ஜெர்மன், லாடின், தெலுங்கு முதலான பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுப் பல தேசங்களினும் வழங்கிவருகின்றது. திருவள்ளுவர் தமிழர்க் குச் செய்தஉபகாரம் உலகினர்க்கே செய்த மஹோபகார மாகிவிட்டது. இந்நூலாசிரியரைத் தமிழர் பிரமனுடைய அவதார மென்றெண்ணி, இவரைத் தெய்வப் புலவர் என்கின் றனர். கிறிஸ்தவர்களுக்கு விவிலியநூலும், துருக்கர்களுக்குக் குரானும், புத்தர்கட்குத் திரிபிடகமும், பிராமணர்களுக்குச் சதுர்வேதமும் எங்ஙனம் ஸர்வோத்கிருஷ்டமோ, அங்ஙனமே தமிழர்களுக்குத் திருக்குறள் ஸர்வோத்கிருஷ்டமாம்.

## II

தமிழிலக்கியங் கூறும் பொருளெல்லாம் அகப்பொருள் புறப்பொருள் என்னும் இரண்டு பாகுபாடுடையன. அவற்றுள் அகமென்பது இன்பமென்னும் இயல்பினையுடையதாகி உள்ளத்தின் கண்ணே நிகழும் ஒழுக்கமாம். புறப்பொருளென்பது அறம் பொருள் என்று சொல்லப்படும் இயல்பினையுடையதாய்ப் புறம்பே நிகழும் ஒழுக்கமாம். ஆகவே, அறம் பொருள் இன்பம் என்னும்மூன்றும் உரைத்தலால் திருக்குறள் முப்பால் எனும் பெயர்த் தாயிற்று. அறமென்பது இல்லறம், துறவறம் என்னுமிரண்டுமாம். மனிதன் இல்லறத்திலே நின்று பொருளீட்டி இன்பநுகர்ந்து இறுதியில் துறவறநெறியால் வீடெய்தலாம் என்பது இந்நூலாற் போந்த கருத்து.

அறநான் கறிபொருள் ஏழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து – பெறலரிய
நாலு மொழிந்த பெருநாவலரே நன்குணர்வார்
போலும் ஒழிந்த பொருள் – (தொடித்தலை விழுத்தண்டினார்)

அங்ஙனமாயின் இல்லறம் - பொருள் - இன்பம் - துறவறம் என்ற முறையாக வையாத தென்னை யெனின், அறமாகிற ஒப்புமைபற்றி இல்லறத்தையுந் துறவறத்தையுஞ் சேரவைத்தாரென்க. மேற் கூறியாங்கு மனிதன் வீடெய்தலே வள்ளுவர்க்குக் கருத்தாதலை, அவர் துறவிகட்கின்றியமையாத அருளுடைமை முதலான குணங்களைச் சொல்லி, துறவறவியலின் இறுதியில் அவாவறுத்தலை அதிகாரப்படுத்தி, அவ்வதிகாரத்தின் இறுதியில்,

ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா வியற்கை தரும்

என உரைத்திருப்பதனால் உணரலாகும். பரிமேலழகர்க்கும் இக்கருத்தே கருத்தாதல், அவர் அப் பாவின் கீழே,

நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்
திரிய மெல்லா மீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி
லதனை யுணர்ந்துணர்ந்து

சென்றங் கின்ப துன்பங்கள் செற்றுக்
களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீ டதுவே
வீடு வீடாமே.

என்ற நம்மாழ்வார் பாசுரத்தை மேற்கோள் காட்டியிருப்பதனால், நன்கு புலப்படும்.

ஊழைத் தழுவாத தேயத்தினரும் மதத்தினரும் இல்லை. இன்பநுகர்தற் கின்றியமையாதன இல்லறமும் பொருளும். இல்லறம் நன்கு நடத்தற்கும் பொருள் நன்கீட்டற்கும் ஊழே காரணமா மென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததாகலின் அதனைச் சிங்கநோக்காக அறத்திற்கும் பொருளுக்கும் இடைப் பெய்து வைத்தார்.

'இன்பம் வீடுபேற்றிற்கும் காரணமாகுமோ? அது மீண்டு மீண்டும் பிறப்பெய்தற்கன்றோ காரணமாவது? அதனை இன் னோரன்ன நூல்களிற் கூறுவது ஏற்றக் குறைவே யன்றோ?' எனின், அற்றன்று; அகப்பொருளான இன்பம் பிறவித்துன் பமும் பிறதுன்பமும் பயப்பதாயின் கடுந்துறவியான வாத வூரர் திருக்கோவையாரை இயற்றியருள்வரா? சடகோபர் திருவிருத்தத்தைத் திருவாய் மலர்ந்தருள்வரா? காமவின் பமே கதியாகக் கடைப்பட்டவர்கள் கரையேறி உய்தற் பொருட்டே நூல்கள் இன்பத்தை எடுத்துரைப்பது என்னுங் கருத்தை, இறையனாரகப் பொருளுரையில், 'காமம் நன்றா மாறும் உண்டு. சுவர்க்கத்தின்கட் சென்று போகந் துய்ப்ப லென்றும் உத்தர குருவின்கட் சென்று போகந் துய்ப்ப லென் றும், நன் ஞானங் கற்று வீடு பெறுவலென்றும் தெய்வத்தை வழிபடுவலென்றும் எழுந்த காமங் கண்டாயன்றே. மேன்

மக்களானும் புகழப்பட்டு மறுமைக்கும் உறுதி பயக்குமாக லின், இக்காமம் பெரிதும் உறுதியுடைத் தென்பது. உடைத் தாமாறு - அறு வகைப்பட்ட பாசாண்டிகரும் இணை விழைச்சு தீதென்ப அஃது உண்டாமிடத்துச் சுற்றத் தொடர்ச்சி உண்டாம். அஃதுண்டாகவே, கொலையே களவே செருக்கே மானமே என்றித் தொடக்கத்துக் குற்றம் நிகழும். அது கேட்டே, தலையாயினார் அதன்கணின்று நீங்குவார். இனி இடையா யினார் 'பெண் என்பது எற்புச்சட்டகம் முடைக் குரம்பை புழுப்பிண்டம் பைம்மறிய நோக்கப் புருந்தார்க்குந் தகை மைத்து; ஐயும் பித்தும் வளியும் குடரும் கொழுவும் புரளியும் நரம்பும் மூத்திர புரீடங்களும் என்ற இவற்றதியைபு பொரு ளன்று. பொருளாயின் பூவே சாந்தே பாகே எண்ணெயே அணிகலமே என்றிவற்றாற் புனையவேண்டா, தான் இயல்பாக நன்றாயின்' என்று அதன் அசுபத்தன்மை உரைப்பக் கேட்டு நீங்குவர். கடையாயினார் எத்திறத்தாவது நீங்கார். என்னை பல பிறப்பிடை ஆணும் பெண்ணுமாய்ப் பயின்று போகந் துய்த்து வருகின்றமையின் அவர்க்கு இது காட்டப்பட்டது. என்னை பேதையைக் காதல் காட்டிக் கைவிடுக்க என்பதனால் அவன் தாழ்பட்ட இணை விழைச் சினுள்ளே மிக்க தொன்று காட்டப்பட்டது. எஞ்ஞான்றும் மூப்புப்பிணி சாக்காடில்லது, நிச்ச நிரப்பிடும்பையில்லது. இவனும் பதினாறாட்டைப் பிராயத்தானாய் இவளும் பன்னீராட்டைப் பிராயத்தாளாய் ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடையராய்ப் பிறிதொன்றிற் கூனமின்றிப் போகந்துய்ப்பா ரென்று காட்டப் பட்டன. என்போலவோ எனின் கடுத்தின்னாதானைக் கட்டிபூசிக் கடுத் தீற்றியவாறு போலவும் கலங்கற்சின்னீர் தெருளாமையான் உண்பானை அறிவுடையானொருவன் பேய்த்தேரைக் காட்டி 'உது காணாய், நல்லதொரு நீர் தோன்றுகின்ற தண்ணீர் பருகாய்; இச் சேற்று நீர் பருகி என் செய்தி' என்று நன்னீர் காட்டி ஊட்டியது போலவும் தான் ஒழுகாநின்ற தோர் இணை விழைச்சினுள்ளே

மிக்கதோர் ஒழுக்கங் காட்டினான். காட்டக் கேட்டு, அது பெறுமாறு என்னை கொல்லோ எனும். எனவே மக்கட் பாட்டினானும் வலியானும் வனப்பானும் பொருளானும் பெறலாவ தன்று தவஞ் செய்தலாற் பெறலாம்; என்னை,

வேண்டிய வேண்டியாங் கெய்தலான் செய்தவம்
ஈண்டு முயலப் படும்

என்பதாகலானென்பது. அது கேட்டு இனி தவஞ்செய்து யானும் இதனைப் பெறுவேனென்று தன்மாட்டு வேட்கை யால் தவஞ்செய்யும். செய்யாநின்றானைப், பாவீ இதன் பரத்ததோ வீடுபேற்றின்பம் என்று வீடுபேற்றின்பத்தை விரித்துரைக்கும். அதுதான் பிறப்புப் பிணி, மூப்புச் சாக்காடு அவலக் கவலைக் கையாற்றினீங்கி, மணியினது ஒளியும் மலரினது நாற்றமும் சந்தனத்துத் தட்பமும் போல உண்ணின் றெழுந்த தொருபேரின்ப வெள்ளத்த தென்பது கேட்டு அத னை விட்டுவீடுபேற்றின் கண்ணே அவாவிநின்று, தவமும் ஞானமும் புரிந்து வீடு பெறு வானா மென்பது" என நக்கீரர் விரித்துரைத்ததைக் கண்டு தெளியலாம். ஆசிரியர் தொல் காப்பியனார்க்கும் இது கருத்தாதலை.

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பண்பே

என்னும் பொருளதிகாரச் சூத்திரமும் அதனுரையும் நன் குணர்த்தும். ஆகவே இல்லறத்தில் நிற்போன், அறத்தாற்றிற் பொருளீட்டிக் குடித்தனம் நன்கியற்றா நின்று, மனையா ளோடு இன்பநுகர்ந்து, பின் துறவியாய் வீடு பெறுவதே இந்நூலின் இனிதுமுடிந்த பொருளாம்.

நன்று, இரண்டாவது பாலினைப் பொருட்பால் எனப் பெயரிட்டுக்கொண்டு, அரசியல் அமைச்சியல் முதலாயின

வற்றை விரித்துரைக்கின்ற நோக்கமென்னை என்பது, திருக் குறளை ஒருமுறை ஓதினார் மனதிலும் இயற்கையாக எழு கின்ற கடா கவிவாணர் பாட்டிலமைத்த பழம் பொருளை அறிவதரிதாகலின் நூலை ஓதுகின்றவர்களும் நூற்கு உரை காண்கின்றவர்களும் இயன்றமட்டில் அவ்வந்நூலாசிரியரு டைய கருத்தை உய்த்துணர்தல் வேண்டும். அங்ஙனமன்றி இவர் தத்தம் மதத்தை நூலிலேற்றியுரைத்தலும், நூல் தம் மதத்துக்கு இடங்கொடாவிடின் வலிந்தும் நலிந்தும் பொ ருள் கோடலும், பாடபேதம் பண்ணுதலும் அவமேயான காரியங்களாம். நம்மாலியன்ற வரையில் இப்பாலில் ஆசிரியர் கருத்து இன்னதென்பதை ஆராயப் புகுவோம். 'இருமையும் பயப்பதாய பொருள் கூறுவான் எடுத்துக் கொண்டார். அது தன் துணைக்காரணமாய் அரசனீதி கூறவே அடங்கும். அரச னீதியாவது காவலை நடாத்து முறைமை. அதனை அரசியல் அங்கவியல் ஒழிபியல் என மூவகைப்படுத்துக் கூறு கின்றார்' எனப் பொருட்பாலுக்குப் பாயிரமுரைத்து உரை கூறப் புகு கின்றனர் பரிமேலழகர். காமத்துப்பாலின் உரைப் பாயிரத்தி லும், பரிமேலழகர் 'இவர் பொருட் பாகுபாட்டி னை அறம் பொருள் இன்பம் என வடநூல் வழக்குப்பற்றி யோது தலான்' என்றும் 'இனி, தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து' என்றும், உரைப்பாயிரத்தின் இறுதியில் 'ஈண்டும் பிரிவினை வடநூன்மதம் பற்றி நால் வகைத் தாக்கிக் கூறினார்' என்றும் கூறுதலால், திருக்குறளுக்கு வடநூற் போக்கையே பின்பற்றி இவர் உரை கூறுவது தேற்றம். இக்கருத்துப் பற்றியே போலும் இவர்,

> படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
> உடையா னரசரு ளேறு

என்கிற விடத்தில் 'ஈண்டுக் குடியென்றது அதனையுடைய நாட் டினை' என்றும், இறுதியிலுள்ள பதின்மூன்றதிகாரத்தை

ஒழிபியல் என்றும் கொண்டது. திருவள்ளுவமாலையில் போக்கியார் என்பவர்.

அரசிய லையைந் தமைச்சிய லிரைந்
துருவ லரணிரண்டொன் றொண்கூழ் – இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொருள் ஏழா மிவை

எனக்கூறிய வெண்பாவால், 'அரணிரண்டு', என்பதில் நாட்டை அரணின் பாற்படுத்தியிருப்பதும், 'ஒன்றொண்கூழ்' என்பது பொருள் செயல்வகை யென்பதும், 'குடிபதின்மூன்'றென்பது இறுதியிலுள்ள பதின்மூன்றதிகாரமும் குடியென்பதும் தெளியப்படுகின்றன. ஆகவே, சங்கத்தார் காலத்தில் ஒழிபியல் என்பதொன்றில்லை யென்பதும் குடி என்பதை அவர்கள் நாடாகக் கொண்டிற்றிலர் என்பதும் தேற்றமாம். ஒழிபியலும் காவலை நடாத்து முறைமையானால் அதனுள் ஆசிரியர் உழவு, நல்குரவு, இரவு, இரவச்சம் முதலியவற்றை அதிகாரப் படுத்துவரோ? குடிமையும், அதற்கின்றியமையாத குணங்களும், குடிசெயல் வகையும், அதற் கேதுவான உழவும் அது செய்யா தார் எய்தும் நல்குரவும் அதனால் இரவும் பிறவும் காவலை நடாத்து முறைமையின்பாற் படுமோ? அரசியலை முதலிலும் குடியியலை இறுதியிலும் வைத்துப் பொருட்பால் உரைத்த ஆசிரியர்க்குக் கருத்து வேறாதல் வேண்டும். இப்பாலில், இம்மை மறுமை பயப்பதான பொருளுக்குத் துணைக்காரண மான அரசனீதி கூறுவதே அமையு மென்பது ஆசிரியர்க்குக் கருத்தானால் இப்பாலைப் பொருள் செயல் வகையும் அரசனீதியுமாகப் பகுத்துக்கொண்டிருக் கலாமே. ஆகவே, ஆசிரியர் கருத்துப் பரிமேலழகர் கருத்தன் றாதல்வேண்டும்.

இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை

ஆகி,

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

இங்ஙனம் ஓம்புதல் பொருளின்றி முடியாதன்றோ? ஆகவே பொருட்பாலில் அப்பொருளீட்டு மாறு கூறினாரன்றி அரச னீதியே கூறினாரல்லர். அரசனும் இல்வாழ்வானே குடிகளும் இல்வாழ்வாரே. அரசன் பொருளீட்டுமாறு வேறு, குடிகள் பொருளீட்டுமாறும் வேறே.

**உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்.**

குடிகளுக்கு 'உழந்தும் உழவேதலை' 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங் கைம்புலத்தாறோம்பல் தலை' என்றதனால் அரசனுக்கு இறைப்பொருள் ஆறி லொன் றாயிற்று, இவ்வைம்புலத்திற்கும் ஐந்துகூறு வேண்டுதலின். ஆகவே இதனைப் பொருட்பாலில் வேறு கூறராயினர். அவ்வாறிலொன்று பெறுதற்கு அரசன் செய்யுந் தொழிலா வது 'குடிபுறங் காத்தோம்பிக் குற்றங்கடிதல்' அரசன் பொரு ளீட்டுதற்குக் குடிகளும் ஒருவாயி லாதலினன்றே.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையான் அரசரு ளேறு

என்றார் இறைமாட்சியில். ஆலோசனை சொல்லக்கூடிய அமைச்சருடனே பகைவர் ஊறு செய்யலாகாத அரணி லிருந்து, படையையும் நட்பையுந் துணையாகக்கொண்டு அரசன் பொருள் செய்யவேண்டும் என்பது பொருட் பாலின் முற்பகுதியின் கருத்து. கயமையில்லாத குடிகள் தங்கள் குடிமைக்கேற்ற குணங்களையுடையராய் பொருளின்மை யால் நல்குரவெய்தி இரவாமல் உழவுத்தொழில் செய்து தங்கள் குடியை மேம்படுத்திக்கொள்ளக்கடவர் என்பது பொருட்பாலின் பிற்பகுதியின் கருத்து.

அறனீனும் இன்பமுமீனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்

என்றபடி, அறத்தாற்றி னீட்டிய பொருள் அறத்தையும் (காம) இன்பத்தையுங் கொடுக்கும்; ஆதலால் அப்பொருளை அவ் வாற்றின் ஈட்டுக என்பதே இப்பாலின் ஒருதலையான நோக்கமாம்.[1]

இனிக் காமத்துப்பாலையும் வள்ளுவர் வடநூல் வழக்குப் பற்றி ஓதினாரல்லர் என்பது

ஆண்பாலேழ் ஆறிரண்டு பெண்பால் அடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக – மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு.

என வள்ளுவ மாலையில் மோசிகீரனார் கூறிய வெண்பா வால் விளங்கும்.

இங்ஙனம் மன்பதைகள் உய்ந்துபோமாற்றை உரைப் பான் எடுத்துக்கொண்ட இந்நூலுக்குப் பாயிரமாக அமைத்துக் கொண்ட அதிகாரம் நான்கில் பொருளும் இன்பமும் அறத்து வழிப் படுவன வாதலின் அவ்வறனை வலியுறுத்தும் அதிகார மொன்றும், அவ்வற முதலானவற்றை உலகினர்க்கு உணர்த்த வல்லார் நீத்தாராகலின் அவர் பெருமையை உணர்த்தும் அதிகார மொன்றும், 'மழையின்றி மாநிலத் தார்க்கில்லை' யாதலின் வான்சிறப்புரைக்கும் அதிகார மொன்றுமாக வைத்து முதற்கண் கடவுள் வாழ்த்தைக் கட்டுரைத்தார். இக்கடவுள் வாழ்த்தைத் தாம் எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டு ஆசிரியர் இந்நூலுக்கு ஏற்புடைக்கடவுளை வாழ்த்திய வாழ்த்தாகக் கொண்டனர் பரிமேலழகர் முதலாயி னார். வானை இன்றியமையாத உலகத்தில் நீத்தாரால் உணர்த்தப்படும் அறம்பொருளின்ப வகையால் வீடு பெறற் குரிய மாந்தர் தெய்வபக்தியுடையவராய்க் கடவுளை வாழ்த்து தல் ஒருதலை என்பது வள்ளுவர்க்குக் கருத்து. அதனாலன்றே, இவ்வதிகாரத்தில் ஸர்வ ஜகத்காரணனான ஆதி பகவனை எழுவாயாக முதற்பாவில் நாட்டி, அவனை வணங்காவிடின்

*கற்றதனாலாய பயன் என் கொல் என்றும், யாக்கை பெற்ற தனாலாய பயனும் அவனை வணங்குதலே, அவனை வணங் காத்தலை கோளிற் பொறி யிற் குணமிலவே' என்றுங் கூறி, அவனை வணங்கலானாய பேறுகளையெல்லாம் பயனிலை யாகக் கடைப்பிடித்துப் போந்தார் நம் வள்ளுவர். ஆகவே மாந்தர் கடவுளை வாழ்த்துதலின் இன்றியமையாமையைக் கருதிற்று இவ்வதிகாரம் என்பது போதரும். ஆசிரியர் தம்மைத் தன்மையாகவும் கடவுளை முன்னிலையாகவும் வைத்துரை யாமை யும் இக்கருத்தை வலியுறுத்துகின்றது.*

*எடுத்துக்காட்டாகற்பாலதான அரசியலில் வாழ்வாங்கு வாழுங் குடிகள் இம்மையின்ப நுகர்ந்து இறுதியாக ஈறிலின்ப மெய்தற்குச் சோபானமான இந்நூலில் துறவறமாகிய படி இன்றியும் அவ்வீறிலின்ப மெய்தலாகும் என்பதே ஆசிரியர்க் குக் கருத்து.*

**அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்**
**போஒய்ப் பெறுவ தெவன்**

*என்றும்,*

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்**
**தெய்வத்துள் வைக்கப் படும்**

*என்றும் நமதாசிரியர் கூறியிருக்கின்றனர். ஆகவே வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவனுடைய லக்ஷணத்தை அறப்பாலில் இல்லறவியலிலும், பொருட்பாலில் குடியியலிலும் நாம் ஆராய்ந்தறிதல் வேண்டும். ஆயின் அவன்தன் மனதிற்குத் தோன்றுமாறோ அல்லது நூலோர் தத்தமக்குத் தோன்றி யாங்கு உரைத்தவாறோ ஒழுகற்பாலனல்லன். உயர்ந்தோ ரொழுக்கத்தையே பற்றுக் கோடாகக் கொண்டு ஒழுகற் பாலன் என்னுங் கருத்தால்*

**எவ்வ துறைவு துலகம் உலகத்தோ**
**டவ்வ துறைவ தறிவு**

*என்றும்,*

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்

என்றும் உரைத்தாராகலின், அவ்வுயர்ந்தோ ரொழுக்கத்தை எடுத்துக்காட்டுவதே ஆசிரியருடைய நோக்கமாயிற்று. ஆகவே இல்வாழ்வானுக்கு மேல்வரிச்சட்டமாகச் சில கூறுதலே இந்நூலின் கருத்து.[2]

## குறிப்புகள்

1. செந்தமிழ் என்னும் பத்திரிகை முதல் புத்தகம் 245ஆம் பக்கத்தில், "பொருட்பாலில் இறைமாட்சி முதலாக இடுக்கணழியாமை யீறாகக்கூறிய அதிகாரங்கள் இருபத்தைந்தும் பெரும்பான்மையும் அரசர்க்கு உரித்தாகலின் அரசியல் என்றும் அமைச்சு முதலாக அவையஞ்சாமை யீறாகக் கூறிய அதிகாரங்கள் பத்தும் பெரும்பான்மையும் அமைச்சர்க்கு உரியவாகலின் அமைச்சியல் என்றும், நாடு முதலாகப் படைச்செருக் கீறாகக் கூறிய அதிகாரங்களைந்தும் பொருளாதலின் பொருளியல் என்றும் நட்பு முதலாகக் கூடாநட்பீறாகக் கூறிய அதிகாரங்களைந்தும் நட்பின் பகுதியவாதலின் நட்பியல் என்றும் பேதைமை முதலாக மருந்தீறாகக்கூறிய அதிகாரங்கள் பன்னிரண் டும் கேட்டுக்குக் காரணமாதலின் துன்பவியல் என்றும் குடிமை முதலாகக் கயமை யீறாகக்கூறிய அதிகாரங்கள் பதின் மூன்றும் மக்களதியல்பு கூறுதலின் குடியியல் என்றும் அகப் பொருட்பால் கூறிய அதிகாரங்கள் எழுபதும் ஆறு பகுதி யாயிற்று" என ஒரு சாரார் கூறுவர் எனக் காட்டியிருக் கின்றது.
2. "புருடார்த்தமாகிய தன்மார்த்த காம மோக்கங்களுள் முதன் மூன்றனையும் வழுவா தொழுக்வே மோக்கமெய்து தலான், அதற்கு வேறு வகுத்துக்கூறவேண்டுவ தின்மை யின், அஃதொழித்து ஒழிந்த தன்மார்த்த காமப் பகுதிகளை அறத்துப்பால் பொருட்பால் காமத்துப் பால் என்று பெயர் கூறுவார்; மங்கலவகையான் எப்பொருட்கு முதலாகிய கடவுள் வாழ்த்தும் அக்கடவுளினது செய்கைத்தாகி இவ்

வுலகின்றியமையாதாகிய வான் சிறப்பும், பிறப்பினிற் சிறப்பெய்துதற் குரியராகிய முனிவரது பெருமையும் அவ ராற் கொண்டுய்க்கப்படுகின்ற அறத்தினது வலியும் நான் கதிகாரத்தாற் பாரித்து; பிரமசரியம், காருகத்தம், வானப் பிரத்தம், சந்தியாதம் என்னும் நால்வகைப்பட்ட அறத் தினுள் பிரமசரியஞ் சீடராய் நின்றோதுவதல்லது செய்வது பிறிதின்மையின் அதனைப் புதல்வரைப் பெறுதல் என்புழி யடக்கி காருகத்தம் இருபத்ததிகாரத்தானு, வானப்பிரத் தம் பத்ததி காரத்தானும், சந்நியாதம் மூன்றதிகாரத்தா னும் எல்லார்க்கும் பொதுவாகிய ஊழ் ஓரதி காரத்தனு மாக முப்பத்துநான்கதிகாரத்தான் அறத்துப்பால் கூறி; பொருட்பால் அரசனை முதலாக நாட்டி அவனுக்குப் புறத் துறுப்பாவன படை குடி கூழமைச்சு நட்பர ணென ஆறாகப்பகுத்து, அரசர்க்குரிய திறம் இருபத்தைந்து அதிகாரத்தானும், அமைச்சரதியல்பு பத்ததிகாரத்தானும், நாடும் அரணும் பொருளும் ஒரோரதிகாரத்தானும், படை இரண்டதிகாரத்தானும், நட்பு ஐந்ததிகாரத்தானும், பகை ஆறதிகாரத்தானும், அரசர்க்கு அங்கமான பெரி யாரைப் பிழையாமை முதல் மருந்தீறாக ஆறும் ஆறதி காரத்தானும், அதற்குறுப்பாகிய குடிமை முதல் நாணு டைமை எனப்படுவன ஏழதிகாரத்தானும் அரசர்க்கும் ஏனை வருணங்கட்கும் ஒப்பவுரித்தாகிய குடிசெயல்வகை யும் அவருட் பார்ப்பா ரொழித்துப் பெரும்பான்மை வேளாளர்க் குரித்தாகி ஏனையோர்க்குச் சிறுபான்மை யுரித்தாகிய உழவும் ஒரோரதி காரத்தானும், அவ்வாறு பொருள் செய்யாதவழி யுளதாகும் நல்குரவும், அதுபற்றித் தோன்றும் இரவும், இரவின் கண் உளதாகிய அச்சமும், இரப்போர்க் கீயாதாருள்ளிட்ட கயவர தொழுக்கமு மாகிய இந்நான்கும் ஒரோ ரதிகாரத்தானுமாக எழுப ததிகாரத்தாற் கூறிக் காமத்துப்பால் கூறுவார். குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணை யும் முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்றனுட் பெரும் பான்மையும் உரிப்பொருள் பற்றிப் புணர்தலும் புணர் தனிமித்தமும் குறிஞ்சி எனவும், பிரிதலும் பிரிதனிமித்தமும் பாலை எனவும், இருத்தலும் இருத்தனிமித்தமும் முல்லை

எனவும், இரங்கலும் இரங்கனிமித்தமும் நெய்தலெனவும், ஊடலும் ஊடனிமித்தமும் மருதமெனவும் ஒரோவொரு நிலம் ஐந்ததிகாரமாக இருபத்தைந்ததிகாரத்தாற் கூறி; ஆக நூற்று முப்பத்து மூன்றதிகாரமாக்கி ஒரோவதி காரம் பத்துக் குறள்வெண் பாட்டாகக் கொண்டு இங் ஙனம் ஆயிரத்து முந்நூற்று முப்பது பாட்டான் வட நூலுந் தமிழ்நூலுங் கூறும் பொருளெல்லாந் தொகுத்துக் கூறினாரெனவுணர்க" இது மணக்குடவருரை.

# 3

# திருவள்ளுவரைப் பற்றிய சில குறிப்புக்கள்[1]

*1909*

**மு. இராகவையங்கார்**

*திருவள்ளுவர் காலம்*

*இடைச்சங்கத் திறுதியில் கபாடபுரம் கடல்கோளால் அழிவுற்றபின்பு, அச்சங்கமிரீஇய முடத்திருமாறனால் மதுரையிற் கடைச்சங்கம் தொடங்கப்பட்ட தென்பதும், அக்கடல்கோட் காலம் கி.மு.3, 4ம் நூற்றாண்டுகள் என்பதும் களவியரையாலும் பிறகருவிகளாலும் தெரியவருஞ் செய்தி முன்னரே விளக்கப்பட்டது. இங்ஙனம் மதுரையில் நிகழ்ந்த சங்கம், பாண்டியர் தலைமையில் பன்னூறாண்டுகள் வரை தமிழ் வளர்ச்சி புரிந்ததாகும். அதனால், கடைச்சங்க காலம் இன்ன நூற்றாண்டது என்று வரையறுத்தல் கூடாததாயினும், 1400 வருஷங்கட்குமுன் - அஃதாவது கி.பி.5ஆம் நூற்றாண்டு*

வரை - அதன்தொடர்ச்சி இருந்து வந்ததென்றே சொல்ல லாம். இச்சங்ககாலத்து விளங்கிய பெருமக்களுட் பழைமை வாய்ந்தவர் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் ஆவர். கடைச் சங்க காலத்தவர் பலர்க்கு முன்பு விளங்கியவர் இத்தெய்வப் புலவர் என்றே தெரிகின்றார். திருவள்ளுவர் வழங்கிய சொற் பொருள் வழக்குகளை எடுத்தாளாத சங்க நூல்கள் சிலவென்றே சொல்லலாம். அங்ஙனம் ஆண்டவற்றுளொன்றான மணி மேகலையிலே, பரசுராமர் காலத்திருந்த சோழவரசனாகிய ககந்தன் என்பானுடைய மகன், புகார் நகரில் காவிரிக்கரைக்குச் சென்ற மருதி என்னும் பார்ப்பனியை இச்சிக்க, அதற்கு அவள் உள்ளநடுங்கி விரைந்தோடி அந்நகர்ப் பூதசதுக்கஞ் சென்று அத்தெய்வத்தை நோக்கித் தனக்கு நேர்ந்த கற்புக் குறைவைப் பற்றிப் பிரலாபித்தபோது,

> தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்

என அத்தெய்வம் அவளைநோக்கிக் கூறியதாகச் சாத்தனார் பாடியிருத்தலைக் கற்றார் அறிவர். இங்ஙனம் பரசுராமர் காலத்துக் கதையிலே, தெய்வமொன்றன் கூற்றில்வைத்து நம் திருவள்ளுவர் வாக்கை அப்புலவர் தொடுத்திருத்தல் குறிப் பிடத்தக்கது. இதனால் அப்புலவர் பெருமான் சில நூற்றாண்டு களளவேனும் சாத்தனார்க்கு முற்பட்டவராதல் வேண்டும் என்பது பெறப்படத் தடையில்லை. நம் காலத்திருந்த பெருங் கவிஞரொருவர் வாக்கை, இராமாயண காலத்தவரான ஒரு வரது கூற்றாகவைத்து 'சிரபுரப்புலவன் சிறப்புரை தேறாய்' எனின் அது சிறிதும் ஏற்புடைய தாகாதென்பது திண்ணம். எனவே, பொய்யில்புலவர் எனப்பட்ட தெய்வப்புலவர் தமக் குச் சில நூற்றாண்டுகளேனும் முற்பட்ட ராயிருந்தாலன்றி, இவ்வாறு மணிமேகலையில் அமைத்துப் பாடச் சாத்தனார் ஒருப்பட்டிரார் என்றே சொல்லலாம்.

## பிரமதேவனும் திருவள்ளுவரும்

இங்ஙனம் பழைமை பெருமை வாய்ந்த திருவள்ளுவனாரை நான்முகனமிசம் என்று கூறும் வழக்குப் பழைமையாக வழங்கி வருவதாகும். திருவள்ளுவமாலையிலே -

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த – நூன்முறையை

என்று உக்கிரப் பெருவழுதியாரும்

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப் – பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
அந்தா மரைமே லயன்

என்று காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரும் பாடியிருத்தல் காண்க. 'வேதப் பொருளை விரகால் விரித்துலகோர் - ஓதத் தமிழால் உரைசெய்' தமைபற்றி வள்ளுவனாரை இவ்வாறு முன்னோர் உபசரித்துக் கூறினார் என்பது ஒரு கருத்தாயினும், இதனிலும் சிறந்த காரணமொன்று இதிகாசத்தினின்று புதிதாகத் தெரியவருகின்றது. அஃதாவது - பிரமதேவர் திரிவர்க்கம் என்ற மகாசாஸ்திரத்துக்கு ஆசிரியர் என்ற செய்தியேயாம். மகாபாரதம், சாந்தி பர்வம் 58ஆம் அத்தியாயத்தில், உலகம் ஒரு காலத்தே தர்மங் குன்றி அதர்மத்தால் தலைதடுமாறி நின்றபோது, தேவர்கள் பிரமதேவரிடஞ் சென்று முறையிட, அப்பகவான் அவர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டு, லக்ஷம் அத்யாயமுள்ள பெருநூலொன்றைத் தம் புத்தியால் இயற்றினர் என்றும், அதனில் அறம் பொருளின்பங்களான திரிவர்க்கங்கள் அவரால் விரிவாக உரைக்கப்பட்டன என்றும், அம் மகா சாஸ்திரத்தில் அடங்கியுள்ள விஷயங்கள் இன்னவின்ன என்றும், பின்பு அத்திரிவர்க்கமென்னும் தண்டநீதியைச் சுருக்கி வைசாலாக்ஷம், பாகுதந்தகம், பார்ஹஸ் பத்தியம், சுக்கிரநீதி என்ற நூல்கள் முறையே சிவபிரான் இந்திரன் வியாழன் வெள்ளி என்பவர்

களால் இயற்றப்பட்டன என்றும் விரிவாகக் கூறப்படுகின்றன. இவ்வரிய செய்தியினின்றும், பிரமதேவர் இயற்றிய திரிவர்க்கம் முப்பாலாக முதன்முதற் றோன்றிய தென்பதும், அதனிலிருந்தே ஏனைய நீதி நூல்களெல்லாம் கிளைத்தன என்பதும் தெரியலாம். இவ்வாறு வள்ளுவனார், பிரமதேவரது திரிவர்க்க நூலைச் சுருக்கி முப்பால் என்ற பெயரால் தம் அரிய பெரியநூலைத் தமிழுலகுக்கு அருளிய சிறப்புப் பற்றியே, முன்னோர் 'நான் முகன் அவதாரமான திருவள்ளுவர்' என்று கூறலாயினர் என்று கொள்ளுதல் பெரிதும் பொருந்துவதாதல் காண்க.

## திருவள்ளுவப் பெயர்க்காரணம்

திருவள்ளுவர் என்று இவர் பெயர், பிறந்த குலம்பற்றி இவர்க்கு வழங்குவதென்று கூறுவர். வள்ளுவர் என்ற குடியினர் தாழ்குலத்தவருள் ஒருவராய் (தொல். பொருளதி. 92, நச்.), விசேட காலங்களிலே அரசாணையை முரசறைந்து சாற்றுவோர்[2] என்பது முன்னூல்களால் அறியப்படுகின்றது. சோதிட நூல்வல்ல நிமித்திகராகவும் பண்டைக் காலத்தே இவர் விளங்கினர் (சீவக. 419). சங்க காலத்தே, தமிழ் நாட்டவருள் சாதிபற்றிய இழிவும் அதன் மூலம் அருவருப்பும் இப்போதுள்ளனபோல இருந்தனவல்ல. தமிழ் வேந்தர்களும் தலைவர்களும், பாணர் முதலிய தாழ்குலத்தவர்களை அவரது கல்வியறிவு முதலியனபற்றி எவ்வளவு சிறப்பாகக் கௌரவித்து வந்தனரென்பதற்குக் சங்கச்செய்யுட்களே தக்க சான்றாக உள்ளன. ஔவைப்பிராட்டியை ஆடல்பாடல் வல்ல விறலியர் கூட்டத்தவராகக்கொள்ள இடமுண்டு. ஆகவே, குலச்சிறுமை, அவரது கல்விப்பெருக்கிற்கும் கௌரவத்துக்கும் தடையாகப் பண்டைக் காலத்தில் இருந்ததில்லை என்று உறுதி கூறலாம். அதனால் நம்புலவர்பெருமான் வள்ளுவக் குடியிற்பிறந்து பெருமைபெற்றவர் என்று ஒரு சாரார் கொள்வதிற் குறையொன்றுமில்லை என்க.

இனி, அரசர்க்குக் கருமத்தலைவராய் உயர்பதவி வகித்த வர்க்கு வள்ளுவன், சாக்கை என்ற சிறப்புப்பெயர்கள் முன்பு வழங்கலாயின என்பது -

வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னர்க்கு
உள்படு கருமத் தலைவர்க் கொன்றும்

என்ற திவாகர சூத்திரத்தால் அறியப்படுகின்றது. உள்படு கருமத்தலைவர் - அரசர்கீழ்க் காரியத் தலைமை வகிக்கும் அதிகாரிகள். இதனால் இராசகாரிய வல்லபராய் விளங்கிய வர்க்கு வள்ளுவப் பட்டம் வழங்கிவந்த செய்தி தெளியப் படும். இதனினின்று அப்பெயரின் உண்மை யுருவமும் பொரு ளும் ஒருபடியாக விளங்க இடமேற்படுகின்றது. அஃதாவது வல்லபர் என்ற வடமொழி வள்ளுவர் என்று தமிழில் திரிந்தது போலும் என்பதாம். இவ்வாறு கூறுவது சிலர்க்குப் புதுமையாகத் தோன்றக்கூடும். ஆனால், அடியிற்கண்ட அரிய செய்தி இக்கருத்தை ஆதரித்து நிற்றல் அறியத்தக்கது.

புதுக்கோட்டைச் சித்தண்ணவாசலிலே அமைந்த மலைக் குகைச் சாஸனமொன்று, பாண்டியன் அவனிபசேகரன் காலத்ததாக உள்ளது. இப்பாண்டியன் 9ஆம் நூற்றாண்டில் ஆண்ட ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனாவன். இச்சாஸனம் அமைத் தவர் மதுரையாசிரியன் இளங்கௌதமன் என்ற புலவர். அதனின் இப்பாண்டியன் சிரீவல்லுவன்[3] என்று குறிக்கப் பட்டுள்ளான்.

ஸ்ரீவல்லபன் என்ற பெயரைப் பாண்டியர் பலர் பெற்றி ருந்தனர் என்பது சரித்திரவறிஞர் நன்கு அறிவர். ஆகவே, இச் சாஸனத்துள்ள சிரீவல்லுவன் என்ற பெயரின் மூலவுருவம் ஸ்ரீவல்லபன் என்பதேயாதல் காண்க. இவ்வாறே சோணாட்டுத் திருவிசலூரிலுள்ள சிவன் கோயில் வடக்குத் திருமதிலில் அமைந்த பரகேசரிவர்மன் இராஜேந்திரசோழனது (1011-43) மூன்றாம் ஆட்சி வருஷத்தில் அமைந்த சாஸனமொன்றும்,

பாண்டியன் ஸ்ரீவல்லுவர் மனைவி மேற்படி கோயிலுக்குச் சில திருவாபரணங்கள் அளித்தனள் என்ற கூறுகின்றது. "பாண்டியன் ஸ்ரீவல்லுவர் தேவியார்... குந்தப் பாவையார்" (Ep. Rep. 46 of 1907; I.M.P. Tj.416) என்பது அச் சாஸனத் தொடர். அச்சோழன்காலத்துப் பாண்டியன் ஸ்ரீவல்லபன் என்பது சாஸனங்களால் தெளிய அறிந்த செய்தியாம். இச் சோழன் மகன் வீரராஜேந்திரன் -

**தென்னனைச் சிரீவல்லவன் மகன் சிறுவன்**
**மின்னவில் மணிமுடி வீரகேசரியை**
**மதவரை யொன்றா லுதைப்பித்து**

வந்தான் - என்று மெய்க்கீர்த்தி கூறுவதும் காணலாம். இவற்றில் வல்லவன் என்ற வடசொல் வல்லுவன் என்று தமிழிற் இடைக்காலத்தே திரிந்து வழங்கிவந்ததென்பது பெறப்படு கின்றது. வல்லபன் என்ற அச்சொல், அன்புக்குரியவன், நாயகன், அத்க்ஷயன் என்ற பொருள்கள் உடையதாம். ஸ்ரீவல்லபன் என்பது அரசனைக் குறிக்கும்போது, திருமகள் நாயகன் என்று பொருள் பெறும். எனவே, மன்னரின் கீழ் கருமத் தலைவராக விளங்கியவர்க்கு வழங்கும் வள்ளுவப் பெயரும் அவ்வல்லபச் சொல்லின் திரிபு என்று கொள்ளு வது ஏற்கும். மாளவர், குட்டவர் (குட்ட நாட்டவர்), ஈழவர் என்பன - மாளுவர், குட்டுவர், குடவர் என இடையுகரம் பெறுதலும்; வல்லி, வள்ளி (கொடி), வல்லூரம், வள்ளூரம் (=தசை) என்ற வாறு, வடமொழி லகரம் இகரமாகத் திரிதலும் பெரு வழக்காதல் காண்க.

மேற்கூறியவற்றிலிருந்து நம் புலவர் பெருமான் 'மன்னர்க்கு உடன்படு கருமத்தலைவராய்' விளங்கியிருந்த மையால் வள்ளுவர் என்ற பெயர்பெற்றனர் என்று கூறுதற் கிடமுண்டு என்பது அறியலாம். தென்பாண்டியிலுள்ள நாஞ் சில்நாட்டின் தலைவனொருவன் புறநானூற்றில் (137) சிறப் பிக்கப்படுகின்றான். இவன் அவனது படைத்தலைமை வகித்

தவன். இவனுக்கு நாஞ்சில் வள்ளுவன் என்று பெயர் வழங்குகின்றது. அரசனது கருமத் தலைவனாயிருந்தது பற்றியே இப்பெயரை அவன் பெற்றிருத்தல் வேண்டும். "ஸ்ரீசோகிரத்துப் பருடையாரும்... இயாய சேகர .............. வள்ளுவருங் கூடிச் செய்த செய்த கச்சமாவது" என்ற வினைத் தொடரும் இக்கருத்தினையே வலியுறுத்துதல் காண்க. (.....I. Vol.v, No.776). இவ்வாறே வள்ளுவனாரும் தம் பெயரைப் பெற்றவர் என்பதற்கு ஆதாரம் என்னை என்று சிலர் உசாவலாம்? அதற்கு அவர் அருளிய நூலையன்றி வேறு சான்றும் வேண்டுமோ? அரசியலில் ஒப்புயர்வற்ற அறிவும் அனுபவமும் இருந்தாலன்றி, திருக்குறளின் பொருட்பால் போன்றதொன்று பிறரால் இயற்ற முடியும் என்று யாவர் கூறவல்லார்? 'மன்னர் தடமுடிமேற் பாறே, பாமுறை தேர் வள்ளுவர்முப்பால்' என்று சீத்தலைச் சாத்தனார் பாடியதினின்று, வள்ளுவரது அரசியல் ஞானத்தின் அதி சயப் பெருமையை மன்னர்கள் கொண்டாடிய செய்தி வெளி யாதலுங் காணலாம். ஆயின், இத்துணை இணையற்ற அரசியலறிவு மன்னரைச் சார்ந்தொழுகி அரசாங்க விஷயங்களில் ஆழ்ந்தீடுபட்டிருந்தாலன்றி இத்தெய்வப்புலவர்க்கு வாய்த்திராதென்பது திண்ணம். அதனால், இராஜகாரிய நிர்வாக வல்லபராயிருந்தவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் என்பதிற் சிறிதும் ஐயமில்லை என்க.

வள்ளுவர் என்ற குடியினர்க்கு, அரசாணையை முரசறைந்து சாற்றுதலாகிய 'உள்படு கருமத்தலைமை' இருந்தமையால், வல்லபர் என்பதன் திரிபான வள்ளுவப் பெயர் வழக்கு அமைந்ததென்றும், அத்தலைமைவகிக்கும் முதுகுடியில் அவதரித்தவரே நம் தெய்வப் புலவர் என்றும், அதனாற்றான் இத்தகைய ஒப்புயர்வற்ற திப்பிய நூலைச் செய்யும் திறமையுடைய ராயினர் என்றும் கொள்ளுதலும் பொருந்தும். இவ்வாறாயின், பழைமையாக வழங்கும் நம் புலவர் வரலாற்றுக்கும் யாவும் இயைவனவாகும். எங்ஙனமாயினும், வல்லப சப்தமே வள்ளுவச் சொல்லாய்த் திரிந்து வழங்கிய

தென்றும், தெய்வத்தன்மை வாய்ந்த அரசியல் நிர்வாக வல்ல பராக விளங்கியமை பற்றியே திருவள்ளுவர் என்ற திருநாமம் இப்பெரும் புலவர்க்கு வழங்கலாயிற்று[4] என்றும் கொள்வது ஏற்புடையதாகும்.

## திருவள்ளுவர் ஊர்[5]

தெய்வப்புலவரது ஊர் மயிலாப்பூர் என்பர். இதற்குப் பழைய மேற்கோள் காண்டல் அரிதாயினும் உலகவழக்குப் பெரிதாயுள்ளது. இனித் திருவள்ளுவமாலையில்·வரும் முன் னோர் வாக்கொன்று ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்செஎன்ப -- இப்பக்கம்
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு

என்ற நல்கூர்வேள்வியார் பாட்டில், ‘வடதிசையை நோக்கி, நப்பின்னைப் பிராட்டியை மணந்த கண்ணபிரானை உத்தர மதுரைக்கு அச்சு (ஆதாரம்) என்று கூறுவர்; இப்பக்கத்தை நோக்குமிடத்து, மாதானுபங்கியுடன் கூடியவரும் குற்றமற்ற புலமையுடைய செந்நாப்போதாருமான திருவள்ளுவர் தென் மதுரைக்கு அச்சாவார்’ என்னும் பொருள்படக் கூறப்பட் டுள்ளது. கீதாசாரியராய் உலகை வாழ்வித்தருளிய கண்ண பிரான் வடமதுரைக்கு எங்ஙனம் ஆதாரமாய்ச் சிறந்தவரோ, அங்ஙனமே திருக்குறளாசிரியராய்த் தமிழகத்தை வாழ்வித்த திருவள்ளுவர் தென்மதுரைக்கு ஆதாரமாய்ச் சிறந்தவரென் பது கருத்து. இப்பாட்டின் போக்கிலிருந்து, வடமதுரை கண்ணன் அவதாரஸ்தலமாய் விளங்கியது போலத் தென் மதுரை திருவள்ளுவர் அவதாரவிடமாக விளங்குவது என்னுங் குறிப்புத் தோன்றுதல் காண்க. கூடற்குத் தென்மதுரையென்னும் வழக்குப் பழமையானதென்பது ‘தக்கிண மதுரை தான்வறி தாக’ என்னும் மணிமேகலையடியானும் அறியப்படும்

இவற்றால், திருவள்ளுவர் அவதாரஸ்தலம் மதுரையெனக் கொண்டு, அவர் வசித்தவிடம் மயிலாப் பூராகக் கோடல் பொருத்தம் என்னலாம்.

## திருவள்ளுவரின் தேவியார்

மேற்காட்டிய 'உப்பக்கநோக்கி' என்ற நல்கூர்வேள்வி யார் பாட்டினுள், நம் தெய்வப் புலவரின் தேவியார் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளதென்றே சொல்லலாம். கண்ணபிரானையும் வள்ளுவனாரையும் ஒப்புமைப்படுத்துமிடத்து, உப்பக்கநோக்கி + இப்பக்கநோக்கி, உத்தர மதுரை + கூடல் (தக்கிணமதுரை) எனப் பாடிய அப்புலவர், உபகேசி[6] (நப்பின்னை) என்ற தேவியைக் கண்ணனுக்குக் கூறியவாறே 'மாதானுபங்கி' என்ற தொடரால் வள்ளுவர்தேவியைக் குறிப்பிட்டனர் என்றே, பாட்டமைதியாற் கொள்ளத்தகும். மாதானுபங்கி என்பது தாயை நிகர்த்த ஒழுங்கினர் எனப் பொருள்படும் என்பர். தந்தையை நிகர்த்தவர் என்னாது தாயை நிகர்த்தவர் என்றமையால், அவ் வடதொடர் பெண்பாலுக்கே பெரிதும் ஏற்புடையதாதலுங் காண்க. எனவே, 'மாதானுபங்கி...செந்நாப்போதார்' என்ற தொடர்க்கு, 'மாதானுபங்கியாகிய செந்நாப்போதார்' எனப் பின்னோர் கொண்டபொருள் ஏற்கத்தக்கதன்று என்பதும், மாதானுபங்கியைத் தேவியாகவுடைய செந்நாப்போதார் என்று பொருள் கோடலே பொருந்துவ தென்பதும் தெரியலாம். இங்ஙனமாயின், மாதானுபங்கி என்பது நம் தெய்வப் புலவரின் தேவியார் திருநாமம் என்பது பெறப்படுகின்றது. இப்போதைய வழக்கின்படி வாசுகி என்பது அத்தேவியின் இயற்பெயரும், மாதானுபங்கி என்பது உபகேசிபோன்ற சிறப்புப்பெயருமாகக் கொள்ளத்தகும். இனி 'மாதானுபங்கி மருவு புலச்செந்நாப்போதார்' என்பது பழம்பாடமாயின், உபகேசியின் தோண்மணந்தவனாகக் கண்ணன் விசேடிக்கப்பட்ட முறையில் மாதானுபங்கியை மணந்தவராக வள்ளு

வரும் விசேடிக்கப்பட்டார் என அமைந்து நயம் பெற்றொளி ரும். அதனால், மருவு என்பதே, உண்மைப் பாடமாயிருந்த 'மறுவில்' எனப் பின்னர் மாறியது போலும். உத்தம பதிபத்தி யாலும் உழுவலன்பாலும் பிரசித்தியடைந்திருந்தமையின், இவ்வாறு புகழ் புரிந்த இல்லினராற் கண்ணனும் வள்ளுவரும் சிறப்பிக்கப்பட்டனர் என்க. தந்தேவி இறந்த போது தெய்வப் புலவர் உருகிப்பாடிய வெண்பாவே அவர் தேவியின் மாட்சி மையை நன்கு விளக்கவல்லது. நச்சினார்க்கினியர் கொண்ட பழம்பாடப்படி அப்பாடல் அடியில் வருமாறு:-

அடிசிற் கினியாளை யன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை – யடிவருடிப்
பின்றூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தால்
என் றூகுமென்கண் எனக்கு.

(தொல். பொ. 156, உரை.)

## ஒரு குறிப்பு

திருக்குறளில் மற்றொரு விசேடங் குறிப்பிடற்குரியது. கடைச்சங்க நூல்கள் பெரும் பாலவற் றினும் 'குஃறொடர்ந்த அன்மொழி' பயிலுதல் காணலாம். அவற்றிலும், அகப்பொரு ளைப் பற்றிய நூல்களிலோ எனில், அச்சொல்வழக்கு மிகுதி யேயாம். இம்முறையே 25 அதிகாரங்கள் காமவிஷயமாகக் கூறிய திருவள்ளுவர் நூலினும் அச்சொல்லை எதிர்பார்த்தல் இயல்பே. ஆனால், அந்நூலுள் ஓரிடத்தும் அது வழங்கப் படாமை வியக்கத்தக்கது. இச்செய்தி, வள்ளுவனார் தம் நூற் பெருமையில் பெருநோக்குடையராயிருந்தவர் என்பதைப் புலப்படுத்தக்கூடியது. ஏனைப்புலவர்கள் அகப்பொருள் விஷயமாகக் கூறியவற்றிலும் சிறப்பாகவும் கௌரவமாகவும் வள்ளுவனார் தம் காமத்துப்பாலையியற்றியவர் என்று அறி ஞர்கள் போற்றும் புகழ்ச்சியோடு இவ்விஷயமும் சேர்த்து மதிக்கற்பாலது.

## இஷ்டம் பூர்த்தம் தத்தம்

வடநூலார் அறஞ்செயன்முறையை மூன்றுவிதமாக வழங்குவர்; அவை - இஷ்டம், பூர்த்தம், தத்தமென்பன. அவற்றுள் இஷ்டமாவது, உலகனைத்தும் வாழ்கவெனக் கருதித் தெய்வங்களை நோக்கித் தொழுஞ்செயல்; இஃது, அக்கினி, ஆகுதி, மந்திர முதலியவற்றால் வேள்விமூலம் ஆராதித்தலாம். பூர்த்தமென்பது, எல்லாவுயிர்களும் இடுக்கணின்றி இன்ப மடையும் வண்ணம் இயற்றும் அறச் செயலாம். வித்தியசாலை, வைத்தியசாலை, தண்ணீர்ப் பந்தல் முதலாய பொதுநன்மைகளை இது குறிக்கும். தத்தமென்பது எளியார்க் கிரங்கி ஈதலாம். இம்மூவகையுள்ளே, முதலிற் குறித்த இஷ்டம் அவ்வவ் வருணாச்சிரமங்கட்கு ஏற்றவாறு சிறப்பாயமைவ தென்றும் ஏனைப்பூர்த்தமும் தத்தமும் எல்லார்க்குமொத்த தர்மங்களென்றும் உணர்க. இங்ஙனம் வடநூலார் வகுத்த முறையையே, திருவள்ளுவரும் கூறியிருத்தல் குறிப்பிடத்தக்கது. அம்முப்பகுதியறங்களுட் சிறப்பியல் புடைய இஷ்டத்தை - 'எல்லா அறநூல்களினும் நல்லன வெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதலை இயல்பாக வுடைய' வள்ளுவனார் தம் நூலில் விரித்துரைக்க ஒருப்பட்டிலராயினும், இல்வாழ்க்கையதிகாரத்தில்:-

> தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
> கைம்புலத்தா றோம்ப றலை

என்பதனால் அவ்வறச்செயல்கள் இன்னவென்று குறிப்பித்திட்டார். வள்ளுவனார் வைதிகச் சார்புடையராதலின், தென்புலத்தாரான பிதிரர்க்குப்புரியுங்கடன் முதலிய பஞ்சமகாயஞ்ஞங்களை ஈண்டெடுத்துக் கூறினர் எனவுணர்க. இங்ஙனமே 'இல்வாழ்வானென்பானியல்புடைய மூவர்க்கும் - நல்லாற்றி னின்ற துணை' என, வேதமுறையினமைந்த வானப்பிரஸ்த முதலிய சிறப்பிடங்களிற் புரியும் தருமங்களையும் தெய்வப்புலவர் சூசிப்பித்தல் காண்க. இனிப்பொது

*நன்மையாகிய பூர்த்தமும், வறியராய் ஏற்றார்க்கு மாற்றாதீதலாகிய தத்தமும், இல்லறவியலினீற்றல் ஒப்புரவு, ஈகை என்ற இரண்டு அதிகாரங்களால் முறையே அவர் விரித்துக் கூறினர் ஒப்புரவு எனத் தெய்வப்புலவர் கூறியது பொதுநலங் கருதிய தர்மங்களையே குறிக்கும்.*

## குறிப்புகள்

1. செந்தமிழ் தொ-8, ப.11 (1909-1910), தமிழர் நேசன், தொ.10, ப.1.
2. "திருநாள் படைநாள் கடிநா ளென்றிப், பெருநாட் கல்லது பிறநாட் கறையா... வள்ளுவ முதுமகன்" என்பது பெருங்கதை (2, 2, 32-4).
3. ஆர்கெழு வைவே லவனிப சேகரன், சீர்கெழு செங்கோற் சிரீ வல்லுவன் (Ep. Rep. 368 of 1994; I.M.P. pd.267)
4. தஞ்சைச் சரசுவதி பண்டாரத்தில், திருக்குறட்கு மொழி பெயர்ப்பாயமைந்த வடநூலொன்றுள்ள தெனவும், இது நூறு வருஷங்கட்கு முன்பிருந்த ஸம்ஸ்கிருத பண்டித ரொருவர் இயற்றியதென்றும், இவர் குறளாசிரியரை வல்லபாசாரியர் என்ற பெயரால் வழங்கியுள்ளாரென்றும் டாக்டர் ஸ்ரீமாந். பி.எஸ். சுப்பிரமணியசாஸ்திரிகள் என்னிடம் ஒருகால் அறிவித்த செய்தி இங்கே குறிப்பிடத் தக்கது.
5. இது, 1910ம் ஷ இந்நூலாசிரியரால் ஆராய்ந்து பதிப்பிக்கப் பெற்ற திருக்குறள் (கையடக்கப்) பதிப்பின் முன்னுரையுள், 4, 5ஆம் பக்கத்துக் கீழ்க் குறிப்பாக அவர்கள் குறித்துள்ள அரியகருத்தைத் தழுவியமைக்கப்பட்டது.
6. இச்சொல்லின் வரலாற்றை இந்நூல், 56ஆம் பக்கத்துக் கீழ்க்குறிப்பிற் காண்க.

**(– செந்தமிழ்)**

# 4

# திருக்குறள் – வீட்டின்பால்

*1909*

**ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை**

*திருவள்ளுவதேவரின் பெருமையும் அவர் திருக்குறளின் பெருமையும் யாவரானும் அளப்பரிதென எவர்க்கும் தெரிந் ததே. நாயனார் தம் வாய்மொழி யானன்றி உலகிற்கு மேலான அறத்தைத் தாமே ஒழுகியும் காட்டினார். துறவறத்தை நன்கு மதித்தும், சில ஞானக் கள்ளர்களைப்போல் அத்துறையை நாடாது, இல்லறத்தினின்றுமே பிறவிக்கடலை நீந்தலாகு மென்பதனைக் காட்டி, எந்நிலையினராயினும் தத்தம் நிலைக் குரிய தொழிலைச்செய்து உயிர்வாழ்வதே மேலான ஒழுக்க மென உழைப்பின் பெருமையையும் புகட்டி, யாவர் மாட்டும் அன்புபூண்டொழுகுவதே மேலான அறமெனவும் நாட்டி, மனத்துறக்கமடைந்து தெய்வபத்தியிற் சிறந்து அவருடைய அதிதபக்குவ நிலையை விளக்கிநின்றார். ஓர் ஆங்கிலேய சரித்திரக்காரர், 'உலகிற் பெரியோரெனக் கொண்டாடு பவரெல்லாம் சில குற்றம் குறைபாடுள்ளவர்களாகக் காணப்*

படுகின்றார்' என்றனர். காளிதாசப்புலவரும், 'வெண்ணிலா விற் களங்கமிருப்பது குற்றமாயினன்றோ, அம்மேன்மக்கள் குற்றமும் குற்றமாகு' மென்றனர். இவ்வுரைகள் உலகியலுக்கு எவ்விதமாக ஒப்பிலும் இக்குற்றம் குற்றமேயென, நாயனார் தம்மொப்பற்ற புனித வாழ்வினால் நிலைநிறுத்தினார். எவ் விதத் தீங்கினையும் நிலைத்தலும் செய்தலுமின்றி, எவ்விதப் பற்றுக்களையும் களைந்து எவ்வுயிரினிடத்தும் அன்பு பூண்ட டொழுகுவது அருமையினும் அருமையன்றோ? அவ்வித அருமையும் பெருமையுமன்றோ நம் நாயனாரது.

மேல், திருக்குறளின் பெருமையைப்பற்றிப் பேசப்புகின், தமிழ்ப்புலமையில் மிகச்சிறந்த கனம் ஜீ.யூ. போப்பையரின் உரை மிகவும் கருதற்பாலது. அவர், இந்நூல் எப்பாடையினும் ஒப்புயர்வற்றதெனக் கூறியுள்ளார். இது சாமானிய உரையன்று. இவரோ, லத்தீன், கிரீக் முதலிய ஐரோப்பிய பூர்வீக பாடை களிலும், ஆங்கிலேயம், பிரஞ்சு முதலிய தற்கால பாடைகளி லும் புலமையடைந்தவரும், இந்திய பாடைகளில் அநேகம் தெரிந்தவருமாயுள்ளவர். ஆக அநேக பாடைகள் அரசுரிமை பெற்று நடக்கும் இக்காலத்திலும், இத்திருக்குறள் இப்பெரும் புகழ் பெறுமாயின், இந்நூல் பிறந்த காலத்திலேயே கல்விச் செருக்கடைந்திருந்த மதுரைச் சங்கப் புலவர்களாற் போற்றப் பட்டது என்பது ஆச்சரியமன்று. நூலாசிரியர் இழிகுலத்திற் பிறந்தவரென்றது உண்மையாகு மேல், அவர் மேலும், அவர் திருக்குறள் மேலும் புலவர்கள் பலரும் சொரிந்த புகழும் பெருக்கமடைந்தது. அச்சங்கப் புலவருள் ஒருவர் இந்நூலை வேதமென்றார். மற்றொருவர் அவ்வேதம் போலல்லாது யாவர்வாய் மடுப்பினும் இச்சொல் தன்னாற்றல் குன்றாது பயன்படும் என்றார். ஒருவர் இதனைத் தேவாமிர்தமென்றார். மற்றொருவர் அவ்வமிர்தம் போலல்லாது யாவரும் பருகற் கினிய தென்றார். இன்னுமொருவர், 'சிந்தைக்கினிய செவிக் கினிய வாய்க்கினிய, வந்த விருவினைக்கு மாமருந்து' என்னவும்,

நமக்குமே நாவிற் சுவையுறுகின்றது. ஒருவர் நம்மகவிருளை நீக்கி மனக்கமலத்தைமலரச் செய்யும் ஞானசூரியனாகக் கூறியுள்ளார். இன்னொருவர் அறம் தகழியாகவும் பொருள் திரிபாகவும் இன்பம் நெய்யாகவும் செஞ் சொற் றிரியாகவும் குறட்பா தண்டாகவும் அமைந்து நம்மக விருளை நீக்கும் விளக்கென்றார். வடமொழியிலுள்ள சில சூத்திரங்கள் போலல்லாது சுருங்கச் சொல்லுதலோடு, ஐயந்திரிபற விளங்கவைத்தலையும், சொற்சுவை பொருட் சுவைகளிற் சிறப்புற்றிருத்தலையும் இச்சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். 'சர்வதர்மங்களும் சர்வசாஸ்திர விஷயங்களும் அடங்கி யிருக்கும் பெருநூலிதுவே. எல்லாப்பொருளும் இதன்பாலுள; இதன்பாலிலாத வெப்பொருளுமில்லை. யால்' என்னும் வாக்கியத்தால் விளக்கியிருக்கின்றார்.

மேல், கல்லாடர் என்னும் புலவர் இந்நூலின் அரிய தாகிய ஒரு மேன்மையைப் பின்வரும் பாட்டாற் சிறப்பித்தனர்.

ஒன்றே பொருளெனின் வேறென்பர் வேறெனி
னன்றென்ப ராறு சமயத்தார் – நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.

அஃதாவது, திருவள்ளுவர் வாக்கானது எல்லாச் சாஸ்திரங் களின் சாரமாயும், எல்லாச்சமயிகட்கும் சம்மதமாயுமுள்ள சமரச சித்தாந்தமாகும். ஆகவே, அன்றுதொட்டு எல்லாச் சமயிகளும் அவரைத் தம்பாலவரெனக் கொண்டு அன்பு பாராட்டி வருகின்றனர். ஆதலால் அவர் வாய்மொழி பொய்யா மொழி யென்பதும், நிர்மலமாயுள்ளதென்பதும், ஒப்புயர் வற்ற நீதிசாத்திரமாயும் சமயசாத்திரமாயுமுள்ளதென்பதும் பெறப்படும்.

மேலித் திருக்குறள் அறம்பொருள் இன்பமென முப் பாலாக வகுத்துளது. இம்முப்பாலின்றிறத்தைப் பற்றித் தமிழிலும் ஆங்கிலேயத்திலும் பண்டிதர் பலர் அநேகமாகப்

பேசியிருத்தலின், அவற்றைப்பற்றி ஈண்டு விசாரியாது விடுத்தாம். ஆயின் இங்கு எடுத்த விசாரணைதான் என்னையெனின் திருக்குறளின் வீட்டுப்பாலைப்பற்றியேயாம். என்னை? ஆன்றோர் பலரும் இது முப்பால் நூலென்று கொண்டிருக்கவும் வீட்டுப்பாலும் இதன்கண் உளதென்பதற்குச் சான்றென்னையெனின், முற்கூறிய சங்கப்புலவர்களே, நம் நாயனாரை 'முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்; ஆகக் கொண்டிருக்கின்றனர். இன்னும், 'அறம்பொரு ளின்பமும் வீடென்னும் நான்கின் திறந்தெரிந்து செப்பியதேவ்' என்றும் 'அறனறிந்தேமான்ற பொருளறிந்தேம்பின் திறனறிந்தேம் வீடுதெளிந்தேம்' என்றும் கூறியுள்ளார். ஆகவும் துறவறமாகிய காரணவகையானன்றி இலக்கணவகையால் வீட்டைப் பற்றிக் கூறிற்றில நூல்கள் என்று பரிமேலழகர் கூறியதனால் துறவறத்துள் வீட்டினைப் பற்றிக் குறிப்பாகக் கூறினார் என்பதும் தெளிக. வீடென்பது 'சிந்தையு மொழியும் செல்லா நிலைமைத்து' என்பதை ஒப்பினும், அவ்வீடென்பது ஒன்றுண்டோ, வீடடைபவன் எவன், வீட்டையும் வழியாது என நிகழும் வினாக்களுக்கு விடைபகரும் நூல்களே ஞானசாத்திரமாக யாவரும் கொள்ளுகின்றனர். ஆகவே இவர் விஷயத்தில் நம் நாயனாரின் கருத்து என்னையெனக் கொஞ்சம் கூர்ந்து விசாரிக்கப்புகுவாம். அவர் கருத்தும், 'கடவுள் வாழ்த்து' என்னும் முதலதிகாரத்திலும் 'நீத்தார்பெருமை' யென்ற மூன்றாமதிகாரத்திலும், 'நிலையாமை', 'துறவு', 'மெய்யுணர்தல்' என்னுமதிகாரங்களிலும் கிடக்கக்காணலாம்.

மேல் இம்முதலதிகாரம் கடவுள்வாழ்த்தாகக் கூறினும், இதிற் கடவுளதுண்மையும், அவனது இலக்கணமும், வீடடைய விரும்பு வானிலக்கணமும் அடையும் வழியும் விரித்துக் கூறியுளது. முதற்குறளில், கடவுள்தான் உண்டோ என்னும் ஆசங்கையை நீக்க, 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என்னும் மொழிகளாற் 'காணப்பட்டதாகிய உலகம் ஒருவனால் உண்டாக்கப்பட்டிருக்கவேண்டும்' என்னும் நியாயவாயிலாக

நிலைநிறுத்தினார். இன்றுவரையும் உள்ள நூல்களிற் கடவுள துண்மை கூறற்கு இந்நியாயந்தான் விசேஷடித்ததாயிற்று. இவ்விஷயமே, சிவஞானபோத முதற்சூத்திரத் தினும் பிரம்ம சூத்திரம் இரண்டாமவற்றினும் விஸ்தரித்துள்ளது. ஆதியென்ற சொல்லானது உலகத்தோற்றத்தின் மேற்று, கடவுள் ஆதியு மந்தமும் இல்லாத வனாகையால் 'போற்றி யருள்கநின்னாதி யாம் பாதமலர்' என்றதினும், ஆதி யென்னும் சொல் பகவானின் சிருஷ்டிகிருத்தியத்தையே விளக்கிநின்றது. உலகு என்னும் சொல் உரைகாரர் ஈண்டு யிர்கண்மேனின்றது என்றாராகலின், ஆதிபகவன், உலகு, உயிர்கள் என முப்பொருள் உண்மையும் பெறப்பட்டது. இம்முப் பொருள்களில், கடவுளது முதன்மை கால இடவகை யானன்று என்பதனை ஓர் உவமைவாயிலாக விளக்கிக் காட்டினார். இறைவன் அகரம்போலுமுயிர்: உலகுயிர்கள் மெய்போலும் உடல்: உலகுயிராக இருபொருள்களும் இறை வனுக்கு உடலாகும் தன்மையானே உலகென ஒன்றுபடுத்திக் கூறினார். இவ்வுவ மானவாயிலாய், இறைவனுக்கு உலகுயிர்களுக்கு உள்ள சம் பந்தம் இனைத்தெனக் காட்டினார். இறைவனும் உலகுயிர் களும் ஒன்றோ, இரண்டோ, அன்றோ என்னும் வினாக்களுக்கு ஒன்றென்றும், இரண்டென்றும்; அன் றென்றும் கூறாமல், அவற்றின் சம்பந்தம், உயிர் மெய்யெழுத்துக்கள் போலா மென்றனர். இச்சம்பந்தமும் என்னை யெனின், உயிரெழுத்தும் விகாரத்தானன்றி நாதமாத்திரையாய் இயல்பாற்பிறந்து தானே ஒலிக்கும் வலியுளது. மெய்யெழுத்தோ தன் இயற்கை யானன்றி, உயிரோடு கூடிமட்டும் ஒலிக்கப்பெறும். அஃதா வது 'அ ஆ' முதலிய உயிர்கள் தாமே ஒலிக்கலாம்; ககர முதலிய எழுத்துக்களை ஒலிக்கப்புகுங்கால் க(க்+அ) என்றே னும், இக் என்றேனும் ஒலிக்கலாமேயன்றி, அகர இகரங்களை விடுத்து ஒலிக்க இசையா. அம்மட்டன்றி, உயிரெழுத்தினின் றும் மெய்பிறந்ததாகக்கொள்ள எவ்வித ஏதுவுமின்று. அகரத் தினின்றும் ககர சகரங்கள் எக்காலத் தினும் ஒலிக்கா. ஆகவே உயிர்மெய்யெழுத்துக்கள் ஒன்றோ வேறோ, என்னும் வினா

நிகழ்த்தும்போது, ஒன்றெனின், உயிரினின்றும் மெய்பிறக்க வேண்டும்: வேறெனின், தானாகவே ஒலிக்கவும்வேண்டும். ஆகவே இவை ஒன்று மன்று இரண்டுமன்று. ஒன்றாகாமல், இரண்டாகாமல், ஒன்றுமிரண்டு மின்றாகாத சம்பந்தம் வேறெனும் உளதோ எனின், அச்சொற்களே அப்பொருள் களைவிளக்கும். உயிர் என்னும் சொல்லே ஆன்மாவிற்கு உரியபெயராகவும், நம் முடலே மெய்யாகவும், இவ்வுடலுயிர்ச் சம்பந்தம் இனைத் தென அறிந்த பரமஞானியே தமிழ்வகுத்த அகத்தியனாராகவும், அவர் இவ்வுடலுயிர்ச்சம்பந்தம் இவ் வெழுத்துக்களிற் கண்டுணர்ந்து அவைகளுக்கிட்ட பெய ராகும். அத்தமிழை அ-உயிர், க. மெய்யெனக் கற்கப்புகும் பாலனா தலையும், ஞானசாத்திரத்தின் முதலெழுத்துக்களை கற்பவனாவன்.

மேல், நம்முடலுயிர்ச் சம்பந்தமமுமே என்னையென விசாரிக்கப்புகின் இவ்விஷயம் சைவசித்தாந்த சாத்திரங் களின்றி யேனை நூல்களிற் விஸ்தரிக்கக் கண்டிலேம். ஆனால் பேயன் என்னும் பண்டிதர் தாம் எழுதிய ‘உயிர் உடல்’ (Mind body) என்ற நூலிற் பின்வருமாறு சித்தாந்தப்படுத்தி யிருக்கின்றார்.

‘இடம் கொண்ட அசத்துடன் உயிர் ஒன்றாயிருக்கக் கண்டோம். ஆயின், உயிர் உண்மையில் இடங்கொண்ட பொருள் அன்று. ஆக்வே இடங்கொண்ட அசத்துடன் சேரா. இவ்வரிதாகிய சம்பந்தத்தைக் குறிக்கும் சரியான பதம் கிடைப்பது கஷ்டம். சரியான உபமானமும் கஷ்டம். மற் றெல்லாச் சம்பந்தங்களையும் நோக்க, இந்த சம்பந்தம் விபரீத விரோத சம்பந்தமாயிருக்கின்றது.’

எனினும் நம்மான்றோர் இவ்வுடலுயிர்ச் சம்பந்தத்தைக் குறிக்கவே, உயிர் மெய்யெழுத்துபமானத்தைக் கைக்கொண் டனர். பேயன் பண்டிதர் கண்டவண்ணமே நம்மவர்களும் இச்சம்பந்தமும் ஒன்றாகமா விரண்டாகாமல் ஒன்றிமிரண்டு மின்றாகாமலென்ற, விபரீதமும் விரோதமுமாகவே காண்

கின்றார்கள். எனினும் இப்பொருள்களை ஒன்றாகவும் இரண்டாகவும் எண்ணவும்கூடும். இச்சம்பந்தத்தை விளக்கச் சரியான சொல் ஏற்படாவிட்டாலும், இஃது உண்மையா மென யாவரும் அங்கீகரிக்கற்பாலதன்றோ? ஆதலாலன்றோ நாயனார் கூறியவுண்மையும், சர்வசாஸ்திர ஸாரமாகவும், சமரசஞானமாகவும் கொள்ள இடமுண்டாகிறது.

ஆகவே: இறைவன் உலகுயிர்களின் சம்பந்தம், நம்முடல் உயிர்போன்றும் உயிர்மெய்யெழுத்துப் போன்றுமுள்ளது என்பது திண்ணம். இதனுண்மை, மெய் கண்டதேவரது 'அகர வுயிரின்றேல் அக்கரங்களின்றாம்' என்று மூதுரையை மனதிலழுத்த இன்னும் விளங்கும். ஸ்ரீகண்ட சிவமும் தம் பாடியத்தில் உலகுயிர்கட்கு இறைவன் உயிராம் தன்மையை விளக்கியிருப்பதைச் சித்தாந்ததீபிகை 5வது புத்தகம் 95ம் பக்கம் காண்க.

மேலும் உயிர் மெய்யாகாது - மெய் உயிராகாது எனினும், உயிரன்றி மெய்பிறவானு மெய்யுடன் உயிர்பிரிவின்றி நிற்ற லும் காண்கின்றோம். இதனால், இறைவன் சூக்குமலஷண மாகிய 'ஒன்றுயில்லை யன்றியொன்றில்லை' என்பதும் விளக்கியதாமென்க.

இறைவன் உயிரென்றதினாலும், படைத்தல், ஆக்கல், அழித்தல் முதலிய தொழில் வன்மையாலும், அவன் இயற்கை யறிவுடையவன் முற்றறிவனென்பதும் பெறப்பட்டது. அது கொண்டே உலகுயிர்கள் அவன் சந்நிதியில் அறிவற்ற அசே தனம் போலும், அசைவித்தாலன்றி அசையா, அறிவித்தா லன்றி அறியா எனவும் ஏற்பட்டன. இக்கருத்தை வலியுறுத் தும் பொருட்டே, இரண்டாம் குறளில் இறைவனை 'வாலறி வன்' எனவும் இறைவனை வாழ்த்தி வணங்கி அருள்பெறாத உயிர்களின் கல்வியறிவைப் பயனற்றதாகவும் குறித்தார். கல்வியறிவின் பயனும் அவனையடையவேண்டுமென்பதும், 'தாள்' என்ற சொல்லால் அவனது பெருமையும் நமது சிறுமையும் பெற்றாம்.

மேல் அவன் முற்றறிவனாகவும், நாம் சிற்றறிவுடையே மாகவும் அவனை நாமறிந்த தடைவதெப்படியெனின், இறைவனின் மற்றொரு தன்மையினால் அஃது எளிதாம். அன்பே இறைவன். அன்பு வேறு இறைவன் வேறன்று. ஆக வும் அவன் நினைப்பவர் மனமே கோயிலாகக்கொண்டு வசிப்பவன். 'ஏகினான்' என்ற பதத்தினால், இறைபணி நின்ற அன்பர்களுக்கு அவர்கள் நினைப்பதன் முன்னமே அவன் விரைந்துசென்று அருளுமாறுங் கண்டாம்.

அவன் முற்றறிவுடையனாதலின், நாமவனை அளந் தறிவது இயலாதாகும். மேலும் நம்தற்போதத்தை முன்னிட்டு அறியப்புகின், இன்னும் அசாத்தியமாகும். நான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக்களை நீக்கி இறைவன்பால் உள்ளன் போடுமுருகி மெய்சிலிர்த்து நிற்பார், அவன் அருளைப் பெறுவது எளிதினும் எளிது; உமாபதி சிவமும் அவ்வித அன்பும் இன்றுண்டேல், இன்றே அவனருளைப் பெறலாகு மென்றார். நன்முயற்சி எவ்விதத்திலும் வேண்டுமாயினும், அவன் அருள் முன்னர் வேண்டுமென்பது 'ஏகினான்' என்னும் பதத்தினால் மீண்டும் விளங்கும்.

அவனருளாலே அவன்றாள் வணங்கி

தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினான்

அன்பர்க்கு மெய்யன் அல்லாதர்க்கு அல்லாதான்

நினைப்பரிய தனிப்பெரியோன்

தேவர்களே நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்திருக்கும் பாவகத்தால்

தேவர்கட்கும், தெரிக்கும்படித்தன்றி நின்ற சிவம் வந்துநம்மை,
யுருக்கும் பணிகொள்ளும்

பாரார் விசும்புளார்..... ஆராலும் காண்டற்கரியன் எமக்கெளியன்

என்பன மறைமொழிகள்.

*மேல் எங்கே அன்பு விழையுமோ, அங்கே ஆனந்தம் பிறக்கும். அன்பில்லாதவிடமும் ஆனந்தமுண்டாகுமோ. இறைவனை ஆனந்தனாகவும் ஆனந்தசொரூபனாகவும் சொல்லி, அவன் நம்மிடத்தில் அன்பு அல்லது அருளைச் செலுத்த இயலாதவன் என்றால் ஒருக்காலும் பொருந்துமோ. இறைவன் நம்மிடத்தில் அருளைப்புரிந்து, யாம் அன்புருகி நிற்றலும் அவன் நமக்கு ஆனந்தமாதலும் பின்வரும் திரு வாக்குகளாலும் நன்கு விளங்கும்.*

சட்டோ நினைக்க மனத்தமுதாம் சங்கரனை

உள்ளப்படாத திருவுருவை யுள்ளுதலும்
கள்ளப்படாத களிவந்த வான்கருணை

தினைத்தனை யளவுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ

உருகிப்பெருகி உளங்குளிர முகந்துகொண்டு
பருகற்கினிய பரங்கருணைத் தடங்கடலை

ஞானக் கடும்பின் றெளியைப் பாகை
நாடற்கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயினானைச்
சித்தம் புகுந்து தித்திக்க வல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டு கொண்டான்.

*இருவர் அறிவினால் ஒன்றப்படுவது கூடாதாகும். அன்பே ஒருவரைஒருவர் ஒன்றுபடுத்த வல்ல, ஆயின் ஒருவர் ஒருவரை அறிந்தால்தான் அன்பும் பிறக்கும். பூர்வபுண்ணியத்தினாற் பார்த்ததுமே அன்பு விழைவதும் உண்டு. 'கண்ணப்பன் ஒப்ப தோர் அன்பின்மை' என்றது அதுபற்றி. அன்பின் முன் கீழ் மேலில்லை. வலியார் எளியார் இல்லை. சாதி குலமில்லை. நான் எனதென்பதுமில்லை. தற்சுகம் பாராது பிறர் துன்பம்*

தானே வகிக்கும். பிறர் நன்மையே நாடும். பிறர் மேல் தீங்கு நினையாது; எல்லாமிருந்தும் உள்ளன்பில்லாவிடில் வற்றன் மரமாமன்றோ.

ஓர் ஐரேப்பிய தத்துவ ஞானி, 'சூரியனைப்போலும் இறைவன்; அவனையறிவது கூடாது; அவன் நுண்ணிய ஒளிக்கிரணங்களே அவனது அருள், அவ்வருளொளி யாலே மட்டும் நாமவனை யறியலாம்' என்றார்.

மேல் அவன் அகண்ட ஞானமுடையவனாகவும், சால அன்புடையவனாகவுமிருக்க, உயிர்கள் பிறந்திறந்துழன்று துன்பத்தில் ஆழ்ந்து அவதிப்படுவதேன்? இவ்விதந் தோற்று வித்தல் முதலியவைகளை யேன் செய்யவேண்டுமெனில், இறைவனது செய்கை பயனற்றதுமன்று. தன்பொருட்டு மன்று; பிறர்பொருட்டே. அவன் தனக்கென்று வேண்டுதல் வேண்டாமையிலனாகையின். உயிர்கள் இடும்பையுட்பட்டு நிற்பவர்கள் ஆகையால், அவ்விடும்பை யொழிக்கும் பொருட்டே இப்படைத்தல் முதலிய தொழில்களைச் செய் வதும் ஆகும். இறைவன் என்றும் சலமிலனாதற்கும் உயிர்கள் சஞ்சலத்துக்குட்பட்டதற்கும் ஏது, இத்திருக்குறளி னால் விளங்குகின்றது. அஃதாவது இறைவன் விருப்பு வெறுப்பற்றி ருத்தலும், உயிர்கள் விருப்பு வெறுப்புற்றிருத்தலுமே. உயிர்கள் தங்கள் சிற்றறிவால் தங்களுக்கு என்று மழியாத வின்பங் கொடுப்பது இன்னதே எனத் தேர்ந்து கொள்ளாமல், தாங்கள் செய்யவேண்டிய கர்மங்கள் துன்பத்தைத் தருவதாயின் அவை களை விலக்கி, அல்லாத தர்மங்கள் தற்காலம் இன்பந்தருவ தாயின் அவைகளைச் செய்யவே புண்ணிய பாவங்கள் விளை யும். விளைதலும் 'இருள்சேரிரு வினையும் பற்றும்; பற்றலும்' அடிக்கடி பிறந்திறந்துழலப் பிறப்பின் பிணியறா. ஆகப்பிறப் பின் பிணியறுவதற்கு வழியாது எனில். இரண்டுண்டு, அவை யாவன;-இருளினை யொப்படைதலும், பற்றற்றான் பற்றினைப் பற்றலுமே. வேண்டுதல் வேண்டாமையுடைமையும், இன்மை

யுமே உயிர்களுக்கும் இறைவனுக்கும் உள்ள கண்டிப்பான பேதம். தேவர்கள் வறுமையிற்றுன்புற்று. பொருளைநாடி, திருப்பாற் கடலைக் கடையும்போது மலையிலுங்கடலிலும் உள்ள சர அசரமாகிய உயிர்கட்கு விளையும் துன்பத்தைக் கருதினார் கள் இல்லை. உயிர்க்கதம் செய்தலே பாவமாகை யால், அப்பாவமே விஷமாகத் திரண்டு அவர்களைத் தீய்த்தது. அதில் வெறுப்புற்று வருந்திநின்று இறைவனை நோக்கி ஓலமிட்டழுதார்கள். உயிர்கள் தங்கள் சுயநன்மையை நாடிச் செல்லும்போது தெய்வத்தை நினைப்பது வழக்கமில்லை. மிடிவரினே 'ஐயோதெய்வமே இப்படி என்னை விட்டு விட்டாயே! யென்று கதறுவது. இறைவன் தாயினுமிக்க அன்புடையனாதலின், அவன் அவர்கள் அழுகைக்கு இரங்கி, தற்போதத்தால் விளைந்த பாவத்தைக் கவளமாகக் கொண்டு, அவர்கள் இடும்பையை நீக்கி, தான் பற்றற்றான்; எவ்விதப் பற்றுக்களும் தன்னைப் பற்றாவென்பதையும் விளக்கித் தன் பரதத்துவத்தை நிலைநிறுத்தியவாறுங் காண்க. வேண்டுதல் வேண்டாமையாலேயே இரு வினையுண்டாகியவாறு ஆதாம் ஏவாள் சரித்திரத்தினாலும் விளங்குவதாம். யாம் (Tree of knowleadge of good and evil). நல்லது தீயதென்றுண ரும் மரம் என்னுந் தலைப்பின்கீழ் எழுதிய வியாசத்திற் கண்டு கொள்க.

மேற்சொல்லிப் போந்த விஷயாதிகளால் இக்குறட்கும், பின்வரும் 'இருள் சேரிருவினையுஞ் சேரா இறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' என்னும் குறட்குமுள்ள சம்பந்தங்களை ஊகித்துணர்க.

நாம் விருப்பு வெறுப்புற்று அயர்தலும், ஐம்புலவேடர் வழியாகலின், ஐம்பொறிவாய்க் களையவித்தவுடன், இரு வினையும் நம்மைப் பற்றாது பரிசுத்தர்களாவோம். ஆக, இரு வினையொப்படைந்தவழி மலபரிபாக மெய்தலும் பெற்றாம். இறைவன் அநாதிய மலத்தினின்றும் நீங்கிநின் றான் என்பது ஆறாந்திருக்குறளாற் பெற்றாம். அவன் வழியே நிற்கவும், நம் வினைகள் அறும் என்பதும் பெற்றாம்.

ஆயின், உலகின் அநேக கடவுளர்கள் உண்டே அவர்களை யெல்லாம் வழிபடல் நன்மை பயக்குமோ என்னும் ஐயத்தை நீக்குதற்கெழுந்தது, ஏழாந்திருக்குறள். வறியர் வறியரிடத்துச் சென்றார் பயனென்? ஐசுவரியமுடையவனிடத்திற் சென்றா லன்றோ தன் வறுமை மாறும்; அதுபோல, ஒப்புயர்வற்ற சர்வ ஐசுவரியமுமுடைய ஏகநாயகனிடத்திற் சென்றடைந்தா லன்றோ நம்மனக்கவலையறும். கண்ணனும் கீதையில் ஸோகம் பாவனையால், 'அந்தந்தக் கடவுளர்களை யடைந்தவர்கள் அவரவர் உலகத்தை யடைகின்றார்கள். என்னை யடைந்தவர் கள் பிர்ம்ம நிர்வாணத்தை யடைகின்றார்கள்' என்றது, இக்காரணம் பற்றியேயன்றோ. உயிர்க் கிரங்கி அருளவே, அவன் அந்தணன் (கருணைக்கடல்) ஆகின்றான் எனினும், அவன் பக்ஷபாத மில்லாதவென்பது 'அற வாழி' என்பதனாற் பெற்றாம். 'சலமிலன் சங்கரன்' என்றார் பிறரும்.

மேல்விரித்துக்கூறிய இறைவனது மாட்சிகளை எண் குணமாக வகுத்துக்காட்டினார். அவை வருமாறு - தன்வயத் தனாதல் (சுவதவனே என்றது இருக்கு) தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாம்.

இக்குணங்களையுடையவனே இறைவன் என்பதும், அவனடிச்சாராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தாரெனவும் சேர்ந்தவர் நீந்துவர் எனவும் ஆசிரியர் கடைப்பிடித்தார். மேல், உயிர்கள் சிற்றறிவுடையராதலும், அதனால் வேண்டுதல் வேண்டாமையுடையராதலும், அதனால் இருவினைப் பற்றுத் தொடர்பு உண்டாதலும், அதனால் பிறப்பிறப்புண்டாதலும், உண்மையாக அப்பற்றற்றுப் பற்றற்றான் பற்றினைப் பற்றின் அல்லாது, பற்று விடாதென ஆசிரியர் கருத்தை மேல் விளக்கிக் காட்டினாம். ஆகப் பிறவித்துன்பத்துக்கு முதற் காரணமா யுள்ளது உயிர்களது சிற்றறிவேயாம். இதனையே. அறியாமை,

அக்ஞானம், அவித்தையல்லது அவிச்சை, மயக் கம், மருள், ஆணவமெனப் பலசொற்களாற் கூறுவது. இவ்வறியாமை யின் தன்மை என்னெனின் இதுதான் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரலாம். பொருள்களை அதன தன் தன்மை யினைத்தென அறிதல் அறிவாம். ஒன்றை மற் றொன்றாகவும் சந்தேகமாகவும் கோடலே அறியாமையாகும். இவ்வாறை யந்திரியினால்தான் எல்லாத்தீங்குகளும் விளைகின்றன. ஆசிரியர் 'பொருளல்லவற்றை' எனாது. 'பொருளில்லவற்றை' எனின், பொருள் வேறுபட்டு மருட்சி கொள்ளற்கும் காரண மாதலும் காண்க. ஆசிரியர் கருத்து. உயிர் உடல்களை இல் பொருளாகக்கொள்வது அறிவின்றி, உடலை உயிராகவும், உயிரை இறைவனாகவும் கொள்ளுதலும்; இதிலையப்படுத லுமே அறியாமை என்பதாம். உலகர் 'இறைவன் உளன், இறைவன் உளன்' எனக் கத்திக்கதறினும் அவர்கள் உண்மை யான கடவுளாகக் கொண்டது தங்கள் உடலையேயாம். ஒருவன் காலையிற் படுக்கையினின்று எழுந்தது முதல் இரவிற் படுத்துறங்கும் வரை செய்யும் முயற்சிகளைக் கணக்கிட்டு ஆராயின் அவைகள் எல்லாம் தன் உடலைக்காக்கும் வழி முறைகளாம். வேறு உயிரிருப்பதாகவும் தோன்றாத் துணை யாகிய கடவுளிருப்பதாகவும் நினைப் பில்லை. நினைப்பிருப் பினன்றோ, அவற்றைப் போற்றும் வழி தேடுவன். தேடினன்றே, பிறவிப்பிணியும் அறும்.

இவ்வறியாமை நீங்கியபின் அடைவதென்னை? தான் அறக்கெடாமல் அடைகின்றவன் தானுமுண்டோ? என ஐய நிகழ்த்தினார்க்கு, இருள் நீங்கியபின் கதிர்ஒளி பெறுதல் போல அறியாமை நீங்கி இறைவனருள் பெற்ற வரம்பிலின் பத்திலாழ்தல் அமையும். கதிரவனன்றி இருள் நீங்குதலும் ஒளியுண்டாதலும் அமையாதாகலின் இறைவனன்றி அறி யாமை நீங்குதலும், இன்பம் பெறலும் அமையாது. முதலதி காரத்தில் 3 - முதல் 10வது வரையுள்ள திருக்குறள்களிலும் 'பற்றுக பற்றற்றான்' என்ற குறளிலும், 'இருள் நீங்கியின்பம்

பயக்கும்', 'பிறப்பென்னும் பேதைமைநீங்க', 'சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின்' என்ற திருக்குறள்களிலும், பதிஞான மின்றிப் பாசக்ஷயம்பெறுதல் அமையாதெனவும், உயிர்கள் உய்வெய்தும் பொருட்டு ஈசுவரன் ஒருவன் நிச்சயமாக வேண்டுமென்றும், ஆசிரியர் வெளிப்படுத்தி நின்றார். இதைப் பின்னும் வலியுறுத்தும் பொருட்டேயன்றோ எதிர் மறையான், 'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே, மெய்யுணர் வில்லாதவர்க்கு' என மொழிந்தார். அஃதாவது ஒரு வன் புலன்வழிகளையெல்லாம் அமைத்து, சுத்தமாய், அறவாழி அந்தணனாகி, தாரனைக்கணின்று, இவ்வெய்து தற்கரிய இந்நிலையில் நின்றும், பதிஞானமில்லாவிடின், அவன் வீட்டுப் பேற்றையுடையான் என்பதே. இந்த விஷயத்தை மிகவும் ஆழ்ந்து கவனிக்கற்பாலது. ஏனெனில் இக்காலத்து ஐரோப் பாவிற் பெரும்பாலும் தம் வயத்ததாய வழியே போது மென்னும் பூர்வபட்சமதம் மிகவும் பிரபலமடைந் திருப்பது மிகக்காணக்கூடும். இம்மதமும் ஓர்காலத்து இந்தியாவிலும் பரவியிருந்து பின் முற்றிலும் ஓட்டப்பட்டது. இதன்முன் ஒடிப்போன இம்மதம் பின்னும் ஈங்குத் தலை யெடுக்க ஏது உண்டாயிருக்கிறது. இவ்விஷயங்கள் யாம் 'புத்தமத விசாரணை' யென்னும் வியாசத்தில் விரிவாக வரைந்திருப்பதால் ஈங்கு இம்மட்டில் விடுத்தாம்.

மேற்கூறிய மெய்யுணர்வென்னையெனில், நிலமுதலுயிரீ றாகிய தத்துவங்களின் உண்மைகளையும், அவைகள் காரண காரிய சம்பந்தமுடையவென்றும், நிலைபேறுடையவென் றும் தெளிந்து, காரணங்களெல்லாம் கடந்துநின்ற அகாரண மாகிய முதல்வனை இத்தத்துவங்கள் எல்லாவற்றிலும் காண்பதே உள்ளது. மெய்ப்பொருள், செம்பொருள் என்பன தோற்றக்கேடுகளின்றி நித்தியமாய். நோன்மையாற்றன்னை யொன்றும் காத்தலின்மையிற்றூய்தாய், தானெல்லாவற் றையும் கலந்துநின்றும் தான் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாய் நிற்கும் முதற்பொருளாகிய பரம்பொருளை யுணர்த்திற்று.

இம்முதற் பொருளையடைதற்குச் சிறப்பு வகையான் மூன்றுபாயங்கள் கூறுகின்றார். அவைதாம் கேட்டல், சிந்தித்தல், காண்டல் என்பன. இவை மூன்றும் 36வது அதிகாரம் 6.7. ஆவது குறள்களால் அருளிச்செய்கிறார். இவற்றில் காண்கையாவது. உயிர்தன் அவிச்சைகெட்டுப் பரமசுகத்துடன் ஒற்றுமையுற இடைவிடாது அப்பரம்பொருளைத் தானாகப் பாவித்தல். என்னை? ஒன்றினைத் தானாகப் பாவிக்க அந்நிலைமை வந்தெய்துவது எப்படியெனில் கூறுதும், உயிர்களுக்கு இரண்டு முக்கிய குணங்களுண்டு. அவைதாம் பற்றின்றி நில்லாதலும், அது அதுவாதலும் ஆம். அஃதாவது தானெனத்தனித்து நில்லாது கட்டையில் அக்கினி போலவும் அல்லது வடத்தில் ஊஞ்சல் போலவும், அல்லது கொம்பிற் பழம்போலவும் பற்றின்றி நில்லாது. அப்படி நிற்பின். யாதொன்று பற்றின் அதனியல்பாய்நின்று தானென் வேறாய் விளங்காது. ஆகவே உடலுடன் கலந்தபோது உடலாகவும் கடவுளுடன் கலந்தபோது கடவுளாகவும் காணப்படாது நிற்கும் உயிர். அதுபற்றியே ஒரு சாரார் உடலினைச் சோதித்து உயிரைக் காணாது ஏங்கியும், இன்னொரு சாரார் கடவுளைச் சோதிப்பதுபோற் சோதித்து உயிரைக் காணாது மயக்கியும் உயிரெனப் படுவதொன்றில்லை யெனப் பொய்யுரை கூறியுழன்றார்' இத்தன்மையால், அதைப் பளிங்குக் குவமை கூறியுள்ளார். 'பந்தமறும் பளிங்கனைய சித்துநீ' 'அடுத்தது காட்டும்பளிங்கெ'ன்றார் நம்மாசிரியரும், நம்மவர்களன்றி, கிறிஸ்துவ மதத்தில் மிகவும் பேர்போன என்றி டிரம்மெண்டு பண்டிதரும், 'எல்லா மாந்தரும் பளிங்குகளாவர். இத் தன்மையானே, அதுவதுவாதல் சித்தித்ததாகும். மனிதனுக்கு மிக வும் ஒற்றுமையான உவமானம் அவன் பளிங்கென்பது' என விளக்கினார். மாசு படிந்த பளிங்கானது பந்தம் அற அறத்தின் ஒளியை மிகுதியும் பிரதிபலிக்கச் செய்து பந்தம் முற்றும் அறவே, அதன் ஒளி பூரணமாய் விளங்கி, அப்பளிங்கைப் பார்க்க வெண்ணாது அதனை மூடிநிற்கும். பரமாசிரியரும்,

*இஞ்ஞாயிறுகண் (கண்ணும் பளிங்கே) ஆகிய திருட்டந்த வாயிலாய், 'சென்று சென்றுணுர்வாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்' என்று திருவாய் மலர்ந்தருளியதூஉம் இவ் வுண்மையே. டிரம்மெண்டு பண்டிதர் இத்தன்மையை,* (Laws of reflection and assimi ation) *பிரதிபலித்தல், ஒன்றாகுதல் என்னும் விதிகளாகக் கூறியுள்ளார். அஃதாவது 'நான் அதைக் கண்டேன், அதை என்னிடம் தோற்றுவித்தேன், அதுவானேன்' என்பதாகும்.*

*பின்வரும் சுவேதாசுவதர உபநிடத வாக்கியங்களையும் கவனிக்கவும்.*

*'அவனை நினைந்து அவனுடன் கூடி அவனுடன் ஒன் றாகவும், முடிவில் மலமாயையின்றாம்.'*

*'மாசு படியும் கண்ணாடியானது துலக்கவும் ஒளி பெறு தல்போல, தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தை யறிந்தவுடன் மனக்கவலை தீர்ந்து இன்பத்தை அடைகின்றான். விளக்கைக் கொண்டு பார்ப்பது போலத்தன் ஸ்வரூபத்தைக் கொண்டு பரம்பொருளின் உண்மையை யறிகிறான். என்றும் உள்ள தாகிய, பிறப்பிலியாகிய எல்லாத்தத்துவங்களையும் கடந்து நின்ற கடவுளை யுணர்ந்ததும் எல்லாப் பாசங்களினின்றும் நீக்கமடைகின்றான்.'*

*இவ்வுண்மைகளெல்லாம் சந்தானகுரவரும் பின்வரும் விருத்தப் பாவிற்றொகுத்துக் காட்டியதுங் காண்க.*

கண்டவிவையல் லேனானென்ற கன்றுகாணாக்
கழிபரமுநானல் லேனெனக்கருதிக்கசிந்த
தொண்டினொடுமுளத்தவனறானிற் கலப்பாலே
சோகமெனப்பாவிக்கத் தோன்றுவன் வேனிறன்றி
விண்டகலுமலங்க ளெல்லாங்கருடதியானத்தல்
விடமொழியுமது போலவிமலதையுமடயும்
பண்டைமறை களுமதுநானானேனென்று
பாவிக்கச்சொல்லுவதிப் பாவகத்தைக்காணே

ஆகவே, சித்தாந்த மென்னை யெனின் உலகமானது மூவினைப்படுதலின் ஒருவனால் உண்டாக்கப்பட்டதெனவும், அவனும், முடிவிலாற்றலும் முற்றறிவுமுடையவனாக வேண்டு மெனவும், அவனே அன்பாகவும் தனக்கென ஓரிச்சையில் லாதவனாகவும் மிருத்தலின், அவன் செய்யும் படைத்தல் முதலிய தொழில்களுள் உயிர்களை மூடிய அழுக்கைப் போக்கற் கென்றும், இறைவனும், உயிர்களும், உயிர் உடல் போல், ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றுமிரண்டு மின்றா காமலிருப்பவென்று உயிர்களும் தங்கள் அறியாமையாகிய பாசத்தையகற்றிக் கொள்ள வேண்டுமாயின், நான் எனதென் னும் பற்றுக்கள் அறவும், வேண்டுதல் வேண்டாமை யறவும் வேண்டுமெனவும் தனக்குண்மையான பற்றுக்கோடு ஒப்புயர் வற்ற அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை யெனத் தேர்ந்து அவனிடம் அயரா அன்பினைச் செலுத்தி அவனடிச் சேர்ந்து இறைபணி நிற்கின், அவனை மலம் மாயையாகிய வல்வினைநோய்கள் சார்தரா; அவ்வினையடைதற்குபாயங் களும், கேட்டல் நினைத்தல் பாவனையாகிய சரியை கிரியை யோக சமாதிகளெனவும் ஆசிரியர் கூறிப்போந்தார்.

மேலதுவே, நமது சிற்றறிவினால் அளந்தபடி வீட்டு விஷயத்தைக்குறித்து ஆசிரியர் கருத்தாகத் தோன்றுகிறது. இவ்விதமாக விரித்துக்காட்டிய உண்மையில் யாவருக்கும் சம்மதமாயிருக்கு மென்றெமதெண்ணம். ஆயின், ஓர்மதம் எம்மதத்தவருக்கும் சம்மதாமயிருக்குமோ என ஆசங்கை நிகழுங்கால், எல்லா மதங்களின் சாரமாயும் சமரசமாயு முள்ளது சாலும். நம்மிலும், அவ்விதமதம் உண்டெனவும் துணிவாம். அம்மதம், கண்ணாடியானது பார்ப்பவர் முகத் தையே காட்டுவிக்குமாறுபோல் எவரும் பார்த்தவுடன் தங் கள் தங்கள் மதமாமெனக் கொள்ளுகின்றார்கள். ஐரேப்பிய பண்டிதர்களிலும், நம் வடமொழியிலுள்ள சிற்சில நூல் களை சாங்கிய நூலாகவும் யோகநூலாகவும், அத்துவித நுலாகவும் பலவாறு கூறினார்கள். தற்காலத்துப் பண்டித

சிரோமணிகளாகிய மக்டன்னல், கார்பே என்பவர்கள் கருத்து. அந்நூல்களிற் கூறிய உண்மை சாங்கியம், யோகம், துவைதம், அத்வைதம் முதலியவையன்றி இவைகளின் சாரங்களெல்லாம் அடங்கிய சமரச நூல்களாகும் என்பதே. இவ்வித சமரச சித்தாந்த மடங்கிய நூல்களாகவும் கொண்டது சுவேதாசு வதர உபநிடதமும், பகவத்கீதையுமே; தமிழில் நமது திருக் குறளைச் சொல்லலாம். அவ்வித சமரச நூலாகவே கல்லாடர் முதல் வந்த ஆன்றோர்களாற் கொண்டாடப் பட்டுமிருக் கின்றது. எல்லா மதத்தவர்களும் அதனைத் தழுவுவதும் அது பற்றி விரிவஞ்சி இம்மட்டே விடுத்தாம்.

# 5

# திருவள்ளுவ நாயனார் இயற்றிய திரிக்குறள்

*1914*

**அயோத்தி தாசர்**

*சிறப்புப்பாயிரம்*

உலகுபுகழ் அரிய திரிபேதவாக்கியங்களென்றும், திரிபீட வாக்கியங்களென்றும் வழங்கிய மூவருமொழியாம் முதனூலுக்கு வழிநூலாகத் தோன்றியவை திரிக்குறளும், சார்பு நூலாகத் தோன்றியவைகள் திரிமந்திரம், திரிவாசகம், திரிவெண்பா, திரிமாலை, திரிகடுகம், சித்தர்கள் நூல் முதலியவைகளேயாம். இத்திரிக்குறளுக்கு திருவென்னும் அடைமொழி சேர்த்துத் திருக்குறளென சிறப்பு வழங்கினும் தன்ம பிடக, சூத்ர பிடக, வினயபிடக மென்னும் மகடபாஷா முந்நூலுக்கு திராவிட பாஷா வழி நூலாம் அறத்துப்பால், பொருட்பால், காமப்பாலென்னுந் திரிக்குறளே உடன்பாடா

தலின் திருவென்னும் அடைமொழி சிறப்பென்றெண்ணி திருக்குறளென ஏற்பது மும்மணிகளென்பதை அழகு மணிகள் என்பதற்கு ஒக்கும். ஆதலின் திரிபேதங்களாம், முதநூலுக் குத் திரிக்குறளே வழி நூலாதலின் திருவென்னும் அடை மொழி நீக்கி திரியென்னும் மூவருமொழிகளை விளக்கி யுள்ளதே முதற் சிறப்பாகும்.

அங்ஙனம் விளக்குவதில் சுருங்கச்சொல்லி விளங்க வைத்தலே சுகமென்றெண்ணி குறள் வெண்பாவாற் குறுகக் கூறியவை இரண்டாம் சிறப்பாகும். திரிபீடவாக்கிய மறை பொருள் பாலிபாஷையினின்று சகல மக்களுக்கும் விளங்கா ததுகண்டு அவற்றை திராவிட பாஷையில் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தது மூன்றாம் சிறப்பாகும். புத்தபிரான் சக்கர வாளம் எங்கணுஞ் சுற்றி திரிபேதவாக்கியங்களாம் தன்ம பாதத்தை விளக்கியிருக்க இத்திரிக்குறளாக்கியோன் இருந்த விடத்திருந்து ஈரடிவெண்பாவால் திரிபாலாற்றவும் சகல தேச பாஷையோரும் அவற்றை அவரவர்கள் பாஷையில் மொழி பெயர்த்து ஏற்கவுமாயது நான்காவது சிறப்பாகும். வட இந்தியாவில் சாக்கையர் வம்மிஷ வரிசையில் மண் முகவாகென்னும் சக்கிரவர்த்திக்கும், மாயாதேவியென்னும் சக்கிரவர்த்தினியாருக்கும் மகவாகப்பிறந்து முதநூலியற்றி யருளியது போல் தென்னிந்திய வள்ளுவ வம்மிஷவரிசையில் மாமதுரைக் கச்சனென்னும் அரயனுக்கும், உபகேசியென் னும் ராக்கினிக்கும் மகவாகத் தோன்றி நாயனாரென்னும் பெயர்பெற்று சங்கஞ்சார்ந்த தபோபலத்தாலும் தாய் தந்தை யர் செய்த புண்ணியபலத்தாலும் சிறந்த நாவமைந்து செந் நாப்புலவரெனத் தோன்றியது ஐந்தாம் சிறப்பாகும். அரசருக்குப் பிறந்து அரசியல் இருபத்தைந்தினையும் அமைச்சியல் பத்தையும் அரணியல் இரண்டையும் கூழ்பகுதி ஒன்றையும், படைபகுதி இரண்டையும் நட்பாளர்பகுதி பதினேழையும் பதின் மூன்றுவகைக் குடிகளியல்பையும் நன்கு விளக்கியது

மன்றி, தான் சார்ந்த சங்கத்தின் ஞானவியல்பையும் தென் புலத்தோராம் சமணமுநிவர்களாற் றலையும், சிற்றின்பம் அறுக்கு நிலையே பேரின்பமாதலையும் முதற்பா என்னுங் குறள் வெண்பாவால் எழுதி மதுரைக் கச்சனென்னுங் கூர் வேல்வழுதி மனமகிழச் செய்தது ஆறாஞ் சிறப்பாகும். திரிக் குறளில் கடவுள் வாழ்த்தென்னும் புத்தரது சிறப்பு முதல் ஆயிரத்தி முன்னூற்றி முப்பதருங் குறட் பாக்களைத் திரிபற வாசித்துணர்ந்தோனுக்கு வேறென்னூற்களும் வேண்டா வாகலின் ஏழாம் சிறப்பாகும். இத்தகைய சத்ப சிறப்பமைந்த திரிக்குறளாக்கியோன் திருவள்ளுவ நாயனார் திருவடி வணங்கி அவரது வழி நூலுக்கு பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விரித்துரை நான்கையு மெழுதத் துணிந்தது கருடன் பறக்குமிடத்து ஈயும் பறப்பது போலாயினும் ஆதிபகவனது சரித்திரத்தையும் திரிபிடகமாம் திரிபேத மொழிகளின் அந்தரார்த்தங்களையும் உணர்ந்தவுறமே உள்ளதைவிளக்குவான் வேண்டி வழி நூலுக்கு உரை ஆரம்பித் துள்ளோம். இவற்றுள் வரிவழுகுறிவழு ஏதொன்று வழுவி னும் பௌத்ததன்ம ஆன்றோர்கள் பொறுத்து நீதிவழு நெறி வழுவுக்களை நியதிகளைந்து விளக்குக வேண்டுவாம். இவ் வேண்டுகோள் மகடபாஷையிலும், திராவிட பாஷையிலும் சத்தியதன்ம ஆராய்ச்சியில் மிகுத்த புத்தன்மதத்தைச் சார்ந் தோரையன்றி ஏனைய மதத்தோரைச் சாராவென்பதாம்.

## 1. கடவுள் வாழ்த்து என்னும் புத்தரது சிறப்புப்பாயிரம்

அஃதாவது காப்புக்கு முன்னெடுக்குங் கடவுளே மாலென்னும் புத்தராதலானும், மாதா, பிதா, குரு என்னும் மூவரையுமே தெய்வமாகக் கொண்டவிடத்து புத்தரே ஜகத் குருவும் ஆதியங் கடவுளாயதினாலும் நூலாசிரியரது மரபில் தொன்றுதொட்டு வணங்கிவரும் திரிரத்தின முதலாம் பதும நிதியாகிய ஆதிபகவனாம் புத்தபிரானைத் தனது வழி

நூலுக்குக் காப்பாகப் பத்து பாடலால் வாழ்த்தி சிறப்பித் திருக்கின்றார்.

1. அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(பதவுரை) அகரம் - அகரமென்னு மெழுத்து, எழுத் தெல்லாம் - மற்றுள்ள வெழுத்துகளுக்கெல்லாம், முதல் - ஆதியாயிருப்பது போல், பகவன் - புத்தபிரான், உலகு - உயர் வோருக்கு, முதற்று - முதலாயிருக்கின்றாரென்பது பதம்.

(பொழிப்புரை) சகல எழுத்துக்களுக்கும் அகரமாகிய எழுத்து முதலாயிருந்து அறிவை விளக்குவதுபோல் பகவனா கிய புத்தர் சருவ மக்களுக்கு அறிவை விருத்திசெய்யும்முத நூலீய்ந்த முதல்வனாக இருக்கின்றாரென்பது பொழிப்பு.

(கருத்துரை) அகரமாகிய எழுத்தாயது மற்றுமுள்ள எழுத்துக்கள் யாவற்றிற்கு மாதியாயிருந்து கற்போருக்குக் கசடற அறிவின் விருத்தி செய்வது போல் உலகசீர்திருத்தக் காரருள் ஆதியாகத் தோன்றி மக்களுக்கு மூவருமொழிகளை ஊட்டி உயர்ந்தோர்மாட்டே உலகென விளக்கியவர் ஆதி பகவனாகிய புத்தரேயாதலின் அவரை முதற்பாடலில் சிறக்க வாழ்த்தியிருக்கிறாரென்பது கருத்து.

(விரித்துரை) புத்தபிரான் ஜகத்திற்கே குருவாகத் தோன்றி அவன் தன்னவன் இவன் அன்னியனென்றும், இவன் தாழ்ந்த வன் இவன் உயர்ந்தவனென்றும், இவன் கற்றவன் அவன் கல்லாதவனென்றும், இவன் கனவான் அவன் ஏழை யென் றும், இவன் சிறியவன் அவன் பெரியவனென்றும் பார பட்சம் பாராதும், எறும்பு முதல் யானை வரையிலுள்ள சருவசீவர்களின் மீதும் அன்புபாராட்டியும், சக்கரவாளம் எங்ஙணுஞ் சுற்றி அங்கங்குள்ள சருவமக்களுக்கும் சத்திய தன்மத்தை ஊட்டியும், மக்கள் கதியினின்று தேவகதி பெறும் நித்தியானந்தத்தில் விடுத்து பிறப்பு, பிணி, மூப்பு, சாக்கா

டென்னும் துக்கங்களைப் போக்குதற்காய தன்மசங்கங்களை நாட்டியும், அஞ்ஞான இருளை அகற்றி மெஞ்ஞானோதயஞ் செய்தபடியால் பகவனென்னுங் காரணப்பெயரைப் பெற்றார்.

அதாவது இருளை விலக்கிய சூரியனுக்குப் பகலவனென்னுங் காரணப் பெயருண்டாயாது போல் மக்களுக்குள்ள காம வெகுளி மயக்கமென்னும் அஞ்ஞான இருளை அகற்றி சாந்தம், ஈகை, அன்பென்னும் மெஞ்ஞானோதயஞ் செய்வித்த படியால் புத்தருக்குள்ள சகஸ்திர நாமங்களில் பகவன் பகவனென்னும் ஓர் சிறப்புப்பெயரையும் மேலோர் வகுத்திருக்கின்றார்கள், மண்டல புருடன் 'பகவனே ஈசன் மாயோன், பங்கயன் சினனே புத்தன்' என்று கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய் திரிமந்திர வாக்கியோன் திருமூலர் 'ஆதிபகவனருமறை யோதுமின்' என்றும் அதனை அநுசரித்து சமணமுனிவரினின்று தேர்ந்த இடைக்காட்டு சித்தர் 'ஆதிபகவனையே பசுவே அன்பாய் தொழுவாயேல், சோதிபரகதிதான் பசுவே சொந்தமதாகாதோ' வென்றற்குப் பகரமாய் மணிமேகலை ஆக்கியோன் சீத்தலை சாத்தனார் பிண்டியினது சிறப்பை ஒட்டி பகவனதாணையில் பன்மாம் பூர்க்குமென்றும் இதற்கு ஆதரவாக சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "பாடல் வண்டாற்றும்பிண்டி பகவனதாணை போல" வென்றும் வழி நூலுக்கு ஆதரவாக சார்பு நூலோர்களும் வரைந்திருக்கின்றார்கள். புத்தபிரானை மகடபாஷையில் பகவனெனக் கூறியவற்றை அநுசரித்து திராவிட பாஷையில் திவாகரரென்றும் வழங்கி வந்தார்கள்.

உலகிற்கே ஆதி சீர்த்திருத்தக்காரரெனத் தோன்றியவரின் மலைவுபடா மொழிகளையும், அளவுபடா அன்பினையும் திகைவுபடா ஞானத்தின் சிறப்பினையும், மநுகுலத்தில் முக்காலங் கெடா புருஷோத்தமனாக விளங்கிய உருவினையும், மிருதுவாக்கினமுதினையும், களங்கமற்ற உள்ளக் காட்சியையும் ஒப்பிட்டுக்காட்டும் உபமான உபமேயம்

உலகில் ஒன்றுமில்லாததால் அறிவை விளக்கிச் சீர்திருத்தும் அறிச்சுவடியின் முதலெழுத்தாம் அகரவெழுத்தைச் சுட்டி உபமான உபமேயங்களாக விளக்கியுள்ளார். அத்தகைய விளக்காம் அகரசிறப்போவென்னில் தமிழ் எழுத்துக்கள் யாவற்றிற்கும் முதலெழுத்தாகவும், எட்டென்னும் இலக்கண எழுத்தாகவும், குண்டலியரம் சுழிமுனை நாடியின் முன் சுழியாகவும், ஞானவேற்ற அடிப்படையாகவும் "அ காரகார ணத்துளே யனேகனேகருபமா" என்னும் ஞானோற்பவத் திற்கே ஆதாரமாகவும் "ஆதியாய் நின்ற அறிவு முதலெழுத் தோதிய நூலின் பயன்" என்னும் அறிவிருத்திக்கே பீடமாக வும், "கட்டுப்படாதந்த வச்சுமட்டம் அதன் காலேபன்னிரண் டாகையினால், எட்டுக் கயிற்றினால் கட்டிக்கொண்டாலது மட்டுப்படுமோடி ஞானப்பெண்ணே" என்னும் மனோலயத் திற்கே ஆதாரமாகவும் இருக்கின்ற படியால் அவ்வகரவட் சரத்தின் மகத்துவம் அறிந்த மேலோர்கள் மக்களது வாழ்க் கையின் இல்லங்களில் அப்பா, அம்மா, அண்ணா, அக்கா, அம்மான், அத்தை என வழங்கு மொழிகளால் எக்காலும் அகராட்சரத்தை உச்சரிக்கவுஞ் செய்துள்ளது சகல மகா ஞானிகளின் சம்மதச் சிறப்பாகவும் விளங்குவது கொண்டு வழி நூலாசிரியர் அறவாழியானுக்கு அகரத்தை ஒப்பிட்டு கடவுள் வாழ்த்தாம் புத்தரது சிறப்பை விரித்திருக்கின்றார்.

இதற்கு ஆதரவு பாலி புத்தாகுணோ இதிபிஸோ பகவா அறஹங்ஸம்புத்தோ விஜ்ஜாசரண ஸம்ப்பன்னோ ஸுகதோ லோகாவிது அநுத்தரோ புரிஸதம் மகாரதி ஸட்த்தா தேவம் அனுஸ்ஸானங் புத்தோபகவாதி.

பாலிநிகண்டு. ஆதி பகவா பகவாமுனி, பகவாஸம்மா ஸம்புத்தா, பகவாஜீனா பகவா புத்தர், பகவா மஹாமுனி.

2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

(ப.) கற்றதனால் - படித்ததினால், ஆய - உண்டாய, பயன் - பலன், என்கொல் - என்னென்று சொல்லுதும், வாலறிவன் - பாலதானத்தில் அறிவின் விருத்திபெற்று நின்றவன், நற்றாள் - சீரடிகளை, டொழாஅ - வணங்கா, ரெனின் - பயனென்னை யென்பது பதம்.

(பொ.) பல நூற்களைக் கற்றும், நூலுக்கு முதல்வனும், நுண்ணணறிவின் ஆசிரியனுமாய வாலறிஞனின் செயலையும் அவரது தன்மபாத போதத்தையும் வணங்கி விசாரியார்க்கு நூலினைக் கற்றும் பயன் விளங்காதென்பது பொழிப்பு.

(க.) பாலவயதிலேயே அறிவின் விருத்திபெற்று ஜகத்குரு வாகத் தோன்றிய ஒப்பிலா அப்பன் புத்தரது திருவடிகளை வணங்கி மக்களுள் அவர்பெற்ற பேரானந்தத்தை உணர்ந்து அவரது முதநூலையும் மற்றும் வழிநூல், சார்புநூல் யாவை யுங் கற்பதாயின் கற்ற சுகத்தின் பயன் நித்திய காட்சியும் அநுபவமுமாக விளங்குமென்பது கருத்து.

(வி.) கண்டுபடிப்பதே படிப்பு, மற்றபடிப்பெல்லாம் தெண்டபடிப் பென்று வழங்குதற்குப் பகரமாகக் காட்சிக் கும் அநுபவத்திற்கும் பொருந்தாக் கலைகளைக் கற்பது கல்லா னென்பதற்கு ஒக்கக் களங்கம் தோய்ந்திருப்பானாயின் கற்றுங் கசடன் என்றேற்கப்படுவான். ஆதலின் கற்குமுன்னும் கற்ற பின்னும் நூல் தோன்றிய காரணம் யாதென்றும், நூலினது ஆக்கியோன் செயல் ஏதென்றும் அவரடைந்த பயனென்னை யென்றும் உணர்ந்து கற்றும் கடைத்தோற்கே வாலறிவன் தாளினை வணங்கிக் கற்றலே பயனுடைத்தென்றும் வணங் காது கற்றல் பயனற்றதென்றும் விளக்குவான்வேண்டி களங்க மற்ற வாலறிஞன் தாளினை வணங்கி களங்கமறுக்கும் நூற் களைக் கற்பது பயனுடைத்து என்பதாம். புத்தரையே வாலறி ஞனென வழிநூலார் சிந்தித்தற்குச் சார்பாய் யாப்பருங்கலை ஆக்கியோன் அமுதசாகரர், “அறிவனை வணங்கி யறைகுவன் யாப்பே” என்றும் அதனுரையாசிரியர் குணசாகரனார்,

"ஆசனத்திருந்த திருந்தொளியறிவ்ன், ஆசனத்திருந்த திருந் தொளியறிவனை" என்றும், சிலப்பதிகார ஆக்கியோன் இளங்கோவடிகள், "ஆதியிற்றோற்றவறிவனை வணங்கி," என்றும், அற நெறிச்சார ஆக்கியோன், முனைப்பாடியார், "அறிவனை வாழ்த்தி அடவித்துணையா" என்றும் தோன்றி யுள்ள சார்பு நூற்களே போன்ற விரிவாம்.

**3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடு வாழ்வார்.**

*(ப.) மலர் - தாமரைப் புட்பத்தின், மிசை - மீதே, யேகி னான் - சென்றவனது, மாணடி - சிறந்த பாதத்தை, சேர்ந்தார் - சார்ந்தவர்கள், நிலமிசை - பூமியின்கண், நீடுவாழ்வார் எக்காலும் சுகசீவிகளாக வாழ்வார்களென்பது பதம்.*

*(பொ.) பதுமாதனமென்னும் தாமரை புட்பத்தில் வீற்று பதுமநிதி என்னும் பெயர் பெற்று, ததாகதமுற்றுக் காமனை யுங் காலனையும் வென்று நித்தியானந்தம் பெற்றோன் சீர் பாதங்களைச் சார்ந்தோர் நீடிய வாழ்க்கை சுகம் பெறுவார் களென்பது பொழிப்பு.*

*(க.) கல்லாலடிக்குள் செங்கமலப்பீடத்தின் மேல் வீற்று செவ்விய ஞானத்தை உணர்ந்து ஜகத்குருவாக விளங்கிய உலகநாதனின் மாணடியைச் சேர்ந்தோர் அவரது மாபோத கத்தை உணர்ந்து தீவினையை வென்று என்றுமழியா நிப்பான மாம் நித்தியவாழ்க்கை பெறுவார்கள் என்பது கருத்து.*

*(வி.) கல்லால விருட்சத்தின் கீழ் கமலாசனத்தின் வீற்று கமலநாத னென்னும் பெயரும் பெற்ற "புத்தபிரானை" மல ருற்று நடந்தவாமனென்றும், தாமரையாசனனென்றும், கமலபாதனென்றுங் கொண்டாடுமாதாரத்தைக் கொண்டே வழி நூலார் மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்த போதே அவரது சீலத்தையும், ஒழுக்கத்தையும், மெஞ்ஞானத்தையும் பெற்று நிப்பானமென்னும் நித்தியசுகம் பெறுவார்களென்*

னுந் துணிபால் நிலமிசை நீடுவாழ்வாரென வைப்புறுத்திக் கூறியுள்ளார். மலர்மிசை யேகினானென்பதற்குச் சார்பாய் பின்கலைநிகண்டி னாக்கியோன் மண்டல புருடன் 'மூலருற்று நடந்த வாமனென்றும், திரிமந்திர வாக்கியோன் திருமூல னார் 'கடந்துநின்றான் கமலாமலர் மீதே' என்றும், சீவக சிந் தாமணி வாக்கியோன் திருத்தக்கதேவர் 'விண்டலர் பூந்தா மரையின் விரைததும்ப மேனடந்தானென்றும், சூளாமணி யாக்கியோன் தோலா மொழித்தேவர்'விரைமணங்கு தாமரை மேல் விண்வணங்கச் சென்றாய்' என்றும், அறநெறிச்சார வாக்கியோன் முனைப்பாடியார் 'தாமரைப்பூவின்மேற் சென் றான் புகழடியை' என்றும், சிலப்பதிகார வாக்கியோன் இளங் கோவடிகள் 'மலர் மிசைச்சென்ற மலரடிக்கல்ல தென்றலை மிசையுச்சி தானணிபொறஅ' என்றும் வாசிட்ட வாக்கியோன் 'புண்டரீகவாதனத்தில் புத்தன்போ லுத்தர முகனா' என்றும், வீரசோழிய உதாரணச் செய்யுள் 'உறுதாமரை மேலுரைவார் தன்' என்றுங் கூறியுள்ள சமண முனிவர்களின் சார்பு நூற்களின் ஆதாரங்கொண்டே வழி நூலார் கூறியுள்ள மலர்மிசையே கினானென்னு மொழி புத்தபிரானை குறித்தவையெனத் துணிந்தோதிய விரிவு.

**4. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்**
**கியாண்டு மிடும்பை யில்.**

*(ப.)* வேண்டுதல் - விரும்புதல், வேண்டாதல் - விரும் பாதல், இலானடி - அற்றவனது சீர்பாதத்தை, சேர்ந்தார் - அடைந்தவர்களுக்கு, கியாண்டு - எக்காலமும், யிடும்பை - பிறவியின் துன்பம், யில் - இல்லையென்பது பதம்.

*(பொ.)* விருப்பும் வெறுப்புமற்ற புத்தரது கமல பாதத் தைச் சார்ந்தவர்கள் எக்காலுந் துக்கமென்பதற்று சுகநிலை பெறுவார்களென்பது பொழிப்பு.

*(க.)* விவேகவிருத்தியால் வேண்டுமென்னும் விருப்பும், வேண்டாமென்னும் வெறுப்புமற்ற விண்ணவர்கோன் சீரடி

யாம் அறஹணடிகளைச் சார்ந்து அவர்கள் விசாரணையால் தங்களுக்குள்ள விருப்பு வெறுப்பற்ற துக்கநிவர்த்தியுண் டாகி எக்காலும் சுகநிலை அடைவார்களென்பது கருத்து.

(வி.) மக்களுள் வேண்டுமென்னும் அவாவே மிகுந்து வேண்டாமென்பது அற்று பாசபந்தமுற்று மாளாப்பிறவி பெற்று துக்கசாகரத்திற் சுழல்வது இயல்பாதலின் .புத்த பிரான் அத்தகைய சூழலில் அகப்படாமலும், துக்கசாகரத்தில் அழுந்தாமலும், மாளாப்பிறவிக்கு ஏகாமலும், பாசபந்தத்திற் சிக்காமலும் இஃது வேண்டும், அஃதை வேண்டா மென்று பற்றாமலும் என்றும் இடும்பையற்று சதாசுகத்தில் நிலைத்த தன்றி தனது சங்கத்தோர்களாம் அடியார்களையும் தன்மய மென்னும் அறணவடிகளாக்கி என்றும் கெடா ஆனந்த சுகத்தில் விடுத்த அநுபவக்காட்சியால் விருப்பு, வெறுப்பற்ற சங்கமாம் அடிகளைச் சேர்ந்தவர்கள் இடும்பையென்னும் பலவகைத் துன்பங்களில் அழுந்தாது சுகநிலை பெறுவரென் னுந் துணிபுகொண்டு வழிநூலார் கூறியவற்றிற்குப் பகரமாக, மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் சங்கத்திற் சேர்ந்த சமணமுநிவர்களில் சித்தி பெற்ற சாரணர்களையே அடிகள் என்பதற்கு, "நிலத்திற் குழித்து நெடுவிசும்பேறிச், சலத்திற்றிரியுமோர் சாரணன் தோன்ற, மன்னவனவனை வணங்கிமுன்சென்றென்னு யிரனையாளிங் கொளித்தாளுள், என்னளொருத்தியைக் காணிரோவடிகேள்"என்றும், மற்றும் புத்தரைத் தியானிக்குமிடத்து "மாரனை வெல்லும் வீரனின் னடி, தீநெறிக்கடும்பகை கடப்போய் நின்னடி, பிறற்கறமுய லும் பெரியோர் நின்னடி, துறக்கம் வேண்டா தொல்லோய் நின்னடி, யென் பிறப்பொழிய விருந்தோய் நின்னடி, கண் பிறர்க்களிக்குங் கண்ணோய் நின்னடி, தீமொழிகடிந்த செவி யோய் நின்னடி, வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி, நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி, யுரகர் துயர் மொழிப்போய் நின்னடி, வணங்குதலல்லது வாழ்த்துதலென்னா" என்னும்

அவரது அடிகளை சிந்தித்து அறவணவடிகளைச் சார்வோரே ஆனந்தவாழ்க்கை பெறுவரென்பதை வீரசோழிய உதாரணச் செய்யுள், "இருட்பாரவினைநீக்கி யெவ்வுயிர்க்குங் காவலென, வருட்பாரந்தனி சுமந்தவன்று முதலின்றளவு, மதுவொன்றி மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும் பொதுவன்றி நினக் குரித்தோ புண்ணியனின் றிருமேனி" என்றும் அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார், "குற்றங் குறைத்து குறை வின்றி மூவுலகில் நற்றமரைத்தாங்கருள் பரப்பி - முற்ற உணர்ந் தானைபாடாத நாவல்லவல்ல, சிறந்தான்றாள் சேராத்தலை" என்றும் கூறியுள்ள சார்புலோர் ஆதாரங்கொண்டே வேண்டு தல் வேண்டாமெயென்னும் வினையினீங்கிய இறைவனின் அடியைச்சார்ந்தோர் தங்களது வினையாம் இடும்பை நீங்கி எக்காலும் சுகவாழ்க்கை பெறுவார்கள் என்பது விரிவு.

5. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(ப) இறைவன் - வேந்தனாம்புத்தரோதிய, பொருள் சேர் -மெய்ப்பொருளுணர்ந்து, புகழ்புரிந்தார் - சிறக்கப் பெற்றவர், மாட்டு இடத்து, இருள்சேர் - அஞ்ஞானத்தை விருத்தி செய்யும், இருவினையும் - இரண்டுவகை கன்மங்களும், சேரா - அணுகாவென்பது பதம்.

(பொ) இறைவனாம் தருமராசனால் ஓதிவைத்த மெய்ப் பொருளை அடைந்து மேதினியிற் சிறந்தோரிடத்து வினைக ளிரண்டும் அணுகாவென்பது பொழிப்பு.

(க) இறைவரி கொள்ளும் அரசனாகத் தோன்றி துக்க நிவர்த்தி அறிவான் வேண்டி துறவு அடைந்து ஓதாமல் உணர்ந்து உண்மெயாம் மெய்ப் பொருளடைந்து இருவின யற்று சதாநிலையுற்று சகலமக்களுக்கும் ஓதிய பொருளை யுணர்ந்து புகழ்பெற்றோரை இருவினைகளுஞ்சேராவென் பது கருத்து.

(வி) வரியிறைக் கொள்ளும் அரசனாகத் தோன்றி பிறப் பினால் உண்டாந் துக்கங்களையும், மூப்பினாலுண்டாந் துக் கங்களையுங் மரணத்தா லுண்டாங் துக்கங்களையும் கண்டு சகிக்காது இத்துக்கநிவர்த்திக்கான வழி ஒன்றிருக்க வேண்டு மென்று உணர்ந்து இறைவனது நிலையா சுகபோகங்கள் யாவையும் விடுத்து, விருப்பு, வெறுப்பென்பதற்று, நல்வினை தீவினையென்பதை மறந்து, நாமரூபமென்னுந் துவிதபாவ னையழிந்து, மெய்ப்பொருளுணர்ந்து, பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வகைத் துக்கங்களும் ஒழிந்த சாதுயர் நீக்குந் தலைவன் தவமுநியெனத் தோன்றி, தான் கண்ட காட்சியையும் அநுபவத்தையும் மக்களுக்கு உலகநீதியா யோதி, உண்மெய்பொருளை உணர்ந்து ஒடுங்கவைத்தவராத லின் அவ்விறைவனது பொருளைச் சார்ந்து புகழ் பெற்றோ ருக்கு இருவினையும் ஒழியுமென்னும் அநுபவக்காட்சியால் வழி நூலாசான் கூறியதன்றி, சார்புநூலோருள் யாப்பருங் கலை உரையாசிரியர் குணசாகரனார் "பூந்தண் சினைமலர் மல்கியப் பொழிப்பிண்டி வேந்தன் புகழ்பரவாதவர் வினை வெல்லார், அதனால் அறிவண்நடியிணைப் பரவிப் பெருகவர் யாவரும் பிறவியிநெறியே", "முருகவிழ் தாமரைமலர் மேன் முடியிமை யோர் புடைவரவே வருசினநாதருமறை நூல் வழி பிழையா மனமுடையார், (இருவினை) போய்விழமுனியா தெதிரிய காதியையறியா, நிருமலராயருவினராய் நிலவுவர் சோதியினி டையே" என்றும், வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவ னார், "அருள்வீற்றிருந்த திருநிழற்போதி முழு துணர் முநிவநிற் பரவுதுந் தொழுதக, வொருமனமெய்தி (யிருவினைப் பிணிவிட முப்பகை கடந்து நால்வகைப் பொருளுணர்ந், தோங்கு நீருலகிடையாவரு, நீங்காவின்பமொடு நீடு வாழ்கெனவே," எனுந் தாட்டாந்தத்துடன் அரசனையே இறைவனெனக் கூறியவற்றிற்குப் பகரமாக ஞானக்கொம்மி "அரசகுலத்திலு வருவாகி அம்பரமான வெளிதனிலே புரச மரத்திலொடுங்கி

நின்றான் அவன் பொருளைப் பாரடி ஞானப் பெண்ணே" என்றும் நெஞ்சறி விளக்கம், "அரியதோர் அரசன் மைந்தன் அவனியிலுதித்து முன்னாள், பெரிய பேரின்ப ஞானம் பெறு வதே பெரிதென்றெண்ணி, உரிய வேதாந்த வுண்மெயுரைக்கு மாசானுமாய, தெரியொணா நாகைநாதர் சீர்பதம் போற்று நெஞ்சே" என்றும், பட்டினத்தார், "மானார் விழியைக் கடைத்தேரி வந்தனன் வாண் குருவுங், கோனாகி வந்தென் னைக் குடியேற்றுக் கொண்டனன் குற்றமில்லை, போனாலும் பேரிருந்தாலு நற்பேரிது பொய்யன்று காணானாலு மிந்த உடலோடிருப்ப தரு வெறுப்பே" என்றுங் கூறிய குரு அரச னேயாதலின் இறைவ னென்னு மொழி புத்தரையே குறித்த தென்பது போன்ற விரிவு.

6. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ்வார்.

(ப.) பொறிவாயில் - பஞ்சபொறிகளின் வழியே, ஐந்து - அவா ஐந்தினையும், அவித்தான் - அடக்கினவனது, பொய்தீர் - பொய்யை யொழிக்கும், ஒழுக்கம் - நற்றவமாம், நெறிநின் றார் - நிலையில் நின்றவர்கள், நீடு வாழ்வார் - நித்தியச்சுகம் பெறுவார்களென்பது பதம்.

(பொ.) ஐம்புல நுகர்ச்சியால் ஆசை கொண்டு உழலும் பொய்யாகிய தோற்றத்தை அவித்து மெய்யாய ஐம்பொறி வொடுக்கத்தின் நின்றவரது நெறியில் ஒழுகுவோர் நீடு வாழ் வார்களென்பது பொழிப்பு.

(க.) ஐம்பொறியின் வாயலிற்செல்லும் பொய்த் தோற் றங்களாகிய ஆசைகள் ஐந்தினையும் அவித்து ஆமை போலுள் ளடங்கி மெய்கண்ட தேவனாம் புத்தரது நல் லொழுக்க நெறியில் நின்று அவரது சாதனத்தைப் பின் பற்றியவர்கள் என்றும் அழியா நீடியவாழ்க்கை பெறுவார்க ளென்பது கருத்து.

(வி.) கண்ணினாற் பார்த்த பொருட்களின்மீதே ஆசை கொண்டலைதலும், மூக்கினால் முகர்ந்த வாசனைகளை நாடி ஆசைகொண்டலைதலும், செவியினாற் கேட்ட மொழி களில் ஆசைகொண்டலை தலும், நாவினால் உரிசித்த பொருட் களின் மீது ஆசைகொண்டலைதலும், தேகம் சுகித்த போகத்தை யாசித்தலைவதுமாகிய பொய்த்தோற்றங்களையும் அதனால் உண்டாந் துக்கங்களையும் ஒழித்து மகராஜனே துறவடைந்தா ரென்னும் ஒழுக்கநெறிநின்று, பொறி வாயில் ஐந்தினையும் அவித்து புத்தராகிய மெய்கண்ட தேவனைப் பின்பற்றி அவரது நல்லொழுக்க போதனா நெறியில் நிலைப்பவர்கள் பொய்ப் பொருட் தோற்ற அவாக்கள் ஐந் தினையும் அவித்து தன்னில் தானே தத்துவமாகும் மெய்ப் பொருள்கண்டு என்றும் அழியா நித்திய நிலையில் நீடுவாழ்வார்களென்று வழி நூலோர் கூறியவற்றிற்குப் பகரமாய் வீர சோழிய உரையாசிரியர் பெருந் தேவனார் "வீடு கொண்ட நல்லறம் பகர்ந்தமன்பதைக் கெலாம், விளங்குதிங்கள் நேர் மெயால் விரிந்திலங்கு வன்பி னோன் மோடுகொண்ட வெண்ணுரைக் கருங்கடற் செழுஞ் சுடர், முளைத்தெழுந்த தென்னலாய் முகிழ்ந்திலங்கு போதியி, நாடுகின்ற மூவகைப் பவங் கடந்து குற்றமா, மைந்தவித்து மூன்றறுத்த நாதனாண்மலத் துணர்ப் பீடுகொண்டவார் தளிர்ப் பிரங்குபோதி யானையெம், பிரானைநாளு மேத்து வார் பிறப்பிறப்பிலார்களே" என்றும் அறநெறிச்சார ஆக்கி யோன் முனைப்பாடியார், "உள்ளப் பெருங்குதிரை, யூர்ந்து வயப்படுத்திக் கள்ளப் புலனைந்துங் காப்பமைத்து, வெள்ளப் பிறவிக் கணீத்தார் பெருங்குணத் தாரைத், துறவி துணைப் பெற்றக்கால்" என்றும், சீவகசிந்தா மணி ஆக்கியோன் திருத் தக்கதேவர் "ஐவகைப் பொறியும் வாட்டி யாமையினடங்கி யைந்தின், மெய்வகை தெரியுஞ் சிந்தை விளக்குநின்றெரிய விட்டுப், பொய், கொலை, களவு, காம, மவாவிருள் புகாது போற்றிச், செய்தவனுனித்தசீலக் கனைகதிர்த் திங்களொப்

பார்" என்றும் மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் "பொருளினுண்மெய் புலங்கொளல் வேண்டும் மருளில் காட்சியை வகையாகுங் கண்ணால் வண்ணமுஞ் செவியா லோசையு, மூக்கானாற்றமு நாக்காற் சுவையு, மெய்யாலூறு மென்றுஞ் சொன்ன இவ், ஐவகைகண்டு கேட்டுண்டுயிர்த்து" என்றும் இடைக்காட்டுச்சித்தர் "மெய் வாய்கண் மூக்குச் செவி எனுமைந்தாட்டை, வீறுஞ்சுவை யொளி யூரோசை யாங்காட்டை, யெய்யாம லோட்டினேன் வாட்டி னேனாட்டி னேன் ஏகவெளிக்குள்ளே யோக வெளிக்குள்ளே" என்றும், பொறிவாயல் ஐந்தவித்த புத்தரின் பொய் தீர் ஒழுக்க நெறி னின்று புலன்தென்பட்டோர் நீடிய சுக வாழ்க்கைப் பெறு வார்களென்பது விரிவு.

7. தனக்குவமெயில்லா தான்றாள் சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

*(ப.) தனக்கு - தனக்கு, உவமெயில்லாதவன் - நிகரற்ற வராகுந் ததாகதரின், றாள் சேர்ந்தார்க்கு - சீர்பாதத்தை யடைந் தவர்க்கு, அல்லான் - அல்லது, மனக்கவலை - துக்க விருத்தியை, மாற்றல் - அகற்றல், அரிது - கடினமென்பது பதம்.*

*(பொ.) தனக்கு நிகரில்லாதவன் தாளைச் சார்தலே துக்கநிவர்த்திக்கு வழியென்பது பொழிப்பு.*

*(க.) உலகத்தில் தோன்றிய மக்களுள் புத்தருக்கு நிகராய புருஷவுத்தமன் ஒருவரும் இல்லையாதலால் அவரது கமல பாதத்தைச் சார்தலே மனக்கவலையாம் துக்க நிவர்த்திக்கு வழியல்லது வேறுவழி இல்லையென்பது கருத்து.*

*(வி.) உலகத்தில் தோன்றிய மக்களுள் மனக்கவலையாம் பிறவியின் துக்கம், பிணியின் துக்கம், மூப்பின் துக்கம், மரண துக்கம் ஆகிய நான்கையுங் கண்டுபிடித்து அந்த துக்கம், துக் கோற்பவம், துக்கோற்பவ காரணம், துக்க நிவாரணமாகிய நான்கையும் உணர்ந்து பிறப்பினால் உண்டாம் மனக்கவலை,*

மூப்பினாலுண்டாம் மனக்கவலை, மரணத்தினாலுண்டாம் மனக்கவலையாய நான்கினையும் மாற்றி துக்கநிவர்த்தியாம் என்றும் அழியா நித்தியநிலை பெற்று மக்களென்னும் ஆறாவது தோற்றத்தினின்று ஏழாவது தோற்றமாம் தேவகதியில் ஆதிதேவனென்றும், ஆதிமுநிவனென்றும் ஆதிபகவனென்றும் ஆதிநாதனென்றும், ஆதிகடவுளென்றும் விவேக மிகுத்த மேன்மக்களால் கொண்டாடப்பெற்றவரும், சாந்தத்திலும், அன்பிலும், ஈகையிலும் அளவுபடா ஞானத்திலும், மலைவுபடா வாக்கிலும் அவருக்கு உவமெயாக ரூபிக்க சரித்திரங்களில் வேறுதேவர்கள் ஒருவருமில்லாதலால் தனக்குவமெயில்லாதான் தாளைச் சார்ந்தவர்க்கல்லது மனக் கவலையாம் துக்கநிவர்த்தி ஆகாதெனவழி நூலார் துணிந்து கூறியவற்றிற்குச் சார்பாக மணிமேகலை ஆக்கியோன் வணி கச் சாத்தனார் "சாதுயர்நீக்கிய தலைவன் தவமுனி" யென்றும், "முற்றுமுணர்ந்த முனிவனையல்லது, மற்றைப்பீடிகை தன்மிசை பெறாஅ" என்றும், வீரசோழிய ஆக்கியோன் புத்தமித்திரனார் "மிக்கவன் போதியின் மேதக்கிருந்தவன் மெய்தவத்தாற், றோக்கவன் யார்க்குந்தொடரவொண்ணாவன் றூயனெனத், தக்கவன்பாதந் தலைமேற்புனைந்து தமிழுரைக்கப் புக்கவன்பைம்பொழிற் பொன்பற்றி மன் புத்திமித்தரனே" என்றும், சூளாமணி ஆக்கியோன் தோலா மொழித்தேவர் "திருமறு வுவலனணிந்து திகழ்கின்ற திரு மூர்த்தியொருமறுவுமிலையென்ப தொழியாமலுணர்த்து மேயொரு மறுவுமில்லையென்ப தொழியாமலுணர்த்துகினு மருமறையை விரித்தாயை யறிவரோ வரியரே" என்றும், "ஒரு மெயாற்றுன்பமெய்து மொருவனாயும் மெயாலே, திருமெயான் முயங்குஞ் செல்வச் செருக்கொடு திளப்பநோக்கி, யிருமெயி மொருமெயாலே யியற்றலினிறைவன் போல, பெருமெயையுடைய தெய்வம் பிறிதினி யில்லையன்றே" என்றும், சீவக சிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "வீங்கோத வண்ணன் விரைத்த தும்புபூம்பிண்டித், தேங்கோதமுக்குடைக்

கீழ்த்தேவர் பெருமானைத், தேவர் பெருமானைத் தேனார் மலர் சிதரி, நாவினவிற்றாதார் வீட்டுலக நண்ணாரே" என்றும் தனக்கு என்னுந் தானே தானே தத்துவமான தவநிலை முதல் வனுக்கு நிகரில்லாதது விண்டும், ததாகததரையே தலைவ னாகக் கொண்டும் மனக்கவலை மாற்றுதற்கு பீடகமாயது கண்டும் புத்தரது சீர்பாதத்தைச் சாராதார்க்குத் தீவினை யொழிந்து மனக்கவலை மாறா தென்பது விரிவு.

8. அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

(ப.) அறவாழி - தருமச் சக்கரத்தோனாம், அந்தணன் - சாந்தரூபியின், தாளைச் சேர்ந்தார்க்கு - கமலபாதத்தை யண்டினவருக்கு, அல்லால் - அல்லது, பிறவாழி - ஜெனனக் கடலை; நீந்துதல் - கடத்தல், அரிது - கடினமென்பது பதம்.

(பொ.) தருமச்சக்கரத்தோனாம் சாந்தரூபியின் கமல பாதத்தைச் சார்ந்தோர்க்கல்லது ஜெனனக்கடலை கடத்தல் கடினம் என்பது பொழிப்பு.

(க.) எண்ணருஞ்சக்கிரவாளம் எங்கணும் அறக்கதிர் விரித்த அருகனாம் புத்தரது பாதபடியைச் சேர்ந்து அவரது தன்ம பாதத்தில் நடப்போரன்றி ஏனையோர் பிறவிக் கட லாம் துக்கநிவர்த்தியடைவது அரிதென்பது கருத்து.

(வி.) சருவ உயிர்களையுந் தன்னுயிர் போற் காக்குந் தண்மெய்தேகியாய மகாராஜனது திருவடியாம் அறவண வடிகளைச் சார்ந்தவர்கள் அலைகடல் தோன்றி தோன்றி மறைவதுபோல் பல ஜெனன தோற்றங்களால் மாறிமாறி பிறப்பதற்கு ஏதுவாய் பற்றுக்களற்று துக்கநிவர்த்தியாம் நிரு வாணசுக மடைவார்கள். அறவணவடிகளைச் சேராதும் சத்தியதன்மத்தில் நடவாதும் பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசையென்னும் பற்றுக்கள் அறாமலுமுள்ளவர்கள் பிறவிக்கடலாந் துக்கநிவர்த்தி பெறுதல் அரிது, அரிதாதலின்

அறவாழியானாம் புத்ததன்ம சங்கத்தைச் சார்தலே அழ கென்று வழி நூலார் கூறியவற்றிற்குச் சார்பாக மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் "அறவியங்கிழவோ னடி யிணையாகி பிறவியென்னும் பெருங்கடல்விடூஉ" என் றும், "ஆதி முதல்வன் அறவாழியாள்வோன் பாதபீடிகை பணிந்த னளேத்தி" என்றும் "அறக்கதிராழி திறப்பட வுருட்டிய, காமற்கடந்த வாமன்பாதம்" என்றும், அறநெறிச்சாரம் ஆக்கி யோன் முனைப்பாடியார் "கொல்வதூஉங்கள் வதூஉமின்றிப் பிறர்மனையிற், செல்வதூஉஞ் செய்வனகாலல்ல - தொல்லைப் பிறவிதணிக்கும் பெருந்தவர்பாற் சென், றறவுரை கேட்பிப்ப கால்" என்றும், வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் "புண்டரிகபாத நமசரணமாகுமென முநிவர் தீமெய் புணர் பிறவு காணார்" என்றும் திரிமந்திரம் ஆக்கியோன் திருமூலர் "அருமெவல்லான் கலை ஞாலத்துட் டொன்றும், பெருமெ வல்லான் பிறவிக்கடல் நீந்தும், உரிமெவல்லா னடியூடுர வாகி, திருமெவல்லாரொடுஞ் சேர்ந்தன்னியானே" என்றுங் கூறிய ஆதாரங்கொண்டு அற வாழி அந்தணன் புத்தரேயென வற்புறுத்திக் கூறிய விரிவாம்.

9. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(ப.) பொறியிற் - பஞ்சபொறிகளினிடத்தே, கோள் - குற்றங்கள், இல் - இல்லாதவனாயினும், குணமிலவே - பய னில்லை, எண்குணத்தான் - எட்டுவகைக் குணங்களை யமைந்தவனது, தாளை - சீர்பாதங்களை, வணங்கா தொழுகா, தலை - சிரமென்பது பதம்.

(பொ.) குற்றமற்ற பஞ்சபொறிகளையுடைய தலையைப் பெற்றவனாயினும், எண்குணத்தான் தாளை வணங்காத் தலை பயனற்றதென்பது பொழிப்பு.

(க.) நாவால் வருங் குற்றம், மூக்கால் வருங்குற்றம், செவி யால்வருங் குற்றம், கண்ணால்வருங்குற்றம், தேகத்தால் வருங்

குற்றம், எண்ணத்தால் வருங்குற்றங்களாய வறுவகைக் கோளற்ற தலையை உடைத்தாவனாயினும் அதனுளவை போதித்தும் நடந்துங்காட்டிய ஜகத்குருவாம் எண்குணத்தா னது அடிகளைச் சேராதார்க்கு யாதொரு குணமும் விளங்கா தென்பது கருத்து.

(வி.) முன்பு குற்றமற்று குருவாகத் தோன்றிய எண் குணத்தான் யாவரென்னில் பொய்சொல்லாமெய், கொலை செய்யாமெய், களவாடாமெய், கள்ளருந்தாமெய், பிறர் மனை நயவாமெய் ஆகிய சுத்ததேகியாம் தூயவுடம்பின னானவரும், தன்னைத்தானே அடக்கி ஆட்கொண்ட தன் வயத்தனானவரும், யாதொருவர் போதனையுமின்றி வால வயதிலேயே அறிவின்விருத்திபெற்ற இயற்கை யுணர்வின னானவரும், சகலமும் அறிந்த முனிவனென முற்றும் உணர்ந் தவரானவரும், இராஜ போகத்தைத் துறத்தற்கு இயல்பாகவே பாசபந்தங்களினின்று நீங்கியவரும், அன்பே ஒருருவாகத் தோன்றிய பேரருளுடலையுடையவரும், கடைத்தேறி நிரு வாணம் பெற்று முடிவிலா ஆற்றலடைந்தவரும், பேரின்ப மாம் வரம்பில் இன்ப மமைந்தவரும் புத்தர் ஒருவரே ஆதலின் அறுவகைக்குற்றங்களை அறுத்தோனாயினும் எண்குணத் தானடிகளை வணங்கி எண்குணத்தோனாவதே குணமன்றி அறுவகை குற்றங்களற்ற சிரமாயினுங் குணமில்லையென் பது கண்டு வழி நூலார் குற்றமற்றுங் குணங்குடிக்கொள்ளும் ஏதுவை விளக்கியுள்ளார். இதனது சார்பாக வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் “எண்ணிறைந்த குணத் தோய் நீ, யாவர்க்கு மரியோய் நீ” என்றும், “அருள்வீற்றிருந்த திருநிழற்போதி, முழுதுணர் முநிவநிற் பரவுதுந் தொழுதக” வென்றும், “பொதுவன்றிநினக்குரித்தோ புண்ணியனின் றிரு மேனி” என்றும், மணிமேகலை ஆக்கியோன் வணிக சாத்த னார் “முற்றுமுணர்ந்த முதல்வனையல்லது மற்றைப்பீடிகை தலைமிசைப்பெறாஅ” வென்றும், சூளாமணி ஆக்கியோன்

தோலாமொழித்தேவர் "சோதியும்பே ரெண்குணனுந் துப்புரவுந்துன்னுவரே" என்றும், "கடையி லெண்குணத்தது காகராகர்க" வென்றும், சீவகசிந்தாமணி யாக்கியோன் திருத் தக்கதேவர் "பூத்தொழியாப் பிண்டிக்கீழ்ப் பொங்கோத வண்ணனை நாத்தழும்ப வே...யீட்டுலக நண்ணாரே, வீட்டு லக...ணகள் வராதுதரி, வோட்டிடுபவென்னுக் குட்பட்டயர் வாமே" என்றும், பின்கலை நிகண்டினாக்கி யோன் மண்டல புருடன் "அநக னெண்குணன் நிச்சிந்தன் அறவாழி வேந்தன் வாமன்" என்றும், கூறியுள்ள நூற்களின் ஆதாரங் கொண்டு எண்குணத்தா னென்னும் பெயர் புத்தருக்குரிய சகஸ்திர நாமங்களில் ஒன்றென்றே துணிந்து கூறிய விரிவாம்.

10. பிறிவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தார்.

(ப.) இறைவன் - போதி வேந்தனது, அடி - தன்மபாதத்தை யடைந்தோர், பிறவிப்பெருங்கடல் - ஜெநநசாகரத்தை, நீந் துவர் - கடப்பார், சேராதார் - அடையாதார், நீந்தார் - கடக்க மாட்டார்க ளென்பது பதம்.

(பொ.) போதி வேந்தனாம் அறவணவடிகளைச் சேர்ந் தோர்க்குப் பிறவியினது துக்கம் ஒழியும் சேராதார்க்குத் துக்கம் ஒழியாதென்பது பொழிப்பு.

(க.) அலையுற்ற கடல்போல் அவாவின் பெருக்கப்பற்றி னால் உண்டாம் பிறவியின் துக்கத்தைப்போக்கிக் கொள்ள வேண்டியவர்கள் புத்தரது அடிகளாய சாரணசங்கத்தைச் சேர்ந்து அவரது போதனா ஓடத்திலேறி வாணமென்னும் பாசபந்தக் கட்டுக்களைக் கடந்து நிருவாணமென்னும் பிறவி யற்ற கரைசேர்வார்களென்பது கருத்து.

(வி.) பிணியின் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையும் கண்ணினாற்கண்டு இத்தகைய துக்கங் களுக்கு ஏதுபிறப்பென்றும், பிறப்பிற்கு ஏது பாசபந்த பற்றுக்

களென்றும், பற்றுக்களுக்கு ஏது அவாவென்றுங் கண்டு ணர்ந்து தனது அரசபோக அவாவினை ஒழித்து பாசபந்தப் பற்றுக்களை அறுத்துப் பிறவியென்னுந் துன்பக்கடலை கடந்தபெரியோன் தான் கடந்த வழியை உலகமக்களுக் கூட்டி அவர்களுக்குள்ள பல இன்பதுன்பங்களையும் ஒழிக்கச் செய்விக்க வேண்டுமென்னுங் கருணையின் பற்றினால் சத்திய சங்கங்களைச் சேர்த்து சாரணர்களாம் அறவணவடிகளை நிலைக்கச் செய்து அவ்வடிகளைச் சேர்ந்தோர்களைப் பிறவி யின் சமுத்திரத்தைக் கடந்து கடைத்தேறச் செய்து வருகின்ற படியால் அவரது அடிகளாம் சங்கத்தைச் சேர்ந்தவர்களே பிறவியின் துக்கத்தை ஒழித்து பிணியின் துக்கம், மூப்பின் துக்கம், மரண துக்கம் யாவையும் ஜெயிப்பரென்னும் அநு பவக்காட்சியால் அவரடிகளைச் சேர்ந்தோரே பிறவியின் கடலைக்கடப்பரென்றும் அடிகளைச் சேராதோர் பிறவியின் கடலைக் கடவாரென்றுந் துணிந்து கூறியவற்றிற்குச் சார்பாக சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் 'கருமக் கடல் கடந்த கைவலச் செல்வ, னெரிமலர்ச்சேவடியை யேத்துவார் யாரே, யெரிமலர்ச் சேவடியை யேத்துவார் வான்றோய், திரு முத்தவிராழிச்செல்வரேயன்றே' என்றும், சித்தாந்தக்கொத்து 'அருநெறியார் பாரமிதையாறைந்து முடனடக்கிப், பொருள் முழுதும் போதிநிழனன்குணர்ந்தமுநிவரன்ற, னருள் மொழி யானல்வாய்மெ யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெயாற் பிறநூலு மயக்கறுக்குமாறுளதோ' என்றும், மணிமேகலை ஆக்கியோன் வணிகச்சாத்தனார் 'அறவியங் கிழவோனடி யிணையாகிய, பிறவியென்னும் பெருங்கடல் விடூஉ' என்றும், 'என்பிறப்பொழிய நின்றோய் நின்னடி' என்றுங் கூறியுள்ள சார்பால் புத்தரது சங்கதன்மமென்னும் ஈரடிகளைச் சேர்ந் தோரே பிறவியின் கடலை நீந்துவர். ஏனையோர் நீந்தா ரென்பது விரிவு.

இப்பாயிரம் பத்துப்பாடலினும் ஆதியங் கடவுளாம் புத்தரையே வாழ்த்தி அவரது அடிகளாம் சங்கத்தையும் தன்

*மத்தையும் சிறப்பித்துக் கூறியவற்றுள் மகட பாஷையாம் பாலியினின்று சகட பாஷையாம் வட மொழியையும், திரா விட பாஷையாம் தென் மொழியையும் அக்கைதங்கையர் போல் முதற்குரவராம் ஆதிபகவனால் ஈன்றும் அவரது முத நூலாம் திரிபேத வாக்கியங்களென்னும் திரிபீடகமாம் மும் மறை மொழிக்கும் வழி நூலாந் திரிக்குறளெனத் தோன்றி யுள்ள இம்முப்பாலுக்கு அந்தரார்த்தங் கூறுமிடத்து வட மொழியும் தென் மொழியும் மருவி நிரவுவதலால் மார்க்கம் விளங்குமன்றி மருவாவிடத்து மறைவதுகண்டு இருமொழி யையும் நிரவி வரைந்துவருகின்றாம். இவற்றுள் எஞ்சிய பாலி நிகண்டினது மேற்கோள் மிஞ்சும் புத்தகத்தில் வெளியாம்.*

**புத்தரது சிறப்புப் பாயிரம் முற்றும்**

# 6

# குறள் தமிழ் முதனூலா, தருமசாத்திர சாரத்திரட்டா?

*1929*

**நாவலர் ச.சோமசுந்தர பாரதியார்**

இனி, குறள்தமிழ்நூலன்று, வடமொழி நூல்வழி வந்தது என்பற்குக் கூறப்படும் இரண்டோரேதுவைச் சிறிதாராய் வோம். குறள், வடமொழி கலவாத் தனித்தமிழ் நூலென்பார் ஒரு சாரார்; அது வைதீக தருமசாத்திர வடிவே என்பார் பிறி தொரு வகுப்பார். இவ்விருவர் கூற்றும் மெய்ம்மையின் இரு தலை மலைவார் பொருள் கருதாமல் தருமுறைவகையாம் வடமொழி சொற்களும் வடநூற்கருத்தும் ஒரு சில குறளில் வருதலினாலது தமிழ் நூலாகாதென்னும் வாதம், மொழி பெயர்ப் பொன்றைப் பெயர்த்த மொழியில் முதனூலென் பது போல, முழு மெய் தழுவாக் கிளவியாகும். வள்ளுவர் குறளில் வடசொல் ஒரு சில வருவது மெய்யே; அதன் ஆழ்ந்த பொருட் பெருங்கடலில் சில சிற்றலையின் எதுரொலி வட

நூலில் கேட்பது முண்மை. இவை குறள் தமிழ் நூலின்றெனக் காட்டுமேதுவாமா? வேறுபட்ட நாகரிக வகுப்பார்தம் கூட்டு றவால், நாளடைவில் சில சொல்லும் கொள்கைகளும் இரு திறத்தார் மொழிகளிலும் கைம்மாறிக் கலப்பதியல்பு; கலப் பல் ஒரு சில புகுந்து வழங்கக் காண்போம்; அதுபோல, தமிழ்ச் சொற்கள் வடமொழியிடம் பெற்று வழங்குவதும் மறுக்க வொண்ணா உண்மையாகும். சமய மதச் சார்புகளில் தமிழ ரிடையமையாத சாதிபேத மாயவாத வடசொற்கள் தமிழி லேறில், ஆணி, முத்தம், பிரவாளம், நீரம், மீனம், போலப் பல சொற்கள் தமிழ் ஆரியத்திற்களித்த கொடை அறியாதார் அறியாதாரே.

2. பல்வேறு மக்கள் வாழ்வில், பொதுவான வழக்கங்கள், கொள்கையோடு கருத்துக்கள் ஒத்திருத்தல் இயல்பாகும் சிறப்பியல்கள் பற்றிய சிற்சில துறையில் மட்டுமவை வேறு பட நேரக்கூடும். அறம் பலவும் அனைவருக்கும் மக்களிய லொற்றுமையால் ஒத்திருக்கும். எண்ணரிய பல்வேறு உயிர னத்துள் மாந்தரெல்லாம் ஓரினமே. உருவத்திற்போல, உள்ள உணர்ச்சி எண்ணம், விருப்பமொடு பசிகாம வினைமைகளில் மக்கட்டன்மை என்னுமொரு பொதுவியல்பை மாந்தரிடை எங்கும் காண்போம். ஒத்த இயலுடைமையினால் வாழ்கை கைமுறை ஒழுக்கவகை பெரும்பாலும் ஒத்திருக்கும். அதனாலே, பொதுவாகப் பல்வேறு மொழிகளிலும் நூல் கூறு மறம் பலவும் பெரும்பாலும் ஒத்திருக்கும். பொய்யாமை, கொல்லாமை, வெஃகாமை, கள்ளாமை போல்வ பல ஒழுக் கறங்கள் எல்லார்க்கும் எஞ்ஞான்றும் எந்நிலத்தும் பொது வாகும். அதனாலே பல்வேறு மொழிகளிலும் அறநூல்கள் ஒத்துரைப்பதியற்கையாகும். அது கொண்டவ்வற நூல்கள் ஒன்றிலிருந்தொன்றிரவல் கொண்டதென்றும், அவற்றிடையே தொடர்பிருத்தல் வேண்டுமென்றும் கூறுவது தவறாகும். எல்லார்க்கும் பொதுவின்றிச் சில வகுப்பார் சிறப்பொழுக்க

வழக்கத்தால் அமையு மறவகை கூறுமிரு நூலும் சான்றின்றி ஒன்று பிறிதொன்றற்கு முதலென்று கொள்ளுவதும் குற்ற மாகும். சிறப்பொழுக்கம் பற்றியெழும் அடி அறங்கள் ஒத்த மையக் கூறும் நூல்கள் காணுங்கால் அவற்றினிடைத் தொடர் புண்மை ஆராய்தற் கிடனொருகால் இருக்குமென எண்ணல் கூடும். அதற்கெதிராய் அடிப்படையாம் ஒழுக்கறமும் வாழ்க்கை முறை மரபுகளும் மாறுபட வகுக்கும் நூல்கள், வேறுபடும் நாகரிகம் விளக்கும் தனி நூல்களெனக் கொண்டவற்றை உறழாமல் ஆய்வதுவே அறிவறமாம்.

3. இவ்வுண்மை மறவாமல் உளத்திற்கொண்டு, தமிழ்க் குறளை வடதரும நூல்களொடு ஒத்து நோக்கி, இயைபு முரண்பாடுகளை நடுநிலையில் ஆராய்வோம். வள்ளுவர் நூல், வேதசாரம்; பலத்ரும சாத்திரத்தின் தெளித்தவடி என்ப வரின் ஏதுவொடு சான்றுகளைத் தகவோடு நிறுத்துண்மை தேர்ந்து தெளிவோம்.

அகம் புறமென்றிரு வகையாய்ப் பொருளொன்றைத் திணை துறைகள் வகுத்துரைத்தல் தமிழ் மரபு. அதற்கு மாறாய், வள்ளுவர் நூல், அறமுதலாப் பால்வகுத்து வடவழக்குத் தொடர்புடைமை காட்டுதலால், தமிழ் முதனூலாகாதேன்ப. அதன் உண்மை இனி விரித்திங்காராய்வோம். அறங்கூறக் காஞ்சி வாகை பாடாணின் துறைவகைகள் தமிழ் வழக்கி லென்று முண்டு. அறமெல்லாம் புறத்திணையிலடங்கி விழுப் பொருள் வகையாம்; பொருளின் பத்துறையியலாய்ந் துரைப்ப தறம். பொருளொன்றே, வாழ்வொழுக்க முறை பற்றி அகம் புறமென்றிருவகையாய், அறமுதல் நாற்பொருளடங்க அமையு முண்மை தமிழர் கண்ட முடிபாகும். அது குறையென்றி கழ்ந்து நாற்பால் நெறி கூறின், முப்பாலென் றுரைப்பாரோ?

தமிழ்க்குறளை முப்பாலாய் வகுத்தவர் வள்ளுவர்தாம் என்பதற்குச் சான்றில்லை. "முப்பால்" என்றிறவாத குறளுக்கு

வள்ளுவர் பெயரிடவில்லை. பண்டைச் சான்றோர் பாக் களைத் தொகுத்த பிற்காலத்தவர், தாமியற்றிய குறட் சிறப்புப் பாயிரத்தால் அப்பொருணூலை அறனூலாக்கி, முப்பாலாய்ப் பாராட்டி, ஆரியரின் நாற்பொருளும் அதாவது பொருளைக் கூறாமல் குறள் அரசநீதியே உரைப்பதாயும் அரசநீதி பொரு ளுக்குத் துணைக்காரண மென்றும் அது கூறப் பொருளடங் கும் என்றும் கூறினர்.

முப்பால் வகுக்க முயன்ற வள்ளுவர், பொருளைத் தெருளவுரையாமல், அதன் முதற் காரணத்தையு முற்றிலு மறந்து, துணைக்கராண மொன்றே சொல்லி விடுவானேன்? பொய்யா விளக்காம் பொருளை விளக்க இயலாதியம்ப முயன்றிலார்? அன்றிப் பொருளைப் பொருட்படுத்தாமல் அரசநீதி விரிப்பதே அவர் கருத்தாயின், "ராசநீசாரம்" என்று பொருந்தப் பெயரிட்டிருக்கலாமே. இயற்றியோ ரெண்ண மெதுவேயாயினும் பொருளைக்கூறாக்குறளற நூலை முப் பாலென்பது தப்பேயாகும்.அரசநீதியும் காம முரைக்கும் "இருபா" லென்றேனும், வருணாச்சிரம நீதிச்சார காமரசங் களை வடித்துக் கூறும்"ஒரு பால்" என்றேனும் கூறுத லன்றோ முறையாகும் அதை விட்டு, "தருமமுதன் நான் கும்" "முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்" என்று தப்பைக் கூறித் தடுமாறுவதேன்? உண்மையாதெனின் வள்ளுவர் நல்ல தமிழர், தமிழ்நூல் மரபிற் புலநெறி வழக்கினலம் நன்கறிந் தவர். அதனால் வடநூல் வழியில் அறமுதல் நாற்பால் வகுத்து நூலியற்றுங் கருத்தவற்கில்லை. அகமும் புறமுமாயிருவகைப் படும் பொருளை விரித்துத் தமிழ் நூல் செய்தார்.

அதன் தனிப் பெருமையறிந்து அதைப் பின்னோர் நாற் பாற் பொருளும் வடநூல் முறையில் வகுக்கும் வழி நூலாக்க முயன்றோர் தங்கள் வழிக்கமையாத் தடைகளை விலக்க இல்லவும் பொல்லவும் பல்லாறாக விரித்தும் விலக்கியும் திரித்தும் உரைத்தார்.

7. இனி, முப்பாலாக வள்ளுவர் வகுத்தால், பொருளும் காமமும் பெரிதுடை நூலை, அவை குறியாமல் அறநூலென் பது தவறாமன்றோ? ஆகவே, வள்ளுவர் வாய்மொழி ஆரிய தரும சாத்திரமன்று, தமிழர் பொருணூல் என்பதே பொருந்தும்.

8. வள்ளுவர் குறளின் தனிமுதற் பெருமையை மறுப்ப ரெவரும், அது வடநூலென்றன் மொழிபெயர்ப் பென்றோ, இன்னநூலின் வழிவருமென்றோ கூறுகின்றிலர். பொருட் டொகையாலும், முறைவகையாலும் வடமொழிப் பரப்பில் குறள் போலொரு நூல் கூறுதற்கில்லை. பொருளிலும், வகை யிலும், போக்கிலும், நோக்கிலும், ஒப்புக்கூறுதற்குரிய நூலொான் றும் இல்லாநிலையில் குறளை வழி நூலென்பவர் துணிவா? அதையப்படியே சொல்லித் திரியும் புலவரின் அறிவா? பெரி தென வியப்பரிதாகின்றது. திருக்குறளில் ஒரு நூற்றுமுப்பத்து மூன்றியல்கள் உள்ளன. ஓரியற் பத்துக் குறள்களையேனும் ஒத்தொரு வடநூல் உரைக்கக் காணோம். ஓரொரு குறட் கருத்தொத்து வருதொடரை ஒவ்வொரு நூலிடைக்கிளைத் துப் பொறுக்கி விழுக்குறள் மணிகளுக்கது முழுமுதல் விதை யெனச் சழக்குரை கூறி வழக்கும் தொடுப்பார். வியக் கும் காவியம் பயக்கும் கருத்தை முற்றிலுமொத்த சொற்சொட ரமைந்து மேல்புலக்கவிகளில் மிளிரக் காண்குவம். அதனாலவற்றுள் ஒன்று மற்றதன் விதை முதலென்பது நகைக்கிட மன்றோ? குறட்கருத்தொத்துள வடமொழிக் கவிகள் குறளை முழுமுன்னே வழங்கியதுண்டோ? முந்திய வெனினும், வள்ளுவர் அவற்றைக் கண்டு தந்நூலிற் கொண்டா ரென்னக் காட்டும் சான்றுகள் கேட்டதுண்டோ? இடமும் காலமும் தொடர் பிலாப் புலவர் ஒத்த கருத்தைப் பல்வேறு மொழிகளில் உரைத்தோரிலரோ? அன்றியும், ஒழுக்கறமெல்லாம் என்றும் யாண்டும் ஒத்திருப்பது உலகியலன்றோ? ஓரளவொப்பவை ஒரு சிலவன்றிக் குறளறமனைத்தும் பிற மொழி நூல்கள்

கூறக் கேட்பினும், அதனாலவைகள் ஒருமத வகுப்பார் பொது வழக்குரைப்பவை என்பது சாலாது. அறநெறி மக்களனைவ ரிடத்தும் ஒத்தமைந்திருப்பது உறவு சுட்டாது. அதற்கெதிராக, வாழ்வற மரபுகள் மாறுபடு நூல்கள், வேறின வகுப்பார் வழக்குரைப் பனவாய்க் கொள்வதே முறையாம். அகப்புற வாழ்க்கையில், மக்கள் மனையறம், தொழிற்றுறை, உரிமை, கடமைகள், வழக்கொடு கொள்கை வகைகளில் குறளும் தரும சாத்திரங்களும் கூறுமரபியல் நெறிகளை நிரலே ஒப்ப நோக்கி உண்மை காணுவம். ஆனால், உரைகள் புகுத்தும் புதுமைகளொழித்து, 'வள்ளுவர் சொல்' லால் வருபொருள் மட்டே குறட் கருத்தாகக் கொள் ளல் வேண்டும்.

முதலில், தமிழறமும், ஆரிய தருமமும் ஒருபொருள் குறிக்கும் இரு சொல்லன்றென அறிதல் வேண்டும். (i) தரும மும் என்பது, ஆரியர் நூல்கள் கூறிய நெறியியல் குறிக்கும் சொல்லாம். அதனால், ஆரிய தருமம், என்றும் யாவருக்கும் ஒத்தியலாமல் பிறப்பு, நிலை, பதவி, உத்தியோகம், அவசியம், ஆபத்து, இடம் காலம் இவைகளுக்கேற்ப வேறுபடும். தமிழ றம், எல்லோர்க்கும் எஞ்ஞான்றும் மாறாதமையும் இயல் முறை சுட்டும். அறத்தை நூல்கள் ஆக்குவதில்லை; ஆராய்ந் துரைப்பதே நூலோர் மேற்கோள். (ii) நூல்கள் விதிப்பதே தருமமாகையால், அந் நூலோர் மதப்படி வெவ்வேறாகும். ஆதலால் குறைந்தது மநுதரும முதல் பராசரர் தருமம் வரை பதினெண்வகையில் ஒரு வகுப்பார்க்கே தருமம் பலதிறப் படும். நூலோர் ஒப்பினும் ஒவ்வாவிடினும், அறத்துறை அனைத்தும் மாறாவியல. (iii) இன்னும், தருமம், செய்யவும் தவிரவும் நூல் விதிக்கும் ஆணைகளாகும்; அதனாலவைகள் அரசியலாரால் ஒறுப்பொடு வற்புறுத்தப்பெறும். 'அறம் வழக்கும் தண்டமுமான அரசநீதிகள் வேறுபட்ட பொது இயல் குறிக்கும். அறம் திறம்பல்பழிக்கன்றித் துண்டத்துக்

காளாக்காது ....... எனவே, வள்ளுவர் குறளும், வடநூல் தருமமா மாறில்லை.

9. இனி, பிறப்பாலுயர்வும் பீடிலாத் தாழ்வும் மக்களுக் கென்றும் மாறா நிலையில் சாதிகள் விதிக்கும் தரும சாத் திரம், 'சாதி' என்னும் சொல்லும் கருத்தும் ஆரியர் மொழியும் மரபும் படைத்த அரும்பயிர் விளைவே. அதை அறவே மறுத் துப் 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்று முழங்கும் வள்ளுவர் தமிழ்க்குறள் பிறப்பாலுரிமையும், சாதி நீதியும் பேசாது மட்டுமல்ல; "பெருமைக்கும் ஏனைச் சிறு மைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' என்று தமிழர் கொள்கை யையும் வரையறுக்கிறது. இருபிறப்பாளர் மூவகை மக்களும் ஒரு பிறப்புடைய இருகாற் பொதிவிலங்கொரு வகையாக் களும் தருமநூல் விதிக்கும் மாந்தர் வகை, முறை. இவ்வருண் தருமம் குறளறமறியாக் கொள்கையாகும். நிற்க.

10. மேலோர் மூவர்க்கும் நால்வேறு நிலையில் வாழ்க்கை யுரிமை வகுத்துக் கொடுக்கும் ஆரிய தருமம், இதை ஆச்சிரம தருமம் என்னும் வடநூல். ஆச்சிரம உரிமை சூத்திரர்க்கில்லை. அதனால், கல்வி, இல்லற இன்பம், புலமைச் சிந்தனை, விடு தலை வாழ்வு என்னும் நானிலையுரிமையும் நுகர்வும், பெரும் பாலோர்க்கு விரும்பினும் பிழையாம். வீட்டை விரும்பித் தவ மேற்கொண்ட சூத்திரன் பிழைக்க, அவனை, தளர்ந்த தரு மத்தை வளர்க்க வந்த கடவுள் இராமனே கொன்று நிறுத்திய கதையால் ஆச்சிரம தருமத்தின் இயல்பும் வலியும் இனிது விளங்கும். கல்வி, மனைமாட்சி, தவம், துறவு என்னும் நானிலை வாழ்வும் எல்லா மாந்தர்க்கும் ஒத்துரிமையாக்கும் குறளறம் எனவே, நிறமொத்த வெண்ணெயும் கதையும் வேறாவது போலக் குறள் அறமும் ஆரிய தருமமும் இயல் மாறுபடும்.

11. தருமசாத்திரப்படி ஓதல், மேலோர் சிறப்புரிமை யாகும். பெரும்பாலோர்க்கது விலக்கப்பட்டது. எல்லார்க்

கும் கல்வியை இன்றியமையாத பொது உடைமையாக்கும், குறள் கூறும் தமிழறம்.

12. இரு பிறப்பாளரல்லா ரெல்லார்க்கும் பொருளு ரிமை மறுக்கும் தரும நூலனைத்தும்; இன்பமும் அறனும் எல்லா மீயும் பொருளாக்கம், மக்களுக்கெல்லாம் பொது வுரிமை யென்னும் குறள்.

13. பிறப்பால் குலமுறை பேணி, அதன் வழி உணவும் மணமும் அறமும் விதிக்கும் தரும நூல்; சிறப்பால் குடி செய்து வாழும் பெருமை எல்லார்க்குமியல்பென்னும் தமிழ்க்குறள்.

14. தொழில்களை மாந்தர்க்கு வருணமுறையால் வகுத்து விதிக்கும் தருமநூல்; செய்திறனும் வாய்ப்பும் -உளதாயின், எவ்வினையும் எல்லார்க்கும் நன்றென்னும் குறள், பொருள், கருவி, காலம், இடம், திறனொடைந்தும் எண்ணி விரும்பு வினை மேற்கொள்ளும் நெறி குறிப்பதல்லல், பிறப்பும் பிற வும் எத்தொழிற்கும் விலக்கென மறுப்பதைக் குறள் கொள்ளாது.

15. உழவை இழிவாக்கி, ஆரியர்க்குப் பழியாய் விலக்கி, கீழோர்க்கும் விதிக்கும் தருமநூல்; தொழிற்கெல்லாம் 'உழவேதலை' என்றும் கோவேந்தர் கொற்றக்குடையும் தங்கு டைக்கீழ் காண்பவராய உழவர் அரசரினுமயர்வுடைய பெரி யாரென்றும், கோழைபடா மேழிச் செல்வம் எல்லார்க்கும் நல்லதெனவும் பாராட்டும் குறள்.

16. மேலோர் மூவருள் முதல்வரான வேதியர்க்கு இரத் தலை உரித்தாக்கி, உழையா உஞற்றாஉயர் தொழிலாக்கும் தருமநூல் தமக்கன்றி, 'ஆவிற்கு நீ ரென்றிரப்பினும் (மக்கள்) நாவிற்கிரவின் இளிவந்ததில்' என்றெல்லார்க்கும் இரவிழிவா வதைக் குறள் கூறும். மேலும் 'இரந்தும் உயிர்வாழ்தல் வேண் டின், அச்சிறுமையுடைய உலகியற்றியான் (படைத்த கடவுள்) பரந்து கெடுக' என்றிரப்பிற்றமிழர் வெறுப்பை விளக்கும்.

17. உயிரும் மானமும் உடனோம்ப இடனில்லாக்காலை, மானத்தை விட்டுத் தம்முயிர்பேண விதிக்கும் தரும சாத்திரங்கள். 'உயிர் நீப்பர், மானம், கெடவரின்' என்ற இளிவரின் வாழத தமிழரியல்புரைக்கும் குறள்.

18. சூதினை ஆட்சியுரிமை மாட்சியுடைய இரண்டாம் வகுப்பார்க்கு மறுக்கொணாத்தருமமென்றும், மற்றவர்க்குப் பொருட்கேடல்லால் பழிபயக்கும் இழிவன்றென்றும் விதிக்கும் தருமநூல், செல்வமொடு பண்பும் கெடுத்து, அல்லலுழப்பிக்கும் சூதை, எல்லார்க்கும் நல்வாழ்வின் வரியடைக்கும் தீதென்றதன் இழிதகவை வலியுறுத்துங்குறள்.

19. மெலியாரை நலிந்தவர் உரிமை பறிப்பது அரசர் சால்பென்று பாராட்டும் தருமசாத்திரம். 'இகல் மேவும் இன்னா அறிவு', 'எவ்வுயிர்க்கும் பகலென்னும் பண்பின்மை பாரிக்கும் நோய்' என்னும் குறள் இவ்வேறு பாடுகள் ஆழாது மேலளக்கும் அனைவருக்கும் புலனாகும். இன்னும் பல ஆழ்ந்து துருவி ஆராய்வார் சொல்லக்கூடும். ஆனாலும் தமிழ்க் குறள், ஆரியர் சாத்திர வரிநூலாகாமை காட்டுதற்கிவைசாலும். வடநூல் வழக்குகட் கெதிராகத் துறை தொறும் வேறாம் தமிழ்மரபு தெளிக்கும், 'வள்ளுவர் நூல் தனி முதலாவதை மறுப்பாரறிவை என்னென்பது? 'ஆரியர்க்குரிய வேத வேள்வியை நிந்தனை செய்யும்' சமண நூல் போலாது, தமிழ்க் குறள் ஆளாது வாளா அகல விடும் பெற்றிமை அறிந்து பாராட்டத்தக்கது. வள்ளுவர் பிறர் பழியும் தம்பழி போல் நாணும் தமிழ்ச்சான்றோராதலின், தமிழர் விரும்பா ஆரிய வழக்குகளைப் பழியா தொழிப்பர், புகழவுமாட்டார். சாற்றிற்றம்மாற்றலழிந் தொழியும் நான்மறையை, 'அந்தணர் நூல்' என்றகற்றிப் பேசும் வள்ளுவர் 'ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை நன்று' என்று வேள்வியை விலக்கும் தமிழ் மரபுரைப்பர். வெட்டென விளங்குமிவ்

வுண்மை உணராமல் முட்டிமடியுமறிவின் முடவர். வைதிக தரும மும், பொதுமறையறமும் ஒன்றென நினைப்பர். தனித் தமிழ் மரபை நுனித்தறிந்துரைக்கும் முழுமுதற்றமிழ் நூல் வள்ளுவர் குறளெனக் கொள்ளுவர் வாய்மைவகையுணர் சான்றோர். வாழ்க தமிழ்க்குறள், வாழிய மாந்தர்!

# 7

# திருக்குறள் அறத்துப்பால்

*1933*

**நாகை. சொ. தண்டபாணிப்பிள்ளை**

தேவர் திருவடியென் சென்னிமிசை மேவலான்
ஆவ உணர்த்து மவை.

திருச்சிற்றம்பலக் கோவையார்க்கு உரைகண்ட பேராசிரியர் 'திரு-என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம், என்றது அழகு' என உரைத்தார். குறள் என்பது ஒரு வகைப் பாவிற்கமைந்த காரணப்பெயர். எனவே, திருக்குறள் என்னும் சொற்றொடர், 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமாகிய அழகினையுடைய குறட்பா' எனப் பொருள்படும். இது வேற்றுமைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை யாய், அவ்வகைக் குறட்பாவால் அமைந்த நூலுக்குக் காரணப்பெயராயிற்று. இனிக்குறள் என்பதே நூற்குக் கருவியாலான பெயராகக் கொண்டு அது திருவென்னும் அடை யடுத்து அடையடுத்த ஆகுபெயராயிற்று என்பது முண்டு. அன்மொழித்தொகையாகக் கொண்டால்

திருவென்னும் அடை இந்நூலில் ஒவ்வொரு பாவுக்கும் தனித் தனியே உரித் தாதலும், ஆகுபெயராகக் கொண்டால் அவ் வடை நூன் முழுவதுக்கும் பொதுவாக உரித்தாதலும் உணர்ந்து ஏற்றவாறு கொள்க.

இனித் திரு என்பது அழகு எனவே அமைவதாக அவ் வழகின் பெற்றி இனைத்தென அறிவுறுத்துவான்வேண்டிப் பேராசிரியர் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' அழகு என்றனர். இந்நோக்கம் என்பதே, செய்யுட்கு எய்துங் கால், ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளுறுப்பென வகுத்துரைத்த முப்பத்து நான்கனுள் இன்றியமையாவென விதந்தோதப்பட்ட இருபத்தாறனுட் பத்தாவதாகிப் பாவினை அடுத்து முன்னிற்கும் நோக்கு என்னும் உறுப்பாமாறுணர்க. உணரவே, அவ்வுறுப்பிற்குரிய இலக்கணம் ஈண்டு எய்தும், அவ் விலக் கணந்தானும்,

> மாத்திரை முதலா அடிநிறை காறும்
> நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே. **(தொல்–செய். 101)**

என்பதாற் பெறப்படும். இச்சூத்திரப் பொருள் விரிப்புழிப் பேராசிரியர் 'கேட்டார் மறித்து நோக்கிப் பயன் கொள்ளுங் கருவி நோக்குதற் காரணம்' எனவும், 'பாட்டின் ஓசை முதலி யன வெல்லாங் கேட்டாரை மீட்டுந் தன்னை நோக்கி நோக் கப் பயன்கொள்ள நிற்கும் நிலைமை' எனவும் விளக்கிப் போந்தார். எனவே திருக்குறள் என்னும் இச்செந்தமிழ் மாமறை யின் பாக்கள் அனைத்தும் கேட்டாரை மீட்டும் தம்மை நோக்கி நோக்கப் பயன்கொள்ள நிற்கும் நிலைமை வாய்ந்தன என்பது போதரும். இப் பொருள் போதரவே, இந் நூற் சிறப் புணர்த்தும் திருவள்ளுவ மாலையில், 'உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்ததனைத் - தெள்ளுதல் அன்றே செயற் பால' எனவும், 'உள்ளுதோ றுள்ளு தோறுள்ள முருக்குமே' எனவும் இவ்வாறெல்லாம் தெரிந்துரைப் பாராயினார் புலத் துறை முற்றிய தொல்லைத் தமிழ்ப் புலவோ ரென்பது கடைப் பிடிக்க. கட்புலனாம் உருவழகு கண்டறியப்படுதலும் செவிப் புலனாம் பாவழகு கேட்டறியப்படுதலும் உணர்க.

இனிக் குறள் என்பது காரணப் பெயராமாறியாதோ எனின், குறுகிய அளவுடையதாதலின் குறளெனப்பட்டதென்க. மக்களுள் தீரக் குறியானைக் குறளன் என்ப. அவ்வாறே பாக்களுள் மிகக் குறுகியது குறள் எனப்படும். ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என நாலியற்றாகிய பாவகை விரியினைப் பண்புறத் தொகுப்பின் ஆசிரியப்பா வெண்பா என்றாங் காயிருபாவினுள் அடங்கு மென்றார் ஆசிரியர் தொல்காப்பியனார் (செய்.105,107). அவ் விருகைப் பாவினுள் குறட்பா என்பது வெண்பாவின் பாற்பட்டடங்கும். மற்றவ் வெண்பாவினை அடியளவு நோக்கி நெடுவெண்பாட்டுக் குறு வெண்பாட்டு என, இரண்டாக வகுத்து,

நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே
குறுவெண் பாட்டி னளவெழு சீரே (செய்.159)

என அவற்றுக்கு முறையே பேரெல்லையும் சிற்றெல்லையும் வரையறுத்தார் தொல்காப்பியனார். எனவே, மிகக் குறுகியதெனப்பட்ட குறட்பா. எழுசீரானாய குறுவெண்பாட்டாம். 'எழுசீர்' எனவே அவை ஈரடியாதலும், ஈரடியுள் முதலடி நாற்சீரும் ஈற்றடி முச்சீரும் கொண்டியல்வ வதாதலும் பெறப்படும். என்னை?

நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே. (செய்.32)

வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும். (செய்.72)

என்றாராகலின். முச்சீரானாய ஈற்றடியுள்ள இறுதிச்சீர், நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நால்வகை அசையுள் ஓர் அசையாய் நிற்கு மென்பது,

அசைசீர்த் தாகு மவ்வயி னான. (செய்.73)

என்பதனாற் கொள்க. இன்னும் ஆசிரியர் தொல்காப்பியனார் அடிவகைக்கும் சீர்வகைக்கும் எழுத்து வரையறை கூறி, இன்ன பா இன்ன அடி பெற்றுவரும் என்று இவையெல்லாம் நுட்பமும் ஒட்பமும் சிறக்க நிலையிட்டுரைத்தார். அவ்வாற்றான் குறட்பாவுக்கு எய்திய எழுத்தளவை விரித்துக் காட்டிச்

சுட்டனுறின் உரை பெருகும். செய்யுளியல் நோக்கித் தெளிக. அங்ஙனம் தெளியுங்கால், ஒரு குறட்பாவுக்கு உரிய எழுத்துக் கள் எவ்வாற்றானும் ஒன்றொழிந்த முப்பதின் ஏறுமாறில்லை என்பது காணப்படும். படவே, முப்பதுக்குட்பட்ட எழுத்துக் களில் ஓர் அரிய பொருளை நாட்டி, அசையும் சீரும் இசை யும் இயன்ற பாட்டாக நோக்குப்படச் செய்த ஆசிரியரது தெய்வப் புலமையும் அவர் ஆக்கிய நூலின் ஒப்பில் பெரு மையும் கூறவேண்டுமோ என்பது.

இனி, இந் நூலால் நுவலப்படுவன அறம், பொருள், இன்பம் என்பன. அற்றேல், மாந்தர்க் குறுதியென உயர்ந்தோ ரான் எடுக்கப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடென்னும் பொருள் நான்கனுள் வீடு ஈண்டு நுவலப்பட்டிலதோ எனின்,

அறமுதலா அந்நான்கின் திறந்தெரிந்து செப்பிய தேவை

என மாமூலனாரும்,

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனா அறமுதலா வந் நான்கும் – ஏனோருக்
கூழின் உரைத்தாற்கும்.

என நக்கீரரும்,

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன் – மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

என நரிவெரூஉத் தலையாரும்,

அறமுத னான்கும் அகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக் – குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார்.

எனக் கோவூர்கிழாரும் ஆகிய சான்றோர் கூறியுள்ளது கொண்டு வீடும் ஈண்டு நுவலப் பட்டுள்ள தென்பதே துணிபென்க. அறம் பொருள் இன்பமென்று மூன்று பாலாகப் பகுத்தோ தப்பட்டு அக்காரணத்தால் முப்பாலெனவும் பெயர் பெற்ற

நூலுள் வீடும் நுவலப்பட்டுளதென்பது ஒவ்வாதாம் பிற வெனின், அற்றன்று. அறம், பொருள், இன்பம் என்பன மும் முதற் பொருள் வீடென்பது அவற்றின் நிலையின்மையறிந்து அவற்றை விடுதலேயன்றிப் பிறிதில்லையாதலால் அவற்றின் துணைப்பொருளாய் அடங்கும்.

ஆசிரியர் தொல்காப்பியனார்,

**அந்நிலை மருங்கி னறமுத லாகிய**
**மும்முதற் பொருட்கு முரிய வென்ப. (செய்.106)**

என்றதூஉங் காண்க. அச்சூத்திரவுரையிற் பேராசிரியரும் 'அற-முதற்பொரு ளெனவே அவையும் அவற்றது நிலையின் மையும் அடங்கும்' என்றார். அவரே போக்கி, 'வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின் அறமுதலென்பது புறப்பாட் டெல்லையாகக் கூறினானென்பார் நான்கு பொருளுந் தழீஇ யுரைப்ப. இனி யொருசாரார் மும்முதற்பொருட்கும் உரிய வென்பதனை எச்சப்படுத்திக் கொள்ப. அற்றன்று, உலகியற் பொருண் மூன்றனையும் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான், அவையின்றி வீடு பெறுமாறு வேறின் மையின் வீடும் ஆண்டுக் கூறினானென்பது.[1] அல்லாதார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறானென்ப. அங்ஙனங் கருதின் 'அறமுதற் பொருளுஞ் செய் யுட்கண் வாராவென மறுக்க' எனக் கூறுதலும் ஈண்டு நோக் கற்பாலது. அற்றேலஃதாக; நந்தம் தெய்வப்புலவர் தாமருளிச் செய்த இச்செந்தமிழ் மாமறையின் கண்ணே வீடென்னும் பொருண்மையைத் துணைப் பொருளாக அடக்கிக் கூறியது தான் யாண்டெனின், அறத்துப்பாலுட் பாயிரவியலினும் துற வறவியலினும் என்க. இவ்வுண்மை தெரிக்கவன்றோ, 'முப்பா லின் நாற்பான் மொழிந்தவர்' எனக் கீரந்தையாரும், 'வீடொன்று பாயிரம்' எனச் சிறுமேதாவியாரும் கூறுவாராயினர்.

இங்ஙனம் இத் திருக்குறணூல், நாற்பாற் பொருளையும் முப்பாலின் அடக்கிக் கூறியதாயினும், ஏனைப் பொருளும் இன்பமும் அறத்தானே நிலைபெறுவனவாதலின் இஃது அற நூல் எனவே படும் என்பது கடைப்பிடிக்க.

சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படும் தோற்றம் போல

என்றார் பிறரும். அதுபற்றியன்றே செயப்படுபொருள் என்னும் பாயிரப் பகுதியாக அறன் வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தை அமைத்தார் ஆசிரியர் என்க.

இனி, இவ்வறநூலுள் முதற்பா அகரத்திற் றொடங்கி இறுதிப்பா னகரத்தின் முடிந்தமை, இது செந்தமிழ் நூல் என்பதற்கோர் அறிகுறி போல்வதா மென்க. வாழ்க்கை நெறி இனைத் தென முற்றமுடிய விளக்கும் நூல் இஃதென்பதும் அறிவுறுத்த இந்நூலின் முதற்பா,

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

எனவும், இறுதிப்பா,

ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்

எனவும் நிற்றல் காண்க. என்னை? அவ்விரு குறள்களையும் இணக்கி நோக்குழி, உயிர்களுக்கு முதல்வன் இறைவன் என்பதும், உயிர்கள் அவ்விறைவனடியைச் சாராது சிறிது பிணங்கி ஐம்புல இன்பங்களைத் துய்த்தலே வாழ்க்கை என்பதும் அதுவே சிற்றின்பமாம் என்பதும் பின்னர் அவ்வுயிர்கள் அவ்வைம்புல இன்ப நுகர்ச்சியைத் துறந்து இறைவன் திரு வடியிற்கூடி ஒன்று கலப்பதே வீடுபேறாம் என்பதும் அதுவே பேரின்பமாம் என்பதும் உணரக்கிடத்தலினென்க.

குறிப்பு

'மும்முதற் பொருளெனவே, அவற்றது துணைப் பொருளாகிய அறநிலையின்மையும் பொருணிலை யின்மையும் இன்பநிலையின்மையும் அடங்குமென்ப. உலகியற் பொருள் மூன்றனையும் இவையெனக் கூறி அவற்றை விடுமாறுங் கூறவே, வீடுங் கூறிற்றாம்' - என்பது நச்சினார்க்கினியர் உரை.

# 8

# குறள் .... குறளும் நானும்

*1935*

**தந்தை பெரியார்**

அறிவால் உய்த்துணர்ந்து ஒப்புக் கொள்ளக் கூடியன வும் இயற்கையோடு விஞ்ஞானத்துக்கு ஒப்ட இயைந்திருக்கக் கூடியனவும் ஆன கருத்துக்களையே கொண்டு இயங்குகிறது வள்ளுவர் குறள்.

குறளை ஊன்றிப் படிப்பவர்கள் எல்லோரும் நிச்சயம் சுய மரியாதை உணர்ச்சி பெறுவார்கள். அரசியல், சமூக ஞானம், பொருளாதார ஞானம் ஆகிய சகலமும் அதில் அடங்கி யுள்ளது.

மனிதச் சமுதாயத்திற்கே நல் வழி காட்டி நன்னெறி யூட்டி நற்பண்புகளையும் ஒழுக்கங்களையும் கற்பிக்கும் வகை யில் எழுதப்பட்ட நூல்தான் திருக்குறள். எனவேதான் எல்லா மக்களும் எல்லா மதத்தவரும் எங்கள் குறள், எங்கள் மதக் கருத்தை ஒப்புக் கொள்ளும் குறள் என்றெல்லாம் அதைப் போற்றி வருகிறார்கள்.

ஆரியக் கலை, பண்பு, ஒழுக்கம், நெறி முதலியவை யாவும் பெரிதும் தமிழர்களுடைய கலை, பண்பு, நெறி, ஒழுக்கம் முதலியவைகளுக்குத் தலை கீழ் மாறுபட்டதென்பதும் அம்மாறுபாடுகளைக் காட்டவே சிறப்பாகக் குறள் உண்டாக்கப் பட்டது என்பதும் எனது உறுதியான கருத்தாகும்.

வள்ளுவரையும் நாம் ஒரு மனிதராக மதித்தே, மக்களிடையே காணப்படும் இழிவு நீங்கி மனிதத் தன்மை வளர்ந்தோங்க வேண்டும் என்ற கருத்தோடு பாடுபட்ட ஒரு பெரியாராக மதித்தே நாம் குறளை ஒப்புக் கொள்கிறோமே ஒழிய அதை நாம் கடவுள் வாக்காகவோ, அசரீரி வாக்காகவோ ஏற்றுக் கொள்ளவில்லை.

நீங்கள் என்ன சமயத்தார் என்று கேட்டால் வள்ளுவர் சமயம் என்று சொல்லுங்கள்; உங்கள் நெறி என்னவென்றால் குறள் நெறி என்று கூறுங்கள்; அப்படிச் சொன்னால் எந்தப் பிற் போக்குவாதியும் எப்படிப்பட்ட சூழ்ச்சிக்காரரும் எதிர் நிற்க மாட்டான்; யாரும் குறளை மறுக்க முடியாததே இதற்குக் காரணம்.

ஆரியப் பித்தலாட்டத்திற்குச் சரியான மருந்து - மறுப்பு திருக்குறள்தான். திருவள்ளுவ மாலையில் பல புலவர்களே இதைக் கூறியுள்ளனர். ஆரியப் புரட்டை வெளியாக்கி மடமையைப் போக்கும் நூலே திருக்குறள். ஆதலால் குறள்வழி நின்று பகுத்தறிவு பெற்றுப் புது மனித னாகுங்கள்.

புராணக் கருத்துக்களிலும், மூட நம்பிக்கைகளிலும் மூழ்கிக் கிடக்கும் நம் மக்களுக்குப் பகுத்தறிவு வளர்ந்த பின், மூடக் கருத்துக்கள் ஆட்டங்கண்ட பின்தான் குறளின் பொருளை உணரும் அறிவு மக்களுக்கு உண்டாகும் என்று கருதி, முதலில் வந்தேன். இன்று மக்களுக்குக் கொஞ்சம் அறிவுத் தெளிவு - பகுத்தறிவுத் தன்மை வளர்ந்து இருக்கிறதால் இன்று குறளைப் பற்றிப் பேசுகின்றேன்.

அறிவு பெற்றவன், அறிவையே முதன்மையாகக் கொண்டவன், ஆலோசித்துப் பார்க்கும் ஆராய்ச்சித் தன்மை கொண்டவன் எவனும் குறளை மதித்தே தீருவான்; குறளைப் பாராட்டியே தீருவான்; சிறிதாவது பின்பற்றிக் குறளை வழி காட்டியாய்க் கொண்டே தீருவான்.

குறள் வெறும் ஒழுக்கத்தையும், வாழ்க்கைக்கு வேண்டிய அனுபவப் பூர்வமான பிரத்தியட்ச வழியையும் கொண்டதாகும்.

குறள் ஒரு அறிவுக் களஞ்சியம். பகுத்தறிவு மணிகளால் கோக்கப்பட்ட நூல் திருக்குறள். பார்ப்பனர்களின் பித்தலாட்டங்களை வெளியாக்குவதற் கென்றே எழுதப்பட்ட நூல். ஆகவே வள்ளுவர் ஒரு பகுத்தறிவாளியாக இருந்திருக்க வேண்டும். அதன் ஒவ்வொரு செய்யுளும் பார்ப்பனர்களின் அயோக்கியத் தன்மைகளை விளக்குகிறது.

**– இதழ்களில் 1934 முதல் எழுதிய குறிப்புகள்**

## குறளும் நானும்

பேரன்பு படைத்த தலைவர் அவர்களே!

தாய்மார்களே! தோழர்களே! வணக்கம்.

வள்ளுவர் குறளையும், அந்தப் படியே, அப்போது பகுத்தறிவுக்கு ஏற்றதல்ல என்று கண்டித்து வந்தேன். எல்லாவற்றையும் குறை சொல்லும்போது, பலர் என்னிடம், 'எல்லாம் போய்விட்டால், நமக்கு எதுதான் நூல்!' என்று கேட்பார்கள். நான், 'இங்கே இருக்கிற மலத்தினால் கெட்ட நாற்றம் வீசுகிறது; அதை எடுத்துவிடு என்று கூறினால் - அந்த இடத்தில் என்ன வைப்பது என்றா கேட்பது?' என்று பதில் கூறுவேன்.

ஏறக்குறைய மத சம்பந்தமான காரியங்களில் மக்களுக்கு நம்பிக்கையே இருக்கக்கூடாது என்று கருதி அந்தப்படியாகவே பிரச்சாரம் புரிந்து வந்தேன். பிறகு நாளாக ஆக நல்ல

அறிவாளிகளோடு - அறிவாளி என்றால் பண்டிதர்களோடு அல்ல, பொது அறிவுள்ள மக்களோடு, திராவிட உணர்ச்சி மிக்கவர்களோடு - நம் உணர்ச்சியுள்ள அறிவாளிகளோடு பழகியபோது குறளின் மேன்மை பற்றி அவர்கள் எடுத்துக் கூறினார்கள். நான், 'இப்படிச் சொல்லப்பட்டிருக்கிறதே, இந்த இடத்தில் இப்படி யிருக்கிறதே!' என்று கேட்டேன். அது பரிமேலழகரின் உரை; அது குறளாசிரியர் கருத்தல்ல' என்று எடுத்துக் கூறி உண்மை உரையினைச் சொன்னார்கள். அந்தக் காலத்தில் பரிமேலழகர் உரைதான் சிறந்த உரை என்று கொண்டாடப்பட்டது. அவர் மனுதர்ம சாஸ்திரப்படி குறளுக்கு உரை எழுதிவிட்டார். பின்னர் வந்த அறிவாளிகள் அதைக் கண்டித்து, குறளின் உண்மைக் கருத்தை எடுத்துக் காட்டினார்கள்.

அதிலிருந்துதான் நான் குறளைப் பற்றிப் பேசுகிறேன். அதுவும் அதையே ஆதாரமாக (Authority) எடுத்துக் கொண்டல்ல; 'நான் சொல்லுகிற கருத்து - அதிலும் இருக்கிறது பார்!' என்று கூறிவந்தேன்.

சிறிது நறை இருந்தாலும் இப்போதைக்கு இது இருக்கட்டும் என்று கருதினேன்.

புராணக் கருத்துக்களிலும், மூட நம்பிக்கைகளிலும் மூழ்கிக் கிடக்கும் நம் மக்களுக்குப் பகுத்தறிவு வளர்ந்தபின், மூடக்கருத்துக்கள் ஆட்டம் கண்ட பின்தான் குறளின் பொருளை உணரும் அறிவு மக்களுக்கு உண்டாகும் என்று கருதி, முதலில் மூடக் கருத்துக்களை அகற்றும் பணியில் பிரச்சாரம் புரிந்து வந்தேன். இன்று மக்களுக்குக் கொஞ்சம் அறிவுத் தெளிவு - பகுத்தறிவுத் தன்மை வளர்ந்து இருக்கிறதால் இன்று குறளைப் பற்றி பேசுகிறேன்.

'குறளில் இப்படியிருக்கிறதே! நீ ஏன் இப்படி நடக்கிறாய்?' என்று கேட்காதீர்கள். நான் சொல்லுவது அதில் இருக்

கிறது என்ற அளவில்தான் - நான் குறளை ஆதரிக்கிறேன்; அதை அப்படியே முழுவதையும் ஒத்துக் கொள்ளமாட்டேன்.

உதாரணமாக, மாமிச உணவு உண்பதை வள்ளுவர் மிக வன்மையாகக் கண்டிக்கிறார்; கொல்லாமையின் உயர்வு குறித்து வெகுவாக எழுதியிருக்கிறார். குறளிலேயே அப்படிச் சொல்லப்பட்டிருக்கிறதே என்பதற்காக நான் மாமிச உணவு உட்கொள்ளாமல் இருக்க முடியுமா? மக்களுக்கும் எல்லா நடவடிக்கைகளுக்கும் குறள்தான் ஆதாரம் என்று சொல்லவில்லை.

குறளிலிருந்து உங்களுக்கு வேண்டியதை ஏற்றுக் கொள்ளுங்கள். வேண்டாததைத் தள்ளிவிடுங்கள் என்று தான் கூறுகிறேன்.

ஒரு கடையில் எல்லாச் சாமான்களும் கிடைக்கும் என்றால், அந்தக் கடையில் உள்ள எல்லாச் சாமான்களையும் நாம் வாங்கிக்கொண்டு வருவோமா? நமக்குத் தேவையான சாமான்களை மாத்திரந்தான் வாங்கிவருவோம். அது போலவே, குறளில் வேண்டியதை எடுத்துக்கொண்டு வேண்டாததை விட்டு விடுங்கள் என்று கூறுகிறேன்.

குறளில் ஏதோ சில குறைகள் இருக்கலாம்; இருக்க முடியும். ஏனென்றால், அது 1950வது வருடத்திய (இன்றைய) மாடல் அல்ல. 2000 வருடத்திற்கு முந்திய சங்கதி. திருவள்ளுவர் திரிகால முணர்ந்த முனிபுங்கவரென்றோ, ஞானியென்றோ நாம் கொள்ளவில்லை. 2000 வருடங்களுக்கு முன்னர் ஒருவன் எவ்வளவு அறிவாளியாய் இருந்தாலும் எலக்ட்ரிக் லைட், ஒலிபெருக்கி, மோட்டார் முதலியவைகளைக் கண்டிருப்பானா? மதவாதிகள் வேண்டுமானால், 'எல்லாக் காலத்தையும் முக்காலத்தையும் உணர்ந்த மகான் இவர்' என்று பலரை விளம்பரப்படுத்தலாம். ஆனால், அது பகுத்தறிவுக்கு ஒவ்வாதது. நாம் திருவள்ளுவரை மகான் என்றோ அவதார புருஷரென்றோ ஒத்துக்கொள்ளமாட்டோம்.

திருவள்ளுவர் நல்ல அறிவாளி, ஆராய்ச்சிக்காரர். அந்தக் காலத்தில் மக்களிடம் பரவி இருந்த மூட எண்ணங்களோடு போராடிய அறிஞர் என்ற அளவில்தான் ஒத்துக் கொள்ளமுடியும்.

அந்தப் படியிருக்க, 2000 ஆண்டுகளுக்கு முன்னதாகத் திருவள்ளுவர் சொன்னவை எல்லாம் அப்படியே இன்றைக்கும் ஏற்றதாக இருக்கமுடியுமா? இன்றைய நிலைக்கு நான் பேசும் கொள்கைகள் சரி; என் திட்டங்கள் சரி என்றால் எனக்குப் பிறகும், இன்னும் 100, 200, 1000 வருடங்களுக்குப் பிறகும் என் கொள்கைகள் - நான் வகுத்த திட்டங்கள் கொஞ்சங்கூட மாற்றப்படாமல் அப்படியே இருக்கவேண்டும் என்பது என்ன நியாயம்! அந்தப்படி இருக்க முடியுமா?

காலத்திற்கு ஏற்ற முறையில்தான் எண்ணங்களின் விரிவும், கொள்கை, திட்டங்களும் இருக்க முடியும். போர் முறை பற்றித் திருவள்ளுவர் - வில், வாள், வேல், கேடயம் என்ற ஆயுதங்களை வைத்துத்தானே எழுதியிருக்கிறார்? இன்று எழுதப்பட்டால் அணுகுண்டைப் பற்றி எழுதுவார்கள்; நாளைக்கு வேறொன்று. இந்தப் படியாகத்தானே மாறிக் கொண்டே போகும்! அப்படியிருக்க, எதையும் மாற்றக் கூடாது என்பது என்ன நியாயம்! ஆரியக் கருத்துக்கள், தத்துவங்கள் நம் நாட்டில் நுழையாதிருந்தால், நமக்குக் குறளே ஆதாரமாக - குறளே நம்முடைய மதமாக இருந்திருக்கும். ஆரியர்கள் திருவள்ளுவரை முதலிலேயே - பிறப்பிலேயே இழிந்தவராக ஆக்கிவிட்டார்கள்.

இந்து மதத்தில் எந்தக் காரியங்களைச் செய்தவராக இருந்தாலும், அதிசயமான - அற்புதமான - நடைமுறைக்கு ஒவ்வாத கருத்துக்களை அவர்களின் பிறவியில் வரலாற்றில் புகுத்துவார்கள். இவன் குதிரைக்குப் பிறந்தான்; இவன் குரங்குக்குப் பிறந்தான்; இவன் யானைக்குப் பிறந்தான்; இவன் செத்துப்போனவனை உயிர் மீட்டு எழச் செய்தான்; இவன்

மண்ணைச் சர்க்கரையாக்கினான்; குருடனுக்குக் கண் கொடுத்தான் - என்பது போன்ற அதிசயங்களைப் புகுத்தி விடுவார்கள். ஏனென்றால், அப்போதுதான் அதிலிருக்கும் குற்றங்குறைகள் பற்றி - ஆபாசங்கள் பற்றி யாரும் கேள்விகள் கேட்க மாட்டார்கள் என்ற கருத்தோடு!

ஆனால், குறளில் அப்படிப்பட்ட அதிசயம் ஒன்றையுங் கூறாவிட்டாலும் - திருவள்ளுவரைத் தெய்வீகப் பிறவியாக ஆக்காவிட்டாலும் - அவருடைய பிறப்புப்பற்றி இழித்துக் கூறிவிட்டார்கள்.

வள்ளுவரின் தாயை ஒரு விபச்சாரியாகக் கற்பனை செய்துவிட்டான். வள்ளுவர் பிறப்பைப் பற்றி எழுதும் போது பறைச்சிக்கும் பார்ப்பானுக்கும் வள்ளுவர் பிறந்தார் என்று எழுதுகிறான். இதில் புத்திசாலித்தனம் என்னவென்றால் - குறளைப் போன்ற நீதி நெறிகளை, மக்களின் உயர் ஒழுக்கத்திற்கு வேண்டிய பண்புகளைப் போதிக்கத்தக்க தகுதியும் அறிவும் வள்ளுவருக்கு வந்ததற்குக் காரணமே, அவர் பார்ப்பனருக்குப் பிறந்ததால்தான் ஆகும் என்ற கருத்தில் இந்தக் கதையை எழுதியிருக்கிறார்கள். இந்தப்படி பறைச்சியுடன் பார்ப்பான் கூடினான் என்பது, பார்ப்பனர்களுக்கு தர்மப்படி எவ்வளவு கேவலம் என்பதை மறந்து விட்டார்கள். அக்காலத்தில் அறிவாளிப் பார்ப்பான் எவ்வளவு அயோக்கியத்தனமாக நடந்திருக்கிறான் என்பதைக் காட்டுகிறது. இந்தப்படியாக முதல் எடுத்தவுடனேயே குறளையும், அதன் ஆசிரியரையும் இழிவு படுத்தி விட்டார்கள்.

நாட்டில் புராணங்களைப் பற்றியும், இராமன் - சீதை தொடர்பு பற்றியும், கந்தன் வள்ளி காதல் லீலைகள் பற்றியும், கிருஷ்ணனின் - பிள்ளை விளையாட்டு, கோபிகள் லீலைகள் பற்றியும் எல்லோருக்கும் - பாமரர்கள், பாட்டாளிகள், படிக்காதவர்கள், கூலிகள் முதற்கொண்டு பெரிய, பெரிய சீமான்கள்

வரை தெரியும்; தெரிந்திருப்பார்கள். ஆனால், குறள் பற்றிப் பெரிய பணக்காரர்களுக்கும் தெரியாது; தெரிய வாய்ப்பும் இல்லை. இந்தப்படியாகக் குறளை எந்தெந்த வழியாக மங்கும் படி செய்ய முடியுமோ - மக்கள் மனத்தில் குறளின் கருத்துக்கள் புகமுடியாது செய்ய முடியுமோ அவ்வளவுக்கு ஆரியர்கள் செய்து விட்டார்கள்.

நான், ஆரியக்கருத்துக்களெல்லாம் - அதன் தத்துவங்கள், கொள்கைகள் ஆகியவைகளெல்லாம் ஒரு கூட்டத்தின் உயர்வுக்கும், வேறொரு கூட்டம் வேதனைப் படவுமான முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன என்று கூறி - அவைகளை, ஆரியக் கருத்துக்களை அவைகளுக்கு ஆதாரமாய் இருக்கின்ற மதம், கடவுள் தன்மை, புராணங்கள் போன்றவைகளை ஒழிக்க வேண்டும் என்றும் பிரச்சாரம் புரிந்து வருவதால் எனக்கு வள்ளுவர் உள்ளமும், அவர் நூலின் உண்மைக் கருத்தும் தெளிவாகத் தெரிகின்றது.

ஆகவேதான், நாம் வள்ளுவரை, அவர் இயற்றிய திருக்குறளைப் போற்றுகிறோம்.

வள்ளுவர் யார், எந்தக் குலத்தைச் சேர்ந்தவர் என்று நிச்சயமாய்க் கூறமுடியாது. வள்ளுவர் ஆரியத்தை எதிர்ப்பவர்; ஆரியக் கருத்துக்களைக் கண்டிப்பவர்; அவைகளை வெறுப்பவர் என்று தான் நமக்குத் தெரிகிறது. அத்தோடு, வள்ளுவர் எந்த மதத்தையும் சார்ந்தவராகத் தெரியவில்லை. சாதாரணமாக சைவ, வைணவ, சமணர்கள் விவாதங்களில் - சமணர்கள்தான் வெல்லுவார்கள். பெரிய புராணம் எழுந்ததே சமணர்களை ஒழிப்பதற்காகத்தான், ஆரியக் கருத்துக்களை சமணர்கள் ஏற்கவில்லை என்பதற்காக அவர்கள் வெறுக்கப்பட்டார்கள். அதன் விளைவாகப் பலப் பல தொல்லைகளுக்கு ஆளாக்கப்பட்டார்கள் சமணர்கள். இன்றுங் கூட மதுரையில் 800 சமணர்களை கழுவேற்றின திருவிழா கொண்டாடப்படுகிறது.

அவ்வளவு தூரம் ஆரியக் கருத்துக்களை எதிர்த்து, அதற்காக இன்னல்கள் பல பட்டிருக்கும் சமணர்களும் - திருக்குறளை ஆதரிக்கிறார்கள். சைவ சமயத்தவரும், வைணவ மதத்தாருங்கூட திருக்குறளை மாபெரும் நூல் என்று ஒத்துக் கொள்ளுகின்றனர். இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவர்களும், கிறிஸ்துவ மதத்தின் கீழிருப்பவர்களும் திருக்குறளைப் போற்று கிறார்கள். இந்தப்படி எல்லோரும் போற்றுவதால் தான் திருக்குறள் ஒரு மதத்தைத் தழுவியோ, ஒரு மதத்தின் உயர்வுக்காகவோ எழுதப்பட்ட நூல் என்றில்லாமல், மக்களின் வாழ்க்கைக்கு, மக்கள் தங்களுடைய வாழ்க்கையி லே கையாள வேண்டிய வழி வகைகள் பற்றி எழுதப்பட்ட நூல் என்று ஆகிறது. குறளாசிரியர் காலத்தில் 'இந்துமதம்' என்பது இல்லை. இந்து மதம் என்று இருந்திருந்தால் திருக்குறளில் ஒரு இடத்திலாவது 'இந்து' என்ற சொல்லைக் குறிப்பிட்டிருக்கலாம். ஆனால், 1330 பாட்டுக்களிலும் ஒரு இடத்திலாவது 'இந்து' என்ற சொல் காணப்படவே இல்லை.

அது மட்டுமல்ல, குறளாசிரியர் கடவுளையும், மோட்ச நரகத்தையும் ஒத்துக் கொள்ளவில்லை. குறளில் நீங்கள் அறம், பொருள், இன்பம் என்ற அளவில்தான் காணமுடியுமே தவிர - 'வீடு' 'மோட்சம்' பற்றி அவர்கூறி இருப்பதாக இல்லை. அறம், பொருள், இன்பம் என்றுதான் முப்பிரிவுகளைக் கூறு கிறார், மோட்ச சாம்ராஜ்யத்தை விட்டு விட்டு.

திருவள்ளுவர் கடவுளைப் பற்றிக் கவலைப்படவில்லை என்று கூறினேன். திருக்குறளின் முதல் அத்தியாத்தில், 'கடவுள் வாழ்த்து' என்று ஒரு அதிகாரம் இருக்கிறது. அதில் உருவ வணக்கக் கொள்கைகள் இடம்பெறவில்லை. மேலும், இந்து மதக் கடவுள்களைப் பற்றிய 'புகழாரம்' அந்தப் பத்துப் பாட்டுகளிலும் கிடையாது.

சிலர் கூறுகிறார்கள், 'குறளில் முதல் அத்தியாயத்தில் இருக்கும் கடவுள் வாழ்த்துப் பாக்கள் இடைச் செருகல்'

என்று; சிலர், 'அப்படியெல்லாம் இல்லை; வள்ளுவர் பாடியது தான்' என்று கூறுகிறார்கள். நம்மைப் பொறுத்த வரையில் கடவுள் வாழ்த்துப்பாக்களை வள்ளுவரே பாடினதாக வைத்துக் கொண்டாலும் ஒன்றும் கெட்டுப் போய்விட வில்லை. இன்றைக்கு நமக்கு இருக்கின்ற கடவுள்களைப் போன்ற கடவுள்களுக்காக வள்ளுவர் வாழ்த்துக்கூறினாரா? இல்லை. கடவுள் வாழ்த்துக் கூறப்படும் பத்துப் பாட்டிலும், ஒரு பாட்டிலாவது வள்ளுவர் 'கடவுள்' என்ற சொல்லைக் கையாளவில்லை. திராவிட மக்களுக்கு 'எல்லாம் வல்ல,' 'எங்கும் நிறைந்த' என்பதாகக் கடவுளைக் குறிக்க 'கடவுள்' என்ற ஒரு சொல்லைத் தவிர வேறு சொல் கிடையவே கிடை யாது. அந்தச் சொல்லையே வள்ளுவர் தமது குறளில் கையாளவில்லை! கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்தில் கையாளவில்லை என்பதோடு மாத்திர மல்ல, குறள் முழுவதி லுமே 1330 பாடல்களிலுமே ஒரு இடத்திலாவது வள்ளுவர் 'கடவுள்' என்ற சொல்லைக் குறிப் பிடவில்லை. தமிழ் மொழி யில் உள்ள நல்ல சொற்களையெல்லாம் - உயர்ந்த சொற் களையெல்லாம் தமது நூலில் பயன்படுத்திய வள்ளுவர், 'கடவுள்' என்ற சொல்லை மட்டும் பயன்படுத்தவில்லை.

இரண்டாவது, 'கடவுள் வாழ்த்து' என்பதே கேலிக் குரியது; மிகவும் தவறான சங்கதியாகும். 'சர்வ வல்லமை'யும் படைத்த - நம்மையெல்லாம் காக்கும் கடவுளுக்கு 'கடவுள் வாழ்த்து' என்று நாம் போய் வாழ்த்துக் கூறுவதோ? வள்ளு வரை நாம் மாபெரும் அறிவாளி, ஆராய்ச்சிக்காரர் என்று கூறுகிறோம். அதற்குத் தக்க ஆதாரங்களும் இருக்கின்றன. அவர் போய் இந்தப்படி 'கடவுள்' என்று நாம் கருதுவதற்கு வாழ்த்துப்பாடல் வாசிப்பாரா?

வள்ளுவர் கடவுள் வாழ்த்துப் பாடியிருப்பதெல்லாம் ஒவ்வொரு நற்குணங்களை வைத்து, அந்தப் படியாக நடக்க வேண்டும் என்பதற்காகவே. பத்துப் பாட்டிலும் பத்துவித

மான குணங்களைக் கூறினார். சர்வ வல்லமையுடைய சர்வேசுவரனைப் பற்றிப் பாடுவதென்றால் இரண்டு, மூன்று பாட்டுக்களோடு குறளை நிறுத்தியிருப்பார், அதைவிட்டு அவ்வளவு பாட்டுக்கள் - அவைகள் ஒவ்வொன்றிலும் ஒவ் வொரு நற்குணத்தைப் போதிக்கிறார் என்றால் என்ன பொருள்? மனிதன் எப்படியிருக்க வேண்டும் என்பதைக் காட்டுவதற்காகத்தான் - வாழ்வின் வகையை, நிலையை உணர்த்துவதற்காகத்தான் எட்டு, ஒன்பது கருத்துக்களை வைத்து வள்ளுவர் கடவுள் வாழ்த்துக் கூறியிருக்கிறார்.

> **கற்றதனால் ஆய பயன் என்கொல் வால் அறிவன்**
> **நற்றாள் தொழாஅர் எனின்**

ஒரு மனிதன் நல்ல அறிவுடையவனாய் இல்லாதிருந் தால், நல்ல அறிவுக்கு ஆட்பட்டிருக்க வில்லையானால் - அறி வோடு நடந்துகொள்ளாவிட்டல், அவன் எவ்வளவு படித்து இருந்தாலும் என்னதான் அந்தப்படிப்பில் அவனுக்குப் பயன் ஏற்பட்டது என்று கூறமுடியும்?

> **வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு**
> **யாண்டும் இடும்பை இல.**

விருப்பு, வெறுப்பு இரண்டும் இருக்காதவனுக்குத்தான் - மன அமைதி இருக்கும்; விருப்பு, வெறுப்பு இருந்தால் மனி தனுக்கு மன அமைதி இருக்காது என்று கூறுகிறார். அடுத்து,

> **தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்**
> **மனக்கவலை மாற்றல் அரிது.**

என்ற பாட்டை, கடவுளடியைச் சேர்ந்தாலொழிய நன்னிலை இல்லை; பரமனின் திருவடியினை அடைந்தால் தான் பாபங்கள் ஒழியும்; மோட்ச வாழ்வு கிட்டும் என்ற அர்த்தத்திலா வள்ளு வர் கூறுகிறார்? இல்லை.

ஒரு மனிதன் தன் நிலையைப் பூரணமாகக் குறைவற்ற தாக நினைத்துக்கொள்ள வேண்டும்; தனக்கு மேலாக ஒருவனது நிலை இருப்பதாகக் கருதி, குறைபாடு உணர்ச்சி கொள்ளலாகாது. அதாவது, ஆசை கூடாது. உள்ளதைக் கொண்டு முழுத்திருப்பதி அடைந்தவனுக்கு மனத்தில் கவலை உண்டாகாது என்பது அதன் கருத்தாகும். மனிதனுக்குக் கவலை எத னால் ஏற்படுகிறது? தன்னைவிட மேல் நிலையில் ஒருவன் இருக்கிறான்; அவன் உலகத்தில் உள்ள பல பொருள் களை உல்லாசமாக அனுபவிக்கிறான்; அதற்கான வசதி வாய்ப்பு அவனுக்கு இருக்கிறது: நமக்கு அவ்வசதிகள் இல் லையே என்று மனிதன் தன்னைவிட உயர்ந்தவனாக ஒரு வனைக் கருதி, அவனைப் பார்க்கும்போதுதானே கவலை கொள்ளுகிறான்? அந்தக் கவலை இல்லாமல், 'நான் ஏழை தான்; படிக்காதவன்தான்; பல நூல்களைக் கற்றறியாத வன்தான்; பணத்தைத் தொட்டறியேன் என்றாலும் அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை; இப்பொழுது நான் இருக் கும் நிலையே எனக்கு உயர்ந்தது' என்று மனத் திருப்தி அடைந்து விட்டானானால் மனக் கவலை ஏது அவனுக்கு?

மனிதனுக்குக் கவலைகள் நீங்கி, திருப்தி எண்ணம் ஏற் பட வேண்டுமானால், பொது உடைமைதான் அதற்கு மருந்து என்று கூறப்படுகிறது. ஏனென்றால், பொதுவுடைமைத் திட் டத்தில் மனிதர்களுக்குள் பேதம் இல்லாமல் செய்யமுடிகிறது.

பேதமல்லாத இடத்தில் மனிதன் யாரையும் பார்த்துப் பொறாமையுற முடியாது; ஆகவே, மனிதன் மனத்திருப்தி யடைகிறான். இக்கருத்தைத்தான் வள்ளுவர் அக்குறளில் கூறுகிறார்.

அதைப்பற்றிப் பரிமேலழகர், வடவர்களுடைய ஆரியர் களுடைய 32 அறங்களை வைத்துக் கூறினார். ஆனால், வள் ளுவர் அறம் என்று சொல்வது என்ன வென்றால், மக்களுக் குள் அன்பு, ஒழுக்கம், அருள் இருக்க வேண்டும் என்பதாகும்.

மேலும், வள்ளுவர் மேலுலகத்தைப் பற்றியும், கடவுளைப் பற்றியும் அவர் மரியாதை செய்யவில்லை; ஏற்றுக் கொள்ளவு மில்லை. ஓரிடத்தில் கூறுகிறார்:

'மேலுலகம் இல்லையெனினும்' என்று அதாவது, 'உனக்கு மேலுலகம் கிடைக்கவில்லை யென்றால் கூட அதைப் பற்றிக் கவலைப்படாதே; உனக்கு மேலுலகம் கிடைக்காது என்றாலும் நீ பிறருக்கு அருள் கூர்ந்து நட' என்று கூறுகிறார். கடவுளைப் பற்றிச் சொல்லுகிறபோது கூட, மனிதனின் வாழ்வுக்கு வசதி யில்லாவிட்டால், நம்மையெல் லாம் படைத்துக் காத்துக் கொண்டிருப்பதாகக் கருதப்பட்டு வருகின்ற கடவுளை ஒழிக்க வேண்டும்; அது இல்லா விட்டால் குற்றமில்லை என்று கூறு கிறார். ஏனென்றால், மனிதனின் க்ஷ்ட நஷ்டங்களுக்கும், அவனுக்கு ஏற்படுகின்ற இலாபத்திற்கும், அவன் வாழ்வில் தென்படுகிற இன்ப துன்பங்களுக்கும் கடவுள் காரணமில்லை என்பதை உணர்த்தவே அப்படிக் கூறுகிறார்.

இன்னும் வள்ளுவர் ஆரியத்தை எந்தெந்த வகையில் எதிர்க்கிறார் என்றால்,

பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான்

என்று - பிறப்பினாலே பேதம் இல்லை; பேதம் கற்பிக்கவும் கூடாது; அடுத்து செய்கின்ற தொழிலாலும் பேதங்கள் கற் பிக்கக் கூடாது என்று ஆரியக் கொள்கையின் அடிப் படைக்கே அடி கொடுக்கிறார். ஆரியர்கள், 'மனிதனின் பிறப் பிலே - ஆண்டவரின் முகத்திலே பிறந்தவன் உயர்ந்தவன்; காலிலேயிருந்து வந்த (நாம்) இழிந்தவர்கள்' என்று பிறப்பில் பேதங்களை ஏற்படுத்தி, செய்கின்ற தொழிலாலும், அதாவது நம்மவர் செய்கின்ற தொழில்களை - உழவுத் தொழில் உட் பட கேவலமான ஈனசாதித் தொழில் என்று ஆக்கியிருக்

கிறார்கள். அதைத்தான் வள்ளுவர் வெகுவாகப் பிறப்பிலும், தொழிலிலும் பேதமில்லை என்று கண்டிக்கிறார்.

மனித சமுதாயத்தின் தேவைக்காகத்தான் பல தொழில்களும் இருக்கின்றன. வண்ணான் செய்யும் தொழில், நாவிதன் செய்யும் தொழில், தோட்டி செய்யும் தொழில் நமக்கு அத்தியாவசியத் தேவையில்லையென்று கூறிவிடமுடியமா? கக்கூஸ் எடுக்கிறவன் ஒரு நாளைக்கு வேலை நிறுத்தம் செய்தால் நம் கதி என்னாவது? இந்தப்படியாகச் சமுதாயத்தின் தேவைக் காகத்தான் பல தொழில்கள் இருக்கின்றன. அதில் போய்ப் பேதங்கற்பிப்பது என்றால் என்ன நியாயம்? இவைகளைச் செய்ய யாவருக்கும் பங்கும் உரிமையும் இருக்க வேண்டும்.

அடுத்தபடியாக, வள்ளுவர், ஆரியர் செய்யும் வேள்வியைக் கண்டிக்கிறார்

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று

அதாவது கடவுள் பெயர் கூறி உயிர்க்கொலை புரியுங் கொடுஞ்செயலைக் கண்டிக்கிறார். நாட்டிலே நாலு வருணத்தை நிலைநிறுத்துவதற்காகவும், ஆரியர்களின் உயர் வாழ்வுக்கு ஆதாரமாயும் இருந்துவரும் வேதங்களையும் - அதாவது, வேதத்தைப் படிக்காவிட்டாலும் குற்றமில்லை; ஒழுக்கமாக நடக்க வேண்டும் என்று வள்ளுவர் வேதியத் தன்மை யைக் கண்டிக்கிறார்.

இந்தப்படியாக மதம், கடவுள், வேதம், வேள்வி ஆகிய அத்தனையையும் ஆரியத்தின் உயர்வுக்கும் நம்மவர் இழிநிலைக்கும் காரணமாய் நின்று நிலவும் அவைகளை வள்ளுவர் வெகு தீவிரமாகக் கண்டிக்கிறார். இந்தப்படியாக வள்ளுவர் ஆரியக் கருத்துக்களை எதிர்த்துவிட்டு, கண்டித்துவிட்டுத் தனக்கு என்று யாதொரு 'புதுமத உபதேசமும்' அவர்

புரியவில்லை. 'உன் அறிவைக் கொண்டு சிந்தித்து, ஆராய்ந்து, உண்மை கண்டு, உலகம் ஒப்ப நடந்துகொள்' என்கிறார். யாவர் ஒருவர், 'உன் அறிவின்படி, உலகம் ஒப்ப நட' என்கிறாரோ அவர் எந்த மதத்தையும் சேர்ந்தவராகார்.

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக்கெடும்.

என்று கூறுகிறார். அதாவது, ஒரு மனிதன் தன் இனத்தவருக்கு ஏதாவது நன்மை செய்ய வேண்டும் என்று நினைத்தானானால் - அதாவது, பொது நலத்துக்குப் பாடுபட வேண்டும் என்று முன்வந்தால், அவன் அந்தக் காரியத்துக்கு ஏற்ற நல்ல காலம் வரட்டும் என்று எண்ணிக் காத்திருக்கக் கூடாது. இரண்டாவதாக, 'நாம் இந்தக் காரியத்தில் இறங்குகிறோமே; இதனால் இன்னின்ன கஷ்டங்கள் வருமே! நமக்குப் பலவிதத்திலும் அவமானம் ஏற்படுமே - மானம் போய் விடுமே' என்று கவலைப்படக் கூடாது. அந்தப்படியாக வெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால் பொதுவாழ்வில் நாம் செய்யப்புகும் காரியமே கெட்டுவிடும் என்று மிகப் புரட்சி கரமாகக் கூறுகிறார்.

ஏன் புரட்சிகரமாகச் சொல்லுகிறார் என்று கூறுகிறேன் என்றால், மற்றொரு இடத்தில் காலம் பார்த்துச் செய்தால் ஞாலமும் கைகூடும் என்று கூறுகிறார். இன்னொரு இடத்திலே,

'மயிர் நீப்பின் உயிர்வாழாக் கவரிமான்' போன்று மானம் நீங்குமானால் - மனிதன் இறந்துவிட வேண்டும் என்று கூறுகிறார்.

மானமிழந்தால் மரணத்தைத் தழுவ வேண்டும் என்று வள்ளுவர் கூறுவது ஏன் என்றால், மனிதனுடைய தனி வாழ்வில், அவனது சொந்த வாழ்வில் அவனுக்கு அவமானம் நேரிடின் உயிர்விட வேண்டும். உயிரைவிட மானத்தைப் பெரிதென மதித்து நடக்க வேண்டும் என்பதற்காகச் சொல்லுகிறார்.

இந்தக் குறள் பொது வாழ்வு பற்றியதாகும். பொதுவாழ்வில் எந்த மக்களின் நல்வாழ்விற்காக - முன்னேற்றத்திற்காகப் பாடுபடுகிறானோ, அந்த மக்களாலேயே வெறுக்கப்படலாம். பல தொல்லைகட்கும் ஆளாக நேரிடலாம். ஆனால், தாம் படுகின்ற பாடுகள் - அடைகின்ற அல்லல்கள் நன்மைக்காகத்தான் என்று கருதி வேலை செய்தால்தான், அவன் எண்ணிய காரியம் ஈடேறுமேயொழிய, மானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் காரியம் கைகூடிவராது என்று கூறுகிறார்.

இந்தப் படியாக வள்ளுவர் மக்களுக்கு நல்வாழ்வின் வழியையும் நல்லொழுக்கத்தையும் கூறுகிறார். இன்றைய தினம் திராவிடர்களுக்கு ஒழுக்க நூல் குறள்தான்.

# 9

# திருவள்ளுவரும் திருக்குறளும்

*1936*

**உ.வே. சாமிநாதையர்**

## திருக்குறளின் வியாபகம்

திருவள்ளுவரையும் அவரது திருக்குறளையும் பாராட்டாத புலவர்கள் இலர். தமிழ் மணம் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் திருக்குறளின் நறுமணம் வீசிக்கொண்டே இருக்கும்; குறள் மணம் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் தமிழ் மணம் வீசுகின்றதென்று கூறுதலே பின்னும் பொருத்தமாகத் தோற்றுகின்றது. ஏனெனில், தமிழ் வழங்காத பிற நாடுகளிலுள்ள அறிஞர்கள் திருக்குறளின் மொழி பெயர்ப்புகளைப் படித்து இன்புறுகிறார்கள். அங்கே தமிழ் மணம் எது? நாமெல்லாம் தமிழை அறிந்து அதன்மூலம் குறளை அறிகின்றோம். அவர்களெல்லாம் குறளின் பொருளை அறிந்து அதன் மூலம் தமிழைப் பற்றி அறிந்துகொள்கிறார்கள். இதனால் தமிழைக்காட்டிலும் குறளுக்கு வியாபகம் அதிகமாக இருப்பதை அறிகிறோமல்லவா?

## குறளின் வடமொழி மொழிபெயர்ப்பு

குறளைப் போன்றதொரு நூல் வேறு எந்தமொழியிலும் இல்லையென்று பல மொழிகளை அறிந்தவர் கூறுகின்றனர். பலமொழிகளில் இதனை மொழிபெயர்த்திருக்கின்றார்கள். வடமொழியில் அறத்துப்பாலை மாத்திரம் மொழிபெயர்த்து, 'நீதிகுஸுமமாலா' என்று ஒருவர் வெளியிட்டிருக்கிறார். அதனையன்றிக் குறள் முழுவதையும் என்னுடைய நண்பராகிய தியாக சமுத்திரம் ஸ்ரீ சக்கரபாணி ஐயரென்பவர் பல வருஷங்களுக்கு முன்பு வடமொழிச் சுலோகங்களாக மொழிபெயர்த்தமைத்திருக்கின்றார். அப்புத்தகம் இன்னும் அச்சிடப்படவில்லை.

## திருவள்ளுவர் வரலாற்றுச் செய்திகள்

இத்தகைய சிறந்த நூலை இயற்றிய திருவள்ளுவரது வரலாறு ஒரு வரையறையாக வழங்கப்படவில்லை. அவருடைய பிறப்பைப் பற்றியும், சாதியைப்பற்றியும், ஆச்சிரமத்தைப் பற்றியும், ஒன்றுக்கொன்று வேறுபாடான செய்திகள் தமிழ் நாட்டில் உலாவுகின்றன. அவற்றை ஆராய்ந்து அறுதியிடுதற்குரிய கருவிகள் போதியனவாகக் கிடைக்கவில்லை. இக்குறை திருவள்ளுவர் திறத்தில் மட்டுமே அமைந்ததன்று; பெரும்பாலான தமிழ்ப் புலவர்களுடைய வரலாறுகள் இத்தகையனவே.

## திருவென்னும் படை

பலவகையான கொள்கையினரும் திருவள்ளுவரைத் தங்கள் தங்களைச் சார்ந்தவராகக் கூறுவதும் தங்கள்கூற்றுக்கு ஆதாரங்களை எடுத்துக்காட்டுவதுமாகிய இவை இப்புலவர் பிரான் எல்லோராலும் விரும்பப்படும் சிறப்பினரென்பதைத் தெரிவிக்கின்றன. சங்க காலத்துப் புலவர்களையும் நூல்களையும் முற்காலத்தினரும் பிற்காலத்தினரும் வழங்கும்போது திருவென்னும் அடைகொடுத்து வழங்கியதாகக் காணோம். ஆயினும் வள்ளுவரையும், குறளையும் திருவள்ளுவரென்றும்,

திருக்குறளென்றும் கூறுகின்றோம்.[1] திருவென்பதற்குத் திருக் கோவையாரின் உரையில் பேராசிரியர், கண்டாரால் விரும்பப் படும் தன்மை நோக்கமென்று உரை கூறுகின்றார். வள்ளு வரும் அவர் வாய்மொழியும் யாவராலும் ஒருங்கே விரும்பப் படுவதனால் திருவென்னும் அடைமிக்க பொருத்தமுடை யதே. இவருக்கு அமைந்த பல பெயர்கள் இவருடைய சிறந்த இயல்புகளை வெளிப்படுத்துகின்றன.

## திருவள்ளுவர் - ஆகுபெயர்

திருவள்ளுவரைப் பற்றிய வரலாறுகள் ஒருபால் இருப்ப, நமக்கு இப்போது பயன்படுவது திருக்குறளாகிய திருவள்ளு வரேயாம். தமிழில் கருத்தாவாகு பெயருக்கு உதாரணமாகத் திருவள்ளுவரென்பதையன்றி நூல்வழக்கில் வேறு ஆட்சி இப்போது கிடைக்கவில்லை. அகத்தியம், தொல்காப்பிய மென்பன ஈறுதிரிந்த பெயர்களாக உள்ளன. ஆசிரியர் பெயரை உள்ளவாறே கூறி நூலை உணர்த்தும் இயல்பு அவற்றுக்கு இல்லை. எனவே, திருக்குறளைப் பற்றிப் பேசினாலும், ஆகு பெயர்ப் பொருளால் திருவள்ளுவரைப் பற்றிப் பேசியதாகவே அமையும்.

## சிறப்பியல்புகள்

ஏனைய தமிழ்நூல்களிற் காணப்படாத சில சிறப்பியல்பு கள் திருக்குறளுக்கு உண்டு. நூற்பயனாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றைத் தெளிவாகக் கூறிய நூல்களுள் குறளுக்கு ஈடானது வேறு இல்லை. சங்க மருவிய பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்பவற் றுள் திருக்குறளைப்போல் 1330 செய்யுட்களையுடைய நூல் வேறொன்று இல்லை; குறட்பாவில் அமைந்ததும் இல்லை.

திருக்குறள் தமிழ்ச் செய்யுட்களில் முதற்பாவாகிய வெண்பாவில் முதல் வகையாகிய குறட்பாக்களாலாகிய சிறப்புடையது; இச் சிறப்பே இந்நூலுக்குப் பெயரைத் தந்தது.

பழைய காலத்து நூல்களில் நாலடியாரும், ஆசிரியமாலையும், கலித்தொகையும், பரிபாடலும், பட்டினப்பாலையாகிய வஞ்சிநெடும்பாட்டும் யாப்பாற் பெயர்பெற்றன. ஆயினும் நாலடியாரையன்றி எத்தனையோ நாலடிப்பாட்டுக்கள் உள்ள நூல்களும், ஆசிரிய மாலையையன்றி வேறு பல ஆசிரியப்பா நூல்களும், கலித் தொகையன்றிக் கலிப்பாவால் அமைந்த நூல்களும் முற் காலத்து இருந்தன. முதற்சங்கத்தில் எத்தனையோ பரிபாடல் நூல்களும், பல வஞ்சிப்பாட்டுக் களும் இருந்தனவென்று அறிகின்றோம். ஆனால் குறட் பாக்களால் வேறு ஒரு பெரிய இலக்கிய நூல் முன்பு இருந்த தாகத் தெரியவில்லை. இலக்கண நூல்கள் மட்டும் சில இருந் தனவென்று யாப்பருங்கல விருத்தியால் தெரிகின்றது.

## திருவள்ளுவமாலை

திருக்குறளைப் பாராட்டும் திருவள்ளுவ மாலையென்ற ஒரு நூல் இருக்கின்றது. அதிலுள்ள செய்யுட்களைப் பல புல வர்கள் பாடியுள்ளார்கள். அந்நூலைப் பாடியவர்கள் யாரா யினும் அது பல நூற்றாண்டுகட்கு முன்பே உண்டாயிற்றென் பதற்கு [2] நேமிநாதவுரை முதலிய நூல்களில் போதிய ஆதாரம் இருக்கின்றது. இங்ஙனம் ஒரு நூலைச் சிறப்பித்துப் பாடிய தனி நூலொன்று வேறு எந்தநூலுக்கும் முற்காலத்து அமைய வில்லை.

## உரைகள்

திருக்குறளுக்கு உரை வகுத்தவர் பதின்மரென்று ஒரு தனிப்பாடல் கூறுகின்றது:

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை கண்டா ரிவர்

என்பது அப்பாடல். இங்ஙனம் பதின்மர் உரையெழுதிய நூலும் வேறொன்று இல்லை. அந்தப் பதின்மருடைய உரைகளும் இக் காலத்தே கிடைக்கவில்லை. இப்போது கிடைக்கும் உரைகளுள் பரிமேலழகர் உரையே மிகச் சிறந்தது. மணக்குடவர் உரையும் இக்காலத்து வழங்குகின்றது. [3]பரிப்பெருமாளென்பவரது உரையொன்று சிலர்பால் உண்டென்று தெரிகிறது. இப்பதின்மர் உரைகளும் இந்நூலுக்கு உண்டு.

இந்நூலுக்கு நேரே உரை இயற்றினார் இங்ஙனம் பலராக, வேறு பல உரையாசிரியர்கள் தங்கள் எழுதிய பிறநூலுரைகளிலே வாய்ப்பு நேர்ந்த இடங்களில் திருக்குறட் பாக்கள் சிலவற்றுக்கு உரையிட்டுச் செல்கின்றனர். பேராசிரியர், நச்சினார்க்கினியர், சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர், அடியார்க்கு நல்லார் முதலியவர்களுடைய உரைகளில் சில குறள்களுக்கு உரைகளைக் காணலாம். அவர்கள் கூறும் உரைகளிற் பரிமேலழகருரையோடு மாறுபட்ட பகுதிகளும் உண்டு. ஒரு நூலின் ஆசிரியர் காலத்திலேயே அதற்கு உரை அமைந்திருப்பின் இத்தகைய மாறுபாடுகள் உண்டாகக் காரணமில்லை. பிற்காலத்தில் வந்த உரையாசிரியர்கள், நூலாசிரியருடைய கொள்கையை முற்றும் உணர்தல் இயலாது. ஆதலின் அவர்களுடைய உரைகளிற் சிலமாறுபாடுகள் இருத்தல் கூடும். அவர்கள் செய்த பனைத்துணை நன்றியினால் தினைத்துணையாகிய அம்மாறுபாடுகளை நாம் மறந்து விடுகின்றோம்.

சங்கர நமச்சிவாயர் நன்னூலுரையில் [4]இசையெச்சம் என்னும் இலக்கணத்துக்கு உதாரணமாக, 'இணரெரி தோய்வன்ன' என்னும் திருக்குறளை எடுத்துக்காட்டி மிக அழகாக விரிவுரை எழுதியிருக்கின்றார்.

## செய்யுளுருவ உரைகள்

ஒரு செய்யுள் நூலுக்கு வசனத்தில் உரை இயற்றுவதோடு செய்யுளுருவத்திலேயே உரை இயற்றுவதும் உண்டு. இது வடமொழியிற் பெருவழக்கு. தமிழ் நூல்களிலும் சிவஞானபோதத்துக்குரிய உதாரண வெண்பாக்களும், சித்தி

யார் முதலியனவும் உரை நிலையிலேயே உள்ளன. தேவாரப் பதிகங்களில் திருப்பாசுரம் முதலிய சிலவற்றுக்குப் பெரிய புராணத்தில் சேக்கிழார் உரைவிரித்துச் செல்கின்றார். இவற்றைப்போலவே திருக்குறளுக்கும் செய்யுளுருவத்தில் உரையுண்டு. தனியே குறளுரையென்றும் பெயர் பெறாவிட்டாலும் அவை உரைகளின் தன்மையை உடையனவே.

இரங்கேச வெண்பா, சிவசிவ வெண்பா, தினகர வெண்பா, வடமலை வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா முதலியன திருக்குறளுக்கு உதாரணம் கூறும் நூல்கள். உரை வகைகளிலே உதாரணம் கூறுதலும் ஒன்று. ஆதலின் முற்கூறிய நூல்கள் திருக்குறளின் உரை நூல்களென்றே கூறல் தகும்; சினேந்திர வெண்பாவென்னும் ஒரு நூல் சைனப் பெரியாரொருவரால் இயற்றப்பட்டதென்றும் அதில் ஒவ்வொரு குறளுக்கும் ஒவ்வொரு வரலாறு உதாரணமாகக் காட்டப்பெற்றுள்ளதென்றும், 1330 குறளுக்கும் 1330 வெண்பாக்கள் அந்நூலில் உள்ளனவென்றும், பல வருஷங்களுக்குமுன் வேதாரண்யத்திலிருந்த சைன நண்பரொருவர் கூறக் கேட்டிருக்கின்றேன்; அவர் அந்நூலிலுள்ள சில வெண்பாக்களையும் சொல்லிக் காட்டினார். முதுமொழி மேல்வைப்பு என்று ஒரு நூல் உள்ளது. அதில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பாலென்னும் மூன்றுக்கும் திருக்குறளாகிய திருவள்ளுவப் பயனையும், வீட்டுப் பாலுக்குச் சித்தாந்த சாத்திரமாகிய திருவருட் பயனையும் அமைத்த செய்யுட்கள் உள்ளன.

இவற்றையன்றித் தமிழ் நூலாசிரியர்கள் பலர் திருக்குறட் கருத்துக்களை மனத்திற் கொண்டு அவற்றுக்கு உரை கூறுவார் போலத் தம் நூல்களிற் பல செய்யுட்களை அமைத்திருக்கின்றார்கள்.

ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன

செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே யாயிழை கணவ

*என்னும் புறநானூற்று அடிகள்,*

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

*என்னும் அருமைக்குறளின் விரிவுரையைப் போல விளங்குதல் கவனிக்கத்தக்கது. அக் குறளுக்கு உரைவகுத்த பரிமேலழகர், 'எந்நன்றி கொன்றார்க்கும்' என்பதற்கு, 'பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும்' என்று பதவுரை எழுதிவிட்டு விசேடவுரையில், 'பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தப்புதலும் முதலிய பாதகங்களைச் செய்தல்' என்று எழுதினார். முற்கூறிய புறநானூற்றின் அடிகளையே அவர் எளிதில் உரை நடையிற் கூறியிருத்தல் காண்க.*

*'இடுக்கண் வருங்கால் நகுக அதனை, அடுத்தூர்வதஃது ஒப்பதில்' என்னும் குறளுக்கு உரைபோல,*

இடுக்கவந் துற்ற காலையெரிகின்ற விளக்குப்போல
நடுக்கமொன் றானுமின்றி நகுகதாம் நக்க போழ்தவ்
விடுக்கணை யரியு மெஃகா மிரந்தழு தியாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறங்க ளன்றே

*என்னும் சிந்தாமணிச் செய்யுள் அமைந்திருக்கின்றது.*

தொழுததங் கையி னுள்ளும்
துறுமுடி யகத்துஞ் சோர
அழுதகண் ணீரி னுள்ளும்
அணிகலத் தகத்து மாய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும்
படையுட னொடுங்கும் பற்றா
தொழுகயார் கண்ணுந் தோற்றம்
தெளிகுற்றார் விளிகுற் றாரே

*என்னும் சிந்தாமணிச் செய்யுள்,*

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து

*என்னும் குறளின் விரியென்று கூறலும் வேண்டுமா?*

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்

*என்னும் குறளுரையில் பரிமேலழகர், 'அதுதானும் தீங்கு பயவாதாயின் மெய்ம்மையாம் பயப்பிற் பொய்ம்மையாம்' என்று எழுதியுள்ளார். வாய்மைச் சொல்லும் தீங்கு பயப்பதாயின் பொய்ம்மையாகுமென்று அவர் வசனத்தாற் கூறிய அவ் வுரையையே வேறுவகையில் அழகிய செய்யுளுருவத்தில் சிவப்பிர காச சுவாமிகள்,*

வாய்மை யெனினும் புலரியைக்
கூறுதல் வாரணங்காள்
சேய்மை யுறுநங் கொழுநர்தங்
கூட்டஞ் சிதைத்தெமக்குத்
தீமை பயந்தமை யால்வெங்கை
நாயகர் செய்தவறத்
தூய்மை யுணர்ந்தவர் வாய்மையன்
றாமெனச் சொல்லுவரே

*என்று அமைத்திருக்கின்றனர்.*

*விநாயகபுராணம், அரசியற் படலத்தில் குறட்பாக்கள் பலவற்றுக்கு உரை காணலாம். இங்ஙனம் அமைந்த தமிழ் நூற்பகுதிகள் அளவில.*

## *பிற சிறப்புக்கள்*

*குறட் கருத்துக்களை எடுத்தாளாத தமிழ் நூலே இல்லையென்று கூறுவது மிகையாகாது. தமிழ்ப்புலவர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட நூல்களில் திருக்குறளே முதன்மை வாய்ந்ததென்பதில் ஐயமில்லை. நீதிநெறி விளக்கம் குறட் கருத்தைச் சுருக்கமாக வேறு உருவத்தில் அமைத்துச் சொல் லும் நீதி நூலாகும். கும்பகோணம் காலேஜில் தமிழ்ப்பண்டி*

தராக இருந்த ஸ்ரீமான் சி. தியாகராஜ செட்டியார் அந்நூலை, 'நீதிநெறி விளக்கம் குறள் பருவத்தில் பெற்ற பிள்ளையைப் போன்றது' என்பர்.

திருக்குறள் தமிழுக்குச் சிறப்பாக அமைந்த நூலென்பது, 'அகரமுதல' என்று தமிழ் நெடுங்கணக்கின் முதலாகிய அகரத்தில் தொடங்கி, 'ஊடுதல் காமத்துக்கின்ப மதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்' என்று ஈறாகிய னகரத்தில் முடிந்தமையால் பெறப்படுகின்றது.

தமிழ் என்னும் சொல்லில் ழகரமாகிய தமிழ்ச் சிறப்பெழுத்து ஒன்று அமைந்திருப்பது போலக் குறள் என்பதில் றகரமாகி சிறப்பெழுத்து அமைந்திருக்கின்றது.

## ஏழில் ஒன்று

தமிழ் நூல்களிற் சிறந்தனவென்று சில நூல்களைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்துச் சிலர் சில செய்யுட்களின் வாயிலாகத் தெரிவிக்கின்றனர். அவர்கள் தங்கள் தங்கள் மனத்துக்கு உவந்த சிலவற்றைக் கூறியிருத்தலின், ஒருவர் கருத்தோடு வேறொருவர் கருத்து வேறுபடுகின்றது. ஆயினும், அங்ஙனம் கூறும் பலருடைய செய்யுட்களிலும் திருக்குறளின் பெயர் காணப்படுகின்றது.

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்

என்பது நல்வழிப்பாட்டு. இதில், குறள், வேதாந்தம், தேவாரம், முனிமொழி, திருக்கோவையார், திருவாசகம், திருமந்திரம் என்னும் ஏழும் ஒருதன்மையின வென்பது கூறப்பட்டிருக்கிறது. முனிமொழியென்ற தமிழ் நூலொன்றை நான் திருமலைராயன் பட்டினத்திற் சிலவீடுகளிற் பார்த்திருக்கிறேன். இதிற் கூறப்பட்ட ஏழு நூல்களில் குறள் தலைமை பெற்று விளங்குகின்றது.

### ஆறில் ஒன்று

வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை – ஒள்ளிய சீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறும்
தண்டமிழின் மேலாந் தரம்

என்பது ஒரு சைவப் பெரியாரது வாக்கு. தண்டமிழில் மேலாம் தரத்து நூல்களாகிய ஆறனுள் திருக்குறள் முதன்மை பெற்றுள்ளது.

### நான்கில் ஒன்று

திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம் – உருத்தக்க
கொங்குவேள் மாக்கதையைக் கூறேம் குறளனுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு

என்பதில் எதிர்மறை முகத்தினாற் சிறப்பித்த நூல்கள் நான்கு. சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், பெருங்கதை, திருக்குறளென்னும் இவற்றுள் திருக்குறள் முடிபாக மிளிர்கின்றது.

### மூன்றில் ஒன்று

பிற நூல்களில் விளங்காத விஷயங்கள் 'தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார், மூன்றினும் முழங்கும்' என்று இலக்கணக் கொத்துடையார் பாராட்டுகின்றார். அவர் கூறும் மூன்று நூல்களில் திருக்குறள் நடுநாயகமாக உள்ளது.

### இரண்டில் ஒன்று

'நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' என்னும் பழமொழியில் நாலடியாரும் குறளும் குறிக்கப்படுகின்றன. இவ்விரண்டிலும் குறள் ஒன்றாக அமைந்திருக்கின்றது. இத்தகைய பெருஞ் சிறப்பை வேறு எந்தநூல் பெற்று விளங்குகின்றது.

### திருமால் உவமை

திருக்குறளைத் திருவள்ளுமாலை பலபடப் பாராட்டுகின்றது. அது வேதத்தைப் போன்றதென்றும், மூவேந்தர் முடி

யிற் சூடும் மாலைபோன்றதென்றும், முப்பாலில் நாற்பால் மொழிவதென்றும் சிறப்பிக்கின்றது. ஒரு செய்யுளில் குறளை அந்நூல் திருமாலோடு உவமிக்கின்றது: திருமால் தம் திருவடிகள் இரண்டாலும் புறத்தே தோன்றும் உலகத்தை அளந்ததுபோலத் திருக்குறள் தன் அடி இரண்டாலும் மக்களின் அகத்தே தோன்றுவனவற்றை யெல்லாம் அளந்ததென்பது அச்செய்யுளின் கருத்து. துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வெங்கையுலாவில் இங்ஙனமே இந்நூலுக்கும் திருமாலுக்கும் ஒப்புக் கூறுகின்றனர். அங்கே அவர் கூறும் பொதுத் தன்மை வேறு. திருவள்ளுவர் ஒரு பொருளை வற்புறுத்தும் பொருட்டுத் பத்து முறை கூறியது போலத் திருமால் ஒரு கருத்தை வற்புறுத்தப் பத்து அவதாரமெடுத்தாரென்பது அப்பகுதியின் கருத்து.

## பிற புகழுரைகள்

சீத்தலைச் சாத்தனார் மணிமேகலையில் "பொய்யில் புலவன் பொருளுரை" என்று குறளைப் பாராட்டுகின்றார். சிவப்பிரகாசர் நவத்தமிழ் வேதமென்று போற்றுகின்றார். தமிழ் விடுதூது என்னும் ஒரு பிரபந்தம் தமிழைக் குழந்தையாக உருவகம் செய்து வருணிக்கையில், "முப்பாலும் மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்" என்று சொல்லுகின்றது. குழந்தையின் வளர்ச்சிக்குப் பால் எங்ஙனம் உதவுமோ, அங்ஙனமே தமிழின் வளர்ச்சிக்குக் குறள் மிக உதவுகின்றது என்னும் அரிய கருத்து இதனால் வெளியாகின்றது. இவ்வாறே குறளைப் பாராட்டிய நூற் பகுதிகளைத் தொகுத்துக் கூறுவதாயின், அது மிக விரியும்.

## குறள் நூலமைப்பின் சிறப்பு

குறளைப் பற்றிப் புறத்தே காணப்படும் செய்திகளைக் கொண்டு இதுகாறும் சில கூறப்பட்டன. இனி இந்நூலின் அகத்தேயுள்ள செய்திகளாற் பெறப்படுவனவற்றை துணையாகக் கொண்டு சில சொல்ல விரும்புகிறேன்.

திருவள்ளுவருடைய நூல் மிகச் சிறந்த அமைப்புடையது. மிக அரிய விஷயங்களை வரையறைப்படுத்திச் சுருக்கமாக இந்நூல் கூறுகின்றது. ஒரு பொருளின் இலக்கணத்தைக் கூறுதலும், அதன் இன்றியமையாமையை விளக்குதலும், அதனாற் பெறப்படும் பயனையறிவுறுத்தலும், அதனை நாம் மேற்கொள்ளுதற்குரிய தந்திரத்தை யுரைத்தலும், உலகத்திலுள்ள பொருள்களின் வாயிலாக உண்மையை நிரூபித்தலும், உவமைகளாலும் உதாரணங்களாலும் பொருளைப் புலப்படுத்தலும் திருவள்ளுவர் வழக்கங்களிற் சில.

மக்கள் விலக்க வேண்டியவற்றைப் பெரும்பாலும் அவையஞ்சாமை, அழுக்காறாமை, இடுக்கணழியாமை, இன்னாசெய்யாமை, கல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, கொல்லாமை, சிற்றினஞ்சேராமை, பயனில சொல்லாமை, பிறனில் விழையாமை, புறங்கூறாமை, பெரியாரைப் பிழையாமை, பொச்சாவாமை, மடியின்மை, வெகுளாமை, வெஃகாமை, வெருவந்த செய்யாமை என்பனபோல் எதிர்மறை முகத்தாற் கூறுதல் இவர் இயல்பு.

ஒரு நீதியை உடம்பாட்டு முகத்தாலும் மறைமுகத்தாலும் புலப்படுத்துவர். ஒரு நீதிக்கு மற்றொரு நீதியை உவமையாக வைத்து இரண்டையும் வற்புறுத்துவர். காமத்துப் பாலில் இடக்கர்ச் சொல்லே இல்லாமையும் பரத்தையிற் பிரிவை விளக்கமாகச் சொல்லாமையும் குறள் சிறந்த ஒழுக்க நூலென்பதைப் புலப்படுத்துகின்றன.

## திருவள்ளுவரது கல்வியார்வம்

குறளிலுள்ள பல பாக்களால் திருவள்ளுவர் கல்வியினிடத்தே மிக்க ஆர்வமுடையரென்பதும் புலவர்கள்பால் குறையாத அன்புடையவரென்பதும் பெறப்படும். கல்வியைப் பற்றிக் கூறவந்தவர் தாம் உரைக்கப் புகுந்த செய்திகள் பத்துக் குறளில் அடங்காமை பற்றிக் கல்வி, கல்லாமை, கேள்வியென்னும் மூன்று அதிகாரங்களால் உணர்த்துகின்றார். அன்றியும் அறிவுடைமை, சொல்வன்மை, அவையஞ்சாமை என்பனவும்

*கல்வியோடு தொடர்புடைய அதிகாரங்களேயாகும். இவ்வளவு மிகுதியாக வேறு எதனையும் இவர் வற்புறுத்தவில்லை. கல்லாதாரை விலங்குகளென்றும் குருடர்களென் றும் கூறும் வள்ளுவர் மதிநுட்பம் நூலோடுடையவரை மிகப் போற்று கின்றார். பல நூல்களைப் படித்துப் படித்து அவ்வின்பத் திலே இவர் திளைத்திருக்க வேண்டுமென்று தோற்றுகின்றது. நிரம்பிய நூலின்றிக் கோட்டி கொள்ளலை வெறுக்கும் இப் பெருநாவலர் பல நூல்களைப் படியாமல் இருத்தற்கு நியாய மில்லை யல்லவா? படிக்குந்தோறும் இன்பஞ் கண்டவராாத லினாலேதான் இவர் பண்புடையாளர் தொடர்பினால் வரும் இனிமையை, 'நவில்தொறும் நூல் நயம் போலும்' என்னும் உவமையால் விளக்குகின்றார். அங்ஙனம் மேலும் மேலும் படிக்கப் படிக்கத் தோன்றும் நயத்தில் உள்ளம் உருகி, 'இதுகாறும் இதனை அறிந்திலேமே' என்று இரங்கி னார். இங்ஙனம் இப்பொதுமறைப் புலவர் இரங்கும் காட்சி.*

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு

*என்னும் காமத்துப்பாற் குறளைப் படிக்கும்போது நம் அகக் கண்ணுக்குப் புலனாகவில்லையா?*

*பற்றற்று மெய்ப்பொருள் கண்டு பிறப்பறுக்கும் துறவற வியலிலும் அம் மெய்ப்பொருள் காண்டற்குக் கல்வி பெருந் துணையாகுமென்பதை,*

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி

*என்று வற்புறுத்தும் திருவள்ளுவர் கல்வியினும் சிறந்ததொரு பொருள் உலகத்தில் இருப்பதாக எண்ண இடமில்லை. அதனாலேதான் அதனைச் சாந்துணையும் கற்க வேண்டு மென்று விதிக்கின்றார்.*

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு

என்னும் குறளைக் காண்க. அங்ஙனம் கற்றவன் ஒரூருக்கு மட்டும் உரியோனல்லன்; ஒரு நாட்டுக்குமட்டும் உரியோனல்லன்; எல்லா ஊருக்கும் எல்லா நாட்டுக்கும் உரியனென்ற கருத்துக்கள் இக்குறளில் அமைந்துள்ளன. இக்குறளுக்குத் திருவள்ளுவரையே உதாரணமாகக் கூறிவிடலாம். இவருடைய புகழுடம்பு இப்போது இவ்வுலகத்துக்கே பொதுச் செல்வமாக நிலவுகின்றதன்றோ?

## பலநூற்கல்வி

திருவள்ளுவர் பல மொழி நூல்களையும் பல சமய நூல்களையும் ஆராய்ந்தவரென்பதை அவற்றிலுள்ள கருத்துக்கள் திருக்குறளில் அங்கங்கே அமைந்து விளங்குவதனால் அறியலாம் அன்றியும், இவருடைய வாக்கிலிருந்தே இவர்மதி நுட்பம் நூலோடுடையவரென்பதை உணரலாம்.

நீத்தார் பெருமையை விளக்க வந்த தெய்வப்புலவர்.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு

என்று அருளினர்.

இங்கே பனுவல்களின் துணிவு இதுவென்று அறுதியிட்டுரைத்தமையால் அப்பனுவல்களை இவர் ஆய்ந்தறிந்தனரென்பதற்கு இக்குறளே சான்று பகர்கின்றது;

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு

என்ற குறள் உலகத்திலுள்ள பலவகைப்பட்ட கொள்கையுடையார் நூல்களிலும், இப்பொய்யில் புலவர் அறிவுடையரென்பதைத் தெளிவுறுத்துகின்றது. அரணைப்பற்றி,

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல்

என்றமையால் இவர் பொருள் நூல்கள் பலவற்றை ஆய்ந்துள்ளவரென்பது புலப்படும்.

நூலோர் வளிமுதலா வெண்ணிய மூன்று

என்பதனால் இவர் மருத்துவ நூல்களையும் ஆராய்ந்தவரா தலை யுணரலாம்.

தொல்காப்பியத்தை ஆய்ந்தறிந்த இவர், அதன்கண் மந்திரமென்பதன் இலக்கணத்தை உணர்த்தும்,

நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப

என்னும் சூத்திரத்தை,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

என்னும் குறளிலே கோத்து நன்கு அழகு படுத்தியிருக்கின்றார்.

## புலவர்பால் அன்பு

இங்ஙனம் நிரம்பிய நூல்வல்லராகிய திருவள்ளுவர் பிற புலவர்களிடத்தே அன்புடையவராக இருந்தார். அவர்களோடு பழகுதலை இன்பமாகவும் அவர்களைப் பிரிதலைத் துன்ப மாகவும் உணர்ந்தார்.

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்

என்பதில் இக்கருத்தைக் காண்க. அவர்களுடைய் பகை மிக்க கொடிதென்பதை,

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை

என அறிவுறுத்துகிறார்.

## வறுமைக் கொடுமை

புலவர்மாட்டு இத்தகைய பேரன்புடைய இப்பெரியார் அப்புலவர்பால் வறுமை குடி கொண்டிருத்தலையறிந்து மிக வருந்தி இரங்கினார்.

பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு

என்பதில் வறுமையானது அறிவுடையார் அவ்வறிவினையும் மறந்தொழுகச் செய்யும் கொடுமையையுடைய தென்பதைக் குறிப்பிடுகின்றார். புலவர்கள் இங்ஙனம் இருக்கும் உலக இயல்பை,

இருவேறு றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு

என்று நொந்துகூறுகின்றார். அத்தகைய புலவர்களை இரந்துண்டு வாழ வைத்த கொடுமையால்,

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்

என்று பிரமனுக்குச் சாபங் கொடுக்கின்றார். இவருடைய வெறுப்பு முழுவதும் சேர்ந்து, 'இன்மை யெனவொரு பாவி' என்று வையும் பாட்டில் வெளிப்படுகின்றது.

## அழுக்காற்றை வெறுத்தல்

வறுமையைப் பாவி யென்று வைத்தது போலவே அழுக்காற்றையும் பாவியென வெறுக்கின்றார்.

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்

என்று கூறுவதைக் காண்க. இதனால் பொறாமைக் குணத்தையும் இவர் அதிகமாக வெறுத்தாரென்று தெரிகிறது. உலகத்தினர் ஒருவரை இழித்துரைக்கும்போது, 'துணிக்கும் பிண்டத்துக்கும் இல்லாமல் நாசமாகப் போகவேண்டும்' என்று வைகின்றார்கள். இதே வெறுப்போடு அழுக்காறுடையாரை,

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும்

என்று அழகிய மொழிகளால் இவர் திட்டுகின்றார். ஒழுக்கமில்லான்கண் உயர்வில்லை யென்பதற்கு அழுக்காறுடை

யான்கண் ஆக்கமிலாமையை உவமை கூறும்போது இவருக்கு அதன்பாலுள்ள வைரம் நன்கு காணப்படுகின்றது. இது மட்டுமா? அறத்திற்குக் குறைபாடுகளென்று கூறும் நான்கனுள்,

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்

என்று தெரிவிக்கையில் அழுக்காற்றை முதலிற் கூறி அதன் இழுக்கை மிகுதிப்படுத்திக் காட்டுகின்றார்.

## சமற்காரம்

சமற்காரமாக நீதியைக் கூறும் இடங்கள் திருக்குறளில் பல உண்டு.

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு

என்பதில் ஒருவன் விருந்தோம்பி வாழ்வானாயின் அவனே இன்னும் சிறந்த நிலைமையுடையாருக்கு விருந்தினனாவா னென்று கூறும் முகத்தால் சுவர்க்கபோகத்தை அவன் பெறுதல் குறிப்பிக்கப்படுகிறது.

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி

என்பதில் காதில் தொளையிருந்தும் பயனில்லை. மேலே கேள்வியால் தொளைக்கப்பட்டால்தான் அது மெய்த்தொளை யாகும் என்று விளக்கும் வாயிலாகக் கேள்வியின் இன்றிய மையாமையை உணர்த்துகிறார்.

'கயவர் நன்றறிவாரைக் காட்டிலும் திருவுடையார்' என்று வள்ளுவர் கூறும்போது, இது விபரீதமாக இருக்கின் றதே என்று வியப்படைகிறோம். அடுத்து, 'நெஞ்சத்து அவல மிலர்' என்று முடிக்கும்போதுதான் திருவள்ளுவருடைய கருத்துப் புலப்படுகின்றது. இவருடைய சமத்காரத்தை வியக் கின்றோம்.

'தேவ ரனையர் கயவர்' என்று பொய்யில் புலவர் சொல்லும்போது, 'தேவரை அலட்சியம் செய்கின்றாரா அல்லது கயவரை உயர்த்துகின்றாரா?' என்று யோசனை செய்கின்றோம். 'அவரும் தாம் மேவன செய்தொழுகலான்' என்று காரணம் காட்டும்போதுதான் புலவருடைய புலமைத்திறன் மனத்தைக் கவர்கின்றது.

## வேத வழக்கு

வேத வழக்கொடு இயைந்த பல செய்திகள் திருக்குறளில் உள்ளன. நித்திய நைமித்திக பூசைகள், நான்கு ஆச்சிரமம், ஐவகைக் கடன்கள், அந்தணர் முதலியோர் ஒழுக்கம், வேதம் முதலியவற்றைப்பற்றிய செய்திகள் பலவகையில் இணைக்கப் பட்டிருக்கின்றன.

திருமால் உலகளந்த செய்தியும் தாமரைக் கண்ணனாதலும் உணர்த்தப்படுகின்றன. திருமகளும் அவள் தவ்வையும் இணைத்துச் சிலவிடங்களில் கூறப்படுகின்றனர். 'தாமரையாள்' என்று திருமகளை ஓரிடத்திற் குறிக்கின்றார். பிரமதேவனை, 'உலகியற்றியான்' என்கின்றார். இந்திரனைப் பற்றி இரண்டிடங்களிற் கூறுகின்றார்.

இம்மை, மறுமை, வீடு என்னும் இம்மூன்றும் திருவள்ளுவர்க்கு உடம்பாடு. சுவர்க்கத்தைப் புத்தேளுலகமென்றும், மேலுலகமென்றும், வானமென்றும் கூறுவர்; தேவரை அவியுணவின் ஆன்றோரென்பர். இல்லறஞ் செய்தலின் பயன் சுவர்க்கத்தோடு நிற்குமென்பதும் துறவறமே வீட்டுக்குக் காரணமென்பதும் இவருடைய கொள்கையென்று தோற்றுகின்றது. இல்லறம் புரிந்து பின் நெறியாகத் துறவறம் பூணுதலை, 'ஒழுக்கத்து நீத்தார் பெருமை' என்னும் குறளால் அறிவிக்கின்றார்.

'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்று பிறவாமையையே தனி வேட்கையாகக் குறிக்கின்றார். மற்றீண்டு வாரா நெறி ஒன்று உண்டென்பதையும், அது துறவியர்களுக்குரியதென்பதையும் தெளிவுறுத்துகின்றார்.

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்

என்பதில் சுவர்க்க போகத்தினும் உயர்ந்த வீட்டுலக முண்மை யையும் அது துறவுள்ளத்தினார்க்கே எய்தலாவ தென்பதை யும் உணர்த்துகின்றார். துறவின் சிறப்பு நோக்கியே, நீத்தார் பெருமையைப் பாயிரத்துட் கூறினாரென்று தோற்றுகின்றது.

சுவர்க்கத்தைப்பற்றிச் சொல்லும் இவர், நரகத்தைப் பற்றியும் சில இடங்களில் சொல்லுகின்றார். அதனை இருள் சேர்ந்த இன்னாவுலகம் என்றும், ஆரிருள் என்றும், அளறு என்றும் குறிக்கின்றார்.

## இல்வாழ்க்கை

இல்வாழ்க்கையைப் பற்றி இவர் கூறும் கருத்துக்கள் மிக அரியன. அவற்றின் திரண்ட பொருள், இல்வாழ்பவன் எல்லாவற்றையும் உபகாரம் செய்தே பயன்படுத்த வேண்டு மென்பதும், அவன் தன் உடலையும் பிறவற்றையும் பாது காத்தலும் அந்நோக்கத்துக்குத் துணையாக இருத்தல் வேண்டுமென்பதுமேயாம். இங்ஙனம் பிறர்க்குதவுதலே இல்லறத்துக்குச் சிறந்த கொள்கையென்பதை,

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு

என்பதில் விளக்குகின்றார். தலைமை வகையினால் இல்லறத் தைத் தானம் (கொடை) என்று குறிப்பித்தலும் இதனை வற்புறுத்தும்.

## உழவு

பொருள் ஈட்டுவதற்குரிய தொழில்களுள் உழவும் வாணிகமும் தலைமையானவன. இவற்றில் உழவு மிகச்சிறந்தது. அதனைப்பற்றி இவர் கூறியது ஓர் அதிகாரமேனும் அதிலுள்ள கருத்துக்கள் ஒரு பெரிய நூற்கருத்துக்களைப் போன்ற சிறப்

புடையன. உழவைப்பற்றிய செய்திகள் பல குறளில் அமைந் துள்ளன. இடும்பையைப் பொருட்படுத்தாமல் முயற்சி புரி பவரை, 'மடுத்தவா யெல்லாம் பகடன்னான்' என்றும் கம்பீர மான நடையை, ஏறுபோற் பீடுநடை' என்றும் கூறுவன வற்றுள் உழவர்க்குரிய பகட்டின் செய்திகள் வருகின்றன. அரசன் குற்றம் செய்தார்களை ஒறுத்தலுக்குப் பயிரிலுள்ள களையெடுத்தலை உவமை கூறுகின்றார். 'இளைதாக முண் மரங் கொல்க' என்று ஓரிடத்திற் சொல்கின்றார். 'வளர்வதன் பாத்தியுள் நீர்சொரிந்தற்று' என்றும், 'யாப்பினுள் அட்டிய நீர்' 'ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொல், நீராக நீளுமிந் நோய் ' என்றும் கூறுவனவற்றுள் நீர் பாய்ச்சும் தொழிலை உவமைப்படுத்துகின்றார். 'தொட்டனைத் தூறு மணற்கேணி', 'இறைப்பவர்க் கூற்றுநீர் போல மிகும்', 'குள வளாக்கோடின்றி நீர்நிறைந் தற்று என்பவற்றில் நீர் நிலை களைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

## குறிப்புகள்

1. திருச்சிற்றம்பலக் கோவையார், 1 உரை
2. நேமிநாதம், சொல்லதிகாரம் 5ஆம் சூத்திரத்தினுரையில், திருவள்ளுவமாலையிலுள்ள "உப்பக்க நோக்கி" என்ற செய்யுள் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.
3. இவரைப் பற்றிய செய்திகளை ஸ்ரீ பாஷா கவிசேகர மகா வித்துவான் ரா. ராகவையங்காரவர்கள் எழுதிய 'சேது நாடும் தமிழும்' என்னும் புத்தகத்தால் அறியலாம்.
4. சூத்திரம், 360

# 10

# திருக்குறள் விரிவுரை

*1939*

**திரு. வி.க.**

## தோற்றுவாய்

திருவள்ளுவர் என்னும் நினைவு தோன்றும்போதே உலகமும் உடன் தோன்றுகிறது. இவ்வாறு தோன்றுதற்குக் காரணமென்ன? காரணத்தைத் திருவள்ளுவர் அருளிய நூல் உணர்த்தும். அந்நூலே திருவள்ளுவரை உணர்த்துதற்குரிய கருவியுமாகும்.

திருக்குறளை ஆராய்ந்தால், அதன்கண் உலகமிருத்தல் நன்கு புலனாகும். திருவள்ளுவர், உலகையே திருக்குறளாக எழுதினார். உலகின் எழுத்தோவியம் திருக்குறள் என்று கூறலாம்.

திருவள்ளுவர் உலகுக்கென்றே பயின்றார்; உலகுக்கென்றே வாழ்ந்தார். அதனால் அவர்தம் உள்ளத்தில் உலகம் நின்றது. அவர் உலகமாயினர்; உலகம் அவராயிற்று. இத்

தகைய ஒருவரிடமிருந்து பரிணமித்த ஒரு நூல் எந்நினைவை யூட்டும்? அஃது உலக நினைவை யூட்டுதல் இயல்பே. ஆகவே, திருவள்ளுவர் நினைவு தோன்றும்போது, உலகமும் உடன் தோன்றுவதில் வியப்பொன்றுமில்லையென்க.

## உலகம்

உலகம் எது? இவ்வினாவிற்குச் செவ்வனிறை இறுத்தல் அரிது. உலகம் இதுவே என்று அறுதியிட்டுக் கூறல் இயலாது. உலகம் பலவிதம். ஒவ்வொருவர்க்கு ஒவ்வோர் உலகம் உண்டு. ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொருபோது ஒவ்வோர் உலகம் உண்டு என்று கூறல் மிகப்பொருத்தம்.

ஒருவர் தம் வாழ்வில் எத்துணையோ முறை பிறக்கிறார்; எத்துணையோ முறை இறக்கிறார். நொடிக்கு நொடி பிறப்பும் இறப்பும் உறுகின்றன. இந்நிகழ்ச்சியை உணர்ந்து நடப்போர் சிலரே.

ஒருவர் ஒன்றைப்பற்றி ஒருபோது எண்ணங் கொள்கிறார் அவரே அதைப்பற்றி வேறுபோது வேறுவித எண்ணங் கொள்வோராகிறார். இவ்வாறு எண்ணங்கள் தோன்றி நின்று மறைந்து வருகின்றன. தோற்றம் மறைவு என்றால் என்ன? பிறப்பு இறப்பு என்றால் என்ன? இரண்டும் ஒன்றே. 'நாளுநாள் சாகின்றாமால் நமக்குநாம் அழாத தென்னே' என்றார் வளையாபதியாரும்.

பருவுடல் தோன்றுவதும் மறைவதும் மட்டும் பிறப் பிறப்பாகா. எண்ணங்களின் எழுச்சியும் வீழ்ச்சியும் பிறப் பிறப்பின்பாற்பட்டனவே. இப்பிறப்பிறப்பு, மெய்யுணர்வு தோன்றும்வரை நிகழ்ந்துகொண்டே போகும். முகிழ்க்கும் ஒவ்வோர் எண்ணமும் ஒவ்வோர் உலகமென்க.

ஆதலால், உலகம் எது என்று எங்ஙனம் அறுதியிட்டுக் கூறுவது?

எண்ணமே உடலும் உலகுமாம். அடிப்படை எண்ணம். எண்ணத்தின்படியே எல்லாம் உருக்கொள்ளும். எண்ணம் நுண்மை; உரு பருமை.

## நாடு

உலகைப் பற்றிப் பலர் பலவாறு கூறுப. அவர்தங் கூற்றுக் களை எடுத்த பொருளுக்கேற்ப இங்கே முக்கூறுபடுத்திக் கொள்கிறேன். ஒன்று, உலகம் பூதங்களால் ஆக்கப்பட்ட தென்பது; இன்னொன்று, உலகம் நாடுகளால் (Nations) ஆக்கப்பட்டதென்பது; வேறொன்று, உலகம் கலைகளால் ஆக்கப்பட்டதென்பது. இம்மூன்றனுள் சிங்க் நோக்காக நிற்பது நாடு. நாடு ஒருவகையில் முன்னையதிலும், மற்றொரு வகை யில் பின்னையதிலும் ஒன்றும். நாட்டை வெறும் பௌதிக மாகப் பார்ப்பது ஒருவகை; அதைக் கலையாக நோக்கு வது இன்னொரு வகை.

நாடு என்பது வெறும் நிலப்பரப்பு மட்டுமன்று. அது கல்வி, தொழில், அரசு, நாகரிகம், வாழ்வு முதலியவற்றையுங் கொண்டது. நிலப்பரப்பு, பூதகாரியம், கல்வி, நாகரிகம், வாழ்வு முதலியன கலையின் பாகுபாடுகள். இவ்விரண்டை யுங் கொண்ட ஒன்றே நாடு என்பது.

## தமிழ் நாடு

உலகில் பல நாடுகளிருக்கின்றன. ஒவ்வொரு நாட்டுக்கு ஒவ்வொரு பெயருண்டு. நாட்டுப்பெயர்கள் பெரிதும் அவ்வந்நாட்டு மொழியினின்றும் அரும்பியன.

திருவள்ளுவர் தமிழ்நாட்டிற் பிறந்தவர்; தமிழ் மொழி யில் நூல் செய்தவர். அவர் நினைவு தோன்றும் போது தமிழ் நாட்டின் நினைவன்றோ தோன்றுதல் வேண்டும்? உலக நினைவு தோன்றுவதென்னை?

ஈண்டுத் தமிழ்நாடென்றது இப்போதுள்ள 'தமிழ் நாட்'டைக் குறிப்பதன்று. அது பழந்தமிழ்நாட்டைக் குறிப் பது. தமிழ்நாட்டுக்கு அடிகோலி, அதை ஆக்கிய பேரறிஞர் பரந்த நோக்குடையவர். அவர் உலகியலை நன்குணர்ந்தவர். உலகியலில் இருவிதச் சிறப்புக்களுண்டு. ஒன்று சிறியது; மற்றொன்று பெரியது. உலகியல், சாதி மதம் நிறம் மொழி நாடு முதலியவற்றிற் கலந்தும், இவற்றைக் கடந்தும் விளங்கு வது. சாதி மதம் மொழி நிறம் நாடு முதலியன கலந்தநிலை சிறியது; இவற்றைக் கடந்தநிலை பெரியது. சிறிய நிலை பன்மை; பெரிய நிலை ஒருமை. பன்மையில் ஒருமை காண முயல்வது அறிவுடைமை. பன்மையைப் பிரிவுக்கும் பிணக் குக்கும் இரையாக்குவது அறியாமை.

## பழந் தமிழர்

பழந்தமிழறிஞர் கருத்து, சிறிய பன்மையில் படியவில்லை. அவர்தம் நோக்கு, பெரிய ஒருமையில் சென்று ஒன்றியது. வேற் றுமை அவர்க்குப் புலனாகவில்லை; ஒற்றுமையே அவர்க்குப் புலனாகிறது. அவர் நடாத்திய வாழ்வு அத்தகையது.

பழந்தமிழர் மொழியில் ஈண்டு ஒன்று நினைவிற்கு வரு கிறது. அது வருமாறு:-

யாதும் ஊரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்

**காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்**
**பெரியோரை வியத்தலு மிலமே**
**சிறியோரை இகழ்த லதனினு மிலமே.**

*இப்புறப்பாட்டை உற்று உற்று நோக்குக; நோக்கி நோக்கி உன்னுக; உன்னி உன்னி அதில் ஒன்றுக. பாட்டுப் பொருளில் வேற்றுமைக்கு இடமுண்டோ? பிணக்குக்கு இடமுண்டோ? எல்லாம் ஒருமை! யாதும் ஊர், யாருவருங் கேளிர் (சுற்றத்தார்).*

*பழந்தமிழரது பரந்த நோக்கு என்னே! என்னே! அப் பழந்தமிழர் நாடு எங்கே? தமிழ் நாடே! உலகாக விளங்கிய தமிழ் நாடே! நீ யாண்டுச் சென்றனை? மீண்டும் எழுவையோ? பழந் தமிழே! உன் நாடு சிறுமண்ணாய்க் கிடக்கிறது; பிரிவுக் கும் பிணக்குக்கும் இரையாகிறது. அஃது உலகாக மீண்டும் விளங்குதல் வேண்டும்; திருவள்ளுவர் நாடாதல் வேண்டும்; 'யாதும் ஊரே - யாவரும் கேளிர்' என்ற உனது விழுமிய கொள்கைக்கோர் இலக்கியமாக நிற்றல் வேண்டும். 'யாதும் ஊரே - யாவரும் கேளிர்' என்ற உனது உள்ளுறையன்றோ இந்நாளில் 'சமதர்மம்' 'சமதர்மம்' (Socialism) என்று விரித்துப் பேசப்படுகிறது? பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே நீ சமதர்மம் பேசினை; சமதர்மத்தில் நின்றனை; வாழ்ந்தனை. இந்நாளில் உன்னிலை இரங்கத்தக்கதாயிருக்கிறது. உனது பழைமையைக் குறிக்கோளாகக் கொண்டு இக்காலத்தவர் வாழ்வு நடாத்துவாராக.*

## திருவள்ளுவர்

*திருவள்ளுவர் யார்? 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற சீரிய கொள்கை பிறந்த பெருந்தமிழ்க் குடியில் தோன்றி யவர். அவர் நெஞ்சம், சாதி மதம் நிறம் மொழி நாடு முதலிய சிறுமைக் கட்டுகளில் படிந்து கிடக்கவில்லை. அவர் நெஞ் சில் பரந்த உலகே படிந்து கிடந்தது. அது திருக்குறள் என்னும்*

நூலாக உருக்கொண்டது. இத்தகைய நூல் ஓர் இனத்துக் குரியதாகுமா? உலகுக்குரியதாகுமா? இப்பெரு நூலை அருளிய ஒருவர் ஓர் இனத்துக்குரியராவரா? உலகுக்குரியராவரா? எனவே, திருவள்ளுவர் நினைவு தோன்றும் போது உலகமும் உடன் தோன்றுதல் இயல்பே. இதில் வியப் பொன்றுமில்லை.

## மொழியும் பொருளும்

திருவள்ளுவர் தமிழ் நாட்டிற் பிறந்தவர். அவர்தந் தாய் மொழி தமிழ்; அவர் தமிழில் நூல் செய்தனர். நூலின் மொழி தமிழ்; பொருளோ உலகுக்குரிய ஒன்று. இது வெள்ளிடை மலை. இவ்வாறு நூல் செய்தோர் அரியர்; செய்வோரும் அரியர். இதுபற்றியே தமிழ்நாட்டுச் சமதர்மப் புலவராய், இற்றைஞான்று நமது நடுவண் வாழ்ந்த பாரதியார், 'வள்ளு வன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு' என்று வீறுகொண்டு மகிழ்ச்சியுடன் ஓதியருளினார்.

## வரலாறு

உலகுக்கு ஒரு நூலை அருளிய திருவள்ளுவரது உண்மை வரலாறு நமக்குத் தெரியவில்லை. 'இப்போது வழங்கி வரு உம் அவர்தம் வரலாறு, பின்னே புனையப்பட்டது. பல தமிழாசிரியரது வரலாறுகள் சரித்திர முறையில் நமக்குக் கிடைக்கவில்லை. இது நாடு செய்த பாவம். 'சரிதம்' என்னும் பெயரால் புனைந்துரைகளே பெரிதும் நாட்டில் உலவுகின் றன. அவரவர் அருளிய நூலைக்கொண்டே அவரவர் நிலை யை ஊகித்து உணரவேண்டுவது அறிஞர் கடமை.

திருவள்ளுவர் யாத்த திருக்குறள் என்னும் தமிழ்ப் பொது நிலையம் எல்லார்க்குங் காட்சி வழங்குகிறது. அந்நிலையத் தைப் பார்ப்போம்; அதனுள் புக முயல்வோம்; முயன்று புகுந் தால் திருவள்ளுவரைக் காணலாம். திருவள்ளுவர் இறந்து பட்டாரில்லை. அவர் உயிருடன் திருக்குறள் நிலையத்தில் வீற்றிருக்கிறார். உலகீர்! அவரைக் காண எழுக; எழுக.

## வைப்புகள்

ஒரு நிலையத்தில் புகுந்து, அதன்கண் வாழ்வோரைக் காணுதற்குப் பல வாயில்களைக் கடத்தல் வேண்டும் திருக் குறள் நிலையத்துக்கும் பல வாயில்களுண்டு. அவையே திருக் குறளிலுள்ள வைப்புகள். அவற்றைப் பார்ப்பதால், போற்று வதால், அல்லது ஓதுவதால் மட்டும் அவை திறந்து வழி காட்டா. அவற்றைப் பயின்று பயின்று, அவற்றின் பொருளை உணர்ந்து உணர்ந்து, அவற்றின்படி வாழ்வு நடாத்தல் வேண் டும். இவ்வாழ்வினரை வரவேற்க வாயில்கள் காத்துக்கொண் டிருக்கின்றன. வாயில்கள் வழிகாட்டும்; திருவள்ளுவரிடஞ் சேர்க்கும்.

## உரையாசிரியர்

திருவள்ளுவரைத் தாங்காணவும், பிறர்க்குக் காட்டவும் உழைத்தவர் பலர். பலருள் குறிக்கத்தக்கவர் பதின்மர். அப் பதின்மர் பெயர்களை,

> **தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்**
> **பரிமே லழகர் பரிதி – திருமலையர்**
> **மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்**
> **கெல்லை யுரையெழுதி னோர்**

என வரூஉம் வெண்பா தெரிவிக்கிறது.

பதின்மருள் முதல் முதல் உரை கண்டவர் தருமர். அவர்க்கே எல்லா வாழ்த்தும் வணக்கமும் உரியன.

இப்பொழுது அச்சாகி வெளிவந்துள்ள உரைகள் இரண்டு. ஒன்று மணக்குடவருடையது; மற்றொன்று பரிமே லழகருடையது.

பழைய உரைகளுள் இறுதியது பரிமேலழகருடையது. இதுவே பெரிதும் போற்றப்படுகிறது. பரிமேலழகர் பெருங் கல்வியாளர்; வடமொழி தென்மொழிப் புலவர். அவர்தம்

உரையில் அவரது காலத்துக்கேற்ற பொருள்களும், எக்காலத்துக்கு முரிய பொருள்களுமாக இரண்டுஞ் செறிந்து கிடக்கின்றன.

வேறு மொழிப் புலவர் சிலரும் திருவள்ளுவரைக் காண முற்பட்டனர். இன்னும் பலர் முற்படுதல் வேண்டும். திருவள்ளுவர் ஒளி, உலகம் முழுவதும் காணும் நாளே நன்னாளாகும். அந்நாள், யாதும் ஊராகவும் யாவருங் கேளிராகவும் பொலியுந்திருநாளாகும்.

திருக்குறளை யான் இளமையில் ஒருவாறு பயின்றேன். பின்னே மணக்குடவரும் பரிமேலழகரும் உதவியுள்ள உரைகளைத் துணையாகக் கொண்டு ஆய்ந்து ஆய்ந்து பார்த்தேன் இவ்விருவரும் தமிழ்த்தாய்க்கு ஆற்றியுள்ள தொண்டை எம்மொழியால் வழுத்தவல்லேன்! மனமொழி மெய்களால் இருவரையும் போற்றுகிறேன்.

காலத் திறவு

திருக்குறள் நிலையத்துக்கு இக்காலத்துக்குரிய திறவு ஒன்று வேண்டும் என்னும் உணர்வு பலரிடைஎழுந்ததை யான் அறிவேன். இவ்வுணர்வு அடிக்கடி என்பாலுந் தோன்றி நின்றழிந்ததுண்டு.

திருக்குறளுக்கு ஒரு புத்துரை காண்டல் வேண்டும் என்ற எண்ணம் முதல் முதல் எழுந்தபோது எனக்கு வயது முப்பத்தொன்றிருக்கும். இவ்வுரை எழுதப் புகுந்தபோது எனது வயது ஐம்பத்துமூன்று. இந்நாளில் யான் அந்நாளைய கலியாண சுந்தரனாயில்லை; அந்நாளைய கலியாணசுந்தரன் பெரிதும் ஏடுகளையே கட்டி அழுதவன்; ஏட்டுப்புழுவாயிருந்தவன். இப்பொழுது ஏட்டுக் கல்வி அவனை விடுத்து ஒருவுகிறது; இயற்கைக் கல்வி அவனைப் புல்குகிறது. இயற்கையின் உள்ளுறையாயுள்ள இறைக்கல்வியை அவன் வேட்டு நிற்கிறான்.

## இயற்கை வாழ்வு

யான் இப்பொழுது ஏட்டுக்கும் இறைக்கும் இடையில் நிற்கிறேன். இறையருள் கூடின் திருவள்ளுவரை நேரேகாணும் பேறு பெறுவேன்; மற்றவர்க்கும் அவரைக் காட்டுவேன். இறையருள் எனக்குக் கிட்டுமோ? கிட்டாதோ? அறிகிலேன்.

இயற்கை அன்னையின் திருவருளையாதல் யான் முற்றும் பெற்றேனா? இல்லை. நகர வாழ்வு அதைத் தகைந்து நிற்கிறது. நகர வாழ்வை விடுத்தால் சில சேவைகளுக்குத் தடை நேரும். என் செய்வேன்! பலதிற வேலைச் சூழலிடை மூழ்கி நிற்குஞ் சிறியேன், இயற்கை அன்னையின் திருவருட்டுணை கொண்டு, திருவள்ளுவரைக் காண ஒல்லும் வகை முயல்வேன்; வழுக்கியும் வீழ்வேன். யான் மனிதன்; குறையுடையேன்; சிறுமையுடையேன்; அறியாமையுடையேன்.

ஏட்டினின்றும் இயற்கையினிடமும், இயற்கையினின்றும் அதன் உள்ளுறையான இறையினிடமுஞ் செல்லுதல் வேண்டும். இஃதொருவித ஒழுங்கு முறை. இம்முறையைத் தொல்காப்பியனார் செவ்வனே கோலியுள்ளார்.

தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களால் ஆக்கப் பெற்றது. மூன்றனுள் எழுத்துஞ் சொல்லும் ஏட்டுக் கல்விக்குத் துணை செய்வன. பொருள் இயற்கை வாழ்வுக்குத் துணை செய்வது. இயற்கை வாழ்வு இறைவாழ்வைக் கூட்டுதல் இயல்பு. இம்முறை ஈண்டுக் கருதற்பாலது. இம்முறையால் திருவள்ளுவரை வழிபட முயல்கிறேன். இயற்கை அன்னையின் துணை வேண்டும்.

## நூல்

திருவள்ளுவர் அருளிய நூல் திருக்குறள்.

திரு+குறள்=திருக்குறள். திரு, பல பொருள் ஒரு சொல். இங்கே இரண்டு பொருள் குறிக்கத்தக்கன. ஒன்று செல்வம்;

மற்றொன்று அழகு. செல்வம்; அறம், பொருள், இன்பம். அழகு; கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம்; இது பேராசிரியர் கூறியது. குறளில் முச்செல்வமென்னும் அறம் - பொருள் - இன்பம் உண்மையானும், கண்டோரால் விரும்பப் படுந் தன்மை நோக்கமாகிய அழகு உண்மையானும் அது, திரு என்னும் பொருந்திய அடைபெற்றுத் திருக்குறள் என்று அழைக்கப்படலாயிற்று. திருவையுடைய குறள் என்று விரிக்க.

குறள் - குறுமை; குறுகியது. குறுகிய பா-குறட்பா. இது குறுவெண்பாட்டு என்றும், குறள் வெண்பா என்றுஞ் சொல் லப்படும். முதல் அடி நான்கு சீரும், இரண்டாம் அடி மூன்று சீருமாக ஏழு சீர் கொண்டது குறள் வெண்பா.

'குறுவெண் பாட்டிற் களவெழு சீரே'[3]

குறள் வெண்பாக்களால் ஆக்கப்பட்ட ஒரு நூல், 'குறள்' என்னும் பெயர் பெறலாயிற்று.

குறள் - குறுமை; பண்புப் பெயர்.

குறள், ஈரடி வெண்பாவுக்காம்போது பண்பாகு பெய ராய், இவ்வெண்பாக்களால் ஆக்கப்பட்ட நூலைக் குறிக்கும் போது கருவியாகு பெயராய், இருமடியாகு பெயராதல் காண்க.

## முப்பால்

திருக்குறள் முப்பாலுடையது. முப்பால், அறம் - பொருள் - இன்பம் என்பன. 'வீடு எங்கே? வீட்டைத் திருவள்ளுவர் தனியே வகுத்துக் கூறாது விடுத்த தென்னை?'

இதற்குக் கூறப்படுங் காரணம் பலப்பல. திருவள்ளுவர் வீட்டையுங் கூறினார் என்பதை நிறுவிக் காட்டுதற்கு, 'வீட்டுப் புலவோர்' படும்பாடு என்னே! அவர், 'கடவுள் வாழ்த்து', 'துறவு', 'நிலையாமை', 'மெய்யுணர்வு', 'அவா வறுத்தல்' முதலிய அதி காரங்களை எடுத்துக் காட்டுவர்; மூலை முடுக்குகளிலுள்ள

சில குறட்பாக்களையும் சொற்றொடர்களையும் சொற்களை யும் எடுத்துக் காட்டுவர். திருவள்ளுவர் மீது அவர் கொண் டுள்ள அன்பு பாராட்டற் குரியது. அவர் எடுத்துக்காட்டும் அகச்சான்றுகளெல்லாம் திருவள்ளுவர் வீட்டுண்மையில் உறுதியுடையார் என்பதை மறுப்பார் யார்? 'திருவள்ளுவர் வீட்டுக்கெனத் தனிப்பால் வகுத்துக் கூறாமைக்குக் காரண மென்னை' என்னும் வினாவிற்கு எடுத்துக்காட்டுக்களில் யாண்டாயினும் விடையிருக்கிறதா என்பது சிந்திக்கத்தக்கது.

## வீடு

வீடு, வாக்கு மனங்கட்கு எட்டாதது. அத்தகைய ஒன்றை எவ்வாக்கால் விளம்புதல் கூடும்? இதுபற்றியே பரிமேலழ கரும், 'வீடென்பது சிந்தையும் மொழியுஞ் செல்லாநிலை மைத்தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவ தல்லது. இலக்கண வகையாற் கூறப்படாமையான், நூல்க ளாற் கூறப்படுவன ஏனைய மூன்றுமே யாம்' என்று ஒருவாறு விளக்கிப் போந்தனர்.

அறவழி நின்று, பொருளாக்கி, இன்பம் நுகர்வோர் வீடு அடைதல் ஒருதலை. அறம் பொருள் இன்ப வாழ்வின் பயன் வீடு. அடைவாகவும் பயனாகவுமுள்ள ஒன்றை எப்படிச் சொல்லால் அறுதியிட்டுச் சொல்வது? வீடு, அறம் பொருள் இன்பங்களினின்றும் வேறுபட்டு நிற்பதன்று. அது மூன்றி னும் விராவி நிற்பது. திருக்குறளிலுள்ள ஒவ்வொரு பாலிலும் வீடு விராவியே நிற்கிறது.

வீடு, விடு என்னும் அடியினின்றும் பிறந்தது. விடுதலை வீடு. கட்டினின்றும் விடுதலையடைவது வீடு. வீடு எங்கிருப் பது? அதற்கென ஒரு தனியிடம் உண்டோ? கட்டுடையார்க்கு அது புலனாகாமையால், அவர் அதற்கென ஒரு தனியிடம் வகுத்தனர் போலும்! வீட்டை மறைத்திருப்பது கட்டு. கட்டு அறுந்ததும் வீடு பொருளாகும்.

### கட்டு

கட்டும், கட்டின் பாகுபாடுகளும் திருக்குறளில் சில விடங்களில் புகுந்திருக்கின்றன. 'இருள்சேர் இருவினை', 'அழுக்காறவா வெகுளி இன்னாச்சொல்', 'பிறப்பென்னும் பேதைமை', 'சார்புகெட', 'காமம் வெகுளி மயக்கம்', 'பற்று விடற்கு' என வரூஉம் திருக்குறள் மொழிகளை நோக்குக.

கட்டறுந்தால் மனம் மாசிலதாகும். மாசற்ற இடம் வீடாய்ப் பொலியும். இந்நிலையுற்றார்க்கு எல்லாம் வீடே. 'எந்நாளும் இன்பமே துன்பமில்லை' என்று அப்பரும், 'அரு நரகவையும் நீ' என்று நம்மாழ்வாரும், 'பரலோக ராச்சியம் உம்முடைய உள்ளத்திலிருக்கிறது' என்று கிறிஸ்து பெருமானும் அருளிய செம்மொழிகளை உன்னுக. இம் மொழிகளை இப்பெரியார் யாண்டிருந்து அருளினர்? இவ்வுலகத்தில் இருந்தே அருளினர். இவருக்கு இவ்வுலகம் எவ்வாறு தோன்றிற்று? வீடாகவே தோன்றிற்று. ஆதலால், வீடு என்பது ஓரிடத்தில் தனியே இருப்பதன்றென்க.

### பழைமை

கட்டையறுத்தற்கு அறவழியில் நின்று, கல்வி பயின்று, தொழில் புரிந்து, பொருளீட்டி, இன்பம் நுகர்தல் வேண்டும். இச்செந்நெறியே வாழ்வுக்குரியது. இதுவே இயற்கை வாழ்வு. இந்நுட்பமுணர்ந்த அறிஞர், அறம் பொருள் இன்ப வாழ்வையே உலகுக்கு அறிவுறுத்தினர். இம்மூன்றிற் கலவாத வீடு ஒன்று தனித்திருப்பதாக அவ்வறிஞர்க்குத் தோன்றவில்லை. அறம் பொருள் இன்ப வாழ்வில் வீடு பொலிதல் அவர்க்கு நனிவிளங்கிற்று. உண்மை கண்டவர் உண்மை உரைத்தல் இயல்பு.

அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றில் வீடும் விரவி வருமாறு கூறுவது பழைய முறை. பழைய நூல்கள் யாவும். இம்முறை வழியே பிறந்தன. இடைக்காலத்தில் தோன்றிய

நூல்களும் உரைகளும் பழங்கொள்கையைக் கலக்கிவிட்டன. இதற்குக் காரணம் காலப்போக்கென்று கூறுவது பொருத்தம். திருவள்ளுவர் முப்பாலே வகுத்தருளினர்.

## போலி வீடு

நாளடைவில் வீட்டைப்பற்றிய தனி நூல்கள் பெருகின. இவற்றுள் மிகச் சிலவே பழங் கொள்கைக்குத் துணை போவன. பல, அறம் பொருள் இன்ப வாழ்வில் பொருளற்ற நிலையாமையையும், இயற்கையை வெறுத்தல் - பெண்ணை வெறுத்தல் - என்னும் போலித் துறவையும் நுழைத்து நல் வாழ்வுக்கு இடர் செய்தன. இந்நூற் பெருக்கால், அறம் - பொருள் - இன்ப வாழ்வு அருகுவதாயிற்று.

மக்கள் எண்ணம், அறம் பொருள் இன்பக் கலப்பற்ற போலி வீட்டில் - வெறும் பாழில் - படிந்தது. அதனால் மன்பதையில் தீயொழுக்கம் புகுந்தது. இந்நாளில் உலகம் எக்காட்சி வழங்குகிறது? கொலையுங் களவுங் கள்ளுங் காமமும் பொய்யுந் தாண்டவம் புரியாத இடமும் உளதோ?

தனித்த வீடென்று அறம் பொருள் இன்ப வாழ்வை வெறுக்க ஏவும் நூல்களை இயற்றுவது பாவம். அறம் பொருள் இன்ப வாழ்வின் பயன் வீடாயிருத்தலான், வீட்டைத் தனியே பிரித்துக் கூறுவது எற்றுக்கு? இது வெறும் பாழைக் கூறுவதாக வாக்கு மனமுடைய மக்களால் கொள்ளப்படும். அறம் பொருள் இன்ப வாழ்வுக்குரிய நூல்செய்வோரே நலஞ் செய்வோராவர்.

அறம் - பொருள் - இன்பம் - அற்ற தனித்த வீட்டு நூல்களால் உலகம் உற்ற அல்லல் போதும்; போதும். அறம் பொருள் இன்பவாழ்வு, வீட்டை உணர்த்தவல்லது. ஆதலால், இந்நாளில் அறம் பொருள் இன்ப வாழ்வு அதாவது இயற்கை வாழ்வு பெருகுதல் வேண்டும். இதற்கு உறுகருவியாகத் துணைபுரிய வல்லது திருவள்ளுவரது முப்பால் நூல்.

மரபு

திருவள்ளுவர் அருளியது முப்பால் நூல். (முப்பால், அறம் - பொருள் - இன்பம் என்பன). அறமும் பொருளும் புறத்தில் அடங்குவன; இன்பம் அகத்தில் அடங்குவது. அகம் புறம் என்னும் இரண்டும், அறம் பொருள் இன்பம் என்று மூன்றாக விரிந்தன.

'அகம் புறம்' தமிழ் மரபென்றும், 'அறம் பொருள் இன்பம்' வடமொழி மரபென்றும் சொல்வோரும் உளர். 'எதனின்றும் எது பிறந்தது? எது முன்னையது? எது பின்னை யது?' என்று போரிடுவோரும் உளர். போராட்டத்துக்கும் திருவள்ளுவர் நூலுக்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்பது எனது கருத்து. திருவள்ளுவர் நூல், மரபு கடந்தது. அது மன்பதைக் குரியது. அதை 'மரபு' என்னுஞ் சிறையில் புகுத்த முயல்வது அறமாகாது

உண்மை எவருடைமை? அது தமிழருடையதா? மற்றவ ருடையதா? ஓர்க. தமிழறிஞரிடை 'அகம் புறம்' என்று தோன்றிய உண்மை. மற்றவரிடை 'அறம் பொருள் இன்ப' மாகத் தோன்றியிருக்கலாம். இவரிடை 'அறம் பொருளின்ப' மாகத் தோன்றிய உண்மை, அவரிடை 'அகம் புற'மாகத் தோன்றியிருக்கலாம். ஒவ்வொரு நாட்டறிஞரிடை ஒவ்வொரு வித உண்மை தோன்றும். அஃது அவ்வந்நாட்டாருடைமை என்று நினைப்பது தவறு. அறிஞர் எந்நாட்டவராயினும் அவர் காணும் உண்மை உலகுக்கு உரியதாகும். அதை, மரபின் பாற்படுத்திப் போரிடுவது அறியாமை. அறிஞர் உலகுக்கு உரியவர்; அவர் பிறந்த நாட்டுக்கு மட்டும் உரியவராகார்.

திருவள்ளுவர் தமிழ்நாட்டிற் பிறந்தவர்; தாய் மொழியை நன்கு பயின்றவர். அவர் அந்நாளில் தமிழ்நாட்டிற் புகுந்த பிராகிருதம், பாலி, சம்ஸ்கிருதம் முதலிய மொழிகளி லுள்ள நூல்களையும் பயின்றிருப்பர். திருவள்ளுவர் தாம் பெற்ற

கலைப்புலமையளவில் நின்று திருக்குறளை யாத்தனர் என்று சொல்வதற்கில்லை. இதனை அவர்தம் நூலை ஆராய் வதால் தெளிதல் கூடும்.

திருக்குறளை ஆய்ந்து பார்த்தால், அது கலைப்புலமை கடந்த இயற்கைப் புலமையால் முகிழ்த்த தெள்ளறிவினின் றும் பிறந்ததென்பது விளங்கும். ஆராய்ச்சியாளர், சாதிவெறி மதவெறி மொழி வெறி முதலிய வெறிகளற்றவராயிருத்தல் வேண்டும்.

திருவள்ளுவர், கற்பன கற்றார்; கேட்பன கேட்டார். அவர், தாம் கற்றனவும் கேட்டனவும் வாழ்வில் ஒன்றப்பெறுதற்கு இல்வாழ்க்கையேற்று, இயற்கையோடியைந்த வாழ்வு நடாத்தி, அறவழியில் நின்று, தொழில் புரிந்து, பொருளீட்டி, இன்பந் துய்த்து, நன்மக்களைப் பெற்று, அன்பராய், விருந்தோம்பி, எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தண்மை எய்தி, மனமாசகன்ற அறவோராய், தாம் பெற்ற இன்பத்தை உலகமும் பெறுதல் வேண்டித் 'திருக்குறள்' என்னுந் தனி நூலை அருளினர்.

நாடு, தனது பழங் கொள்கையினின்றும் வீழ்ந்து, சாதி வெறி மதவெறி மொழிவெறி முதலிய சிறுமைகட்கு இரை யானபோது, அவ்வவ் வெறியர் திருவள்ளுவரைப் பற்றிப் பலப்பலவாறு கீறலாயினர். வெறி ஏறிய மதியில் உண்மை விளக்குங்கொல்? வெறியற்ற மதிகொண்டு திருக்குறளை ஆராய்க; ஆராய்ந்தால் திருக்குறள், மரபு கடந்த ஒரு நூலா கவே விளங்கும்.

## குறிப்புகள்

1. புறநானூறு : 192.
2. இப்பொழுது வழங்கப்படும் திருவள்ளுவர் வரலாறு 'கபிலரகவ'லை அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட் டது. இக்கபிலரகவல், பத்தொன்பதாம் நூற்றாண்டின்

தொடக்கத்தில் வாழ்ந்த திருத்தணிகை - வீரசைவப் புலவர் - சரவணப் பெருமாள் ஐயராலும் விசாகப்பெரு மாள் ஐயராலும் செப்பஞ் செய்யப்பட்டதென்று சொல் லப்படுகிறது. இதை முதல்முதல் எனக்குச் சொன்னவர் பாம்பன் - குமரகுருதாச சுவாமிகள். சுவாமிகள் அருளிய 'செவியறிவுறூஉ' என்னும் நூலில் 67ம் பக்கத்தில், இதைப் பற்றிய குறிப்புச் சுருங்கிய முறையில் பொறிக்கப்பட்டி ருக்கிறது.

பத்திரகிரியாரால் குறிக்கப்பெற்ற 'கபில காவியம்' வேறு; இங்கே குறிக்கப்பெற்ற 'கபில ரகவல்' வேறு.

3. தொல் - செய் - 158.

# 11

# நம் பண்டைய நீதி நூலாசிரியர்

*1941*

**பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார்**

மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் வண்ணம் நம் பெரியார் நமக்கு உதவிய நூல்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கனையும் பற்றியனவேயாம். இவ்வெல்லாம் நீதியின்மேல் அமைவனவெனினும், இவற்றுள் பொருட்பகுதியைப் பற்றியெழுந்த நூல்களையே 'நீதி நூல்' எனப் பெரியோர் வழங்குவர். அப்பொருட் பகுதியை மாத்திரம் சிறப்பாக எடுத்துக் கூறிய ஆசிரியரும் உளர். அதனோடு அறமுதலிய ஏனைய உறுதிப் பயன்களையும் இயைத்துக் கூறிய ஆசிரியர்களே பெரும்பான்மை யோராவர்! இம்முறையில் தமிழிற் சிறந்த நீதிகளை வழங்கிய வண்மையிற் சிறந்த பெரியார் திருவள்ளுவரே யாவர். அவர்க்கு முன்னும் பின்னும் நீதிநூலருளிய ஆசிரியர்கள் வட மொழியிலும் தமிழிலும் பலரிருந்தனர். எனினும், அன்னார் புகழொளியெல்லாம் வானத்து விளங்கும் மீன்களாக, வள்ளுவர் சீர்த்தி

அப்பன்மீன் நடுவண் பான்மதி போலத் திகழ்வதாகும். 'எல்லாப் பொருளும் இதன்பாலுள; இதன் பால் இல்லாத எப்பொருளும் இல்லையா ல்,' என்றபடி, உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் வள்ளுவர் வாய் மொழியிற் காணப்படுவனவேயாம். தம் தெள்ளிய கல்வியானும் ஒள்ளிய மதி நுட்பத்தாலும் உலகியலையும் மக்கள் வழக்கவொழுக்கங்களையும் அழுந்தியறிந்து உள்ளத்தமைத்துத் 'திருக்குறள்' என்னும் நீதிக்களஞ்சியத்தை உலகமுள்ளளவும் நிலைபெறயாத்துதவிய பெருமையே அப்பொய்யில் புலவர் புகழொளி விஞ்சுதற்கு ஏதுவாயிற்று.

திருவள்ளுவர் எழுதிய நூல் ஒழுங்கிற்கும் ஏனையோர் நூன்முறைக்கும் உள்ள வேறுபாடுகள் பலவாம். தாம் கூற மேற்கொண்ட பொருளை நன்றாக ஆராய்ந்து, இவ்வாறு தெளிவுபடுத்த வேண்டுமென்று உள்ளத்தமைத்துப் பின்னர்ச் செய்யுள் வடிவில் இவர் வெளியிட்டுள்ளார். பெரும்பான்மையும் கொண்ட பொருளின் இலக்கணம், அதன் சிறப்பு, அதனாலாம் பயன், அஃதில்வழி வருந்தீங்கு என்ற இன்னோரன்ன பாகுபாடுகளை வரையறுத்துத் தெளிவுபடுத்தப்படாத பொருள்கள் மக்கள் உளங்கோடற்கு ஏற்றனவாகா என்பது பெரியார் துணிபு.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருக்குறளுக்கு வடமொழி தென்மொழிகளிலுள்ள பற்பல நீதி நூல்களையும் நன்கு கற்று ஆராய்ந்த பரிமேலழகர் என்னும் புலவர் பெருமான் இயற்றிய உரையே எல்லா உரைகளினும் சிறந்ததாகப் போற்றப்படுவது. அவ்வுரையாளர் ஒரிடத்து, 'தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின்' என்று எழுதியிருத்தலால் வடமொழியிற் புகழ்மிக்கவர்களான வியாழ வெள்ளிகளின் நூற்கருத்துகள் நம் வள்ளுவர் வாய்மொழியிற் புலப்படுகின்றன என்பது பரிமேலழகர் கருத்

தாம். ஒரு நாட்டினர் வழக்கவொழுக்கங்களை உணர்ந்து அவற்றிற்கேற்ப நீதிகளை வரையறுக்கும் ஆசிரியர் கள் கால இடையறவால் சேய்மைக்கண் உள்ளாரெனினும், பொருள் ஒற்றுமைக்கருத்தால் அணிமையில் உள்ளவராகவே கருதப் படுவர்.

வடமொழியில் மனு முதலிய நூல்கள் அறம் பொருள் இன்பங்கள் விரவக் கூறப்பட்டுள்ளன. பொருட்பகுதியாகிய அரசியல் முறையைத் தனிமையில் விளக்க எழுந்த நூல்களுள், பிருகற்பதியாகிய வியாழ குருவால் தேவர்கள் பொருட்டு இயற்றப்பட்ட பாற்கபத்தியமும், உசனஸ் என்னும் சுக்கிரா சாரியாரால் அசுரர்பொருட்டு இயற்றப்பட்ட ஔசநசமும் முதலில் நினைக்கத் தக்கனவாம். இவற்றின் பின் எழுந்தன சந்திரகுப்தன் காலத்து அமைச்சராய் இருந்த சாணக்கியரால் ஆக்கப்பட்ட கௌடலியமும், காமாந்தகனால் இயற்றப் பட்ட காமாந்தக முதலியனவும் ஆம். இவற்றுள் இக்காலத் துச் சட்டநூல் வல்லோராற் பெரிதும் தழுவப்படுவது கௌடலியம் என்னும் நூலேயாம். வியாழனால் ஆக்கப்பட்ட நூலினும் வெள்ளியாகிய சுக்கிரரால் ஆக்கப்பட்ட நூல் தென்னாட்டு வழக்கவொழுக்கங்களுக்குப் பெரிதும் இயை புடையதாகும். இவற்றின் பின் தோன்றிய கௌடலிய நூலின் தொடக்கத்தில் அதன் ஆசிரியர் பூர்வா-சார்ய வணக்கமாகச் 'சுக்கிரபிருகஸ்பதிப்யா நம:', 'சுக்கிரற்கும் பிருகற்பதிக்கும் வணக்கம்' என்று கூறியுள்ளார். இதனாலேயே வெள்ளி நூலின் விழுப்பம் புலப்படுவதாகும். பிற்காலத்துக் கவிஞர் பெருமா னாகிய கம்பர், "வெள்ளியும் பொன்னும் என்பார் விதிமுறை வகுத்த நூலில்" என்று முறைப்படுத்திக் கூறியதும் இதனை வலியுறுத்தும். இங்ஙனம் சிறந்துள்ள ஔசநசத்தின் சுருக்கமே 'சுக்கிர நீதி' என்னும் மேற்பொருள் நூலாகும்.

இச்சுக்கிர நீதியைத் தமிழ் மக்கள் நலங்குறித்து மொழி பெயர்த்த பொழுது, யான் கண்ட புதுமைகளும் பழைமைக்

குரிய சான்றுகளும் பலவாம். 'புதல்வர்ப்பேற்றை விரும்பும் பெண் மக்கள் வயிரமணியை அணிதலாகாது,' என்பது கூறப் பட்டுள்ளது. கருவைத் தடைப்படுத்தற்கு வைரவொளி எங்ஙனங் காரணமாகும் என்பதைக் கலவை (இரசாயன) நூலார் ஆராய்தல் வேண்டும். இது போன்றன புதியனவாம். நீர்ப்பொறி, இசைப்பொறி, காற்றியக்கும் பொறி, கம்பிவழிச் செய்தியனுப்புங்கருவி, நீராவியால் இயக்கப்படும் பொறிகள் முதலிய இக்காலத்துக் காணப்படும் இயந்திரத் தொழில் களைப் பற்றியும் அந்நூலிற் கூறப்பட்டுள்ளன. ஆனால், இவற் றின் அமைப்பு முறைகள் வேறுபட்டிருக்கலாம். போர்த் தொழில் முறைகளும், போர்க்கருவிகளும், பொறி வழியாக ஆயுதங்களைச் செலுத்தும் முறையும், வெடிமருந்து செய்யும் முறையும், படைகளின் அணி வகுப்புகளும் பிறவும் செவ்வை யாகக் கூறப்பட்டுள்ளன. மக்கள் இயங்குஞ் சாலை (Road) ஆமை முதுகுபோல இருக்கவேண்டும் மென்பது குறிப்பிடப் பட்டுள்ளது. ஆமை முதுகு இருமருங்கும் தாழ்ந்து நடுவிடம் சிறிது உயர்ந்திருக்கும். இது சாலை வழியிற் பெய்யும் மழை நீரால் அச்சாலை கெடாமலிருப்பதற்குக் கருதப்பட்டதாகும். மேலும், இந்நூலின்கண் அரசனியல்பு, அவன் சுற்றங்களாகிய அமைச்சர் முதலியோரி யல்பு, வினை செய்யும் ஏவலரியல்பு, கிராம பரிபாலனம், வாணிகமுறை, நியாய மன்றங்கள், நீதிபதிகளின் அதிகாரங்கள், வழக்கின் இயல்புகள் முதலியன விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

கரிகாற்சோழ அரசனைக் குடிமக்களுள் ஒருவனாகச் சிலப்பதிகாரம் கூறும். இதனால், அரசன் குடிமக்களின் உயர்ந்தவனாகத் தன்னை எண்ணலாகாது என்பது புலனாகும். செங்கோன்மை தவறாது செலுத்தும் நல்லரசற்கு அரசியற் காரியம் தன்னலங் குறித்ததாகாது; குடிமக்கள் நலங்குறித்த தேயாம். இங்கே, கோவலனைக் குற்றமில் வழியும் கொலை புரிவித்த பாண்டியனைக் கண்ணகியார் வெகுள, அது காரணமாகப் பாண்டியன் உயிரிழந்தான் என்று தண்டமிழ்ப்

புலவர் சாத்தனார் செங்குட்டுவற்குக் கூறினாராக, அது கேட்ட செங்குட்டுவன் பாண்டியன் தவறின்மையையும் அரசியல் நடாத்தும் சிரமத்தையும் சாத்தனார்க்குக் கூறு முகமாக,

மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்.

என்று இளங்கோவடிகள் கூறியது நினைந்தின்புறத்தக்கது. 'அரசன் குடிகளிடத்தினின்று தனக்குரிய அரசிறையாகிய வேதனத்தைப் பெறுதலால், அக்குடிகளுக்கு ஏவலாளர் தன்மையுடையவனாவான்,' எனவும், 'பூ மரத்தை வளர்த்து மலர் பறித்து மாலைகட்டிப் பயன் பெறுபவனையொப்பக் குடிகளைப் பாதுகாத்து அவர்பால் அரசிறை பெறவேண் டும்,' எனவும், 'அங்ஙனமன்றி அம்மரத்தை எரித்துக் கரி செய்து பயன்பெறுதல் போலக் குடிகளைக் கெடுத்துச் சிறு பயன் கொள்ளலாகாது,' எனவும் சுக்கிர நீதி கூறுகின்றது. இச் செய்திகள் மிகவும் பாராட்டற்குரியனவாம்.

திருக்குறட்பொருட்பகுதி அரசர் அமைச்சர் படைத் தலைவர் முதலியோரின் இலக்கணங்களாகக் கூறப்பட்டன வும் பிறவும் யாண்டும் காண்டற்கரியனவாம். ஒற்றர் இயல்பு கூறுங்கால், ஒற்றும் நீதி நூலும் ஆகிய இரண்டும் அரசர்க்கு இரு கண்களாகும் என்பது கூறப்பட்டுள்ளது. நாட்டின் இலக்கணங் கூறுங்கால், ஒரு நாட்டில் வாழ்வார் தேடி வருந் தாமல் வேண்டுவன வெல்லாம் ஆங்கே பெறத்தக்கதாக இருத்தல் வேண்டும் என்னும் கருத்தமைய, "நாடென்ப நாடா வளத்தன," என்றார். பிணியின்மையும் நிரம்பிய செல் வமும், விளைவும், இன்பமும், காவலும் ஆகிய இவ்வைந்தும் நாட்டிற்கு அழகு செய்வனவெனவும் கூறப்பட்டுள்ளன. இதனால், அரசன் தன் நாட்டை இத்தகுதிகளுக்கு உரியதாக

அமைத்துக்கொள்ளல் வேண்டுமென்பது புலனாகும். அமைச்சரியல்பு கூறுங்கால், வினைத்தூய்மை, வினைத் திட்பம், வினைசெயல் வகை என மூன்றதிகாரங்கள் காணப்படுகின்றன. இவற்றை ஊன்றிப் படிப்பார்க்குத் தாம் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றிய தெளிவு கல்லெழுத்துப் போல நெஞ்சிற் பதிவதாம். திருக்குறளேயல்லாமல் நாலடியார், நான்மணிக்கடிகை, திரிகடுகம், சிறுபஞ்சமூலம் முதலிய சங்க மருவிய நீதி நூல்களும் தமிழிற் பலவுள. அவையெல்லாம் மக்கள் ஒழுக்க முறைகளை வரையறுத்துத் தெளிவு படுத்துவனவாகும்.

நாலடியார் என்னும் நூல், கற்பார் மனத்தைக் கவர வல்லது. 'ஆலும் வேலும் பல்லிற்குறுதி; நாலு மிரண்டுஞ் சொல்லிற்குறுதி' என்னும் பழமொழியில் நாலென்பது நாலடியாரையும், இரண்டு என்பது ஈரடியானமைந்த திருக்குறளையுங் குறிப்பனவாம். ஒருவன் சிற்சில செயல்களிற் செவிடனாய்க் குருடனாய் ஊமையாயிருத்தல் வேண்டுமென நாலடி கூறுகின்றது. இம்முறை வியக்கத்தக்கது! இதன் கருத்து, பிறர் இரகசியங்களைக் கேட்பதிற் செவிடனாகவும், பிறர் மனைவியரைக் காம நோக்கமாகக் காண்பதிற் குருடனாகவும், பிறரைப் பற்றிக் காணாவிடத்துப் புறங்கூறுவதில் ஊமையாகவும் இருத்தல் வேண்டும் என்பதாம். இங்ஙனம் சாதுரியமாகக் கூறுமியல்பு இந்நூலில் பலவிடங்களிற் காணலாம். ஒருவன் மற்றொருவன்பால் இல்லாத குணங் களைப் புகழ்தலினும் அவனை வைதல் நல்லதென்கிறார். கடையாயார், இடையாயார், தலையாயார் ஆகிய இம் முத்திறத்தாரும் அஞ்சுதற்குரியன யாவை என்னும் வினாவை எழுப்பி விடையிறுக்குமுகமாக முறையே கடையாயார் பசிக்கு அஞ்சுவரெனவும், இடையாயார் துன்பத்திற்கு அஞ்சுவரெனவும், தலையாயார் பழிச் சொல்லிற்கு அஞ்சுவ ரெனவும் கூறுவர். குலப் பெருமை பேசுவார்க்கு, 'நல்ல குல மென்னுந் தீய குலமென்னுஞ் சொல்லளவல்லாற் பொருளில்லை,' என்றும், 'தவங் கல்வி ஆள்வினை என்றிவற்றான் ஆகும் குலம்,' என்றுங்

கூறுவர். இன்னோரன்ன சிறந்த நீதி மணிகள் பல ஒளி செய் தலை இந்நூலாகிய பொற்பேழையிற் பரக்கக் காணலாம்.

பிற்காலத்து ஔவைப்பிராட்டியார் அருளிய ஆத்தி சூடி, வாக்குண்டாம், நல்வழி முதலிய நீதி நூல்கள் சிறுவரும் உணர்ந்து இன்புறத்தக்க நிலையில் அமைந்து பேரறிவாளர்க் கும் விருந்தாய் விளங்குவன. 'இயல்வது கரவேல்,' என்னும் சூத்திரம், 'ஒருவன் மனமொழி மெய்களாற் பிறர்க்குச் செய் யக்கூடிய உதவியை ஒளித்தலாகாது', என்னும் பொருளை உட்கொண்டு, இப்பொருளின் விரிவுகளுக்கெல்லாம் நிலைக் களமாக நிற்றலை நோக்குவார்க்கு இதன் திட்பநுட்பங்கள் இனிது விளங்கும்.

சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வன் ஆடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

என்பதனாற் சூத்திரத்தின் இலக்கணத்தை அறியலாம். இவ் விலக்கணத்துக்குப் பெரிதும் இவ்வாத்தி சூடிச் சூத்திரங்கள் இயைபுடையவாய் விளங்குவன. இந்நூல் மாபாடியம் போன்ற விரிவுரையே ஏற்குந் தகுதி வாய்ந்தது. உயர்ந்த நீதிகளைச் சிறுவர் எளிதிலுணர்ந்து கொள்ளுதற்கும் பெரும் புலவர்கள் பல திறமாக வகுத்து ஆராய்ந்து உரை காண்டற்கும் இஃது இலக்கியமாகத் திகழுமாயின், இதனை உபகரித்த தமிழ்ச் செல்வியாரின் அறிவின் திட்பம் எத்துணைச் சிறந்த தாகும் என்பதை அறிவுடையார் உணர்வாராக.

பண்டை நீதிநூலார் கூடியவரை முயன்று தம் அனு பவத்திற் கண்ட உண்மைகளை நெடுங்காலமாயினும் சிதையா மலிருத்தற்பொருட்டுச் சூத்திர வடிவிலும் செய்யுள் வடிவிலும் யாத்துதவினர். அவை உரைநடையில் ஆக்கப்படாமை குறை யென்ப ஒரு சாரார். முற்காலத்தில் இவ்வளவு விரிவாக அச்சிடுதற்குரிய கருவிகளில்லை. கற்பவர் நெஞ்சத்தில் உரை நடையினும் செய்யுள் நடை நிலைபெற்று ஞாபகத்துக்கு

நன்கு பயன்படும். காலந்தோறும் மக்கள் வழக்கவொழுக்கங்கள் மாறுபடுதல் இயல்பே. அம்மாறுபாட்டிற் கேற்ப நீதிகளும் திருத்தப்படுமென்பது சொல்லாமலே விளங்கும். மகாபாரதத்துக் கண்ட சில அறங்கள் இக்காலத்துக்குப் பொருத்தமாகக் காணப்படா. அது பற்றிப் பேரறிஞராகிய வியாச முனிவர் இழித்துரைக்கப்படுவாரல்லர். ஆகவே, எத்தகைய நீதிகளையும் காலம் நோக்கிக் கொள்ளுதலும் தள்ளுதலுஞ் செய்தல் வேண்டும். "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்பதைக் கடைப்பிடித்து மனம்போனபடி செய்யத் துணிதல் நன்றன்று. இங்ஙனம் வடமொழி தென்மொழிகளிற் சிறந்த நீதி நூல்களை ஆக்கிய பெரியாருடைய இயல்புகளை இங்கே கூறியன கொண்டு தெளிந்து கொள்க.

**(திருச்சிராப்பள்ளி வானொலியிற் பேசியது)**

# 12

# வள்ளுவர் உள்ளம்

*1945*

**கி.ஆ.பெ. விசுவநாதம்**

*தமிழர் திருநாள்*

*அன்பர்களே! பெரியோர்களே! வணக்கம்.*

*பொங்கல் திருநாளாகிய இன்றைய தினம், பொன் மலையில், பெரியோர்களாகிய உங்கள் முன்னிலையில், தமிழர் திரு நாள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இதுகாறும் பொன்மலையில், 'தமிழர் திருநாள்' கொண்டா டியதாக எனக்குத் தெரியவில்லை. இவ்வாண்டு இங்கே தான் தமிழ் நாட்டிலேயே முதன்முதலாகத் தமிழர் திருநாள் கொண்டாடப்படுகிறது. நாடு முழுவதிலும், திருச்சிராப் பள்ளியிலும் கூட இன்று மாலையில்தான் தமிழர் திருநாள் கொண்டாடப் போகிறார்கள், ஆனால், நீங்கள் காலையி லேயே தொடங்கி விட்டீர்கள்.*

*இத்திருநாள் தொடங்கும்போதே நல்ல முறையில் தொடங்கப் பெற்றிருக்கிறது. இவ்வாண்டு, தமிழர் திருநாள்*

எல்லா இடங்களிலும் கொண்டாடப்பட வேண்டுமென்பது பெரும் புலவர்களும், அரசியல் கட்சியினரும், நல்லறிஞர் களும் கொண்டுள்ள கருத்து. தை முதல்நாளைத் தமிழர் திருநாளாகக் கொண்டாடுவதின் பொருள் என்ன? தை மாதத்திற்கும் தமிழனுக்கும் என்ன தொடர்பு? தமிழனுக்கு இந்நாள் மாத்திரம் ஏன் சிறந்த நாள்? என்பதை முதலில் ஆராய்வோம்.

ஒரு ஆண்டை, வானநூற் பயிற்சி வல்லுநர்கள், பகல் அதிகமாக உள்ள பகுதி, இரவு அதிகமாக உள்ள பகுதி என இருபெரும் பிரிவுகளாக வகுத்துள்ளனர். ஆடி முதல் மார் கழி முடிய இரவுகாலம்; தை முதல் ஆனி முடிய பகற்காலம். தை பிறந்தால் விடியற்காலை மாதிரி. நேற்றுவரை சூரியன் தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தான். இரவு அதிக மாகிக் கொண்டிருந்தது. குளிரும் மக்களை அதிகமாக வருத்திக் கொண்டிருந்தது. இவ்வாறு சூரியன் தெற்கு நோக் கியே சென்று கொண்டிருந்தால் உலகத்தில் இருள் நிறையுமே, பனி வருத்துமே என்று ஏங்கிக் கொண்டிருந்தனர் உலகினர். இன்று சூரியன் திரும்பி வடக்கு நோக்கிச் செல்ல ஆரம்பித்து, வாடிய மக்களுக்கு ஆறுதல் அளிக்கிறான். ஆகவே தான் இது நன்னாள் - இதைப் பார்த்துத்தான் தமிழ் மக்கள் இதைத் திருநாளாகக் கொண்டாடுகிறார்கள்; திருவள்ளுவர் தொடர் ஆண்டும் இன்றுதான் தொடங்குகிறது. இன்று ஆண்டின் முதல்நாள்.

இனி இது எப்படி முதல்நாள் என்று பார்ப்போம். இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள் என்னும் பிரிவினர்க்கு எப்போது நாள் தொடங்குகிறது? இந்துக்களுக்குக் காலை 6 மணிக்கு நாள் தொடங்கிவிடுகிறது. முஸ்லீம் களுக்கு மாலை 6 மணிக்கு நாள் தொடங்குகிறது. முஸ்லீம்கள் சூரியனுக்கு மாறாகப் பிறையைக் கண்டு, நாள் கணக்கு வைக்கிறார்கள். உதாரணமாக இந்துக்களுக்குத் திங்கள் இரவாயிருப்பது

முஸ்லீம்களால் செவ்வாய் இரவாகக் கருதப்படும். கிறிஸ்த வர்கள் முன்னேசொன்ன இரண்டு முறையையும் விட்டுவிட் டார்கள். அவர்களுக்கு நள்ளிரவில் 12 மணி அடித்த பிறகே நாள் தொடங்குகிறது. ஆனால், இவர்களல்லாத பழந்தமிழர் களுக்கு உச்சிப் பொழுதிலிருந்து நாள் தொடங்கும். 'உச்சிக்கு அச்சமில்லை'. உச்சிக்கு நாள் இல்லை, நட்சத்திரம் இல்லை, தேதி இல்லை, கிழமை இல்லை. சுத்தமான வெள்ளையுள்ளம் படைத்த களங்கமற்ற நேரம் அல்லவா?

மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத புதுப்பொருள் கள் விளையவும், மகிழ்ச்சிக்குரிய புதுமலர்கள் பூக்கவும், மக்க ளைத் துன்பத்தினின்றும் நீக்கவும், சூரியன் தென்திசையி னின்றும் வடதிசை நோக்கித் திரும்பத் தொடங்குகின்ற இந்நாள் - முதல்நாள் நன்னாள் - திருநாள் எனக் கருதப் பெற்று வருகிறது.

தமிழர் திருநாளை ஓர் வெற்றித் திருநாள் எனலாம். ஏன் இது வெற்றித் திருநாளாகக் கருதப்படுகிறது? புதிய நெல் விளைந்து அரிசியாகிவிட்டது. கரும்பைச் சாறாக்கிச் சர்க் கரை காய்ச்சியாய்விட்டது. இரண்டையும் சேர்த்துப் பொங் கிச் சாப்பிடுகிறோம். உழைப்பின் முழுப்பயனை இன்று பெறுகிறோம். மஞ்சளும், இஞ்சியும், வானுயர் கரும்பும் எல்லாம் விளையும் காலம். வீதி புதிதாகிறது. ஆளும் புதியவ னாக மாறுகிறான். எங்கும் புதிய நெல், புதிய பானை, புதிய உடை, புதிய மலர், புதியவளை, புதிய இல்லம் காணப்படு கிறது. இதைப் பார்த்துத் தமிழ்மக்கள் இந்நாளை இயற்கை யோடு இயங்கும் திருநாளாகக் கருதி, திருவள்ளுவர் ஆண் டின் தொடக்க நாளாகவும் எண்ணிக் கொண்டாடுகிறார் கள். நாமும் இந்நாளை இன்று சாதி, மத, அரசியல் கட்சி வேறுபாடுகளின்றிக் கூடிக் கொண்டாடுகின்றோம். இதில் எவ்வளவு மகிழ்ச்சியிருக்கிறது!

## வள்ளுவர் உள்ளம்

ஆகவே, உள்ளம் மகிழ்கின்ற இந்த நல்ல நாளில், என்னைப் பேசப் பணித்துள்ள 'வள்ளுவர் உள்ளம்' என்னும் பொருள்பற்றி மகிழ்வோடு பேசுகின்றேன்.

திருக்குறளின் ஆசிரியர் திருவள்ளுவர். அவர் 1978 ஆண்டு கட்குமுன்பு வாழ்ந்தவர். மதுரையில் பாண்டிய அரசரது அரண்மனை உள்படுகருமத் தலைவராயிருந்தவர். சிறந்த அறிஞர். அவருடைய உள்ளம் திருக்குறளில் பரவிக் காணப் படுகிறது.

சங்கநூல்களிற் பல புலவர்களின் உள்ளங்கள் பலதிறப் பட்ட கருத்துக்களாகப் பரவிக் கிடக்கின்றன. ஆனால் வள்ளுவர் உள்ளம் எதைத் தொட்டாலும், தானே அதுவாகத் துடிக்கிறது. முத்துக்களில் உள்ள நீரோட்டத்தைப் போல ஒவ்வொரு குறளிலும் உயிரோட்டத்தைக் காணலாம். 1330 குறள்களும் அப்படியே. அதிற் சில குறள்களை மட்டும் உங்கள் முன் வைக்கிறேன்:

நீங்கள் மாம்பழக் கடைக்குப் போகிறீர்கள். அங்கு உங்களுக்குப் பழத்தின் சுவை அறிய ஒரு சின்னத் துண்டு 'சாம்பிளாக' கொடுக்கப்படுகின்றது. அதேபோல இன்று உங்களுக்குத் திருக்குறள் 'சாம்பிள்கள்' சிலவற்றை நான் கொடுக்கிறேன். சுவைத்துப் பாருங்கள்.

புறநானூறு போன்ற இலக்கியங்கள் முள் நிறைந்த பலாப்பழம் போன்றவை. முள் நீக்கிச் சுளை சுளையாக எடுத்துக் கொடுத்தால்தான், 'ஆ! இனிக்கிறதே, எவ்வளவு சுவை!' என்பீர்கள். அப்படிச் சற்று முயற்சி எடுத்து அவைகளைச் சுவைக்கவேண்டும். ஆனால், திருக்குறளைச் சுவைப்பது மாம்பழத்தைச் சுவைப்பதுபோல் மிக எளிது.

குறள் முழுவதிலும் அவரது உள்ளத்தைக் காணலாம்.

## நாடு பற்றிய உள்ளம்

முதலில் வள்ளுவர் உள்ளம், ஒரு நாடு எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறது என்பதைப் பார்ப்போம்.

'பசி, பிணி, பகை ஒழிந்த நாடுதான் நாடு' என்கிறார். எப்படி?

> உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
> சேராது இயல்வது நாடு

என்று. இதில் உறு, ஓவா, செறு என்ற சொற்களின் பொருள்கள் சிறப்புடையன. சோறு வழங்கும் நாடு சோம்பேறிக் கூட்டத்தையும் பிச்சைக்காரர்களின் கூட்டத்தையும் வளர்க்கும் நாடாகும். ஆயிரம் பேருக்கு ஒரு ஊரில் சோறு போட்டான் என்றால், 'ஆ! அவ்வளவு ஏழையா உங்கள் ஊரில் இருக்கிறார்கள்?' என்று கேட்கத் தோன்றும். 'எங்கள் ஊரில் நூறு ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன' என்று ஒருவர் சொன்னால், நாம் என்ன நினைக்க வேண்டியிருக்கிறது. அந்த ஊரில் நோயாளிகள் மிகுந்துவிட்டார்கள் என்பதுதான் பொருள். படை முதலிய தற்காப்புகள் மிக்க ஒரு நாடு பகைமை மிகுந்த நாடு என்றுதானே கருதப்பெறும். ஆகவேதான் வள்ளுவர் உள்ளம் பசி, பிணி, பகை ஒழிக்கும் நாட்டை 'நாடு' என்று கருதாமல், 'உழைப்பால் பசிவென்று, உடல் நலத்தால் பிணி வென்று, அன்பால் பகைவென்ற மக்களைக் கொண்டதே நாடு' என்று கருதுகிறது.

வள்ளுவர் எந்த நாட்டிற்கும் சென்றதாக வரலாறுகளில் காணப்படவில்லை. சில அண்டை நாடுகளையும்கூட அண்டியதாகத் தெரியவில்லை. பேரவைகளிற் சென்று பெருமுழக்கம் செய்ததாகவும் இல்லை. ஆனால் எல்லா நாடுகளையும் சுற்றி, எல்லாவற்றையும் கண்டறிந்தவர் போல, இச் சிறந்த கருத்தைக் கூறியிருக்கிறார், காரணம் அவ்வளவு பண்பட்டது அவருடைய உள்ளம்.

## வாழ்வு பற்றிய உள்ளம்

திருவள்ளுவரின் இல்வாழ்க்கை பற்றிய கதைகள் பல. மனைவி வாசுகி அம்மையார் தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கும்போது திருவள்ளுவர் கூப்பிட்டதாகவும், உடனே அவ்வம்மை கயிற்றைவிட்டுக் கணவனிடம் சென்றதாகவும், கயிறு அப்படியே நின்றதாகவும், கதைகள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவை மெய்யோ பொய்யோ என்பதை நாம் இங்கு ஆராய வேண்டுவதில்லை. ஆனால் வள்ளுவர் இல்வாழ்க்கை நடத்தியவர் என்பது மட்டும் நன்கு தெரிகிறது.

> இல்லதுஎன், இல்லவள் மாண்பானால்? உள்ளது என்
> இல்லவள் மாணாக் கடை.

என்பது ஒரு குறள்.

மாண்புடைய இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றுமில்லை; மாண்பற்றவளானால் உள்ளது ஒன்றுமில்லை - என்று கூறுகிறார் வள்ளுவர். நற்குண நற்செய்கையுடைய பெண்மணி உள்ள வீட்டில் இல்லாத பொருள் ஏது? எல்லாம் இருப்பது போலவேதான் இல்லவள் மாண்பற்றவளானால் வீட்டில் சிறந்த பல பொருள்கள் நிறைந்திருந்தாலும் என்ன பயன்? ஒன்று மில்லாதது போல்தான். இது கவித்திறன் அல்ல! பயனற்ற அடுக்குச்சொல் அல்ல! முற்றிலும் உண்மைக் கூற்று. உதாரணமாக ஒரு பரம தரித்திரன் வீடு; இடிந்த சுவர்; சரிந்த கூரை; மண்சட்டி ஆனால் அவன் அங்கு ஒரு நல்ல மனைவியுடன் வாழ்கிறான். மகிழ்வோடு சாப்பிடுகிறான். குறை ஒன்றுமில்லை. கவலையின்றி உறங்குகிறான். இதற்கு மாறாக ஒரு செல்வச் சீமானின் மாடி வீடு. பொன் வெள்ளிப் பாத்திரங்கள், சோபா, நாற்காலிகள். ஆனால், இல்லத்தில் நல்ல மனைவியில்லை. எல்லாம் உண்டு தான்! மன அமைதியற்ற வாழ்வு. உறக்கமுமில்லை? அவனுக்கு எது இருக்கப் போகிறது? இவை இரண்டில் எது சிறந்தது? சொல்

லுங்கள் வள்ளுவர் உள்ளம் இல்லாததில் சிறப்பும் உள்ளதில் குறைவும் காட்டுகிறது. அதுமட்டுமல்ல; ஆணுக்கும் பெண் ணுக்கும் நல்வழியும் காட்டுகிறது.

## நடை போடும் உள்ளம்

புகழ்புரிந்த இல் இல்லோருக்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.

என்பது மற்றொரு குறள்

ஆண் சிங்கம்போல நடக்கச் சிலபேருக்கு முடியுமாம். யாருக்கு? மாண்புடைய மனைவியைப் பெற்றவருக்கு ஆண் சிங்கம் போல் நடக்க முடியுமாம்! யார் முன்னால்? தன் சினேகிதன் முன்னாலா? அல்ல; தன்னை இகழ்பவன்முன் நடப்பான் என்று கூறுகிறார். இது எவ்வளவு பெரிய சிறப்பு! ஆனால், தன்னைத் தூற்றுகிறவர்முன் நல்ல மனைவியைப் பெறாதவனால் ஆண் சிங்கம்போல் நடக்க முடியாது என்று வள்ளுவர் வற்புறுத்திக் கூறிவிட்டார். குறளில் வள்ளுவர் உள்ளமும் ஒரு பெருநடை நடப்பதைக் கண்டு மகிழுங்கள்.

## தந்தை உள்ளம்

குழந்தையுள்ளவர்கள் அறிந்து கூறியிருப்பதுபோல் தந்தை உள்ளத்தைப்பற்றித் திருவள்ளுவர் கூறியிருப்பது வியப்பிற்குரியது. வள்ளுவருக்குக் குழந்தைகள் இருந்ததாகத் தெரியவில்லை. அப்படியிருந்தும், அவர்,

குழல்இனிது யாழ்இனிது என்ப தம்மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்

என்கிறார். எவ்வளவு பண்பட்ட தந்தையுள்ளம் பாருங்கள். 'இன்று அவர் குழல் வாசித்தார். எவ்வளவு இனிமையாக இருந்தது' என்று ஒருவர் கூறுகிறார். மற்றும் ஒருவர் வந்து, 'இன்று இவர் யாழ் வாசித்தார். வெகு இனிமையாக இருந் தது' என்று கூறுகிறார். இவை இரண்டையும் கேட்டு விட்டு,

ஒரு தந்தை, 'சரி சரி, நீங்கள் உங்கள் குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டதில்லை போலிருக்கிறது, என்னுடைய குழந்தைகளின் மழலை மொழிகளே எனக்கு யாழ் ஓசை, குழல் ஓசையைவிட இனிமை பயக்கிறது' என்கி றார். வாழ்க்கையில் குழந்தைகளின் மழலைச் சொற்கள்தாம் மிகவும் இனிமை பயப்பவை என்பதை எவ்வளவு அழகாகச் சொல்லுகிறார் பாருங்கள்.

அமிழ்தினும் ஆற்ற இனிதே தம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்

நம் நாட்டில் பெண் குழந்தைகள் மணலில் விளையாடி, வீடு கட்டுவார்கள். ஆண் பிள்ளைகள், அம் மணல் வீடுகளை அழிப்பார்கள். இது தொன்று தொட்டுப் பழக்கம். மணலில் விளையாடிவிட்டு, அப்படியே வீட்டிற்கு வந்து, புழுதிபட்ட கையுடன் தன் தந்தை சாப்பிட்டுக்கொண்டிருக்கும் சோற்றை ஒரு குழந்தை அள்ளுகிறதாம். தன் குழந்தையின் கையென்ற காரணத்தால், அச்சோறு அசுத்தப்படுத்தப்படுவதாகக் கரு தாமல், அத் தந்தையுள்ளம் அச்சோற்றை அமிழ்தைவிடச் சிறந்ததாகக் கருதுகின்றதாம். எவ்வளவு அன்பு நிறைந்த உள்ளம் பாருங்கள்!

## துறவியுள்ளம்

திருவள்ளுவர் திடீரென்று துறவியாகிவிடுகிறார். இந்த உலகப் பற்றையெல்லாம் விட்டொழித்து, இறைவனைப் பற்றவேண்டுமென்று சொல்லுகின்றார்:

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்பது ஒரு குறள். இந்தக் குறளைச் சற்றுக் கூர்ந்து கவனிக்க வேண்டும். இது 'இவ்வுலகப்பற்று விடுவதற்கு இறைவன் திருவடியைப் பற்று' என்று பொருள்படும் எனச் சொல்வார் கள். ஆனால் எனக்கு இதில் ஒரு ஐயம்! இதைப் பல புலவர்

களிடம் கேட்டேன். ஆனால் இன்னும் அவர்கள் முடிவாகச் சொல்லவில்லை. ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள். இங்கு குழுமியிருக்கும் உங்களிற் சிலர் இந்த ஐயப்பாட்டை விளக்க முடியுமானால் மனம் உவந்து வரவேற்பேன். இல்லையாயினும், இதைப்பற்றிச் சிந்தியுங்கள். திருவள்ளுவர் சொன்னதைத் திரும்பச் சொல்லியதில்லை. பொருத்தமில்லாமலும் சொல்லியதில்லை. ஆனால் இங்கு, 'அப்பற்றைப் பற்றுக' என்று பெய்திருப்பது, சொன்னதைத் திரும்பச் சொல்வது போல் தோன்றுகிறது. 'பற்றுக பற்றற்றான் பற்றினை' என்று சொல்லிவிட்டு, ஏன் மீண்டும் 'அப் பற்றைப் பற்றுக' என்று சொல்லவேண்டும்!

எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு

என்பது ஒரு குறள். இதில் இரண்டு யார்கள் இருக்கின்றன. இந்தக் குறளைப் படிக்கும்போது யார், யார் வாய்க் கேட்பினும் என்று பிரித்து, சொல்பவன் எவனாயிருந்தாலும், கேட்பவன் எவனாயிருந்தாலும், பேசப்படும் பொருளைத் தராசில் வைத்து நிறுத்துப் பார்ப்பதுபோல் பார்த்து உண்மையான பொருளைக் கண்டு கொள்வதுதான் அறிவு' என்று பொருள்கொள்ள வேண்டும். இங்கு 'யார்' என்று இரண்டு சொற்கள் இருந்தாலும், பொருளால் வேறுபட்டுத் திருக்குறளை அழகுபடுத்துகின்றன. கூறியது கூறல் என்பது வள்ளுவர் குறளில் இல்லை. குறளிற் காணும் சொற்களை ஒரு பதக்கத்தில் இழைத்த மணிகள் எனக் கூறலாம். மேலே குறித்த குறளுக்குப் பொருள் 'இவ்வுலகப்பற்றை விடுவதற்காக இறைவனுடைய திருவடியைப் பற்று' என்பது உண்மையாகுமானால்,

பற்றுக பற்றற்றான் பற்றினை
பற்று விடற்கு.

என்பதே போதுமல்லவா? அப்படியானால், அப்பற்றைப் பற்றுக என்ற சொற்களுக்குப் பொருள் என்ன என்பதை

அறிய அறிவுக்கு வேலை கொடுங்கள். 'இவ்வுலகப்பற்றை விடுவதற்கு முதலில் ஞானாசிரியனைப் பற்று; பிறகு அவன் காட்டும் இறைவனைப் பற்று' என்பது பொருத்தமாக இருக்குமா? என்பதையும் எண்ணிப்பாருங்கள்.

### ஒழுக்க உள்ளம்

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

என்பது ஒரு குறள். ஒழுக்கம் எல்லாவற்றையும்விட மேலானதாகக் கருதப் பெறுவது. தமிழரின் நாகரிகத்திற்கு ஆணிவேர் இக்குறள். பிறநாட்டார் ஒழுக்கத்தை விடுவதா? உயிரை விடுவதா? என்ற நிலை வரும்போது, உயிரைவிட மனமில்லாது ஒழுக்கத்தையே விட முற்படலாம். ஆனால், தமிழர்கள் அப்படியல்ல. வட துருவம் தென்துருவமாக மாறுபட்டாலும், ஒழுக்கத்தை மட்டும் விட்டுவிட மாட்டார்கள். 'உயிரைக் கொடுத்தேனும் ஒழுக்கத்தைக் காப்பாற்று' என்பது தமிழ் நாகரிகப் பண்பு. ஆகவே வள்ளுவர் உள்ளம், 'ஒழுக்கத்தை உயிரினும் அதிகமாக ஓம்பு!' என்று கூறுகிறது.

### அன்பு உள்ளம்

மன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.

இக்குறளிலே வள்ளுவர் 'உன் உயிரே போவதாயிருப்பினும் நீ மற்றொரு உயிரைக் கொல்லாதே' என்று கூறுகிறார். ஒரு உயிரைக் கொன்றுவிடுவதால் நம் உயிர் பிழைக்கும் என்பது கிடையாது. எடுத்துக்காட்டாக, பல வைத்தியர்கள் பச்சை வாதத்திற்குப் புறாரத்தம், கறி இவற்றை சாப்பிடச் சொல்லுவார்கள். தினசரி ஒரு புறா சாப்பிடுவார் நோயாளி. ஆனால் வாதம் நிற்பதில்லை. ஒரு ஆளுக்கு 730 புறா அறுத்துக் கொடுத்தும் ஆள் பிழைக்கவில்லையே என்று நினைக்கிறார்களா? அதுவும் இல்லை. பின்னும் அதே யோசனையைச்

சொல்வது தவறான வழக்கமாக இருந்து வருகிறது. பாவம் புறாக்கள் மடிந்துகொண்டே இருக்கின்றன. பிள்ளைகள் பிழைப்பதாகத் தெரியவில்லையே! இதை நினைக்கிறது வள்ளுவரின் அருள் உள்ளம்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் என் இளமையிலே எழுந்த சொற்றொடர் ஒன்று இப்போது நினைவிற்கு வருகிறது. அது தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத மனிதர்கள், தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளத் தெரியாத விலங்குகளை, தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளத் தெரியாத விக்கிரங்களுக்குப் பலியிடுகிறார்கள் என்பதுதான், இன்றும் பலர் கோவிலுக்குச் சென்று வழிபட்டுவிட்டு, ஆடு, கோழியைப் பலி கொடுப்பதாக வேண்டிக் கொள்ளுகிறார்கள். ஏன். தங்களைக் காத்துக்கொள்ள இவர்களுக்குத் தெரியவில்லை. விக்ரமும் தானே போய்த் தின்னுவதில்லை. இதற்கு ஆள் தேடி, அரிவாள் தேடி, வெட்டி, கொன்று ஊட்ட வேண்டும் போலும்! தன்னைத் தானே காத்துக் கொள்ளத் தெரிந்த கரடியை, புலியை, சிறுத்தையை, சிங்கத்தைப் பலியிடுவதாகச் சொல்லுவதுதானே! அவைளைப் பிடித்தால் நம் கதி என்னவாகும் என்பதும் தெரிந்தது தானே! ஆகவே அவைகளைப் பலியிட நினைப்பதில்லை. வலுவற் றது, வாயற்றது என்பதாகத் தன்னைத் தானே காத்துக் கொள்ளத் தெரியாத ஆடுகளையும், கோழிகளையும் பலி கொடுக்கிறோம். வள்ளுவரது அன்பு உள்ளம் இது தவறு என்று கூறுகிறது. அது மட்டுமல்ல, உன் உயிரைக் கொடுத்து மற்றொரு உயிரைக் காப்பாற்று என்றும் கூறுகிறது.

## அருள் உள்ளம்

இக்காலத்தில் பலர் காதுகளுக்கு மூக்குக்கு நகை போட்டுக்கொள்கிறார்கள். ஆனால் வள்ளுவர் நம் கண்களிலும் ஒரு நகை அணியவேண்டும் என்கிறார். கண்களுக்கு உரிய நகை எது? அதுவே கண்ணோட்டம்! அதாவது வாடி வதங்கு

வோரின் துன்பங்களைக் கண்டு சகியாமல் வருந்தி முத்து முத்தாக நீர்வடிப்பதே கண்களின் நகையாக இருக்க வேண்டும் என்கிறது வள்ளுவர் உள்ளம்.

கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம்; அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும்

என்பதே அக்குறள். கண்ணோட்டத்தை அணிகலமாகக் கொண்டவர்களுடைய கண்களே கண்களென்கிறார். அப்படியானால், கண்ணோட்டமில்லாக் கண்கள் எத்தகையன? அதையும் சொல்லுகிறார், அவை கண்களல்ல, புண்கள் என்று. கண் அறியும், புண் அறியாது ஆதலின், கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் என்றார்; என்ன அருள் உள்ளம் பாருங்கள்!

## இரக்க உள்ளம்

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணாமை நன்று.

என்பது ஒரு குறள்.

பண்டைக் காலத்திலே ஆரியர்களுக்கும், தமிழர்களுக்கும் அடிக்கடி சண்டை நேருவதற்குக் காரணமாக இருந்தது யாகங்களே! உயிர்ப்பலி கொடுத்து யாகம் செய்தல் ஆரியர்க்குரிய பழக்கம். அது தவறு என்பது தமிழர் வழக்கம். தமிழ் நாட்டில் தமிழர்கள் உயிர்ப்பலி கூடாது என்றே அன்று தொட்டு இன்றுவரை வாதாடி வருகின்றனர். அறவொழுக்கம் கொண்டவர்கள் தமிழர்கள். ஆகவே, தமிழர் நாட்டில் ஆரியர் வந்து உயிர்ப்பலி கொடுப்பது, தமிழரின் பழக்க வழக்கம் ஒழுக்கம், நெறி, மொழி, நாடு இவற்றிற்குக் கேடு சூழச் செய்யும் செய்கையென்று கருதினார்கள். ஆகவே தமிழ் மன்னர்கள் பலரும் வட ஆரியர்கள் இங்கு யாகம் செய்யக் கூடாது என்று கட்டளையிட்டனர். ஆனால் ஆரியர்கள் மறைமுகமாக யாகம் செய்யத் தொடங்கினர். தமிழ் மன்னர்கள் அவற்றை அழித்தனர். பலசாலிகளான தமிழ் மன்னர்களை

ஆரியர்கள் அரக்கர்கள் எனக் கூறினர். பின்னால் இதுவே தேவர்களுக்கும் அரக்கர்களுக்கும் சண்டை எனப் புராணக் கதையாக கிளம்பியது போலும். வள்ளுவர் சிறந்த தமிழ் மகன் ஆதலின், அவர் உள்ளம் யாகத்தை வெறுத்தது. அவி சொரிந்து, நீ 1000 யாகம் செய்வதைவிட, ஒரு உயிரைக் கொலை செய்யாமலிருப்பது நல்லது எனக் கூறினார் வள்ளுவர். இதனால் நெய், பால், பழம் முதலிய அவிகளைப் பெய்து பல யாகங்களைச் செய்து பெறக்கூடிய பலன்களைவிட, கொல்லா நோன்பு நோற்பவர்கள் அதிகப் பலன்களைப் பெறுகிறார்கள் என்பது கருத்து; கொல்லாமை மட்டுமல்ல; உண்ணாமையும் வேண்டும் என்று கருதுகிறது வள்ளுவரின் இரக்க உள்ளம்.

## அரச உள்ளம்

திருவள்ளுவர் திடீரென்று அரசராகிவிட்டார்; அரச உள்ளம் ஆட்சி செய்யத் தொடங்குகிறது பாருங்கள்.

> வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
> கோனோக்கி வாழும் குடி

என்பது ஒரு குறள். இக்குறளில் மக்கள் மழையை எதிர் பார்த்து வானோக்கி வாழ்வது மட்டுமல்லாமல், அவ்வாறு மேல்நோக்கும்போது அரசன் (செங்)கோல் நோக்கியும் வாழ்கின்றார்கள் என்று கூறுகிறார். அதாவது நாட்டிலே மழை வளம் மட்டுமிருந்தால் போதாது; நல்ல அரசும் அமைய வேண்டும். அப்போதுதான் மக்கள் நல்வாழ்வு வாழ்வார்கள் என்பது கருத்து. சற்று முன்னே, கொலையை வெறுத்து, கொல்லாமை விரதம் பூண வேண்டிய அவசியத்தை வற்புறுத்திய வள்ளுவர், அரசரான உடன்,

> கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனோடு நேர்

எனக் கூறி, கொலையில் கொடியவர்களைக் கொல்லுதல் அரசனது கடமையென்று வரையறுக்கிறார். இங்குக் கொலையில் வள்ளுவர் உவமையுங்கூறி ஆதரிக்கிறார். ஏன்? ஒரு நெல் வயலைக் காட்டி, அங்கே பயிரிடையே களைமிகுந்திருந்தால் உழவன் என்ன செய்வான்? என்று கேட்கிறார். பயிர் வளர வேண்டுமானால், களைகளைக் களைந்து எறிந்தாக வேண்டும். அது போலவே நாட்டில் கொலை, கொள்ளை, வழிப்பறி இவற்றை விலக்கி, தக்கார்களைக் காப்பாற்ற வேண்டுமானால், கொடியவர்களைக் களைபிடுங்குவது போல ஒழிப்பதும் அவசியமாம். ஆகவே, தன்னைப் போன்ற மக்களைக் கொல்லுங்குணம் படைத்த மாக்கள் திருந்தவே மாட்டார்கள்; அவர்களைத் திருத்தவும் முடியாது என்பது வள்ளுவரின் உள்ளக் கருத்து என நமக்கு நன்கு விளங்குகிறது. இம் மாதிரிக் கொடியவர்களைத் தூக்கிலிட்டுக் கொல்வது நேர்மையெனக் கருதுகிறது வள்ளுவரது அரச உள்ளம்.

## பிச்சைக்கார உள்ளம்

அரசராயிருந்த வள்ளுவர் திடீரென்று ஆண்டியாய் விட்டார். அசல் ஆண்டியாகவே நடிக்கிறார். பிச்சை கேட்கவும் தொடங்குகிறார். யாரிடம்? செல்வர்களிடம் சென்றா? இல்லை, பிச்சைக்காரர்களிடம் சென்று! ஒரு பிச்சைக்கார மகாநாட்டைக் கூட்டி, அங்கு போய் பின் வருமாறு பிச்சையெடுக்கிறார்.

இரப்பான் இரப்பாரை எல்லாம் இரப்பிற்
கரப்பார் இரவன்மின் என்று.

'தோழர்களே, பிச்சையெடுக்கும் தொழில் நமக்கு வேண்டாம். அது இழிந்த தொழில். வேறு வழியின்றிப் பிச்சையெடுக்க நேர்ந்தாலும், வைத்துக்கொண்டே இல்லையென்று சொல்பவரிடம் மட்டும் போய்ப் பிச்சை கேட்காதீர்கள். அது நமக்குள்ள பெருமையைக் கெடுத்துவிடும். இதுவே நான்

உங்களை இரந்து கேட்பது' எனக் கூறுகின்றார். எப்படி இந்தப் பிச்சைக்காரர்!

இரப்பது ஒரு இழிவு, அப்படி இழிந்து இரப்பவனிடம் 'இல்லை'யென்று கூறிக் கையை விரிப்பது அதைவிட இழிவு. வைத்துக் கொண்டே இல்லை எனக் கூறுவது எல்லாவற்றிலும் இழிவு. இத்தகைய இழிந்த மக்களிடம் போய் இரப்பது இழிதொழிலுக்கும் ஒரு இழிவாகும் என்பது வள்ளுவரின் கருத்து.

அந்தப் பிச்சைக்கார மகாநாட்டில், ஒரு பிரதிநிதி எழுந்து, 'எத்தனையோ தொழில்கள் இருக்க நாம் ஏன் இழி தொழில் செய்யவேண்டும்?' எனக் கேட்டார், மற்றொரு பிரதிநிதி எழுந்து, 'அது நம் தலைவிதி; பிறப்பிக்கும் பொழுதே பிரமன் நம் தலையில் அவ்வாறு எழுதி விட்டான்' என்றார். வள்ளுவர், உள்ளம் துடிதுடித்து விட்டது.

> இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
> கெடுக உலகு இயற்றி யான்

எனக் கூறிவிட்டார். ஒருவனைப் பிச்சை எடுத்தே உயிர் வாழ வேண்டும் என்று எண்ணிப் படைத்திருப்பானானால் இந்த உலகத்தைப் படைத்த அவன் பரந்து கெடவேண்டும் எனச் சினந்து கூறுகிறார். அவ்வாறு பிரமன் எவரையும் படைப்பதில்லை என்பதே வள்ளுவரின் கருத்து. அப்படியிருக்குமானால், அவன் அழிந்தொழிய வேண்டும் என்பதே குறளின் கருத்து. அவ்வளவு கொடுமையையும் வேதனையயும் தர வல்லது பிச்சை எடுக்கும் தொழில் என்று வள்ளுவர் உள்ளம் கருதுகிறது. இதிலே ஒரு நயமும் உண்டு. வள்ளுவர் உலகியற்றியானைப் பரந்து கெடுக என்று கூறுவது ஏன் தெரியுதா? பிச்சைக்காரன் பிச்சைக்காகப் பரந்து திரிந்து அலைந்து கெடுகிறானல்லவா, அதுபோலவே, அவனைப் படைத்தவனும் பரந்து திரிந்து, துன்பத்தை அனுபவித்துக் கெட

வேண்டும் என்று சாபம் கொடுக்கிறார். வள்ளுவரது பிச்சைக் கார உள்ளத்தின் வேதனையைப் பாருங்கள்.

## விருந்துள்ளம்

விருந்தினரை எப்படி உபசரிப்பது என்று விளக்குகிறார் வள்ளுவர்.

மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

குறளே ஏழு சீர்களால் ஆயது. இதில் மூன்று நான்கு சீர் கள் உவமை. என்ன அழகு பாருங்கள். அனிச்சம் பூ என்பது ஒரு மெல்லிய பூ. அது எவ்வளவு மெல்லியது தெரியுமா? அந்தப் பூவை மோந்து பார்த்தாலே வாடிவிடுமாம். அவ் வளவு மெல்லியது அனிச்சம் பூ. ஆனால் விருந்தினர் உள்ளம், அவ்வனிச்சம் பூவைவிட மென்மையானது. முகந்திரிந்து பார்த்தாலே வாடிவிடும் என்று கூறுகின்றார் வள்ளுவர். ஆகவே, இன்முகத்தோடு, சற்றும் மனத்தில் அழுக்கில்லா மல், வந்த விருந்தினரை மகிழ்வோடு ஏற்று உபசரிக்க வேண்டு மென்கிறார். எத்தகைய உயர்ந்த நோக்கம்; பண்டைத் தமிழ ரின் விருந்தோம்பல் குணத்திற்கு இதை விடச் சிறந்த சான்று வேறு வேண்டுவதில்லை 'இந்தச் சமயத்தில் வந்தானே விருந் தாளி' என்று நினைத்தாலே விருந்தினர் முகம் வாடிப் போய் விடுமாம். வள்ளுவரின் உள்ளம் இதை அனுபவிக்கமாலேயே எவ்வளவு அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது பாருங்கள்.

## வேடன் உள்ளம்

வள்ளுவர் வேட்டையாடக் காட்டுக்குப் புறப்படுகிறார். சாதாரணமாக வேடர்கள் வேட்டையாடுவதைப் பார்த்தார். இவரும் ஒரு அசல் வேடனாக மாறிவிட்டார்.

கான முயல் எய்த அம்பினில் யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது

என்பது ஒரு குறள். அதாவது ஒரு வேடன் அம்பு வில்லுடன் முயல் வாழும் காட்டிற்குச் சென்று குறி பார்த்து எய்து, முயலையும் கொன்று வேட்டையாடி வெற்றி பெற்று வீடு திரும்புகிறான். இவனைப் பார்க்கிறது வள்ளுவர் உள்ளம். இவ் வெற்றியைச் சிறப்பு எனக் கொள்ளவேயில்லை. மற்றொரு வேடன் வேல் ஏந்தி, யானை வாழும் காட்டிற்குச் சென்று யானையைக் கண்டு குறி பார்த்து எய்து, குறியும் தவறி யானையும் பிழைத்துப் போய் வேலையும் இழந்த வெறுங்கையோடு வீடு திரும்புகிறான். இவனையும் பார்க்கிறார் வள்ளுவர். அவருடைய உள்ளம் இதுவே சிறப்பு எனக் கருதுகிறது. தோல்வியடைந்த வேடனை, நன்று செய்தாய் என்று உயர்த்திக் கூறுகின்றார். காரணம்? இவன் யானை வேட்டைக்குச் சென்றான்: தோற்றான். அவனோ அற்ப முயல்வேட்டைக்குச் சென்றான்; வெற்றி பெற்றான். பயன் என்ன? என்கின்ற உள்ளுவதெல்லாம் உயர்ந்ததாக இருக்கட்டும் என்னும் வள்ளுவர் உள்ளம், வேறு எவ்வாறு கருதும்? சிறிய காரியங்களில் முயன்று வெற்றி பெறுவதை விட, பெரிய காரியங்களில் முயன்று தோல்வியடைவது சிறப்பு என்பது வள்ளுவரின் உள்ளக் கருத்தாகும்.

## உண்மையுள்ளம்

வள்ளுவர், பொய் நிறைந்த உள்ளத்தைப் பார்த்து ஒரே இருட்டாக உள்ளது என்கிறார். அந்த இருட்டைப் போக்க ஒரு விளக்குத் தேவை என்கிறார். இப்பொழுதுள்ள குத்து விளக்கோ, மின்சார விளக்கோ பொய் சொல்லும் உள்ளத்தில் இருட்டைப் போக்க முடியாது என்கிறார். பொய்யுள்ளம் எப்போதும் இருட்டாகவே இருக்குமாம். உண்மை பேசுவோர் உள்ளமே ஒரு நல்ல விளக்காம். இந்த விளக்கு இருப்பதனால் அவர்கள் உள்ளத்தில் எப்போதும் இருட்டு வருவதில்லையாம். இக்கருத்துக்கள் அனைத்தும் அடங்கிய குறள் ஒன்று,

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு

என்பது.

என்ன ஆராய்ச்சி! எவ்வளவு பக்குவப்பட்டது வள்ளுவர் உள்ளம் பாருங்கள்! பொய் சொல்லாதவருடைய உள்ளம் வெளிச்சமாக இருக்கின்றதாம். சூரிய வெளிச்சம், சந்திர வெளிச்சம், குத்துவிளக்கு வெளிச்சம், மின்சார விளக்குகளின் வெளிச்சம் ஆகியவைகள் ஊடுருவி ஒளிபெறச் செய்ய முடியாத உள்ளத்தை உண்மை என்னும் விளக்கு ஒன்று சென்று ஒளிபெறச் செய்கிறதாம். என்ன உண்மை! என்ன வெளிச்சமான உள்ளம்! சுவையுங்கள்! நன்றாய்ச் சுவையுங்கள். பிறகாவது உண்மை பேச முயலுங்கள்.

## சூதுள்ளம்

பொய் பேசாதே என்ற சொல்லிக் கொண்டிருந்த வள்ளுவர் அசல் சூதாடியாகிவிடுகிறார். சூதாட்டத்தில் சில உட்பொருள்களைப்பற்றி விவரிக்கிறார். சூதினர் ஒன்றெய்தி நூறிழப்பர்; அதாவது ஒரு பொருளைப் பெற நூறு பொருள்களை இழந்துவிடுவார்கள் என்று கூறுகிறார். இதிலே சிந்தித்தால் ஒரு பொருள் மட்டுமல்ல வேறு பொருள்களும் விளங்குகின்றன, சூதுகற்றவன் பெறுவது சூதன் என்ற பெயர் ஒன்றே யாம். அவன் இழப்பது நூறு! ஏது? பொன், புகழ், பெருமை, அன்பு, இரக்கம், மாடு, மனை, வண்டி, வாகனம், கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் ஆகிய 100 நற்பண்பு களையும் இழந்துவிடுவான் என்பதை நயம்பட உரைக்கிறார். இவரிடம் ஒரு சூதாடி வந்து, 'நான்தான் திறமையாகச் சூதாடி எப்போதும் வெற்றி பெறுகிறேனே, நான் என்றும் இழப்பதே இல்லையே! நல்ல வருவாய் வருகிறதே! நான் சூதாடினால் என்ன?' என்று கேட்கிறான். அவனுக்கும் பதில் கூறுகிறார் வள்ளுவர்:

வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று

என்பது. 'நீ மீன் பிடிப்பதைப்பார்! புழுவைக் கொக்கியிற் பார்த்து இரையெனக் கருதி இரையை விழுங்கப் போகும் மீன் மடிந்து, பிறருக்கு இரையாவதை அறி. இன்று நீ பிறர் பொருளைச் சூதினால் கவர எண்ணலாம். ஆனால் அது உன்னைச் சீக்கிரம் சூது செய்துவிடும்' என்று எச்சரிக்கிறார். சூதுக்கு உவமை கூறவந்த வள்ளுவர், மீன் பிடிப்போன், உயிர் போக்கும் கருவியை உணவாகக் காட்டும் சூதான செயலையே உவமையாகக் கூறியது புலவர் பெருமக்களால் வியக்கத்தக்க தொன்றாகும்.

## குடிகாரர் உள்ளம்

கள்ளுண்பது தவறு: பெருங் குற்றம் நீங்கள் கள்ளை உண்ணாதேயுங்கள் என்று கூறும் வள்ளுவர் கள்ளுக்கடைக் குப் போகிறார். பின்செல்லுங்கள். குடிகாரர்கள் சிலர் தள் ளாடுகிறார்கள். அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார் இனிமேல் குடிக்கப்போகும் குடியர்களை,

கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான் கொல் உண்டதன் சோர்வு

என்று கேட்கிறார். கள் குடிக்கப் போகும் தோழர்களே! குடித்து விட்டால் எப்படியிருக்கும் உங்கள் நிலைமை என்பதை, குடித்தவர்கள் சோர்ந்து, நடுமாறி, தள்ளாடி உளறி வழியும் நிலையைப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டாமா? குடித் தவனைப் பார்த்து குடிக்காத குடிகாரன், தானும் அப்படித் தானே ஆவோம், தன்னையும் பிறர் ஏளனம் செய்வார்களே! என்ற எண்ணமாட்டானா? என்று வள்ளுவர் கள்ளுக்கடைக் குப் போய்த் துள்ளித்துடிக்கிறார். நீங்கள் கள்ளுக்கடைக்குப் போகாமலே குடித்துச் சீரழிவுபடும் மக்களை நினைத்துக் கொண்டாலே போதும்; குடிகாரராக மாட்டீர்கள்.

### காதல் உள்ளம்

வள்ளுவர் காதலைப்பற்றி எவ்வாறு கூறுகிறார் என்பதைப் பாருங்கள். அவர் உள்ளம் உண்மையான காதலைப் பற்றித்தான் எண்ணுகிறது காட்சியும் அளிக்கிறது. பெண்ணை இவர் பார்க்கிறார். ஆனால் பெண்ணோ அப்போது தான் வெகுவாக நிலத்தைப் பெருவிரலால் கீறிக்கொண்டு தரையை நோக்குகிறதாகப் பாவனை செய்கிறாள். அவர் பார்க்காதபோது அவள் கடைவிழியால் காண்கிறாள். ஒரு புன்னகை புரிகிறாள். இதை வள்ளுவர் வெகு அழகாக,

யான் நோக்குங்காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்

என்ற கூறுகிறார். அத்தோடு நிற்கவில்லை அவர். கள்ளையும் காதலையும் ஒப்பிட்டுப் பார்க்கிறார். ஆராய்ச்சி செய்கிறார். முடிவைச் சொல்லுகிறார். கேளுங்கள் அதை;

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு.

கள்ளை எண்ணினாலும் பார்த்தாலும் போதை உண்டாவதில்லை; குடித்தால்தான் போதை உண்டாகுமாம். ஆனால் காமம் அப்படி அல்லவாம். எண்ணினாலும் போதை; பார்த்தாலும் போதை உண்டாகுமாம். ஆகவே, கள்ளை விடக் காமம் போதையில் அதிக வலுவுடையது என்கிறார். எப்படிக் காதல்? எவ்விதம் வள்ளுவர் உள்ளம்?

### பகை உள்ளம்

உட்பகையைப் பற்றி உணர்ந்து கூறுகிறார் வள்ளுவர். பகையாளி, உறவு கொண்டாடுவது போல வருவான். நம்பி மோசம் போகாதீர்கள். அவன் கும்பிடுங் கையிலும் கூர்வேல் இருக்கும்; ஏமாறாதீர்கள்! என்று எச்சரிக்கை செய்கின்றார். மேலும் உட்பகைக்கு ஒரு உவமையாக,

செப்பின் புணர்ச்சிபோற் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி

எனவும் கூறுகின்றார். பானையும் மூடியும் ஒன்றாகச் சேர்ந் திருந்தாலும், அவை ஒன்றோடொன்று ஒட்டுவதில்லை அல்லவா? அதுபோலவே உட்பகை கொண்ட மக்களின் செய்கையும், பகை உணர்ச்சி, அண்ணன் தம்பிகளுக்குள்ளும் தோன்றும். திருமணம், சாவு காலங்களில் இருவரும் கூட்டி வைக்கப்படுவார்கள். ஆனால் இது உடைந்த மனம். பானை யும், மூடியும் போன்ற நட்பு. சுட்ட மண், வெளியே ஒன்று கூடியதுபோல் தோன்றினாலும், உண்மையில் கூடமாட்டார் கள் என்ற உண்மையை வள்ளுவர் உள்ளம் நமக்கு நன்கு காட்டுகிறது.

## நட்புள்ளம்

உட்பகையைப்பற்றிக் கூறிய வள்ளுவர் உயரிய நட்பைக் கொள்ள வேண்டுமென்கிறார். உண்மையான நட்பு எது என் றும் சுட்டிக் காட்டுகின்றார். அது

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு

என்பதே. இக்குறளுக்கு ஆடைநெகிழ்ந்த சமயத்தில் மனம் கைக்கு விண்ணப்பம் செய்யாதிருந்த போதிலும், கை எப்படி விரைந்து வந்து கட்டி. உதவி செய்கிறதோ, அதேபோல் சினேகிதனுக்குத் துன்பம் வந்துற்றகாலை அவன் உதவி கேட்காதபோதிலும் உதவவேண்டும் என்று பொருள் சொல் கிறார்கள் பலர். இது தவறு. எனக்கு வேறு ஒரு பொருள் தோன்றுகிறது. உடுக்கையிழந்தவன் என்பது திருக்குறள் பாடமாக இருக்கும்போது, ஆடையைப் பறிகொடுத்தவன் என்பதுதானே பொருளாகும்? அவ்வாறன்றி 'உடுக்கை யிழிந்தவன்' என்றிருந்தால்தான் ஆடை நெகிழ்ந்தவன் என்று பொருள் கொள்ளலாம். குறள் அவ்வாறு இல்லையல்லவா?

*இப்பொழுது அந்த குறளின் பொருளைப் பற்றிச் சற்றுச் சிந்தியுங்கள். ஆடையைப் பறிகொடுத்து விட்டுத் துடிக்கும் ஒருவனைப்பற்றி நினைத்துப் பாருங்கள். அந்த நிலையில் அவனுடைய கை என்னசெய்யும்? மானத்தையன்றோ மறைத்துக் காப்பாற்றி நிற்கும். யாரைக் கேட்டு அப்படிச் செய்கிறது? அதேபோல் நண்பன் துன்புற்ற நேரத்தில் அவன் கேட்பதற்குமுன் அத்துன்பந் துடைப்பதே நட்பு என்று கூறுகிறார் வள்ளுவர். இக்குறளில் ஆடை நெகிழ்வதை விட, வள்ளுவர் உள்ளம் நெகிழ்வதைக் கண்டு மகிழுங்கள்*

**— விய, தை, முதல் நாளன்று பொன்மலைத் திருக்குறள் கழகத்தில் நடந்த தமிழர் திருநாள் கூட்டத்தில் ஆசிரியர் நிகழ்த்திய சொற்பொழிவு**

# 13

# வள்ளுவர் தந்த இன்பம்

*1947*

**இராய. சொக்கலிங்கனார்**

*தமிழ் இலக்கிய உலகில் தலைசிறந்தவர் வள்ளுவர் என்பதில் இரண்டு கருத்து இல்லை. பண்டைத் தமிழ் இலக்கிய ஆசிரியருள்ளே இலக்கிய உலகில் எல்லா நாட்டாராலும் அறியப்படுபவர் திருவள்ளுவர்.*

*என்றும் உள தென் தமிழ் - தழற் சுடர் நுதற் கடவுள் தந்த தமிழ் - கன்னித் தமிழ் - ஒண் தீந்தமிழ் சிறப்புடையது என்று உலகம் மதிப்பதற்கு முதற் காரணமாக நிற்பது திருக்குறள் நூல்.*

*திருக்குறள் செய்த வள்ளுவரைப் பெற்றதால் தமிழ் மொழி உயர்ந்தது என்று சொன்னால் அதனை அறிஞர் மறுக்குமாறில்லை. வள்ளுவன் அறம் உலகத்திற்கெல்லாம் உரியது. அவ்வறம், வடவேங்கடம் தென்குமரிக்கிடையே உள்ள தமிழ் முழங்கும் நல்நிலமாகிய சிற்றெல்லைக்குள்*

அடங்குவதொன்றன்று. வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது அருமைத் தமிழ்நாடு. வள்ளுவர் குறள் தோன்றி ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகள் இருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. அவர் காலத்தைத் திட்டமாக அறிவிக்கும் கருவியில்லை. அன்னார் சமயம், வகுப்பு, வாழ்க்கை வரலாறு முதலியவை நமக்குத் தெரியா, அவற்றைத் தெரிந்து கொள்ள முயல்வதில் பயன் ஏற்படும் என்று தோன்றவில்லை. அப்பெரியாரைப் பற்றி இதுபோது வழங்கப்பெறும் கட்டுக் கதைகளெல்லாம் நம்பத் தகாதவை.

திருவள்ளுவர் எந்தச் சமயமானாலென்? அவர் எந்த வகுப்பானால் நமக்கென்? அவர் பிறப்பில் சைவராயினும் ஆகுக! வைணவராயிருப்பினும் இருக்க! சமணராயினும் அன்றிப் பிற எவராயினும் ஆகட்டும். அன்னார், பிறப்பில் பார்ப்பாராயினும் பறையரேயாயினும் நமக்கு ஒரே மாதிரி தான். திருவள்ளுவர், சாதி சமயச் சுழியில் பட்டுக் கரையேற மாட்டாது தடுமாறும் சிறுதகையினரல்லர்; அப்புலவர் பெருமான், வகுப்புக்கும் மதத்திற்கும் அப்பாற்பட்டவர்.

திருவள்ளுவரை இன்று நமக்குக் காட்டும் கருவி ஒன்றே யொன்றுதான். அக்கருவி ஒப்புயர்வற்றது; அது, தமிழனைத் தவிர எவனுக்கும் கிடைக்கமுடியாத எய்ப்பில் வைப்பு; அது தான் திருக்குறள் என்பது. திருக்குறளை, அதனைப் பெற்ற மொழிக்குரிய தமிழனாகப் பிறந்தே அனுபவித்தல் வேண்டும்; அல்லது தமிழ்மொழியை நன்கு முறையோடு கற்றாதல் நுகரலாம். வேறு மொழியில் அதன் கருத்தை ஒருவாறு உணரலாமேயொழிய அதில் பொதிந்து கிடக்கும் சுவையை முற்றும் பருகுமாறில்லை.

அன்ன பெருமை வாய்ந்த திருக்குறள், அதனை ஆக்கிய ஆசிரியர் வரலாறு ஏதும் கூறிலது. அந்நூலின் நோக்கம் அஃ தன்று. அந்நூல், அறம் அருளுகின்றது; பொருள் புகல்கின் றது; இன்பம் இயம்புகின்றது. பலரும் பகர்வதுபோல் ஆசிரியர் வள்ளுவனார் வாயில் அகப்படாத பொருள் அரிது.

திருவள்ளுவர் கடவுட்கொள்கை கொண்டவர். ஆனால், அவர்கொண்ட கடவுள் எச்சமயத்துள்ளும் அடங்காதது. திருவள்ளுவரின் கடவுளுக்குத் திருநீறுமில்லை; திரு மண்ணு மில்லை; கோபியுமில்லை; பிறிதுமில்லை. அவருடைய கடவுள் உலகிலுள்ள எல்லோருக்கும் பொதுவானது.

ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை யேகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், இறைவன், பொறிவாயில் ஐந்த வித்தான், தனக்குவமையில்லாதான், அறவாழியந்தணன், எண்குணத்தான் என்பன, வள்ளுவர், தாம் கண்ட கடவுளுக் குச் சூட்டும் திருப்பெயர்கள். வள்ளுவரின் கடவுள் ஒரு குறு கிய எல்லைக் கோட்டுக்குள் அடங்கமாட்டார். அவர், எல்லாம் வல்லவர்; எங்கும் நிறைந்தவர்; யாவும் ஆனவர்.

வள்ளுவர் குறளுக்கு முப்பால் என்று ஒரு பெயர் உண்டு. காரணம்: அறம் - பொருள் - இன்பம் என்ற மூன்று பகுப்புக் களை அக்குறள் கொண்டமையினாலேயே. வள்ளுவரின் அறத்துப்பால், உலகிலுள்ள அறநூல்கள் எல்லாவற்றுள்ளும் தலைசிறந்து விளங்குவது; அவர்தம் பொருட்பால், அர்த்த சாஸ்திரம் அனைத்திற்கும் மணிமுடியாக மிளிர்வது; அப் பெருமான் நல்கிய காமத்துப்பால், ‘இவ்உலகத் தலைமை யின்பம்’ என்று கவியரசர் கூறிய இல் இன்பத்தை நுகர்வார், வையத்து வாழ வேண்டிய முறைப்படி வாழ்ந்து, இன்பக் கடலாடப் பெருந்துணை புரியவல்லது.

தமிழ்க் காதலர்கட்கு வள்ளுவர் தந்த இன்பத்தை விரித் துரைப்பதே இந்நூல். ‘காமத்துப்பால் திருவள்ளுவர் செய்த தல்ல’ என்று சிலர் கூறுகின்றனர். அதற்குக் காரணம் அறிவுக் குப் பொருத்தமாக ஏதும் இருப்பதாகத் தெரிய வில்லை. இவ்வளவு பெரியவர் காமத்துப்பால் செய்திருக்க மாட்டார் என்று கருதப்படுவதே காரணம். காமத்துப்பால் என்ற பெய ரைக் கேட்டு மருள வேண்டுவதில்லை. அது கூறும் பொருள் கள், மிக நுணுக்கமும் அருமையும் பெருமையும் இனிமை யும் கொண்டவை. அறமும் பொருளும் வகுத்த வள்ளுவர்,

'காமத்துப்பால்' என்ற இன்பக்களஞ்சியத்தைத் தமிழ் நாட்டிற்கு நல்கி நுண் அறிவு எல்லையின் உச்சிக்கு உயர்ந்து விட்டார்.

வள்ளுவர் தந்த இன்பம், இருபத்தைந்து அதிகாரங்களில் அடங்கியிருக்கிறது. 'தகையணங்கு உறுத்தல்' தொட்டு 'ஊடலுவகை' இறுதியாக இருநூற்றைம்பது அரிய குறள்களில் அவ் இன்பம் பரவிக் கிடக்கின்றது. தமிழ் நாட்டார் அந்நாளில் மேற்கொண்ட காதல் மணமுறையைத் தெற்றென விளக்குவது வள்ளுவரின் இன்பப்பால். ஒருவனும் ஒருத்தியும் வகுப்பு மதவேறுபாடுகளெல்லாம் கடந்து, காமமுற்றுக் காதலித்துக் களவியலில் ஒழுகிக் கற்பியலில் நின்று கண்ட நல் இன்பத்தை நாகரிக முறையில் இன்றைய ஆணும் பெண்ணும் உணர்ந்து வாழ்தற்குப் படம் பிடித்துக் காட்டு கின்றது வள்ளுவர் தந்த இன்பம்.

## தகை அணங்கு உறுத்தல்

வள்ளுவர் நூல் மொத்தம் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்கள். அதில் காமத்துப்பால் இருபத்தைந்து அதிகாரங்கள். காமத்துப்பாலை இருகூறாகப் பிரித்திருக்கின்றார். முன்னையது களவியல்; பின்னையது கற்பியல். களவியல் ஏழு அதிகாரங்கள்; கற்பியல் பதினெட்டு அதிகாரங்கள். 'களவியல்' என்பது தாய் தந்தையர், உறவினர், மற்றையோர் ஆகிய எவர் துணையுமின்றி, ஒருவரையொருவர் விரும்பிய ஆணும் பெண்ணும் காதலித்துப் பொருந்துவதொன்று.

களவியல் ஏழு அதிகாரங்களையும் தொடர்ந்து அடுக்கடுக்காக நயம்பட வைத்திருக்கின்றார் ஆசிரியர் வள்ளுவர். அவற்றின் பொருத்தம் மிகவும் சுவை பயப்பதாகும். அக்களவியலில் முதல் அதிகாரம் 'தகையணங்குறுத்தல்' என்பது. 'தகையணங்குறுத்தல்' போன்ற சொற்றொடர்கள் விளங்கவில்லையெனச் சிலர் நினைக்கலாம். இத்தகைய தொடர்களைப் பிரித்து எளிய நடையிற் காட்டினால் அநேகமாக

எல்லோருக்கும் விளங்கும் என்றே கருதுகிறேன். திருக்குறள் போன்ற பழைய அரிய நூல்களின் மாண்பை எளிதில் அனைவர்க்கும் உணர்த்த வேண்டுமென்பதே சிறியேன் ஆசை. எனவே, இயன்றவரை எளிய நடையிலே எழுதுகின்றேன். முழுப்பயன் பெறுவேனோ என்பது நடைமுறையில்தான் தெரிதல்வேண்டும்.

தகை - அணங்கு - உறுத்தல் என்ற மூன்று சொற்கள் கொண்ட தொடர் அது. இதனை 'அணங்கு - தகை - உறுத்தல்' என்று மாற்றிக் கொண்டால் பொருள் விளங்கிக் கொள்வது கொஞ்சம் எளிதாகும். 'அணங்கு' என்றால் பெண், 'தகை' யென்பது அழகு முதலியன, 'உறுத்தல்' வருத்தத்தை உண்டாக்குதல்; எனவே இச்சொற்றொடர், 'மங்கையின் அழகு முதலியன வருத்தத்தைச் செய்தல்' என்ற பொருள் தந்து நிற்கிறது. மேலும், இவ்வதிகாரப் பெயர், நிறைந்த பொருளை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது. 'பெண்ணின் அழகு யாருக்கு வருத்தந் தருகிறது? அப்பெண் யார்? அது ஏன் வருத்துகிறது?' என்ற வினாக்களெல்லாம் எழுகின்றன. இவற்றிற்குரிய விடைகள் முழுதும் அவ் அரிய சொற்றொடர்க்குள் தொக்கி நிற்கின்றன.

வள்ளுவனார், தமது காமத்துப்பாலை ஒரு நாடகம் போல் ஆக்கியிருக்கின்றார். தமது குறளின் மற்றைப் பகுதிகளைப் போல, தாம் கூறுவதாக இக்காமத்துப்பால் இல்லை. இப்பகுதிப் பாக்களெல்லாம் பிறர் வாயிலாகப் பாடப்படுகின்றன. இவைகளே துறைப்பாக்கள் என்பன. களவியல் என்பது 'காதலர் சேர்க்கை' காதலர் சேர்தற்கு முதலாவது நிகழ்ச்சி அவ்விருவரின் சந்திப்பேயல்லவா? சோலையிலே ஒரு பருவமங்கை தனித்து நிற்கின்றாள்; ஆண்டு ஓர் இளைஞன் அவ்வணங்கைக் காண்கின்றான்; அன்னாள் அழகு அவ் இளைஞனை வருத்துகின்றது. இதுதான் 'தகையணங் குறுத்தல்' என்பது. அம்மெல்லியலாளின் பேரெழிலால் தாக்கப் பெற்ற வாலிபன், அம்மங்கை நல்லாளைப் பற்றி எண்ணமிடுகின்றான். அவன் உள்ளப் பெருக்கம் ஊற்றெடுத் தோடும்

அழகே இவ்வதிகாரப் பாக்கள் பத்தும். பத்துப் பாக்களும் விலையிலா மணிகளே யென்பதில் ஐயமில்லை. எனினும், விரிவஞ்சிச் சுருக்கமாகக் காட்டுவேன்.

காமத்துப்பாலின் முதல் இயலாகிய களவியலில், முத லதிகாரமாகிய தகையணங் குறுத்தலில், முதற்பாட்டு மிகவும் கம்பீரமாக ஓடுகின்றது. நாடக மேடையில் அரங் கத்தே நின்றுகொண்டிருக்கும் அழகிய பெண்ணுருவைக் காதல் கொண்ட, தேர்ந்த ஆண் நடிகன் எவ்வாறு பரபரப் போடு அலங்கரிப்பான் என்பதை இப்பாட்டுச் சித்திரம் தெள்ளிதிற் காட்டுகின்றது. தேன்விரிக்கும் பூஞ்சோலை நடுவே நிற்கும் மயிலனைய மங்கையின் கட்டழகால் சொக்கிய தலைவன்,

அணங்கு கொல்! ஆய்மயில்
கொல்லோ! கனங் குழை
மாதர்கொல்! மாலுமென் நெஞ்சு.

என்று மருள்கின்றான். கனங்குழை - கனத்த காதணியை உடைய இப்பெண், (காதில் கனமான ஆபரணத்தை அணிதல் பெண்கட்கு அழகும் சிறப்பும் எனப் பண்டைக் காலத்தில் கருதப்பட்டதாகத் தெரிகிறது; அது பற்றியே வள்ளுவனார் கனங்குழை என இயம்புகின்றார். இன்றும், பெரிதும் திரு நெல்வேலி ஜில்லாப் பழைய தமிழ்மக்கள் நமக்குக் கனங் குழையை நினைப்பூட்டுகின்றனரன்றோ) அணங்கு கொல்! தெய்வப் பெண்ணோ? அன்றி, ஆய்மயில் கொல்! ஆராய்ந் தெடுக்கப் பெற்ற மயிலோ? அல்லது, மாதர்கொல்! ஒரு மானுடப் பெண்தானோ? என் நெஞ்சு - என் மனமானது, மாலும் - மயங்கி நிற்கின்றதே; என்று கூறி அவள் வயத்தே கண்ணைப் பறிகொடுத்து விட்டான் ஆடவன்.

பிறகு நடந்ததென்ன? இவனது பார்வையை இடை மறித்து ஒரு வெட்டு வெட்டிவிட்டது, கொல் படையாகிய அம்மாதரார் மருண்ட விழிகள். உடனே எண்ணமிடுகின் றான் இளைஞன். என்ன வியப்பு இது!

நோக்கினாள் நோக்கெதிர்
நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து

*நோக்கினாள் - அழகினையுடையாளாகிய இவள், நோக்கு - எனது பார்வைக்கு, எதிர்நோக்குதல் - எதிராகத் தனது விழிகளைச் செலுத்துதல், தாக்குஅணங்கு - இயல்பாகவே தாக்கி வருத்தும் ஒரு தெய்வப் பெண், தானை - கொண்டு - அன்னது - உடைத்து - மேலும் தாக்குதற்குப் படையையும் கொண்டு வருவதுபோல இருக்கிறதே; என்று கண் ஆகிய படையினால் தான் உடைந்த வகையை உரைக்கின்றான். ஆம்! முன்னரே அப்பாவையின் அழகு கண்டு வருந்திக் கண்ணைப் பிற பொருளில் செல்லவிடாது, கருத்தழிந்த அவனுக்கு அவள் கொல்படையான கண்ணேறு பொறுப்பதெப்படி? ஆகவே, அக்கண்ணேறு கொல்லுங்கூற்றுக்குச் சமம் என நினைக் கின்றான் வள்ளுவரின் வாலிபன்.*

பண்டறியேன் கூற்றென்
பதனை இனிஅறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு.

*கூற்று - என்பதனை - பண்டு - அறியேன் - எமன் என்று சொல்லக்கூடிய ஒன்றை முன்னே நான் நேராக அறியேன்; இனியறிந்தேன் - இப்பொழுதுதான் அதனைக் கண்முன் கண்டேன்; அக்கூற்றுப் பெண் தகைமையோடு கூடிய பெரிய கண்களையுடைய ஒன்று; என உரைத்து நின்றான். கண்டவர்கள் உயிரைக் குடிக்கக் கூடிய தோற்றத்தோடுகூட இவ்வணங்குக்குக் கண்கள் பொருந்தி யிருக்கின்றனவே; என்ன கொடுமையிது! என நினைக்கின்றான். உடனே தன்மீது செலுத்தப் பட்ட கண்ணைப் பற்றி ஓர் ஐயப்பாடு நிகழ்கின்றது அவனுக்கு.*

கூற்றமோ கண்ணோ
பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து.

இப்பெண்ணினது கண், எமனா? அல்லது கண்தானா? அன்றிப் பெண்மான் கண்ணா? மூன்று மாதிரியாகவும் எனக்குத் தோற்றுகிறதே; என்னை அது கொல்வதைக் கொண்டு கூற்றம் என்று நினைக்கவேண்டியதிருக்கிறது; என்மீது வீழ்வதைப் பார்த்தால் கண்ணென்று சொல்லலாம் போலிருக்கிறது; மருண்டு மருண்டு விழிப்பதைக்கொண்டு மான் கண் என்றும் வழுத்தலாம் எனத் தோற்றுகிறது எனக் கற்பனை செய்த தலைமகன், நல்ல வேளை; இந்த வளைந்த புருவம் மேலேயிருந்து கொண்டு இவள் கண்கள் என்னைக் கொன்றுவிடாமல் காக்கின்றது; அது தவிர, மதயானை உலகை அழித்துவிடாமல் காக்க அதற்கு முகபடாம் இட்டது போல என் உயிரை அடியோடு வாங்கிவிடாமல் காக்கவே இவள் தனம் துகில் தாங்கியது போலும் என்று இயம்பிவிட்டு, அந்தோ! இம்மாதரார் வயப்பட்டு என் வலி போய் விட்டதே எனக் கூறுகின்றான்.

ஒண்ணுதற் கோஒ
உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு.

இவள் அழகிய நெற்றிக்குத் தோற்றுவிட்டது, போர்க்களத்தே பகைவரும் அஞ்சுகின்ற என் பெருமை; எனக் கவல்கின்றான் இருக்கட்டும்! இயற்கை எழில் மிக்க இவட்கு ஏன் பயனின்றி இவ்வளவு நகைகளை இட்டிருக்கின்றனர் என அவள் தூக்கிய சுமையைத் தான் சுமப்பது போல் பெரிதும் வருந்துகின்றான். கடைசியாக அடக்க முடியாத ஆசை யுணர்ச்சியை உள்ளூர அழகிய உருவகத்தால் வெளியிடுகின்றான் நமது காதல் இளைஞன் பத்தாவது பாட்டில்,

உண்டார் கண் அல்லது
அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று.

அடுநறா - காய்ச்சப்பட்ட மதுவானது, உண்டார்கண் அல்லது - உண்டவர்களிடத்து அல்லாமல், காமம்போல் - காமத்தைப்

போல, கண்டார் - மகிழ்செய்தல் - இன்று - கண்டவர்கட்கு மகிழ்ச்சியை யூட்டக்கூடியதன்று. மது, உண்டவர்கட்கே இன்பம்தரும்; மதுவைக் கண்டவர் இன்பம் எய்த முடியாது; காமம், அப்படியல்ல; அது காட்சியினளவாலேயே இன்பம் நல்குவதுஎன, அப்பெண்மீது முழுக் காதல் கொண்டு மயங்கி நிற்கின்றான் இளைஞன். காதல் காமம் என்ற இரண்டு சொற்களும் ஒரே பொருளில் கையாளப் பெற்றிருக்கின்றன பண்டை ஆசிரியர்களால். எனவே, ஆசிரியர் வள்ளுவர் நூலில் வரும் காமம் என்ற சொல் தாழ்ந்த பொருளிலேயே வருவதாகக் கொள்ளுமாறில்லை. எனவே, காமுற்ற - அல்லது காதல் கொண்ட தலைவன், காதற்குரிய பெண்ணின் வயப்பட்டு நின்ற நிகழ்ச்சியைச் சித்திரிக்கும் அதிகாரம் 'தகையணங் குறுத்தல்' என்பது.

## குறிப்பு அறிதல்

வள்ளுவனார் காமத்துப்பாலின் இரண்டாவது அதிகாரம் 'குறிப்பறிதல்' என்பது. பூஞ்சோலையிலே கண்ட மங்கையின் அழகால் தாக்கப்பெற்று மயங்கி நின்ற இளைஞன், தான் விரும்பும் அம்மயிலின் குறிப்பு எது என ஆராயத் தொடங்குகின்றான். குறிப்பை அறிவதற்குக் கூறிய அதிகாரமே குறிப்பறிதல் என்பது. இவன் அவளைக் காதலித்தால் போதுமா? அவள் குறிப்பை - உள்ளக்கிடக்கையை - இவனைக் காதலிக்கிறாளா என்பதை - அறிந்து கொள்ளுதல் வேண்டுமல்லவா? அவன் குறிப்பை அறிந்து கொள்ளாமல் ஒழுங்கு மீறிய செய்கையிற் புகுவது இழிவன்றோ? மேலும், அவள் நினைவு இன்னதென்றே அறியாமல் அவள்மீது தான் கொண்ட ஆசை ஒன்று காரணமாக மட்டும், ஒரு பெண்ணைக் கூடுவதில், விரும்பும் இன்பம் சிறிதும் இராது என்பதை நுண்ணறிவுடையான் அறியாதிருப்பனோ? 'எதிரியைப் பற்றிய கவலையில்லை; தான் மட்டும் விரும்பினால் போதும்' என்பது இராவணன் அறம்; இது வள்ளுவர் அற மன்றோ? எனவே, நமது வள்ளுவரின் இளைஞன், தான் விரும்பும் கட்டழகி

தன்னை விரும்பினாலொழிய அவளை அடைவதில் பய னில்லை யெனக் கருதி, அவள் தன்னை எவ்வாறு நோக்கு கின்றாள் என்ற குறிப்பை அறிகின்றான். அவன் குறிப்பை அவள் அறிந்துகொள்ள முயலவில்லையா என்ற கேள்விக்கு இடமேயில்லை. அவனது பரபரப்பு வெளிப்படையேயன்றோ? எனவே அவன் குறிப்பை அவள் அறியத் தேவையில்லை யாகிவிட்டது. அப்பெண் தன்னைக் காதலிக்கிறாளா என்ற குறிப்பை அவன் அறியத்தொடங்குகின்றான்.

உள்ளக்கிடக்கையைத் தெற்றென அறிவுறுத்துவது கண்ணே யென்பது அவனுக்குத் தெரியும். உடனே கண்ணை ஆராய்கின்றான்.

இரு நோக்கு இவள் உண்கண்
உள்ளது ஒரு நோக்கு
நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து.

இப்பெண்ணுடைய மை தீட்டிய கண்ணுள்ளே இரண்டு பார்வை யிருக்கின்றது; அவ் இரண்டனுள் ஒரு நோக்கு எனக்கு நோய் செய்யும் நோக்கு; மற்றொரு நோக்கு அந் நோய்க்கு மருந்தாகிய நோக்கு என எண்ணுகின்றான். அவளு டைய பார்வை இவனுக்கு இரண்டு விதமாகப் படுகின்றது. முன்னையது இவனுடைய உள்ளத்தே கிளர்ச்சியை உண் டாக்கிக் காமநோயைத் தருகின்றது; உடனே இன்னொன்று முதல் செய்த நோய்நோக்கிற்குத் தாமே மருந்தாக அமை கின்றது என அவன் காண்கின்றான். அவள் செய்த நோயை ஆற்றவல்ல மருந்து அவளிடம் உண்டேயன்றி வேறெங்கும் பெற முடியாதன்றோ? 'மந்திரம் இல்லை, வேறோர் மருந் தில்லை, மையல் நோய்க்கு.' நோய் நோக்குச்செய்த அவள், அது அவனைக்கொல்ல விட்டுவிடாது மருந்து நோக்கையும் அருளினாள் எனக்கண்டதும் அவன் அடைந்த களிப்பிற்கு எல்லை சொல்ல முடியுமோ?

கண்களவு கொள்ளும்
சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது.

என மகிழ்கின்றான் தலைவன். தலைவியின் மருந்துப் பார்வை - கள்ள நோக்கு - தன்மேல் வீழ்ந்தவுடன் மெய்யுறு புணர்ச்சியில் ஒரு சரி பாதிக்குமேல் தான் நுகர்ந்துவிட்டதாக இறுமாந்து இன்பக் கடலாடுகின்றான் இளைஞன். யான் காணாமல் இந்நங்கை என்மேல் செலுத்துகின்ற அருகிய களவுப் பார்வை, சேர்க்கையின்பத்தில் ஒரு நேர் பாதியை மட்டும் தருகின்றது என்று சொல்ல முடியாது; அதில் சரி பாதிக்கு அதிகமான இன்பத்தையன்றோ ஈகின்றது; எனக் கூறுகின்றான் என்றால், அவன்மேல் வீழ்ந்து களவுகொண்ட விழியினால் அவன் எவ்வாறு மருட்டப்பட்டான் என்ற இயற்கையைச் சொல்லவும் வேண்டுமோ? பார்வையிலே பெற்றுவிட்டான் பாதிக்கு அதிகமான இன்பத்தை!

நோக்கினாள்; நோக்கி
இறைஞ்சினாள்; அஃது அவள்
யாப்பினுள் அட்டிய நீர்.

நோக்கினாள் - என்னைப் பார்த்தாள்; நோக்கி - பார்த்ததும். இறைஞ்சினாள் - (நாணத்தால்) தலை குனிந்தாள்; அஃது - அவள் அப்படிச்செய்த அக்குறிப்பானது, யாப்பினுள் - (எங்கள் இருவரிடத்தும் தோன்றிய) அன்பு என்ற பயிருள், அவள் அட்டிய நீர் - (அப்பயிர் வளர்வதற்காக) அவள் பாய்ச்சிய நீராயிற்று. என்னைக் காதற் பார்வை பார்த்து நாணி அவள் தலை கவிழ்ந்த குறிப்புச் செயலானது எங்கள் காதற் பயிரை வளர்க்க அவள் கொட்டிய நீராயிற்று என இறும்பூதெய்துகின்றான்.

யானோக்குங் காலை
நிலநோக்கும்; நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.

யான் அவனைப் பார்க்குங்கால் என்னை எதிர்த்துப் பார்க்காமல் தரையைப் பார்த்துக் குனிந்து நிற்கின்றாள்; நான் அவளைப் பார்க்காது கண்ணை வாங்கிக்கொண்டவுடன்

அவள் என்னை நிமிர்ந்து பார்த்து மெதுவாகச் சிரிக்கின்றாள். அதுதவிர,

குறிக்கொண்டு நோக்காமை
யல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

நேராகக் குறித்து என்னைப் பார்க்காமல் ஒரு கண்ணைச் சுருக்கிக்கொண்டவள் போலப் பாவனை செய்து - (கடைக் கண் வீசி) உள்ளே மகிழ்கின்றாள். எனவே அவள் குறிப்பு நன்றே என உணர்கின்றான் தலைமகன். குறித்த ஐந்து குறளாலும் அந்நங்கை தன்னைக் காதலிக்கின்றாள் என்ற குறிப்பைச் செவ்வனே அறிகின்றான் இளைஞன்.

தொடக்கத்தில் இரண்டு பார்வையைச் செலுத்தினாள் அவள்; அவற்றுள் ஒன்று இவனுக்கு நோய் செய்தது; பிறிதொன்று அந்நோயைத் தணித்தது. பிறகு அவள் நோக்கு, கள்ளப் பார்வையை அள்ளியெறிந்தது; அது கண்டு மயங்கி இன்பத்தில் பெரும்பகுதியைத் திளைத்தவனானான் இவன். பின்றை அவள் இவனை ஒரு பார்வை பார்த்து அப்படியே தலைகுனிந்துவிட்டாள்; அதனால் காதற் பயிர் வளர்ந்து செழித்துவிட்டது. அதன் பின், இவன் அவளைப் பார்த்தான்; அவள் பூமியை நோக்கினாள். இவன் திரும்பினான்; அவள் மெதுவாக இவனை நோக்கிப் புன்முறுவல் தூவினாள். கடைசியாகக் குறிவைத்து இவனை வெட்டுப் பார்வை பார்த்துக் கொண்டேயிராமல் கடைக்கண் வீசி இளநகை செய்துவிட்டாள். எனவே அவள் குறிப்பு நன்றே என இவள் தெளிதற்குப் போதிய காரணங்கள் கிடைத்துவிட்டன. தான் அவளைக் காதலிப்பது போலவே அவளும் தன்னைக் காதலிக்கின்றாள் என உணர்ந்தான் அவன். ஆனால் ஒரு சிறு இடையூறு வந்தது. அதுவும் உடனே நீங்கிவிடுகிறது.

இந்நிலையில் தலைவியின் இச்செயலையும் அவள் வயப் பட்டு ஒரு பூமான் மயங்கி நிற்பதையும் அறிந்த தலைவி

யின் தோழி தலைவியைக் கடிந்து ஏதேதோ சொல்லுகின் றாள். தலைவி என்ன செய்தாள்? தோழியை மறுத்து 'நான் அவனைக் காதலிக்கத்தான் செய்வேன்' என்று சொல்ல வில்லை; அதற்கு நாணுகின்றாள் அவள்; அம்மனிதனை வெறுக்கின்றவள் போல் காட்டிக்கொண்டு அவனை வெறுத் துச் சில சொல்கின்றாள் வாய்விட்டு; கோபப்பார்வை பார்க் கின்றாள்; அவள் உரை காதில் வீழ்ந்தது; அவள் வெறித்த பார் வையையும் கண்டான். என்றாலும், அவன் ஏமாறவில்லை. அவ்வழகியின் உரை வெற்றுரையெனவும் அக்கடுஞ் சொற் குள்ளும் காதற் கலப்பு உண்டெனவும் அவன் அறிந்தான். அவ்விளைஞன் நுண்ணறிவினன்; எளிதில் ஏமாறக்கூடிய வனல்லன். அவள் வெறித்த பார்வையுள் அடங்கியிருந்த காதல் வெள்ளத்தை அவனோ காணாது விடுபவன்?

உறாஅ தவர்போற்
சொலினும் செறார்சொல்
ஒல்லை உணரப் படும்.

செறாஅச் சிறுசொல்லும்
செற்றார்போல் நோக்கும்
உறார்போன்று உற்றார்குறிப்பு.

என அவள் மேலும் ஊக்கங் கொள்கின்றான்.

அவள் பொருந்தாதவள் போல் பேசினும், 'உண்மையில் உள்ளத்தே வேறுபாடு இல்லாதவர் சொல்லின் பயன் விரை வில் அறியப்படும்; வருத்தப்படுத்தாத கடுஞ் சொல்லும் பகைத்தவர் போற் காட்டுகின்ற கோபப் பார்வையும் பகைப் பவர் போன்று வெளிக்குக் காட்டுகின்ற நட்பினரது குறிப்பு அல்லவோ? இது எனக்குத் தெரியாதோ' என எண்ணமிடு கின்றான் அக்கூர்த்த மதியினன்.

ஆனாலும், 'என்ன இவள் இப்படி செய்கின்றாள்' என ஒருவிதமாகப் பார்த்தான் அவன். அவள் உடனே இவன் தன்மை கண்டு நெகிழ்ந்து மெதுவாகச் சிரித்துவிட்டாள். ஒரு

கணத்தே ஆனந்தம் பொங்கி விட்டது அவனுக்கு. அவள் பூத்த சிரிப்பால் ஒரு அழகுக் குறிப்பைக் கண்டு கொண்டான்.

**அசையியற்கு உண்டாண்டோர்**
**ஏஎர்யா னோக்கப்**
**பசையினாள் பைய நகும்.**

'யான் பார்க்க, எனது பார்வையைக் கண்டவுடன் எனக்கு இரங்கி மெதுவாகச் சிரிக்கின்றாள் அவள்; அசைகின்ற நுணுகிய இயல்பினையுடைய அப்பெண்ணிடத்தே உண்டு காதற்குறிப்பு' எனப் பேரானந்தப் பெருவாரிதியில் திளைத்து விட்டான்.

குறிப்பறிதல் அதிகாரத்தில் இதுவரை கூறிய எட்டுப் பாக்களும் தலைவன் கூற்று. இனி இரண்டு பாட்டுக்கள் தோழி கூற்று. அனைத்தையும் கண்டாள் தோழி. இனித்தான் ஒதுங்கிக் கொண்டு காதலர்களைத் தனிவிடுத்தலே தகுதியென உணர்கின்றாள் தோழி. தோழி தன்னுள்ளே சொல்லிக் கொள்ளுகின்றாள்.

**ஏதிலார் போலப்**
**பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே உள.**

**கண்ணொடு கண்ணிணை**
**நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல.**

அயலாரைப் போல ஒருவரை ஒருவர் பொதுநோக்காகப் பார்த்துக் கொள்ளுதல் காதலரிடத்தேயே நிகழக்கூடியன; ஒருவர் கண்ணொடு இன்னொருவர் கண்கள் பார்வையில் ஒத்துவிட்டால் பிறகு வாய்ச் சொற்கள் ஒரு பயனையும் தாரா என நினைக்கின்றாள் தோழி. கருத்தென்ன? வாயினால் தன்னிடம் மறுத்துப் பேசுகின்றாள்; ஆனால் செய்கை முற்றும் மாறாக இருக்கின்றது. கண்ணொத்து விட்டது; நோக்கம் பொதுவில் வீழ்கின்றது; வீண்வாய்ச் சொற்களில் என்ன

பயன் எனக்கருதி, இனி நமக்கு வேலை இங்கு இல்லை எனத் தோழி விலகிவிடுகிறாள். பிறகு சொல்லவும் வேண்டுமா? காவிலே கருத்தொத்த காதலர் சேர்க்கை! காதலுக்கு இருவரும் வயப்பட்டார்; கூடினர்; களித்தார்; குறிப்பறியப்பட்டது; கூட்டுறவு நேர்ந்தது; கருதிய இன்பம் கைகூடிற்று. இன்பம் துய்த்து மகிழ்ந்த உணர்ச்சி அடுத்த அதிகாரம் 'புணர்ச்சி மகிழ்த'லில் வெளிப்படும்.

## புணர்ச்சி மகிழ்தல்

தான் காதலித்த பெண்ணின் தகுதியால் தலைவன் தாக்கப்பட்டான். பின் காதலிக்கப்பட்ட தலைவியின் குறிப்பை அறிந்தான். தான் காதலிக்கும் அப்பெண் தன்னை நச்சுகின்றாள் என உணர்ந்தான். இருவர் கண்களும் தடையின்றி உறவாடின. இருவரும் கூடி இன்புற்றனர். 'கந்தருவ முறைமையினால் கடவுளர்க்கும் கிடையாத காமந்துய்த்தார்.' தம் வாழ்நாளில் இதுகாறும் காணாப் புத்தின்பத்தை இருவரும் எய்தினர். இன்பம் இருவருக்கும் ஒரு தகைத்தெனினும், பெண்ணியல்பால் போலும், உடனே அப் பூங்கொடிவாய் விட்டு ஒன்றும் கூறி மகிழத் தொடங்கினாளல்லள். ஆனால், தான் நுகர்ந்த அப்புதிய காதல் இன்பத்தை - அம்மெல்லியல் மாட்டுத்தான் பருகிய இளநலத்தை, எண்ணி எண்ணி மகிழ்கின்றான் இன்பக் கடலாடினோன். புணர்ச்சியை மகிழ்ந்து கூறும் முறையில் யாக்கப்பட்ட பாக்களைக் கொண்ட அதிகாரமாகலினாலேயே புணர்ச்சி மகிழ்தல் என்னும் பெயர் பெற்றது.

புணர்ச்சி மகிழ்தல் அதிகாரத்தின் முதற்குறள் இவ்வதிகாரத்தின் சிகரம் என்னத் தக்க முறையில் அமைந்து கிடக்கின்றது. சேர்க்கையின் முடிவில், தான் கண்ட இன்பத்தை அப்படியே காட்டுகின்றான் தலைவன்.

**கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து**
**உற்றுஅறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள.**

இதுவே முதற்குறள். மனிதன் இன்பத்தை அடைதற்கு ஏற்பட்ட வாயில்கள் ஐந்து. கண், காது, வாய், மூக்கு, உடல் என்ற ஐந்தின் வழியாகவே உலகில் அனைவரும் இன்பம் அடைகின்றார். இவ்ஐம்புல நுகர்ச்சியும் ஒரே காலத்தில் ஒரே இடத்தில் பெறுவது அரிது. கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று, அறியும் ஐந்து கருவிகளின் இன்ப நுகர்ச் சியும் மங்கையிடந்தான் இருக்கின்றன; என்று இயம்புகின் றான் தலைவன். அவள் அழகை - அன்பைப் பருகும் இன்பத் தைக் கண்கள் கொண்டன. அக்குயிலின் இசையை உண்ணும் இன்பத்தைச் செவிகள் ஏற்றன. அப்பணிமொழியாளின் பாலொடு தேன் கலந்தன்ன திருவாய் அமுதத்தை மாந்தி, வாய் இன்பம் பெற்றது. அப்பாவை பூமேனியின் இயற்கை மணத்தையோ செயற்கை வாசனையையோ முகர்ந்து மூக்கு இன்புற்றது. அம்மடமயில் உடலொடு பொருந்தி, யாக்கை பெற்ற இன்பத்துக்கு எல்லையின்று. இப்படியாக ஐவகை இன்பத்தையும் ஒருங்கே பெறவல்ல ஒரு பொருள் உலகத் துண்டு என்றால் அப்பொருள் பெண்ணே எனத் தலைவன் வாயிலாக ஆசிரியர் வள்ளுவனார் சாற்றுகிறார்.

இக்குறளை அப்படியே எடுத்துச் சுவை குன்றாமல் இடமறிந்து தமது பெரிய புராணத்தில், காதல் விளையாட் டில் தேர்ந்த சுந்தரமூர்த்தி காதையில் சமைத்து இன்புற்றிருக் கின்றார் சேக்கிழாரடிகள் என்பதை இங்குக் குறிப்பிடுதல் பொருந்தும்.

பண்டுநிகழ் பான்மையினால்
பசுபதிதன் அருளாலே
வண்டமர்பூங் குழலாரை
மணம்புணர்ந்த வன்தொண்டர்

புண்டரிகத் தவள்வனப்பை
புறங்கண்ட தூநலத்தைக்
கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று
அமர்ந்திருந்தார் காதலினால்.

*இப் பாட்டினுள் வள்ளுவனார் குறள் நன்றாகப் பதிக்கப் பட்டிருத்தல் காணத்தக்கது. அடுத்த குறள்,*

பிணிக்கு மருந்து
பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானேமருந்து.

*நோய்க்கு மருந்து வேறு; அணியிழை தன் நோய்க்கு, அதாவது: பெண்ணால் தரப்பட்ட ஆசை நோய்க்கு அப் பெண்தான் மருந்து. மற்றைய நோயைப் போக்குதற்கு அந்த நோயே மருந்தாக உதவாது; ஆனால் பெண்ணால் கொடுக் கப்பட்ட நோயை - அதாவது பெண்ணை அனுபவிக்க வேண் டும் என்ற ஆசை நோயை, அகற்ற வல்ல மருந்து அவளாகவே யிருக்கின்றாள் என்பது இதன் பொருள். ஒரு நங்கையின் கூட்டுறவு விரும்பி மையல் பிணியை எய்திய ஒருவன், அவள் சேர்க்கையால் அந்நோய் நீக்கம் பெற்றதற்கு வியந்து ஏனை நோய்க்கும் மையற் பிணிக்கும் உள்ள வேறுபாட்டை நினைந்து பாராட்டி மகிழ்கின்றான்.*

மந்திரம் இல்லை! வேறோர் மருந்தில்லை!
மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வாய் ஆதலால்!
அமுதச் சொல்லீர்!

*என்று கம்பர் கூறும் கருத்து இதனோடொத்தது.*

*அடுத்த செய்யுளில் தலைவனது இன்ப நுகர்ச்சிக்கு வைகுந்த லோகமும் ஈடாகாது எனச் சாற்றுகின்றார் புலவர் பெருமான்.*

தாம் வீழ்வார் மென்தோள்
துயிலின் இனிது கொல்!
தாமரைக் கண்ணான் உலகு.

*தாம் விரும்பும் மகளிரின் மெல்லிய தோளினிடத்தே துயில் கொள்ளுதல் போன்ற இனிமையுடையதா, செங்கண்மால் உலகம்?*

*அஃதிருக்கட்டும். ஓர் விந்தையான நெருப்பை இவள் வைத்திருக்கின்றாள். தீ, தொட்டால் சுடும்; அகன்றால் விட்டு விடும். இவளிடத்தே உள்ள தீ, நேர்மாறாக இருக்கின்றது.*

நீங்கில் தெறூஉம்
குறுகுங்கால் தண்ணென்னும்
தீ யாண்டுப் பெற்றாள் இவள்?

*இவளை விட்டு நீங்கினால் சுடுகின்றது; இவளை நெருங்கினால் குளிர்கின்றது; இத்தகைய தீயை இவள் எங்கிருந்து பெற்றுக்கொண்டாள்?*

வேட்ட பொழுதின்
அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்.

*மலரணிந்த கூந்தலையுடைய இந்நாரியின் தோள், அநுபவிக்கும் போதெல்லாம், விரும்பிய பொழுதில் விரும்பப்பட்ட அவ்வப்பொருள்கள் கிடைத்தன போன்ற புத்தின்பத்தைத் தருவது போல் இன்பம் செய்கின்றது. மேலும்,*

உறுதோறு உயிர் தளிர்ப்பத்
தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்.

*'என்னை அடையும் போதெல்லாம் என் உயிரைத் தளிர்க்கும்படி பொருந்துதலால் இப்பெண்ணின் தோள்கள் உயிரை நீங்காது காக்கவல்ல அமிழ்தம் என்ற உயரிய பொருளினாலேயே செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.' இவ்வாறு தன்னை இன்புறுத்திய தோள்களைப்பற்றி எண்ணிய தலைவன், தனது இப்பெண்ணின் சேர்க்கைக்கு நிகராக எதைச் சொல்லலாம் என ஆராய்ந்து துணிகின்றான். ஒரு அழகிய ஒப்பையும் கண்டு பிடிக்கின்றான்.*

தம்மில் இருந்து
தமது பாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு

'இப்பெண்ணினது சேர்க்கையானது, ஒருவன் தமது வீட்டிலே இருந்து, தமது பொருளை - அதாவது தாம் ஈட்டிய பொருளை, கடமையறிந்து வேண்டுமாறு பகுத்துச் செல விட்டு உண்டு அனுபவிக்கும் நல்லின்பத்தை யொக்கும்' என்பது இப்பாட்டின் போந்த பொருள். இன்பப் பாலிற் புகுந்து இன்பச் சொற்களையும் பொருள்களையும் வாரி வாரி வீசி, இளைஞர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பேராசிரியர், இடையே ஈண்டுப் பொத்தென்று போட்ட நல்லறம், எல்லையற்ற வலிமை பெறுகிறது. தாமரைக் கண்ணான் உலகினும் இல்லையென்று சாற்றிய ஒரு இன்பத்துக்கு, தமது பொருளைப் பகுத்துண்ணும் இன்பம் சமம் என்ற வள்ளுவர் உள்ளக்கிடக்கை, சான்றோரால் தலைமேற் கொள்ளும் தகுதிவாய்ந்த உயர்ந்த கருத்தமைந்தது என்பதில் தடை யென்னே? அடுத்த பாட்டு,

வீழும் இருவர்க்கு
        இனிதே! வளியிடை
போழப் படாஅ முயக்கு

என்பது. விரும்புகின்ற ஆண், பெண் இருவர்க்கும் இனிமை பயப்பது எது, காற்றினாற்கூட இடையறுக்கப்படாத சேர்க்கையே.

காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்

என்று சிலப்பதிகாரத்தில் மணக் காலத்தில் கண்ணகியை வாழ்த்தியதும்,

சேர்த்தியகை ஞெகிழாமல் சேர்ந்து சேர்ந்து

என்று வில்லி பாரதத்தில் சித்திராங்கதை விஜயன் இன்ப வாழ்க்கையைப்பற்றி இயம்பியதும் வள்ளுவனார் 'வளியிடை போழப்படாஅ முயக்'கை அரண்செய்கின்றன.

ஊடலில்லையேல் புணர்ச்சி பயனின்று என்ற உண்மையை,

ஊடல் உணர்தல்
புணர்தல் இவை காமம்
கூடியார் பெற்ற பயன்

என்னும் பாட்டில் கூறப்படுகிறது. முதலிலே ஊடல்; பிறகு அளவறிந் துணர்தல், அதன் பின் சேர்தல்; இவை தாம் காமமடைந்தார் பெற்ற பயன்கள் என உணர்கின்றான் தலைவன். ஊடல் - அல்லது புலவி என்பதை இங்கு விரிக்கிற் பெருகும். அதுபற்றி வள்ளுவர் பின்னே அதிகாரம் வைத்திருக்கின்றார்; ஆகலின் அங்கு அதனை ஆராயலாம். ஊடல் என்பதற்குச் சிறுசண்டை எனப் பொருள் கொள்ளலாம். ஊடலின்றேல் கூடல் பயனின்று என்பது வள்ளுவரின் முடிந்த கொள்கை. புணர்ச்சி மகிழ்தல் அதிகாரத்தின் கடைசிப்பாட்டு,

அறிதோறு அறியாமை
கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு

என்பது. சேயிழையாள் இடத்துச் சேரச் சேர, இவளுடைய காதலானது, முன்னம் அறியாததை அறியும்போது பழைய அறியாமையைக் கண்டது போன்றிருக்கின்றது என்று வியந்து கூறுகின்றான். இது நிறைந்த கருத்துடையது. ஆராய்ச்சி எப்படி முடிவில்லாது செல்லுமோ, அத்தகையது இவ்இன்பம்; நாள்தோறும் புதிய இன்பம் காணப்படுகின்றது, என்பதே இதன் கருத்து.

புணர்ச்சி மகிழ்தலை - காதலிபால் தான் பெற்ற இன்பத்தை, நமது வள்ளுவனார் பெற்ற மகன், இவ்வாறு விரித்தோதித் தான்பெற்ற இன்பத்தை இவ்வையகம் பெறுமாறு செய்கின்றான்.

# 14

# காதல் வாழ்க்கை

*1948*

**மு. வரதராசன்**

*மக்கள் வாழ்க்கை*

உயிர் இயங்கத் தொடங்கியது. இயக்கத்திற்கு உடம்பு வேண்டியதாயிற்று. அவ்வாறு முதல்முதல் அமைந்த உடலில் ஊறு என்னும் உணர்வு ஒன்றே சிறந்து நின்றது. அந்த நிலையில் உயிர் கட்டுண்டே நின்றது; விளையாட முடியவில்லை. இன்றும் அந்த நிலையில் எஞ்சிநிற்கும் உடல்களே புல் பூண்டு செடி கொடி மரம் முதலியவை. இவற்றை ஓர் அறிவு பெற்ற உயிர்வகை என்று பாகுபாடு செய்வது வழக்கம். இத்தகைய உடலால் பயனில்லை என்று கண்டதும், உடலில் மற்றோர் உணர்வும் வளர்ந்தது. அதுவே சுவை யுணர்வு. அதற்காக வாய் அமைந்தது. உலகம் உற்றும் சுவைத்தும் உணரப்பட்டது. அங்கும் குறையே காணப்பட்டது; அந்த நிலையிலும் உயிர் கட்டுண்டே நின்றது; விளையாட்டு நிகழ

வில்லை. நத்தை சிப்பி சங்கு கிளிஞ்சல் முதலியவை அந்த நிலையில் எஞ்சி நிற்பவைகளே. அடுத்த முயற்சியாக உடம்பில் முகரும் உணர்வு வளர்ந்தது. அதற்காக மூக்கு அமைந்தது. அவ்வாறு அமைந்தவைகளே செல், ஈசல், எறும்பு முதலியவை அங்கும் உயிர் வெற்றி பெறவில்லை; உலகத்தை உணரும் வகை குறையாகவே நின்றது. மேலும் முயற்சி வளர்ந்தது. உடலில் ஒளியுணர்வு கலந்தது. அதற்காகக் கண் அமைந்தது. நண்டு, வண்டு, தும்பு, ஈ முதலியவை இந்த நிலையில் தோன்றியவை. இன்னும் குறை தீரவில்லை; ஆகையால் வளர்ச்சி முன்னேறியது அடுத்தபடியாக உடல் ஒலியுணர்வைப் பெற்றுவளர்ந்தது. அதற்காகச் செவி அமைந்தது. விலங்குகளும் பறவைகளும் அவ்வாறு தோன்றியவைகளே. இப்போது உயிர் உற்றும் உண்டும் உயிர்த்தும் கண்டும் கேட்டும் ஆடத் தொடங்கியது. இந்த ஆடலும் கட்டுப்பட்ட ஆடல்தான் என்பதை உணர்ந்ததும், உயிரின் விடுதலை வேட்கை தணியவில்லை. முயற்சி மேலும் முன்னேறியது. இந்த முன்னேற்றத்தின் பயனாகவே உயிர் மனம் என்னும் சிறந்த கருவியைப் பெற முடிந்தது. இந்த மனம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புல ஆற்றலையும்விடப் பேராற்றல் பெற்ற கருவி! உயிரின் கட்டறுத்து வீடு நல்கும் கருவி; உயிர் விளையாட உதவும் கருவி; உலகப் படைப்பில் மிகமிக உயர்ந்த கருவி.

இந்த மனத்தைப் பெற்றிருந்தும் பண்படுத்தத் தெரியாமல், பயன்படுத்தவும் தெரியாமல் வாழ்நாளைக் கழிப்பவர் பலர். மனம் இருந்தும், உற்று அறிவதே பெரிதாகச் சிலர் வாழ்கின்றார்கள். அவர்களின் வாழ்க்கை, மரம் செடி கொடிகளின் வாழ்க்கை போன்றதே. வயிறே வாழ்வாக, உண்டு அறிவதே பெரிதாகச் சிலர் வாழ்கின்றார்கள். இந்த வாழ்க்கை நத்தை முதலியவற்றின் வாழ்க்கை போன்றது. உற்றும் உண்டும் முகர்ந்தும் காலத்தைக் கழிப்பவர்களும் உண்டு.

இவர்களின் வாழ்க்கையை எறும்பு, ஈசல் முதலியவற்றின் வாழ்க்கையோடு ஒப்பிடலாம். பலவகைக் காட்சிகளைக் கண்டுகண்டு, இதுவே உலகம் இதுவே உலகம் என்று வாழ் நாளைக் கழித்து மயங்குகின்றவர்களும் உண்டு; இவர்களை வண்டு தும்பி என்று குறிக்கலாம். பலவகை ஒலிகளை - மொழிகளைக் கேட்டுக் கேட்டு உலகத்தை உணர்ந்ததாகத் தடுமாறுகின்றவர்களும் உண்டு. இவர்களைக் காக்கை குருவி மான் முதலியவைகளோடு ஒப்பிடலாம். இவற்றோடு மன உணர்வையும் பயன்படுத்த வல்லவர்களையே மக்கள் என்று சுட்டுவது பொருந்தும்.

இன்று மக்கள் உடம்புகள் கோடிக்கணக்காகப் பெருகி யுள்ளன; ஆனால் மக்கள் உணர்வு பெருகவில்லை. வேறு வகையாகக் கூறினால், மக்களாய்த் தோன்றுவோரின் தொகை பெருகியுள்ளதே அல்லாமல், மக்களாய் வாழ்வோரின் தொகை பெருகவில்லை. அதனால்தான் உலகத்தில் குழப் பமும் கோளாறும் பூசலும் போரும் இன்றும் ஓயவில்லை; இன்பமும் அன்பும் அமைதியும் அறமும் இன்றும் அரும் பொருள்களாகவே உள்ளன.

உலகத்தில் வாழும் இருநூறு கோடி மக்களுள் பலர் மர வாழ்க்கையில் நிற்கின்றார்கள்; பலர் நத்தைகளாய் வாழ்ந்து நகர்கின்றார்கள்; பலர் எறும்புகளாய் ஊர்கின்றார்கள்; பலர் வண்டுகளாய் அலைகின்றார்கள்; பலர் விலங்குகளாய்த் திரிகின்றார்கள், சிலரே மனஉணர்வைப் பண்படுத்தி மக்க ளாய் வாழ்கின்றார்கள். இதனாலேயே, மக்களுக்கு உரிய உறுப்புக்கள் அமைந்திருப்பதைக் கண்டு மக்கள் என்று சுட்டுவது பொருந்தாது என்று திருவள்ளுவர் கருதுகின்றார். கயவர் மக்களே போல் தோன்றினாலும் அவர்கள் வேறு என்றும், மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர்களும் ஊக்கம் இல்லாதவர்களும் மரமே என்றும், மக்கள் வாழ்க்கைக்கு உரிய கல்வி கல்லாதவர்களே என்றும் விளக்குகின்றார்:

மக்களே போல்வர் கயவர்; அவர் அன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில். (1071)

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். (997)

உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை; அஃதில்லார்
மரம்மக்கள் ஆதலே வேறு. (600)

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். (410)

இவ்வாறு பல இடங்களில் கூறுவதோடு அமையாமல் ஓரிடத்தில் 'உடம்பின் தோற்றத்தால் ஒத்திருப்பது மக்களோடு ஒப்புமை ஆகாது. பொருந்துவதாகிய ஒப்புமை எது என்றால் மக்கட் பிறப்பிற்கு உரிய பண்பால் ஒத்திருப்பதே ஆகும்' என்று இந்த உண்மையைத் தெளிவாக்குகின்றார்.

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால்; வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. (993)

## காதலின் ஆற்றல்

தன் துன்பத்தை உணர்ந்து வருந்துவதும் தன் இன்பத்தை உணர்ந்து களிப்பதும் எல்லா உயிருக்கும் பொதுவான இயல்பு. ஆனால் மக்கட் பிறப்பில் அமைந்த பண்பு அதை விடச் சிறந்தது. அதையே திருவள்ளுவர் அறிவின் பயன் என்கின்றார். 'மற்றோர் உயிரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் உணராவிட்டால் அறிவால் பயன் உண்டோ?' என்று அவர் கேட்கின்றார்.

அறிவு வளர வளர, இந்தச் சிறந்த பண்பு அமைந்திடும் என்பது அவருடைய கருத்து; அதாவது, அறிவு வளர வளர, தன் துன்பத்தை உணர்ந்து வருந்துவது போலவே, மற்றவர்களின் துன்பத்தையும் உணரமுடியும், உணர்ந்து வருந்த முடியும் என்று தெளிவாக்குகின்றார்.

ஒரு காக்கை மற்றொரு காக்கையின் துன்பத்தை உணராது; உணர்ந்து வருந்தும் அறிவு அதற்கு இல்லை. மற்றொரு காக்கை அடிபட்டுக் கீழே விழுந்து கிடக்கும்போது அதைக் கண்டு கா கா என மற்றக் காக்கைகள் கூடிக் கரைகின்றன. ஆனால் அது துன்பம் உணர்ந்து எழுப்பும் ஒலி அன்று; ஏதோ புதுமை கண்டு மருண்டு எழுப்பும் ஒலியே ஆகும். உணவைக் கண்டபோது ஒரு காக்கை தன் இனத்தைக் கூவிக் கரைவதாகச் சொல்வதும், அதன் வாழ்க்கையில் இயற்கையாக நடைபெறும் ஒரு நிகழ்ச்சி பற்றியே ஆகும்; அது மற்றக் காக்கைகளுடன் பகிர்ந்து உண்ணவேண்டும் என்று விரும்பி அவ்வாறு செய்வதில்லை. எப்போதும் இனமாகவேகூடி வாழ்ந்து பழகிய பழக்கத்தால் உணவுப்பொருள் கண்டதும் அதற்கு இனத்தைப் பற்றிய இயற்கையான உணர்வு ஏற்பட்டு கரைகின்றது. மற்றவை கூடிவந்து உண்ணும்போது விட்டுக் கொடுக்கும் உணர்வு காக்கையினிடம் இல்லை. வலிய காக்கையைக் கண்டு மெலிந்த காக்கை ஒதுங்கி நிற்பதும், வலியது கிடைத்த வரையில் உண்டு செல்வதும் காணலாம். ஆகவே, தன் இனத்தின் துன்பத்தை உணர்ந்து வருந்தும் பண்பு காக்கைக்கும் இல்லை என்பது தெளிவு.

பறவைகளின் காதல் வாழ்க்கையும் இப்படிப்பட்டதே. ஒன்றை ஒன்று பிரியாமல் ஆண் பறவையும் பெண் பறவையும் கூடி வாழ்ந்து பழகிவிடுகின்றன. பிறகு ஏதோ காரணமாகப் பிரிய நேர்ந்தபோது, கூடிவாழ்ந்த பழக்கத்தால் பெற்ற இயற்கை உணர்வு துணையை நினைவூட்டுகின்றது. அதனால் துணையைக் கூவி அழைக்கின்றது. அவ்வளவே அல்லாமல், மக்களிடம் உள்ளது போல், துணைபிரிந்து எங்கோ சென்றுவிட்டதே என்று அதனுடைய துன்பத்தை நினைந்து உணர்ந்து கூவும் தன்மை இல்லை. கூடுகட்டி முட்டை இட்டுக் குஞ்சுகளைக் காக்கும் வாழ்விலும் இவ்வாறு இயற்கை உணர்வே காரணமாக இருக்கின்றது.

பசு தன் கன்றை நினைந்து கதறுவதிலும் இயற்கை உணர்வே காரணமாக அமைந்துள்ளது. பாலால் மடிகனத்து நிற்கும்போது கன்றை நாடும் உணர்ச்சி அதற்கு இயற்கையாக ஏற்படுகின்றது. தன்னோடு இருந்து பாலுண்டு பழகிய கன்றைக் காணாதபோது, அந்தப் பழக்க உணர்ச்சி யால் கன்றை நினைத்துக் கதறுகின்றது. அவ்வளவே அல்லாமல், கன்றின் துன்பத்தை நினைந்து உருகும் ஆற்றல் அதற்கு இல்லை. ஒரு பசு தன் காலில் அடிபட்டு நோகும் போது வருந்துமே அல்லாமல், தன் கன்றின்காலில் அடிபட்டு இரத்தம் கசியும்போது அதன் துன்பத்துக்காகத் தான் வருந்தாது, ஆனால் மக்கட் பிறப்பில் தாய் தன் குழந்தையின் உடலில் சிறு துன்பம் கண்டாலும் கசிந்துருகுவாள்; கேட் டாலும் கண்ணீர்விட்டு நெக்குருகுவாள். பசு ஈன்ற கன்றுகள் பல இருக்கலாம்; முன் தன்னிடம் வளர்ந்த கன்றுகளை அந்தப் பசு மறந்துவிடுகின்றது. தாய் ஒருநாளும் அப்படித் தன் மக்களை மறக்க முடியாது. பிறந்து இறந்த குழந்தை களையும் நினைந்து நினைந்து கண் கலங்குவதே தாயின் தன்மை. அப்போது பாலுண்ணும் கன்றைமட்டும் போற்றி, அதற்கு முன் கன்றாக இருந்து இப்போது வளர்ந்துள்ள மற்றொன்றை முட்டித் துரத்தும் தன்மையையே பசுவினிடம் காணலாம்.

பறவைகளும் விலங்குகளும் தம்மோடு தொடர்புடைய மற்றப் பறவை விலங்கின் துன்பமும் உணர முடியாத நிலை யில் இருப்பது கண்டோம். தொடர்பு இல்லாத மற்றொரு பறவையின் துன்பத்தையோ, மற்றொரு விலங்கின் துன்பத் தையோ இவைகள் எப்படி உணர முடியும்? வழியில் காணும் மற்றொரு பறவை உணவு இல்லாமல் வாடிக் கிடப்பதையோ, அடிபட்டு வருந்துவதையோ ஒரு பறவை உணர்வதில்லை. ஒரு பசுவின் உடம்பில் உள்ள புண்ணைக் கண்டு மற்றொரு பசு உணர்வதில்லை. ஆனால் முன்பின் கண்டறி யாத ஒரு

மனிதன் தெருவில் அடிபட்டு இரத்தம் சொரிந்தால், வழியில் செல்வாரெல்லாரும் இரக்க உணர்வோடு பார்த்து மனம் உருகுகின்றார்கள். இந்த உணர்வே மக்கட் பிறப்பின் உயர்வைக் காட்டுகின்றது. மற்றொரு மனிதனின் துன்பத்தை உணர்வது மட்டும் அன்று; யாதொரு தொடர்பு இல்லாத பறவை ஒன்று கல்லடிபட்டுக் கீழே விழுந்து குற்றுயிராய்க் கிடந்தால், அதைக் கண்டு கசிந்துருகும் இயல் பும் மக்களின் மனத்திற்கு உள்ளது. தான் வளர்த்த பசு மட்டும் அல்லாமல், வேறொரு பசு காலடி பட்டு நொண்டி நொண்டி நடக்கு மானால் அதைக் கண்டும் மனிதன் இரக்கம்கொண்டு வருந்து கின்றான்.

இந்தப் பொது இயல்பையே அறிவின் பயனாகத் திரு வள்ளுவர் கூறுகிறார்:

> அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
> தன்நோய்போல் போற்றாக் கடை? (315)

இவ்வாறு மற்ற உயிரின் துன்பத்தைத் தம் துன்பம் போல் உணரும் இயல்பை எவரிடத்தும் காணலாம்; எந்நிலையிலும் காணலாம்; ஆனால் அதன் முழுமையைக் காணும் இடம் ஒன்று உண்டு; அதுதான் ஒத்த அன்புடைய காதலர் வாழ்க்கை. காதலர் வாழ்க்கையில் ஒருவர் உறும் துன்பம் அவ்வளவும் மற்றவரும் உறுகின்றார். இன்னும் ஆராய்ந்தால் அவரவர் தம்தம் துன்பத்திற்காக வருந்துவதைவிடத் தம்தம் காதலர் உற்ற துன்பத்திற்காகவே மிகுதியாக வருந்துகின் றனர். காதலன் தன் துன்பமெல்லாம் மறந்து தன் காதலிக்காகவே துயருறுகின்றான்; காதலி தன் வருத்தமெல்லாம் மறந்து தன் காதலனுக்காகவே வருந்துகின்றாள். ஆகவே, பிறர் துன்பம் உணர்வது அறிவின் பயனாக இருக்க, தன் துன்பம் மறந்து பிறர் துன்பம் மட்டுமே உணர்வது காதலின் பயனாக விளங்குகின்றது. மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்தி உயர்த்த

வல்ல ஆற்றல் காதலுக்கு அமைந்திருக்கக் காரணம் இதுவே ஆகும்.

## பண்பாட்டின் அடிப்படை

பிறரை அடக்கி வென்றால்தான், அவர்களுடன் வாழ முடியும் என்று காணப்படும் உலகத்தில், அன்புடையவர்களிடம் அடங்கித் தோற்றுவிடுவது நன்மை என்று காதல் வாழ்க்கை உணர்த்துகின்றது. தன்னிடம் குற்றம் கண்டு காதலி ஊடும்போது காதலன் எதிர்த்து அடக்கி வெல்ல முயலவில்லை; ஆனால் பணிந்து தோற்க முன்வருகின்றான். அதன் பயன் என்ன? குற்றம் கண்டு ஊடிய காதலியின் நெஞ்சமே கசிந்து உருகுகின்றது; 'பல பொய்கள் வல்ல கள்வனான காதலனுடைய பணிவான மொழியே என். பெண்மையாகிய அரணை அழிக்கும்படை ஆயிற்று. அதனால் நானும் நெகிழ்ந்தேன்' என்கின்றாள்:

பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை? (1258)

இந்தச் சிறந்த பண்பைக் காதல் வாழ்க்கையில் அல்லாமல் வேறு எங்குக் கற்க முடியும்? இதையே வெளியுலகத்தில் அன்புடையவரிடத்தில் மட்டும் அன்றி அன்பில்லாதவரிடத்திலும் கையாளும் போது, அது சால்பு என்னும் அரும்பண்பாகப் போற்றப்படுகிறது.

சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல் (986)

வல்லமை ஒன்றே வெற்றிக்கு வழி என்று உலகம் சொல்கின்றது. அதனால், வல்லமை இழந்து மென்மை மேற்கொண்டு இயைந்து நடப்பதால் வாழ்க்கை சிறக்கும் என்று காதல் கற்பிக்கின்றது.

காதலனுடைய கொடுமையைக் கண்டு அவன்மீது வெகுளி கொண்டு காயவேண்டும் என்று காதலி முயல்கின்றாள். ஆனால் அவள் தன்மென்மையையும் அதனால் நெஞ்சு நெகிழும் நெகிழ்ச்சியையும் உணர்கிறாள். 'நெஞ்சே! இப்போது காதலருடைய கொடுமையைப் பொறுக்காமல் வெறுப்போடு எழுகின்றாய். இது பொய்யான காய்வு. ஊடலிலே பொய்யாக வெறுத்து நிற்கவும் உன்னால் முடியவில்லை. இப்போது முடியுமா? இது வீண் முயற்சி' என்று நெஞ்சை நோக்கிக் கூறுகின்றாள். ஒருமுறை ஊட வேண்டும் என்று அவரிடமிருந்து அகன்று வேறிடத்தில் போய் நின்றாளாம். ஆனால் அவளுடைய அன்பு நெஞ்சம் நிறை இழந்து அவரோடு சேர்ந்து நிற்பதைக்கண்டு ஊடலைக் கைவிட்டாளாம். அதனால் 'விடாப்பிடியாக ஊடிக்கொண்டிருப்போம் என்று இது போன்ற நெஞ்சு உடையவர்கள் முயல்வதால் பயன் இல்லை. நெருப்பில் இட்டவுடன் உருகுகின்ற கொழுப்பைப்போல் உருகும் நெஞ்சு உடையவர்களால் அது முடியாது' என்கின்றாள்:

கலந்துணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு. (1246)

புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. (1259)

நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல். (1260)

காதல் வாழ்க்கையில் இந்தப் பயிற்சியைப் பெற்றவர்கள் இந்த அரும்பண்பை வெளியுலகத்திலும் மேற்கொண்டு வாழும்போது அருளுடையவர்களாகவும் சினம் அற்றவர்களாகவும் இன்னா செய்யாதவர்களாகவும் போற்றப்படுகின்றார்கள். 'தன்னைவிட எளியவரைத் தான்வருத்தச் செல்

லும்போது, தன்னைவிட வலியவர் தன்னை வருத்துமிடத்தில் அவர்முன்தான் அஞ்சி நிற்பதை நினைத்துத் துன்பம் செய்வதைக் கைவிடவேண்டும்.' 'தன் சினம் பலிக்குமிடத்தில் அதைத் தடுக்கவல்லவனே சினமற்றவன். பலிக்காத இடத்தில் அதைத் தடுத்தால் என்ன? தடுக்காவிட்டால் என்ன? சுடர் மிகுந்த பெருந்தீ வந்து தோய்ந்தாற்போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதிலும் கூடுமானால் அப்போது சினம் கொள்ளாமலிருப்பதே நல்லது.' 'தம்மேல் செற்றம் கொண்டு ஒருவன் துன்பம் செய்தபோதிலும், திரும்ப அவனுக்குத் துன்பம் செய்யாமலிருப்பதே தூயவர்களின் கொள்கை. தீங்கு செய்தவர்களைத் தண்டிக்கும்முறை எது என்றால் அவர்கள் தாமே நாணும்படியாக அவர்களுக்கு இனிய நன்மையைச் செய்து, அந்தத் தீங்கையும் இந்த நன்மையையும் மறந்து விடுவதே ஆகும். துன்பம் என்று தான் உணர்ந்தவைகளை மற்றவனிடத்துச் செய்யாமல்விட வேண்டும்.'

வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லு மிடத்து. (250)

செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென்? காவாக்கால் என்? (301)

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (308)

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். (312)

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். (314)

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். (316)

என்று அறிவுறுக்கப்படும் அரிய அறநெறிகளைக் காதல் வாழ்க்கையால் பண்பட்டவர்கள் மிக எளிதில் கற்று உயர முடியும். காதலர் ஒருவர் மற்றொருவரிடம் ஒழுகும் அன்பு முறையில் இந்தப் பண்புகள் இயல்பாகவே வந்து அமைகின்றன. ஆதலின் அவற்றை அங்கே கற்றுப் பயின்றவர் வெளியுலக வாழ்க்கையில் அவற்றை மேற்கொள்வது எளிதாகும்.

நம்மை வெறுத்தவர்களை நாமும் வெறுக்க வேண்டும். நம்மைப் புறக்கணித்தவர்களை நாமும் புறக்கணிக்க வேண்டும் என்று உலகம் சொல்கின்றது. ஆனால், புறக்கணித்தவர்களையே மீண்டும் மீண்டும் நாடும் மனத்தால் அன்பு வளரும், மானம் இழந்தாலும் அன்பு வளரும் என்று காதல் வாழ்க்கை கற்பிக்கின்றது. அன்பு வளர்ந்த நெஞ்சிற்கு மானம் என ஒன்று இல்லை, வெறுப்பு என்பது முடியாது, வெறுப்பாக நெருங்கினாலும் விரும்புவதாகவே முடியும் என்று காதல் வாழ்க்கை கற்பிக்கின்றது. காதலன் பிரிந்து சென்ற போது நெஞ்சை நோக்கிக் கூறும் காதலியின் சொற்களில் இதைக் காணலாம். 'நெஞ்சே! நாம் அவரை உறவாகக் கொண்டிருந்தும், அவர் உறவு கொள்ளவில்லை; அவ்வாறு வெறுத்தாரே என்று கருதி நாமும் வெறுத்துக் கைவிடும் வலிமை நமக்கு உண்டோ? இல்லையே' என்கின்றாள். 'தம்மை வெறுத்து நீங்கியவர்களைத் தாமும் வெறுத்து நீங்கும் உறுதி உலகத்தில் மற்ற வாழ்க்கைத் துறைகளில் உண்டு. ஆனால் இது காதல் துன்பம் உற்றவர்களுக்குத் தெரியாது' என்று காதல் வாழ்க்கையில் வெறுப்பும் துறவும் கொள்ள முடியாத தன் நிலையைக் கூறுகின்றாள்:

செற்றார் எனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர். (1245)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன் றன்று. (1255)

*இந்தச் சிறந்த கல்வியைக் காதலராக வாழ்ந்து கற்றவர்கள் வெளியுலக வாழ்க்கையில் 'வெறுப்புக்கு வெறுப்பு புறக் கணிப்புக்குப் புறக்கணிப்பு, தீமைக்கு தீமை' என்று பாராட்டாமல் பிறரிடம் அன்பு செலுத்தி இன்னா செய்தவர்க்கும் இனியவே செய்து வாழ்வது எளிது. காதலர்க்கு இன்றியமையாத இந்தப் பண்பு வெளியுலக வாழ்க்கையில் வளரும்போது சால்பு எனப் புகழப்படும்;*

**இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு? (987)**

*இந்தக் கல்வியைத் தம்மை அறியாமல் கற்றுக்கொள்ள வல்லவர் உண்மைக் காதலர்.*

*இத்தகைய உயர்ந்த பண்புகளை வளர்த்து மக்களைப் பண்படுத்தும் ஆற்றல் காதல் வாழ்க்கைக்கு அமைந்துள்ளது.*

*அதனால்தான் தவம், நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்னும் அரும்பொருள்களை விளக்கி வலியுறுத்தியுள்ள திருவள்ளுவர், காதலின் வாழ்க்கையையும் கலையுணர்வோடு விளக்கியுள்ளார். திருவள்ளுவர் போன்ற மெய்யுணர்வுபெற்ற சான்றோரே காதலின் சிறப்பை உள்ளவாறு போற்ற வல்லவர். அத்தகையவர்க்கே காதல் என்னும் பெயரால் பலர் வாழும் போலி வாழ்க்கையின் குறைகளும் தெரியும். அந்தக் குறைகள் போலிகளின் வாழ்க்கையில் இருத்தலைக் கொண்டு காதல் என்னும் தூய மக்கட் பண்பைக் குறைகூறுவது தகுமோ? ஆதலின் திருவள்ளுவர், பிறனில்விழையாமை, வரைவின் மகளிர் என்னும் அதிகாரங்களில் தீயொழுக்கத்தைக் கடிந்தாரே அல்லாமல் காதல் வாழ்க்கையைப் பழிக்கவில்லை. தவத்தின் பெயரால் போலிகள் வாழும் கூடாவொழுக்கத்தைக் கடிந்தாரே அல்லாமல் தவத்தைப் பழிக்கவில்லை. அது போல் நெறி கடந்த காமவாழ்க்கையைக் கடிந்தாரே அல்லாமல் காதலைக் கடிந்து*

கூறவில்லை. அதனால்தான் காதலின் சிறப்பெல்லாம் தோன்று மாறு காமத்துப்பாலை இயற்றியுள்ளார்.

## அறிவும் உணர்வும்

அறிவும் உணர்வும் இயற்கையாக் அமைந்த பண்புகள். அறிவே இல்லாதவனையும் உணர்வு அற்றவனையும் உலகத் தில் காணமுடியாது. ஆனால் போதிய அளவு வளர்ச்சி இல்லாதவர்களையும் காணலாம்; அறிவு மிகுதியாக வளரப் பெற்றவர்களையும் காணலாம்; போதிய உணர்வு அற்றவர் களையும் காணலாம்; உணர்வு மிகுந்தவர்களையும் காணலாம்.

அறிவும் உணர்வும் வேறுபட்ட இரு பண்புகள் ஆயினும் பிரிக்க முடியாதவனவாய் உள்ளன: வன்மையும் மென்மை யும் இவ்வாறே பல பொருளில் இயற்கையில் அமைந்திருத் தல் காணலாம். வன்மை மிக்க பொருளினிடத்தில் ஓரளவு மென்மையும் காணலாம்; மென்மை மிக்க பொருளினிடத் தில் ஓரளவு வன்மையும் காணலாம். இவ்வாறே அறிவுமிக்க வரிடத்தில் உணர்வும் காணலாம்; உணர்வு மிக்கவரிடத்தில் அறிவும் காணலாம். தருக்கம், கணக்கு முதலிய கல்வித் துறை களிலேயே காலம் கழிப்பவரும், நெருங்கிப் பழகிய பிறருடைய துன்பம் கண்டு கரைந்து உருகுகின்றனர்; ஓவியம், காவியம் முதலிய கலைத்துறைகளிலே காலம் கழிப்பவரும், தமக்கு வரும் துன்பத்தை ஒருவர்று தாங்கிக் கலங்காமல் நிற்கும் ஆற்றல் பெறுகின்றனர்.

வன்மை மென்மைப் பண்புகளைத் தனித்தனியே பிரிக்க முடியாவிட்டாலும், வன்மை மிக்க பொருளையும் மென்மை மிக்க பொருளையும் தனித்தனியே பிரிக்க முடியும் அன்றோ? அதுபோல், அறிவையும் உணர்வையும் தனித்தனியே பிரிக்க முடியாவிட்டாலும், அறிவு மிக்கவரையும் உணர்வு மிக்க வரையும் தனித்தனியே பிரிக்க முடியும்.

அறிவு மிக்கவர் எதைக் கண்டாலும் முதலில் எண்ணத் தொடங்குவர்; பிறகே உணரத் தொடங்குவர். உணர்வு மிக்கவர் எதைக் கண்டாலும் முதலில் உணரத் தொடங்குவர்; பிறகு தான் எண்ணத் தொடங்குவர்; ஆண்களில் பெரும்பாலோர் முதலில் எண்ணத் தொடங்குவர்; பெண்களில் பெரும்பாலோர் முதலில் உணரத் தொடங்குவர். ஒரு குடும்பத்தில் தந்தையையும் தாயையும் ஆராய்ந்தே இந்த உண்மையைக் காணலாம். அதனாலேயே ஆண் மூளை சிறந்தவன் என்றும், பெண் இதயம் சிறந்தவள் என்று டென்னிசன் என்னும் ஆங்கிலப் புலவர் தெரிவித்துள்ளார். அறிவு மிக்கவர் எதிர்காலத்தைப் பற்றி எண்ணித் தற்காப்புத் தேடிக் கொள்வதில் வல்லவர். உணர்வு மிக்கவரோ நிகழ்காலத்திலேயே மூழ்கித் தம்மை மறந்து தொண்டு செய்யமுந்துபவர். அறிவு மிக்கவர் உள்ளத்தில் உள்ளதைப் பிறர்க்குப் புலப்படுத்தாமல் மறைக்கும் ஆற்றல் உடையவர்; உள்ளத்தில் உள்ளதற்கு மாறாகப் பேசவும் நடிக்கவும் வல்லவர். உணர்வு மிக்கவரோ உள்ளொன்று புறமொன்றாக நடிக்க அறியாதவர்; உள்ளத்தில் உள்ளதை எல்லாம் கண்ணும் முகமும் காட்டப் பளிங்கு போல் விளங்குபவர்.

குழந்தை பிறக்கின்றது. பிறக்கும்போது பெற்றோருடைய மூளை வளர்ச்சிக்கும் இதயப் பண்பாட்டிற்கும் ஏற்றபடி மூளையும் இதயமும் பெற்றுப் பிறக்கின்றது. பிறந்ததும் தாய் ஆசிரியராக விளங்குகின்றாள். குழந்தையின் மூளையையும் இதயத்தையும் வளர்க்கின்றாள். மூளையைவிட இதய வளர்ச்சியே மிகுதியாக ஏற்படுகின்றது. குழந்தை உணர்ச்சியோடு அழுகின்றது; சிரிக்கின்றது. அறிவுகொண்டு சிற்சில பொருள்களைப் பகுத்தறியத் தொடங்குகின்றது. தந்தையின் தொடர்பு அடுத்தபடியே வாய்க்கின்றது. அவராலும் குழந்தையின் மூளையும் இதயமும் வளர்கின்றன. பெரும்பாலும் மூளையே மிகுதியாக வளர்கின்றது. இவ்வாறே குடும்பத்தில்

உள்ள மற்றவர்களாலும் வளர்ச்சி ஏற்படுகின்றது. குழந்தை, விளையாட்டில் பொழுதுபோக்கும் சிறுவன் (அல்லது சிறுமி) ஆகின்றது. உடன் விளையாடும் சிறுவர்களால் வளர்ச்சி மிகுகின்றது. அவர்களாலும் உணர்வு வளர்ச்சியே சிறப்படைகின்றது. அடுத்தபடி பள்ளிக்கூடத்து ஆசிரியரால் ஏற்படும் வளர்ச்சி உள்ளது. அவரால் மிகுதியாக வளர்வது மூளையே. அடுத்த நிலையில் நண்பர்களின் தொடர்பாலும், சுற்றுப்புறத்தின் காரணத்தாலும் பலவகை மாறுதல் நேர் கின்றது. வாழ்வுக்கு உரிய இளமை வருகின்றது. குழந்தையாக இருந்து, சிறுவனாக (அல்லது சிறுமியாக) வளர்ந்த அவன் (அல்லது அவள்) உற்ற வயது அடைந்து, விளங்கும் நிலைமை அது. அப்போது அவனுக்கு (அல்லது அவளுக்கு) அறிவு மிகுதியா? அல்லது உணர்வுமிகுதியா? கூட்டல் கழித்தல் கணக்கை முதலிலிருந்து பார்த்து முடிவுகாண வல்லவர் யார்? பெரும்பான்மை பற்றியே ஒரு முடிவுக்கு வரலாம். சிறுபான்மை விதிவிலக்காக அமைந்திருப்பதும் உண்டு.

பெரும்பாலும், ஆண், இளமை நிரம்பியபோது அறிவு சிறந்து உணர்வும் வளர்ந்து விளங்குகிறான். பெண், இளமை நிரம்பியபோது உணர்வு சிறந்து அறிவும் வளர்ந்து விளங்கு கிறாள். வளர்ச்சிக்கு உரிய வித்துக்கள் விளையாட்டுப் பருவத்திலேயே காணப்படுகின்றன. அமைதியாக இருந்து பெண் சிற்றில் இழைக்கும் பருவத்தில் ஆரவாரமாக இயங்கி ஆண் சிற்றில் சிதைக்கும் நிலையில் இருக்கின்றான். இவ்வாறே சிறுமியின் மனம் பெரிதும் ஆக்க வேலையில் முனைந்திருக்க, சிறுவன் மனமோ அழிவு வேலையில் ஊக்கம் காட்டுகின்றது. அதனால் பெண் அமைதி மிக்கவளாக வளர்கின்றாள்; ஆண் ஆற்றல் மிக்கவனாக வளர்கின்றான். இது இயற்கையின் வியக்கத்தக்க முறையாக அமைந்திருக்கின்றது.

ஆனால், அமைதி மட்டும் பெற்றிருப்பதோ, ஆற்றல் மட்டும் பெற்றிருப்பதோ வாழ்க்கைக்குப் போதாது. அமைதிக்கு

ஆற்றல் வேண்டும்; ஆற்றலுக்கு அமைதி வேண்டும். இயற்கையே இதற்கும் வழி வகுத்திருக்கிறது. ஆணின் இளமை பெண்ணைக் கவரவும், பெண்ணின் இளமை ஆணைக் கவரவும் கவர்ச்சி அமைந்துள்ளது. உடலில் உள்ள இளமை அழகு மட்டும் அல்லாமல், உள்ளத்தில் உள்ள இளமைப் பண்பும் ஒருவரை ஒருவர் கவருமாறு அமைந்துள்ளது. இத்தகைய தூய கவர்ச்சியே காதல் எனப்படுவது. காதல் உறவினால் ஆற்றல் மிக்கவன் அமைதியைக் கற்கின்றான்; அமைதி மிக்கவள் ஆற்றலைக் கற்கின்றாள்.

காதலன் அறிவும் ஆற்றலும் மிக்கவன்; ஆயினும் காதலால் நெகிழ்ந்து உருகுகின்றான் என்பதைத் திருவள்ளுவர் அங்கங்கே புலப்படுத்திச் செல்கின்றார். காதலியைக் கண்டு மயங்கிக் கண்வலைப்பட்டபோது, அவன் என்ன கூறுகின்றான்? 'போர்க்களத்தில் வந்து பொருத பகைவரும் என்னைக் கண்டு அஞ்சினார்கள். போர்க்களத்திற்கு வராத பகைவரும் என் வலிமையைப் பற்றிக் கேட்டறிந்து அஞ்சினார்கள். அத்தகைய என் வலிமை இவள்முன் அழிந்ததே' என்கின்றான்:

> ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
> நண்ணாரும் உட்குமென் பீடு. (1088)

பகைவர் அஞ்சுவதற்குக் காரணமான இவனுடைய வன்மை எல்லாம் காதலியின் மென்மைக்கு முன் நிற்க முடியவில்லை.

காதலியைக் காணமுடியாமல் வருந்தும்போது ஆற்றாமை காரணமாக அவன் கூறும் சொற்களிலும் காதலின் ஆற்றலையும் அவன் உணர்வு மிகுதலையும் அறியலாம். 'என் உடம்பும் உயிரும் இந்தத் துன்பத்தைப் பொறுக்க முடியவில்லை. மடலேறித் தம்மை அழித்துக்கொள்ள முயல்கின்றன. நாணம் அந்த முயற்சியைத் தடுக்கின்றது; ஆண்மையெல்லாம் இழந்து ஒருத்தியின் பொருட்டாகப் பலரறிய இவ்வாறு அழிவதா என்று தடுக்கின்றது. ஆனால் நாணத்

தின் இந்தத் தடையையும் பொருட்படுத்தாமல் நீக்கி உடம்பும் உயிரும் மடலேற முனைகின்றன. நாணமும் நல்ல ஆண்மையும் முன்னெல்லாம் என்னிடம் சிறந்திருந்தன. இப்போது காதலர் ஏறும் மடலே எனக்குத் துணையாக இருக்கின்றது. இவ்வாறு மடலேற வேண்டும் என்று இப்போது மட்டும் அல்ல, நடு யாமத்திலும் இதையே எண்ணுகின்றேன். ஏன் எனில் அந்த யாமத்திலும் காதலியை நினைந்து என் கண்கள் உறங்காம லிருக்கின்றன' என்கின்றான்:

நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. (1132)

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்; இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல். (1133)

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற;
படல்ஒல்லா பேதைக்கென் கண். (1136)

காதலனுடைய ஆற்றாமையை அறிந்த தோழி அவனை நோக்கி, 'ஐயா, உன் காதலி பொறுத்திருக்கும் வல்லமை உடையவளாக இருக்கும்போது நீ இவ்வாறு வருந்தலாமா? பெண்ணைவிட அறிவும் ஆற்றலும் மிகுந்த ஆண் இவ்வாறு வருந்துவதா?' என்று கேட்டாள். அவளை நோக்கி, 'கடல் போல் எல்லையற்ற காதல் துன்பத்தால் வருந்தியபோதிலும் அவள் எப்படியோ ஆற்றியிருக்கின்றாள். அவ்வளவு அடக்கமும் ஆற்றலும் எனக்கு இல்லை என்பது உண்மைதான். வருந்தாமல் ஆற்றியிருக்கும் பெண்பிறப்பே பெருமை உடையது!' என்று தன் உள்ளப்போக்கை உணர்ந்து குறையை உடன்படுகின்றான்:

கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல் (1137)

உணர்வும் அமைதியும் மிக்கவளாய்த் தாய்தந்தைய ரோடும் தோழிமாரோடும் வாழ்ந்துவந்த காதலி அறிவும்

ஆற்றலும் பெற்று மாறுவதைக் காண்போம். அவனும் அவளும் காதல்கொண்டு பிறர் அறியாமல் பழகும் பழக்கத்தை ஊரார் அறிகின்றார்கள். அவர்கள் அலர் தூற்றுகின்றார்கள். இது அன்னைக்கும் தெரிய வருகின்றது. அவளும் மகளை வெகுண்டு பேசுகின்றாள். காதலி ஊராரின் அலரைக் கேட்டுப் பொறுக்கின்றாள். பொறுக்கப் பொறுக்க அவளுடைய ஆற்றல் மிகுகின்றது; அன்னையின் கடுஞ்சொல்லையும் கேட்டுப் பொறுக்கின்றாள். காதலும் வளர்கின்றது. 'அலர் கூறுவதனால் என் காதலை அடக்கிவிடலாம் என்ற ஊரார் எண்ணுவதாகத் தெரிகின்றது. அது வீண் முயற்சி. நெய்யால் தீயை அவிக்க முடியுமோ?' என்கின்றாள்:

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய். (1147)

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். (1148)

காதலன் பிரிந்தபிறகு, காதலி தனியே இருந்து நினைந்து நினைந்து துயருகின்றாள். நாளாக ஆக உயிர்வாழ்வது வெறுப்பாகின்றது; உடல் சுமையாகத் தோன்றுகின்றது. 'நான் ஏன் உயிரோடு வாழ்கின்றேன்?' என்று தானே எண்ணுகின்றாள். 'துன்பம் இவ்வாறு வரம்பு கடந்து வருத்தும்போதும் நான் உயிர்வாழ்வதற்குக் காரணம் என்ன? அவர் பிரிந்து சென்ற போதிலும் அவரை நினைக்கும் பேறு பெற்றிருக்கின்றேன். அவரோடு வாழ்ந்த நாட்களை நினைப்பதில் ஒருவகை ஆறுதல் இருக்கின்றது. அவ்வாறு நினைத்து ஆறுதல் பெறவே உயிருடன் இருக்கின்றேன்' என்று துன்பஉணர்வு மிகுந்த காலத்திலும் அறிவோடு எண்ணுகின்றாள்:

மற்றியான் என்உளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன். (1206)

இரவெல்லாம் கண் உறங்காமல் கலுழ்கின்ற நிலைக்கு இடையே, சிறிது நேரம் உறக்கம் பெறின், அதில் கனவு வருகின்றது; கனவில் காதலன் வருகின்றான்; கனவு கலைகின்றது. இவ்வாறு இராக்காலம் கழிந்தபின் பொழுது விடிகின்றது. காலையில் காதலரைப் பிரிந்த பிரிவுத்துன்பம் தலையெடுக்கின்றது; அரும்புகின்றது. பகல் முழுதும் மெல்ல வளர்கின்றது; அரும்பு, போது ஆகின்றது. மாலை வந்த உடனே துன்பம் பழையபடி முற்றி முழுநிலை அடைந்து வருத்துகின்றது; மலராகின்றது. இந்த நிலைமை தன் உள்ளத்தில் மாறி மாறி நேர்வதையும் அவளே எண்ணிப் பார்க்கின்றாள்:

காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். (1227)

தன் நெஞ்சு எந்நேரமும் அவரையே நாடி அவர்பின் சென்று அலைவதையும் தன்வழியில் நின்று தனக்குத் துணையாகாததையும் கண்டு காதலி எண்ணுகின்றாள். துன்ப உணர்வுக்கு இடையே தத்துவ ஞானிபோல் அவள் எண்ணும் எண்ணம் அறிவின் திட்பத்தைப் புலப்படுத்துகின்றது. 'நெஞ்சே! காதலருடைய நெஞ்சம் அவரை விட்டு நம்மிடம் வருகின்றதா? இல்லையே! அவரிடமே இருந்து அவர்க்கே துணையாக இருக்கின்றதே! நீ மட்டும் என் நெஞ்சமாய் என்னிடம் நில்லாதது என்?' என்கின்றாள். 'ஒருவர்க்குத் துன்பம் வந்தபோது அந்தத் துன்பத்தைப் போக்குவதற்கு அவருடைய நெஞ்சமே துணையாகாவிட்டால், வேறு யார் துணையாக முடியும்? ஒருவர்க்கு உரிமையான நெஞ்சமே உறவாக நின்று உதவாதபோது, அயலார் உறவாவது எங்கே?' என்று மெய்யுணர்வு பெற்றவர் போல் எண்ணுகின்றாள்:

அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது? (1291)

துன்பத்திற் கியாரே துணையாவார் தாம்உடைய
நெஞ்சம் துணையல் வழி? (1299)

தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாம்உடைய
நெஞ்சம் தமரல் வழி. (1300)

*இவ்வாறு அறிவும் உணர்வும் வளர்ந்து தக்கவாறு அமைந்து நிரம்புவதற்குக் காதல் வாழ்க்கை காரணமாக இருக்கின்றது.*

# 15

# தெய்வப் புலவர் திருவள்ளுவர்

*1949*

**ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை**

## தெய்வப் புலவர்

தமிழகத்துத் தமிழ்மக்கள் தங்கள் மொழியாகிய தமிழைத் 'தமிழன்னை' என்றும், 'தமிழ்த் தாய்' என்றும், 'தமிழ்த் தெய்வம்' என்றும் பாராட்டிப் போற்றுவதைத் தமக்குத் தகுதியாகக் கருதுவர். தமிழ், இயல், இசை, நாடகம் என முத்திறப்படும். இம்மூன்றும் பண்டை நாளில் முத்திறத்து மக்களால் வளர்க்கப்பட்டு வந்தன. இயற்றமிழைப் புலவர்களும், இசைத்தமிழைப் பாணர்களும், நாடகத்தமிழைக் கூத்தரும் பேணிவந்தனர். அந்நாளில் வேந்தரும் செல்வர்களும் தாம் ஈட்டிய செல்வத்தைப் புலவர் முதலிய மூவர்களுக்கும் தந்து முத்தமிழையும் வளர்த்தனர். இம்மூவராலும் புகழப்படாத ஒருவன் வாழ்வு வாழ்வாகவே கருதப்படாது. இவர்களாற் பாடப்படும் புகழ்படைத்தவர் உடலிலிருந்து உயிர் நீங்குங்

காலத்து இந்திரவிமானம் ஊர்ந்து தேவருலகு செல்வர் என்பது பண்டைநாளைய கருத்து. இந்தப் புகழ்பெற விரும்பி உயிர் கொடுத்தோரும், உடல்கொடுத்தோரும், பொருள் கொடுத்தோரும் எண்ணிறந்தோராவர். இவ்வாறு புகழ் விருப்பு முகத்தால் முத்தமிழையும் ஓம்பி வளர்ப்பது முன்னாளைத் தமிழ் மக்களது செல்வ வாழ்வாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. இந்த வழக்கம் இடைக்காலத்தும் இருந்து வந்திருக்கிறது ஏன்? சென்ற இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தமிழ்ச் செல்வர்கூட, பண்டைநாளைச் செல்வர்போலத் தமிழ்ப்பாவலர்களை ஆதரித்துப் புகழ் பெற்றனர். இதனால் தமிழ்மக்களுக்குத் தங்கள் தமிழின்பால் உள்ள பேரன்பால் தமிழ்ப் பாவலரையும் தமிழ் நாவலரையும் பேணும் மனப்பான்மை இடையறவுபடாமல் இருந்து வந்திருக்கிறது என்பதைத் தெளியக்காணலாம்.

அண்மையில் வாழ்ந்த தேசியகவி சுப்பிரமணிய பாரதியாரும், ‘யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்,’ என்று பாடியிருப்பதும், இன்று நம்மிடையே வாழும் பாரதிதாசனாரும், ‘தமிழுக்கு அமுதென்று பேர் - இன்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்,’ என்று பாடியிருப்பதும் இன்றைய இளைஞரும் அறிந்த செய்தியாகும். இவ்வாறே, இன்று தமிழில் இனிய கவிபாடும் இளம் புலவர் அனைவரும் தமிழ்மொழியை நினைத்த அளவிலே பேரின்பம் உள்ளத்தில் உவட்டெடுத்துப் பெருகுமாறு தோன்ற விறுவிறுப்பான சொற்றொடர்களால், தமிழ் மொழியைப் புகழ்ந்து பாடுவதை நாம் காண்கின்றோம். இதனால் தமிழகத்துத் தமிழ்மக்கட்குத் தங்கள் தாய் மொழியாகிய தமிழின்பால் பேரன்பும் அதன் வாயிலாக அவருள்ளத்தே அதுபற்றிய பெருமிதமும் நிறைந்து தோன்றுவது கண்கூடாக இருக்கிறது.

ஒருநாட்டு மக்களுக்கு அவர் பிறந்து சிறக்கும் நாடு உடலாகவும், அந்நாட்டில் அவர்கள் வழங்கும் தாய்மொழி உயிர்ப்பாகவும் அமைவனவாகும். உடல் பொலிவும் வளமும் குன்றி யிருப்பினும், அதன்கண் உலவும் உயிர் அவ்வுடலின் பால் பெருங்காதல்கொண்டு அதனை விட்டுப் பிரியும் விருப் பின்றி அதனோடு ஒன்றியிருந்து அதனைப் பேணுதற்கே விருப்பம் கொள்ளும். அவ்வுடற்கு வருந் துன்பங்களைத் தனக்கு வந்ததாக அதனை ஏற்று வருந்துவதும் உயிர்க்கு இயல்பு. திருவள்ளுவரும், 'துன்பம் உழத்தொறும் காதற்று உயிர்,' என்று உயிரின் இந்த இயல்பைக் குறித்துரைத்துள் ளார். இவ்வாறே ஒரு நாடு எத்துணை நலமில்லாத நாடா யினும், தட்பவெப்ப நில நீர்வளங்களால் மிக்க வளம் பொருந் தாதாயினும், அந்தநாட்டு மக்கட்கு அதன் பால் உண்டாகி யிருக்கும் காதல் பெரிதாகும். உலக வரலாற்றில் ஒருநாட்டு மக்கள், வேற்றுநாட்டு மக்களோடு தம் உடற்குருதி பேராறு போலப் பெருகியோடப் போர் செய்து மடிந்ததற்குக் கார ணம் தாம் வாழும் நாட்டின்பால் உண்டாகிய பேரன்பே யாகும். அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் நாகரீகமின்றி விலங்கு வாழ்வு வாழ்ந்த மக்கள், தங்கள் நாட்டிற்குள் மேலைநாட்டு வெள்ளையர்கள் புகுந்த போது அவர்களை யெதிர்த்துப் போராடிய செய்திகளை நாம் படிக்கின்றோம். இச்செய்திகளால் விலங்குவாழ்வு வாழும் மக்களாயினும் அவரது நாட்டுப் பற்று அவரையறி யாமே அவரது இயற்கையில் நுழைந்து வேற்றவரோடு போராடி உயிர் தருமாறு செய்துளது என்பது தானே விளங் குகிறது. இளஞ்சிறார்களுக்குத் தம் பெற்றோர்பால் உள்ள அன்புக்கு அடுத்தநிலையில், ஒரு மனிதனுடைய பிறவியிலும் ஒழுகலாற்றிலும் ஊறிநிற்கும் நாட்டன்பு இடம் பெற்றுள்ள தென எட்மண்டு பர்க் (Edmund Burk) என்பார் கூறியிருப் பது மேலே கூறிய கருத்துக்கு ஆதரவு தருகிறது.

இப்பெற்றித்தாகிய நாட்டன்பு தமிழ்மக்களிடையே அவர்களை யறியாமலே அவர்தம் நரப்புக் கால்தோறும் ஊறியிருக்கிறது. இது பண்டைச் சங்க காலத்திலும், இடைக் காலத்திலும் அவர்களது உள்ளத்தில் நிலைபெற்று நின்றதன் பயனாக, காடிடையிட்டும், மலையிடையிட்டும், கடலிடை யிட்டும் வேறுநாடுகட்குச் சென்று பொருளீட்டிப் புகழ்மேம் படு முகத்தால், தங்கள் நாட்டின் பெருமையினை வளம்படுத் தினர். நாட்டின்பால் செல்லும் அன்பு நாட்டவர் பாலும் சென்று அவர்க்கு வேண்டும் நலம் செய்தல்வேண்டுமென்ற மனப்பண்பினை வளர்க்கும். அதனால்தமிழர் அனைவரும் தம்மில் இயைந்து ஒருவரையொருவர் சார்ந்து தமிழகத்தைப் பேணிவந்தனர். அதனால் தமிழகம் 'பொதுமை சுட்டிய மூவ ருலகம்' (புறம்) எனவும், 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு;' (தொல்) எனவும் சான்றோரரால் பாராட்டப் பெற்றுள்ளன. இவ்வகையால், தமிழகத்து ஒரு பகுதியினரை வேற்று நாட்டவர் இகழ்ந்துரைப்பின், எல்லாப் பகுதியின ரும் உடங்கியைந்துநின்று இகழ்ந்தாரை யிகழ்ந்து, அவர் உள்ளத்தே இகழ்தற்கேதுவாய் முளைத்த காரணத்தை வேரோடு கிள்ளியெறிந்து வீறுபெற்று விளங்கிய செய்தியைச் சேரன்செங்குட்டுவனது வரலாறு தெரிவிக்கின்றது. இமயம் முதல் கங்கநாடு (மைசூர் நாடு) வரையில் தன் புகழைப் பரப் பிய அசோக மன்னன் அடல் மிக்க ஆட்சி புரிந்த அந்நாளி லும்அவன் ஆட்சிக்கீழ்ச் செல்லாது தமித்து நின்று நட் புரிமைகொண்டு தனியாண்மையாட்சி நடாத்திய நற்றிறம் தமிழர்க்கேயுண்டு. கீழ்க்கடலிற் சோழரும், தென் கடலிற் பாண்டியரும் மேலைக்கடலிற் சேரரும் தனியாணை செலுத் தித் தமிழரசு நடாத்திய சிறப்பைச் சங்கநூல்கள் கூறுகின்றன.

இவ்வண்ணம் தமிழரசு நடந்த சங்ககாலத்தில் தமிழ் மொழி, மக்களுடைய உள்ளத்தை இயற்பிரிவாலும், வாய் மையை இசைப்பிரிவாலும், மெய்யைக் கூத்துப்பிரிவாலும்

வளம் படுத்தியதென்பது வரலாறு கூறும் வாய்மையுரை. இம்முப்பிரிவையும் புலவர்கள் தம் நல்லிசைப் புலமையால் நலம்பெறச்செய்து சொல்லேருழவர் எனும் தொல்புகழெய் தினர். அவர்களும் நாட்டின் நலத்தை, நாடாதல், காடாதல், மேடாதல், பள்ளமாதல் கண்டு தெளியாது எவ்வழி ஆடவர் நல்லவர் அவ்வழியே நாடு நாடாம் எனக் கண்டு தெளிந்து மக்கள் உள்ளம், உரை, செயல்களால் நல்லராம் நலத்தையே நாடித் தம் நல்லிசைப்புலமையை நடாத்தினர். நல்லராகிய தமிழ்வேந்தர் நல்லிசைப்புலவரது நாநலத்தைத் துணை யாகக் கொண்டு நல்லரசு புரிந்தனர். அவராற் பாடப்பெறும் அரும்புகழ்ப்பேறே தம் வாழ்வின் முழுப் பேறாகக் கருதினர். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் என்பான், 'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி, மாங் குடி மருதன் தலைவனாக, உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின் புலவர்,' பாடும் புகழையே பெரிதும் போற்றினா னென அவனது வரலாறு கூறக் காண்கின்றோம்.

அறந் தவறியவிடத்து அறநிலை வற்புறுத்தியும், பொருள் குன்றியகாலைப் பொருள் செய்யும் நெறி வற்புறுத்தியும், இன்பநாடாது துன்பம் விளைவிக்கும் செயல் மேற்சென்று அன்புதேய வருமிடத்து இன்பநிலை வற்புறுத்தற்கும் அகமும் புறமுமாகிய பாட்டுக்களால் தமிழ் வாழ்வை இனிமைப் பண்பு குன்றாவாறு நிலை நிறுவிய செயற்பெருமை புலவர் களாகிய நல்லிசைச் சான்றோர்க்கே உரியதாயிற்று. வாழ் வாரை வாழ்விக்கும் வகையில் வண்டமிழ்ப் புலவரது வாய் வளம் பெருந்தொண்டு செய்தமையின், வேந்தரும், செல் வரும், பிறரும் அச்சான்றோர் தம் நாட்டகத்தே உளராவது தமக்குப் பெருமையாகக் கருதி யொழுகினர். நாட்டில் விளை யும் பொருள்வகைகளில் தலையாயது புலமையாகிய செம் பொருள் என்று தேறினமையின், வேந்தர், தம் திருவோலக் கத்தில் நல்லிசைப்புலவர்களைப் பேணிச் சிறப்பித்தனர்.

நாட்டின் நலங்கண்டு பாடப்போந்த நல்லோர், நல்லிசைச் சான்றோர் தோன்றிய தோற்றத்தை நாட்டிற்கு நல்ல அணி யாகப் புகழ்ந்து பாடுவாராயினர்.

சிலப்பதிகாரத்தைப் பாடியருளிய இளங்கோவடிகள், புகார் நகரத்தை வாழ்த்தலுற்றார். அந்நகரத்தோடு ஒத்த சிறப் புடையவென பொதியில்மலையும் இமயமலையும் அடிகள் நினைவுக்கு வந்தன. மூன்றையும் ஒருங்குசேர்த்து, 'பொதியி லாயினும் இமய மாயினும், பதியெழுவறியாப் பழங்குடி கெழீ இய, பொதுவறு சிறப்பின் புகாரேயாயினும் நடுக் கின்று நிலைஇய என்பதல்லதை, ஒடுக்கங்கூறார்.' என்று வாழ்த்தி னார். அக்காலை, ஒடுக்கங் கூறாமைக்குக் காரணம் இது என்றற்கு, அங்கே உயர்ந்தோர் உளர் என்பாராய், 'உயர்ந் தோர் உண்மையின்,' என்றும், இவ்வாறு உயர்ந்தோர் உள்ள இடங்களை நிலைபெறுக என்று வாழ்த்துவதும், தீயோர் உறைவிடம் ஒழிக எனக் கடிதலும் முழுதுணர்ந்த சான் றோர்க்கு இயல்பு என்பாராய், 'முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே,' என்றும் கூறினார். இதனால் புகார் நகர்க்குப் புகழ் உயர்ந்தோர் உண்மையென்று கூறும் நெறியால், உயர்ந்தோர் உண்மைகண்டே ஓரிடம் சான்றோரால் புகழப்படும் என்ற உண்மை பண்டை நாளில் இருந்ததென்பது தெளிய விளங்கு கிறது. இடைக்கா்லத்தில் வாழ்ந்த சேக்கிழார் பெருமான் திருநாவுக்கரசர் வரலாறு கூறப்புகுந்தார். அவர் பிறந்தது திருமுனைப்பாடி நாடாகும். அந்நாட்டைப் புகழக்கருதிய சேக்கிழார், அந்நாடு சான்றோர் பிறந்த சால்பு மிகவுடைய தாதல் கண்டு, 'அறந்தரு நாவுக்கரசும் ஆலாலசுந்தரரும், பிறந் தருளவுளதானால் நம்மளவோ பேருலகில், சிறந்த திரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு,' என்று கூறித் திரு முனைப்பாடி நாட்டைச் சிறப்பித்தார். இந்நாளில் நம் தமிழ் நாட்டைப் பாராட்டிப் பரவிய தேசீயகவி சுப்பிரமணிய பாரதியார், 'வள்ளுவன் தன்னை உலகினுக்கேதந்து வான்

புகழ்கொண்ட தமிழ்நாடு - நெஞ்சை, அள்ளும் சிலப்பதிகார மென்றோர் மணியாரம்படைத்த தமிழ்நாடு';என்று பாடினார். இதனாலும், ஒரு நாட்டிற்குச் சிறந்த புகழ்க் காரணங்களுள் மிகச்சிறந்தது சான்றோர் அந்நாட்டில் உளராவது என்றும், இதுவே, தலையாய தொன்றெனக் கருதும் வழக்கம் தொன்று தொட்டே நம் தமிழகத்தில் இருந்து வருகிறது என்றும் தெரியலாம்.

இன்று நம் தமிழகத்தில் நமக்கேயுரிய தமிழும் உலகிற் குரிய ஆங்கிலமொழியும் நிலவுகின்றன. இவ்விருமொழி களிலும் சிறந்த புலவர் பெருமக்கள் உள்ளனர். அவர் அனை வரும் அவ்வம் மொழிகளின் பெருமை கூறும் போது அம் மொழிகளில் புலமை சிறந்தோங்கிய சான்றோரை எடுத்தோதி அம்மொழியின் ஏற்றத்தைக் கூறுவர். ஆங்கிலத்திற்கு ஏற்றங் கூறுவோர், அதற்குப் பெருமையெல்லாம் செகப்பிரியர் (Shakespeare) உளரானது என்றும், ஆங்கிலநாட்டுக் கார்லயில் (Carlyle) என்பார், 'நாங்கள் இந்தியாவை இழத்தற்கு உடன் பட்டாலும் உடன்படுவோம், செகப்பிரியரை விடோம்' என்ற கருத்துப்பட மொழிந்தார் என்றும் கூறுவர். இவ்வாறே வட மொழியாளர், தங்கள் வடமொழி வான்மீகியையும் காளி தாசனையும் பெற்ற பெருமையுடைய தென்பர். செந்தமிழர் தங்கட்குப் பெருமை தரும் சான்றோர் தொல்காப்பியரும் திருவள்ளுவரும் என்பர். அவருள்ளும் தேசீய வாழ்வில் ஈடு பட்டோர், திருவள்ளுவரும், கம்பரும், இளங்கோவடிகளும் சிறந்த சான்றோரென்பர். இலக்கிய சமயவாழ்வுகளில் ஈடு பட்டோர், எங்கள் தமிழ்க்கு ஏற்றந் தருவன என ஆறு தமிழ்ப் பெருநூல்களை ஓதுவர். அவை, 'வள்ளுவர், மெய்யன்பர் மொழி வாசகம் தொல்காப் பியமே, தெள்ளுபரி மேலழகன் செய்தஉரை - ஒள்ளியசீர்த், தொண்டர் புராணம், தொகுசித்தி (சிவஞானசித்தியார், சிவஞான போதம் முதலியன) ஓராறும், தண்டமிழின் மேலாந்தரம்' என்பர். இலக்கண நெறியிற்

பயின்றோர், தொல்காப்பியம், திருவள்ளுவர், திருக்கோவை யார் என்ற மூன்றுமே சிறந்தன என்பர்.

இவ்வாறு பலரும் பல கூறுவராயினும், எல்லாருடைய கூற்றினும் ஒரு நூல் தவறாது குறிக்கப்பெறுவது காணலாம். அஃது யாது? அதுதான் திருவள்ளுவர் செய்த திருக்குறள். எத்திறத்தாராலும் பாராட்டப்படும் திருவள்ளுவரை மனத் தால் விரும்பாத ஒருவன் தமிழ்க்குடியில் இருப்பானாயின், 'அவன் குலத்தின்கண் ஐயப்படும்.' அவனைத் தமிழர் மக னென்னார்; மக்கட்பதடியென்பர்; அறிவுடையோர் நடைப் பிணம் என்பர். இதுபற்றியே முன்னோர் திருவள்ளுவரைத் 'தெய்வப் புலவர் திருவள்ளுவர்' என்று பாராட்டினார்.

## திருவள்ளுவர் வாழ்வு

### தோற்றுவாய்

நம் செந்தமிழ்நாட்டுப் புலவர் பெருமக்களின் வரலாறு களை அவ்வக்காலத்திலிருந்த அறிஞர்கள் எழுதி வைத்திலர். அப்பெருமக்கள்தாமும் தம் வரலாற்றைக் குறித்திலர். அவர் தம் புலமைப்பொருள்களாகிய பாட்டும் உரையும் பெயர்க் குறிப்புமாகிய சில குறிப்புக்களே நமக்குக் கிடைத்திருக் கின்றன. 'மேனாட்டு மக்களின் மொழியறிவும் நல்லொழுக் கங்களுட் சிலவும் விரவியதன் பயனாய், நம் நாட்டவர்க்குத் தம் பண்டைப் பெரியோர் வரலாறுகளை ஆராய்ந்து காணும் முயற்சி தோன்றுவதாயிற்று. அதன் பயனாகவே இன்று செந் தமிழ் நாட்டையாண்ட பல்லவர், சோழர், பாண்டியர், நாயக்க மன்னர், முகமதியர், மேனாட்டவர் முதலியோர் வரலாறுகள் ஓரளவில் வெளியாகியுள்ளன. மொழி வரலாறு, இலக்கிய வரலாறு, புலவர் வரலாறுகள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. இன்னும் சமயவரலாறு, சமுதாய வரலாறு, பொருள்நிலை வரலாறு, அரசியல் வரலாறு, வாணிக வரலாறு எனப் பல வரலாறுகள் ஆராய்ந்து காண வேண்டிய நிலையில் உள்ளன.

இவற்றை ஆராய்ந்து உண்மைகாணும் நெறி மிக்க சிக்கலாகவுளது. எத்துணைக் காலங்கழியினும், மெய்ம்மை நிலை பெறுமென்றும், பொய்ம்மை நிலையின்றிக்கெடும் என்றும் கூறுவர். சில ஆராய்ச்சிகளால் பொய்ம்மை மெய்ம்மைகள் நன்கு விளங்கியுள்ளன. இந்திய வரலாற்றில், கல்கத்தா இருட்டறை வரலாறு ஒன்று நெடுநாள் வரையும் உண்மையெனக், கருதப்பட்டு வந்தது; ஆராய்ச்சியால் அது பொய்யெனத் தெளிவாயிற்று. இவ்வாறே சிவாஜி, திப்புசுல்தான் முதலியோர் வரலாறுகளில் பல பொய்கள் நிலை யின்றி ஒழிந்தன; பல ஆயிர ஆண்டுகட்கு முன்பிருந்தவரெனக் கருதப்பட்டு வந்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் முதலாயினோர் காலம், இத்தகைய ஆராய்ச்சிகளால் இன்னதுதான் எனத் துணிபு செய்யப்பட்டுள்ளது.

இங்ஙனம் ஆராய்ந்து வருமிடத்துத் திருவள்ளுவர் போன்ற பெருமக்களின் வரலாற்று உண்மைகள் ஆன்றோரால் குறிக்கப்பட்டிலவாயினும், ஒருசில, தமது உண்மை காட்டி ஆராய்வார்க்கு ஊக்கம் தந்து வருகின்றன. பெரும் பாலான பொய்யும் வழுவும் புனைவுரையும் கலந்து ஒளி மழுங்கி யிருக்கின்றன. ஆயினும், அவற்றைத் தூய்மை செய்து கொள்வது அறிஞர் அறிவுபெற்றதன் பயனாகும். அதுவே திருவள்ளுவர்க்கும் கருத்து என்பதை, ‘குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள், மிகைநாடி மிக்க கொளல்,’ என அவரே உரைப்பதனால் நன்கறியலாம்.

நம் நாட்டில் அச்சுப்பொறி நிலவத்தொடங்கிய காலத்தில் திருக்குறளை அச்சிட்டு வெளியிட்ட சான்றோர் பலரும், திருக்குறட் பதிப்புக்களில், தொடக்கத்தே திருவள்ளுவர் வரலாற்றை எழுதியிருக்கின்றனர். அவ்வரலாறுகள் பலவற்றிற்கும் ஆதாரம் அவரவர் கேள்வி வாயிலாக அறிந்த செய்திகளேயாகும். இச்செய்திகளை ஒருங்குதிரட்டிச் சுமார் நாற்

பத்தைந்து ஐம்பது ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த முருகதாச சுவாமிகள் தாம் எழுதிய புலவர் புராணத்துள் செய்யுள் வடிவாகத் திருவள்ளுவர் வரலாற்றைத் தந்துள்ளார். ஆராய்ச்சி நெறியில் முயன்ற அறிஞர் சிலர் வேறு குறிப்புக்கள் சிலவற்றைக் கண்டு வெளியிட்டுள்ளார்கள். இவற்றின் துணையால் திருவள்ளுவரது உண்மை வரலாறு ஓரளவே தெரிகிறது.

## வள்ளுவர் காலம்

சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் திருவள்ளுவருடைய திருக்குறள் கருத்துக்களும் திருக்குறட் சொற்றொடர்களும் காணப்படுகின்றன. அவைகள் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டன என்பது ஆராய்ச்சியாளர் அனைவருக்கும் ஒப்பமுடிந்த கருத்து. ஆகவே, திருவள்ளுவர் காலமும் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டதாம். சங்கநூல்களிற் காணப்படும் பாட்டுக்கள் பலவும் ஒரு காலத்தன அல்ல. நெடுங்காலம் இடையிட்ட பாட்டுக்களும் அவற்றுள் உண்டு. 'தென்குமரியின் தெற்கிலுள்ள இந்துமாக் கடல் தோன்றுதற்கு முன் தோன்றிய செய்யுட்களும், அது தோன்றியபின் பாரதராமாயண நிகழ்ச்சிகட்கு முன்னும் பின்னும் தோன்றிய செய்யுட்களும், திருவேங்கடத்தில் திருமால் கோயிலும், பழனியில் முருகன்கோயிலும் தோன்றுவதற்கு முன் தோன்றிய செய்யுட்களும் தொகுக்கப்பட்டுள்ளன. சுருங்கச் சொல்லுமிடத்து, மிகப் பழைய நூல்கள் எல்லாவற்றிற்கும் பழையதெனக் கருதப்படும் தொல் காப்பியத்துக்கு முன்னே தோன்றிய செய்யுட்களும், பின்தோன்றிய செய்யுட்களும் தன்னகத்தேகொண்டு தமிழ் நாகரிகத்தின் தொன்மையுணர்த்தும் பெருநூலாகத் திகழ்வது புறநானூறென்பது மிகையாகாது,' என்பர். எனவே, திருவள்ளுவர் இருந்து திருக்குறள் பாடிச் சிறப்புற்ற காலம் சங்கத் தொகைநூற் பாட்டுக்கள் தோன்றிய காலமாம்: சுருக்கமாகக் கூறின், சங்ககாலம் என்று கூறலாம்.

## தமிழகம் - பிரிவுகள்

சங்ககாலத்தில் தமிழ்கம் ஐந்து பெருநாடுகளாகப் பிரிந் திருந்தது. அவை, தென்பாண்டி நாடு, சோழநாடு, தொண்டை நாடு, கொங்குநாடு, சேரநாடு என்பனவாம். பாண்டி நாட்டின் வடவெல்லை புதுக்கோட்டைக் கண்மையிலோடும் வெள் ளாறு; சோழநாட்டின் வடவெல்லை தென்பெண்ணை யாறு; தொண்டைநாட்டின் வடவெல்லை வேங்கட மலையும், அதன் வடகோடியில் கிழக்கு நோக்கியோடும் வட பெண்ணை யாறுமாம். கருவூரருகில் கரிவிரியோடு கலக்கும் ஆன் பொருந்த ஆற்றுக்கும் (அமராவதி யாறு) மேற்குமலைத் தொடருக்கும் இடைப்பகுதி கொங்கு நாடாகும். இதன் தென்னெல்லை கோடைமலைத் தொடரும் (ஆனைமலைத் தொடர்) வட வெல்லை எருமை (மைசூர்) நாடுமாகும். இந்த எருமை நாடு பிற்காலத்தே கங்க நாடெனப்பட்டது. கொங்கு நாட்டின் வடமேற்குக் கொண்கான நாடாகும். மங்களூர்ப் பகுதியிலுள்ள ஏழில்மலை (சப்த சயிலம்) இந்தக் கொண் கான நாட்டைச் சேர்ந்தது. வெஞ்சமாக் கூடலருகேயோடும் குடவனாறு சங்ககாலத்தே காவிரியோடு கலந்ததெனப் பதிற்றுப்பத்துப் பழையவுரையால் தெரிகிறது.

## வள்ளுவர்கள்

இச் சங்ககாலத் தமிழகத்தில் பாண்டிநாட்டு மேற்குப் பகுதியில் நிற்கும் மலைத் தொடர்களிடையே நாஞ்சில்மலை யென்பதொரு குன்று. அதனைச் சூழவுள்ள நாட்டை வள்ளு வர் என்ற வேந்தர் குடியினர் ஆட்சி புரிந்தனர். ஔவையார் காலத்தே அந்நாட்டை நாஞ்சில் வள்ளுவன் என்ற வேந்தன் ஆட்சிபுரிந்தான் எனச் சங்கத் தொகைநூல் கூறுகிறது. அவன் ஔவையார்க்குச் செய்த சிறப்பை நோக்கு மிடத்து, அவன் அறங்கிடந்த நெஞ்சும், ஆண்மை சான்ற அமைதியும் உடை யன் என்பது தெளிவாகிறது. புறநானூற்றில் ஒரு பாட்டுத்

திருக்குறளை அறம் என்றே கூறுதலால், அறம் பயந்த நம் திருவள்ளுவர் அவனுக்கு முன்னோராதல் வேண்டுமெனத் துணியலாம். அதற்கேற்ப அவன் வள்ளுவன் என்ற பெயரையே கொண்டிருக்கின்றான். பிற்காலத்தே வள்ளுவர் குடிநிலை தளர்ந்துபோயிற்று. அவ்வள்ளுவர்கள் மேலை மலையாள நாட்டுக் கோயில்களில், 'கோயில் காரியம்' பார்க்கும் பெருமக்களுள் ஒருவராக இருந்தனர். இதனை, மலையாளநாட்டுப் பொன்னானிவட்டத்துச் சுகபுரம் என்னும் ஊரிலுள்ள கல்வெட்டொன்று,[1] 'சொகிரத்துப்பருடை யாரும்... இராய சேகராயின வள்ளுவரும் கூடிச் செய்த கச்சமாவது,' என்று கூறுகிறது. இது வள்ளுவர்களே 'இராயசேக' ரென்பதனால், வள்ளுவரில் ஒருசிலர் மேலை நாட்டில் அரசுரிமை நீங்கினும் தொன்மைச் சிறப்புத் தோன்றக் கோயில் காரியம் பார்த்து வந்தனரென அறிகின்றோம். இக் கல்வெட்டிற்போலவே, இப்பொன்னானி வட்டத்துப் புக்காட்டூரிலுள்ள கல்வெட்டொன்று[2] புக்காட்டூர்ச்சபையோரும், பிராமணரும், கோயிலதிகாரிகளும், வள்ளுவர்களும் கோயிலில் விளக்கெரிக்க உடன்பட்ட செய்தியைக் கூறுகிறது. இக்கல்வெட்டுக்கள் காலத்தால் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டனவாகும். ஆதலால், சங்ககாலத்துக்கும் இக்கல்வெட்டுக்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் இவ்வள்ளுவர்கள் இருந்த இருப்பைக் காண்டல் வேண்டும்.

சங்கநூல்களை அடுத்துத் தோன்றிய மணிமேகலையில் காவிரிப்பூம்பட்டினத்தில் நடந்த இந்திரவிழாவை நகரத்தார்க்கு அறிவிக்கும் பணியை வள்ளுவன் ஒருவன் செய்த செய்தி காணப்படுகிறது. இதனையடுத்துப் போந்த திவாகர நூல், 'வள்ளுவன் சாக்கையெனும் பெயர் மன்னற், குள்படு கருமத் தலைவர்க்கொன்றும்,' என்று கூறுகிறது. இவ்வாற்றால், வள்ளுவர்கள் பழங்காலத்தே அரசரைச் சேர்ந்தொழுகும் பெருங்குடி மக்களாக விளங்கினரென்பது தேற்றம்.

சங்ககாலத்தே குறுநில மன்னராயிருந்த வள்ளுவர்கள், பின்னர் அரசவாழ்விழந்து தமிழ்வேந்தர்பால் அரசரைச் சேர்ந்தொழுகும் அரசியற் சுற்றத்தாருள் ஒருவராக வாழ்ந் தனரெனவும், பின்னர்ப் பெருங்கோயில்களில் 'கோயில் காரியம்' பார்க்கும் பெருமக்களாக விளங்கினரெனவும் அறிய வேண்டும்.

## திருவள்ளுவர் - பிறந்த நாடு

வள்ளுவர்கள் அரசவாழ்வு வாழ்ந்த நாளிலோ, அதற்குச் சிறிதுபின்னோ திருவள்ளுவ ருடைய முன்னோர் நாஞ்சில் மலையைச் சூழ்ந்த நாட்டினின்றும் நீங்கிப் பாண்டிநாட்டு வையையாற்றின் கரையிலுள்ள நாட்டை யடைந்து அங்கே தங்கினர் அந்நாட்டவர், ஊரார் உண்ணுநீர்கொள்ளும் நீர் நிலையை ஊருணியெனவும், அப்பகுதி மணல் பரந்து விளங் குவதாகலின் ஊற்றுக்கண்டு நீர்கொள்ளும் நீர்நிலையை ஊற்றெனவும், மணற்கேணியெனவும் வழங்குவர். திருவள்ளு வர் அந்நாட்டினரென்பது இனிது தோன்ற, அவர் 'ஊருணி நீர்நிறைந் தற்று,' எனவும், 'தொட்டனைத் தூறு மணற்கேணி' எனவும், 'இறைப்பவர்க்கு ஊற்று நீர் போல,' எனவும் வழங்கி யிருப்பது தக்க சான்று பகருகின்றது. மேலும், ஊருணி, கேணி யென்ற சொல்வழக்குகள் கொங்குநாட்டிலும் தொண்டை நாட்டிலும் இல்லை; ஊருணியென்னும் வழக்குச் சோழ நாட்டில் கிடையாது. ஆதலால், இவற்றை வழங்கிப் பயின்ற திருவள்ளுவர் பாண்டி நாட்டினரேயென்பது தெளிவாம். இதற்கு ஆதரவாக, திருவள்ளுவமாலையில் பழம்பாட் டொன்று, உத்தரம துரையில் கண்ணன் சிறந்து விளங்கியது போல, தென் மதுரையில் திருவள்ளுவர் சிறந்து விளங்கினா ரென்ற கருத்துப்பட,

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப – இப்பக்கம்

[3]மாதாணு பங்கி மருவுபுலச் செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு,

என்று கூறுகிறது.

## குறிப்புகள்

1. S.I.I. Vol.V. No.775.
2. A.R.N. 349 of 1924.
3. 'மாதானுபங்கி மறுவில்புலச் செந்நா' என்றும் பாடம்.

16

# திருக்குறள் – ஓர் திருப்பணி

*1949*

**அறிஞர் அண்ணா**

வள்ளுவர் தந்த திருக்குறள், தமிழர்க்கு மட்டுமல்லாமல், பண்புடன் வாழ விரும்பும் அனைவருக்கும், ஓர் வழிகாட்டியாக அமைந்திருக்கிறது.

திருக்குறள், பூஜா மாடத்துக்கு மட்டும் தயாரிக்கப்பட்ட ஏடல்ல. புனைந்துரைகள் நெளியும் புராண மல்ல - வாழ்விலே, தூய்மையை, அவரவரும், தத்தமது திறனைச் சரியாகப் பயன்படுத்தி, மற்றவரின் வாழ்வின் மேம்பாட்டினையும் மதித்து ஒழுகுவதன் மூலம், பெறக் கூடியது, என்ற பெருநெறியைக் காட்டும், நூலாகும்.

திருவிழாக்களையும் தீர்த்தமகிமைகளையும், திருப்பல்லாண்டுகளையும் திருவவதாரங்களையும், இவற்றின் பிற பதிப்புகளான, வெண் பொங்கல், இனிப்புச் சாதம் எனும் இன்ன பிறவற்றினையும், மக்களுக்கு வழங்கும், அழுக்குக்

கருத்துரைகள் கொண்ட ஏடுகளையே, தமிழ்நாடு கொண்டாடி வருகிறது. காரணம் பலப்பல, விளைவோ, வாழ்வில் வேதனை, சமூகத்தில் சச்சரவு, நாட்டிலே நலிவு.

நாம், இதுகாறும், அத்தகு ஏடுகளின் பிடியிலிருந்து நாடு விடுபட வேண்டுமென்பதற்கான பணிபுரிந்து வந்தோம் - அப்பணி தொடர்ந்தும் நடந்து வருகிறது.

அப்பணியுடனும் இதுபோது நாம் வள்ளுவர் தந்த திருக்குறளை ஒவ்வொரு இல்லத்திலும் குடியேறச் செய்தாக வேண்டும், ஒவ்வொருவர் மனதிலும், அவருடைய அற உரைகள் பதியச் செய்ய வேண்டும் என்ற சீ'ரிய பணியினையும் மேற்கொண்டுள்ளோம்.

நாம், நாவலரும் பாவலரும் கூடிடும் நன்மணி மாடத்திலே அல்ல, உலவுவது, உரையாடுவது. நாதனைக் கண்டோம், எம்நாவில் அவர் சூலம்பட இம்மெய்யறிவு கொண்டோம் என்று இயம்பிடும் அருள்விற்பனையாளர்களின் அணிமாடங்களை நாம் அணுகுவதில்லை.

மக்கள் மன்றத்திலே உலவுகிறோம், ஏரடிக்கும் எல்லனையும், காடு திருத்தும் கந்தனையும் காண்கிறோம். ஏழையின் கண்ணீரையும், எத்தனின் கபடத்தையும் காண்கிறோம். கட்டுக் கதைகளை நம்பிக் கருத்தைக் குழப்பிக் கொள்ளும், பாமரரிடம் சென்று பகுத்தறிவு பேசுகிறோம்.

இனி, இத்தகையவர்களிடம், நாம், மறைந்து கிடக்கும் இம்மாணிக்கத்தை - குறளைக் காட்டும் - மகத்தான பணியினை மேற்கொண்டுள்ளோம்.

நமது பணி வெற்றி பெற்றால்தான், மக்களின் உடைமையாகும் இந்தத் தமிழ் அறிவுக் களஞ்சியம்.

நமது பெரும்பணி மூலமே, மக்களுக்கு, வாழ்க்கையிலே கிளம்பும் எத்தகைய சிக்கலையும் சந்தேகத்தையும் நீக்கவும்

போக்கவும், நேர்மையை நிலைநாட்டவும் உதவும் இப்பெரு நூலின் உண்மைப் பொருள் தெரியமுடியும்.

குறள் ஏந்திச் செல்வோம், நாடுநகரமெங்கும் - பட்டி தொட்டிகளெல்லாம்.

பண்பாடு - எது என்பதை மக்கள் அறியச் செய்வோம்.

அறம், பொருள், இன்பம் எனும் அரிய முப்பொருளை மக்கள் உணர மட்டுமல்ல, நுகரவும் பணியாற்ற வேண்டும். புதிய பணி - ஆனால் நமது பழைய பாணியின் தொடர்ச்சி தான் - முற்றிலும் புதிதல்ல.

அப்பணிக்கு நாம் நம்மைத் தயாரித்துக் கொள்வதற்கு, குறளின் அருமை பெருமை பற்றி அறிஞர் கூறியுள்ள கருத்துரைகளை எண்ணிப் பார்ப்பது, முக்கியமான முதல் வேலையாகும்.

பேராசிரியர் சுந்தரனார், பெரும் புலவர் - அவர், வள்ளுவரின் திருக்குறளைப் பற்றிய அருமை பெருமையினை அறிவிக்கப் பல கூறவேண்டாம் - முக்கியமானதைச் சுட்டிகாட்டினாலே போதும் என்று எண்ணி,

வள்ளுவர் செய் திருக்குறளை
மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி
ஒரு குலத்துக் கொருநீதி

என்று பாடியுள்ளார்.

இந்த 'ஒருகுலத்துக் கொருநீதி' எனும் முறையினை காலம்கூடத் தகர்க்காதபடி, அவ்வப்போது உரம் ஊட்டி வருவனவே, புராண இதிகாச சாதிகள். அவற்றை நம்பியதாலேயே நாடு நலிவுற்றது.

நாட்டின் நலிவு நீங்கி, மக்கள் நல்வாழ்வு பெறுவதற்காக, வள்ளுவர் குறளை மறுவற நன்கு உணர்ந்தோராதல் வேண்டும், மக்கள்.

வள்ளுவர், சகலபிரச்சினைகளையும் ஆராய்ந்து, அரிய உண்மைகளை வெளியிட்டிருக்கிறார். கடவுட் கொள்கை, நாடு, அரசு, இல்வாழ்க்கை எனும் பல பகுதிகளாக உள்ள குறளின் முழு நோக்கம், மக்கள் அறநெறியில் நிற்க வேண்டும் என்பதேயாகும் - ஏனெனில் அவர் கூறியபடி அறத்தால் வருவதே இன்பம் - இந்த அறநெறியைப் பரப்பும் பணியினை மேற்கொள்ளும் நமக்கு உறுதுணையாக, அறிஞரின் கருத் துரைகள் உதவுகின்றன.

'வள்ளுவர் வரையறுத்துரைத்த கடவுள் நிலை, ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் எனும் முதுமொழிக் கிணங்கிய தாகும். அவர் பத்துக் குறட்பாக்களிலும் ஆதிபகவன் - வாலறிவன் - மலர்மிசை ஏகினான் - வேண்டுதல் வேண்டாமை யிலான் - இறைவன் - பொறிவாயில் ஐந்தவித்தான் - தனக்கு வமையில்லாதவன் - அறவாழி அந்தணன் - எண்குணத்தான் - என முறையே அமைத்துள்ளார்' என்பதை எடுத்துக் காட்டி யுள்ளார் புலவர் வரதராசனார்.

'திருக்குறள் என்னும் இவ்வரிய அறநூல் உலகியலுக் குரிய பெருநூலாகும். உலகியலில் கூறுதற்குரிய பெரிய பொருள்கள் பலவற்றினும், அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினும் பெருமையுடைய பொருள் சிறிது கிடையாது. வீடுபேறும் இம்மூன்றன் ஏதுவாகப் பெறப்படுவதேயன்றி வேறன்மையின், அதனை பெய்துவிக்கும் பெருமையும் இம் மூன்றற்குமேயாகும். ஆகவே, எவ்வகையிலும் பெருமை யென்பது இம் மூன்றற்குமே உரியதாகலின், இம் மூன்றனை யும் விளக்கும் நூற்பெருமைக்கு ஏனை எந்நூலும் இணையா காமையின், இதுவே எல்லாப் பெருமைக்கும் உரித்தாய்ப் பெருநூல் எனப்படுவதாயிற்று' என்று அதன் அருமையினை அழகுற எடுத்துக் கூறியுள்ளார் அவ்வை துரைசாமி எனும் அருந்தமிழ்ப் புலவர். இத்தகு பெருநூல் இயற்றுதற்கேற்ற

சூழ்நிலை, தமிழகத்தே இருந்தது எனும் சிறப்பினை மற்றோர் அறிஞர்,

'தமிழ் மக்கள் எண்ணிறந்த நூற்றாண்டுகளிற் பழகிய வாழ்க்கையின் பயனாக ஒப்புயர்வற்ற நாகரிகத்தைப் பெற்றனர். அதனால் அவர் தம்முள் பல பேரறிஞர் தோன்றி அருந் தமிழ் நூல்கள் இயற்றுவாராயினர். அவ்வறிஞருள் முதன்மையாக வைத்து எண்ணத் தகுந்த மேன்மையாளர் வள்ளுவர் என்பார். அவர் இயற்றியருளிய திருநூல் திருக்குறள்.

திருக்குறள் ஒழுக்கமுறை கூறும் நூல். அதிற் கூறப்பெறும் ஒழுக்கச்சட்டங்கள் தமிழ்நாட்டினர் பண்பட்ட ஒழுக்கச் சட்டங்களே; என்றாலும் அவை உலகத்தார் அனைவராலும் சாதி, சமய, நிற வேறுபாடுகள் ஒழித்துக் கை கொள்ளத்தக் காங்கு சீர்பெற அமைந்திருக்கின்றன. அதனால் திருக்குறளை உலகினர் அனைவரும் தத்தமக்கு ஏற்ற 'பொது மறை' எனத் தழுவிக் கொண்டு தம் தம் மொழிகளில் பெயர்த் தழுதிப் போற்றுவான் தொடங்கினர். ஆங்கிலம், செர்மன் முதலிய எல்லா மொழிகளிலும் இன்று திருக்குறள் மொழி பெயர்க்கப் பெற்றுப் போற்றிப் படிக்கப் பெற்று வருகின்றது' என்று கூறிக் குறித்திடுகிறார்.

புலவர் ஏறு நமது திருவள்ளுவர் என்பது பொருந்தாப் புகழுரை அல்ல பொருளுடைய உண்மை உரை என்பதைப் பெரியசாமிப் புலவர் கூறுகிறார்.

'வள்ளுவர் இயற்றிய குறள் நூல் உலகிற் பல மொழி லும் மொழி பெயர்க்கப்பெற்று, ஆங்காங்கு வழங்கி வரு தலை உணர்ந்த தமிழ் அன்பர்கள், வள்ளுவர் குறள் உலகப் பொதுநூல் எனவும், வள்ளுவர் உலகப்பொது அரசரெனவும் உளம்கொண்டுப் போற்றுகின்றனர்; வள்ளுவர் குறளின் வாடை தமிழ் நூல்களிலெல்லாம் வீசுதலால் வள்ளுவரைத் தமிழ்ப் பன்னூற்கும் அரசரெனயாம் போற்றுகின்றோம்.'

நாட்டுப் பற்றுக்கு, நமது வள்ளுவர் எவ்வளவு அரும் பெரும் துணையாக அமைகிறார் என்பதைப் புலவர் வரத ராசனார்,

'எதிர்காலத் தமிழ்நாட்டைப் பற்றி எண்ணத் தெரியாத வர்களுக்குத் திருவள்ளுவர் இன்றும் சிறந்த வழி காட்டியாக விளங்குகின்றார்; எண்ணத் தெரிந்தவர்களின் எண்ணங் களைச் செம்மைப்படுத்தித் தெளிவூட்டும் தெள்ளியராகவும் விளங்குகின்றார். அவர் எழுதியுள்ள பத்துக் குறளும் நாட்டுப் பற்று உடைய ஒவ்வொருவரும் நாடோறும் காலையும் மாலை யும் நாட்டை நினைந்து உருகி வழிபடும் வழி பாட்டிற்கு ஏற்ற பாக்களாகவும் உள்ளன என்று கூறலாம்.'

'மிகுதியான விளைவும் தக்க சான்றோரும் குறைவற்ற செல்வரும் வேண்டும். தனியுடைமை நீங்கும் எதிர்காலத்தில் 'தாழ்விலாச் செல்வரும் வேண்டும் என்பதற்கு ஈடாக 'தாழ் விலாச் செல்வமும்' வேண்டும் என்று மாற்றி எண்ண வேண்டிய நிலைமை மெல்ல அமைந்து வருகின்றது' என்று கூறுகிறார்.

அந்த நாட்டுக்கு, அமைய வேண்டிய அரசு பற்றியும், வள்ளுவனார் கூறாதிருந்தாரோ! இல்லை! அருமையான முறையில் அதுபற்றியும் கூறியுள்ளார் என்பதை அறிஞர் சேதுப்பிள்ளை, 'அரசியலைக் குறித்துத் திருவள்ளுவர் கூறும் அறிவுரை எக்காலத்திற்கும் எந்நாட்டிற்கும் ஒத்ததாகும். இவ்வுலகில் ஆசை பிடித்த அரசர் எந்நாளும் உண்டு. 'ஆசைக் கோர் அளவில்லை அகிலமெலாம் கட்டி ஆளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைவர்' அதற்கு மேல் ஆகாயத் தையும் கட்டியாள ஆசைப்படுவர். இதுபடைச் செருக்குற்ற மன்னர் இயற்கை.

இவ்வாறு ஆசைவெறி பிடித்தலையும் அரசர்க்குத் திருவள்ளுவர் ஒன்று கூறுகின்றார். நெறியல்லா நெறிச்

சென்று, பிறர் கதறக் கதறக் கைப்பற்றிய நாடும் செல்வமும் வந்த வழியே போய்விடும் என்பது அவர்வாக்கு.

'அழக்கொண்ட எல்லாம் அழப்போம்' என்ற அருமைத் திருக்குறள் ஓர் அரசியல் மந்திரம். அழுகையில் வந்தது அழுகையிற் போகும் என்பது வள்ளுவர் வாய்மொழி. பிறர் வடிக்கும் கண்ணீரில் ஓர் அரசன் பெற்ற நாடு, அவன் வடிக்கும் கண்ணீரில் அகன்று போய்விடும் என்பது அதன் கருத்து. இன்னும் நாடாளும் அரசன் தன் குடிகளின் கருத்தைத் தழுவியே ஆளவேண்டும்; குடிகளின் இணக்கத்தைப் பெற்ற அரசுதான் நெடுங்காலம் நிற்கும் என்பது திருவள்ளுவர் கொள்கை' என்று வியந்து கூறுகிறார்.

குறளின் அருமையினை எடுத்துரைத்த அறிஞர் அனேகர். பல மொழிகளிலே, குறள் மொழி பெயர்க்கப்பட்டு, அதன் பெருமை, கடல் கடந்தும் சென்று பரவியுள்ளது. எனினும் தமிழர் மனைகளிலே, குறள் உண்டோ? பஞ்சாங்கம் இருக்கும் - பாரதக் கதை இருக்கும் - இராமாயணமும் இருக்கும் - அல்லி அரசாணி மாலையும், அபிமன்யு வீரமும் இருக்கும்; அறநெறி கூறும் அருமைத் திருக்குறள் இருக்குமா? இல்லையே! ஏன்? இதனை எண்ணி ஏங்குபவரின் தொகையே குறைவு. உளம் நொந்து, சு.வே. நடராசன் என்பார்,

'தமிழ்நாடு எங்கணும் கம்பன் திருநாள்; எங்கணும் கம்பன் நினைவு மலர்கள்; எங்கணும் கம்பச்சித்திரம். எங்கணும் கம்பர் தரும் காட்சி. மேடைப் பிரசங்கிகளைக் கவனித்தால் கம்பன் காவியம் கம்பனும் நகைச்சுவையும் என்பது பேச்சு. அது போன்று வள்ளுவன் திருநாள் கொண்டாடப்படுகின்றதா? அவன் பெயரால் நினைவு மலர்கள் வெளிவருகின்றனவா? பத்திரிகைகள் குறளுக்குத் தனியிடம் கொடுக்கின்றனவா?

கம்பராமாயணத்தை இடைவிடாது பயில்கின்றார்கள் - பயிற்றுகின்றார்கள். காவியரசனையில் சொக்கிக் கற்பனைக்

கதைகளைக் கருத்தூன்றிக் கற்கின்றார்கள். தமிழன் வீரத்தை - அகவாழ்வை - அவனது பகுத்தறிவைக் கெடுக்கின்ற இடங்களைக் கண்டு வியந்து கொண்டாடுகின்றார்கள்.

கண்ணகி வழிவந்த வீரமங்கையர்கள் கற்பழிக்கப்படுகின்ற இடங்களிலே ஆகா! ரசனை! பாவனை! என்று சொக்கித் தம்மையே மறந்து விடுகின்றார்கள் நமது புலவர் பெருமக்கள் - பண்டித மணிகள். அவர்கள் வள்ளுவன் நூலை இடைவிடாது பயில்கின்றார்களா? பயிற்றுகின்றார்களா? குறளிலே காணப்படுகின்ற தமிழன் வீரத்தை - அகவாழ்வை அவனது பகுத்தறிவைக் கொண்டாடுகின்றார்களா? கொண்டாடுவார்களாயின், கைவேல் களிற்றோடு போக்கி வருபவன் - மெய்வேல் பறியா நகும்; மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை; அறிவுடையார் எல்லா முடையார் என்பவற்றைப் பேசுகின்றார்களா? மறுத்து, வாலியைக் கொன்ற ஆரிய இராமனின் வீரியத்தையும், அகல்யையின் சாப நீக்கத்தையும் பேசுகின்றார்களே! போற்றிப் புகழ்கின்ற ஒரு நூலை ஏன் மறைக்கின்றார்கள்? அதன் மாண்பை மக்களுக்கு ஏன் எடுத்துக்காட்டவில்லை? இதனைக் கேட்டால், 'மக்கள் பக்குவம் அடையவில்லை; அவர்கள் நீதியை எப்பொழுதும் விரும்புவதில்லை. அது அவர்கள் செவிகளுக்கு இன்பமூட்டுவதில்லை' என்று கூறிவிடுகின்றார்கள். இந்த நிலையினைக் காணத்தான் வருத்தம் ஏற்படுகின்றது; நெஞ்சம் புண்படுகின்றது' என்று குமுறுகிறார்.

புண்பட்ட நெஞ்சுடன் உள்ளனர் அறிந்தோர். அறியாதார்களோ, குறள், ஓர் புதிர்!

பண்டைத் தமிழரின் மனப்புண்ணும், பயனில் நூற்களை மட்டுமே அறிந்ததால், மக்கள் மனதிலே மூண்டு கிடக்கும் மருளும், போக்கப்பட வேண்டும் - நாம் மேற்கொள்ளும் பணிமூலம்,

வாழ்க வள்ளுவர்! வளர்க குறள் நெறி!

## திருக்குறள்

தலைவர்களே! அருமை நண்பர்களே தாய்மார்களே!

இது ஒரு பெருமை வாய்ந்த மாநாடு. இலக்கிய வளர்ச்சி மாநாட்டில் மறுமலர்ச்சியின் ஒரு சிறந்த அறிகுறி; சிறந்த கட்டம்; தமிழிற் பேரறிவு படைத்தவர்களும், பிறரும் நம்மை இலக்கியத்தைப் பழிப்போர் கலையைப் பழிப்போர் என்று கூறும் குறையைப் போக்கும்படி அமைந்த ஒரு சிறந்த மாநாடு. எல்லாவற்றிற்கும் சிறந்த வழிகாட்டுவதாயிற்று குறள். இராமாயணம், பாரதம், கீதை முதலியவற்றைக் குறை கூறும் சுயமரியாதைக்காரர் குறளை ஆதரிக்கின்றனரென்றால் அதற்குக் காரணம் யாது?

## திருக்குறளின் சிறப்பு

குறள் ஒன்றுதான் மக்கள் நலனை நிலைநாட்ட ஒழுங்காக வகுக்கப்பட்ட நேர்மையான நூல்; அதனாலே தான் பாராட்டுகிறோம். ஆனால், இந்த மாநாடு விருதுநகரில் கூடுவது சிறப்பு என்கின்றேன். இந்நகரில் அறிஞர் வே.வ. இராமசாமி அவர்கள் தமிழுலக வானத்தில் அழகிய தென்றலை வீசுகிறார்கள். தோழர் காமராசர் அரசியற் புயலை வீசுகிறார்கள் - புயலின் வெம்மையை - கடுமையைத் தணிக்கத் தென்றல் வீசுகிறது. இரண்டும் மாறி மாறி வீசுகின்ற இந்நகரில் குறள் மாநாடு கூடுவது மிகவும் சிறப்புடையது. தென்றலை நடத்தும் தலைவரும் அரசியல் புயலை வீசும் தலைவரும் ஒருங்கே வீற்றிருந்து நடத்த வேண்டிய மாநாடு. அத்தகைய நாளை திருக்குறள் கூட்டி வைக்கும். ஒரே கொட்டகையில் கூடும்படியான வாய்ப்பும் ஏற்படும். இந்த நாட்டுக்கு உடையவனும் ஆக்கிப் படைப்போனும் பிற நாட்டான் என்கின்ற இழிதகைமை போய் உரிமை கிடைத்திருக்கும் இந்தக் காலத்தில் நீதி எது? வாழ்க்கை நூல் எது? என்று ஆராயும் பொறுப்பான கட்டம் இது. வழிகாட்டியான நூல் தேவை; வாய்ப்புத் தேவை; திருக்குறள் வாய்ப்

பான நூலாகக் கிடைத்தது. அதனைப் போற்றி ஒழுகும் வாய்ப்புங் கிடைத்தது. குறளைப் பற்றிப் பேசத் திட்டம் வகுக்க இம்மாநாடு அமைக்கப்பட்டது.

எனக்குத் தெரிந்த அளவிலே ஏன் இவ்வளவு அருமை யான திருக்குறள் கையிலே இருந்தும் அது தமிழகத்து மக்களுக்கு இதுநாள் வரை பயன்படவில்லை. இதற்கொரு உதாரணம் என்னால் காட்டக் கூடுமானால் சொல்வேன். நான் காட்டுகிற உதாரணம் முற்றிலும் பொருத்தமான தென்று அர்த்தமுமல்ல: நான் சொல்வதுதான் முழு உண்மை என்றும் அர்த்தமல்ல; என்னுடைய அறிவுக்குப் பட்டதிலே திருக்குறளைப் போற்றுகின்ற நாம், அந்தக் குறள் நெறியின் படி நடக்க வேண்டுமென்று விரும்புகின்ற நாம், குறள் நெறி யின்படி நடப்பதற்கு முடியாத அளவிலே நம்மைத் தடுத்து நிறுத்துகின்ற வேறு பல சூழ்நிலைகளை, வேறு பல சிற்றறிவு களை, வேறு பல சூழ்ச்சி நிலைகளைத் தகர்த்தெறியாத காரணத்தினாலேதான், திருக்குறள் கையிலேயிருந்தும், உண்மையிலே நம்மாலே, நல்ல நிலையிலே வாழ முடியாமல் போய்விட்டது. உங்களுக்கெல்லாம் நன்றாகத் தெரியும் கையிலே கத்தி வைத்துக் கொண்டால், வருகிற எதிரியை வெட்டி வீழ்த்தலாம் என்பது. என்னைப் போன்ற ஒரு பல வீனன் கையிலே கத்தியைக் கொடுத்தால், நான் அவனைக் கத்தியால் குத்திக்கொல்ல இயலாது என்பது மட்டுமல்லா மல், என்னுடைய கரத்திலேயுள்ள வாளை அவனே பறித்துக் கொண்டு வாளில்லாதிருந்தால் கையாலாவது தாக்கியிருப் பான்; என்னுடைய கரத்திலேயிருக்கிற வாளை அவனே பறித்துக் கொண்டு என்னையே திருப்பித் தாக்கியிருக்கக் கூடும். ஆகையினாலே வாளை மாத்திரம் வைத்துக் கொண்டி ருப்பதால் பயனில்லை; உள்ளத்திலே வலிவு இருக்க வேண்டும். நல்ல உறுதியிருக்க வேண்டும். அதைப் பயன்படுத்துகிற தம்மையும் தெரிய வேண்டும் என்பதற்கேற்ப, நான் சொல்லு

கிற இந்தக் கருத்துக்கும் நிகழ்கால அரசியலுக்கும் எந்தவித சம்பந்தமுமில்லையென்று மாற்றார்களுக்கும், உற்றார்களுக்கும் ஒருசேரத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## திருக்குறள் வாழ்வியல் தத்துவம்

வாள் ஒன்று மட்டுமல்ல வலிவுக்குக் காரணம்; உள்ளத் திண்மையும் மிகமிகத் தேவை என்பது போல வள்ளுவருடைய குறள் ஒன்று மட்டும் போதாது. வள்ளுவருடைய குறளை எந்தவிதத்தில் பயன்படுத்த வேண்டுமோ, வள்ளுவர் எந்த இன்பக் கனவுகளைக் கண்டாரோ, எத்தகைய வாழ்க்கை நெறி தேவையென விரும்பினாரோ அவைகளை நாம் பெற வேண்டுமென்ற ஆர்வமிருக்க வேண்டும். வள்ளுவரின் குறளை வைத்துக் கொண்டு அதனால் பெறப்படும் பயனைப் பெறுவதற்கு முன்னாலே, தடுக்கின்ற சூழ்நிலைகளைத் தகர்த்தெறிவதற்கு நம்முடைய உள்ளத்திலே திண்மையிருக்க வேண்டும். அதை விட்டுவிட்டு பத்தோடு பதினொன்று அத்தோடு இது ஒன்று என்பதைப்போல், தேவாரம் உண்டு. திருவாசகம் உண்டு, திருப்புகழ் உண்டு, காவடிச்சிந்து உண்டு, நாலடியார் உண்டு மற்றும் பல உண்டு அதைப்போல திருவள்ளுவரும் திருக்குறளும் உண்டு என்று சொன்னால் இப்படித்தான் ஆண்டுக்கொரு முறை நாம் கூட வேண்டும், அழகான தமிழிலே அருமையான கருத்துகளை எடுத்துச் சொல்ல வேண்டும், கேட்போர்கள் வாய்பிளக்கக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு திருக்குறளும் நல்ல நூல்தானாம் என்று சொல்ல வேண்டும், மறுநாள் அவர்கள் கேட்கின்ற திருவாசகம், பிறகு நான்கு நாட்களில் கேட்கின்ற தேவாரம் இவைகளோடு திருக்குறளை ஒப்பிட்டுப் பார்த்து அவர் சொன்னதும் நன்றாகத்தான் இருந்தது, இவர் சொன்னதும் அருமையாகத்தான் இருக்கிறது, எல்லார் சொல்வதும் நன்றாகத்தானிருக்கிறது, ஏதும் அறியாமலிருப்பது மிக நன்றாகத்தானிருக்கிறது என்று மக்கள் அமைதியடைந்து விடுகிறார்கள்.

## திருக்குறளை சுயமரியாதைக்காரன் பரப்புவது ஏன்?

திருக்குறளைப் பரப்பும் பணியில் நாம் பங்கெடுப்பதில் லாபம் ஒன்றும் உண்டு. நட்டம் ஒன்று உண்டு. திருக்குறளைப் புராணமாக்க நினைத்தது நட்டம். நமக்கு ஒரு நூல் கிடைத்தது லாபம். நம் நாட்டில் அரிய உண்மைகள் இல்லையா? அரிய பெரியார்கள் தோன்றவில்லையா? இவற்றிற்கெல்லாம் விடையளிப்பது திருக்குறள். வள்ளுவர் அத்தகைய நூலை நமக்கு அருளியிருக்கிறார். அறிவுக்குப் புறம்பான நுல்களை எதிர்க்க அஞ்சாத சுயமரியாதைக்காரர் குறளை எடுத்து பாராட்டுகின்றனர்; நெஞ்சார வாழ்த்தி விளக்குகின்றனர்; பிறரும் குறளைப் போற்றத்தான் செய்கின்றனர். மடாதிபதிகள் மற்றும் பிறர் குறளை வெளியிடுகின்றனர். ஏன் - அவர்களும் குறளைப் போற்றுவோம் என்பர்; அவர்களைப் பற்றி என்ன சொல்வது? குறளை அவர்கள் படித்தால் - அதன்படி நடந்தால் - நாட்டுக்கு மாடாதிபதிகள் தேவையில்லையே; சிலப்பதிகாரத்தைத் தருவதற்கு துறவு பூண்டார் ஒருவர். அவரைப் பாராட்டுகின்றோம்; திருக்குறளைப் போன்ற நூல்தரத் துறவு பூண்டாரெனின் ஒப்புக் கொள்கிறோம். மடாதிபதிகளுக்கு பாதக் குறடுகள் ஏன்? இவர்கள் குறளின்படி ஒழுகுவார்களா? புறக்கோலம் எதற்கு? மடாதிபதிகளே! காலம் மாறிவிட்டது; சமரசம் உண்டாக்குங்கள். மக்கள் மனத்தில் சாந்தம், ஒழுக்கம் நிலைபெற நன்னெறி காட்டுங்கள். வள்ளுவன் புகழைப் பரப்புங்கள். இராமாயணம், பாரதம், பாகவதம், கீதை இவற்றை வெறுத்தவன் திருக்குறளைப் பாராட்டுகிறான்; நீங்கள் எல்லாவற்றையும் சேர்த்துப் பாராட்டுவது பொருளற்ற செயல். மற்ற நூல்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டியல்ல. ஒன்றிலொன்று பார்த்தால் பயனில்லை; இரயில்வே கைடில் பார்க்க வேண்டியவற்றைப் பஞ்சாங்கத்தில் காண முடியாது. அட்லாசில் பார்க்க வேண்டியவற்றிற் பஞ்சாங்கத்தைப் பார்ப்பது பொருந்துமா? மற்ற நூல்களில் சிலருக்கு

ரசிகத் தன்மை இருக்கலாம்; ஆனால், அவை வாழ்க்கைக்குப் பயன் தராது; மடமையை நீக்காது; வாழ்க்கைக்கு அவை உதவா; மறு உலகத்தைப் பற்றிக் கேட்கலாம்; இங்கே உழைப்பு வாழ்வு. அங்கே தேவர் வாழ்வு. உழைப்புக்கும் ஓய்வுக்கும் வேற்றுமை தெரியாத அவ்வுலகப் புரளியால் யாது பயன்? அங்கே நாட்டியம் - ஊடல் - நாரதர் தூது - கோபம் - பதவி யிழப்பு இவை நடைபெறுமாம். அவற்றால் யாருக்குப் பயன்? இவற்றை சுயமரியாதை உள்ளவன் கண்டிக்கிறான். என்ன காரணம்?

## புராணக் கதைகளில் நீதி உண்டா?

பக்தி மறுமையுலகம் - இவை நேர்மை என்று காட்ட முடியுமா? எந்த மதவாதியும் சொல்ல முடியுமா? புராணக் கதை, நீதி போதிக்க எனின் ஒன்றோடொன்று முரணுகிறதே! பக்தியை ஒப்பி ஆத்திகன் எந்தக் கதையை எப்படி நம்புவது? ஒரு ஊருக்கு நாலு பாதையா? வியாசன் - சுக்கிரன் - இரமண முனிவர் - பட்டினத்தார் - ஒவ்வொருவர் கூறுவதும் ஒவ்வொரு வழி; ஒன்றுக்கொன்று முரண். இப்படியாக்கினால், என்ன செய்வது? இந்த வழியில் ஆத்திகனும் போக முடியாது; நாத்திகனும் போக முடியாது. புலிக்குப் பயந்து மரத்திலேறித் தூங்காமல் இலை கிள்ளிப் போட்டவனுக்கு அம்மை சிவ கர்மியின் கட்டளையால் அப்பன் சிவபிரான் திருவாய் மலர்ந்தருளி வீடு பேறு கொடுத்தானாம். கால் தேய, உடல் தேய பின்பு தலைகீழாகவும் நடந்தலைந்தபின் காரைக்காலம் மையாருக்கு என் அப்பன் சிவகாமிநாதன் அருள் செய்தா னாம்; எதைப் பின்பற்றி எந்த நெறியிற் செல்வீர்கள். பாண் டவர் வரலாற்றை நோக்குங்கள். துரோணர் மற்றவன் கற்றதற் குக் கட்டை விரலைக் கேட்டுத் துண்டிக்கச் செய்தார். குரு பத்தினியைக் கற்பழித்த சந்திரன் கதையைறிவீர்கள்; இவற் றைப் படித்து மக்கள் வாழ முடியுமா? இராமாயணத்தில் நீதி யுண்டென்கிறார்களே! வாலியைக் கொல்ல இராமன்

கையாண்ட முறையால் நாம் அறியும் நீதி என்ன? இவற்றை யெல்லாம் ஆராய்ந்தால் நாம் என்ன கருத முடியும்? திருக் குறளைத் தவிர நமக்கு வேறு வழியில்லை; நம் தலைவர் நாவலர் பாரதியாரவர்களை நான் வேண்டிக் கொள்கிறேன் - திருக்குறளைப் பண்படுத்தித் தரவேண்டுமென்று. நீங்கள் பண்படுத்தி நல்லுரை வகுத்து நல்ல வித்தாகக் கடைந்த தெடுத்துக் கொடுங்கள். நாங்கள் எல்லா மக்களின் உள்ளத் திலும் விதைத்து விடுவோம்; இன்னும் பத்தாண்டுகளுக்குள் எல்லோர் மனத்திலும் எல்லோர் வீட்டிலும் திருக்குறள் நிலைபெற்று இருக்கக் காணலாம். இதனை நான் வேண்டிக் கொள்கிறேன்.

# 17

# திருக்குறள் குழந்தையுரை

*1949*

**புலவர் குழந்தை**

தமிழர் பண்பாட்டுக்குச் சான்றாக உள்ள பழந்தமிழ் நூல்களுள் திருக்குறளே தலையாய நூலாகும். திருக்குறள், திருவள்ளுவர் என்னும் பழந்தமிழ்ப் பெரியாரால் செய்யப் பட்டது. தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் கட்டாயம் படித்துப் பயன்பெற வேண்டிய இன்றியமையாச் சிறப்பினையுடையது திருக்குறள். வள்ளுவர் குறளைப் படிப்போர், வள்ளுவர் கால நிலை, வள்ளுவர் நூல்செய்த முறை, திருக்குறளின் பெருமை, பொருள் கொள்ளும்முறை ஆகியவற்றை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

## வள்ளுவர் காலநிலை

வள்ளுவர் காலத்தே, அவர் காலத்திற்குப் பன்னெடு நாள் முன்னர் இமயமலைக்கு வடபாலிருந்து வந்து, இமய மலைக்கும் விந்தமலைக்கும் இடைப்பட்ட நிலமாகிய வட

நாட்டில் குடியேறி வாழ்ந்து வந்த வடபுல மக்கள் சிலர் தமிழகத்தில குடியேறி வாழ்ந்து வந்தனர். தமிழ் மக்கள் அவர் களை அன்புடன் வரவேற்றுப் போற்றி வந்தனர். அவ் வடபுல முதியோர், தமிழ்த் துறவிகளான அந்தணர்களைப் போல மதிக்கப் பட்டு வந்தனர். அச் குடும்பத் தலைவர்களில் பெரும் பாலோர் தமிழ்ச் செல்வர்களிடம் பாங்கத் தொழிலின் ஒரு பகுதியான பார்ப்பனத் தொழில் செய்து வந்தனர். வந்தேறி களான அவ்வடபுல மக்கள் தங்கள் குலத்தொழிலெனக் கொலைவேள்வி செய்து வந்தனர் (259). அவ்வேள்வியால் பெரும்பயன் உண்டாகும் என்னும் அவர் கூற்றினைத் தமிழ் மக்கள் நம்பிவந்தனர் (268). அவ்வடவர் கொள்கைகள் சில தமிழரிடைப் பரவியிருந்தன. அன்னார் கூறிய பல கற்பனைக் கதைகளைத் தமிழ் மக்கள் தெரிந்திருந்தனர்; சில கற்பனை களை உண்மையென நம்பியும் வந்தனர். அவ்வட புலப்பிறவி வேற்றுமைப்பிணி தமிழ் மக்களை ஒருவாறு பிணிக்கத் தொடங்கியிருந்தது (972). அதனால், தமிழ் மக்களின் ஒன்று பட்ட ஒருமை வாழ்வு சிதையத் தலைப்பட்டது. தமிழர் பண்பாட்டை அவ்வடபுலப் பண்பாடு விழுங்கி வந்தது.

## வடபுலத்தார்

அவ்வடபுல மக்கள், தாங்கள் முன்பு இருந்துவந்த தங்கள் பழைய தாயகத்தில் வாழும் தம்மவர் மேலானவர்; இந்நாட்டு மக்களிலும் உயர்ந்தவர்; யாதொரு கட்டுப் பாடுமின்றித் தம் விருப்பம்போல் நடந்துகொள்ளும் இயல் பினர் (1072). அவர்கள் தலைவனான இந்திரன் மிக்க வலியும் பெருமையும் உடையவன் (25). அந்நாடு செல்வமிக்க நன்னாடு; துன்பமென்பது அங்கில்லை; இன்ப வடிவானது என்பன போன்ற தம் இனப் பெருமையைத் தமிழ் மக்கள் நம்பும்படி செய்திருந்தனர்.

தமிழ் மக்கள் அவ்வடவரின் பழந்தாயகத்தினரான அவ்வடபுலத்தாரை வானோர் (18, 336), விசும்புளார் (25),

இமையார் (906), புத்தேளிர் (58, 213, 234, 320, 966), தேவர் (1072), தெய்வம் (50), புலவர் (234) எனவும்; அவ்வடபுலத்தார் வாழ்விடத்தை வானகம் (101), மேலுலகம் (222), புத்தேளுலகம் (213, 234, 320), புத்தேள்நாடு (966, 1323), தாமரைக் கண்ணா னுலகு (1103) எனவும் அழைத்து வந்தனர்.

### வானவர்

மேற்குத்தொடர்ச்சி மலைச்சாரலின் உயர்ந்த மேட்டு நிலத்திலிருந்து சேரநாட்டை யாண்டுவந்த சேர மன்னரை, வானவர் (புறநானூறு 36,126), வானவரம்பர் (புறம் 2, பதிற்றுப் பத்து 35, 58) என்று அழைத்து வந்தது போலவே, இமய மலையின் வடபால் உயர்ந்த மேட்டு நிலத்தில் வாழ்ந்து வந்த தால் தமிழ்மக்கள் அவ்வடவரை வானோர் என அழைத்தனர். வான் - உயர்வு, வானகம் - உயர்ந்த இடம். வானவர், வானோர் - உயர்ந்த இடத்தில் வாழ்பவர். இதுபற்றியே வடவர் அன் னாரை 'உயர்ந்தவர்' என்றதும்.

### விசும்புளார்

விசும்பு - வான், விசும்புளார் - விசும்பில் உள்ளவர் - வானகத்தார். மேலுலகம் என்றதும் அப்பொருளதே. திசை பற்றி ஐரோப்பா மேனாடு எனவும், மலேயா முதலிய கிழக்கு நாடுகள் கீழ்நாடு எனவும் வழங்குதல் போல, இடம்பற்றி அது மேலுலகம் எனப்பட்டது. உலகம் என்பது நாட்டைக் குறிக்கும். 'மாயோன் மேய காடுறை உலகமும்' (தொல்: அகத்-5) என, முல்லைநிலம் உலகம் எனப்படுதல் காண்க.

### இமயவர்

இமயமலையில் வாழ்பவர் என்னும் காரணப் பெயர். அமச்சு - அமைச்சு என அகரத்திற்கு ஐகாரம் போலியானாற் போல, இமயவர் என்பது இமையவர் என்றாயது. இமை யோர் - இமையவர். கோவை திரு. துடிசைக்கிழார் அவர்கள் பதித்துள்ள திருமந்திரம் 17ஆம் பக்கத்தில், தமிழ் நாட்டின்

வட வெல்லையாகிய இமயமலையின் ...... 'இந்திரன்' மால், அயன் முதலிய இமயவர்க்கு' என்றெழுதி, இமையவர் - இமய மலைவாசிகள் என்று குறிப்பும் எழுதியுள்ளார்.

## புத்தேள்

இது, புத்தாள் என்பதன் திரிபு. புது ஆள் புத்தாள்; புது ஆடை - புத்தாடை என்பது போல. புதியவர் என்பது பொருள். புத்தேளிர் - பன்மை. அவ்வடபுலத்தார் புதிதாக இங்கு வந்த போது இட்டு வழங்கிய பெயர். இன்றுங்கூட வேற்றூரிலிருந்து வந்து குடியேறினவனைப் புதுக்குடியான் என்று அழைப்பது வழக்கில் உள்ளது. புத்தேளுலகம், புத்தேள் நாடு - வானகம்.

## தேவர்

மேலானவர், போற்றற்குரியவர் என்னும் பொருளது. முன்னது மேலானவர் என்னும் வடவர் கூற்றினைக் கொண்டு கூறியது. மேலிடத்தினர் என்பது பொருள். பின்னது புதிதாக வரும் அயல்நாடரை அன்புடன் வரவேற்றுப் போற்றும் தமிழர் பண்பாட்டினால் வந்தது.

தேவர் என்னும் பெயர் திருவள்ளுவர் பெயர்களுள் ஒன்றாக இருப்பதும், அருண்மொழித்தேவர் - சேக்கிழார், மெய்கண்டதேவர் (சிவஞான போத ஆசிரியர்), 'மேழித் தேவ்ர் பெருமைக்கு வேறுந் தேவர் கூறேனே' (ஏரெழுபது) என, வேளாண்குடி மக்களுக்குத் தேவர் என்னும் பட்டப் பெயர் வழங்கி வருவதும், மறக்குடி மக்களாகிய தமிழ் மறவர் குலம் தேவர்குலம் என்னும் பெயராலேயே இன்றும் அழைக் கப்பட்டு வருவதோடு, அக்குல மக்களும் தேவர் என்னும் பட்டப் பெயரிட்டு வழங்கி வருவதும், வடமொழியைத் தேவமொழி என்பதும், கிழக்கு நாட்டு மக்கள் நாகர் என அழைக்கப்பட்டது போல, தேவர்களுக்கும் நாகர் என்னும் பெயர் இருப்பதும், இத்தென்னாட்டில் இருந்த அசுரர், அரக்கர் என்போர்க்கும், அத்தேவர்களுக்கும் அடிக்கடி

போர் நடந்தது; அசுரரும் அரக்கரும் தேவர்களைச் சிறையிட்டனர், தேவமகளிரை ஏவற்றொழில் செய்ய அமர்த்தி வந்தனர் என்பதும், தேவர் என்போர் மக்களில் ஒருவகையினரே என்பதற்குச் சான்றாகும்.

## தெய்வம்

தெய்வம் என்பதும் மேலானவர் என்னும் பொருளைக் கொண்டு கூறிய பெயரேயாகும். தெய்வம் - மேன்மை, சிறப்பு. தெய்வத்தமிழ், தெய்வப்புலவர், தெய்வப் புலமை, தெய்வத்தன்மை, தெய்வத்தாமரை, தெய்வவுத்தி, தெய்வப் புணர்ச்சி எனக்காண்க. தெய்வத் தமிழ் - மேலான, சிறந்த தமிழ். பிறவு மன்ன. 'பணியுமாம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம் தன்னை வியந்து' (குறள் 978) என்பது போலத் தேவரைத் தெய்வம் என்றார். பெருமை - பெருமையுடையார், சிறுமை - சிறுமையுடையார், பெருமை, சிறுமை - பண்புப் பெயர்கள். பண்பால் பண்பியைக் குறித்தல் தமிழில் பெருவழக்கு.

## தெய்வம் என்னும் சொல்

மலையில் மூங்கில் ஒன்றோடொன்று தேய்வதனால் தீ உண்டாகிறது. கல்லைச் செதுக்கும்போது தீப்பொறி தோன்றுகிறது. இவற்றிலிருந்தே முதன்மாந்தர் தீக்கடை கோலும், சக்கிமுக்கிக் கல்லும் கண்டுபிடித்திருக்க வேண்டும். பொருள்கள் ஒன்றோடொன்று தேய்வதனால் தீ யுண்டாவதால், பழங்காலத் தமிழ் மக்கள் அதைத் தேய் என்றனர். 'தேயு' வடமொழி, தேய் என்பதே நாளடைவில் தேய் - தே - தீ எனத் திரிந்தது. அயற்சொல்லானதால் வடமொழியில் திரியாது அப்படியே உள்ளது. உணவு சமைத்தல், குளிர் நீக்கல் முதலிய நன்மை குறித்துத் தீயை மேலானது எனப் போற்றி வந்தனர். தேய் என்னும் சொல்லினடியாகப் பிறந்தவையே தேவன், தேவி, தேவர், தெய்வம் என்னும் சொற்கள். தேவன் - ஆண்பால், தேவி - பெண்பால். தேவர் - பலர் பால். தெய்வம் - பண்புப் பெயர்.

அரசனைத் தேவன் என்றதும், அரசியைக் கோப்பெருந் தேவி என்றதும் முதன்மையும் மேன்மையும் பற்றியேயாகும். தெய்வம் என்னும் சொல் குறள் 43, 55, 672 ஆகிய மூவிடத் தும் மேன்மையே குறித்தல் காண்க.

புலவர்

புலவர் - புலம் என்பத னடியாகப் பிறந்த சொல். புலம் - புல அர் - புலவர். ஐம்புல நுகர்ச்சியுடையோர், மனம் போன படி நடப்பவர் (1072) என்னும் பொருளது. புலவு அர் - புலவர். புலவு - புலால். கேள்வி மூலம் புலவு உண்பவர் என்பதாம். வடபுலர், வடபுலவர் என்பன முதற்குறைந்து புலவர் என்றா யது எனினுமாம். தாமரைக்கண்ணான் - இந்திரன். ஆயிரங் கண்ணன் என்னும் அவன் பெயர் காண்க.

சீனர் முதலிய வெளிநாட்டினர் யாத்திரையாய் அன்று தமிழ் நாட்டிற்கு வந்துபோனது போலவே, அவ்வடபுலத் தாரும் அன்று இங்கு வரப்போக இருந்தனர். தமிழ்மக்கள் அவர்களை அன்புடன் வரவேற்றுப் போற்றி வந்தனர் (குறள் 13), தமிழ்மக்களும் அவ்வடபுலத்திற்குப் போகவர இருந்தி ருக்கின்றனர். பாண்டியன் ஒருவன் இந்திரன் அவைக்குப் போயிருப்பதாகக் கூறப்படுவதும், இந்திரன் அவனுக்குச் சிறந்த மாலையொன்றை யணிந்து பெருமைப் படுத்தினதாகக் கூறப்படுவதும்,[2] பாண்டிநாட்டையாண்டு வந்த மீனாட்சி என்னும் தமிழரசி, அவ் வடபுலத்திற்குப் படையெடுத்துச் சென்று, சோமசுந்தரன் என்னும் அவ்வட புலத் தரசனை வென்று பின் அவனையே மணஞ்செய்து கொண்டாள் என்பதும், இன்னோரன்ன செய்திகள் இதற்குச் சான்றாகும். மீனாட்சி - மீன் ஆட்சி - மீனக்கொடியுயர்த்திப் பாண்டி நாட்டை யாண்டவள்.

எனவே, வானோர், வானுலகம் தேவர், மேலுலகம் என்னும் இவ்வரலாற்றுண்மையே காலக்கடப்பால், தமிழ் மக்களின் கருத்தில்லாப் போக்கால், கற்பனை மயக்கால், உட்பகைப் பெருக்கால், சமயச் சார்பால், தன்னுணர் விழப்

பால், புராணப் புதுமையால் இன்றையத் தமிழ் மக்கள் எண்ணும் புதிய நிலையை அடைந்துவிட்டது. வானுலகம், மேலுலகம், புத்தேளுலகம் என்பவையும் இம் மண்ணுலகத்தில் உள்ளவையே. வானவர், புத்தேளிர், தேவர் என்பவரும் நம் போன்ற மக்களேயாவர் என்பதைச் சிறிதும் ஐயமின்றித் தெளிக.

## வள்ளுவர் நூல் செய்த முறை

வள்ளுவர் ஓர் அறிவு நூற் புலவர்; அரசியலறிஞர்; தமிழர் பண்பாட்டின் பெருமையை நன்குணர்ந்தவர்; தமிழினப் பற்றுடையவர்; தமிழர் வாழ்வின் தகுதிப்பாட்டை வரையறுத்துணர்ந்த மாபெருந்தகையர். ஆகையால், அவ்வடபுல மக்களின் பொய்க் கூற்றுக்களும், போலிக் கொள்கைகளும் தமிழ்மக்களிடைப் பரவி வருவதைத் தடுத்து விலக்கி, மேலும் பரவாமலிருக்க, தமிழ்மக்களின் பழக்கவழக்கங்களாகிய ஒழுக்க முறைகளை அகம்புறம் பாகுபாட்டைத் தழுவி, அறம் பொருளின்பம் என முப்பாலாக்கி ஒரு நூல் செய்து, தமிழர் பண்பாட்டை நிலைநிறுத்த எண்ணினார். எனவே, தமிழர் மரபுக் கொவ்வாத அயற் கொள்கைகளை மறுத்தும் அவற்றை நம்பி வாழும் பொதுமக்களுக்கு எளிதில் பொருள் விளங்குதற்பொருட்டுப் பொதுமக்களிடைப் பரவியிருந்த அவ்வயற் கொள்கைகளைக் கொண்டு கூறியும் தமிழ் மரபு சிறிதும் கெடாது, தமிழ் இலக்கிய மரபுக்கேற்றவாறு பொருள் விளங்குதற் பொருட்டு உலக வழக்கில் உள்ள சில வழக்காறுகளை நூல் மரபாகக் கொண்டும், செய்யுள் வழக்கில் சிறிதும் குறைவுபடாது, மிகச் சிறுபான்மையான மக்களிடை ஓரோருகால் நடந்து வந்த தீய ஒழுக்கங்களையும் மிகைபடக் கூறி விலக்கியும், தமிழர் ஒழுக்கச் சட்டநூலாகிய திருக்குறளைச் செய்து முடித்தார்.

## திருக்குறளின் பெருமை

திருக்குறள் ஒரு தனித்தமிழ் நூலாகும். திருக்குறள் அயற் கொள்கை எதிர்ப்பு நூலேயன்றி எந்த ஒரு அயற்கொள்கை

யினையும் உடன்பட்டுக் கூறும் நூலன்று. தமிழர் வாழ்வே திருக்குறள் திருக்குறளே தமிழர் வாழ்வு என்னும் அவ்வளவு இன்றியமையாச் சிறப்பினையுடைய நூல் திருக்குறள். திருக் குறள், உள்ளதை உள்ளபடியே உயரிய முறையில் எடுத் துரைக்கும் உண்மை நூல்! தமிழர் வாழ்வின் படப்பிடிப்பு! பழந்தமிழர் நாகரிக நல்வாழ்வை அப்படியே நமக்குக் காட் டும் களங்கமற்ற காலக் கண்ணாடி! தொன்மையும் எதிர்மை யும் ஒருங்கொப்பக் காட்டும் தொலைநோக்காடி! தமிழ் மக்களின் வாழ்க்கைச் சட்டம்! தமிழ் மக்களுக்கு வள்ளுவர் வகுத்தமைத்து வைத்த பாதுகாப்புப் படை! ஏன்? தமிழர்க்கு மட்டுமன்றி, குறள் உலகப் பொதுநூல்! மக்கட் பண்பாட்டுச் சரக்கறை! எக்காலத்துக்கும் உரிய நூல்! இறவா நூல்! காலங்கடந்த நூல்! கன்னித் தமிழ் நூல்! எனல் மிகையாகாது. தமிழ் மக்கள் செய்வன தவிர்வனவாகிய ஒழுக்க முறைகளை வகுத்துக் காட்டுவதால், திருக்குறள் ஓர் ஒப்புயர்வற்ற இலக்கி யமேயன்றி, இலக்கணநூலுமாகும். 'அகர முதல' எனத் தமிழ் மொழியின் முதலெழுத்தில் (அ) தொடங்கி, 'கூடி முயங்கப் பெறின்' என ஈற்றெழுத்தில் (ன்) முடிவதால், 'தமிழ்மொழியே திருக்குறள்' என்னும் குறிப்புப் பொருளும் கொள்க.

குடியியலில், குடிமக்கட்குரியனவாகக் கூறப்படும் நடுவு நிலைமை (951), ஒழுக்கமுடைமை (951), ஈகை, இன்சொல் (953), அன்புடைமை (992), ஒப்புரவறிதல் (983), பொறை யுடைமை (987), புறங்கூறாமை (984) முதலியன இல்லறவிய லிலும், வாய்மை (952), இன்னாசெய்யாமை (987) முதலியன துறவறவியலிலும், கண்ணோட்டம் (983), ஈகை (952), ஆள்வினை யுடைமை (1022), மடியின்மை (1028) முதலியன அரசியலிலும், வினைத்தூய்மை (954), வினைத்திட்பம் (1027) முதலியன அமைச்சியலிலும் கூறப்படுவதால், அறம் பொருள் என்னும் பொருள் பற்றி, அவை வெவ்வேறிடங்களில் கூறப் படினும், ஆள்வோர் ஆளப்படுவோர் என்னும் இருபாலாரும் இல்லறம் துறவறம் என்னும் இரண்டற்கும் உரியர் என்பதும், குடிமக்கள், அரசரும்அமைச்சரும் ஆதற்கு ரியர் என்பதும்,

அரசர் அமைச்சர் குடிமக்கள் யாவரும் பருவ முதிர்ந்தபின் துறந்து பொது நலஞ் செய்தற்குரியர் என்பதும் வள்ளுவர் காலத்தமிழ் மக்கள் வாழ்வியலென்பது அறிந்தின்புறற்பாலது.

அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் கூறப்படும் 108 அதிகாரங்களையும் செய்வன, தவிர்வன என இருவகை யாகப் பிரிக்கலாம். செய்வன - செய்யத் தக்கவை - கடைப் பிடித்து நடக்கத் தக்கவை. தவிர்வன - செய்யத்தகாதவை - கடைப்பிடித்து நடக்கத்தகாதவை - விலக்கத் தக்கவை. இவை விதிவிலக்கு எனப்படும். செய்யத் தக்கதைச் செய்தும், விலக் கத்தக்கதை விலக்கியும் வாழ்வதே மக்கட் பண்பும் பகுத்தறி வின் பயனுமாகும். மழையின் சிறப்பறிந்து அதைப் பயன் படுத்தி நல்வாழ்வு வாழ்தலும், நீத்தார் பெருமையறிந்து அதற் கேற்ப அவரிடம் நடந்துகொள்ளுதலும், ஊழின் இயல்பறிந்து அதற்கேற்ப நடந்துகொள்ளுதலும் அதாவது ஆகூழெனில் இன்புற்றுப் போகூழெனில் துன்புறாமையும், நாட்டை நன்னா டாக்கி நலமுடன் வாழ்தலும், உழவின் சிறப்பறிந்து அதைச் செய்து வாழ்தலும் செய்வனவேயாம். அவை வருமாறு:

செய்வன: அதிகாரம் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 13, 14, 16, 22, 23, 24, 25, 30, 34, 35, 37, 38, 39, 40, 42, 43, 45, 47, 48, 49, 50, 51, 53, 54, 55, 56, 59, 61, 62, 64, 65, 66, 68, 69, 70, 71, 72, 73, 74, 75, 76, 77, 78, 79, 80, 81, 96, 97, 98, 99, 100, 101, 103, 104 - 66.

தவிர்வன: அதிகாரம் - 15, 17, 18, 19, 20, 21, 26, 27, 28, 29, 30, 31, 32, 33, 36, 41, 44, 46, 52, 57, 58, 60, 63, 67, 82, 83, 84, 85, 86, 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 102, 105, 106, 107, 108 - 42. (66 + 42 = 108).

இந்நூற்றெட்டே யன்றி, அஞ்சாமை (382), துணி வுடைமை (383), காட்சிக்கெளிமை (386), குடியோம்பல்(390), செருக்கின்மை (431), வியவாமை (439), தெளிவுடைமை (533), தாழ்த்தாமை (595), நகை - முகமலர்ச்சி, இகழாமை (953), குன்றுவ செய்யாமை (654), பணிவுடைமை (960), பழிப்பன செய்யாமை (970), குற்றங்கூறாமை (980), இனியவே செய்தல்

(987) முதலிய செய்வன தவிர்வனவுங் கூறுதலான், கூறியன கொண்டு மக்கள் நல்வாழ்வுக்கு வேண்டிய எல்லா விதிவிலக்கு களையும் உய்த்துணர்ந்து கொள்ள வேண்டுமென்பது வள்ளுவர் கருத்தாகுமென்க.

இன்பத்துப்பால் 25 அதிகாரங்களிலும் கூறப்படுவன, ஆண் பெண் இருபாலரும் கூடிவாழும் வாழ்க்கை முறையாத லின், ஒவ்வோர் ஆண்மகனும் பெண்மகளும் அவற்றைக் கட்டாயம் கற்றுணர்ந்து கடைப்பிடித்து நடக்க வேண்டிய வையாகும். அவற்றில் கூறுகிறபடி ஆண் பெண் இருபாலரும் - வாழ்க்கைத் துணைவர்கள் ஒவ்வொருவரும் - நடக்கத் தலைப்பட்டால் பெண்ணினத்தை இழிவாக எண்ணுதல், பெண்ணை வெறுத்தல், பெண்ணுரிமைத் தடை, பெண்ண டிமை, ஏறுமாறான வாழ்க்கை, மகளிர் இன்பத்தை விற்றுப் பிழைத்தல், ஆடவரின் ஒழுக்கமின்மை முதலிய தீமைகள் ஒழிந்து, நாட்டில் நற்குடும்ப வாழ்க்கை நிலைபெறும். பெண் ணுலகம் தன்னுரிமையுடன் வாழும். ஆண்களின் பரத்தை தன்மை யுணர்ச்சியகலும். நன்மக்கட்பேறு வாய்க்கும். தமிழினம் தனிச் சிறப்புறும். பழந்தமிழ்ப் பண்பாடு புத்துயிர் பெறும்.

இனி, 26, 27, 30, 33, 34, 55, 56, 57, 72, 75, 77, 78, 87, 88 அதிகாரங்கள் நீங்கலாக மற்றவையெல்லாம் பொது. இவ் வதிகாரங்களிலும் பொதுப்பொருள் உள்ள குறட்பாக்கள் சில உண்டு. இன்று மக்களாட்சி நடப்பதால், அரசர், அமைச்சர், ஒற்றர், தூதர், மறவர் ஆகியோர் இயல்பு, தகுதி, திறமை, கடமை முதலியவற்றையும் பொதுமக்கள் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். அரசியல் தலைவர்களும் அதிகாரி களும் அரசர் நிலையிற்படுவர்.

உலகியல்பை யறிந்து இன்பவாழ்வு வாழ்வதற்காக இல் வாழ்வாரும் துறவற அறிவைப் பெறுதல் வேண்டும். இல்லறத் திலிருந்தே பயிலும் துறவற இயல்புகளும் சில உண்டு. மக்களைத் 'தமர் பிறர்' என வேறுபடக் கொள்வது இல்லறம். 'தமர் பிறர்' என வேறுபடுத்தாது எல்லோரையும் ஒப்பக் கொள்வது துறவறம் என்பதை உணரவேண்டும். இறைநலம்

முதலிய நான்கதிகாரங்களும் உலகியற்கு அடிப்படையான வையாதலால் நூலுக்கு முதலுறுப்பாகும். ஊழ் முப்பாலுக்கும் பொது. பொருட்பாலில் கூறும் அரசியல் முறை பொதுப் படையாகவே உள்ளதால், எந்த ஓர் அரசியல் முறையை விரும்புவோர்க்கும் ஒப்பவுரியதேயாகும். இன்பத்துப்பால் ஆண் பெண் இருபாலாரின் பொதுவுடைமை. எனவே, திருக்குறட்கு வேண்டுவார் வேண்டாதாரின்றி எல்லா மக்க ளுக்கும் உரியராவர். வள்ளுவர் காலத் தமிழர் வாழ்வை நினைவு கூர்ந்தே குறளின் பொருட்பயன் கொள்ளுதல் வேண்டும்.

## பொருள் கொள்ளு முறை

திருக்குறள் இவ்வாறு எல்லோர்க்கும் ஒத்த உடைமை யாக உடைய பெருமையுடையதேனும், அதன்பால் இயல் களுக்கேற்றவாறு அதிகாரப் பொருளைக் கொண்டு பொருள் கொள்ளுதல் கூடாது. துறவறத்திற்குரிய 'புலால் மறுத்தல், தவம், நிலையாமை' முதலியன அப்படியே இல்லறத்திற்கும், 'அருளுடைமை, கொல்லாமை, வெகுளாமை முதலியன அப்படியே அரசியற்கும், இன்பத்துப்பால் துறவறத்திற்கும் பொருந்தா. 'படைச்செருக்கு', 'பகைமாட்சி' இவற் றின் முன் அருள் நில்லாது. 'பொருள் செயல்வகை' நிலையாமைக்கு முரண். "குடிசெய்வார்க்கில்லை பருவம் மடி செய்து மானங் கருதக் கெடும்" (1028) என்பது, 'காலமறிதல், மானம்' என்னும் அதிகாரங்கட் கொவ்வாமை அறிக. எலி, கொசுக்களைக் கொன்று ஊர்நலம் பேணும் ஊராட்சி மன்றத்தார்க்கும், பயிர்நோய்ப் பூச்சிகளைக் கொன்று பயிர் வளர்த்துல கூட்டும் உழவர்க்கும் 'கொல்லாமை' என்பது எங்ஙனம் பொருந்தும்!

வள்ளுவர் ஒற்றனைப் பற்றிக் கூறும்போது அது ஏனைய எல்லாவற்றினும் சிறந்தது என்பர். அதனால், மற்றவை சிறப் புடையவையல்ல வென்பது பொருளன்று. ஒவ்வொன்றையும் அவ்வாறு சிறப்புடையதெனக் கூறுதல் ஒவ்வாக்கூற்றெனில், அற்றன்று. ஒன்றனைக் கற்போர் அதில் கருத்தைச் செலுத்தி

ஆர்வத்தோடும் அக்கறையோடும் ஊன்றிக்கற்கும் பொருட்டும், அதனை மனத்தில் நன்கு பதித்துக் கொண்டு அதன்படி நடக்கும் பொருட்டுமேயாம். திருக்குறளில் கூறப்படும் ஒவ்வொரு பொருளும் இன்றியமையாச் சிறப்புடையனவே யாகும். எனவே, செய்வனவாகக்கூறப்படும் ஒவ்வொன்றையும் கட்டாயம் கடைப்பிடித்து நடத்தலும், தவிர்வனவாகக் கூறப்படும் ஒவ்வொன்றையும் கட்டாயம் விலக்கி நடத்தலும் தமிழ் மக்களின் இன்றியமையாக் கடப்பாடாகும். வள்ளுவர் கட்டளையைமீறி நடத்தல் தமிழ் மக்களுக்கு மரபுடைத்தன்று.

நூன்மரபு

பொருள் குணங்களை ஆண்பாலாகவும், பெண்பாலாகவும் கூறுதல் நூல் மரபாகும். 'நிலமென்னும் நல்லாள்' (1040), 'அழுக்கா றெனவொரு பாவி' (163) என நிலம் என்னும் பொருளைப் பெண்பாலாகவும் அழுக்காறு என்னும் குணத்தை ஆண்பாலாகவும் கூறுதல் காண்க. பாவி - தீயோன்.

செய்யாள் (94), செய்யவள் (167), தாமரையினாள் (617) எனச் செல்வத்தையும், தவ்வை (167), முகடி (167, 936) என வறுமையையும் பெண்பாலாகக் கூறியவாறு. செய்யவள் - இளையவள், தவ்வை - மூத்தவள், முகடி - மூதேவி - மூத்தவள், செல்வந் தீர்வதே வறுமையாதலால், செல்வத்தை இளையாள் எனவும், வறுமையை மூத்தாள் எனவும் கூறினார். மேலும் செல்வம் விரும்பப்படுதல் பற்றிச் செய்யாள் எனவும், வறுமை வெறுக்கப்படுதல் பற்றிக் கரியாள் (617) எனவும் கூறினார். தாமரையினாள் - திருமகள். திரு - செல்வம். கல்வியும் செல்வமும் மனத்தை விட்டகலா மாண்பொருள்களாதலால் அவற்றைப் பெண்களாக்கி, மனத்தைத் தாமரையாக்கி அதன் மேல் உள்ளனர் என்பது மரபு. பயன் கருதி நிலம் ஆறு முதலியவற்றைப் பெண்ணாகக் கூறுவதும் நூன் மரபேயாகும்.

கூற்று

உடலும் உயிரும் கூறுபடும் சாவினைக் கூற்று (256, 765, 1083) என உயிருடையதாகக் கூறியவாறு. கூற்று - உடலும்

உயிரும் கூறுபடும் நேரம். கூறுபடுதல் - வேறாதல் - பிரிதல். கூறுஉ - கூற்று. தொழிற் பெயர். கூற்றுஅம் - கூற்றம் (299, 894, 1085) என்பதுமது. உடலும் உயிரும் கூறுபடும் காலத்தையும் தொழிலையும் உயிருடையதாகக் கூறியது. கூற்றுவன் என ஆண்பாலாகக் கூறுதலுமொன்று.

### அணங்கு, காமன்

ஆண்களை வருத்தும் பெண்பாற் காமத்தை அணங்கு (918, 1081, 1082) எனப் பெண்பாலாகவும், பெண்களை வருத்தும் ஆண்பாற் காமத்தைக் காமன் (1197) என ஆண்பாலாகவும் கூறுதல் நூன்மரபு. அணங்கு - வருத்தம். 'தகையணங் குறுத்தல்' என்னும் 103ஆம் அதிகாரத்தைக் காண்க.

### எழுமை

'நாலைந்தெடு, ஏழெட்டுப்பேர்' என்னும் வழக்குப் போல, எழுமை என்னும் எண்ணுப் பெயரைப் பல என்னும் பொருளிலேயே ஆளுகின்றார் வள்ளுவர் (62, 107, 126, 398, 518, 835). 'எழுபது கோடி' (639) என்பதும் பலகோடி - மிகப் பல என்னும் பொருளதே.

### பிறப்பு

பிறப்பு என்னும் சொல் இருவினைக் கீடாக உயிர் எடுக்கும் பல பிறப்புகளைக் குறிப்பதன்று. மறுபிறப்பு என்பது சமயக் கொள்கை. 10, 347, 972 குறளில் வாழ்க்கை எனவும், 1315 குறளில் இப்பிறப்பில் எனவும், 62, 107 குறளில் தலைமுறை எனவும், 113இல் குடி எனவும், 114இல் மக்கட் பிறப்பு எனவும், 335, 339இல் தோற்றம் எனவும், 351இல் துன்பம் எனவும் பொருள்படும்.

### இம்மை, மறுமை (88)

நாம் உயிரோடிருக்கும் நிலை இம்மை எனப்படும். நாம் வாழ்வது இம்மை. நாம் இறந்த பிறகு நம்மைப்பற்றி இங்கு

*பேசப்படுவது மறுமை எனப்படும். ஒருவன் இறந்த பின்னர் தன்பெயர் இவ்வுலகில் பேசப்படும்படி செய்வதே மறுமைப் பயனாகும். வள்ளுவர் மறுமையில் உள்ளார். அதாவது மறுமைவாழ்வு வாழ்கின்றார்.*

*பிற்காலப் புராண சமயப் புலவர்கள் செய்யவள், தவ்வை, கூற்று, அணங்கு, காமன் என்பவற்றைக் கடவுட் சாதியினர் எனவும், எழுமை என்பதை எழுவகைப் பிறப்பு, எனவும், பிறப்பு, மறுமை என்பவற்றை மறுபிறப்பு எனவும் கற்பித்து விட்டனர்.*

## குறிப்புகள்

1. தேய் உ - தேய்வு - தேவு. தேவு அன் - தேவன். தேவு இ - தேவி. தேவு அர் - தேவர். தேய்வு - தெய்வு. தெய்வுஅம் - தெய்வம். (ஒப்பியல் மொழிநூல் - பக்கம் 237. தேவ நேயப் பாவணர்.)
2. தேவர்கோன் பூணாரம் 'தென்னர்கோன் மார்பினவே' (சிலப் 17). 'தேவராரர மார்பன் வாழ்க' (சிலப்: 29).

18

# வள்ளுவர் கொள்கையும் வடவர் கொள்கையும்

*1949*

**இறையனார்**

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி.

*இது ஒரு பொன்னுரை : பொருள் நிறைந்த பொன்னுரை. பொது அறிவும், பகுத்தறிவும், ஆராய்ச்சியறிவும் அனைத்தும் ஒருங்கே அமைந்து மின்னும் பொன்னுரை; புலவர்கள் பொன்னினும் மேன்மையுடையதெனப் போற்றிப் புகழும் பொன்னுரை; பொதுமக்கள் உள்ளத்தில் புத்துணர்வைப் புகுத்தும் பொன்னுரை; உண்மை உணரவேண்டு மென்ற உணர்ச்சியையும், உள்ள எழுச்சியையும் ஊட்டும் பொன்னுரை; உண்மை இன்னதெனக் காட்டும் பொன்னுரை.*

*இப்பொன்னுரையைத், தமிழ் மக்கள் உள்ளத்தில் பதியும் முறையில் உரைத்த பெரியார் யார்? திருவாளர்*

பி. சுந்தரம்பிள்ளை அவர்கள் (M.A; F.M.U., F.R.H.S., M.R.A.S.) இவர், அறிவு நூற் புலவர்; கலைப் பேரறிஞர்; மனோன் மணீயம் என்னும் நாடக நூலின் ஆசிரியர்; இவருடைய அறிவு நூற் புலமையும், கலைநூற் புலமையும், இவர் இயற்றிய நூற்றொகை விளக்கம் என்னும் நூலைப் பன்முறைப் படித் துணர்ந்தவர்கள் நன்குணர்வார்கள். பழமையைப் பாராட்டு வதிலும் புதுமையைப் போற்றுவதிலும் பொது அறிவையும் புது உணர்வையும் பயன்படுத்துபவர்; ஆராய்ச்சித் திறமை அமைந்தவர்.

இப்பொன்னுரையின் பொருள் என்ன? வள்ளுவர் செய் - திருவள்ளுவர் தம் மரபிற்குரிய அறிவின் திறத்தால் தாமே செய்தருளிய, திருக்குறளை - தனித் தமிழ் நூலாகிய திருக்குறளை, மறுவற - குற்றமற (மாசு அற), நன்கு உணர்ந்தோர்கள் - நன்றாய் உண்ர்ந்து அறிவுபெற்ற அறிஞர்கள், ஒருகுலத்துக்கு ஒருநீதி மனித இனத்தைப் பல குலமாகப் பிரித்து வைத்து, ஒவ்வொரு குலத்துக்கும் ஒவ்வொரு வகையான நீதியை ஓதும், மனு ஆதி (நூல்களை) - மனு நூல் அதற்கு முதல் நூலாகிய வேதங்கள் - அதை முதலாகக் கொண்டு பிறந்த புராணங்கள் ஆகிய ஆரிய நூல்களை, உள்ளுவரோ - ஒரு பொருளாகக் கருதி மதிப்பார்களோ - உள்ளத்தில் அவைகளை நூல்களெனவும் கொள்ளுவார்களோ (கொள்ளமாட்டார்கள்) என்பது இதன் பொருளாம். திருக்குறளைக் குற்றமற நன்குணர்ந்தவர்கள் குலத்துக்கொரு நீதி கூறக்கூடிய வட நூல்களை மதிக்கமாட்டார்கள் என்பது இதன் கருத்தாகும்.

இதில் 'மறுவற' என்றது ஏன்? இதற்குப் பொருள் என்ன? 'குற்றம் அற - மாசு அற' என்று தானே பொருள் கொள்ள வேண்டும்? கொண்டால், குற்றம் எது? குறளில் அமைந்துள்ளதா? ஆம் என்றால்! மாசு அமைய வள்ளுவர் நூலையியற்றியுள்ளார் என்றுதானே கொள்ளவேண்டும்? இங்ஙனம் கொள்ள வியலுமா? இடமுண்டா?

திருவள்ளுவர் தம் நூலில் மக்கள் குற்றம் நீக்கி வாழ வேண்டுமென்பதற்காகவே குற்றம் கடிதல் என்ற தனி அதிகாரம் ஒன்றை அமைத்துள்ளார். அதில் ஒவ்வொருவரும் எவ்வகையிலும் தம்மிடம் குற்றம் சேராமல் நீக்கி, குற்றமற்ற நல்வாழ்க்கை நடத்தி நலமடைய வேண்டுமென வலியுறுத்தி யுரைக்கின்றார். இங்ஙனம் மற்றவர்களுக்குக் கூறும் ஆசிரியர் தம் குறளிலேயே குற்றம் அமையக் கூறுவாரா? 'மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்தும் அறன்', 'மனத்தது மாசு ஆக மாண்டார் நீராடி', 'மாசூர மாய்ந்து விடும்' என்பவைகளால் 'மாசு', கூடாதென்றும் கூறுகின்றார். 'மாசறு காட்சியவர்' 'மாசற்ற குலம்', 'மாசற்றார் கோள்', 'மறவற்க மாசற்றார் கேண்மை' 'மருவுக மாசற்றார் கேண்மை' என்பவைகளால் மாசற்ற தன்மை மலரவேண்டு மென்றும், மாசற்றவர்களைச் சார்ந்திருக்க வேண்டுமென்றும் கூறுகின்றார். இங்ஙனம் உரைப்பவர் தம் குறளில் மாசு படிந்திருக்கும் வண்ணம் உரைப்பாரா? எனவே, திருக்குறளில் குற்றமோ - மாசோ இருக்க எவ்வகையிலும் இடமில்லை. இருப்பதாக ஆராய்ச்சி யுடன் எடுத்துக் காட்டவும் திருக்குறள் இடம் தராது. பின் மறு எங்கேயுள்ளது? எந்த மறுஅற நன்கு உணரவேண்டு மென்கிறார்? அதை நாம் முதலில் உணரவேண்டும்.

'கற்க கசடற' என்றபடி கற்பவர் தம்மிடமுள்ள ஐயம், திரிபு, அறியாமை ஆகிய கசடு (குற்றங்கள்) அறநீங்க எனவும் கொள்ளலாமன்றோ? ஒருவாறு கொள்ளலாம். ஏன்? ஒரு நூலில் உள்ள ஒரு சொல்லுக்கு அல்லது சொற்றொடர்க்குப் பொருள் இதுவோ எதுவோ என்ற ஐயமும், உள்ள பொருள் ஒன்றாயிருக்க மற்றொன்றாகக் கொள்ளும் திரிபுணர்வும், உண்மை இன்னதென்றே ஒன்றும் விளங்காத அறியாமையும். ஆகிய இம்மூன்றும் நீங்கினால்தான் உண்மைப்பொருளை உள்ளவாறு உணரவியலும். இக்கசடு நீங்காமல் திருக்குறளைக் கற்றவர்கள், பரிமேலழகர் உரையைப் படித்து, பொருந்தும்

பொருந்தாதென உணராது அப்படியே பாடம் செய்தவர்கள், உண்மையுணரும் திறனற்றவர்களாய்த் திருக்குறளைப் பற்றி உண்மைக்கு மாறாகவும் கூறியுள்ளார்கள். அங்ஙனம் கூறியுள்ளதையும் அதை யாம் எடுத்துக்காட்டி மறுத்துள்ளதையும் திருக்குறள் ஆராய்ச்சி என்னும் நூலில் காண்க.

ஐயம், திரிபு, அறியாமை அற உணரவேண்டுமென்பது ஒருவாறு பொருந்துமாயினும், மேற்கண்ட பொன்மொழியில் மறுவற என்பதில் உள்ள மறு என்பது எது? அவர் உள்ளக் கருத்துக்குப் பொருத்தமான பொருள் என்ன என்பதையும் சிறிது சிந்திக்க வேண்டும். இப்பாடலில் இரண்டாம் அடியின் பொருளைக் கருதிப் பார்க்குமிடத்து, முதலடியில் அமைந்த 'மறு' என்ற சொல்லுக்குப் பிறிதொரு பொருள் கொள்வதே பெரிதும் பொருத்தமுடையதாக விளங்குகிறது. அஃதாவது:- 'தமிழ் மரபிற்குரிய தனிப் பேரறிவுடன் வள்ளுவர் செய்த திருக்குறளில், உரை எழுதிய பரிமேலழகர் ஆரியக் கருத்துக்களையும் கொள்கைகளையும் இடையிடையே நுழைத்து இருக்கிறார். தம் கொள்கைகளுக்கேற்ப வேண்டிய இடங்களில் மூலபாடத்தையும் திருத்தி அமைத்திருக்கிறார். அவையே திருக்குறளுக்கு மறுவாக இருக்கின்றன. அந்த மறுவையறிந்து, அற (நீக்கி) நன்கு உணர்ந்தவர்கள் தான் குறளின் உண்மையுணர்ந்தவர்கள் ஆவார்கள் என்று பொருள்தரு முறையில் அமைத்துள்ளார்.

இங்ஙனம் இடையில் பரிமேலழகரால் நுழைக்கப்பட்ட இழுக்குகளை ஒழித்து உணர்ந்தால்தான் குறளின் உண்மைக் கருத்தை உணரவியலும்; இங்ஙனம் உணர்ந்தவர்கள்தான் மனு முதலிய நூல்களை மதிக்காத - நூலாக நினைக்காத அறிவு உரத்தைப் பெறுவார்கள் என்பதே அப்பெரியார் கருத்தாகும். இவ்வாறன்றிப் பரிமேலழகர் உரைப்படியே அவர் திருத்திய பாடப்படியே படித்து உணர்கின்றவர்கள் மனு நூலைக்கொண்டே திருக்குறள் செய்யப்பட்டதென

முற்றும் நம்புவார்கள். ஆதலால், அவர்கள் மனு முதலிய நூல்களை மதிக்காமலும் நினைக்காமலும் இருப்பது எங்ஙனம்? இது, 'உள்ளுவரோ' என்ற சொல்லின் பொருளுக்கு முரணாகவன்றோ முடியும்! ஆதலால், பரிமேலழகர் சொருகிய ஆரியக் கொள்கைகளையே மறு என்று இப்பெரியார் கூறுகின்றார்.

## வள்ளுவர் யார்?

திருவள்ளுவர் யார்? தமிழ் நாட்டில், தமிழ் இனத்தில், தமிழ் மரபில், தமிழ்க் குடியில் பிறந்தவர்; தமிழ்ச் சூழலில் தமிழ்ப் பண்புகளுடன் வளர்ந்தவர்; தமிழ் மரபிற்குரிய நூல்கள் பலவும் பயின்றவர்; தமிழ்ப் பண்பாட்டறிவுடன் வையத்தில் வாழவேண்டிய முறைப்படி வாழ்ந்தவர்; வழிவழி நூல் வாயிலாக வளர்ந்த நூல் அறிவாலும், வாழ்வில் விளைந்த அனுபவ அறிவாலும், ஒவ்வொன்றிலும் நுழைந்து நுணுகி ஆய்ந்த நுண்ணுணர்வாலும், சிந்தனையிலிறங்கி அகன்று விரிந்து உயர்ந்து தெளிந்த ஒண்மையாலும் (விளக்க அறிவாலும்) தலைசிறந்து விளங்கியவர். பொதுவாகக் கூறுமிடத்துத் தமிழ்நாடு தந்த தனிப் பேரறிஞரே திருவள்ளுவர்.

## தமிழ்நாடு தந்த நன்கொடை

திருவள்ளுவரைத் தமிழ்நாடு தந்த நன்கொடை என்றே சொல்லவேண்டும். தமிழ்நாடு திருவள்ளுவரை யார்க்குத் தந்தது, தமிழ் நாட்டிற்கு மட்டுமா? தமிழ் மக்களுக்கு மட்டுமா? அன்று! அன்று!! அன்று!!! உலகினுக்கே ஈந்தது; உலகில் உள்ள அனைவர்க்குமே அளித்தது. என்னை தமிழ் நாட்டின் தன்மை! வண்மை!! ஒண்மை!!! என்னே தமிழ் மரபின் அறிவுடைமை! திறனுடைமை!! ஆண்மையுடைமை!!! 'வள்ளுவரைத் தமிழ்நாடு உலகினுக்கே உதவியதென்பதை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? தமிழ்நாட்டில்தானே தோன்றினார், தமிழ்நாட்டில் தானே வாழ்ந்தார்' என்று வாதம் புரியவரு

வாரும் உளராயின் அவர்களை இங்ஙனம் ஓதிய ஒரு புலவரிடம் போய் மோதிக்கொள்ளுங்கள் என வழிகாட்டி அவரிடம் செல்ல வழிகூட்டி அனுப்பிடவேண்டியதுதான். "வள்ளுவன் தன்னைஉலகினுக்கே தந்து" என்று பாடியவர் பாரதியார் தான். எந்தப் பாரதியார்? தேசியகவி என்று செப்பப்படும் சுப்பிரமணிய பாரதியார்தான்.

திருவள்ளுவர் தமிழ் நாட்டில்தான் பிறந்தார்; வாழ்ந்தார்; அவர் உடலும் தமிழ் நாட்டில்தான் உலவியிருக்கும். ஆனால், அவர் உணர்வு, அவர் அறிவு உலக முழுதும் பரவி உலவுகிறது. எப்படி? குறளென்னும் பெருநூல் வழியே சென்று உலவுகிறது. உலகில் உள்ள அறிவுடைப் பெருமக்கள் அனைவரும் அதைப் படித்து உணர்ந்து அறிந்து அதன் பெருமையைப் போற்றிப் புகழ்கின்றார்கள். அதைக்கொண்டு பயன் பெறுகின்றார்கள். இத்தகைய திருக்குறளை உலகுக்குதவிய ஒருவரை - திருவள் ளுவரைத் தமிழ் நாடு உலகினுக்கே தந்தது என்று உரைப்பது முற்றும் பொருந்தும் உண்மையேயாகும்.

## தமிழ்நாடு பெற்ற பெரும்புகழ்

தமிழ்நாடு திருவள்ளுவரைப் பெற்றதால், உலகினுக்கே அவரை அளித்ததால் பெற்ற பயன் யாது? என வினவலாம். 'அறிவறிந்த மக்களைப் பெறுவதினும் பெறற்கரிய பேறு வேறில்லை.ஆதலால் உலகம் போற்றும் ஒப்புயர்வற்ற பேரறி ஞரைப் பெற்றதைவிடவும், இத்தகைய அறிஞரைக் குறுகிய நோக்குடன் தனக்கு மட்டும் பயன்படும் வண்ணம் வைத்துக் கொள்ளாமல் பெருகிய நோக்குடன் உலகினுக்கே பயன் படும் வண்ணம் உதவியதை விடவும் பெறவேண்டிய பயன் வேறு யாது உளது?

தம்மக்களைச் சான்றோர் என ஆன்றோர்கள் சொல்லக் கேட்ட ஈன்றோர், பெற்றகாலத்து அடைந்த உவகையினை விடப் பேருவகை அடைவார்கள். ஆதலால், திருவள்ளுவர்

அறிவிற்சிறந்த சான்றோர் என அவனியில் உள்ள அறிஞர்கள் அனைவரும் புகழ்வதைக் கேட்ட தமிழ்நாடு பெருமகிழ்வடைகின்றது. இதைவிட, பெறும்பயன் வேறு யாது உளது?

மக்களின் அறிவு ஆற்றல் நற்செயல்களைக் கண்ட அறிஞர்கள், இம்மக்களின் பெற்றோர்கள் இவர்களைப் பெற என்ன தவம் இயற்றினார்களோ என்று சொல்லும் வண்ணம் மக்கள் விளங்கவேண்டும் என்பதற்கிணங்க, திருவள்ளுவரது அறிவுத் திறமையையும் அறத்தின் முறைமையையும் ஒழுக்க உயர்வையும் பண்பாட்டுணர்வையும் அறிந்துணர்ந்த உலக அறிஞர்கள், இத்தகைய பேரறிஞரைப் பெற்ற ஒரு நாடு அறிவு அறம் ஒழுக்கம் பண்பாடு இவைகளில் எவ்வளவு உயர்ந்த நாடாக இருக்கவேண்டும்! அம்மரபு எவ்வளவு உயர்ந்த அறிவொழுக்கப் பண்பாடுகளமைந்த பெருமரபாக இருக்க வேண்டும் என வியந்து மகிழ்ந்து விரும்பிப் புகழ்ந்து பாராட்டுகின்றார்கள். இத்தகைய பெரும் புகழையும் பெரும் பாராட்டுதலையும் அறிஞர்களால் பெறுவதைவிட அடைய வேண்டிய பெரும் பயன் வேறுண்டோ? இதனால்தான்,

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ்கொண்ட தமிழ்நாடு

என்றார்.

'திருக்குறளுக்குரிய பெருமையைக் கொண்டு நாட்டிற்கும் மொழிக்கும் இனத்திற்கும் பெருமை தேட நினைப்பது அடாததாகும்' எனவும் சிலர் கூறுவர். ஒரு குடியிற் பிறந்த அறிஞனுடைய நற்செயலால் அக்குடிக்கே பெருமையுண்டாம் என்பதை எவர்தாம் மறுப்பவர். அதுபோல ஒரு நாட்டிற்கு ஒரு மொழிக்குரிய ஒரு நல்லறிஞரின் திறமையால் அந்நாட்டிற்கும் மொழிக்கும் பெருமையில்லையென்பது பேதமையேயாகும். திருவள்ளுவரைக் கொண்டு அவர் பிறந்த நாட்டிற்கும் மரபிற்கும் அவர் பழகிய மொழிக்கும் பெருமை அளித்த அறிஞர்களும் உள்ளனர் என்பதையும் உணர

வேண்டும்.

'திருவள்ளுவர் எடுத்தோதும் நீதிகள் நல்லொழுக்கமே விளைநிலமாய் அமையக்கூடிய பண்பு வாய்ந்த ஒரு நாட்டிலன்றி விளையா. இத்தகைய பெரியாரையும் ஒப்பரிய நூலையும் பயந்த ஒருநாடு இகழ்ந்தொதுக்கத்தக்க இழி தன்மை வாய்ந்த ஒரு நாடாக இருத்தல் முடியாது' - டாக்டர் J. லாசரஸ். இந்த அறிஞர் திருவள்ளுவரை ஈன்ற தமிழ் நாட்டிற்கு அளிக்கும் பெருமையை அறியவும்.

"திராவிடர்களின் (தமிழ்ப் பெருமக்களின்) மனப்போக்கு (பண்பு) உயர் ஒழுக்கத்தையே நாடி நின்றது என்பது திருக்குறளால் தெற்றென விளங்கும்" - அறிஞர் சார்லஸ் E. கவர். இந்த அறிஞர் திருவள்ளுவர் பிறந்த மரபிற்குக் கொடுக்கும் பெருமையை உணர்வாளர் கூர்ந்து உணரவும்.

"குறளாசிரியர் செய்யுள் நடையில் செந்தமிழில் கூறியுள்ளதற்குச் சமமாக உள்ள மற்றொரு நூலை மக்களாகப் பிறந்தோர் பேசும் வேறு எம்மொழியினும் காணமுடியாது" - அறிஞர் ரெவரெண்டு பர்சிவல்.

"திருக்குறளை யொத்த அரிய பெரிய நீதிநூல் வேறெந்த தேசத்திலும் வேறெந்த மொழியிலும் தோன்றியதில்லை என்பது உண்மையேயாம்" - அறிஞர் அல்ஹாஜ் பா. தாவுத்ஷா சாகிப், B.A.

இவ்வறிஞர்கள் திருக்குறள் தோன்றிய மொழியைப் பற்றி மொழியும் பெருமையை அறியவும் இவற்றால் திருவள்ளுவரைப் பெற்ற தமிழ்நாடும் தமிழ் மரபும் தமிழ் மொழியும் பெரும்புகழும் பெருஞ்சிறப்பும் அடைவதற்குரியவை என அறியவேண்டும்.

## நிலமும் விதையும் விளைவும்

நிலமும் விதையும் நலமுடனமைந்து, நீர்வள முதலியனவும் நிறைந்திருந்தாலன்றி பயிர் முதலியன முளைத்து வளர்ந்து

நற்பயன் தருமென எவரும் உரைக்கமாட்டார்கள். பயிர், செடி, கொடி, மரம் முதலானவை முளைத்து, கிளைத்து, வளர்ந்து, விளைந்து நற்பயன் தரவேண்டுமானால் அவற்றின் விதையும், விதையைப் பதிவிக்கும் நிலமும், நீர் முதலான வளமும் நலமுடன் அமையவேண்டும். இவற்றில் ஏதேனும் ஒன்றன் நலம் குறைவுறுமானால் அதற்கேற்பப் பலனும் குறைவுடையதாகவே இருக்கும்.

நல்லவிதையை வளம் அமையாக் களர்நிலத்திற் பதித் தால், முளை வெளிப்படா முன்னரே அழுகி அழியினும் அழி யும்; அழியாது முளை வெளிப்படுமாயினும் வளர்ந்து பெருக வகையில்லாமல் கருகிக் குறைந்து கரையினும் கரையும். நல்ல நிலத்தில் முதிரா விதையை, புழு முதலியவற்றால் பழுதான சொத்தை வித்தைப் பதித்தால், முளைத்து வளர்ந்தாலும் நிறைந்த பயனைத் தரும் நிலையினையடையாமல் குருடும் முருடும் வறடுமாகிப் பயன்படாதொழியும் நிலமும் விதை யும் நலமுடையதாயினும் நீர்வளம், எருவளம், ஒளி காற்று வெப்பம் முதலான இயற்கை வளம் இவைகள் அமையப்பெறா விடத்து முழு வளர்ச்சியடைந்து முழுப்பயனையும் அளிக்காது.

அறிவுப் பயிர்களாக விளங்கும் அறிஞர்கள் தோன்றி வளர்ந்து அறிவாகிய பயனை அளிப்பதற்குரிய நாடு, அறிவி னால் பண்பட்ட ஆண்மக்களும் பெண்மக்களும் நிறைந் துள்ள நாடாகவும், நன்மனம் நற்குணம் நல்லொழுக்கச் சூழ்நிலைகளில் அமைந்துள்ள நாடாகவும் இருக்கவேண்டும். இங்ஙனம் எல்லாம் அமையாத இடத்தில், மரபில், சூழலில் தோன்றியவர்கள் எல்லாம் அமைந்தவராயிருத்தல் இயலாது என்பதையும் அறியவேண்டும்.

தமிழ்நாடு உலகில் ஒரு சிறு நாடு; இந்தியாவின் கடை கோடியில் அடியில் இருக்கும் சிறு நாடு; இது இத்தகைய உயர்வினைப் பெறுவதற்குரியதுதானா? திருவள்ளுவர் தென்

னாட்டிற் பிறந்ததாலும், அவர் பேரறிஞராகத் திகழ்ந்த தாலும், திருக்குறளென்னும் பெருநூலினைச் செய்ததாலும் அந்நாடு உயர்வுக்கும் பெருமைக்கும் உரியதாகுமா? அந் நாட்டு மக்கள் உயர்வுக்கும் பெருமைக்கும் உரியவர்களா வார்களா? என்ற வினாக்களெழுவதும் இயல்பே. தமிழ் நாடு உலகில் ஒரு சிறு நாடாக இருந்தாலும், இந்தியாவின் தென் கோடியில் அடியில் இருந்தாலும் உலகில் முதன்மையாக உயர்ந்த பெருநாடாகவும் இந்தியாவின் உயர்ந்த முடியா கவும் விளங்கியது. விளங்கும் தகுதி வாய்ந்தது. இதன் தன் மையை ஈண்டுச் சிறிது ஆராய்வோம்.

## தமிழ்நாடு - தென்னாடு

அறிஞர்கள் தமிழ் நாட்டைப் பண்டைக்கால முதற் கொண்டே தென் கண்டம், தென்னாடு, தெற்கு (தெக்கு) தெக்கணம், தென்புலம், திராவிடம், திராவிட கண்டம் என்ற பல பெயர்களில் குறிப்பிட்டு வந்துள்ளார்கள். வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட கால ஆராய்ச்சியாளர் இலெமூரியா என்ற பெயரில் குறிப்பிட்டு வந்துள்ளார்கள்.

தென்னாடு அல்லது தெற்கு என்ற பெயர், திசை (திக்கு) பற்றி வந்த பெயரென்று பலரும் கூறுவார்கள். ஆனால், உண்மை அங்ஙனமன்று. 'தென்' என்பது உயர்ந்த, மேலெ ழுந்த, நிமிர்ந்த, வளர்ந்த, மேலான என்ற பல பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். இதன் முதல் வடிவம் தெல் (த் + எ + ல்) என்பதாகும். மேலெழும் இயல்பினது என்பது இதன் பொருள். தெல் என்பது மை விகுதி பெற்றுத் தென்மை என நின்று, பின் மை விகுதி குன்றித் தென் என நின்றது. வான் பொன் என்ற சொற்களும் இவ்வாறு நின்றவைகளாம்.

இவ்வுலக முழுதும் நிலம் வெளித்தோன்றாமல் நீரானி றைந்திருந்த காலமும் ஒன்றுண்டு. அப்போது நிலம் நீரின்கீழ் மறைந்திருந்தது. அக்காலத்து அதற்கு நீருலகம் என்ற பேர்

தான் பொருந்தும். இங்ஙனம் நீரே முழுதும் நிறைந்திருந்த போதிலும், கதிரவன் வெப்பத்தால் நீர்குறையக் குறைய உலகின் நடுவிடத்தில் நீரினடியில் இருந்த ஒரு பெரிய மலையின் முடி வெளியில் தோன்றியது. பின் நாளடைவில் சுற்றியிருந்த நீர் வற்ற வற்ற அம்மலையில் பெரும்பாகமும் அதைச் சார்ந்த பன்மலையடுக்கங்களும் (மலைத் தொடர்களும்) வெளிப் பட்டன. இவ்விடம் உலகின் நடுக்கோட்டுப் பகுதியை அடுத் திருந்ததால் கதிரவன் வெப்பம் எதிர்முகம் தாக்க மிகுந்திருந்த தட்பநிலை குறைந்து தட்ப வெப்ப சமநிலையை அடைந்தது. உணர்வற்ற உறக்க நிலையில் அம் மலையின்கண் படிந்து உறைந்துகிடந்த உயிர் அணுக்கள் இந்நிலையில் உணர்வுற்று உடல்களைப்பெற்று வளரத் தொடங்கின. பின் மனித உட லைப் பெற்று வாழத்தொடங் கின. அது கடலினடுவில் கல் (மலை) தோன்றி மண் தோன் றாக் காலமாகும்.

இங்ஙனம் உயிர்கள் முதன் முதலில் தோன்றுவதற்கும் படிப்படியே பல உடல்களைப் பெற்று வளர்ச்சியடைந்து பின் மனித உடலைப் பெறுவதற்குமுரிய பண்புகள் யாவும் முதலில்அமைந்திருந்த இடம் இதுவேயாகும். உலகில் முத லில் நீரினின்று நிமிர்ந்து வெளிவந்த இடமாகையால் இதற் குத் ‘தெற்கு’ என்ற பெயர் அமைந்தது. (தென் + கு = தெற்கு) தென் - உயர்ந்த, கு - நிலம் (பூமி) முதன்மையாகக் கடலி னின்றும் உயர்ந்த நிலம் என்பது இதன் பொருள். பின் அம் மலைத் தொடரின் அடிப்பாகமும் அதைச் சூழ்ந்துள்ள இடமும் நீர்வற்றி நிலமாயிற்று.

மேலே கூறியபடி முதலில் மலையில் தோன்றிவாழ்ந்த மக்கள் கீழிறங்கி நிலத்திலும் பரவி வாழலானார்கள். இவ்விடங் களில் பிறவுயிர்கள் பலவகைகளில் காணப்படினும் மனித இனம் தங்களைத் தவிரக் காணப்படாமையால் தாங்கள் தனிப்பட்டவர்கள் என்பதையும் உணர்ந்தார்கள். தாங்கள் தோன்றிய மலைத் தொடரையும் அதைச் சூழ்ந்த நிலப் பரப்

பையும் தவிர மற்ற பக்கமெல்லாம் கடலாக இருந்தமை யால் தாங்கள் வாழுமிடமும் தனிப்பட்ட இடமென உணர்ந் தார்கள். இதனால் தாம் வாழும் நிலத்தைத் தமியம் என்றும் தங்களைத் தமியர் என்றும் சொல்லிக்கொண்டார் கள். தமி என்ற சொல் தனி என்ற பொருள்தரும் ஒரு சொல். பிற் காலத்தில் இவர்கள் மொழியில் ழகரம் ஏற்பட்டபோது புதிதாகவும் சிறப்பாகவும் கண்ட ழகர மெய்யைத் 'தமி' என்பதனுடன் கூட்டி, தமி + ழ் + அம் = தமிழம், தமிழ் நாடு (தனி நாடு) என்றும் தமி + ழ் + அர் = தமிழர் (தனி இனத்தவர்) என்றும் கொண்டார்கள்.

இங்ஙனம் முதலில் தோன்றிய காரணத்தைக் கொண்டு தெற்கு, தென்னாடு, தென்கண்டம் என்றும், முதலில் தனிமை யாக விளங்கியதைக் கொண்டு தமியம், தமிழம், தமிழகம், தமிழ்நாடு, தமிழ்க் கண்டம் என்றும் மேற்கண்ட இடம் பெயர் பெற்றது.

இவ்விடமே முதலில் உயிர்கள் தோன்றுவதற்குரிய பண்புகள் யாவும் பெற்றுப் பருவமுற்ற (பக்குவமான) நிலை யில் இருந்ததால் இவ்விடத்திலிருந்த மலையைக் குமரிமலை என்றும் இதைச் சூழ்ந்த நாட்டை குமரி நாடு என்றும் பின் பெருநிலப்பரப்பாய் அமைந்த காலத்தில் குமரிக் கண்டம் என்றும் வழங்கலானார்கள். குமரி என்பது, கருவைத் தாங்கிப் பெறுவதற்கேற்ற பருவமுற்ற மங்கைக்குரிய பெயராகும். இப்பெயர், உயிர்கள் முதலில் தோன்றுவதற்குரிய பருவ முற்று அவைகளைத் தோற்றுவித்த மலையுடனும் நாட் டுடனும் சார்ந்து குமரிமலை குமரிநாடு என்று ஆயிற்று.

தெற்கு, தென்னாடு என்ற சொற்கள் உயர்ந்தது மேலெ ழுந்தது என்ற பொருளில் வழங்குவது போலவே தென்னை, தெங்கு, தேங்காய், தேக்கு, தேக்கம், தேர், தெற்றி, தேட்டை, தெளிவு, திட்டு, திண்ணை, திடல் என்ற சொற்கள் உயர்ந்தது

மேலேயுள்ளது பெரியது என்ற பொருள்களில் வழங்கி வருகின்றன. தென்புலத்தார் என்பது உயர்ந்த அறிவுடை யோர் என்ற பொருளில் வரும் சொல்லாம். மேலும் மேலும் வளரும் அழகையும் வளரும் இசையையும் தென் என்ற சொல் குறிக்கும். எவ்வகையிலும் தென் என்பது உயர்வைக் குறிக்கும் ஒரு சொல்லாம். இங்ஙனம் முதலில் உயர்ந்த நிலத்தினும் ஒரு பக்கம் மலைத்தொடராக உயர்ந்த (மேல்) இடமாகவும், மறுபக்கம் மலையிலிருந்து வரும் ஆறுகள் ஓடும் தாழ்ந்த (கீழ்) இடமாகவும் இருந்தமையால் முறையே அவற்றிற்கு மேற்கு, கிழக்கு என்ற பெயரிட்டார்கள். பின்னால் நாம் இப்போது வாழும் தமிழ்நாடு தோன்றியதாலும் அதைவிடத் தாழ்ந்தும் இருந்ததாலும் பின்னால் தோன்றியது தாழ் வானது என்ற பொருளில் வடக்கு என்று பெயரிட் டார்கள். (அப்போது இமயமலையும் அதனை அடுத்து வடக்கேயுள்ள ஆசியாப் பகுதியும் கடலினடியில்தான் இருந்தது) வடக்கு என்பதைக் குறிக்கும் உத்தரம் என்ற சொல்லும் பின்னால் தோன்றியது என்ற பொருளைக் குறிப்பிடுவதை அறியவும்.

இவ்வாறு முதலில் தோன்றிய தமிழ் நாட்டில் (தென்னாட்டில்) முதலில் மனித இனத்தில் தோன்றிய தமிழர்கள் முதன்மக்கள் (ஆதிமக்கள்) என்றும் முன்னவர், தென்னவர் என்றும், பண்டைய மக்கள் ஆதலால் பண்டையர் - பாண்டியார் என்றும் பெயர் பெற்றனர். இவர்களில் நிலத்தைவிட உயர்ந்த மலையில் வாழ்ந்தவர்கள் வானவர் என்றும் பெயர் பெற்றனர். மற்றவர்களைவிட மனநிலையில் உயர்ந்தவர்களும் வானவர் என்ற பெயரைப் பெற்றனர். இவர்கள் பின்னால் தோன்றிய மக்களைவிட முந்தியவர் - பழமையானவர் என்ற பொருளில் முரியர் என்றும் பெயர் பெற்றனர். இவர் வாழ்ந்த இடத்திற்கு முரியர் இல் என்ற பெயரும் வழங்கிவந்தது. பின், இல்முரியர் முதலில் தோன்றிய இடத்தவர் என்றும், இல் முரியா - முதலில் தோன்றிய - பழமையான இடம் என்று

பொருள் பெற்று நின்று இலெ மூரியா, இலெமூரியர் என்று வழக்கத்தில் வந்துவிட்டன. ஆதலால் பழந்தமிழ்க் கண்டத்தை லெமூரியா கண்டமென்றும், பழந்தமிழ் மக்களை லெமூரியர் என்றும் பிற அறிஞர்களும் கொண்டனர்.

இக்குமரிக் கண்டத்தில் வாழ்ந்துவந்த தமிழ்ப் பெரு மக்கள் இயற்கை எழுச்சிகளால் இயற்கையோடிணைந்து தோன்றி வளர்ந்த இனிய தமிழ் மொழியினைத் தமக்கு மொழி யாக வுடையவர்களாய், பன்னூறாயிரம் ஆண்டுகள் பல துறைகளில் வாழ்க்கையில் வளர்ந்த பண்பட்ட அறிவினை யுடையவர்களாய் வாழ்க்கை முறை முதலானவைகளை வளம் பெற வகுத்து நலம்பெற வாழும் நாகரிக வாழ்வில் தலை சிறந்து விளங்கினார்கள். இக்காலத்தைக் குமரிக்கண்ட நாகரிக் காலம் என்றும் கூறலாம்.

மேற்கண்ட குமரிக்கண்டம் முதல் கடல் கோளுக்குட் பட்ட காலத்தில் அங்கிருந்தவர்களில் பலர் கிழக்குப் பக்கத் தில் பிரிந்த நிலப்பகுதியிலும் (பசிபிக் கண்டத்திலும்) பலர் மேற்குப் பகுதியில் பிரிந்த ஆப்பிரிக்காக் கண்டத்திலும் குடியேறினார்கள். பலர் அக்குமரிக் கண்டத்தின் தொடர்ச்சி யாக வடபால் இருந்த நடுவிடத்தில் வந்து தங்கினார்கள். பசிபிக்கண்டத்தில் குடியேறியவர்கள் கிழக்கு ஓரமாக ஏற் பட்ட புதுநிலப் பகுதிகளில் வடக்கே பரவி வாழ்ந்து வந்தார் கள். ஆப்பிரிக்காக் கண்டத்தில் சென்றவர்கள் அங்குப் பரவி வதிந்து வந்தார்கள். அவர்களில் ஊக்கமுடைய ஒரு பெருங் குழுவினர் அதன் வடமேற்குப் பகுதியில் புதிதாய் அடியினின் றும் எழுந்த அடி நிலக்கண்டத்தில் (அட்லாண்டிக் கண்டம் - இது இப்போது அட்லாண்டிக் கடல் உள்ள இடத்தில் எழுந்து இருந்த இடம்) குடியேறினார்கள். அங்கு நிலை பெற்று வாழ்ந்த இம்மக்கள் தம் அறிவைப் பலவாறாகப் பெருக்கிப் பல நகரங்களை அமைத்துப் பண்பட்ட நாகரிக வாழ்வை

நடத்தி வந்தார்கள். இந்தக் காலத்தை அட்லாண்டிக் நாகரிக காலம் என்றும் கூறலாம்.

பின்னர் நிகழ்ந்த பெருங்கடற் கோளால் பசிபிக் கண்டத்தின் தென்பகுதியும் குமரிக் கண்டத்தில் ஒரு பகுதியும் ஆப்பிரிக்கா கண்டத்தின் தென்பகுதியும் அழிந்தன. அட்லாண்டிக் கண்டம் கடலில் அழுந்தி விட்டது. ஆப்பிரிக்காவின் ஒரு பகுதி தென் அமெரிக்காவாகப் பிரிந்தது. அப்போது ஆப்பிரிக்காவின் ஒரு பகுதியினர் தென் அமெரிக்காவிலும் மறுபகுதியினர் வடக்கே சென்று அரேபியா எகிப்து முதலிய இடங்களிலும் குடியேறினார்கள். அட்லாண்டிக் கண்டம் அழுந்திவிடவே அங்கிருந்த மக்களிற் பலர் அதை அடுத்துத் தோன்றியிருந்த பண்டைய கிரேக்க நாட்டிற் பரவி குடியேறினார்கள். நடுவிலிருந்த பண்டைக் குமரிக் கண்டத்திலிருந்தவர்கள் இரு கடல் கோள்களாலும் அச்சம் பெரிதும் அடைந்தவர்களாய் குமரிக் கண்டத்தின் எஞ்சிய பகுதியிலிருந்து இப்போது நாம் வாழும் தமிழ் நாட்டின் வழியே வடக்கே நெடுகச் சென்று விந்தியமலைக் கண்மையிலிருந்த சிறு கடலையும் கடந்து (இது இப்போது இரசபுதனப்பாலைவனமுள்ள இடத்தில் இருந்த கடல்) சென்றார்கள். அப்போது வடபெருங்கடலில் (ஆசியாப் பெருங்கடல்) இருந்து வெளியே எழுந்த இமயமலைத் தொடர்க்கு இப்பால் இருந்த நிலப் பகுதியில் சிந்துவெளிப் பகுதி முதலான பல இடங்களில் தங்கினார்கள்.

அவ்விடங்களில் இவர்கள் தங்களுக்கு வழி வழியாக அமைந்துள்ள அறிவாற்றலாலும் குன்றா முயற்சியாலும் பல அரிய பெரிய நகரங்களை அமைத்தார்கள். வாழ்வியல் அரசியல் முதலானவற்றை வளம்பெற அமைத்து ஈடும் எடுப்புமற்ற நாகரிக வாழ்வை நன்கு நடத்தி வந்தார்கள். இக்காலத்தில் இவர்களிற்பலர் பாரசீகம், எல்லாம், அசீரியா, மெசபடோமியா, பாபிலோனியா, அரேபியா, எகிப்து,

சுமேரியா முதலான பலவிடங்களிலும் பரவி ஆங்காங்குத் தங்கி, தங்கள் வாழ்க்கைமுறை நாகரிகம் முதலானவைகளை அந்நாடுகளில் நிலை நாட்டினார்கள். பின் இவர்களுக்கும், முன் சிந்து வெளிப்பகுதி முதலான இடங்களில் உள்ளவர் கட்கும் வணிகத் தொடர்பும் வாழ்க்கைத் தொடர்பும் இருந்து வந்தன இதைப் பொதுவாகக் குறிக்குமிடத்து 'சிந்து வெளி நாகரிக காலம்' என்று செப்பலாம். இதினின்றே மெசபடோமியா பாபிலோனியா எகிப்து சுமேரியா முதலான வற்றின் நாகரிகங்கள் கிளைத்தன வெனக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு சிந்து வெளிப்பகுதியிலும் அதனையடுத்த கீழ்ப்பகுதிகளிலும் அமைந்திருந்த நகரங்கள் பலவும் மேற் கினின்றும் கிழக்கு நோக்கிப் பெருகிய நீர்ப் புரட்சியால் அழிந்து மண்ணில் புதைந்து மறைந்துவிட்டன. அவ்விடங் களில் பெரிய பெரிய மண் மேடுகளும் திட்டுகளும் அமைய லாயின. இப்போது மேற்கண்ட சிந்து வெளிப்பகுதிகளில் செய்த அகழ்ந்தெடுப்பு ஆராய்ச்சிகளால் இங்ஙனம் புதை யுண்டு மறைந்த நகரங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு, மொஹெஞ்சொதரோ, சங்கு - தரோ, லொகுஞ் சோ - தரோ, தகஞ்சொ - தரோ, சக்பூர் பானிசியால், அலி முராத், பாண்டிவாகி, அம்ரி, கோட்லா நிகாங்கான், முதலான பெயர்களிடப்பட்டுள்ளன. இன்னும் நூற்றுக்கு மேற் பட்ட மண்மேடுகளும் திடல்களும் காணப்படுகின்றன. இவ்விடங் கள் யாவும் பண்டைத் தமிழ்ப் பெருங்குடி மக்கள், ஆரியர் இந் நாட்டில் அடியெடுத்து வைக்குமுன் தனிச் சிறப்புடன் நகரங் களமைத்து நாகரிக வாழ்வை நடத்திவந்த இடங்களாகும்.

இங்ஙனம் வடக்கே வந்தவர்களைத் தவிர மற்றவர்கள் அக்குமரிக் கண்டத்தின் தொடர்பாக எஞ்சியிருந்த தென் னாட்டில் முதல் மதுரையைத் தலை நகராகக் கொண்டு தமிழ்க் கழகம் (சங்கம்) கண்டு மொழிவளம் இலக்கியவளம் இலக்கணவளம் அறிவுவளம் நிறைந்தவர்களாய்ச் சிறந்த

நாகரிக வாழ்வை நடத்தி வந்தார்கள். அவ்விடமும் கடலி லழுந்த பஃறுளியாற்றின் கரையிலிருந்த கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு இரண்டாம் கழகம் அமைத்து எண் ணற்ற நூல்களையியற்றி அறிவு நிறைந்த சிறந்த வாழ்வில் திகழ்ந்தார்கள். பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்குக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொண்டதன் காரணமாக ஏழ்தெங்கு நாடு முதலான நாற்பத்தொன்பது பிரிவான தமிழ் நாடுகள் கடலில் அழுந்தவே சிதறிக் கலைந்து தென்பால் வந்த தமிழ் மக்கள் பின்னாளில் இப்போதுள்ள மதுரையைத் தலைநகராகக் கொண்டு கடைக் கழகம் கண்டு சிறந்த வாழ் வில் திகழ்ந்து விளங்கினார்கள். இதைச் சங்க நாகரிக காலம் என்று சொல்லலாம்.

இதனால் தமிழர் வாழ்வும் தனி நாகரிகமும் முதலில் வெளிப்பட்ட நிலமாகிய குமரிக் கண்டத்தில் தோன்றிய காலந்தொட்டு அட்லாண்டிக் கண்டத்திலும் சிந்துவெளிப் பகுதிகளிலும் எகிப்து கிரேக்கம் முதலிய பல இடங்களிலும் பரவியது. பன்னூறாயிரம் ஆண்டுகளாகப் பலதுறைகளில் வழிவழியாக வளர்ச்சி பெற்ற அறிவும் பண்பட்ட மன குண நலங்களும் தமிழ் மக்களுக்குத் தனியே அமைந்து விளங்கின. இவற்றால் தனிச் சிறப்புடைய நூல்கள் பல இயற்றினார்கள். வாழ்வை நேரிய முறையில் அமைத்துச் சீரிய அரசியல் அறிவும் பெற்று ஆட்சி நடத்தினார்கள். ஆதலால், பன்னூ றாயிரம் ஆண்டுகட்குப் பின்னர் பல இடங்களில் தோன்றி நாகரிகமடைந்து வாழ்க்கை நடத்த முன்வந்த மற்ற மக்களை விடத் தமிழ்ப் பெருமக்கள், சிறந்த அறிவும் நிறைந்த பண் பாடும் உயரிய ஒழுக்க முறைகளும் அமைந்தவர்களாக விளங் கினார்கள். இத்தகைய தமிழ்ப் பெருமக்களின் வழியில் வந்தவர் தான் திருக்குறளென்னும் பெருநூலை ஆக்கி உல குக்கு அளித்த திருவள்ளுவப் பெருந்தகையார்.

எனவே திருவள்ளுவர் உலக முதன் மக்களாகிய தமிழர் களில் வழிவந்தவர்; உலகமெலாம் தலைசிறந்த நாகரிகத்தைப் பரப்பிய தமிழ் மரபைச் சார்ந்தவர்; அறிவு வளமும் கலை வளமும் நிறைந்து சிறந்த நூல்களை அமைத்த புலவர்களின் குலத்திற் பொருந்தி வந்தவர்; தமிழர்க்குரிய தனிப் பண்பாட் டறிவிலும் தகைமை புலமை சான்றாண்மை உயர் ஒழுக்க முடைமை முதலிய அனைத்தினும் தலைசிறந்து விளங்கிய தமிழ்ப் பேரறிஞர். இன்னோரன்ன பன்னருஞ் சிறப்பினை யுடைய பண்பாட்டினால் திருக்குறள் என்னும் சிறந்த அறிவுச் செல்வத்தை நமக்கு அருளினால் அளித்த வள்ளலாரே வள்ளுவர் ஆவார்.

# 19

# திருக்குறளும் சமதர்மமும்

1949

அ. சக்கரவர்த்தி நயினார்

*பண்டைப் பண்பு*

*தமிழ் அறிவு மேம்பாட்டுக்கும் திறனுக்கும் ஒரு பெரு எடுத்துக்காட்டாக விளங்குவது திருக்குறள். திருக்குறள் எடுத்தேதும் கோட்பாடுகள், இன்று உலக முழுவதும் போற்றிப் புகழப் பெறுகின்றன. திருக்குறள் காட்டும் பாதையைக் கொண்டு அது எழுதுவதற்கு நிலைக்களனாயிருந்த கலைச் சிறப்பை நாம் தெள்ளிதின் உணரலாம்.*

*தமிழகத்தின் சமுதாய நிலை அன்று எப்படி இருந்தது? கலைச்சிறப்பு எப்படி இருந்தது? அன்று தென்னிந்தியாவில் பெற்றிருந்த சமயம் யாது?*

*இக்கேள்விகளுக்குத் தெளிவான பதிலிறுக்க வேண்டுமானால், கிறிஸ்து பிறப்பதற்கு முந்தியதான தென்னிந்திய காலத்துக்கு நாம் இந்தியாவைத் திருப்ப வேண்டும். இந்த*

ஆராய்ச்சிக்குத் துணை செய்பவை நம் தமிழ் இலக்கியங் களேயாகும். இவையின்றித் தென்னிந்தியாவின் பூர்வநிலை பற்றி நாம் அதிகம் அறிய இயலாது. வரலாறு மூலமாக, அதாவது அசோகரின் கல்வெட்டு மூலமாக நாம் தென்னிந் திய ராஜியங்களைப் பற்றிக் கேள்வியுறுகிறோம். தென்னாட் டின் பழங்கால வரலாற்றை அறிய வேண்டுமானால், மாபெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தையே நாம் பின்பற்ற வேண்டியவர்களாயுள்ளோம்.

தமிழகத்தின் சமுதாய நிலையை ஓரளவு சங்கிலிக்கோர் வையைப் போல ஒழுங்காகச் சொல்லி வருவது தொல் காப்பியமே ஆகும். தொல்காப்பியம் தரும் தகவல்களோடு, (சமஸ்கிருத) சமண இலக்கியங்களும், சிந்து சமய, வெளி நாகரிக ஒழுகலாறுகள் பற்றிய தகவல்களும் நமக்குப் பேருத வியாயுள்ளன. மற்றும், ஆரியர் வருகைக்கு முன் இந்தியா முழுமையும் பரவியிருந்த நாகரிகத்தைத் திறம்படச் சித்திரிக் கின்றன மொகஞ்சதாரோ, ஹரப்பா, கண்டுபிடிப்புக்கள். இப்பகுதிகளில் அன்று வாழ்ந்த மக்கள் நாகரிக உச்ச நிலையை எய்தி இருந்ததோடு, கலை, பண்பு இன்னபிற வற்றிலும் மேம்பாடுற்றுத் திகழ்ந்தனர்.

சிந்து சமவெளி நாகரிக மக்கள் சமுதாயத்தினர், ஒப்புயர்வற்ற, உன்னதமான சமயக் கோட்பாடுகளைக் கொண்டு வாழ்ந்திருக்க வேண்டும், கல்வெட்டுக்களையும், சமய சம்பந்தமான தொல்பொருள்களையும் நுண்ணிய மதி கொண்டு ஆராய்ந்த சிறந்த ஆராய்ச்சியாளர்கள், இந்து சம வெளி நாகரிக மக்கள், பழங்காலத் திராவிடர்களே யாவ ரென்றும், ஆரிய வருகைக்கு முன்பே அவர்கள் மேற் பகுதி களில் உறைந்து வந்தனரென்றும் அசைக்க முடியாத முடிவுக்கு வந்துள்ளனர். கிழக்கிந்திய ஆராய்ச்சி வல்லுநர் களும் இம் முடிவினை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்

கின்றனர். ஆரியர்கள் வடமேற்குக் கணவாய்கள் மூலமாக இந்தியாவில் நுழைந்த ஞான்று, இந்நாட்டில் வதிந்தோர் திராவிடர்களே என்பதும், அவர்கள் கலை, பண்பு, நாகரிகச் சிறப்பால் மிக்கொளிர்ந்து கோட்டை கொத்தளங்களில் வாழ்ந்தன ரென்பதும், இவற்றால் புலப்படுகின்றனவன்றோ!

## ஆரியர் போர்முனை ஆரம்பம்

முதலில் ஆரியர்கள், தம் ஆடு மாடுகளை மேய்ச்சலுக்காக ஓட்டிக்கொண்டு பஞ்சநதிப் பக்கம் வந்து தங்கினர். அவர்களைத் திராவிடர்கள் எதிர்த்தனர். அந்த எதிர்ப்புக்களிடையில் உள்ளே நுழைந்த ஆரியர்கள், பஞ்சாப் பிரதேசங்களில் குடியேறி ரிக்வேதப் பாடல்களைப் புனைந்தனர். இவையே, அவர்கள் பார்த்ததாக நமக்குக் கிடைக்கும் பழங்காலப் பாடல்களாகும். இந்த ரிக்வேதப் பாடல்களில், ஆரியர் நுழைவை எதிர்த்த இந்நாட்டு மக்களைப் பற்றிய குறிப்புக்கள் பெரிதும் காணப்படுகின்றன. ஆரியர்களை எதிர்த்து நின்றனரேயாயினும், இறுதியில் அவர்களுக்கு விட்டுக் கொடுத்துத் தெற்கு நோக்கியும் செல்ல வேண்டியவர்களாயினர்.

ரிக் வேதத்தில் எதிர்த்து நின்ற இந்நாட்டு மக்களைப் பற்றிக் காணப்படும் குறிப்புக்கள் தோறும் பகைமையுணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே இருப்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும். அந்த அடிப்படையில்தான், மரியாதையற்ற முறையில் வசைபுராணம் பாடப்பட்டிருக்கிறது திராவிடர்களைப் பற்றி.

மரியாதையற்ற முறையில் ரிக்வேதத்தில் குறிப்புக்கள் காணப்பட்ட போதிலும், அதில் இந்நாட்டு மக்களைப் பற்றிய தகவல்கள் நிறையக் கிடைக்கின்றன. படையெடுத்து வந்த ஆரியர்களுக்கு முற்றும் முரணான நாகரிகக் கோட்பாட்

டைப் பெற்றுத் திகழ்ந்தனர் இந்நாட்டுப் பழங்காலக் குடி மக்கள். அவர்கள் ஆரியரின் யாககுண்ட முறையை ஏற்றுக் கொள்ளவே இல்லை. அதனால் அவர்கள் அயக்ஞர்கள் என்று அழைக்கப்படுவாராயினர். ஆரியர்களின் கோட்பாட்டை அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுத்த காரணத்தாலேயே அவர் கள் அன்யவிரதாஸ் அவ்ரதாஸ் என்று அழைக்கப் பட்டனர்.

இந்நாட்டு மக்களின் மொழியும் படையெடுப்பா ளருக்கு மாறுபட்டதாயிருந்ததோடு, புரியாத புதிராயுமாயி ருந்தது. ஆரிய மதத்துக்கு அடிப்படையாயுள்ள இந்திர வழி பாட்டை இந்நாட்டு மக்கள் மறுத்தனர்; அதனால் அவர்கள் அனிந்திரர்கள் என்றும் பெயர் பெறலாயினர்.

## முன்னுக்குப் பின் முரண்

ஆரிய திராவிடப் போராட்டத்தை அப்படியே சித்திரித் துக் காட்டும் மாபெரும் இதிகாச நூலாகிய வால்மீகி ராமா யணத்தைப் பார்ப்போமானால், அதில் தென்னாட்டு மக்கள் ஆரியர்களால் எவ்விதம் கருதப்பட்டுப் பகைமைக் கண் கொண்டு பார்க்கப்பட்டிருக்கின்றனரென்பது தெரிய வரும். அதில் திராவிடர்களைப் பற்றிய அவதூறுகள் மிக மலிந்து காணப்படுவதை அறியலாம்.

ஆரிய இளவசரனாகிய ராமன் தென்னாட்டு மன்னனு டன் போர் தொடுக்க வேண்டியதாயிற்று. இலங்கை மன்னன் இராவணனும், அவனது குடிகளும் இராக்கதர் அதாவது அரக்கர்களாக, அநாகரிக மக்களாகக் காட்டப்படுகின்றனர்.

இவ்வளவு இழித்துச் சொல்லியும் வால்மீகி, இராவ ணனை மாபெரும் கல்விமான் என்று குறிப்பிடுவதோடு, இலங்கை நகரைக் கலை, மேம்பாடுடைய நாகரிகக் கூட மாகச் சித்திரித்தும் காட்டுகிறார். ஆனால் இராட்சதர்களைப் பற்றி ஓரோரிடங்களில், அபாயகரமான அநாகரிகக் கூட்ட

மென்றும், சில இடங்களில் கலைவாணர்களென்றும், அவ் வால்மீகியே குறிப்பிடுகின்றார்.

## இராவணன் யார்?

சமண ஆசிரியர்களும், இராமனுடைய கதையைச் சமஸ் கிருதத்திலும், பிராகிருதமொழியிலும் முறையே பத்ம புராணம், பௌம சரித்திரம் என்ற இரு இலக்கிய நூல்களை எழுதியிருக்கிறார்கள்! அவ்விலக்கியங்களை நோக்குவோமே யானால், மிகமிக வேறுபட்ட வரலாற்றையே கேட்கின் றோம். அவற்றின்படி வித்தியாதரர்களின் சக்கரவர்த்தியாக, இலங்கையிலிருந்து ஆட்சி புரிந்தவனாகக் கூறப்படுகிறான் இராவணன்.

விஞ்ஞானக் கலை நுட்பங்களில் கைதேர்ந்த மக்கள் இனத்துக்கே வித்தியாதரர் என்று பெயரிட்டு அழைப்பது மரபு. அவர்கள் எப்பொழுதும் ஆகாயத்தில் பறக்கும் விமானங்களிலேயே பிராயணஞ் செய்வது வழக்கம். இவ் விமானங்களைச் செய்யும் திறன் மிகப்பலம் படைத்தவர்கள் மேற்கூறிய வித்தியாதரர்களே.

இவ்வித்தியாதர இனத்தைச் சேர்ந்த இன்னொரு குழு வினர் தக்காணத்தில், அதாவது கிஷ்கிந்தையருகில் (வாலி சுக்கிரிவர் தலைநகரம்) வசித்து வந்தனர். மேற்கண்ட தக்காணப் பகுதியில் வசித்தோரைத்தான் வால்மீகி 'குரங்குகள்' என்று கூறுகிறார். ஆனால் சமண இலக்கியங்களோ, வித்தியாதரர் கள் என்று அவர்களைக் கூறுகின்றன. மேற்கூறிய வித்தியா தரர்களையே அஹிம்சா தர்ம (கொல்லாநெறி) வாதிகள் என்றும், ஜைன பக்தர்களென்றும் சமண நூற்கள் குறிப்பிடு கின்றன. அஹிம்சா தர்மத்தை அவர்கள் மேற்கொண்டிருந்த காரணத்தால்தான் யாகம், கொலை, பலி முதலியவற்றில் ஈடுபட்டிருக்கும் ஆரியர்களை, அவர்கள் எதிர்க்கலாயின ரென்றும், சமண இலக்கியங்கள் சாற்றுகின்றன.

இவ்விதம் அரசியல் காரணத்திற்காகவும், கலாசார ஆக்ஷேபங்களை முன்வைத்தும், அன்னியர் படையெடுப்பை அவர்கள் எதிர்த்து நின்றனர்.

## நம் நாட்டின் பண்டைச் சமயம்

ஆரியப் படையெடுப்புக்கு முன்னர், இங்கு நின்று நிலவிய சமயம், அஹிம்சையையே அடிப்படையாகக் கொண்டிருந்ததென்பது சமண நூல்கள் மூலம் தெரியவருகிறது. இன்னும் இதுபோன்ற சான்றுகள் பலவும் காணக் கிடைக்கின்றன.

ஆரியர் படையெடுப்புக் காலத்தில் இந்நாட்டில் பகவான் விருஷபாருடைய அஹிம்சையே நிலை பெற்றிருந்தது. இல்லையானால், ஆரியர் நுழைவை இந்நாட்டு மக்கள் அவ்வளவு தீவிரமாக எதிர்த்திருப்பதற்குக் காரணம் கூறமுடியவில்லையே!

வேத இலக்கியங்களிலிருந்து இங்கு விருப்பு வெறுப்பற்ற முறையில் உயரிய கோட்பாடுகள் மலிந்த சமயம் நிலவியிருப்பது நன்கு புலனாகும். சமஸ்கிருதங்களிலும் பிரமாணங்களிலும் இது தெளிவாகத் தெரியவருகிறது. வேத சமஸ்கிருதங்களில் முரண்பட்ட கோட்பாடுகள் காணப்படுகின்றன. ‘சுவர்க்கம் செல்ல விரும்புவோர், யாகம் செய்யுங்கள்’ என்றும், எக்காரணங்கொண்டும் கொலைத் தொழில் புரியாதீர் என்றும், இரண்டு மாறுபட்ட கொள்கைகளும் அதில் காணப்படுகின்றன. உபநிஷத் காலத்திலோ, அஹிம்சா தர்மம் தலைசிறந்ததொன்றாகப் - பேசப்படுவதோடு வேதபலிகள் கீழ்த்தரமாக வைத்தும் எண்ணப்படுகின்றன. இதனால் நாம் அறியக்கிடப்பது எல்லாம், ஆரிய வருகைக்கு முன்பே இங்கு அஹிம்சா தர்மம் நிலவியிருந்தது என்பதேயாகும்.

பஞ்சாபில் முற்றிலும் குடியேறிய ஆரியர்கள், கங்கைச் சமவெளியை நோக்கி வடஇந்தியா முழுமையும் குடியேறியிருக்கலாம்.

## கொல்லாமையின் தொன்மை

பழங்காலக் குடிகள், சிறிது கிழக்கு, தெற்கு நோக்கியும், (மகதம் நோக்கி) நகர்ந்திருக்கலாம். மகதத்தில் அஹிம்சா தர்மத்தை அடிப்படையாகக் கொண்டு சமணமும், பௌத்தமும், எழுந்து வரலாற்று ரீதியாகக் காட்சியளிப்பதே இதற்குத் தக்க எடுத்துக்காட்டாகும். இவை இரண்டு மார்க்கங்களும், வேதக் கோட்பாடுகளை எதிர்த்து நின்றனவாதலால் அவை வேத எதிர்ப்புச் சமயங்கள் எனப் பெயர் பெற்றன.

இங்ஙனம் குடிபெயர்ந்த பழங்காலத் திராவிடர்கள், மேலும் சில காலம் யாதொரு இடை யூறுமின்றி மேற்கண்ட பகுதிகளிலே வாழ்ந்து வந்திருக்கலாம். அதன்பிறகே வால் மீகி இராமாயண சம்பவங்கள் நடந்திருக்கக்கூடும்.

ஆரிய ஆக்கிரமிப்பு - நுழைவு இவைகளுக்குப் பின்னருங் கூட, தென்னாட்டில் நீண்ட காலம் அஹிம்சா தர்மம் (கொல்லா நெறி) நிலை பெற்று வந்திருக்கிறது. கி.பி. எட்டாவது நூற்றாண்டில் சைவ நாயன்மார் வைணவ ஆழ்வாராதிகள் முதலியோரும், அஹிம்சா தர்மத்தைப் பெரிதும் போற்றிப் பாடியிருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும். எனவே, கி.பி. முதலாவது நூற்றாண்டில் அதையே அடிப்படையாகக் கொண்ட (பகவான்) 'விருஷபா முறை' கலாசாரமே தென்னாட்டில்நிலவியிருந்ததென்பதை நாம் திட்டமாக அறிகிறோம்.

இது சம்பந்தமாகத் தொல்காப்பியத்தினின்றுங் கூட நமக்கு மறைமுகமாகத் தகவல்கள் கிடைக்கின்றன.

## வேளாண்மை உயர்ந்ததா இழிந்ததா?

தொல்காப்பிய நூல் யாப்புக் காலத்தில் ஆரியர்கள் தங்களுக்கே உரிய வருணாசிரமக் கோட்பாடுகளை அடிப் படையாகக் கொண்ட சமுதாய முறையைத் தாங்கித் தென் னாட்டில் நுழையலாயினர்; அங்ஙனம் வந்து நுழைந்த ஆரியர்

கள், வேதபலிகளை மேற்கொண்டே வாழ்க்கை நடத்தி வரலாயினர். எனினும், அவர்களது ஆதிக்கம் மிகவும் குறைவாகவே இருந்தது.

தொல்காப்பியம் குறிப்பிடுகிறபடி, அன்று சமுதாய அந்தஸ்து மிகப் பெற்றிருந்தோர், நிலபுலம் படைத்த செல்வான்களேயாவர். அவர்களே வேளாளர்கள் எனப்படுபவர். இவ்வகுப்பினரே சமுதாயத்தின் இன்றியமையா வகுப்பினராக அமைந்திருந்தனர். இவர்களிடையே சாதி வேறுபாடுகள் கிடையா. ஆரியர் கூற்றுப்படிக்கான நான்கு வருண முறைகளும், உயர்வு - தாழ்வும் கற்பிக்காமல் இவர்கள் சமரச முறையில் வாழ்ந்து வந்தனர். தென்னாட்டு மன்னர் குடும்பங்களில் பெண் கொண்டு - கொடுக்கும் உரிமையும் இவர்கட்கு இருந்தது.

வேளாளர்களின் முக்கியமான தொழில் உழவு. ஆதலால் வடக்கிலிருந்த ஆரியர்களால் இறக்குமதி செய்து கொண்டு வரப்பட்ட சமூக அமைப்பு முறையினின்றும் இவர்கள் பிரிந்து நிற்க வேண்டிய அவசியத்திலிருந்தார்கள். ஆரியக் கோட்பாட்டின்படி உழவுத்தொழில் மிகவும் தாழ்வான - கடையான தொழிலாகும். அது சூத்திரரொருவரே செய்யக் கூடிய தொழிலாகும். ஆரியரின் தர்ம சாஸ்திரமோ, உயர் வகுப்பாளர் உழவுத் தொழிலில் ஈடுபடுதல் கூடாது என்று வரையறுத்துக் கூறுகிறது. ஆனால், வேளாளரோ, உழவுத் தொழிலை உயர்தர உன்னதமான தொழிலாகக் கருதி அதைச் செய்து வந்தனர்.

உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு

இவ்விதம் நாம் ஆராய்ந்து பார்க்கையில், கிறிஸ்து பிறப்பதற்கு முந்தியதான காலத்தில், தென்னாட்டுச் சமுதாய அமைப்பு முறையும், கோட்பாடுகளும், ஆரிய சமுதாயக்

கோட்பாடுகளுக்கு முற்றிலும் மாறுபட்டவையென்பது நன்கு புலனாகின்றன.

விருஷப முறை கலாசாரம் இவ்வண்ணம் உயிர்ப் பலியை அடிப்படையாகக் கொண்ட வேத சமயத்துக்கு மாறுபட்டிருந்ததோடு, வருணாசிரமத்தை அடிப்படை யாகக் கொண்ட சமுதாய அமைப்பு முறைக்கும் முரண்பட்டிருக்கிறது. இவ்விதம் ஒன்று உழவுத் தொழிலை உயர்த்திப் பேசியது; மற்றொன்று அதனைத் தாழ்த்திப் பேசியது.

இவ்வாராய்ச்சியினால் கிறிஸ்து பிறப்பதற்கு முந்திய காலத்திலேயே ஆரியர்கள், தங்களது கலை, நாகரிக சமுதாய அமைப்பு முறைகளுடன் தெற்கு நோக்கி நுழைந்து முன்னேறினரென்று கண்டோம். அன்றி ஆதிக்கத்திலிருந்த விருஷப கலாசார முறை ஒருபுறமிருக்கவும், புதிதாக வந்த ஆரியர்கள், வேத பலிகளை அடிப்படையாகக் கொண்ட ஆரிய கலாசார முறைகளை மேற்கொண்டு ஒழுகி வந்தனர்.

இவ்விரு சமயக் குழுக்களேயன்றிக் கௌதம புத்தர் சமயமும் வழக்கிலிருந்தது. இதுவும் வடக்கிலிருந்து வந்ததேயாகும். அஹிம்சைக் கொள்கையை வைத்தே நிறுவினரெனினும் அவரது சமயம் விருஷப முறைக்கு முற்றிலும் மாறுபட்டே இருந்தது. உண்மையில், அவரது சமயம் அநாத்ம வாதம் (ஆன்மாவற்ற மதம்) என்று அழைக்கப்படும். இவ்விதம் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரேயே மூன்று சமயங்கள் ஈண்டு நிலை பெற்றிருந்ததென்பதைக் காண்கின்றோம். இவற்றில் ஆதிக்கம் செலுத்தியது சமண சமயம் என்றே தெரிய வருகிறது.

தமிழகத்தில் வேளாளர் குடும்பம் ஒன்றில் பிறந்த குறளாசிரியர், தென்னாட்டுக் கலாசாரத்தின் மீது வேத கலாசாரம் ஆதிக்கம் செலுத்த முற்படுவதைக் கண்டு மனம் பொறாநிலை எய்தியிருக்கலாம்.

சமயக் கோட்பாடாக அஹிம்சையையும், சமுதாயக் கோட்பாடாக மனித தர்மத்தையுங் கொண்ட நாட்டில் வேள்விப் பலியும், வருணாசிரம தர்மமும் நிலைபெற யாரே அனுமதிப்பார்.

## குறளாசிரியர் புரட்சி

இரண்டாவதாகச் சாதி சமயக் குரோத வேறுபாட்டுப் பகுப்புக்கள் இல்லாத் தமிழகத்தில் வேத கலாசார வருணா சிரமத்தைப் புகுத்தி, பற்பல சாதிகள் வகுத்து ஒவ்வொன் றுக்கும் ஒரு தர்மத்தை நிர்ணயித்து, உழவுத் தொழிலை நான்காம் சாதி - சூத்திர சாதிக்கு ஒப்படைத்தது, தமிழ்க் கலாசாரத்துக்கு ஆரியர் இழைத்த பெருத்த அவமானமாக ஆசிரியர் இதனைக் கருதியிருக்கலாம். எனவேதான், உழவுத் தொழில், கடைத் தொழில் எனக் கழறப்பட்டதைக் குறளா சிரியர் எதிர்த்துப் புரட்சி செய்யமுனைந்தார். மற்ற சமூகப் பழக்க வழக்கங்களிலும் புரட்சிக்கு அடிகோலினாரென்றே கூறவேண்டும்.

குறளாசிரியரின் குறிக்கோள் வேத கலாசாரக் கோட் பாடுகளை மறைமுகமாகக் கண்டிப்பதும், அஹிம்சா கலா சாரத்தில் மக்களுக்கு முழுநம்பிக்கை ஏற்படச் செய்வது மேயாகும். எனவே, அவர் வருணாசிரம முறையை அடியோடு தகர்த்தெறியும் முறையிலேயே பேசுகிறார். அத்துடன் மனித தர்மத்தையே முற்றிலும் எடுத்தோதுகிறார்.

## வள்ளுவர் வகுத்த வேற்றுமை

சமுதாயத்தில் மனித வர்க்கம் முக்கிய இடம் பெறுகிறது. மனிதனுக்கு மனிதன் பிறவியில் உயர்வு தாழ்வு கிடையாது.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான் – குறள்

ஒவ்வொருவரும் மேற்கொள்ளும் தொழில், சூழ்நிலை, சுற்றுச் சார்பு முதலியவற்றின் காரணமாகவே மக்களுக்குள் வேறுபாடு காணப்படுகிறது.

பற்பல நூறாண்டுகளுக்குப் பின்னர் ரூசோ கூறினார் 'மனிதன் சுதந்திரவாதியாகவே பிறக்கிறான்; பிறந்த பின்னர் தான், அவன் தளைகளால் கட்டப்பட்டு விடுகிறான்' என்று. இதைத்தான் அன்றே வள்ளுவர் கூறினார்.

இல்வாழ்வோர், துறவிகள் என்ற இரு பகுப்பினரையே வள்ளுவர் கண்டார். இல்வாழ்வோர் என்போர் தொழில் உற்பத்தி, வினியோகம், பாதுகாப்பு இவற்றில் ஈடுபட வேண்டும். சமூக வாழ்வு, நிலை பெறுவதற்கு மூலாதார மானது உணவு உற்பத்தியாகும். அதற்கு மூலமான உழவுத்தொழில் இன்றேல் சமூதாயப் பொருளாதார அமைப்புச் சீர்குன்றிவிடும். எனவே தான் குறளாசிரியர் உழவை உயர் தொழிலாகக் கூறி, ஏனை யவற்றை அதற்குக் கடைப்பட்டவையாகக் குறிப்பிடுகிறார்.

இல்லறம் தவிர்த்த துறவி, வாழ்க்கைத் தொடர்புகள் அனைத்தையும் துறந்து விடுகிறாராயினும், அவர் தனது காலத்தை, அறிவுத் திறத்தை, ஆத்மீக சக்தியைச் சமுதாய நல்த்துக்கேசெலவிட வேண்டுமென ஆசிரியர் வரையறுக்கிறார்.

இந்த இரு குழுக்களை மட்டுமே சமுதாயத்தில் ஆசிரியர் கண்டாராகையால், இவர்களுக்கு மட்டுமே இவர்களின் வாழ்க்கை ஒழுகலாறுகளுக்கு மட்டுமே விதி வகுத்துள்ளார். ஆசிரியரின் ஒழுக்கக் குறிப்புகள், பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பித்து அதற்கேற்ப வரையறுக்கப்பட்டவையல்ல. அதற்கு மாறாக ஒவ்வொருவடையவும் அந்தரங்க சுத்திக்கு உகந்தவை யாகும்.

இவ்விதம் பார்க்கையில் குறளின் முற்பகுதி (தர்மத்தை) அறத்தைப் பற்றிப் பேசுகையில் அஹிம்சா தர்மத்தைப் பல

வகையிலும் போற்றி வேத கலாசார முறையைச் சாடுதலைக் காண்கிறோம். இதுபோலவே அரசியல், நிதி, இல்லற இன்பம், இவைகள் விஷயத்திலும் இருளைப் போக்கி அவற்றிலுள்ள வேறுபாடுகளை எடுத்துரைக்கிறார்.

### காம சாஸ்திரம் குறளாகுமா?

குறளின் இரண்டாம் பகுதி (பொருட்பால்) கௌடல்யரின் அருத்த சாஸ்திரத்தைப் பெரிதும் ஒத்திருப்பதுபோல் தோன்றினும், அடிப்படையில் அதனினும் மாறுபட்டதாகும். வருமான வகைகள் எவையெவையென்று நிர்ணயித்துக் காட்டியிருக்கும் இரண்டொரு வகைகளைக் குறளாசிரியர் கண்டித்தொதுக்கியிருக்கிறார்.

குடிப்பழக்கமற்ற சமுதாயமே வள்ளுவரின் இலக்ஷிய சமுதாயமாகத் தெரியவருகிறது. வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளக் குடித்தொழிலை ஊக்குவிக்கும் அரசியலை ஆசிரியர் கண்டிக்கிறார். பொது மகளிர் தொடர்பு எல்லா வகையிலும் கூடாது என அரசியல் சிப்பந்திகளுக்குக் கூறுகிறார். அழகுடைய நடனமாதர் தொடர்பு, நாட்டு நிர்வாகக் காரியங்களைக் கெடுத்தே தீரும். இவ்வெச்சரிக்கை சர்க்கார் சிப்பந்திகளுக்கு மட்டுமேயன்றிப் பொது மக்களுக்கும் செய்யப்படுகிறது. உயர்தரமான மதிப்புள்ள வாழ்க்கைத் தரமெய்த வேண்டுமானால், ஒவ்வொருவரும் குடி, பொது மகளிர் தொடர்பு, ஆகியவற்றை ஒழித்தாக வேண்டும்.

குறளின் மூன்றாவது பகுதி, இல்லற வாழ்வு, அல்லது இல்லற இன்பம் இவை பற்றிப் பேசுகிறது. இல்லற இன்பம் இதுவென்பதை நன்றாக வரையறுத்து விடுகிறார் ஆசிரியர். இப்பகுதியில் காமசாஸ்திரத்துக்கும் இதற்கும் வெகு தொலைவாகும். இலக்ஷியத்திலும் குறிக்கோளிலும், குறளுக் கும் காம சாஸ்திரத்துக்கு அடிப்படையிலேயே வேறுபாடு உண்டு என்பதை ஒரு முறைபடிப்போரே நன்குணர்வர்.

காம சாஸ்திரம் கூறுவது எல்லாம் ஆண் பெண் சேர்க்கை முறைகளும், அது சம்பந்தப்பட்ட, கருத்துக்களுமேயாகும். ஆனால் குறளோ ஆடவர் பெண்டிரின் பற்பல கட்டங்களுக்கு மான உளநிலை உணர்வுகலளையும் இல்லற இன்ப நிலைகளை யும் எடுத்தோதுகிறது.

கருத்தொருமித்துக் காதலினொன்றி ஆதரவுபட்ட இன்பத்தையொட்டி நடைபெறுதே திருமணம். அத்தகைய காதல் திருமணங்களுக்கு ஆக்கம் தருவதே நான் காணும் சமுதாயமென்கிறார் குறளாசிரியர்.

மணமாகா ஆடவனொருவன், வயது வந்த பெண் ணொருத்தியைப் பொது இடங்கள் பற்பலவற்றில் கண்டு பேசிக் காதல் பரிமாறிக் கொள்ள வாய்ப்புக்கள் இருந்தன.

இருதரப்பினரின் பெற்றோரும் உணராவண்ணம் களவு ஒழுக்கத்தில் ஈடுபடும் தன்மை அன்று இருந்தது. மூன்றாவது பகுதியின் முற்பகுப்பில் இக்களவொழுக்கம் பற்றிப் பேசப் படுகிறது. இன்று மனோதத்துவ நூலாராய்ச்சிகளில் ஈடு பட்டுள்ள எவரும் இறும்பூதும் ஆச்சரியமும் எய்தும் வகை யில் ஆசிரியர் களவொழுக்கத்தில் ஈடுபடும் தலைவன் தலை வியர் உளநிலை உணர்ச்சிகளைத் திறம்படச் சித்திரித்துக் காட்டுகிறார். களவொழுக்கம் நீண்டநாள் நீடித்துக் கொண்டே இருக்கமுடியாது. எனவே, ஒரு நாள் பெற்றோருக்கு இது தெரிந்துவிடும். பெற்றோர்களிடையே உள சம்பந்தம் ஏற்பட்டு, உரியமுறையில் திருமணம் நடைபெற்று, மணமக்கள் இல்ல றம் மேற்கொள்வர். இல்லற இன்பத்தின் அடிப்படை இதுவே. இதுபோன்ற பல சமுதாயக் குடும்பங்கள் சேர்ந்ததே நாடு.

மணம் புரிந்து வாழ்வு நடத்தி வருகையில், தலைவன் அரசாங்கக் காரியமாகத் தலைவியைப் பிரிந்து வெளியிடத் துக்குச் செல்ல வேண்டி நேரிடும். தலைவனைப் பிரிந்த தலைவி

தனிமை நோயால் பீடிக்கப்பெற்று வாடுவாள். தலைவனை நோக்கித் தலைவி இரங்கல், அவன் வருகை நோக்கி வாடல், தலைவனின் நீண்ட நாள் பிரிவு, பிரிவாற்றாமைத்துயர், இன்னபிற மிகமிகத் திறம்பட எடுத்தோதப் பெறுகின்றன. குறளாசிரியரால், இன்ப ஒழுக்கம், உள நிலைப் பண்புகள் கூறுமுகத்தான், குறள் ஒரு மனோதத்துவ நூலாகும். வெறும் ஆண்பெண் சேர்க்கையை மட்டும் வர்ணித்திருக்கும் காம சூத்திரமெங்கே, குறளெங்கே!

## கோவில்கள் கசாப்புக் கடைகளா?

வேத கலாசார தர்மார்த்த காமக் கோட்பாடுகளின் எதிரொலியாகச் செய்யப்பட்டதே குறள் என்பதை, நாம் உறுதியாகக் கூறலாம். இவைகளுக்கு மாறாகத் தென்னாட்டுக் கலை நாகரிக அடிப்படையில் குறளாசிரியர் புதிய முறை அர்த்தம் ஆகியவற்றை எடுத்துணர்த்துகிறார்.

குறள் காட்டும் சமயக் கோட்பாடு யாது? தெய்வக் கொள்கை என்ன? குறள் போதிக்கும் சமுதாயப் பொருளா தாரக் கோட்பாடுகள் யாவை? என்பனவற்றை ஆராய்வோம்.

குறள் காட்டும் அன்பு - அறக்கடவுள் ஆகும். உக்கிரம் கொண்ட கடவுளைப் போதிக்கவில்லை குறள்; பகைவர் நாடு நகரங்களைத் தீயாலும், அக்கினி யாஸ்திரங்களாலும், அழிக் கும் கடவுள் அல்ல; குறளாசிரியர் காட்டும் கடவுளின் கையில் போர்த்தளவாடங்கள் இரா. பகைமை, கோபம், விருப்பு - வெறுப்பு இன்ன பிற உணர்ச்சிகளற்றவரே குறள் காட்டும் கடவுள். அன்புக் கடவுள் தான் குறளின் கடவுள். அக்கடவு ளுக்குப் பகை வரும் இல்லை; நண்பரும் இல்லை. அன்பே அக்கடவுளின் ஆயுதம். அவ்வன்பைக் கொண்டு புதிய புலி யினையும் பழக்கி அடக்கிவிடலாம்.

அத்தகைய கடவுளுக்கு இரத்த பலி உயிர்ப்பலி தேவையில்லை. தென்னிந்தியாவில் பெருவாரியான கோயில்களில் இன்று நடைபெறும் வழிபாடுகள் அன்புமுறைக்கு முற்றிலும் மாறுபட்டவை என்பதை நான் எடுத்துக் கூறத் தேவையில்லை.

இன்றைய வழிபாட்டு,இடங்கள் (கோயில்கள்) கசாப்புக் கடைகளைவிட எந்தவகையிலும் உயர்ந்தவையாகக் காட்சியளிக்கவில்லை. அன்பு நிலைபெறவேண்டிய இடத்தில், ஆடு, கோழி, எருமை இன்ன பிற உயிர்களின் இரத்தம் சிந்தச் சிந்த வெட்டப்படுகின்றன.

## குறளும் சமதர்மமும்

குறளாசிரியர் காட்டும் சமூகம், பொருளாதார அமைப்பு முறையைப் பார்க்கும்போது, முற்றிலும் நாகரிகத்துக்கு ஒத்தே மிளிர்வதைக் காண்கிறோம்.

இல்வாழ்வோர் தன்னலத்துக்கு மட்டுமன்றிப் பிறர் நலத்துக்கும் வாழ வேண்டும். நாட்டில் பசி, பட்டினி கூடாது, பிச்சைக்காரர் இருத்தல் கூடாது.

பசியும் துயரும் கடவுளால் ஏற்பட்டவையெனச் சாக்குப்போக்கு இருத்தல் கூடாது. இரந்து உயிர் வாழ வேண்டின், பரந்து கெடுக இவ்வுலகியற்றியான்(கடவுள்) என்கிறார் குறளாசிரியர். மனிதர்களே இத்தொல்லைகளுக்ெல்லாம் காரணம் என்று பொறுப்புச் சுமத்துகிறார்.

செல்வம் இன்றி மனிதன் உலக இன்பத்தை நுகர முடியாது. ஆனால், அச்செல்வத்தை நியாயமான முறையில் சேர்க்க வேண்டும். பிறரை ஏமாற்றியோ, கள்ள மார்க்கெட் செய்தோ, பணம் சேர்த்தல் கூடாது. சுருங்கக் கூறின், இந்தியா முழுவதுமேயன்றி, உலகெங்கணும் பரப்பத்தரும் கொள்கை - கோட்பாடுகள் மலிந்து கிடக்கின்றன குறளில்.

அன்பு வழிகளிலேயே மானிடவர்க்க நாகரிகத்தைக் காப்பாற்ற முடியும். இல்லையேல் நாகரிகம் அழிந்து தவிடுபொடியாகி விடும்.

குறளாசிரியர் கோட்பாடுகள் நாட்டில் செழிக்கட்டும்; போலிச் சமய சமுதாயக் கோட்பாடுகளைப் பரப்ப நாட்டில் நடைபெற்றுவரும் குறும்பு முயற்சிகள் ஒழியட்டும். மானிடவர்க்கம், வளமும் அமைதியும் பெற்று உயரட்டும்.

# 20

# வள்ளுவர் நெஞ்சம்

*1950*

**வ. சுப. மாணிக்கம்**

*இனிய நண்பர்களே!*

*எல்லோர்க்கும் வணக்கம். திருக்குறளே என் சொற் பொழிவுகளின் முழுப்பொருள். அப்பொருட்கு ஒரு பெருந் தோற்றுவாயாக, 'வள்ளுவர் நெஞ்சம்' என்பது குறித்து முதற் கண் சொல்லாற்றுவேன். 'வள்ளுவர் நெஞ்சம் வேறு, திருக் குறள் வேறா? குறளின் அகத்ததோ புறத்ததோ அப்பெரு மகன் உள்ளம்? ஆசான் நெஞ்சுக்கும் குறள் நூலுக்கும் உரிய தொடர்பு என்கொல்' என்பது வினா. இவ்வினாவிற்கு விடை யாகவும் என் பின்னைச் சொற்பொழிவு அனைத்திற்கும் உள் ளுறையாகவும் ஓர் அடிப்படைக் கருத்தினை இத்தொடக் கத்தே யான் சொல்லிவிடக் கடமைப்பட்டிருக்கிறேன். உளங் கொள்வது உங்கள் கடன்.*

*ஒருவன் வாழ்க்கைச் செயலெல்லாம் மனத்தின் விளைவு. மனத்திற்கு அமைச்சன் போல்வது அறிவு ஆதலின், அறிவினை*

ஒருவன் மனக்கண் என்று கொள்ளல் சாலும். அறிவு வெளியீடே ஒருவன் சொல்லும் எழுத்தும் என்க. திருக்குறள் வள்ளுவனார் அறிவுக் குழவி. திருக்குறள் அவ் வறிஞன் நெஞ்சோடு நம் நெஞ்சினைப் பிணைக்கும் எண்ணக் கயிறு, திருக்குறள் அச்சான்றோன் உள்ளத்து நுண்ணிய நினைவை, தீட்டாத நம் அறிவிற்குக் காட்டும் பூதக்கண்ணாடி.

வள்ளுவர் நெஞ்சிற்கும் அவர் யாத்த ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்களுக்கும் உரிய தொடர்பு என்னை? இட்ட வித்துக்கும், அதனில் தோன்றிய மரம் யாருங்காணப் பலவாகத் தாங்கிக் கொண்டிருக்கும் வித்துக்களுக்கும் பொருந்திய உறவினை ஒப்பிட்டுக் கொள்க; கொள்வீராயின், பின்வரும் கருத்துக்கள் புலனாம். வள்ளுவர் நெஞ்சம் நிலத்திட்ட விதை ஒக்கும்; அவர் நெஞ்சம் தந்த அறிவு அவ் விதை தோற்றிய மரம் ஒக்கும்; அவ்வறிவு வெளிப்படுத்திய குறள்கள் மரம் தாங்கிய விதைகள் ஒக்கும். மேலும் எண்ணுவோம். வித்திய விதை செத்தொழிந்ததென யாரும் துணியார். ஒழிந்தால் மரம் தோன்றுமாறு எங்ஙன்? தோன்றிய மரத்திலும் அது தாங்கும் பல்வித்துக்களிலும் இட்ட முதல்விதை உடனிலையாய் வாழ்கின்றது. மேலெழுந்த எல்லாவித்தும் ஒரு தாய் வித்தின் உரத்தைக் கொண்டு அதன் பண்பைத் தந்து நிற்கின்றன. அதுபோல, வெளிப்பட்ட அனைத்துக் குறள்களும் வள்ளுவர் நெஞ்சுரம் பெற்று அந்நெஞ்சின் நினைவைப் புலப்படுத்தி நிற்கின்றன. இவ்வுவமையை மேலும் தொடர்ந்து நினைவோம். ஒருவித்து தாய்மரமாய்த் தோன்றி அளவிறந்த வித்துக்களை ஈனும். அங்ஙனம் பிறந்த ஒவ்வொரு வித்துக்கும் தன்னிலிருந்து எண்ணிலா வித்துக்களைப் பிறப்பிக்கும் ஆற்றலுண்டு, பாருங்கள்! இதனால் நாம் கொள்ளக் கிடப்பது என்ன? குறள் ஒவ்வொன்றும் தனி வித்தாகி 'நவில்தொறும் நூல் நயம் போலும்' (783) என்றாங்கு. எத்துணையோ எண்ணங்களைத் தன்னில் தோற்றுவிக்கும் ஆற்றல் சான்றது என்பதாம்.

மணற்கிளைக்க நீருறும்; மைந்தர்கள் வாய்வைத்து
உணச்சுரக்கும் தாய்முலை யொண்பால்;– பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு
ஆய்தொறும் ஊறும் அறிவு.

என்னும் திருவள்ளுவமாலை 'திருக்குறள் அறிவூற்று' என இயல்பு கூறும் அழகு காண்க. ஆகவே, வள்ளுவர் நெஞ்சு உள்வித்தாம்; அவர் யாத்த பலகுறள் புறப்பல்வித்தாம் என்பது துணிபு.

இனி, குறள்களிடை ஆசிரியன் நெஞ்சங் காண்டல் யாங்ஙனம் எனப் பார்ப்போம். உள்ளக் கருத்தினை வெளிக் காட்டும் வன்மை சொல்லுக்கு ஓரளவுதான் உண்டு. கோவலன் கண்ணகியோடு மதுரை மூதூர் செல்கிறான் என்ற காட்சியை எவ்வளவு தொலை நாடகம் காட்டவியலும்; அவ்வளவே-தான், சில பொழுது அவ்வளவினும் குறைவாகத்தான், சொல் ஒருவன் உள்ளக் கருத்தினைத் தொடக்கூடியது. ஓரளவேனும் உட்கருத்தைப் புறப்படுத்துவது கிடக்க, 'வினைவேறு சொல்வேறு பட்டார் தொடர்பு' (819) 'எனைத் தான்றும் சொல்லினால் தேறற்பாற்றன்று' (325) என்ற குறட்பகுதிகளால், அகத்தை ஒளித்துக் காட்டும் பொய்த்திறமும் சொல்லிற்கு உண்டு காண் எனவே, சொல்லெனப்படுவது யாதெனின், மக்கள் நெஞ்சூர்தி யன்று; கருத்தூர்தி என்பதுவே உண்மை.

சொல்வழி ஆசிரியன் உள்ளம் காணவேண்டின் கற்பார்க்குப் பொய்யில் தூயநெஞ்சும் மயக்கமில் நுண்ணறிவும் வேண்டுவன. வானிலைக் காட்சிக்கு உதவுவது தொலை நோக்கிக் கருவி. அக்கருவியாற் பயனென் கண்ணிழந்தானுக்கு? கண்ணிருந்து பயனென், நினைமின் அறிவில்லாதவனுக்கு? அறிவொடு கண்வைத்துத் தொலைநோக்கிவழி வானிலைகளைக் காணுமாப் போல, கற்பான் மாசில் நெஞ்சும் மயக்கமில் அறிவும் உடையனாய் நூலாசிரியன் சொல்வழி அவன்

உள்ளநிலை காண அவாவேண்டும். சொல்லிடை ஆசான் நெஞ்சக் காட்சி கற்பவன் அறிவுடை மனத்தைப் பொறுத்தது. சொல்வான் கருத்தின் ஒரு கூறே சொல்லெனக் கொள்க; அங்ஙன் கொள்ளாது, அவன் முழுக்கருத்தே சொல் என்பது உடம்பே மனிதன் என்பது போலப் பிழைபட்டது.

நெஞ்சங் காண்டல் என்பதன் பொருள் யாது? சொல்லி யான் கருத்தாழம் உணர்ச்சி நுகர்ச்சிகளையும் சொல்லத் தூண்டிய சூழ்நிலையையும், அவன் எதிர்பார்க்கும் பயனை யும் உயிராகக் காண்பது. இக் காட்சிக்கு அவன் ஆண்ட சொற்களையும் சொன்னடையையும் உடலாகக் கொள்வது. சொல்வழி இத்துணையும் காணவொல்லுமோ என்பீரா யின், இவை மாத்திரமல்ல, சொல்லியான் கல்வி ஒழுக்கம் குடிமை நாகரிகம் வரலாறு என்றின்ன வாழ்க்கை நிலைகளை யும் காண வொல்லும் என்று திருக்குறள் அறிவூட்டும்

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும். (826)

உறாஅ தவர்போற் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும் (1096)

என்ற குறள்களால், இன்சொல்வழிப் பகைநெஞ்சினையும், வன்சொல்வழிக் கேள்நெஞ்சினையும், அஃதாவது வெளிப் பட்ட பொய்ச்சொல் வழியும் நெஞ்சுண்மை காணலாம் என்பது வள்ளுவர் காட்டும் வாழ்வியலாகும். இக்காட்சி முன்னர் அறுதியிட்டாங்கு, கற்பவர், கேட்பவர் தூய நெஞ்சி னைச் சார்ந்தது எனத் தெளிக. தன்னைமட்டும் தனித்துச் சுட்டி நிற்கவல்ல தனிப்பொருள் மக்களுலகில் உண்டா? ஒரே பொருள், இடம், காலம் ஆளுக்கொப்பப் பல எண்ணங் களை எழுப்ப வல்லதாகும். ஒருவற்குப் பல்லுக் குத்தும் நினைவை, ஒருவற்குக் காது குடையும் நினைவை, ஒருவற்கு நகவழுக்கு எடுக்கும் நினைவை, ஒருவற்குப் பொட்டு வைக்

கும் நினைவை, ஒருவற்கே பல்வேறு காலங்களில் இவ்வனைத்து நினைவுகளை, ஒரு சிறு துரும்பு பிறப்பிக்கக் காண்கிறோம். ஆதலின் சொல் அடிப்படையாக அதனை அப்பொழுது சொல்லியான் எவ்வுள்ளத்தான் எனக் காணவேண்டும். காணும் இயல்பு தமிழர்க்குப் புதுமையன்று; தொன்னெறியாகும். இந்நெறியை நம் தமிழுக்கு இன்று முதனூலாக வாழும் தொல்காப்பியம் 'நோக்கு' என மொழியும்.

> மாத்திரை முதலா அடிநிலை காறும்
> நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே. (தொல். 1361)

புலவனது உள்ளம் ஆராய்வார்க்கும் மக்களின் உள்ளம் காண்பார்க்கும் இந்நூற்பா பொய்யாக் கைவிளக்காகும். நோக்கு என்பது மேலோடான பார்வையன்று; அழுந்திக் காணும் அகக்காட்சி. 'பிறன்மனை நோக்காத பேராண்மை' (148) என்ற குறட்பகுதியில் இப் பொருளுண்மை அறிக. 'நோக்காத' என்னும் சொல்லாட்சியால் பிறன் மனைவியை மனத்துக் கொளல் பிழை என்பதூஉம், இயல்பாய கண் பார்வை பிழையன்று என்பதூஉம் பெறப்படும். ஒருவன் வாய் திறந்து சொல்லாமுன்னரே, அவன் முகம் கண்களைக் கூர்ந்து பார்த்து உள்ள பொருள்களை அறிய வேண்டும். இக் குறிப்பறிவை 'கூறாமை நோக்கி' (701) என்று குறள் ஆளும். 'கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்' (1100) என்ற வள்ளுவர் காதற்குறளை, 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்னும் கம்பர் காட்சிப் பாவொடு நீங்கள் பன்முறை கேட்டிருப்பீர்கள். உள்ளம் தாக்கும் உரனுடைப் பார்வையைத்தான் இப் பெரும்புலவர்கள் 'நோக்கு' எனச் சுட்டுப. 'நோக்கு அரிய நோக்கே' என்னும் மணிவாசகத்தின் கண் இந்நுணுக்கப் பொருள்களை ஓர்க. ஆதலின், நோக்கு என்பது கண்பார்வையல்லா மனப்பார்வை எனப் பொருள் படும்.

சொல்லிடை நோக்குதல் எங்ஙனம்? தொல்காப்பிய வுரையின் பேராசிரியர் எழுநூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந் தவர். இது பற்றி ஒரு குறிப்பு எழுதியிருக்கிறார். 'கேட்டார் மறித்து நோக்கிப் பயன் கொள்ளுங்கருவி' என்பது அவ்வுரை யாளர் வரைந்த குறிப்பு. இவ்வாறு ஏன் சொன்னான்? இப் படி ஏன் சொல்லிற்றிலன்? இவ்வண்ணம் மறித்துத் தானே வினவிக் காண்பதால், சொல்லியான் நெஞ்சம் வெளிப்படும் என்பது இக்குறிப்பின் விளக்கம். ஆதலின் வெளிப்பட்ட சொல்லை ஆசிரியன்போற் கருதி, வினவிவினவித் தன் நினை வுக் கருவி கொண்டு அவன் நினைவுப்பொருளைக் கல்லியெ டுக்க வேண்டும். இனிவரும் அனைத்துச் சொற்பொழிவிலும் 'நோக்கு' என்னும் இவ்வரிய தனியுண்மை பரந்து விளங்கக் காண்பீர்கள்.

பேரன்பர்களே! பரப்பும் வனப்பும் குளுமையும் செறிந்த இக் காவணச் சோலைக்கு இன்று காலை ஒன்பது மணிக்கு வந்தேன். அவ்வமயம் பல பெருமக்களைக் கண்டேன்; உவந் தேன். நம் இந்தியப் பிற பகுதித் தமிழர்களும், இலங்கை மலேயா தென்னாப்பிரிக்கா முதலாம் பிறநாட்டுத் தமிழர் களும், பெண்களும் ஆண்களுமாய் குழூஉக் குழூஉவாய்த் திருக்குறட் சொற்பொழிவு கேட்க அவாவி வந்துளர். ஒரு மொழித்தாய் வயிற்றுப் பிறந்த நம் மக்கட்கெல்லாம், தாய்த் தமிழகத்து வாழும் பேறுடைய நாம் குடும்ப நல்வரவு கூறு கின்றோம். தமிழ் மதிக்கும் பிறமொழிப் பெருமக்களும் பலராய் இவண் குழுமியுளர். அவ்வன்பர்க்கெல்லாம் நாம் பெருமைசான்ற நல்வரவு கூறுகின்றோம். ஞாலத்துப் பரந்த வாழ் தமிழரனைவரையும் ஒருங்கு கூட்டி வைக்கும் மொழி யாற்றல் நிரம்பிய வள்ளுவர்க்கு நம் பெருஞ் செய்ந்நன்றி உரியதாகுக. செயலுக்கு வரும் வாழ்க்கை அறங்கூறி, எவ்வகை மக்களையும் உய்விக்கவும் உயர்விக்கவும் உளங்கொண்ட வள்ளுவரை நாம் நன்றி மறப்போமா? நன்றி மறக்க வில்லை;

ஆனால் அதனைக் காட்ட வேண்டிய நன்முறையை மறந்தோம். அவரைப் பெருமைப்படுத்தினோம்; அஃது என்ஞான்றும் செயற்பாலது; ஆனால் அங்ஙன் பெருமைப் படுத்தக் கையாண்ட முறைக்கண் சிறுமை செய்தோம். அவர் திருக்குறளைப் பன்மாணும் வரப்பண்ணிக் கற்றோம். நல்ல தோர் தொடக்கம் செய்தோம். அதனாற் பயனென்? குறள்கள் நாள்வாழ்வில் ஒட்டுமா? உலகியலிற் பொருந்துமா? இவற்றுப்படி நடந்தால் இழப்பல்லது ஊதியம் உண்டோ? என ஒவ்வாதன உளறி ஓராண்டுக் குழந்தை வாய்ச்சோறு போலச் செய்யமறுத்தொழிந்தோம்.

வாய்மைக் கழகத்துச் சார்பில் நிகழும் இக்கூட்டம் இன்று முதல் பன்னிரண்டு நாட்கள் தொடர்ந்து நடைபெறும். வெயில் சுடவும் வேர்க்கவும் நான்கு மணிக்குத் தொடங்கி பசி சுடவும் ஆள் சுருங்கவும் பத்து மணிக்கு முடியாது முடியும் கூட்டங்க்ளையும், கேட்போர்தம் உள்ள நிலையும் உடல் நிலையும் கணித்தறியாப் போக்குடைய கூட்டங்களையும் கேட்டுக் கேட்டு நன்மக்கள் உவர்ப்புற்று வருகின்றனர். நம் கழகம் அப் போக்குவழிச் செல்லாது காண்மின்! மென்குளிர் காற்று கரு முதிர்ந்த தாய்போல் உலவிவர, உயிர்கள் இன்புறும் சாயுங்காலம் ஆறு மணிக்குத் துவங்கி, கூடியது ஒரு மணியளவு நிகழ்ந்து, ஏழு மணிக்குள் நம் கூட்டம் நிறை வெய்தும் என அறிவிக்க விரும்புவல். திறந்த நெஞ்சும் மலர்ந்த முகமும் உடையராய், உண்டற்கண் உரையாடல் போல நாம் இனிது பழகுவோமாக. உங்கள் பற்றும் என் ஆர்வமும், உங்கள் அமைதியும் என் பணிவும், உங்கள் மலர்ச்சி யும் என் உவகையும், நம் தூய எண்ணமும் எண்ணத் திட்பமுமெல்லாம் என் செய வேண்டும்? ஞாலம் புகழும் திருக்குறளுக்கு நம் வாழ்க்கையை இலக்கியமாக்க வேண்டும். நம் நாள் வாழ்வு ஒழுக்கக்குறள் வாழ்வாதல் வேண்டும்.

என் உள்ளம் பொங்கும் ஓர் உவகையுணர்ச்சியை அடக்கிவையாது இன்னே சொல்ல விழைவல். கேள்விப்

பெருமக்களாகிய நீங்கள் கூட்டங்குறித்த காலத்திற்குக் கால் மணிப் பொழுது முன்பாகவே வந்துவிட்டீர்கள். வந்த ஒழுங் கொடு பின்னே நின்று கொண்டிராது எல்லோரும் அமர்ந்து இருக்கிறீர்கள். வாய்மைக் கழகம் காட்டும் தொடக்கப் பண்பிது. 'சித்திரப் பாவையின் அத்தக அடங்கி' என்ற ஒழுங்கு இந்நாள் மாணாக்கரிடத்து அவ்வளவு காணப்படுமாறில்லை. பூசற்கும், யாரும் யாதும் பேசற்கும் உரிய கட்சிக் கூட்டங் களில் இவ்வொழுங்கு காணப்படாமை வியப்பன்று. திருக் குறள் சொற்பொழிவுக் கேள்வியராகிய நீங்கள் ஒழுங்கமைதி காட்டுவது வழிகாட்டும் இயல்பன்றோ! நிற்க.

'வள்ளுவர் நெஞ்சம்' எனப் பெயரிய இம்முதற் பொருள், குறளனைத்திற்கும் நீங்கா உயிர்நிலையாகவும் நில்லாக் குருதி யோட்டமாகவும் அமைவது. ஆதலின் அவர் நெஞ்சம் காண் டற்கு முன், காட்சிக்குத்தக்க அறிவுவிளக்கம் நாம் பெறல் வேண்டும். அவ்விளக்கமாக, முன் சொல்லிய நோக்கு என்னும் அரிய பண்புக்கு நாள்வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் சில காட்டுக்கள் தந்து செல்வேன். இச்செலவால் வரும் பிறி தொரு பயன் யாதெனின், தமிழ்மக்கள் வழக்கும் தமிழ்ச் செய்யுள் வழக்கும் பூவும் கனியும் போன்ற உறவுடையன என் பது தெளியப்படும். கால்மணிப் பொழுது கொள்ளும் இந் நோக்கு விளக்கத்தை, மிகையெனா, புறம்பெனாக் கருதா தீர்கள். செல்லச் செல்ல இவ்விளக்கப் பயனை உணர்வீர்கள்.

'நோக்கு' எனப்படும் நெஞ்சுகாண் முறையை முதற்கண் வழக்குலகிற் பார்ப்போம். ஒரு வணிகன் சேலையொன்றிற்கு ரூபாய் பதினைந்தென விலை பகர்கிறான். அவன் விலையைக் குறைக்க முடியாது என அழுத்திக் கூறும் நிலைகொண்டே மிகக்குறைந்த விலைக்குத் தருவான் என்று நாம் கண்டு கொள்கிறோம். இவ்வளவு உயர்த்திச் சொன்னாற்றான் மக்கள் அரைவிலையளவுக்கேனும் வந்து நிற்பர் என்ற அவன் உள்ளக்கிடை புலனாகின்றது. ஒரு சிறு பையன் மணிப்

பொறியொன்று கொண்டுவந்து, "நீர் தரும் விலையைத் தருக" என்று விரைகிறான். நாம் கேளாமுன்னே "என் அப்பன் மணிப் பொறியிது; அவர் இறந்துவிட்டார்; நோய்வாய்ப் பட்டுக் கிடக்கும் தாய் மருந்துச் செலவிற்கெனவிற்று வர என்னை விடுத்தாள்" என்று மன்றாடிக் கழறினாலும், குறைந்த விலை கண்டு மயங்கி உயர்ந்த விலை மணிப்பொறியை நன் மக்கள் வாங்கத் துணியார். அச்சிறான் சொல்லைப் பொருளாகக் கொள்ளார். சொல்வழியாக அவன் களவு நெஞ்சைக் காண்ப. "உங்களைப் பார்க்க வந்தேன்" என்று ஒருவன் சொன்னால், "என்னைப் பார்த்தாயிற்றே போ" எனச் சொல்வார் உளரோ? "நான் செத்தாபோனேன் பார்க்க வருதற்கு?" எனக் கேட்பார் உளரோ? "வந்த காரியம் என்னப்பா?" என்றுதான் இயல்பாகக் கேட்ப.

பொருளஞ்சல்வழிப் பணம் போக்கினால், விடுசெலவு வருமே என்று கருதிக் கடிதத்துள் பொதிந்து ரூபாய் பத்து அனுப்புகிறான் ஒருவன். உரியானைத் தெருவில் நாலுபேர் சூழக் கண்டபோது 'என் முடங்கல் வந்திருக்குமே' என்று வினவுகிறான். அதன் குறிப்பென்ன? 'ரூபாய் பத்து வந்ததா?' என்பது. காணீர்! 'முடங்கலை இன்னாரிடம் கொடுத்து விட்டேன்' என்று மற்றவன் விடையிறுக்கிறான். 'பணத்தை நீ எழுதியானிடம் சேர்ப்பித்துவிட்டேன்' என்பதன்றோ குறிப்பு. இவ்வாறு முழுக்க முழுக்க நாள் வழக்கில் சொற்களை - மொழியை சொற்பொருள் காட்டற்கின்றி, நெஞ்சம் காட்டும் ஒரு குறிப்புக் கருவியாகவே மக்கள் பயன் கொள்ப. பலபட விளம்புவானேன்? வந்த விருந்ினரை 'வாருங்கள்' என நாம் அழைப்பதும், 'வருகின்றோம்' என அவர் சொல்லிச் செல்வதுமெல்லாம், பண்பு காட்டும் கிளவிகள் அல்லவா? இனைய சொற்களுக்கு நெஞ்சப் பொருள் அல்லது நோக்குப் பொருள் தவிரச் சொற்பொருள் அப்பொழுது உண்டா?

நாள் வழக்கிற்கு நல்ல எடுத்துக்காட்டாவது அரசியல். ஒரு நாட்டு அரசுத் தலைவன் விடுத்த அறிக்கையைப் பிற நாட்டுத் தலைவர்கள் கூர்ந்து நோக்குப. அறிக்கைச் சொற்களின் வாயிலாய் அதனை விடுத்தான் நெஞ்சங்காணமுயல்ப. "போரை நிறுத்தி, அமைதி செய்து கொள்வோம்" என்ற அறிக்கை காணின், எதிர் நாட்டுத் தலைவன் என்ன கருதுகிறான்? அமைதிக் காலத்துப் படையாற்றலைப் பன்மடங்கு பெருக்கிக்கொள்வான் இட்ட சூழ்ச்சி என உட்பொருள் காண்கிறான். "எங் கொள்கை உலகவமைதியே" என்னுமோர் புறத்துரை கண்டால் உள்ளே படைமிகுத்து உலகினை ஏய்ப்பான் செய்த வெளியீடு என்று கருத்துரை பகர்ப. "ஞாலத் தமைதி நாட்டவே நில நீர் வானப் படைகளைத் திரட்டு கிறோம்" என்ற புறத்தீடு காண்பவர், நினைவன யா? அச்சுறுத்திப் பிறரை அடிமை செய் நோக்கம் எனப் புகுந்து உள்ளங் கண்டாற்போல் நெஞ்சப் பொருளை விரிப்ப. "எம் நாட்டினைத் தாக்காவாறு காப்பான், முன்னறிவொடு எம் எல்லைக்குள் படை வைத்துள்ளோம்" என்றால், நம்பிக்கை பிறக்கிறதா? இல்லை, இல்லை. படைமுனை காட்டி இணைக்கப் பார்ப்பர் என்று பறைசாற்றுப. இந்நிகரனவாய் அரசியலுலகில் நாம் காணும் செய்திகள் எண் கடந்தன.

அரசியல் தலைவர்கள் இகல் நோக்கத்தானும் பகல் நோக்கத்தானும் மக்கள் நலங் கொளாது, பொய் மானம் பற்றி வேண்டாது கிளறிப் பார்க்கும் அளவிறந்த ஆகாமதியானும், அறிக்கை விடுத்தவர் தம் உண்மை நெஞ்சம் காணப் பல்காலும் பிழைத்து விடுகின்றனர்; என்றாலும், அறிக்கைச் சொற்கிடை முறைப்படி அறிக்கையாளன் நெஞ்சம் காண வேண்டும் இன்றியமையாமையை யாரும் உடன்படுவர். அறிக்கைச் சொற்பொருளே பொருளெனத் துணியார். இது காறும் நோக்கு என்னும் அரியவற்றுள் அரிய கருவியை வழக்குச் செயல்களில் வைத்து அறிந்தோம். இனி, இலக்கிய உல கில் ஓர் எடுத்துக்காட்டுத் தந்து நிறுத்துவேன்.

சங்க நெடும் பாட்டாய அகநானூற்றிலிருந்து ஒரு சிறு தொடர். சோலையிடை நிற்கும் தலைவி, மருங்கில் நிற்கும் தன் தோழியை விளித்து, 'இவன் மகனே தோழி' என்று சுட்டு கிறாள். இம்மூன்றே தலைவி சொல்லிய சொற்கள். இவன், மகனே, தோழி என்னும் இக்கிளவிகள் அருஞ் சொற்களா? தமிழ் தாயாகப் பிறந்த எவரும், குழவி நிலைதொட்டு இச் சொற்களின் பொருளை யறிவர். ஆனால் ஒன்று நினைமின்! அன்னோர் தெரிந்தவை சொற்பொருள்; நிகண்டுப் பொருள்; அவ்வளவுதான். சொன்ன தலைவியின் நெஞ்சப் பொரு ளல்ல; நோக்குப் பொருளல்ல. ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் உண்டு. அது சொற்பொருள் எனப்படும். இதனை 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்னும் தொல் காப்பியம். இச்சொற் பொருள்களைப் பழைய நிகண்டுகளி லும், புதிய் அகர நூல்களிலும் கற்கலாம். சொற்பொருட் கல்வி யார்க்கும் எளிது. சொல்லுக்குப் பொருள் அனைவர்க் கும் பெரும்பாலும் எல்லாக் காலத்திற்கும் இடத்திற்கும் ஒன் றாகவே அமையும். இனி, ஒவ்வொரு சொல்லுக்கும் இயல் பான சொற்பொருளோடு உடன் கலக்கும் நெஞ்சப்பொரு ளும் ஒன்று உண்டு. இப்பொருள் சொல்லிடை என்று கலக் கும்? ஒருவன் பேசுங் காலத்து, எழுதுங்காலத்து, அஃதாவது சொல்லை ஆட்சிப்படுத்துங்காலை, அவன் எடுத்தாளும் சொல்லுள் அன்னவன் நெஞ்ச நினைவு கலந்துவிடுகிறது. இந் நெஞ்சப்பொருள் ஆள், இடம், காலந்தோறும் தனித்தனி வீற்று வீற்றுப்படும். சொற்பொருள் உடல் போல்வது; நெஞ் சப்பொருளே உயிரனையது. இவ்வுயிர்ப் பொருள் காண் டற்கு அரியதாயினும் நோக்கெனும் கருவிகொண்டு, காணற்கு உரியது. உள்ளப் பொருளைக் கண்டுகொள்ளவல்ல, பண் பட்ட அறிவுக் கூர்மையின்றிச் சொற்பொருளை மட்டும் கற் றொழியும் பரந்த மொழிப்பயிற்சியால் பயன் என்னோ?

"இவன் மகனே தோழி என்றாள் ஒரு குமரித்தலைவி. இங்ஙன் சொல்ல வாயெழுப்பிய சூழ் நிலையாது? தன் சொல்

லால் தலைவி எதிர்பார்க்கும் பயன் என்ன? பொருந்திய கற்பனைப்படுத்துக" என மாணாக்கர்க்குத் தேர்வில் ஒரு வினா வருவதாகக் கொள்வோம். எத்துணைப் பேர் எத்துணை வகையாகவோ எழுதி முடிப்பர். அகநானூற்றுப் பாடலை (48) யாத்த தங்கால் முடக்கொற்றனார் தீட்டிய சூழ்நிலையைக் கேண்மின்!

"என் மகள் சோற்றை மறந்தாள்; பாலும் பருகாள்; வருத்தமுற்று மேனியும் பசந்தாள்; தோழி, நீ அறிவாயன்றோ காரணம்" என்று தலைவியின் தாய் வினவுகிறாள். வினவக் கேட்ட தோழி, "அவள் துன்பத்துக் காரணம் யானும் விளங்க அறியேன். ஆனால் நடந்த ஒரு நிகழ்ச்சியைக்கேள். நேற்று நின்மகள் எம்மொடு பூக்கொய்யச் சென்றாள். புலிநிறம் பாய்ந்த வேங்கைமலரைப் புலி புலி என்று கூவிப் பறிப்பது நம் வழக்கங் காணாய். அவ்வழக்கப்படி, தலைவியும் நாங்களும் புலி புலியெனா விளையாடிப்போது உதிர்த்தோம். எங்கள் பொய்ப் புலி யாரவாரத்தைக் கேட்டானோ இல்லையோ ஓரிளைஞன், மார்பிற் செங்கழுநீர் மாலையணிந்தவன்; தலையில் வெட்சிப் பூத்தொடுத்தவன்; நெஞ்சு கமழச்சாந்து பூசியவன்; என் செய்தான்? கடுகியோடி வந்து, தொடுத்த அம்போடு, புலி எங்கே, அது போகிய இடம் எங்கே, சொல்லீர் சொல்லீர் என்று துடிதுடித்தான். அவன் பதற்றத்தைக் கண்டு முறுவலித்து, யாங்கள் ஒருத்தி புறமே ஒருத்திக்குத் திரையாக, நாணி மறைந்து ஒடுங்கினோம். எம் புன்முறுவலைக் கண்டான் அச் செம்மல். 'நறுங்கூந்தல் மடவீர், பழம் ஒக்கும் நும் செவ்வாயும் பொய்க்குப் பிறப்பிட மாயிற்றோ?' என்று ஈகை செய்தான். வேறென் செய்வான்! தேரேறிக் குதிரையை மிடுக்கி வந்தவழிச் செல்பவன், திரும்பித் திரும்பி, நின்மகள் கண்ணினையே பன்முறை நோக்கி நோக்கிச் சென்றான். அவற்றை விளையாட்டு முடிந்து வீடு மீளுஞ் சாயுங்காலத்து நின்மகள் என்செய்தாளோ எனின், அவன் மறைந்த திசையைப்

பார்த்த வண்ணமாய், 'இவன் மகனே தோழி' என ஒரு முக் கூட்டுத் தொடர் மாத்திரம் உரைத்தாள். "இதுதான் நெருநல் நிகழ்ந்த நடப்பு" எனத் தோழி தாய்க்கு விடையிறுத்தாள். அவையப் புலவர் தங்கால் முடக்கொற்றனார் கற்பித்த சூழ் நிலை' இது.

'இவன் மகனே' என்ற இரு சொற்களில் தலைவியின் நெஞ்ச வோட்டங்கள் நன்கு புலனாகின்றன. புலியென் ஒலி கேளாமுன் காக்கத் துடித்த அருளும், விற்பூட்டி வந்து நின்ற ஆண்மையும், பொய்க்கு அஞ்சும் ஒழுக்கமும், கண்துளைத்து எய்த காதற் குறிப்புமெல்லாம் தலைவியின் நெஞ்சை உருக்கி விட்டன. உருகிய குமரித் தலைவி தன்காதல் வேட்கையை இவ்விரு சொற்களில் வைத்துக் குறிப்பிடுகிறாள். 'மகன் எனத்தக்க ஆண்டகை இவன் ஒருவனே' என்று வாழ்க்கை நினைகிறாள். 'மகனே' என்ற கிளவி, இவன் ஆடவருட் சிறந் தான் என்பதனோடு, என் கணவனும் ஆனான் என வரிந்து கொண்ட அவள் துணிபையும் உடன் காட்டி நிற்கிறது, "நினக்கிவன் மகனாய்த் தோன்றியதூம்" என வரூஉம் மணி மேகலையடியால், மகனென் சொற்குக் கணவன் என்ற பொருள் பண்டுண்மையை அறிகிறோம். ஆதலின், 'இவன் மகனே' என்ற கன்னி வாய்த்தொடருக்கு, 'இவன் என் கண வனே' எனவும் ஈண்டுப் பொருள்படும்.

இவ் வகப்பாடல் 26 அடிகொண்ட நெடும் பாட்டாயி னும், 'இவன் மகனே தோழி' என்னும் ஒரு சிறு தொடரின் சூழ்நிலையைத்தான் ஆசிரியன் விரித்துரைக்கின்றான், யான் முன் வரையறுத்தாங்கு. தலைவி தன் கூற்றால் எதிர்பார்க்கும் பயனென்ன? இதனை இப்பாட்டு காட்டிற்றிலது. ஒரு பருவ நங்கை, சட்டெனமலர்ந்த தன் காதலைச் சொற்களால் விளம்புதல் அழகிய நாகரிகமன்று என்ற கருத்தால் உய்த் துணரவைத்துப் பாடலை ஒரு நாடகம்போல் ஆசிரியன் நிறுத்தி விடுகிறான். 'இவன் மகனே தோழி' என்ற தன்

துணிபை, இல்லம் ஏகும் அமையத்து, 'தோழி' என விளித்துக் கூறுவானேன்? அவன் குடிகொண்ட தன் மனப்பாங்கினை, வாய்ப்பு வரின் தாய்க்குத் தோழி வெளிப்படுத்த வேண்டும் என்பதன்றோ தலைவி எண்ணம்!

நண்பர்களே! 26 அடிப்பாடல் முச்சொல்லின் சூழ் நிலையை வெளிப்படையாகவும், நெஞ்சக்கருத்தை உய்த் துணர்வாகவும் தந்து நிற்கிறது. திருவள்ளுவரோ எனின், ஈரடி வெண்பா யாத்தவர், ஈரடி என்பதிலும் ஏழுசீராதலின் ஒன்றே முக்காலடி என்பதே பொருந்தும். இச்சிறு பாவில் வைத்துச் சூழ்நிலையும் நெஞ்சப்பொலிவும் ஓரிடத்தேனும் காட்டவியலுமா? முன்னிருக்கும் ஓரன்பர் வினாவுகிறார், எல்லாம் வெளிப்படுமாறு பலவடிப் பாடலாக வள்ளுவர் நூல் ஏன் செய்தாரிலர் என்று, நல்வினா; யாவரும் தெளியத் தகும் ஒரு வினா, வினவிய அன்பர்க்கு நம் நன்றி. கற்பவர் சிந்தனைக்கு இடம் வைத்தார் என்பது சுருங்கிய விடை. "சொல் லாற் பரந்தபாவால் என்பயன்" என மறித்து வினவுவர் மதுரைத் தமிழ் நாகனார். எல்லாம் ஆசிரியனே சொல்லிவிடுவ தாயின் விளக்கம் நிரம்பப் பெறலாம். விளக்கம் வேண்டு மென்பதை மறுப்பவர் இலர். அதற்கும் ஓரெல்லையுண்டு. 'சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்' என்பது தமிழர் கண்டநெறி. பொருளையே மறைக்கும் விளக்கம் ஏற்றுக்கு? வினை செய்வ தற்கும் பொருள்களைக் காண்டற்கும் துணைதரும் விளக் கொளியே, நம் நாள் வாழ்க்கையில் விரும்பப்படுவது. கண் கூசும் திருவிழாப் பேரொலியாலும், விளம்பர நிறவொளி யாலும் பயன் பெரிது உளதாமோ? பெருவிளக்கம் அறிவு முனையை ஒருவந்தம் மழுக்குவது. அறிவிற் பதிந்தாலும் நினைவை இயக்காது. கற்பார்க்கு நீடிய ஆர்வமும் உழைப் பின்பமும், அறிவொளியும், எண்ணத் திட்பமும் உண்டாகா. செயலெழுச்சி அறவே வருதலின்றி.

மக்கள் நினைவு வளர்ச்சிக்கு ஏற்ற கருத்துணவை ஆசி ரியன் படைத்தருளுவான். வளர்ச்சியையே தருதல் யார்க்கு

ஒல்லும்? பிறந்த குழந்தை வளர்ப்புக்கு உரிய உணவுப்பொரு ளையே தாய் ஆய்ந்துதர மாட்டுவள். 'வளர்ந்த கண், கால், கை முதலிய உறுப்புக்களையே அப்படி அப்படி முழுமையா கத் தந்துவிட்டாலென்ன?' என்று மடம்பட்டு வினவுவோர் உளரோ, முழுவுறுப்பாக வேண்டின், மரக்கண், மரக்கால், மரக்கையாகத்தான் கிடைக்கும் காணீர்! ஆசிரியன்பால் அறி வுணவு எதிர்பார்க்கலாம். அவ்வளவு தான். உண்பதும், செரிப்பதும், செரித்தற்கு உழைப்பதும் வாழ வேண்டுவார் வினை. ஆதலின், வள்ளுவப் பெருந்தகை பொருட் பார்வை மாத்திரைக்கு ஒளி தந்தார், தம் சுருங்கிய குறளில். எண்ண வளர்ச்சிக்கு நிரம்பிய இடம் வைத்தார். இவ்வமைப் பாலன்றோ, திருக்குறள் பிறந்த நாள் தொட்டு ஈராயிரம் ஆண்டுகளாக எல்லார்தம் உள்ள நிறைவிற்கு ஊற்றிடனாய் விளங்குகிறது. இதனால் "வையத்தார் உள்ளுவ எல்லாம் அளந்தார் ஓர்ந்து" எனவும், "உள்ளுநர் உள்ளும் பொரு ளெல்லாம் உண்டு என்ப" எனவும் வருஉம் புகழுரை தகுதி சான்றது என அறிக.

இதுகாறும் பேசிய கருத்துக்களை ஈண்டு ஒருமுறை நினைவுகொள்வோம். வள்ளுவர் நெஞ்சுக்கும் குறள்களுக் கும் அமைந்த இயைபு, வித்திய வித்துக்கும் விளைந்த வித்துக் களுக்கும் உரிய தொடர்பாகும் என்று சொன்னேன். 'நோக்கு' என்னும் நெஞ்சு காண் முறையை வழக்காலும் செய்யுளா லும் விளக்கினேன். 'வெள்ளைக் குறட்பா விரி' என்னும் உரைக்கு ஒப்பத் திருக்குறள் உள்ளம் விரியும் எண்ணப் பெருக் கஞ் செய்வது என்று நிறுத்தினேன். இதுவரை செய்த விரி வெல்லாம் எதன் பொருட்டு? இனி யான் சொல்ல நிற்கும் எஞ்சிய பொருள் என்ன? வள்ளுவர் நெஞ்சம். அந்நெஞ்சம் ஒவ்வொரு குறளிலும் உண்டு. அத் தனிக் குறள் நெஞ்சத்தை இன்று விளக்கப் புகுந்தேனல்லேன். திருக்குறள் முழுதும், அனைத்துக் குறள்களிலும், வீறுகொண்டு ஓடிப்பரந்து கலந்து

நிற்கும் வள்ளுவர் தனிப்பொது நெஞ்சமே, இந்நாள் யான் விளக்க எண்ணிய பொருள். குறளனைத்தினும் ஒரே நினை வோட்டம் காணக் கிடத்தலின், 'பொதுநெஞ்சம்' என்றும், அந்நினைவு வள்ளுவத்தோன்றல் ஒருவர் மாட்டே பிறந்த தாலின் 'தனி நெஞ்சம்' என்றும் பண்படை கொடுத்தேன்.

வள்ளுவர் தனிப் பொது நெஞ்சம் யாது? செயல், செயல், செயல் சொல்வது செயலுக்கு வரவேண்டும், செயலுக்கு வரு மாறு சொல்லவேண்டும் என்னும் ஓர் அடிப்படைக் கருத்தி னைத் தம் நெஞ்சில் நீள இருத்திக் கொண்டே குறள் எழுதி யவர் வள்ளுவர். செயல் அடிப்படையை யாண்டும் மறவா உளத்தினர் அப் பெருமகன். ஆதலால் செயலே வள்ளுவம் எனச் செய்க. பொதுவாகக் கல்வித் தேர்வுகளின் வினாத்தாள் களை ஆராய்வோம் இத்தாள்கள் தேர்வுக்குச் செல்லும் இந் நாள் மாணாக்கர் கற்ற அறிவையொட்டியோ, அன்னவர் எழுதும் ஆற்றலைப் பொறுத்தோ குறிக்கப்படுவனவல்ல. இவற்றைக் குறிப்பார் நோக்கம் வினாத்தாள்களைக் கண்ணு றும் பல்கலைக் கழகத்தார், கல்வியாளர், பிறநாட்டார் எல் லோரும் வகுப்புக்கு ஏற்ப (மாணாக்கர் தரத்துக்கு ஏற்ப அன்றி) நன்கு வினவியுளர் என்று மதிக்குமாறு செய்வதே யாம். நோக்கம் உயர்வுதான். ஆயினும் அதன் விளைவென்ன? மாணாக்கர்க்கு அறிவீட்டும் ஆர்வம் இல்லை. செவ்விய செயல் இல்லை. குறிப்பவர் நோக்கத்திற்கும் விடையெழுதும் மாணவர் செயற்கும் ஏற்றத்தாழ்வு மரக்கிளைபோல் அகலச் செல்வதால், கல்வீச் செம்மை பெரிதும் குறைபடக் காண் கின்றோம். கல்விப் பேரால் கோடி கோடிப் பொருள் கடலிற் கொட்டியதுபோல் பயனறக் காண்கின்றோம்; குழுக்கூடி, மதிப்பெண் கூட்டி, மாணாக்கரைத் தேர்வித்துப் பொய் மதிப்புக் காக்கக் காண்கின்றோம். ஆதலின், செயலுக்கு அணித்துவாரா உயர்ந்த நோக்கத்தாற் பயனென்? வயிற்றி யல்பு அறியாமல் அரசினர் செய்யும் உணவுச் சட்டம்போல,

*யாரொருவர் வாழ்விலும் கொள்ளவியலா இமயமலையன்ன உயரிய அறங்களால் வரும் நலம் யாது?*

*மக்கள் தத்தம் நிலைக்கேற்ப, நாள்வாழ்க்கைக் கண்ணே நடைமுறையிற் கடைப்பிடிக்க வேண்டும் என்றதோர் அடிப் படையில், வாழ்க்கை நூல் செய்தவர் வள்ளுவர். செயல் நினைவொடு பிறந்தது திருக்குறளாதலின், முரணிலா வரை யறையைக் காண்கின்றோம். ஒட்டும் வாழ்வு நெறிகளைக் காண்கின்றோம். எல்லோரும் ஓர் நிலையினர் என்று வைத் துப் பொதுவறங்களைச் சொல்லியொழியாது, பல்வேறு வாழ்நிலையுடையாரும் பற்றியொழுகுமாறு, தனியறங்கள், அஃதாவது நிலைக்கேற்ற பல்லறங்கள் கரையும் மாட்சியைக் காண்கின்றோம். வாழ்வாங்கு வாழ்தல் வேண்டும் என்னும் துணிவிற்று திருக்குறளாதலின், அறத்துப்பால் பொருட் பால்களோடு காமத்துப் பாலையும் கூட்டியுரைக்கக் காண் கின்றோம். இவ்வுலகில் வாழ நூல் செய்தார் வள்ளுவராத லின், திருக்குறளகத்து, மக்கட் பேறும் விருந்தோம்பலும் சுற்றந் தழாலும் ஈகையும் நல்குரவும் இரவும் மருந்தும் என்றாங்கு, உலகியல் அதிகாரங்களைக் காண்கின்றோம். அப்பொழுதை உலக நிலையொட்டி, ஒழுகவல்லாதார் பல படக் கற்றவராக இருப்பினும், அறிவிலாதவரே என்று துணிந்து அறையுமேல், திருக்குறளை வாழ்க்கை நூல், செயல் நூல், உலக நூல் என் றழைப்பதுவே பொருத்தம் காணீர். 'உலகத்தோடு ஒட்ட ஒழு கல்' (140) 'உலகத்தொடு அவ்வது உறைவது அறிவு' (426) 'உலகத்து இயற்கை அறிந்து செயல்' (637) 'வையத்துள் வாழ் வாங்கு வாழ்பவன்' (50) என உலகவறம் வலியுறுத்திய தமிழ்ப் பேராசானை 'உலகியல் கூறிப் பொருளிது என்ற வள்ளுவன்' எனக் கல்லாடம் விதந்தோதுவது ஒன்றாயுலகத்துப் பொன் றாது நிற்கும் உயர்ந்த புகழன்றோ!*

*நாம் வாழும் உலகம் பொருளுலகம் என்ப. காப்பு அணிந்த பொற்கையும், தோடு தொங்கும் வயிரச் செவியும்,*

மோதிரம் இட்ட பச்சை விரலும் உடைய ஓரன்பர், மனத்துக் கண் அவாவற்றவராய் இருப்பினும் அவரைத் துறவோராக மதிக்க உலகம் பிற்படும். துறவு என்பது உலகக் கண்ணாளர்க் குப் பொருட்டுறவையே குறிக்கும். 'இயல்பாகும் நோன்பிற்கு ஒன்றின்மை' (344) என்பது குறள். ஆதலின், அடியவர்களை 'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்' என்றும், வீடும் ஒரு பெருஞ் செல்வமாகப் புனையப்படுதல் நோக்கி, 'வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' என்றும் சேக்கிழார் வரை யறுப்பர். செல்வமே உரைகல்லாக மக்களை மக்கள் அளப் பது உலகக் காட்சி. இந்நிலையில் பொருளை ஒரு பொருட் படுத்திச் சொல்லா நூல் உலகிற்கு ஒட்டுங்கொல்? மக்களை யெல்லாம் தம்குறள் கற்பான் ஈர்க்கும் இவ்வுலக நிலையை, பொருள் மனப்பாங்கினை உணர்ந்தவர் வள்ளுவர், வீதி விளக்கு ஆயிரமும் ஒளிர ஓரமுத்தம் போதுமாப் போலே, மாந்தரனைவோரும் திருக்குறள் கற்கவேண்டும் என்றற்கு, 'பொருள் செயல்வகை' என்னும் ஓரதிகாரம் போதாதா? பொருளுக்கு யாவரினும் மிக்க ஏற்றம் கூறுபவர் இவ்வா சிரியர் என்பதற்கு,

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு (247)

என்ற ஒரு குறளே கரி. காணாத் துணிபைக் கண்ட துணிபால் நிறுவுவது இக்குறள். ஒவ்வோர் உலகத்திற்கும் இன்றியமை யாப் பொருள் ஒன்றுண்டு. அப் பொருளின்றேல் அந்த உல கத்து வாழ்வு இன்று. இவ்வுலகத்தை ஆள்வது செல்வப் பொருள். இவ்வுடைமையில்லார் இவ்வுலக வாழ்க்கை இழந் தார் என்பது ஒருதலை. இது நாம் கண்ட துணிபு. இத்துணிபு காட்டுவதென்? அருட்செல்வாக்கு உடைய உலகம் ஒன்றுண்டு. அருளிலதேல் அவ்வுலக நலமில்லை என்பது. இங்ஙன் அரு ளுக்கு உவமையாகும் தனிப் பேற்றோடு,

அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு. (757)

என்றபடி, அவ்வுலகக் குழந்தையை இவ்வுலகத்தே போற்றி வளர்க்கும் செவிலிப் பேறும் பெற்றது பொருள் என்றறிக. எனவே, அருள் வளர்ச்சி வறியார்க்கு ஈயும் பொருட் செலவைப் பொறுத்தது அன்றோ? திருக்குறள் பொருளுக்கு அளித்த மதிப்பு இற்றாகும்.

வள்ளுவர் செயல்நெஞ்சத்தினர் என்றேன். அதனைத் திருக்குறளின் தொடக்கமே பறைசாற்றும். 'அகரமுதல எழுத் தெல்லாம்' என்னும் முதற்குறளால் ஓர் இறையுண்மை சுட்டு கிறார். உண்மை சுட்டியவர், அதனை அடுத்து இறைவன் பண்புகளைவிரிப்பார் எனவன்றோ நாம் எதிர்பார்ப்போம். அங்ஙன் அவர் செய்திற்றிலர்.

கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். (2)

என்பது இறையுண்மைக்கு அடுத்த குறள். நூலின் இரண் டாங் குறளாக இதனை வைப்பானேன்? திருக்குறளைக் கற்கத் தொடங்கும்போதே, 'வாலறிவனைத் தொழுக' என்று வழிப் படுத்துவர். தூய அறிவுத் தொழுகையின்றித் தங்குறள் முழுதும் கற்றலும் அறிவறிந்த மக்கட் பிறப்பிற்குப் பயனின்று என்னும் துணிபினராய். 'கற்றதனால் ஆயபயன் என்கொல்' என வினவி விடுப்பர். இதனால் குறள் கற்பான் விழைவாரை ஒரு நோக்கப் படுத்தும் வள்ளுவர் செயல்நோக்கம் முதற்கண் ணேயே தெளிவாதல் காண்க. மணக்குடவர் முதலாய உரை யாசிரியர்கள் குறள் வைப்பு முறையில் தம்முள் பல்வேறு பட்டிருப்பினும், இக்குறளைப் பொறுத்தவரையில் அகர முத லுக்கு அடுத்த இரண்டாம் வைப்பாகவே கொள்ப. ஆதலால் வைப்பு நிலைமேல் எழுந்த என் கருத்து ஒக்கும் எனத் துணிவல்.

இங்ஙனம், நூலின் முகத்தேயே கற்பாரைச் செயற்படுத்திச் செயலுளத்தோடு அனைத்துப் பகுதிகளையும் எழுதிச் செல்லும் ஆசிரியர், தந்நூல் முழுதும் கற்ற பின்னும் ஒழுக்கம் கைவரப் பெறாதானை இகழ்வாராகி பொருட்பால் இறுதிக் கண் 'கயமை' என்று ஓரதிகாரமே வைத்தமைந்தார். வேறென் செயவல்லார்? 'கயமை' என்னும் இழிதலைப்புத் தாங்கி ஒரு பத்துப்பாட்டு திருக்குறளில் உளவாமேல், என் நினைக்கின்றீர்? அவ்விருப்பு வள்ளுவர் நெஞ்சக் கொதிப்பின் வெளியீடு காண்மின்! 'மக்களே போல்வர் கயவர்' (1071), 'தேவர் அனையர் கயவர்' (1073), 'அறைபறை யன்னர் கயவர்' (1076), 'ஈர்ங்கை விதிரார் கயவர்' (1077) என வரூஉம் கயமைத் தலைப்புக் குறள்களை இந்நாள் எழுத்தாளர் சொல்லாளர் நகைச் சுவைக்குப் பயன்கொள்ப, சொல்வார் சிரித்து விளக்குப, கேட் பார் வெடிசிரிப்புமிக்குக் கைதட்டுப. பிறந்த தமி ழகத்தேயே குறள் ஆட்சிப்படும் முறைக்கேடு இது. நம்மனோரை முன் னிலைப்படுத்திச் சொல்ல நாணிக் கண்ணோடி நாகரிகமா கப் படர்க்கைமாட்டு வைத்து, நம் கயநிலை வெளிப்படுத்து கிறார். எனினும், உட்கோள், சொல்வார் கேட்பார் நெஞ்சு களைத் தைக்குமேல், நகை பிறக்குமா? சுவையூறுமா? கை தட்டுமா? தீயவொரு மகன் திருந்த வேண்டும் என்று இடித் துரைக்குங் காலை, அவன் சிரித்தாலும், அவன் பக்கத்தார் சிரித்தாலும் என்னாவோம்? ஆறாச்சினம் உறுவோம் அல் லது இன்ன மடவனைத்திருத்த முன்வந் தோமே என்று நம் முள் வருத்தமும் நாணமும் கொள்வோம். இவ்வுணர்ச்சி யோடு நினைக.

வள்ளுவத் தோன்றல் நம்முன் அமர்ந்து இக்குறள்களை விரிப்பதாகக் கருதுமின். "அன்பு ஊறி மனங்கசிந்து மக்கள் நலமே நினைந்து செயல் தோய ஆயிரத்தெழுபது குறள்கள் வரைந்தேன். இவ்வனைத்தையும் கற்றபின்னும், அக்கற்றான் வாழ்வில் யாதொரு பண்புத் திருத்தமும் கண்டிலேன். 'பல

நல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது' (823) என்னும் வேண்டாக் கருத்திற்கு விழைந்த இலக்கியமாயினன். எங்ஙன் எங்ஙன் ஒழுகத்தகும் என்று அறங்கூறும் என் குறள்களைக் கசடறக் கற்று, யாது பற்றிக் கொண்டான், அங்ஙன் அங்ஙன் ஒழுகப்படாது என்று எடுத்துக் கொண்டனன். இவன் மகனல்லன்; விலங்கல்லன்; மரமுமல்லன்; கயமை என்னும் புத்தம்புதிய பிறப்பினன். இப் பிறப்புக்கெனத் தனியுடம்பு இல்லை. பிறரை வஞ்சிக்கும் கோள் கொண்டு பிறக்கும் போதே, "மக்களுடம்பு போர்த்து வந்த போலியன்" எனவாங்கு வள்ளுவர் உரையாற்றுங்காலை நெஞ்சு கொதிக்கக் காண்போம். சொல் துடிக்கக் காண்போம். அப்போது நமக்குச் சிரிப்பா தோன்றும்? ஓர்மின்!

> நீங்கின் தெறூஉம்; குறுகுங்கால் தண்ணென்னும்;
> தீயாண்டுப் பெற்றாள் இவள். (1104)

முதலின்பம் துய்த்த தலைவன் தன்னுட் சொல்லிக் கொள்வது இது. நெருங்கினாற் சுடும்; நீங்கினால் யாதும் செய்யாது. இது யாருங் காணும் புறத்தீயின் இயல்பு. யான் கண்ட இவள் காமத்தீயோ நெருங்குதொறும் குளிரும்; நீங்குதொறும் சுடும். இப் புதிய அகத்தீ இவளொருத்திக்கு மட்டும் யாண்டுப் பிறந்தது? எனத் தலைவன் வியக்கின்றான். தலைவன் உரை கேட்டு நாம் நகைத்தால், நம் நகை கண்டு அவனுக்கும் நகைப்பு வரும். தலைவியே குலுங்க நகுவாள். யாரும் நகுதற்குரிய இக்குறள்கள் போல்வனவல்ல, கயமைத் தலைப்புக் குறள்கள். அவை நாணற்குரியன.

அறம் பொருட் பால்களின் எல்லையதிகாரமாகிய கயமைத் தலைப்பு, ஆசிரியர் மனக்கொதிப்பு எல்லைக்கோர் அறிகுறி. கற்பதும் அறிவதுமெல்லாம் வாழ்வில் நடப்பதற்கு என்பது அப்பெருமகன் துணிவு. செல்வப் பயன் பிறர்க்கு வழங்குவது. உண்டு உடுத்துத் துய்ப்பது. உடையான் தன்

வாழ்நாளில் கொடாது நுகராது கழியினும், அவனுடை மைக்கு அழிவு இல்லை. அவனுக்குப் பின்றை அச்செல்வம் பயன்படும். ஏனெனின் செல்வம் உடையானொடு மாய்வ தில்லை. கல்வியறிவுகளோ எனின், உடையான் ஒழியுங்கால் தாமும் ஒழிந்து போவன. கற்ற அறிவுடையான் தன்னுடை மைகளை வாழுங்காலத்தே பயன்படுத்தியாக வேண்டும். இது பொருளுடைமைக்கும் கல்வியறிவுடைமைக்கும் உள்ள ஒரு பெரும் வேறுபாடு. வேறுவகையாகச் சொல்லின், மனிதன் புறவுடைமைக்கும் அகவுடைமைக்கும் இடைப்பட்ட வேற் றுமை என்க. இதனால் நாம் அறியக்கிடப்பது பிறிதொன்றும் உண்டு. செல்வத்தையுடையான் துய்த்தலினும் கொடுத்தல் சிறந்தது. கல்வியறிவுடையான் உரைத்தலினும் ஒழுகல் சிறந்தது. "சொல்லுதல் யார்க்கும் எளிய; அறியவாம் சொல்லிய வண்ணஞ் செயல்" (664) என்பது, செயல்வேண்டும் திருக்குறள். பிறிதொரு வகையான நினையின் செல்வ முடையார்க்கு மதிப்பு வழங்கவழங்க வரும். கற்ற அறிஞர்க்கு மதிப்பு அக் கல்வியறிவுகளைத் தம் வாழ்விற்கொள்ளக் கொள்ள வரும்.

என் வன்புறையெல்லாம் என்ன? வாழ நூல் செய்தார் வள்ளுவர். வாழ்வோ யார்க்கும் செயலின்றியமையாது. 'அறிவு டையார் எல்லாம் உடையார்' (430) என்று அறுதியிடும் திரு வள்ளுவரே, 'அரம் போலுங் கூர்மையரேனும் மரம்போல் பவர்' (997), 'அஃகி அகன்ற அறிவு என்னாம்' (175), 'அறி வினான் ஆகுவது உண்டோ' (315) என்றவாறு நாணிட்டு அந்தரத்துத் தொங்கும்படி அறிவுச் செருக்குப் படிந்தாரை ஏதும் வைத்துப் பாராது இகழ்வரேல், ஒழுக்கச் செயலற்ற அறிவின் இழிவும், அறிவுடைச் செயலின் உயர்வும் நன்கு புலனாகின்றன. ஓதுவது, உணர்வது, பிறர்க்கு உரைப்பது மெல்லாம் தன்னடக்கத்துக்குத் துணையாதல் வேண்டும். இம் மூன்றும் பெறாநிலையில் அடங்காதானை, பாவம், பேதை எனச் சொல்லி வாளா விட்டுவிடுகிறார்! கல்வி,

உணர்வு, சொல்வன்மையெல்லாம் நன்னர் வாய்க்கப் பெற்றும் அடக்கமிலானை, கேண்மின், 'பேதையிற் பேதை' என்று சுடச்சுட விரிக்கிறார். கல்லாப் பேதைக்கு, கற்றால் திருந்தும் வாய்ப்பு உண்டு. கற்றறி பேதையோ, யார் சொல்லினும் அவரைப் பேதையாக மயங்கி இறுமாந்து தன் மடமையைப் பெருக்கிக்கொள்வன். பேதைமையழிதற்குத் துணை செய்வனவற்றை, இம்மடவோன் அதன் ஆக்கத்திற்குத் துணைக் கொள்வன். ஆதலால் பெற்றிருந்தும் பேதைப்பட்டானை ஓரினத்துக்கே தலைமை கொடுப்பதுபோல, 'பேதையிற் பேதை' என்ற சொன்னடையில் வைத்து,

> ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
> பேதையிற் பேதையார் இல். (834)

எனப் பழிப்பர்.

மரம் பழுத்தற்கன்றோ தோட்டக்காரன் உழைக்கிறான். அவன் பாட்டையெல்லாம் ஏற்ற மரத்தின் காய் வெம்பி விழுந்தால், நன்று, மரம் விறகாயிற்று என்று உவப்பானோ? நினைந்த பயன் வாராமையின், எத்துணைக் கவலுறுவன்! பேராசிரியர்தம் பெருமைக்கோ கருத்துக்களை வெளியிடுப. இல்லை; இல்லை. செய்கைக்கு அன்றோ! அக்கருத்துக்களைக் கற்றார் தம் வாழ்விற் செயற்படுத்தாது வாயளவிற் சொற்படுத்தினால், அப்பெருமக்கள் வெறாரோ? பொருளாக்குவார்க்கும் துய்ப்பார்க்கும் இடைநின்று சரக்குப் பரப்பும் தரகர் போலக் கல்வியாளர் இடைநிற்ப. அவர் என் செய்வார்? பேராசிரியர் எழுத்தினை ஊரார்க்குப் பரப்புவார். தரகர் கழிவூதியம் பெறுவதொப்பக் கற்றார் என்னும் மதிப்பீட்ட விழைப. அறிவுலகில் இத் தரகுமுறையை வாழ்நூல் ஆசிரியர் பொறுப்பதில்லை. தங்கருத்துப் பரப்பாளர்களை வேண்டார். கற்றபடி நிற்கும் செயலாளரையே மதிப்ப. கற்றான் தன்வாய் வழிப் பறைசாற்றுவதிலும், செய்தான் தன் பயன்வழிப் பரப்புவதையே ஏற்ப.

வள்ளுவர் தனிப் பொதுநெஞ்சம் செயல், செயல், செயலேயாகும். இச்செயல் வள்ளுவத்தை மாங்குடி மருதனார் மறந்து, 'ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாகி' என்ற பாராட்டளவோடு அமைந்தார். செய்தற்கு உரியது என்றும், யார்க்கும் எளியது என்றும் முடித்தாரிலர். புலவர் சிறுகருந்தும்பியார் 'உள்ளுதல், உள்ளியுரைத்தல் உரைத்ததனைத் தெள்ளுதலன்றே செயற்பால' எனத் தெளிதல் அளவோடு நின்றுவிடக் காண்கின்றோம். இவ்வளவுப் பாராட்டுரை, ஓதி யுணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தானடங்காவிடில் பேதை என்ற குறளின் இடிப்புரைக்குப் பொருந்துமா? உரைத்துத் தெளிதலோடு, ஒழுகுதலன்றோ செயற்பாலது என்று தும்பியார் முடித்திருந்தால், வள்ளுவர் உள்ளங் கண்டவராவர்மன். 'வந்திக்க சென்னி வாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ் சிந்திக்க கேட்கசெவி' எனச் செயல் காட்டாது நிறுத்தினார் உக்கிரப் பெருவழுதியார். மருதனார், தும்பியார், வழுதியார் உள்ளிட்ட திருவள்ளுவமாலை பாடிய புலவரனைவோரும் வள்ளுவர் செயல் நெஞ்சினை மறந்தொழிந்தனர். ஏனைப் புலவோரும் மருந்திற்குங்கூட நினைவுபடுத்தினாரிலர். தனக்குவமையில்லாக் குறள் பிறந்தும், தமிழ்நாடு வளநாடாகவில்லை. குறள் பிறவாமுன் இருந்தமைந்த சீரும் சிறப்பினையுங்கூட, குறள் பிறந்தபின், அப்பெருநூல் பிறந்த காரணத்தால் அன்று, அதன் செயலடிப்படையை அறமறந்த காரணத்தால், தமிழகம் மக்களொடும் மொழியொடும் இழந்தொழிந்தது. இஃதோர் வியப்பிருந்தவாறென்!

ஆர்வ நண்பர்களே! வள்ளுவர் நூலமைப்புப் பொருட்பேச்சும் கயமைத்தலைப்பும் எல்லாம் செயல் நோக்கின என்று அறிந்தோம். பின்னும் அறிவோம். சென்னை மக்களவைப் பொருளமைச்சர், தெலுங்குத் தாய்மொழியினர் 1951-52ஆம் அண்டு வரவுசெலவுத் திட்டத்தை ஆங்கில மொழியில் வெளியிடுங்காலும், "பிணியின்மை செல்வம் விளைவு

இன்பம் ஏமம் அணியென்ப நாட்டிற்கு இவ்வைந்து" (739) என்ற குறளை எடுத்தாளக் கண்டு இந்நாள் இன்புறுகிறோம். இந்திய மக்களவைப் பொருளமைச்சர், 1952-53 வரவுசெலவுத் திட்டத்தை வெளியிட்டு வறுமைக்கு வழியுரைக்குங்காலை, "இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின் நிலம் என்னும் நல்லாள் நகும்" (1040) என்ற முயற்சிக் குறளை, குறள் மொழியிலேயே விளம்பக் கண்டு, இந்தியவுரிமை பெற்ற ஞான்றினும் கழிபேருவகை எய்துகிறோம். இங்ஙனம், திருக்குறள் நாமறியவும் ஞாலமறியவும் தன்னாற்றலை உணர்த்தி வருகிறது. காலத்தால் ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டுத் தொன்மை சான்ற திருக்குறள், பொருளால் இற்றை அரசியலுக்கும் எடுத்துக்காட்டாவதை உன்னும்போது நல்ல குறளுலகம் நம்முன் தோன்றக் காண்கின்றோம்.

குறள் பிறந்த நாள் தொட்டுத் தமிழும் தமிழ் மக்களும் தமிழ் மன்னரும் அதற்கு அளித்த மதிப்பிடம் யாதுகொல்? வழிவந்த தமிழ்ப் புலவரனைவரும் தத்தம் நூல்களில் குறள் மேற்கொண்டனர். திருக்குறள் இங்ஙன் தமிழாட்சி செய்யக் காணுதுமேயன்றி, தனக்குரிய தமிழ்க் குடியாட்சியோ, நாட்டாட்சியோ செய்யக் கண்டிலம். தமிழரும் தமிழரசர்களும் வாழ்விலும் திருக்குறளை மறந்தனர்; பொருட்பால் விரிவு பட எழுதிய அந்நூலை அரசியலிலோ முற்றும் மறந்தனர். வாழ்வும் அழிந்தது; தமிழ் வேந்தும் அழிந்தது. அழியாதென் செயும்! இன்றுங்கூட அரசுத் துறைப்பட்ட தமிழர் பல்லோர் குறளறியாமை சாலவுடையர். குறள் கல்லா முன்னைத் தமிழரின் எச்சம் இவர் என்றற்கு வேறு சான்றும் வேண்டுங்கொல்!

தமிழின் உயர்வுக்குத் தமிழர் அடிப்படை. 'வெள்ளத் தனைய மலர் நீட்டம்' (595) என்பதுபோலத் தமிழன் வளர்ச்சியளவே தமிழ் வளர்ச்சி. தமிழ் வல்லது; வாழ்வது; உயர்வது என்பதற்குத் திருக்குறளை நாம் சான்று காட்டுமாறு போல், தமிழன் வாய்மையன்; முயற்சியன்; அறிவினன்; அன்பன்;

மறவன் என்றற்கு வள்ளுவத்தோன்றலை ஞாலம் சான்று காட்டுமாறு நாம் குறள்வாழ்வு வாழவேண்டும். செயற்படுத் தாத் கல்விக் குப்பையால், மணங்குவிந்து உடலொடுங்கும் மடிமையால், வசைச் சொற்களை அள்ளித் தூற்றும் இகலால், குறள் வாழ்வு ஒருஞான்றும் யார்மட்டும் அமையாது காணீர்!

புகழ்சான்ற திருக்குறளைப் போற்றுகிறோம். பன் மாணும் பறை சாற்றுகிறோம். அவ்வளவோடு அமைதல் ஆகாது; 'புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும்' (538) என் பது ஒரு தனி வள்ளுவம். 'செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமை யும் இல்' என்பது குறள் காட்டும் அச்ச முடிபு. ஆதலின் யார்க்கும் செயல் வேண்டும் என்பதுதான் வள்ளுவர் நெஞ்சம். இச் செயல்நெஞ்சமே என் திருக்குறட் சொற்பொழிவுகளின் உயிர் நிலை. விளக்கமெல்லாம் இதன் சூழ்நிலை. குறள் கற்பேன்; நிற்பேன்; நிற்கக் கற்பேன்; குறள் வாழ்வு வாழ்வேன்; வள்ளுவர் ஆணை என்று எண்ணுமின்! எண்ணத் திட்பங் கொள்ளுமின்! இச் செயல் எண்ணத்தோடு சொற் பொழிவனைத்தையும் கேண்மின்! எனக் கைகூப்பி வேண்டுதும்.

# 21

# திருக்குறளும் பொதுநோக்கமும்

1951

புலவர் சரவண ஆறுமுக முதலியார்

திருவள்ளுவர் தம் நூலில் அனைவரும் ஏற்றுக்கொள் ளக் கூடிய முறையில் வாழ்க்கை நெறி வகுத்த வகை என்ன? அதை மக்கள் மேற்கொள்வதனால் அடையக்கூடிய பய னென்ன? இயற்கையின் ஒப்பற்ற நெறியையும், மக்கட் படைப் பின் நோக்கத்தையும் உள்ளவாறே உய்த்துணர வல்ல நுண் மாண் நுழைபுலமுடைய ஆசிரியர் திருவள்ளுவர், மக்கள் அனைவரும் ஒரே முகமாக ஏற்றுக்கொண்டு ஒழுகக்கூடிய இயற்கை முறையை அமைத்துள்ளது ஒரு வியப்பன்று.

திருக்குறள் முப்பால் நூலாகப் பகுத்துக்கொள்ளப் படினும் அதை ஒரே பாலாகக் கொண்டு நூல் முழுவதையுமே ஒரு தொடர்ச்சியாக அறிந்து அது கூறும் ஒழுக்க முறையை

வகைப்படுத்துவதே சாலப் பொருத்தமுடையதாம். மக்களது வாழ்க்கை முழுவதுமே அதில் பொதிந்து வைக்கப்பட்டிருக் கின்றதென்று நாம் அறிதல் வேண்டும். ஒருவனும் ஒருத்தியும் அன்பால் ஒன்றி வாழ்ந்து இல்லறம் நடத்தி, மக்கட் பேற்றை அடைந்து அன்பைப் பரப்பி, இம்மைப் பயனாம் புகழை யெய்தி, மறுமைக்கு வேண்டிய புண்ணியத்தையும் தேடி முடி வில் உலகப்பற்றை யொழித்து, மனத்துக்கண் மாசிலராகி அவ் ஒழுக்கத்தில் நின்று மெய்யுணர்வு பெற்று, முடிவில் இன்பமெய்துவதே வாழ்க்கையின் குறிக்கோளாம் என்று அவர் வகுத்துள்ள பெருமை மிக மிகப் போற்றற் குரியதாம்.

இம் முறைக்கு முதற்படியாக இருப்பது இல்வாழ்க்கை. ஆணும் பெண்ணும் சேர்ந்து நடத்தும் வாழ்வே வாழ்வென் பதும், ஆண் பெண்ணாகிய இரு பகுதிகளும் உடலும் உயிரும் போன்று ஒன்றுபட்டு நடத்தும் வாழ்வே மக்கட்டன்மைக்குப் பொருத்தமுடையதாகும் என்பதும் யாவரும் அறிந்த தொன்றே. இறைவன்பிறப்பில் ஆண் பெண் வடிவ அமைப்பு வகுத்து, அவ்விரண்டையும் ஒருமைப்படுத்த இயற்கையில் இன்ப உணர்வு அளித்துள்ள ஒப்பற்ற நுட்பத்தை ஓர்ந்து ஒருவனும் ஒருத்தியும் அன்பால் ஒன்றி வாழ்வது இறைவழி நிற்பதாகும். இயற்கைப் படைப்பில் ஆண், பெண், மரம், செடி, கொடிகள், விலங்குகள், நீர்வாழ்வன முதலிய பல திறப்பட்ட வைகளும், இரங்கத்தக்க நிலையிலுள்ள முதியோர், கூன், குருடர், முடவர் முதலிய உறுப்புக் குறைந்தோரும், பிற வகை களும் இன்றேல் இயற்கை உணர்வாகிய அன்பும் அதன் முடிந்த நிலையாகிய அருளும் உலகத்து எவ்வாறு உள்ளபடி அறியப் படும்?

உலகத்துப் படைக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் தம் முள் ஒற்றுமை யுடையனவாய் ஒன்றையொன்று அவாவி, ஒரு பெரிய வலையில் குறுக்கு நெடுக்காக ஓடும் நூல்களைப் போன்று பின்னப்பட்டிருக்கின்றது. உலகமே ஒரு பெரிய

உயர்வலை. உலகத்தில் இவை ஒன்றற்கொன்று உறுதுணை யாகி, ஒன்று மற்றொன்றன்பால் அன்பைச் செலுத்திப் பய னைச் செய்து, தானும் பயனையடைந்து இன்புறுகின்றது. உயர்ந்த நிலையில் உள்ள மக்கள் தம்மைச் சுற்றிலும் உள்ள பிற பொருள்களைப் போற்றி, அவற்றோடு உறவு கொண்டு இன்பத்தை நுகர்கின்றனர். மக்களுக்கு இயற்கை முறையில் பயனைச் செய்யும் இயற்கைப் பொருள்கள் அளவற்றன இருக்கின்றன அன்றோ? மரம் செடி கொடிகளினாலும் மக்கள் அடையும் பயனும் இன்பமும் எடுத்துக்கூறும் தரத் தனவோ? தங்குவதற்குக் குளிர்ந்த நிழலையும், உண்ண அமு தினுமினிய கனிகளையும், கண்ணையும் கருத்தையும் கவரத் தக்க வனப்பு வாய்ந்த மலர்களையும், பிற நலங்களையும் கொடுக்கும் மரம் செடி கொடிகளுக்கு மக்கள் செய்யும் கைம் மாறென்ன? எனினும் தம்மாற் கூடியவரை மக்களும் அவற் றைப் போற்றிப் பாதுகாத்து அவற்றிற்கும் துன்பம் வராத வாறு காப்பது கடனன்றோ? இதைப்போன்றே விலங்குகளும், பறப்பன, ஊர்வன, நீர் வாழ்வன முதலிய பிறவுயிர்களும் மக்களுக்கும், அவற்றிற்கு மக்களும் மிகவும் கடமைப்பட் டிருக்கின்றனரன்றோ? மனதை உருக்கி, உணர்ச்சியைக் கிளர்ச்சி செய்து, மனவெழுச்சியையும் ஊக்கத்தையும் கொடுக்கும் பறவைகளின் இன்னிசையைக் கேட்டு இன்பு றாத மக்களும் உலகத்துளரோ? ம்க்களுள் ஒரு அன்புநெறி ஊடுருவிச் சென்றுகொண்டிருக்கிறது. எனவே இயற்கை முறையின் நுட்பத்தை ஓர்ந்து பார்க்கும்போது இவ்வியற்கை முறையில் மிகவும் உயர்ந்த நிலையில் நிற்கக்கூடிய மக்கள், தம்மினும் தாழ்ந்த நிலையில் உள்ளவற்றோடும் தம்மோடு ஒத்த மக்களின் தொகுதிகளோடும் ஊடாடிக் கலந்து அன்பு நெறியைப் பரவச் செய்வதே இயற்கையின் ஒப்பற்ற முறையும் குறிக்கோளும் என்பதை நாம் உய்த்துணரலாமன்றோ?

இறைவன் தன் காரியங்கள் அனைத்தையும் இயற்கை வாயிலாகவே நிகழ்த்துகின்றான். ஆதலின் உலகமும் அவ்

வாறே இயங்குகின்றது. ஆண் பெண்ணை விட்டுத் தனித்து நிற்பதும், பெண் ஆணைவிட்டுத் தனித்து நிற்பதும், மக்கள் பிறவுயிர்களோடு கலப்பின்றித் தம் நலத்துக்காகவே அவை இருக்கின்றன என்று கருதுவதும், பிற மக்கள் தொகுதிகளை விட்டுத் தனித்து நிற்பதும் பிறவும் துன்ப இருளிற் கிடக்கும் உயிர்களின் துன்பத்தை நீக்கா; அதனால் இறைவன் நோக்கமும் நிறைவேறுவதில்லை.

உயிர்கள் உடலோடு கூடி வாழ்வு பெற்றபின் அறிவு விளக்கம் பெற்றுப் பிறவிக் கடல் கடந்து இன்பக்கரை யேற வேண்டும். அதற்குக் கருவியாகவுள்ள உடல் வாழ்வைப் பெறப் பெண்ணும் ஆணும் கூடிவாழா தொழிவரேல் உயிர்கள் நிலை என்னாம்? ஆகவே பெண்ணும் ஆணும் கூடி வாழலே இறைவழி நிற்றலென்றும், தனக்குச் சுற்றுச்சார் பாயுள்ள பிறவுயிர்களையும் போற்றிக்கொள்ளலே இயற்கை முறையென்றும், அவற்றின் வாயிலாகவே நாம் அருள் பழுத்த துறவுள்ளத்தையும் இறைவனது அருட்பெருக்கையும் அடையலாமென்றும், திருவள்ளுவர் உய்த்துணர வைத்திருக்கிறார். பெண்ணைப் பாகத்தில் ஒருவன் வைத்தான் என்றும், பங்கயத் திருந்த பொன்னை ஆகத்தில் ஒருவன் வைத்தான் என்றும், அந்தணன் நாவில் வைத்தான் என்றும் இறைவனது திருக் கோலங்களைப்பற்றிக் கூறப்படுகின்ற நுட்பந்தான் என்ன? "யாவரும் மடந்தைமாரோடு இல்லறத் தொழுகும் தன்மை மேவரப் பணித்தான்" என்னும் பெரியார் கூற்றுகளும் எற்றுக் கெழுந்தன? 'சத்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலகமெல்லா' மன்றோ? இவ்வுண்மைகளை எல்லாம் கருதியன்றோ திருவள்ளுவரும் இல்வாழ்க்கையை அனைத்துக்கும் அடிப்படையாக அமைக்கின்றார். அமைத்து, அன்பு நெறியை அதன் நிலைக்களமாக வைத்துள்ளார். திருவள்ளுவர் கூறும் இல்வாழ்க்கையின் மாட்சியை இனிப் பார்ப்போம்:

முதற் பிரிவில், திருக்குறள் எழுந்த காலம் பொது நோக்க முறையைப் புகட்டுவதற்கு மிகவும் உதவி புரிந்ததென்றும்,

அக்காலத்து மக்கள் உயர்ந்தபொது நோக்க முடையவர்களா யிருந்தன ரென்றும், அக்கால நிலையை ஒட்டியே திருவள்ளு வரும் ஒழுக்க முறை வகுப்பதற்கும் முன்வந்தன ரென்றும் சுருக்கமாகக் கண்டோம். அடுத்து எவ்வாறு இல்வாழ்க்கை, மக்கட் பொது (சமுதாய) வாழ்க்கை, சமய வாழ்க்கையாகிய வாழ்க்கையின் பல முறைகளை ஆசிரியர் விதந்தோதுகிறா ரென்றும், அம்முறைகள் அனை வரும் ஒப்புக்கொள்ளக் கூடி யனவாயிருக்கின்றனவா வென்றும் இனி ஆராய்வோம்:

பொது நோக்க அறிவை மக்களுக்குப் புகட்டவந்த உல கத்துச் சான்றோர்கள் பலரும் அவ்வுணர்ச்சி மக்களுக்குச் சொல்லளவில் மட்டுமன்றி, வாழ்க்கையில் செய்து காட்ட லிலும் உண்டாகும்படியான பல வழிகளைத் தங்கள் வாழ்க் கையில் காட்டிச் சென்றுள்ளார்கள். தாயுமான முனிவர், இராமலிங்க அடிகள் போன்ற பெரியோர்களின் வாழ்க்கை வரலாற்றைப் படிப்போர் இவ்வுண்மையைக் கண்டறிவர். உலகம் போற்றும் கவியரசராகிய இரவீந்திரரும், காந்தியடி களும் இவ்வழியிலேயே மக்களைப் பயிலுவித்துத் தங்கள் அன்புச் சமயத்தால் உலக முழுவதையுமே ஒன்றுபடுத்தி வந் துள்ளனர். பிறப்பு வேற்றுமைகளை அறவே ஒழித்து எவ்வுயி ரையும் தம்முயிர் போலக் கருதி, உயர்பதவி, பொருளீட்டம் முதலிய அழிதன் மாலையனவாம் போலிப் பொருள்களில் மனம் வையாது பிறருக்குழைக்கும் பெருமை ஒன்றனையே ஒவ்வொருவரும், தங்கள் உலக வாழ்க்கையின் முடிந்த குறிக் கோளாகக் கொள்ள வேண்டுமென்பதே இப்பெரியார்கள் நமக்குக் காட்டும் வழியாகும். சுருங்கக் கூறின், பிறர் குற்றம் பார்த்தல், புறங் கூறல் முதலியன இன்றி, மனத்துக்கண் மாசி லராகித் தம்மினும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களைத் தம் மால் கூடியவரையில் முன்னேற்ற முயற்சிப்பதே பொது நோக்காளி மேற்கொள்ள வேண்டியதாம். இந்நிலையில் அவர் சிறப்பாய்க் கவனிக்க வேண்டியன சில உள. இத்துறை யில் இறங்குபவர்களுக்கு நேரும் இடையூறுகள் பல இருக்க

லாம். அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது தங்கள் கொள் கையைக் கொண்டு செலுத்தல் வேண்டும். மேலும், வெளிக்கு உண்மையுள்ளவர்போல் நடித்து, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவாரின் போலித் தொண்டிற்கு ஈங்கு இட மில்லை. தாம்செய்யும் தொண்டிற்குக் கைம்மாறாகப் பயன் யாதொன்றையும் எதிர்பார்ப்பாரும் இதற்கு உரியரல்லர். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று கருதிய ஆளுடைய அரசின் தூய தொண்டாற்றும் உள்ளமே வேண்டற்பாலது. எனவே இந்நிலைக்கு வேண்டுவன பிறர்க்கென வாழும் பெற்றி யும் தனக்கென வாழாத் தகைமையும் அவற்றை நடத்திக் காட்டுவதற்குரிய மனத்திட்பமும் இடுக்கணழியாமையுமாம். இவற்றை யெல்லாம் ஊடுருவிச் செல்லும் அன்பு டைமையும் வேண்டும். "அன்பின் வழியது உயிர்நிலை" யாகலின் எல்லா உயிர்களிடத்தும் அன்பில்லையாயின் அவற்றிற்காகத் தாம் செய்யும் செயலுமில்லையாம்.

இன்னும், இதற்கு ஒழுக்கமுடைமையும் வேண்டற் பால தென்று பெரியோர் கருதுவர். பொதுநோக்கமும் ஒழுக்க முடைமையும் பிரிக்க முடியாத ஒரு தொடர்பைப் பெற்றிருக் கின்றன. ஒன்றையொன்று எப்பொழுதும் தழுவியே நிற்கும். சிறந்த ஒழுக்கமுடையோர்கள் சிறந்த பொது நோக்காளி களாகவும், ஏறக்குறைய, சிறந்த பொது நோக்காளிகள் எல் லோரும் உயர்ந்த குணமேன்மையுடையரோகவும் ஒழுக்க முடையோர்களாகவும் இருந்திருப்பதை நாம் அறிவோம். ஒழுக்கமுடைமையே உயிரினும் பெரிதாக ஒவ்வொருவராலும் போற்றப்படுவது. இன்னும் பொது நோக்காளியோ எனின், உயிரைவிடச் சிறந்ததாக ஒழுக்கமுடைமையைக் கொள்ள வேண்டும். தக்கார் தகவிலரென்பது ஒருவருடைய பிறப் பினாலன்றி, ஒழுக்கத்தினாலேயே அறியப்படுமாதலின், நாம் வாழ்க்கையில் செய்யும் செயல்களனைத்தும் நம் ஒழுக்க முடைமையின் வழியாகவே ஆராயப்பட்டு, தகுதி உற்றன, அல்லது தகுதியற்றன என்று மதிக்கப்படும்.

இவற்றையெல்லாம் தம் பட்டறிவினால் நன்குணர்ந்த, நுண்மாணுழைபுலமுடைய திருவள்ளுவரும் தம் பெரு நூலில் அப்பெற்றித்தாய தலைசிறந்த பொது முறையை விதந்தோது கின்றார். மேற்கூறிய பொது விதிகள் சிலவற்றின் இன்றியமை யாமையை மிக நன்றாய் வற்புறுத்தி, ஒழுக்கத்தின் விழுப்பத் தையும் சீர் தூக்கிக் காட்டி, இல்லற துறவங்களில் அன்பு அருள் ஒழுக்கங்களை அமைப்பர். அவற்றை முறையாகப் படிப் போர் அன்பு அருள்கள் இல்லற துறவறங்களில் வளர்ந்து கொண்டே சென்று பழுத்துப் பயன் செய்யும் திறத்தை அறி யாது போகார். அடுத்து, மக்கட் பொதுவிலும் (சமுதாயத் திலும்) அனைவரும் மேற்கொள்ளும் முறையையும், சமயப் பொதுநோக்க முறையையும் ஆசிரியர் நாம் உய்த்துணருமாறு வைத்துள்ள முறையையும், இவ்வளவு சிறந்த மக்கட் பொது வின் அரசனாக விளங்கும் பெரியோனின் தன்மையையும், அவன் அங்கத்தினது பான்மையையும் தாமே யறிவர்.

ஒழுக்கமுடைமையே இந்நூலின் பொதுநோக்குக்கு உயிர் நிலையும் நிலைக்களமுமாதலின், முதற்கண், ஒழுக்க முடைமையாகிய புணையி னுதவியைக் கொண்டே "சாதி குலம், பிறப்பு என்னும் சுழிகளைக் கொண்டுள்ள" பெருங் கடலைக் கடக்கலாம் என்ற ஆசிரியரின் அறிவுரையைப் பொதுவாக நூல் முழுவதினின்றும் சில மேற்கோள்களைக் கொண்டு ஆராய்ந்து, பின் சிறப்பியல்களிற் புகுவோம்.

திருக்குறளை மேலெழுந்த வாரியாய் ஒருமுறை படிப் போரும், திருவள்ளுவர் ஒழுக்கத்தினது விழுப்பத்தையும் அத னின்று வழுவினால் அடையும் இழுக்கையும் மிக, மிக, ஒரு இடம் இரண்டு இடங்களிலன்றி, நூல் முழுவதுமே வற்புறுத் துந் தன்மையைக் காணாது போகார். உயர்குலம் என்று பெய ரளவில் நிற்கும் போலிஉயர்வுக்குத் திருவள்ளுவர் இடந்த ராமல் உண்மையான ஒழுக்கத்தையே போற்றி உலகுக்கு அறிவுறுத்தினார். குலப்பிரிவுகள் அக்காலத்தே ஏற்பட்டு

இருப்பினும், அச்சேற்றிலிறங்கிப் புதைபட்டு மறையாமல் உய்வதற்குரிய ஒழுக்கவழியை நமக்கு ஈந்துள்ளார். ஒழுக்க மேம்பாட்டையும் குண நலத்தையும் தவிர்த்து, மக்களுக்கு உயர்ந்த அணிகலன்கள் வேறு இல்லை. இல்லறத்தில் நின்று அன்பு, ஒப்புரவுகளைச் செய்பவர்களுக்கும், மனத்தின்கண் மாசிலராகி, அகப்புறப் பற்றுகளைக் கைவிட்டு, மெய் யுணர்வு விளைந்து, எவ்வுயிரையும் அருட்கண்கொண்டு பார்க்கும் முதிர்ந்த அருள்நெறியில் நிற்கின்ற துறவிகளுக்கும் பிறருக்கும், ஒழுக்கம் இன்றியமையாதது என்று கூறுகின் றார். அவர் கூறும் ஒழுக்கம், உலகத்தை மயக்கி ஏமாற்றும் பொய்வேடப் போலி ஒழுக்கமன்று. உண்மையாக, ஒழுக்கத் தினது விழுப் பத்தை ஓர்ந்து, அதனைக் கையாண்டு, மன, மொழி, மெய்களாகிய முக்கருவித் தூய்மையோடு ஒழுகு வதையே அவர் விதந்தோதுவர். பரிமேலழகரும், “வழக்கும் தண்டமும், ஒழுக்கம்போல் மக்களுக்கு உறுதி பயத்தற் சிறப் பிலவாக லானும், அவை தாம் நூலானேயன்றி உணர்வு மிகுதியானும் தேய இயற்கையானும் அறியப்படுத்தலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவ ரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப் பட்டது...... எல்லார்க்கும் ஒத்தலின் பெரும் பான்மையாகிய பொது இயல்பு பற்றி இல்லறம் துறவறம் என இருவகை நிலையால் கூறப்பட்டது” என்று தம்முரைப்பாயிரத்திற் கூறுவர். இக்கொள்கையை விளக்க, நூலிலிருந்து சில குறள் களை மேற்கோள் காட்டி அதற்குப்பின் சிறப்பாக ஒழுக்க முடைமை யையும், கூடாவொழுக்கத்தையும் நோக்குவோம்.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டடொழுகி னுண்டு.

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

என்னும் குறள்கள் திருவள்ளுவரின் அடிப்படையான கருத்தைத் தெரிவிப்பன.

"அரம்போலும் கூர்மையரேனும், மரம்போல்வர், மக்கட் பண்பில்லாதவர்" என்னுங் குறளும் நோக்கத்தகுந்தது. இவற்றிலிருந்து, தத்தம் ஒழுக்கத்திற்கு விழுமிய கருத்துகளும் எண்ணங்களும் அவற்றைச் செய்தலுமே கட்டளைக் கல்லாகுமென்பதும், செல்வ மிகுதியினாலும் உயர் பதவியினாலும் ஒருவருக்கு மேன்மை ஏற்படாதென்பதும், அவை யின்மையினால் இழிவு ஏற்படாதென்பதும், 'மக்கட் பண்பில்லோர்' கூரறிவுடையரேனும் மரமே யனையர் என்பதும் விளங்குகின்றன. அவ்வுயர்வும் தாழ்வும் ஒழுக்கமுண்மையினாலும் இன்மையினாலுமே ஏற்படும். ஒழுக்கமுடைமையே உயர் குடியின் பிறப்புரிமையென்றும் அது தான் ஒரு குடியினது உயர்வையும் தாழ்வையுங் காண்பிக்கு மென்றும் அறிகிறோம். "குணநலம் சான்றோர் நலனே, பிறநலம் எந்நலத்துள்ளதூஉ மன்று" என்று பிறிதோரிடத்தில் ஆசிரியர் கூறுவர். ஊண், உடை, உறக்கம், அச்சம், காமம் முதலியன எல்லா உயிர்களுக்கும் பொது என்று கருதப்படினும், தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையராந் தன்மையே நன்மக்கட்குச் சிறப்புடையதாகக் கொள்ளப்படும். "உறுப்பொத்தல் மக்கள் ஒப்பன்று." ஆனால், பெருமை சான்றாண்மைகளில் வழுவாமல் நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகும் பண்புடைமையால் ஒத்தலே நன்மக்களோடு ஒப்பாகும் ஒப்பு

என்று கூறும் குறள்கள் பொன்னே போல் போற்றற் பாலன. எவ் வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அறவோனே அந்தணனென்பதும், நூலை ஆராய்ந்து பார்ப் பான் மறப் பினும் மீட்டும் கற்றுக் கொள்ளலாம்; ஆனால், பிறப் பொழுக்கம் குன்றின் கெடுவான் என்பதும் மிகவும் அழுத்த மாய் ஒழுக்க மேம்பாட்டைத் தெரிவிக்கவில்லையா? விழுமிய ஒழுக்கமுடைமை ஒருவருக்கு விழுப்பத்தைத் தானே கொண்டு வரும் என்று கூறவும் வேண்டுமோ? கதங்காத்துக் கற்றடங் கலாற்றுவான் செவ்வியை, அறக்கடவுள் அவனை யடையும் நெறியின்கட் சென்று பாரா நிற்குமன்றோ? "குண மென்னும் குன்றேறி நின்றார்" பிறரால் போற்றப்படுவர். ஆனால் ஒழுக்கநிலை தவறின் மாந்தர் "தலையினிழிந்த மயிர னையர்" என்று ஆசிரியர் கூறுவது ஒழுக்கமுடைமையின் கண் அவர் வைத்திருக்கும் பற்றையும், அதை மிகவும் அழுத்தமாக வற் புறுத்தும் சிறப்பையும் எடுத்துக் காட்டு கிறது.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த ஒழுக்க முடையோர் ஒழுக் கத்தைத் தம்முயிரினும் அதிகமாக ஓம்பவேண்டுமென்பதும் திருக்குறளின் கொள்கையாகும். ஒழுக்க அழிவைவிட உயிர் நீத்தலே சாலச் சிறந்தது என்று ஆசிரியர் நமக்கு அறிவுறுத்து கின்றார். "ஒழுக்கம் விழுப்பந்தரலான்" அது "உயிரினும் ஓம்பப்படும்" செய்யாத வழித்தாம் அமையாத "சிறப்பினை யுடையவே எனினும் தங்குடிப் பிறப்புத் தாழவரும் செயல் களை ஒழிக" என்று அறிவுறுத்துங் குறளையும், "இறப்ப வரு வழி இளிவந்தன செய்தாயினுமுய்கமென்னும் வடநூன் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும், மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய் யற்க" என்னும் பரிமேலழகரின் அகலவுரையையும் கூர்ந்து நோக்கின் இவ்வுண்மை தெற்றெனை விளங்கும். அத்தன்மை யோர் "மானம்வரின்," "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா"வே போன்று உயிர் நீப்பர். "சான்றாண்மைக்காழி" எனப்படுவார்

"ஊழி பெயரினும்" தாம் பெயரார். அடுக்கிய கோடி பெறி னும் அவர்கள் "குன்றுவ செய்த லிலர்." ஒழுக்கம், வாய்மை, நாண் ஆகிய இம்மூன்றன் கண்ணும் இழுக்கார். சுருங்கக் கூறின், பழிபாவங்களுக்கு அஞ்சும் முகத்தால் அப்பெற்றியோர் உயிரைத் துறப்பரேயன்றி உயிர்ப் பொருட்டாய் நா துறவார்.

இனிச் சிறப்பாக "ஒழுக்கமுடைமை"யை எடுத்துக் கொண்டு பார்ப்போம். மெய், மொழி, மனம் ஆகிய மூன்றின் கண்ணும் தூய்மையோடு ஒழுகுபவரே ஒழுக்கமுடையவர் என்பதைக் குறிப்பதற்கு ஆசிரியர் ஒழுக்கமுடைமையை அடக்கமுடைமைக்குப் பின் வைத்துள்ளார். அதில் அவர் கூறுவதாவது:- ஒழுக்கம் விழுப்பந்தருதலினாலே அது உயிரி னும் சிறந்ததாய்ப் பாதுகாக்கப்படும். அறங்கள் பலவற்றை யும் ஆராய்ந்து அவற்றுள் இருமைக்கும் துணையாவது யாதென்று தேறும்போது, அத்துணையாய் முடிவது ஒழுக்க மேயாதலால் அதை ஒன்றாலும் அழிவு படாமற் பேணி, ஒவ் வொருவருங்காக்கக் கடவர். எல்லோர்க்கும் ஒழுக்கமுடை மையே உயர்குடிப் பிறப்பாம். அவ்வொழுக்கத்தில் தவறுதல் உயர் குடிப் பிறப்பினின்றும் தாழ்ந்து விடுவதாம். நூல் களைப் படிக்கும் ஒருவர் மறந்துவிடினும் மீட்டும் படித்துக் கொள்ளலாம்; ஆனால் தம் ஒழுக்கம் குன்ற, அவரது உயர் குடிப்பிறப்புக் கெடும். அழுக்காறு உடையவன் கண் ஆக்க மில்லாதவாறு போல, ஒழுக்கமில்லாதவன் கண் உயர்வும் இல்லை. ஒழுக்கத்தில் வழுவுதலால் தமக்கு இழிகுடியாகிய குற்றம் உண்டாவதையறிந்து மனவலியுடையோர் செய்தற் கருமை நோக்கி ஒழுக்கத்திற் சுருங்கார். எல்லோரும் ஒழுக் கத்தாலே மேம்பாடடைவர். அதனின்று வழுவினாலோ தாம் எய்துதற்குரித்தல்லாத பழியை எய்துவர். நல்லொழுக்கம் அறத்திற்கு விதை போன்றது. தீயவொழுக்கமோ பாவத்திற்குக் காரணமாய் இருமையினுந் துன்பம் பயக்கும். இவ்வித ஒழுக் கத்திற் சிறந்தோர் மறந்தும் தீய சொற்களைத் தம் வாயாற்

சொல்லார். இதோடு உலகத்தோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதோர் பல நூல்களைக் கற்று அறிந்தும் மூடரே, என்பது.

அடுத்து கூடாவொழுக்கத்துக்குள் நுழைவோம். கூடா வொழுக்கம் துறவற இயலில் சேர்க்கப்பட்டிருப்பது ஒழுக்க முடைமை துறவிகளுக்கும் உயிர் நிலையாயுள்ளதென்று நாம் கூறியதை வற்புறுத்தும். போலி வேடங்களினாலும் பொருந்தாத ஒழுக்கத்தாலும் ஒருவர் உலகத்தை முதலில் ஏமாற்றிவிடினும், முடிவில் அப்போலித் தன்மை வெளிப் பட்டு உலகினரால் அறிந்து எள்ளி நகையாடப் பெறுவர் என்பதை நாம் இதிலிருந்து அறிகிறோம். மனம் பொறிவழி போகாது காத்துத் தவஞ் செய்வோர் தவத்தோடு பொருந் தாத தீய ஒழுக்கத்தினது இழுக்கத்தை இதில் ஆசிரியர் விளக்குகிறார்.

வஞ்சம் பொருந்திய மனத்தை யுடையவனது மறைந்த ஒழுக்கத்தை உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற இயற்கைப் பெரும் பொருள்கள் ஐந்தும் கண்டு தம்முள்ளே மெதுவாகச் சிரித்து ஏளனம் செய்யும். குற்ற மென்றறிந்த ஒன்றன் கண்ணே புகும் தவசி ஒருவன், வான்போலுயர்ந் திருப்பினும் அவன் தவவேடம் புறத்தாரை வெருட்டுதலைத் தவிர வேறுயாது பயனை அவனுக்கும் பிறருக்கும் செய்யும்? மனதைத் தன் வழிப்படுத்த வலியில்லானாய், தவசியின் வேடத்தை மட்டுங் கொண்டு ஒருவன் மறைந்து நின்று தவமல்லவற்றைச் செய் தல், பசு புலியின் தோலைப் போர்த்துப் பயிரை மேய்ந்ததை யும்; வேட்டுவன் மறைந்து நின்று பறவைகளைப் பிடிப்ப தையும் ஒக்கும். படிற்றொழுக்கம் என்றும் துன்பத்தையே கொடுக்கும். மேலும் பிறரை வஞ்சித்து ஒழுகுவோரைப் போன்ற வன்கண்ணையுடையார் உலகத்திலில்லை. ஆதலால் நாம் வெளிவேடத்தை மட்டும் கண்டு மருண்டுவிடலாகாது. குன்றிமணியின் புறம்போல வேடத்தால் செம்மையுடைய ராயினும் அதன் மூக்குப் போல் மனம் இருண்டிருப்பாரை

உலகம் உடைத்தாயிருக்கிறது. மேலும் மனத்துக்கண் மாசு நீங்காது உறைந்து கிடப்பினும், பிறர் பார்வைக்குத் தவத்தால் மாட்சியுடையோர் போன்று நீரில் மூழ்கிக்காட்டி, மறைந் தொழுகும் பேதையர் உலகத்துப் பலர். வெளித்தோற்றம் நல்லதாயிருப்பினும் உள்ளே தீமைகள் பலவிருக்கலாம். அதைப் போன்றே வெளித்தோற்றம் பார்வைக்கு நன்றாயிரா விடினும், உள்ளே நன்மைகள் பலவிருக்கலாம். அம்பு வடிவாற் செவ்விதாயினும், செயலாற் கொடிது. யாழ் வளைந் திருப்பினும் செயலாற் செவ்விது. ஆதலால் உலகம் பழிக்கும் செயல்களைக் கடிந்துவிடின், தவஞ்செய்வாருக்குத் தலை மயிரை மழித்தலும், சடையாக்கலுமாகிய வெளிவேடம் வேண்டியதில்லை. கூடாவொழுக்க மில்லாதாருக்கு வேடமும் வேண்டாம்.

பொது நோக்காளி தன்னைப் போல் பிறரை நோக்குவதற்கும், பிறர் அவன் மேல் நம்பிக்கை கொள்வதற்கும் தூய ஒழுக்கமுடைமை வேண்டற்பால தென்ற ஆசிரியர் கருத்தைப் பொதுவகையிலுணர்ந்தோ மாதலின், இனி நூலுக்குள் நுழைந்து சிறிது பார்ப்போம். இவ்வன்புநெறி எவ்வாறு தோன்றி வளர்ந்து, முதிர்ந்து அருளாகின்றது? பொது நோக்கமாகிய மரத்திற்கு விதை எங்கு விதைக்கப்படுகின்றது? என்ற வினாக்கள் இப்பொழுது எழுவது இயல்பே. இது இல் வாழ்க்கையிலேயே தொடங்குகின்றது என்று ஆசிரியர் கருதுகின்றார். அன்பு நெறியையும், பொது நோக்கப் பான்மையையும் பயிலுவதற்குரிய பெரும் பள்ளி, இல்லறமே. மனைவி, மக்கள், நண்பர், ஒக்கல், விருந்தினர் முதலியோரோடு பழகிப் பழகி, அன்பு ஒப்புரவுகளைச் செய்து மனம் பண்பட, நாம் ஒழுக்கம் வாய்க்கப்பெற்று, பொது நோக்கைப் பெறுகின்றோம். அது படிப்படியாய் வளர்ந்து சென்று பரவி, முடிவில் சமயத்தையும் எட்டுகிறது. பல சமயத்தினரையும் ஒரே கண் கொண்டு பார்க்கும் நிலை, நாடு, மொழி, நிற வேற்றுமை

களைக் கடந்து செல்லும் தன்மையது. காலத்தையும் அது கடக்கும். இக்காலம் வரையிலும், இன்னும் வருங்காலம் முழு வதிலும் சிறந்த பொதுநோக்கப் பெரியார் என்று போற்றப் படக்கூடிய வள்ளுவனார் இம் முதிர்ந்த நிலையில் நிற்பவ ரன்றோ? இங்கு விதைக்கப்படும் பொது நோக்கவித்து, முறைப் படி விதைக்கப்படுமாயின், முளைத்து, மரமாகி, காய்த்துப் பழுத்துப் பயனைத் தர, அதை உண்டு ஒவ்வொருவரும் இன் புறலாம். இவ்வாறே ஒவ்வொரு குடியினரும் தங்கள் குடி வாழ்க்கையைச் சிறப்புற நடத்தினால் அச்சமுதாயத்தின் பெருமையை எடுத்துக் கூறவும் இயலுமோ?

# 22

# வள்ளுவர் – தெய்வ ஒளி

*1953*

**ச. வையாபுரிப்பிள்ளை**

*தமிழ்நாடும் தமிழ்மொழியும் முயன்ற அருந்தவப் பயன் காரணமாக, ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னர், நமது நாட்டில் திருவவதாரம் செய்தருளிய வள்ளுவ ரென்னும் புண்ணிய மூர்த்தியை நினைவுகூரும் பொருட்டு நாம் இன்று கூடியிருக்கின்றோம். இவரது அவதார நிகழ்ச் சியைப் போன்று அத்துணைச் சிறப்புடையதாகப் பிறிதொரு நிகழ்ச்சி தமிழ்மொழிச் சரிதத்தில் உளதென்று கருதுவார் பெரும்பாலும் இல்லை. தமிழணங்கு தலையெடுத்து அவள் புதல்வர்களாகிய நமக்கு இன்முகம் காட்டி நிற்பது இத்திருவ வதாரத்தின் பயன் கொண்டேயாகும். தமிழ்நாடு புண்ணிய பூமியாகக் கொள்ளப்படும் பெருமை வாய்ந்தது இவ்வ வதாரத்தின் பெருமை பற்றியேயாகும். தமிழ் மக்களாகிய நாம் கௌரவமுடையதோர் சமுதாயத்தைச் சார்ந்தவர்*

களென்று எண்ணிப் பாடப் பெற்று வருவதற்கும் இவ்வவ தாரமே காரணமாகும்.

இங்ஙனமாகத் திருவவதாரம் செய்தருளிய மகாபுரு ஷனை அடிக்கடி ஞாபகத்தில் வைத்துப் போற்றிப் பாராட்ட வேண்டுவது தமிழ் மக்களாகிய நமக்கு உரிமையும் கடமை யும் ஆகின்றது. தமிழ்மொழியோடு பிறந்த நமக்கன்றிப் பிறமொழிகளைப் பயிலும் அந்நியர்க்கு இப்பேருரிமை இல் லாது போயிற்று. இவ்வுரிமை யொன்றினாலேயே நாம் இறு மாந்து தலைநிமிர்ந்து நடப்பதற்குத் தகுதியுடையராயினோம். நம் தமிழ் மக்கள் மீதும் நம் தமிழ் மொழி மீதும் பிறர் அழுக் காறு கொள்ளும்படி அத்துணைப் பெருமை அளித்தது இப்பேருரிமையென்றே கருதுகின்றேன். இங்ஙனம் சிறப்பும் பெருமையும் நமக்கு அருள் செய்த புண்ணியமூர்த்திக்கு நாம் என்று நன்றி பாராட்டுங் கடப்பாடு உடையராயிருக்கின்றோம்.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு

என்பதன்றோ தமிழ் வேதவிதி?

ஆனால், நமது உரிமையைப் பாராட்டி மகிழ்தற்கும் நமது நன்றியறிதலை வெளிக்காட்டிக் கொள்ளுதற்கும் மாத்திரமன்று நாம் இன்றைக்குக் கூடியிருப்பது. பூர்வத்தில் நாமிருந்த உன்னத நிலைமையினின்றும் தவறிவிட்டோம். நமது பண்டைப் பெருமை நம்மினின்றும் விடை பெற்றுக் கொண்டு போய்விட்டது. நாம் அதோ கதியில் வீழ்ந்து கிடக் கின்றோம். இப்போது முழுவதும் அடிமைகளாகிவிட்டோம். அறிவிலும் ஆண்மையிலும் அன்பிலும் நாம் அடிமைகளாய் உழலுகின்றோம். அன்பிற்கும் அடைக்குந் தாழ் உண்டென் பது இப்போது அறியலானோம். 'கூற்றுடன்று மேல்வரினும் கூடியெதிர் நிற்கும் ஆற்ற' லுடையராயிருந்தோம் என்பது பண்டைப் பழங்கதையாய்ப் போயிற்று.

ஒரு காலத்தே நம் தமிழ் மக்கள் எங்கணும் சென்றுலவி வாணிகம் செய்து தமிழ் நாட்டுப் பொருள்களை உலகிற் கெல்லாம் உதவி வந்தனர். நுகர்ச்சிப் பொருள்களேயன்றி அறிவுப் பொருளும் உலகமனைத்திற்கும் கொடுத்துதவும் அத்துணையளவாக நம்மிடமிருந்தது. அவ்வறிவுப் பொருளை மேன்மேலும் விருத்தி செய்யாது வறிதே வாழ்ந்து எல்லா வற்றையும் இழந்தோம். 'அறிவுடையார் எல்லாம் உடையார், அறிவிலார் என்னுடையரேனும் இலர்' என்ற உண்மையை மறந்துவிட்டோம். பிற நாடுகளில் அறிவு நாடோறும் பெருகிவளர, நம் நாட்டில் அறிவு வறுமை குடிகொண்டு விட்டது. மேலை நாடுகளினின்றும் அறிவுப் பொருள் பெற வேண்டி நாம் இரந்து நிற்கின்றோம். தமிழ் நாட்டில் அஞ் ஞான இருள் பரந்து நிலைத்திருக்கின்றது.

இவ்வஞ்ஞான இருளில் உழன்று தத்தளிக்கும் நமக்கும் உய்தியுண்டென்று உணர்த்தி நம்மை நன்னெறியுய்க்கும் ஒரு தெய்வவொளியை நாம் அடிக்கடி நோக்கி நெறிப்படுதல் வேண்டுமன்றோ? இவ்வியல்புடைய தெய்வவொளி யொன்றை நோக்கி நெறிப்படுதற்கே நாம் இன்று ஒருங்கு கூடியிருக் கின்றோம். தமிழ் நாடனைத்தும் இத்தெய்வொளியை இன்று தரிசித்து உய்தி கூடும்படி இறைவன் அருள்புரிவாராக!

இத்தெய்வப் பேரொளியானது தோன்றியகாலம் இற் றைக்குச் சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னென்று கூறுவர். தமிழிலக்கிய சரித்திர ஆர்ராய்ச்சியாளரில் ஒரு சிலர் இதனை ஒப்புக் கொள்ளாமலிருத்தல் கூடும். ஆனால், சில நூறு வருஷங்கள் முன் பின்னாகக் கூறிக் கொள்வதில் என் நோக்கம் பழுதுபடுவதில்லை. எனது கருத்தெல்லாம், பெரு மக்களது அருந்தோற்றத்தால் விசேஷித்து விளங்கும் பிரகாச மின்றித் தமிழ்ச் சரித்திர மண்டலம் வறிதேயிருந்த காலத்து, 'வள்ளுவர்' என்று நாம் கொண்டாடும் இத் தெய்வவொளி தோன்றியது என்பதே.

ஆங்கங்கே சிறுசிறு நக்ஷத்திரங்கள் ஒன்று சேர்ந்து கூட்டமாக விளங்கியிருந்தன. சங்கப் புலவர்கள் என்று நாம் கருதும் நக்கீரர், கபிலர், மாங்குடி மருதனார் முதலானோர் ஒருங்குகூடிச் சிற்றொளி நல்கித் திகழ்ந்து வந்தனர். சிலப்பதி கார மியற்றிய சேரர்பெருமானாகிய பெரு நக்ஷத்திரம் இன்னும் விண்ணில் ஒளிரவில்லை. தண்ணிய அருளொடு மிளிரும் தேவார ஆசிரியர்களும் ஆழ்வாராதியர்களும் இன்னும் இன்னொளி நல்கவில்லை. சிந்தாமணியை உதவி யருளிய திருத்தக்கதேவர் என்னும் செவ்விய நல்லொளி இன்னும் முகஞ்செய்து திகழவில்லை. திருத்தொண்டர் புரா ணம் என்னும் சைவ மெய்ந்நூல் அருளிய சேக்கிழார் எனப் படும் விடிவெள்ளி விண்ணில் இன்னும் அரும்பவில்லை. விண்ணையும் மண்ணையும் தன்னிடமாகக் கொண்டு தனது பேரொளிப் பெருவெள்ளத்தால் இரு பேருலகையும் ஜோதி ஸ்வரூபமாக்கிய கம்பர் என்னும் கவிகுல பாஸ்கரன் இன் னும் உதயஞ் செய்யவில்லை. பேரொளி மண்டிலங்கள் ஒன்று மின்றிச் சிறு வெள்ளிகள் சிற்றொளி செய்து விளங்கிய தமிழ்ச் சரித்திர மண்டலத்தே நாம் இன்று போற்றித் தொழு கின்ற தெய்வவொளியாகிய திங்கள் உதயமாயிற்று.

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான் (சிலப்பதிகாரம்)

என இயற்கைத் திங்களை வணங்கும் மரபுடைய நாம் அறிவு நலந் திகழ்ந்தொளிரும் வள்ளுவரென்னும் செயற்கைத் திங்க ளையும் வணங்கி வாழ்த்துவோமாக!

இப்பூவுலகிலுள்ளவர்க்கு நிலவும் மகிழ்ச்சியும் ஒருங்கு தந்து விளங்கும் இயற்கைத் திங்கள் பூமியினின்றும் ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ளது. எவ்வாறு, எப் பொழுது அது தோற்றியது? அதன் சரித்திரம் யாது? இவை

போன்ற கேள்விகளுக்கெல்லாம் நமக்கு விடை கிடைப்ப தரிது. திங்களின் தண்ணிய ஒளி மண்டலத்தின் அழகிலே இன்புறுவதோடு நமது மனம் அமைதியுறுகின்றது. அதன் சரித்திரம் பற்றிய கேள்விகள் யாவும் நம் அகங்காரத்தாலும் ஆசைப் பரபரப்பினாலும் எழுகின்றன. சில சில விடைகளை அனுமானிக்கின்றோம். சில சில விஷயங்களை நமது மனோ பாவனையால் பாவனை செய்கின்றோம். சிறு குழந்தைகள், கூனக்கிழவி அதில் வசித்து வருவதாகப் பாவிக்கின்றார்கள். வயது முதிர்ந்துவிடின் குழந்தைமதியும் நம்மைவிட்டு அறவே ஒழிந்து விடுதலுண்டோ? கவிதா கற்பனையென்பது இக் குழந்தை மதியோடு ஏகதேசவொற்றுமை உடையதென்பது பெரியதோர் உண்மையேயன்றோ? ஆகவே, நாமும் பாற் கடலில் அம்புலி தோன்றியதாகப் பாட்டிசைக்கின்றோம்; அதன்கண் முயல் இருப்பதாக வியந்துரைக்கின்றோம்; அதனை ராகு கேதுக்கள் விழுங்கி யுமிழ்வதாகக் கதை விளம்புகின் றோம். இங்ஙனமாகப் புனைந்துரைத்துக் கொள்வதன்றி உண்மையுணர்ந்து கொள்ளுதல் கஷ்ட சாத்தியமாகின்றது.

இதுபோலவே இன்று நாம் தொழுது வாழ்த்தும் ‘வள்ளுவர்’ என்னும் தெய்வவொளி வீசும் திங்களின் சரித் திரமும் நம்மால் அறிதற்கரிதாயிருக்கின்றது. எத்தனையோ கட்டுக்கதைகள் புனையப்பட்டுள்ளது! ‘வள்ளுவர்’ என்ற பெயரால் அவர் ‘புலைச்சி மகன்’ என்ற கதை பிறந்தது. புலைக் குலத்தானுக்கு இத்துணைப் பேரறிவும் பெருங்கல்வியும் இருத்தல் அசம்பாவிதம் என்றெண்ணிப் புலைச்சிக்கும் பிராமணனொருவனுக்கும் அவர் பிறந்துள்ளதாகக் கதை யெழுந்தது. சிலர் ‘வள்ளுவர்’ என்ற சொல்லுக்கு வண்மை யுடையார் என்ற பொருள் கூறி, இவ்விடர்க் கடலைக் கடக்கத் தலைப்பட்டனர்.

சீத்தலைச் சாத்தனார்க்குத் திருவள்ளுவரது திருக் குறளால் தலைக்குத்துத் தீர்ந்த கதையைப் பன்முறையும்

கேள்விப்பட்டிருக்கின்றோம். இக்கதை முழுவதும், தலைக் குத்து என்னுந் தொடருக்கு இரண்டு பொருள் இருப்பதனா லும், சீத்தலை என்பது ஓரூர் என அறியாமற் போனமை யினாலும் ஏற்பட்டதாகும்.

சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில் – காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

இச்செய்யுளில் தலையிடி மருந்து கூறப்பட்டிருக்கின்றது. இம்மருந்தினை மோந்த மாத்திரையில் தலையிடி தீர்ந்து விடும். குற்றம் நிரம்பிய நூல்களைத் தினந்தோறும் செவி மடுத்து என்றுந் தீராத தலையிடியுடையராயிருந்த சாத்தற்கு, வள்ளுவரது முப்பாலால் அந்நோய் தீர்வெய்திற்று என்பதே இதன் கருத்து. இச்செய்யுளகத்துத் 'தலைக்குத்து' என்ற சொல் பயின்று வந்திருத்தலால், குற்றமுள்ள நூல்களைக் கேட்குந்தொறும் கேட்குந்தொறும் சாத்தர் எழுத்தாணி யைக் கொண்டு தம்தலையிற் குத்தித் தமதுவிதியை நொந்து கொள்ளுவாரென்றும், சீத்தலைச்சாத்தனார் என்ற பெயர் வழக்குண்மையால், எழுத்தாணியாற்குத்துண்டு அவர் தலையிற் சீழ் எப்போதும் வடிந்து கொண்டிருந்ததென்றும், இச்சீழ் வடிதலும் எழுத்தாணிக் குத்தும் வள்ளுவரது முப்பால் மருந்தி னால் அறவே இல்லாது போயின வென்றும் கட்டுக் கதைகள் கிளைக்கத் தலைப்பட்டன.

இதுபோன்றதொரு தப்புணர்ச்சியின் காரணமாக, வள்ளுவர்க்குக் கற்பிற் சிறந்த இல்லறத் தலைவியொருத் தியை அடையும் பாக்கியமும் கிடைத்திருக்கின்றது.

அடிசிற் கினியாளை அன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை – அடிவருடிப்
பின் தூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தால்
என் தூங்கும் என்கண் எனக்கு?

என்ற செய்யுள் வள்ளுவர் தம் பத்தினியாரைக் குறித்துப் பாடியதாகக் கருதப்பட்டது! இதனின்றும் கற்புமாட்சி தெரிக்கவல்ல அழகிய பல கதைகள் புறப்பட்டு விட்டன! ஆனால் இச்செய்யுள் வள்ளுவர் வாக்கன்றென்பதற்கு இச் செய்யுளகத்தே பொய்யாதவோர் சான்று நிலைபெற்றிருக் கின்றது. தூங்குதல் என்ற சொல்லுக்கு, உறங்குதல் என்ற பொருள் வள்ளுவர் காலத்தில் இல்லை. சங்க நூல்களில் ஓரிடத்தேனும் இப்பொருளில் இச்சொல்லைக் காணுதல் கூடாது. வள்ளுவர் தாமும் இச்சொல்லைப் பலமுறை பிரயோகித்திருக்கின்றார்; பொருள் இதுவன்று. தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்றுச் சோம்பியிருந்த பிற்காலத்தே புகுந்த வழக்காகும் இது. பிற்காலத்துப் பிறந்த செய்யுளை வள்ளுவர் பால் ஏற்றி அவர்க்குத் திருமணம் நிகழ்த்தப்பட்டிருக்கின்றது.

மேற்குறித்தன போன்ற கட்டுக்கதைகளால் ஒருண்மையை நாம் உணர்கிறோம். வள்ளுவரது திருமேனிக்குத் தமிழ் மக்கள் பண்டுதொட்டு இன்றுவரை இடையறாத அன்பு பூண்டு வந்திருக்கின்றார்கள் என்பதுவே அது. அநேக நூற்றாண்டுகளாகத் தமிழ் மக்கள்தம் உள்ளத்தை வள்ளுவர் கொள்ளைகொண்டு உலவி வருகின்றார். நம்மோடொப்ப நம் மூதாதையர்களுக்கும் அவரது திருநாமம் சிந்தைக்கும் செவிக்கும் இனிதாயுள்ளது. அவரது சரிதம் எனப் பெயரிட் டெழுந்தனவெல்லாம் புண்ணியம் பயப்பனவாக நம்மவராற் கருதப்பட்டுள்ளன. கரையில்லாது பொங்கி யெழுந்த அன் பின் பெருக்கத்தால் முற்கூறியன போன்ற கதைகள் முளைத் துச் செழித்து வளர்ந்தனவென்று நாம் உணர்ந்தவளவில், நமது மனம் பக்தியாற் கனிவெய்துகின்ற தேயன்றி அவற்றின் பொய்ம்மை மெய்ம்மைகளைத் தெரிதற்கு ஒருப்படுவதில்லை. அன்றியும், அழகுள்ள கதைகளில் யார்தாம் ஈடுபடமாட் டார்கள்! யார்தாம் மயங்கிவிட மாட்டார்கள்! குணத்தாலும்

செயலாலும் பெரியராயுள்ளவர்களைப் பற்றிய அழகிய கதைகள் நம்மை வசீகரித்து விட்டன என்று நாம் ஒப்புக் கொள்ளுதலிற் குற்றம் சிறிதேனும் உண்டோ? இல்லை. எனினும், ஒரு விஷயத்தை நாம் மறந்துவிடலாகாது. சந்திர னது ஒளிமண்டலத்தைக் கடந்து அதன் இயற்கையைக் கண்டறிதற்குக் கண்கூசி வலியற்று நிற்பதுபோல, திருவள்ளு வரது புகழ் மண்டலத்தைக் கடந்து அவரது உண்மைச் சரித் திரத்தை உணர்தற்கு நம் அறிவு வலியற்று நிற்கின்றது. இதனை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல் பெரிதும் ஆவசியகம்.

வள்ளுவரது சரித்திரத்தில் ஒருண்மை மாத்திரம் நம் அறிவை விட்டு எவ்வகையானும் தப்பிச்செல்ல முடியாதபடி அகப்பட்டுக்கொண்டது. அறிவில் அகப்பட்டது என்று கூடச் சொல்லுதல் தவறு. நமது பார்வையிலேயே மிக எளி தில் அது சிக்கிக் கொண்டது, அவ்வுண்மை யாது எனின், திருவள்ளுவனார் திருக்குறள் செய்தருளினார் என்பதே யாகும். இதனை அறியாதார் இல்லை.

ஆனால், இதன் பொருண்மையும் பயனும் உணர்ந்தோர் மிகச் சிலரேயாவர். ஒரு நூல் சிறப்பு வாய்ந்ததெனின், அதன் ஆசிரியனது இதயத்தினின்றும் - அறிவினின்றும் அது பிறந்திருத்தல் வேண்டும். ஆசிரியன் தன்னையே தனது நூலில் அமைத்து விடுகின்றான். ஆசிரியனது ஜீவநாடி அவனது நூலிலேயே துடிதுடித்துக் கொண்டிருப்பதாகும். ஆசிரியனுக்குரிய விசேஷ ஆத்ம குணமெல்லாம் நூலினகத் துங் காணப்படுதல் நிச்சயம். நூலிற் கூறுகின்ற வாழ்க்கை நிலையில், ஆசிரியர் தானே வாழ்கின்றான். தனது கூரிய கட்புலன் கொண்டு அந்நிலைகளை நோக்குகின்றான். தனது நுண்மாணுழைபுலங் கொண்டு விஷயங்களின் உண்மையை நுனித்து உணருகின்றான். தனது பேராற்றலால் அவ்விஷயங்

களின் பொருளைக் கூர்ந்துணர்ந்து தனது அரிய புலமைத் திறத்தால் அவற்றைப் பிறரும் கூர்ந்துணரச் செய்கின்றான். சுருங்கக் கூறின், ஆசிரியனது உயிர் வாழ்வின் சாரம்சமே அவனியற்றிய பெரு நூலெனத் தகும்.

இக் காரணம் பற்றியே, மில்டன் என்னும் ஆங்கில மகாகவி, 'அறிவிற் சிறந்த பெரியோனொருவன், அநித்திய மாகிய தனது பூதவுடம்பு நீங்கியபின், என்றும் அழியாத புகழுடம்போடு நித்யவாழ்வு எய்துதற் பொருட்டு, தனது இனிய ஆருயிரை வாசனையூட்டித் தைலத் தோணியில் வளர்த்திட்டு வைப்பது போன்றதாகும் அப்பெரியோனியற்றிய பெருநூல்' என்னுங் கருத்துப்பட வரைந்திருக்கின்றார். இதன் உண்மை அருஞ்சிறப்பு வாய்ந்த பெருநூல்களோடு மாத்திரமே பொருந்துவதாகும்.

ஓர் உயரிய நூல் எல்லா வகையாலும் உணர்ந்தோனொருவனது உள்ளத்தினின்றே தோன்றுதல் கூடும். நூலை நன்கு உணர்வதன் மூலமாகத்தான் ஆசிரியனை நாம் அறிதல் இயலும். தினந்தோறும் நம்முடன் பழகி வருபவரது குணா குணங்களும்,-நோக்க முறையும், பெருமையும் சிறுமையும், அவர்கள் பேசும் குரலும் நமக்குத் தெரிவது போலவே, சிறந்த ஓர் நூலாசிரியனது நூலை நாம் கற்கக் கற்க, அவ்வாசிரியனது குணப் பெருமை, அவன் உலகினை நோக்கும் முறை, அவனது குறை குற்றங்கள், அவன் சொல்லாடும் முறை - இவையெல்லாம் நமக்குப் புலப்படுகின்றன.

இவ்வண்ணமாக வள்ளுவரைத் தமிழ் மக்கள் நன்கு அறிந்து கொள்ளுதல் ஏலும். அவரது ஜீவிய சரித்திரம் அவர் இயற்றியுள்ள ஒப்பற்ற திருக்குறள் நூலில் விரிவாய் அமைந்திருக்கின்றது. திங்கள் வேறு அதன் ஒளி மண்டலம் வேறு என்று நாம் கருதுவதில்லை. இங்ஙனமே, வள்ளுவர் வேறு,

அவரது தெய்வத் திருக்குறள் வேறு என்பது இல்லை, திருக் குறள் என்பதுதான் வள்ளுவர். ஆகவே விரிவான சரித்திரம் ஒன்று வேண்டும் என்னும் ஆவசியகமே இலதாயொழி கின்றது. வள்ளுவரது வாழ்க்கையில், பிற மக்களோடொப்ப அவர் செய்திருக்கக் கூடும் சிறு செயல்களால் நமது மனம் அலைப்புண்டு உழலாதபடி, அவரது வாழ்வின் தனிப் பெரு நோக்கமாகக் கொண்டியற்றிய நூலின் கண் மாத்திரம் நம் அறிவைச் செலுத்திப் பயன் பெறுமாறு ஆணையிடுவித்த ஊழ் விதிக்கு ஒரு முறையில் நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றோம்.

இவ்வாறாகத் தம்மை வேறொன்று கொள்ளாது தமது ஆருயிர் நிலைத்து வாழ்தற்கென்றே அரிதின் அமைத்து வைத்த உடல் போன்று உள்ளதாகும் வள்ளுவர் என்னும் தண்மதி அருளிய அருமைத் திருக்குறள். அழகிய இப் பெரு நூலின் இயல்பினை ஒருவாறு சுட்டிக் கூறுவதோடு இப் போது அமைகின்றேன். அங்கண் விசும்பில் ஒளிரும் திங்களின் நிலவினை இன்னார்தாம் நுகர்தற்குரியார் என்பதில்லை. எளியார்க்கும், வலியார்க்கும், செல்வர்க்கும், வறிஞர்க்கும், சந்திரன் ஒன்றுபோல ஒளி நல்குகின்றது. பகை, நட்பு என்ப தும் இனத்தர், அந்நியர் என்பதும் நிலவுக்கில்லை. இது போன்றே இன்று நாம் போற்றுதற்கமைந்த வள்ளுவரென்னும் தெய்வவொளியானது யாவர்க்கும் வேறுபாடின்றி ஒன்று போல நெறிகாட்டியுதவுந் தகைமையது.

வள்ளுவர் தாமே ஓரழகிய செய்யுளில் தம் கருத்தை வெளியிட்டிருக்கின்றார்:

**ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்**
**பேரறி வாளன் திரு**

என்பது அச்செய்யுள். நீர் நிறைந்த ஊருணி தன்னை அடைந் தார்க்கெல்லாம் வேற்றுமையின்றி நீரையுதவி இன்பமளிக்

கின்றது: இவ்வண்ணமே பேரறிவாளனது பெருஞ் செல்வமும், நெடிது நின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாது உதவி இன்பம் அளிக்கின்றது என்பது செய்யுளின் கருத்து. உலகத்திற் பேரறிவாளன் என்றழைப்பதற்கு வள்ளுவரைக் காட்டிலும் சிறந்த உரிமையுடையார் அரியர். இவர் தந்தருளிய திருக்குறள் நூலைக் காட்டினும் பெரியதொரு செல்வம் உளதெனல் அரிதாம். செல்வத்துட் செல்வமாகிய இத் திருக்குறள், நீர் நிறைந்த ஊருணியையொத்து நலம் பயக்கின்றது. அறிவுத் தாகத்தால் வருந்துவோரனைவரும் திருக்குறள் நூலால் அறிவுதவப் பெற்று இன்பமெய்துதல் கூடும். இல்லற நெறியில் நிற்குமவர்கள், துறவிகள், அரசர்கள், குடிகள், பகைவர்கள், நண்பர்கள் இவ்வனைவர்க்கும் அறிவுப் பொருளை இப்பெரு நூல் உதவுகின்றது. சுருங்கவுரைக்குமிடத்துப் பல்வேறு வகைப்பட்ட வாழ்க்கை நிலையிலுள்ளவர்க்கும் சிறந்த அறிவுரைக் களஞ்சியமாக விளங்குவது நம் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் அருளிய தெய்வீகப் பெருநூல்.

வள்ளுவரை வானில் நிலவிட்டொளிரும் தண் மதியத்திற்கு ஒப்பாகக் கூறி வந்தேன். எல்லார்க்கும் ஒப்புவுதவி உய்ந்நெறி காட்டுதலில் இது பொருந்தும். ஆனால் நம் முதற் பாவலர்க்கே தனித்துரிய வேறொரு பெருமையும் இருக்கின்றது: நிலவுப் பயன் கொள்ளுதல் வெளி முற்றத்தும் மேல் மாடத்துந்தான் இயலும். பலகணியில்லாத வீட்டினுள்ளே நிலவொளி பரவுவதில்லை. வள்ளுவரது தெய்வவொளியோ பரவிச் செல்லக்கூடாத இடமே இல்லை. விண் மதியம் போலக் காலத்தால் அதி தூரத்தில் ஒளி விட்டுத் திகழ்ந்த போதிலும், யாவரும் எவ்விடத்தும் கொண்டு செல்லத்தகும் கை விளக்குப் போல அடுத்து நின்றுதவும் தன்மை, நாம் இன்று தொழுது வணங்கும் தெய்வவொளிக்கு உளதா

*கின்றது. இத் தெய்வவொளியால் தமிழ் மக்களாகிய நாம் இருள் நீங்கி உய்தி பெறுவோமாக!*

நின்று சுடரெரித்த நெஞ்சத் திருளகற்றி
இன்றுபோல் என்றும் இலங்கிடுக – துன்றுபுகழ்த்
தெய்வப் புலமைத் திருவள் ளுவர்என்னும்
மெய்வைத்த வேத விளக்கு.

# 23

# வழிவழி வள்ளுவர்

## சிலப்பதிகாரத்திலே வள்ளுவர்

**1953**

**ரா.பி. சேதுப்பிள்ளை**

சிலப்பதிகாரம் தமிழ் நாட்டின் சிறந்த கலைச்செல்வம். அது முற்காலத் தமிழகத்தின் சீர்மையை விளக்கும்; முத் தமிழின் பெருமையை முழக்கும். இத்தகைய சிலம்புச் செல் வத்தை வழங்கிய செஞ்சொற் கவிஞர் இளங்கோவடிகள். அவர் தவச்செல்வமும் தமிழ்ச் செல்வமும் ஒருங்கே பெற்ற வர்; திருவள்ளுவர் அருளிய திருக்குறளைப் பொன்னே போற் போற்றியவர்.

### காவேரி நாடு

சிலப்பதிகாரத்தின் கதாநாயகியாகிய கண்ணகி பிறந்த நாடு, புலவர் பாடும் புகழுடைய சோழநாடு. வள்ளுவர் குறித்த வருபுனலும் இருபுனலும் உடையது அவ்வளநாடு. பால்

நினைந்து ஊட்டும் தாய்போல் அந்நாட்டை நீரூட்டி வளர்த்தது காவேரி யாறு.[1] அவ்வாற்று நீரை அணைகளால் அணைத்து, கால்களால் எடுத்து, குளங்களில் நிறைத்து, வயல் களில் பாய்ச்சிச் செந்நெல் விளைத்தனர் மருத நில மக்கள்.

பலகுடை நீழலும் தம்குடைக் கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்

என்று பயிர்த்தொழிலாளர் பெருமையைத் திருக்குறள் பாடிற்று. 'வேளாண்மையால் வறியவர் பசிநோய் ஒழியும், வேந்தர் படைத்திறம் ஓங்கும்' என்று இக் குறளில் வள்ளுவர் உரைத்த வாய்மையை ஏற்றுப் போற்றுகின்றார் இளங்கோ வடிகள்.

பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்

என்ற சிலப்பதிகார அடிகளில் பயிர்த் தொழில் செய்யும் மக்களால் இரவலரும் புரவலரும் அடையும் நன்மையைப் பாராட்டுகின்றார் கவிஞர்.

வேளாண்மையோடு சான்றாண்மையும் செல்வச் செழு மையும் உடையதே நாடு என்று பாடினார் திருவள்ளுவர்.

தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு

என்பது அவர் வாக்கு. கல்வி அறிவு ஒழுக்கங்களில் மிக்காரே தக்கார் எனப்படுவார். இத்தகைய மாந்தரை உடைய நாடு பெருமை சான்ற நாடு என்பது திருவள்ளுவர் கருத்து. இவ் வுண்மையை உணர்ந்தன்றோ 'சான்றோர் பலர் யான் வாழும் ஊரே' என்று பெருமிதமுற்றுப் பேசினார் ஒரு தமிழ்ப் புலவர்? பாரதநாட்டுப் பொதியமலையும், இமயமலையும், புகார் நகரும் ஆன்றோர் வாழுமிடமாதலால் அழியாத் தன்மை வாய்ந்தன என்று இளங்கோவடிகள் கூறுகின்றார்.[2]

## வாணிகவளம்

இனி, வள்ளுவர் குறித்த 'தாழ்விலாச் செல்வம்' வாணிகத்தால் வரும் என்பது தமிழ் நாட்டார் கொள்கை. முன்னாளில் வாணிகத்தால் வளம் பெருக்கிய நகரங்கள் பல தமிழ் நாட்டில் இருந்தன. அவற்றுள்ளே தலைசிறந்தது காவிரிப் பூம்பட்டினம். காவேரியாறு கடலொடு கலக்குமிடத்தில் அழகிய துறைமுக நகரமாக விளங்கிற்று அப்பட்டினம். கடல் வழியாகவும் தரை வழியாகவும் அந்நகரில் வந்து சேர்ந்த பொருள்களைப் பட்டினப்பாலை என்னும் பழந்தமிழ்ப் பாட்டிலே காணலாம்.[3] இத்தகைய சீர்மை வாய்ந்த பட்டினத்தை,

> உரைசால் சிறப்பின் அரைசுவிழை திருவில்
> பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்

என்று புகழ்ந்து பாடுகின்றார் இளங்கோவடிகள். கடல் கடந்து, பிற நாடுகளிற் போந்து வாணிகம் செய்து வளம் பெருக்கிய பரதர் அந்நகரில் நிறைந்திருந்தனர். பட்டினக் கடற்கரையில் பிறநாட்டு வணிகர், மாடமாளிகையமைத்துத் தமிழ் மக்களோடு கலந்து வாழ்ந்தனர்.

இத்தகைய வளமார்ந்த நகரில் கோவலன் தந்தையாகிய மாசாத்துவானும் கண்ணகியின் தந்தையாகிய மாநாய்கனும் வணிக மன்னராய் விளங்கினர். வணிகர் குலத்திற்குரிய ஒழுக்க நெறியில் வழுவாது நின்று பொருள் ஈட்டினர் அவ்விருவரும்.

> வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவும் தமபோல் செயின்

என்று வணிகர் குலத்திற்குரிய நெறியை விளக்கிப் போந்தார் வள்ளுவர். பிறர் பொருளைத் தம் பொருள் போல் பேணுதலே வாணிகத்திற்கு அழகு. பண்டமாற்றுச் செய்யும் பொழுது மிகைபடக் கொள்வதும் குறைபடக் கொடுப்பதும் குற்றமாகும்.[4] இக் குற்றத்தின் நீங்கி வள்ளுவர் வகுத்த அற நெறியில் வாழ்ந்த பூம்புகார் வணிகரை, "குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்" என்று பாராட்டினார் இளங்கோவடிகள்.

## நகரச் சிறப்பு

சோழ நாட்டின் செழுமையெல்லாம் அதன் தலை நகரத்திலே சிறந்து விளங்கிற்று. காவேரி நாட்டின் விளை பொருள்களும், கடல் வழியாக வந்த பல்வகைப் பொருள் களும் நிறைந்து,

> பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
> இறைஒருங்கு நேர்வது நாடு

என்னும் திருக்குறளுக்கு ஓர் எடுத்துக் காட்டாக நின்றது அந் நகரம். பல நாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே சேர்ந்து வந்தாலும் தளராது தாங்கும் தகுதி வாய்ந்த நாடே சிறந்த நாடு என்பது இக்குறளின் கருத்து. பகையரசரின் படையெடுப்பாலும், பஞ்சத்தின் கொடுமையாலும், அர சாட்சியின் அழிம்பினாலும் இன்னோரன்ன பிற காரணங்க ளாலும் ஒருநாட்டு மக்கள் குடிபெயர்ந்து அயல் நாட்டில் சென்று சேர்வதுண்டு. அன்னாரையும் ஆதரிக்கும் வள முடைய நாடே நன்னாடு என்பது வள்ளுவர் கருத்து. இக் கருத்தைத் தழுவி,

> முழங்குகடல் ஞாலம் முழுவதும் வரினும்
> வழங்கத் தவாஅ வளத்த தாகி,

காவிரிப்பூம்பட்டினம் சிறந்து விளங்கிற்றென்று சிலம்பு பாடிற்று.

## இன்ப வாழ்க்கை

சிலப்பதிகாரத்தின் கதாநாயகியாகிய கண்ணகி, காவிரிப் பூம்பட்டினத்திலே பிறந்து வளர்ந்தாள்; ஒத்த குலமும் நலமும் வாய்ந்த கோவலனை மணந்தாள். இடம் பொருள் ஏவல் என்னும் மூன்றும் குறைவறப் பெற்ற கோவலனும் கண்ணகியும் இன்புற்று வாழ்ந்தனர்.

> கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள

என்ற குறளின் கருத்தை உட்கொண்டு, "மாசறு பொன்னே, வலம்புரி முத்தே, காசறு விரையே, கரும்பே, தேனே" என்று தன் காதல் மனையாளைப் பாராட்டினான் கோவலன்;[5] இன்னும்,

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்

என்ற வள்ளுவர் வாக்கை உள்ளத்திற் கொண்டு அவள் பேச்சின் இனிமையைப் புகழலுற்றான்;

அளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தநின்
மழலைக் கிளவிக்கு வருந்தின

என்று அழகுற மொழிந்தான். "மாதே! கிளியின் மொழியே செவிக்கு இன்பம் என்பர். அக்கிளியும் உன்னைப்போல் பேச மாட்டாது வாயடங்கிற்றே! குழலின் ஒலியையும், யாழின் ஒலியையும் அமிழ்தின் சுவையொடு கூட்டிக் குழைத் தாற் போன்ற இனிமை வாய்ந்தது உன்னுடைய மழலை மொழி" என்று புகழ்ந்தான் கோவலன். இப் புகழுரையில் திருக்குறளின் சொல்லும் பொருளும் அழகுற விளங்குகின்றன.

## மாலைப்பொழுது

இத்தகைய இன்ப வாழ்க்கைக்கு ஓர் இடையூறு நேர்ந்தது. பூம்புகார் நகரில் நிகழ்ந்த அரங்கேற்று விழாவில், இளமையும் அழகும் வாய்ந்த மாதவியென்னும் பொதுமகள் நாட்டியமாடினாள். கோவலன் அந்த ஆடலைக் கண்டான்; பாடலைக் கேட்டான்; மாதவியின் அழகிலே மயங்கினான்; அன்றே தன் மனைவியை மறந்தான்; மாதவியின் மையலிலே தாழ்ந்தான். அவளை மகிழ்விப்பதற்காக அளவிறந்த பொருளைச் செலவிட்டான். தன்னந்தனியளாய் இருந்து கவலையுற்றாள் கண்ணகி. நாள்தோறும் அந்திமாலையில் ஆறாத் துயரடைந்தாள். காதல் என்னும் பூ, காலையில் அரும்பும்; பொழுது செல்லச் செல்ல முதிர்ந்து போதாகும்; மாலையில் மலரும் என்று திருக்குறள் கூறுகின்றது.

காலை அரும்பி, பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்

என்பது வள்ளுவர் வாய்மொழி. இத் தன்மை வாய்ந்த அந்தி மாலை வந்தபொழுது கோவலனோடிருந்த மாதவி அடைந்த இன்பத்தையும், அவனைப் பிரிந்திருந்த கண்ணகி அடைந்த துன்பத்தையும் உணர்த்தப் போந்த இளங்கோவடிகள்,

கூடினார் பால்நிழலாய், கூடார்பால் வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோல் காட்டிற்றே – கூடிய
மாதவிக்கும் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்கும் கங்குற் பொழுது

என்று பாடினார். போதாக நிற்கும் பூக்கள் மாலைப் பொழுதில் மலரும் என்று திருவள்ளுவர் கூறிய கருத்தைத் தழுவி எழுந்தது இப்பாட்டு. வெண்ணிலாவின் ஒளி விரிந்து, போதாகநின்ற பூக்களின் கட்டவிழ்த்து இதழ் விரிக்கும் அந்திப்பொழுதில் மாதவி இன்பத்தில் திளைத்தாள்; கண்ணகி துன்பத்தில் ஆழ்ந்தாள் என்பது இதன் கருத்து.

### பழுதுற்ற மனையறம்

கோவலன் நெறி தவறி நடந்ததனால் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையும் இழந்து நின்றாள் கண்ணகி. ஆயினும், கணவனே தெய்வம் என்ற கொள்கையில் அவள் சிறிதும் தளர்ந்தாளில்லை; 'கண்டார் வெறுப்பனவே காதலன் தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக் குல மகள்' என்று ஆன்றோர் அருளிய உண்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாக வாழ்ந்தாள். எனினும், இல்லறம் நடைபெறாது ஒழிந்ததே என்ற வருத்தம் அவள் உள்ளத்தை விட்டு அகல வில்லை.

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை

என்று வள்ளுவர் விதித்தவாறு அறவோரையும் துறவோரையும் வறியோரையும் ஆதரித்தற்குரிய மனையறம் முட்டுப் பட்டதே என்று அவள் மயக்கமுற்றாள்.

அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை

என்று கூறுமாற்றால் அவள் மனப்பான்மை விளங்கும்.

## கண்ணகியின் கண்ணீர்

இன்பத்துறையில் மூழ்கிய கோவலன் கைப்பொருளெல்லாம் இழந்தான். கண்ணகியின் அணிகலன்களும் ஒன்றன் பின் ஒன்றாய்ச் சென்றொழிந்தன. அவள் காலணியாகிய சிலம்பொன்றே எஞ்சி நின்றது. இந்தநிலையில் கோவலனுக்கும் மாதவிக்கும் பிணக்கம் உண்டாயிற்று. கடற்கரையில் மாதவி பாடிய கானல் வரிப்பாட்டு அவ்விருவரையும் பிரித்தது. 'மாயப் பொய்பல கூட்டும் மாயத்தாள்' என்று மாதவியை வெறுத்து நீத்த கோவலன் மீண்டும் கண்ணகியிடம் போந்தான்; தன் சிறுமையை நினைந்து சிந்தை தளர்ந்தான்; வாழ்ந்து கெட்ட வளநகரில் இருப்பதற்கு நாணி, கண்ணகியுடன் மதுரைக்குப் புறப்பட்டான்; அந்நகரில் அவளுடைய சிலம்பை விற்றுப் பிழைப்பிற்கு வழிதேடக் கருதினான்; ஒற்றைச் சிலம்பை எடுத்துக் கொண்டு கடைத்தெருவிற் சென்றான். அங்கு அரண்மனைச் சிலம்பைக் களவாடிய கள்வன் என்ற அடாப் பழி சுமத்தி அரசன் ஆணையால் கோவலனைக் கொலை செய்தனர் காவலாளர். கணவனுக்கு நேர்ந்த கொடுமையை அறிந்தாள் கண்ணகி; மனந்துடித்தாள்; கண்ணீர் வடித்தாள்; அறம் எனக்கு இல்லையோ என்று அலறினாள்; தலைவிரி கோல மாக அரண்மனையை நோக்கி நடந்தாள்; செல்லும் வழி யெல்லாம் கண்ணீர் சொரிந்தாள்.

அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை

என்றார் திருவள்ளுவர். ஏழையர் வடிக்கும் கண்ணீரால் விளையும் தீமையை அறிந்த மதுரை மாநகரத்தார் வீதியின் இரு மருங்கும் நின்று கண்ணகியைக் கண்டு கலங்கினார்கள். அவர்களைப் பார்த்து, 'நிறையுடைப் பத்தினி பெண்டிர்காள்!

கள்வனோ அல்லன் என் கணவன்!' என்று கதறினாள் கண்ணகி. அவள் கோலத்தைக் கண்டு குலுங்கிற்று மதுரை மாநகரம்.

அல்லல்உற்று ஆற்றாது அழுவாளைக் கண்டிரங்கி
மல்லல் மதுரையார் எல்லாரும் தாம்மயங்கிக்
களையாத துன்பம்இக் காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்தது

என்று மதுரையார் வருந்தியதாகச் சிலம்பு பாடிற்று.

## வீரக் கற்பு

மதுரை மாநகரில் கோவலனைப் பறிகொடுத்த பொழுது கண்ணகியின் அறக் கற்பு மறக் கற்பாயிற்று. புகார்நகரில் பொறையிருந்து ஆற்றிய கண்ணகி மதுரை மன்னனது முறை யிகந்த செயலைக் கண்டு சீறினாள்; 'தீவேந்தன் தனைக்கண்டு இத்திறங் கேட்பேன்' என்று துணிந்தாள். அவள் வாய் மொழி யில் கற்பென்னும் திண்மை புலனாகின்றது.

பெண்ணின் பெருந்தக்க யாவுள, கற்பெனும்
திண்மைஉண் டாகப் பெறின்

என்றார் திருவள்ளுவர். மன்னனைக் காணச்சென்ற கண்ணகி அத்திண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாயினாள்; அரண்மனை வாயிலைக் காத்து நின்ற சேவகனைக் கண்டாள். சீற்றம் பொங்கி எழுந்தது. குற்றமற்ற கோவலனைக் கொன்ற கொடுங் கோல் மன்னனின் சேவகன் அல்லனோ இவன் என்று அவள் மனங்கொதித்தாள்.

அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து
இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே

என்று வல்லோசை செறிந்த மொழிகளால் அவனை விளித் தாள்; அரசனைக் காணவேண்டும் என்று அறிவித்தாள். அனுமதி கிடைத்தவுடன் உள்ளேசென்று அரியாசனத்தில் கோப்பெருந்தேவியோடு அமர்ந்திருந்த மன்னன் முன்னே நின்றாள் கண்ணகி. அழுத கண்ணும் அவிழ்ந்த தலையும், மாசடைந்த மேனியும், மணிச்சிலம்பேந்தியகையும் உடைய

ளாய் நின்ற கண்ணகியைக் கண்ட பொழுது துணுக்க முற்றான் காவலன்.

மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும் – வையைக்கோன்
கண்டளவே தோற்றான்

என்னும் சிலப்பதிகார அடிகளில் கற்பின் திண்மையைக் காணலாம். அப்போது அரசன் அவளை நோக்கி, 'கண்ணீர் வடித்து நிற்கும் மாதே! நீ யார்?' என்று வினவினான். அதற்கு மாற்றமுரைக்கப்போந்த கண்ணகி, நெறிமுறை வழுவாத சோழ மன்னன் ஆண்ட புகார் நகரத்தில் பிறந்தவள் என்று தன்னை அறிவித்தாள்;

வாயின் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும் பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகார்என் பதியே.

என்று பேசினாள்.

## இறையும் முறையும்

கண்ணகி குறித்த சோழ மன்னன் வள்ளுவர் கூறிய அரச நீதிக்கு ஒரு சான்றாக விளங்கினான்.

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்

என்பது வள்ளுவர் வாக்கு. 'மாநிலத்தையெல்லாம் மன்னன் காப்பான்; அம் மன்னனை நீதி காக்கும்' என்றார் வள்ளுவர். 'நீதி செலுத்துங்கால் இன்னான் இனியான் என்று பார்க்கலாகாது; குலத்தையும் நலத்தையும் கருதலாகாது; எல்லார்க்கும் நீதி ஒன்றே' என்ற நேர்மையான உணர்ச்சியோடு மன்னன் முறைசெய்தல் வேண்டும்; அதுவே முட்டாமல் நீதி செலுத்தும் முறையாகும். இக்கருத்தை மனத்திற்கொண்டு தவறு செய்வார் எவரேயாயினும் தயக்கமின்றித் தண்டம் விதித்தனர் தமிழ் வேந்தர். அன்னவருள் தலைசிறந்தவன் கண்ணகி எடுத்

துரைத்த சோழ மன்னன். ஒரு பசுவின் கன்றைக் கொன்ற அரசிளங்குமரனைத் தானே கொன்று முறை செய்த அம்மன்னனை மாநிலம் வியந்து புகழ்ந்தது. அரச நீதிக்கு அவன் அருஞ் செயலே எடுத்துக்காட்டாயிற்று. கணவனை இழந்த கண்ணகி பாண்டிய மன்னனிடம் வழக்குரைக்கச் சென்றாற் போலவே சோழ மன்னனிடம் முறையிடச் சென்றது கன்றை யிழந்த பசு. கண்ணீர் வடித்து நின்ற பசுவின் குறையறிந்து முறைசெய்த காவலனைப்போல், கண்ணீர் உகுத்த ஒரு பெண்ணின் குறையறிந்து முறை செய்தல் பாண்டியன் கடமை என்று குறிப்பாக உணர்த்தினாள் கண்ணகி.

## கொலைத் தண்டனை

அத்தகைய செங்கோல் மன்னன் அரசு புரிந்த சோழ நாட்டில், மாசாத்துவானுக்கு மகனாய்ப் பிறந்து, ஊழ் வினைப் பயனால் மதுரையிற் போந்து, சிலம்பு விற்கச் சென்றவிடத்தில் அரசன் ஆணையால் கொலையுண்டு இறந்த கோவலன் மனைவி என்று தன்னை அறிவித்தாள் கண்ணகி. அப்போது, கோவலனைக் கள்வன் என்றே கருதியிருந்தான் காவலன். கள்வனைக் கொல்லுதல் காவலன் கடமை என்று நீதி நூல் கூறுகின்றது.

> கொலையிற் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனொடு நேர்

என்றார் வள்ளுவர். நாட்டில் களவுசெய்பவர், சூதையாடு பவர், கொலை புரிபவர் முதலியோர்க்குக் கொலைத் தண்டம் விதித்தல் அரசனுடைய கடமை என்று வள்ளுவர் கூறிய முறையில்,

> கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று
> வெள்வேற் கொற்றம் காண்

என்று கண்ணகியிடம் நீதிமுறையை எடுத்துரைத்தான் பாண்டியன். அம்மொழி கேட்ட கண்ணகியின் உள்ளம் கொதித்தது. கற்பென்னும் திண்மையால் மீண்டும் பேசலுற்

*றாள்: 'நற்றிறம் படராக் கொற்கை வேந்தே! என் கணவன் கையில் இருந்தது களவாடிய சிலம்பன்று; அஃது என் சிலம்பு; அதனுள்ளே அமைந்த பரல் மாணிக்கம்' என்றாள்; உடனே அச்சிலம்பை எடுத்து வந்தான் அரசன். உணர்ச்சி வசப்பட்ட கண்ணகி அதை உடைத்தாள். உள்ளேயிருந்த மாணிக்கம் துள்ளி எழுந்து மன்னன் முன்னே விழுந்தது. அதைக் கண்டு திடுக்கிட்டான் அரசன்; கோவலன் கள்வனல்லன்; அவன் உரையிக் கவர்ந்ததானே கள்வன் என்று உணர்ந்தான்.*

யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்கும் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது, கெடுக என் ஆயுள்

*என்று மயங்கி விழுந்தான்; மாண்டான்.*

## *வினைப்பயன்*

*அப்பொழுது அவனருகேயிருந்த கோப்பெருந்தேவி, நெஞ்சம் குலைந்து நடுங்கினாள்; கணவனையிழந்து கடுந்துயருற்ற கண்ணகிக்கு ஆறுதல் கூறும் வகையறியாது அவள் அடிகளில் விழுந்து தொழுதாள். மன்னவன் தீவினையால் இறந்துபட்டான் என்று தெள்ளிதின் உணர்ந்தாள் கண்ணகி;*

பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும்

*என்ற வள்ளுவர் வாக்கின்படி கோவலனைக் கொன்ற தீமையே விரைந்து வந்து பாண்டியன் உயிரைக் கவர்ந்தது என்னும் உண்மையைக் கோப்பெருந்தேவியிடம் எடுத்துரைத்தாள்:*

கோவேந்தன் தேவி! கொடுவினை யாட்டியேன்
யாவும் தெரியா இயல்பினேன் ஆயினும்
முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றி காண்

*"பாண்டிமா தேவி! கேள். பாவியேன் ஒன்றுமறியாத பேதையே: ஆயினும் காலையில் ஒருவனுக்குக் கேடு செய்தவன் மாலை*

யில் கேடுறுவான் என்பதை இன்று கண்கூடாகக் கண்டோம்'' என்று கூறினாள். கற்பிற் சிறந்த கோப்பெருந்தேவியும் கணவன் இறந்த துயரத்தால் உயிர் துறந்தாள்.

'நல்வினை செய்தவர் நன்மையடைவர்; தீவினை செய்வதர் தீமையுறுவர்' என்பது அறநூலோர் கொள்கை. தீவினையால் வரும் துன்பத்தைத் தெளிவுறக் கூறுவது திருக்குறள்.

எனைப்பகை உற்றாரும் உய்வர், வினைப்பகை
வீயாது பின்சென்று அடும்

என்பது வள்ளுவர் வாக்கு. இவ் வாக்கை ஆதரித்து "ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்" என்றார் இளங்கோவடிகள். காவலன் தவறிழைத்ததும், கோவலன் கொலையுண்டதும், கண்ணகி துயருழந்ததும் வினைப்பகையால் நிகழ்ந்தன என்பது சிலப்பதிகாரத்தில் விளக்கப்படுகின்றது.

தொல்லை வினையால் துயர்உழந்தாள் கண்ணின்நீர்
கொல்ல உயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ

என்று வல்வினையால் துன்புற்ற நல்லரசனை வாழ்த்தினார் இளங்கோவடிகள்.

## கற்பின் பெருமை

வீர மாபத்தினியாகிய கண்ணகி மதுரையைவிட்டு நீங்கி, மேற்றிசை நோக்கிச் சென்று மலைநாட்டை அடைந்தாள்; அங்குள்ள திருச் செங்குன்று என்னும் மலைமேலேறி ஒரு வேங்கை மரத்தின் நிழலில் நின்றாள். அப்பொழுது வான ஊர்தி ஒன்று அவ்விடத்தை நோக்கிவந்தது; அவளை ஏற்றிக் கொண்டு விண்ணுலகம் சென்றது. வானவர் மலர்மாரி பெய்தனர்.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை

என்ற வள்ளுவர் வாய்மொழியை நினைந்து இளங்கோவடிகள் கற்பின் செல்வியைப் போற்றுகின்றார்:

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுவாளைத்
தெய்வம் தொழுந்தகைமை திண்ணிதால் – தெய்வமாய்
மண்ணக மாதர்க்கு அணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து

என்பது அவர் திருவாக்கு.

## மானவீரம்

மலை நாடடைந்து தெய்வீகமுற்ற கண்ணகியின் வரலாற்றை அறிந்தான் சேரநாட்டு அரசனாகிய செங்குட்டுவன், தன் நாட்டில் அவ் வீர மாபத்தினிக்குக் கோயில் அமைத்து விழா வெடுக்க விரும்பினான்; இமயமலையில் சிலையெடுத்து, கங்கையாற்றில் நீராட்டி, வஞ்சி மாநகரில் கண்ணகியின் திருவுருவை நிறுவ ஆசைப்பட்டான். அதற்காக வட நாட்டிற்குச் செல்லுமுன்னே ஒரு செய்தி சேரன் செவிக்கு எட்டியது. கனகன் விசயன் என்னும் சிற்றரசர் இருவர், வடநாட்டரசர் பலர் குழுமியிருந்த சபையில் தமிழ் நாட்டரசருடைய வீரத்தைப் பழித்துரைத்தனர் என்று கேள்வியுற்ற சேரன் கடுஞ் சீற்றங் கொண்டான். மான வீரம் அவன் மனத்தில் முறுகி எழுந்தது.

யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்இழுக்குப் பட்டு[6]

என்ற வள்ளுவர் வாக்கின் உண்மையை அச்சிற்றரசர்க்கு உணர்த்த முற்பட்டான்; வாய் வீச்சிலே சிறந்த இருவரையும் வாள்வீச்சால் வென்று அடக்க விழைந்தான். தமிழ்ப்படை திரண்டு எழுந்தது. அதன் தலைவனாக வஞ்சி மாலை சூடிச் சென்றான் வீரன் செங்குட்டுவன். அப்படையெடுப்பில் நோக்கத்தை அவன் வாய் மொழியால் விளக்குகின்றது சிலப்பதிகாரம்.

காவா நாவின் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடும் கூடி
அருந்தமி ழாற்றல் அறிந்திலர் ஆங்கெனக்
கூற்றங் கொண்டுஇச் சேனை செல்வது

என்று கூறினான் சேர மன்னன்.

வடநாட்டில் தமிழ்ச் சேனைக்கும் வடவர் சேனைக்கும் போர் நிகழ்ந்தது. அப் போரில் எளிதாக வெற்றி பெற்றது தமிழ்ச் சேனை. வாய்வீரம் பேசிய கனகனும் விசயனும் சேரன் கையில் சிக்கிக்கொண்டனர் கண்ணகியின் திருவுருவம் செய்வதற்காக இமயமலையில் எடுத்த கல்லை அவ்விருவர் தலையிலும் ஏற்றினான் தமிழ் வேந்தன். வஞ்சி மாநகர் வரையும் அதைச் சுமந்து வந்தனர் வடவாரியர். இங்ஙனம் தலையாலே சிலை சுமந்து அன்னார் இழுக்குற்ற செய்தியை வள்ளுவர் வாக்கைத் தழுவிச் சிலப்பதிகாரம் விரித்துரைக்கின்றது.

அறவுரை

சேரன் செங்குட்டுவன் தமிழ் நாட்டுப் பெருவீரன்; பல போர்க்களங்களில் வெற்றிமாலை சூடிப் புகழ் பெற்றவன். பதிற்றுப் பத்து முதலிய பழந்தமிழ் நூல்கள் அவன் சிறப்பினை விரித்துக் கூறும். இத்தகைய மறப்போர் மன்னனுக்கு அறிவுரை கூற ஆசைப்பட்டான் மாடலன் என்னும் அறவோன்.

இவ்வுலகில் நிலையற்ற பொருள்களை நிலையாகக் கருதலாகாது என்ற கருத்தை,

> நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை

என்று கூறினார் வள்ளுவர். இக் குறளில் ‘நில்லாதவை’ என்று வள்ளுவர் சொல்லிய பொருள்கள் எவை என்ற வினாவிற்கு விடை தருகின்றது சிலப்பதிகாரம். யாக்கை நில்லாது; செல்வம் நில்லாது; இளமை நில்லாது என்று மாடலன் வாயிலாகக் கூறுகின்றார் இளங்கோவடிகள். சேரமன்னனை நோக்கி,

> வையம் காவல் பூண்டநின் நல்யாண்டு
> ஐயைந் திரட்டி சென்றதன் பின்னும்
> அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
> மறக்கள வேள்வி செய்வோய் ஆயினை

என்று செவியறிவுறுத்தத் தொடங்கினான். மாடலன் ‘அரசே! பெருமை சான்ற உன் குலத்தில் பிறந்து, செயற்கரிய செய்த

*வீரருள் எவரேனும் இன்று வாழ்கின்றனரா? அரும் புகழ் பெற்ற அம் மன்னர் அனைவரும் இவ்வுலகை விட்டு அகன் றனரே! அதனால் யாக்கை நில்லாது என்பதை உணர்ந்தா யல்லையோ! செல்வம் நில்லாது என்பதை உன்னோடு போர்புரிந்து தோல்வியுற்ற கனக விசயர் வாழ்க்கை காட்டு கின்றதன்றோ?*

செல்வம் நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரில்
கண்டனை அல்லையோ காவல் வேந்தே!

*இளமை நில்லாது என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? மன்னர் மன்னனாகிய நீயும் முதுமையுற்றாயே! யாக்கையும் செல்வமும் இளமையும் நிலையற்ற இவ்வுலகில் அழியாத பொருள் அறம் ஒன்றே என்று அறிவுரை பகர்ந்தான். மேலும்,*

அன்றறிவாம் என்னாது அறம்செய்க, மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை

*என்ற வள்ளுவர் வாய்மொழியை மாடலன் வாயிலாக விளக்க லுற்றார் இளங்கோவடிகள். அழியாத்தன்மை வாய்ந்த அறத் தினை இன்றே செய்தல் வேண்டும். நாளைச் செய்வோம் என்றிருத்தல் ஆகாது. ஏனெனில்,*

நாளைச் செய்குவம் அறம்எனில் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகில் முழுவதும் இல்லை

*என்று சிலப்பதிகாரம் விளக்குகின்றது.*

*கற்பின் செல்வியாகிய கண்ணகியின் கதையை ஒரு முத் தமிழ்க் காப்பியமாக உருப்படுத்திய இளங்கோவடிகள் மூன்று சிறந்த உண்மைகளை அதன் வாயிலாக உணர்த்திப் போந்தார். நீதிநெறி தவறிய அரசரை அறமே ஒறுக்கும் என்ப தும், மாசிலாக் கற்புடைய மாதரை மண்ணும் விண்ணும் வணங்கும் என்பதும் ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்*

என்பதும் சிலப்பதிகாரத்தால் உணர்த்தப்படுகின்றன. இம் மூன்றையும் 'முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோற்போற்றும்' தமிழிலக்கிய மரபைத் தழுவி வள்ளுவர் வாய்மொழியால் விளக்கியருளினார் இளங்கோவடிகள்.

## குறிப்புகள்

1. வாழி அவன்தன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி - சிலப் பதிகாரம் - கானல் வரிப்பாட்டு.
2. பொதியிலாயினும் இமய மாயினும
   ..................................................
   பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்
   நடுக்கின்றி நிலைஇய என்ப தல்லதை
   ஒடுக்கம் கூறார் உயர்ந்தோர் உண்மையின்
   முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே (சிலப். மங்கல வாழ்த்து)
3. பத்துப்பாட்டு, பட்டினப்பாலை: 195 - 192.
4. பத்துப்பாட்டு, பட்டினப்பாலை: 202 - 210.
5. இவற்றான் சொல்லியது, ஒளியும் ஊறும் நாற்றமும் சுவையும் ஓசையும் ஆகலின், "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியுமைம் புலனும், ஒண்டொடி கண்ணே யுள" என நலம் பாராட்டப்பட்டன - சிலப்பதிகாரம் 73 - 74 அடியார்க்கு நல்லார் உரை.
6. ஆக்கப் படுக்கும், அருந்தளை வாய்ப் பெய்விக்கும்
   போக்கப் படுக்கும், புலைநரகத் துய்ப்பிக்கும்
   காக்கப் படுவன இந்திரியம் ஐந்தினும்
   நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே

   என்பது வளையாபதி.

24

# பாரதிதாசன் திருக்குறள் உரை

# வள்ளுவர் உள்ளம்

**1955**

**பாரதிதாசன்**

முன்முகம்

காவலன் காவான் எனின்...?

தமிழர்கள் ஆண்ட நாளில் அரசியல் ஆறு துறையாய் வகுத்து ஆட்சி நடத்தப்பட்டது. அவை, உழவு, தொழில், வாணிகம், கல்வி, தச்சு, வரைவு என்பன.

உழவும் தொழில் என்னும் துறையில் அடங்குமேனும், சிறப்புக் கருதி உழவுத் தொழிலைத் தனித் துறையாக வைத்துக் கருத்தூன்றிக் காத்து வந்தார்கள். உழவும் தச்சும் (சிற்பம்) நீங்கிய பிற வேலை அனைத்தும் தொழிற்றுறையில் அடங்கியவை.

எழுத்து, சொல், பொருள் என்பனவும் கோள் நிலையறிதல், மருத்துவம் முதலியனவும் போர்ப் பயிற்சியும் கல்வி என்ற துறையில் அடங்கும்.

வரைவு என்னும் துறையாவது யாது? - எல்லைப் பிரிவை உறுதி செய்தல், கோட்டை கட்டுதல் முதல் குளம் வெட்டுதல் வரைக்குமுள்ள இடங்களை வரையறுத்தலும் அளவு செய்த லும் முதலியவை.

இந்த ஆறு துறைக்கும் அக்காலத்தில் ஆறு அமைச்சர் களை அமைத்துத் திறம்படி நாட்டைக் காத்து வந்தான் தமிழரசன்!

ஆறு துறையே அன்றிப் போர்த்துறை ஒன்று தனியே இருந்து வந்ததோ எனில் அவ்வாறில்லை. கல்வி என்னும் துறையில் போர்ப் பயிற்சியும் அடங்கியது என்று முன்னமே சொன்னேன். ஒரு துறைக்கு ஓர் அமைச்சனே அன்றிப் பல அமைச்சரை அமைத்தலும் உண்டு.

இந்த ஆறு துறையின் ஆறு அமைச்சர்களுக்கும் அலு வலகம் ஒன்றே; அது இந்நாளைய 'செக்ரடேரியேட்' போன் றது. அந்த அலுவலகத்தில் கருமத்தலைவன் ஒருவனிருப் பான் அவன் எல்லாத் துறையிலும் வல்லவன். அவனுடைய அலுவற்பெயர் "வள்ளுவன்" என்பது.

வள்ளுவன் சாக்கை எனும் பெயர் மன்னற்கு
உள்படு கருமத் தலைவற்கு ஒன்றும்

என்னும் பிங்கலந்தைச் செய்யுள் இங்குக் கருதத்தக்கது. உள் படு கருமத் தலைமை என்பது வள்ளுவன் என்ற அலுவற் பெயரையே குறித்து நின்றது காண்க.

பின் நாளில் வள்ளுவன் என்ற சொல் சாதியைக் குறிப்ப தாகக் கருதும் நிலை உண்டாயிற்று. இப்படிப் பல. அகம் பட்டன் என்ற சொல் அரசனின் அகச் சுற்றம் ஆறில் - மருத்துவப் புலவன் பெயர். இதைப் பண்டிதச் சொல்லாலும் வழங்கி வந்ததுண்டு. இந்நாளில் இழிந்த சாதிக்காரர் என்று எண்ணும்படி ஆக்கப்பட்டிருக்கிறது.

வள்ளுவன் என்ற சொல், வண்மையினடியாகப் பிறந் தது. வண்மை என்றது அறிவு வளத்தை. (நம் திருவள்ளுவர்

இயற்பெயர் தேவர் என்பதும், அவரின் அலுவற் பெயரே வள்ளுவர் என்பதும் இங்கு நாம் அறிந்து இன்புறுவோமாக.)

அந்நாளில் அரசியல் பொறி என்ன அழகாக, எவ்வளவு திட்டவட்டமாக இயங்கி வந்தது என்பதை நாம் உற்று நோக்க வேண்டும். இதை விவரிக்க இங்கு இடம் போதவில்லை. கோனாட்சி, குடியாட்சி, குடிக்கோனாட்சி என்ற அரசியல் முறைகளில் அந்நாளைய ஆட்சியைக் குடிக்கோனாட்சி எனல் வேண்டும். இந்நாள் சில நாடுகள் நல்லதோர் ஆட்சி முறையில் நடந்து வருவன என்று நாம் எண்ணுகின்றோம். இருக்கலாம். அதுமட்டுமல்ல. இன்னும் சிறந்த வகையில் ஆட்சி முறை வகுக்கப்படலாம். அவை அனைத்தும் பண்டைய தமிழர் வகுத்த குடிக்கோனட்சியில்தான் வந்து முடியும் என்பது மறுக்க முடியாது.

குடிக்கோனாட்சி ஒன்றுதான் சனநாயகம் - குடியாட்சி என்பதெல்லாம். மக்களின் நன்மையை - அவர்களின் முழுதுரிமையை முன்னின்று நடத்த என்றைக்கும், எங்கும் ஓர் ஆள் வேண்டும். மக்களே நேரிலிருந்து தமக்கு வேண்டியவற்றைச் செய்து கொள்வதென்பது முடியாதது.

முடுக்கிவிட்டால், அரசியற் பொறி (எந்திரம்) தன்னிலையில் சுழன்று கொண்டு போகுமே, அதற்கு அரசன் எதற்கு என்று கேட்கலாம். இது அறிவற்ற கேள்வி. பொறி இயக்குவோனின் அன்புள்ளம், அப்பொறி இயங்க இன்றியமையாத ஓர் மின்னாற்றல்.

அரசன் தன் காத்தற்றொழிலைச் செவ்வனம் செய்யான் எனில் ஆறு துறையும் நடவா. நாட்டுக்கு ஆகிக் கொண்டு வந்த பயன் ஆகாமலே அளவிற் குன்றிவிடும். இவற்றை எல்லாம் வள்ளுவர் நமக்கு ஒரே குறளில் காட்டுகின்றார். பழந்தமிழ் நாட்டின் படப்பிடிப்பை நாம் அறிந்து கூத்தாட வேண்டும். என்ன?

**ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்.**

‘கொடுங்கோன்மை’ அதிகாரத்தில் 10ஆம் செய்யுள் இது. ‘காவலன் காவான் எனின் ஆபயன் குன்றும், அறுதொழி லோர் நூல்மறப்பர்’ என்று மொழி மாற்றிப் பொருள் கொள்க.

ஆபயன் என்பதற்குப் பரிமேலழகர் பசுவின் பயன் (பால்) குறையில் என்று பொருள் கொண்டார். அவர் ஆபயன் என்றதை ஆவினது பயன் என ஆறாம் வேற்றுமைத் தொகை யாகக் கொண்டார் அவ்வாறு கொண்டால் ஆப்பயன் என ஒற்று மிகவேண்டும், ‘ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும் கோவலர்’ என்ற சிலப்பதிகாரத்திற் போல!

எனவே, ஆபயன் என்பது வினைத்தொகை நிலைத் தொடர் என்க. காலங்கரந்த பெயரெச்சம் வினைக்குறை என்பது வினைத்தொகை இலக்கணம்.

“ஆபயன் என்பது ஆனபயன், ஆகின்ற பயன், ஆகும் பயன் என முக்காலத்துக்கும் விரியும். இங்கு ஆனபயன் என்ற இறந்த காலத்துக்கு விரிக்க. ஆபயன் (ஆனபயன்) என்றால் அரசன் நல்லபடி ஆண்டு வந்த போது ஆனபயன் என்பது பொருள். அவையாவன: பகையரசர் அஞ்சிக் கப்பம் கட்டுதல், வரி வரவு முதலியவை.

இனி, அறுதொழிலோர் என்பது உழவு, தொழில், வாணிகம், கல்வி, தச்சு, வரைவு ஆகிய ஆறு தொழிலுக் குரியோர். அவர்தாம் ஆறு அமைச்சர்.

**நூல் மறப்பர் – தம் கொள்கையை விடுவர்.**

**நூல் – கொள்கை. மறத்தல் – கைவிடுதல்.**

இனிப் பரிமேலழகர் அறுதொழில் என்பது ஆரிய மறை யோதுதல், ஓதுவித்தல், வேட்டல் (கொலை வேள்வி முதலி யவை), வேட்பித்தல், அறிவு தரல், பிச்சைபுகல் ஆகிய ஆறு தொழில் என்றார். பொருந்துமா? ஆரியர், தீயொழுக் கம் தமிழர்பால் தலைநீட்டத் தொடங்கக் கண்டருளிய வள்ளுவர் அவற்றை மறுத்துத் தமிழரை தமிதுர் நெறியில் நிறுத்த அருளிய திருக்குறளில், ஆரியர் அறுதொழில் இந் நாட்டில்

நடவாது ஒழிந்து விடுமே என்றா அழுவார்? எனவே பரி மேலழகர் கொண்ட பொருள் பொய்ப் பொருள் என விடுக்க.

*- தென்றல்: மலர் 2 : இதழ் 21 (5-11-55)*

## வள்ளுவர் உள்ளம்

### உரைப் பாயிரம்

சீரோங்கி வாழ்ந்த திருவள்ளுவர் இப் பாரோங்கி வாழச் செந்தமிழால் திருக்குறள் என்னும் செய்யுள் செய்யத் திரு வுளங் கொண்டார்.

செய்யுள் என்பது செவ்விய உள்ளம். அஃது நூலுக் காயிற்று. ஆகுபெயர். இனி எப்பொருள் கொண்டு செய்யுள் செய்தார் என்பது கேள்வி, நிலம், நீர், நெருப்பு, உயிர், விசும்பு ஆகியவையும், அவற்றின் பகுதியாகிய உலகம், மக்கள், விலங்கு, பறவை முதலியனவும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவையும் அறிவு, முனைப்பு, மனம், ஆதி (மூலப் பகுதி) இறைவன் (பகவன்) ஆகியவையும், அறம், பொருள், இன்பம் ஆகியவையும் அவற்றின் நிலையின்மையும் பிறவு மாகக் கூறப்பட்ட பருப் பொருள் நுண்பொருள் அனைத்தும் பொருள்களே.

இப் பொருள்கள் அனைத்தும் அகப் பொருள் புறப் பொருள் என இரும் பெரும் பிரிவாக்கப்படும். செய்யுள் செய் வார் அகப் பொருளையும் புறப் பொருளையும் வைத்தேனும், இவ்விரண்டில் ஒன்றை வைத்தேனும் செய்யுள் செய்வர். அந் நெறியே பற்றி அகம். புறமாகிய இருதிணையையும் வைத்துச் செய்யுள் செய்தருளினார் திருவள்ளுவர் என்பது விடை.

இனி அகம் புறம் எனும் இரு பொருளும் பற்றிச் செய்யுள் செய்தார் ஆயின் அவற்றால் எய்தும் பயன்கள் எவை எனின், இவ்வாறு நூற்பயன் நான்காகக் கொள்வது வடவர் முறை அன்றோ எனின், அன்று, கடல் கொண்ட குமரி நாட்டு முதற் கழகத்தார். உலகுக்கு முதற்கண் அருளிய தமிழ் நான்மறை என்பது அறம், பொருள் இன்பம், வீடு எனும் நான்கும் பற்றிய

தன்றோ? அந்நான்கனுள் அறமாவது தமிழ்ச் சான்றோர் களால் தமிழ் நான்மறை முதலிய நூற்களில் செய்க என்ற வற்றைச் செய்தலும் மனு முதலிய நூற்கள் கூறிவற்றை விலக் கலுமாம், அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப் படும். அவற்றுள் ஒழுக்கமாவது, அறம் எனச் சொல்லிய வற்றினின்று வழுவாது ஒழுகுதல்.

வழக்காவது ஒரு பொருள் மேல் 'என்னுடையது' 'என்னு டையது' என இருவருக்கு ஏற்படும் மாறுபாடு காரணமாகத் தொடர்வது. அது கடன்படல் முதல் பதினெட்டுப் பிரிவு களையுடையது.

தண்டமாவது அக ஒழுக்க நெறியினும் வழக்கு நெறி யினும் வழுவினோரை அந்நெறி நிறுத்தற் பொருட்டு ஒப்ப நாடித் தக்கவாறு தண்டித்தல். தண்டு - கோல், தடி அதனடி யாகப்பிறந்தவை. தண்டம்-தண்டனை-தண்டித்தல், தூய தமிழ்ச் சொற்கள். அறமும் வழக்கும் தண்டமும் அறமே யாயினும் அறநூற் செய்த தமிழ்ச்சான்றோர் பின்னிரண்டை யும் மன்னன்பால் அளித்து முறைசெய்யச் சொல்லியருளு வார். மற்றைய அறமேயும் இல்லறம், துறவறம் என்னும் இரு வகைத்தாதலின் அவற்றுள் இல்லறத்தை முதற்கண் கூறுவான் தொடங்கி அனைத்தும் நிகழ்தற்குரிய உலகின் தோற்றத்தை ஈண்டுக் கூறுகின்றார்.

## அறத்துப்பால்

அதாவது அறத்தைக் கூறும் பகுதி இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## அதிகாரம் 1. உலகின் தோற்றம்

அதாவது உலகாகிய இடம், உலகத்து உயிர்கள், அவற் றின் நிலை ஆகியவை தோன்றும் முறையாம்.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

என்பது பாட்டு.

"அகரம் முதல எழுத்து எல்லாம் ஆதி
பகவன் முதற்று ஏ உலகு." என்பது அப்பாட்டின் சொற்களைப் பிரித்துரைத்து.

அகரம் முதல் எழுத்து எல்லாம் ஆதி
உலகு பகவன் முதற்று ஏ

என்பது சொற்களைப் பிரித்து மொழி மாற்றியமைத்தது. மேற் செய்யுட்களுக்கெல்லாம் சொற் பிரித்தலை மட்டும் குறிக்க "ப" என்பதையும், அதனோடு மொழி மாற்றையும் குறிக்க 'பி. மா' என்பதையும் குறிக்கப்படும்.

பொருள்: - அகரம் முதல்-அகரத்தை முதலாக உடைய, எழுத்து-எழுத்துக்களும், எல்லாம்- அவ்வெழுத்துக்களாலாகிய சொற்களும், அச்சொற்களால் பெறப்படும் பொருள்களுமாகிய எல்லாம். ஆதி - முதன்மையினின்று தோன்றியவை. உலகு பகவன் முதற்று - மக்கள் பகவனை முதல்வனாகக் கொள்ளத் தக்கவர்.

கருத்து : உலகும், உயிர்களும், மற்றுள்ளவைகளும் ஆதி என்பதினின்று தோன்றியவை, ஆயினும் உலக மக்கள் பெறத் தக்க பேறு மெய்யுணர்வு ஒன்றே.

ஏ-ஈற்றசை. முதல்-குறிப்புப் பெயரெச்சம். மலர, காய (அகம்) என வந்தன காண்க, ஆதி-வட சொல்லன்று. தூய தமிழ்ச் சொல்லே அஃது ஆதல் எனப் பொருள்படும் தொழிற் பெயர். ஆ-முதல் நிலை, தி-இறுதி நிலை. செய்தி, உய்தி என்பவற்றிற் போல. ஆதி-முதன்மை ஒரு பொருள் சொற்கள். இதை வடவர் மூலப் பிரகிருதி என்பர்.

ஆதியாவது எல்லாப் பொருளும் தோன்றுதற்கிடமாவது. இதை,

**தனையறிவரிதாய்த் தாமுக் குணமாய்**
**மனநிகழ் வின்றி மாண்பமைப் பொருளாய்**
**எல்லாப் பொருளும் தோன்றுதற் கிடமெனச்**
**சொல்லுதல் மூலப் பகுதி. (மணி—சமய 203–206)**

என்பதாலும் அறிக. காமம் வெகுளி, மயக்கம் ஆகிய மூன்று பண்புகளும் ஒன்றுபட்ட நிலை ஆதி என்று உணரப்படும். அவற்றின் கலங்கிய நிலையே இவ்வுலக மெல்லாம் என்க. எல்லாம் ஆதி என்றதால், உலகம் ஆதி அல்லது முதன்மை யினின்று தோன்றியது என்றவாறாயிற்று. எல்லாம் ஆதியி னின்று தோன்றின என்னாது, எல்லாம் ஆதி என்றது என்னை யெனில் காரணத்தில் உள்ளதே காரியத்திலும் உள்ளது என்னும் உள்ளது சிறத்தல் (சற்காரியவாதம்) ஆனதோர் முறை கொண்டு, மகனறிவு, தந்தையறிவு (நாலடி) என்பது போல, எல்லாம் எழுவாய். ஆதி - பயனிலை.

பகவன் வட சொல் அன்று; பகல் எனப் பொருள்படும் பகவு ஆண்பால் இறுதிநிலை, பெற்றது. பகல்-அறிவு, ஆகு பெயர். உணர்வு எனலும் அஃது. பகவன் ஆண்பாலாற் சொல் லப்படினும், பகவு அஃதாவது உணர்வு என்றே கொள்க. மேலைச் செய்யுட்களிலும் இவ்வாறே:

அறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்
பொறியுணர் விக்கும் பொதுவு மன்றி
அப்பொருள் எல்லாம் அறிந்திடற் குணர்வாய்
ஒன்றாய் எங்கும் பரந்து நித்திய மாய்
நின்றுள உணர்வாய் நிகழ்தரும் புருடன்

(மணி, சமய : 227–232),

என்பதால் பகவன் இலக்கணம் அறியப்படும்.

எண்ணூலை வடவர் சாங்கியம் என்பர். எண்ணூல் என்பது அனைத்தும் இருபத்தைந்து தத்துவமென எண்ணப்படு தலின் வந்த காரணப் பெயர். சாங்கியம் என்பது சங்கியையை யுடையது. சாங்கியம் ஆனது வடமொழித் தத்திதப் பெயர். இவ்வாறு மொழிபெயர்த்துக் கொண்டனர் வடவர். எண் ணூல் திருவாரூர்க் கபிலரால் முதற்கண் ஆக்கி இவ்வுலகுக்கு அளிக்கப்பட்ட தத்துவ நூல், தலைக்கழக நாளினின்று சென்ற 2500 ஆண்டு முன் வரை இஃது எழுதாக்கிளவியா யிருந்தது. பின்னர் கபிலர் நூலாக்கினர் என்பர் ஆராய்ச்சி

யாளர். மேல் நாட்டில் எழுந்த தத்துவ நூல்களுக்கும் எண்ணூலே அடிப்படை என அறிதல் வேண்டும்.

எந்நாளில் நூல் தோன்றுகின்றதோ அந்நாளில் மக்களிடம் பரவியிருந்த பண்பாட்டின் அடிப்படையில்தான் நூற்கருத்துக்களும் அமையும் என்பது இயற்கைச் சட்டம். (திருவள்ளுவர் திருக்குறளும் பெரும்பாலும் எண்ணூற் கொள்கையின் அடிப்படையில்தான் எழுந்துள்ளது என்பது மறுக்கக் கூடியதன்று.) இஃது மேல் வரும் செய்யுட்களின் உரைகளில் எடுத்துக் காட்டப்பெறும். மற்றும் நீத்தார் பெருமை ஏழாம் செய்யுள் உரையில் எண்ணூற் கொள்கை விரிக்கப்படும். அங்குக் காண்க.

இக்குறட்பாவுக்குப் பலரெல்லாம் பலவாறு பொருள் கூறினார். அவையனைத்தும் தத்தம் சமயத்தை அடிப்படையாகக் கொண்டவை. திருவள்ளுவர் சமயக் கணக்கர் மதி வழியே நூல் செய்தாரிலர்.

வள்ளுவர் உள்ளம் என்னும் இவ்வுரையின் மேல் எழும் ஆத்திக நாத்திக வினாவும் விடையும் வருமாறு:

ஆத்திகன்: பகவன் என்பதற்கு மெய்யுணர்வு, அதாவது அறிவு என்று பொருள் கூறிக் கடவுள் என ஒருவர் இல்லை என்று ஆக்க எண்ணுகின்றீரா?

உரை ஆசிரியர்: ஆமாம் 'அறிவான தெய்வமே' என்று தாயுமானாரும், அறிவை அறிவது பொருளென அருளிய குருநாதா என்று அருணகிரிநாதரும் ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே மெய்யுணர்வில்லாதவர்க்கு என்று இந்நூலாசிரியரும் போல.

நாத்திகன்: அறிவு ஒன்றே பெறத்தக்கது என்று கூறிக் கடவுள் ஒருவர் உண்டு என்பதை உறுதி செய்கின்றீர்களா?

உரை ஆசிரியர்: பெறத்தக்கது அறிவு என்று நான், உண்மை உரை கூறினேன். அதனால் கடவுள் ஒருவர் உண்டு என்று ஆய்விடாது. அப்படி ஆய்விடுமானால் ஆய்விடட்டும். அதனால் உமக்கென்ன முழுகிப்போகும்?

ஆத்திகன்: மக்கள் பெறத்தக்கது அறிவு என்று மட்டும் கூறிய நீவிர் அறிவாகிய கடவுள் என்று ஏன் கூறவில்லை?

உரை ஆசிரியர்: கடவுள் என்ற சொல் மக்கள் அறிவு பெறாத காலத்தில் ஏற்பட்டதாய் இருக்கலாம். கடவுள் - கடந்தது; அறிவுக்கு எட்டாதது என்ற அதன் பொருளையும் நோக்குக. எட்டாத ஒன்றுக்குப் பெயர் எப்படி எட்டியிருக் கும்? இவைகளைக் கருதியன்றோ வள்ளுவர் தம் நூலில் கடவுள் என்ற பெயரையே எடுத்தாளாது விட்டார்.

நாத்திகன்: சாங்கியம் என்பது ஒரு மதமா?

உரை ஆசிரியர்: இல்லை, தமிழர்பால் தொன்று தொட்டு இருந்து வரும் பண்பாடு. இடையில் திருவாரூர்க் கபிலர் எண்ணூல் என்ற பெயரால் நூலாக இயற்றியருளினார்.

நாத்திகன்: அந்தப் பண்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே அக்கால நூல்கள் உண்டாகும் என்பதை விளக்க முடியுமா?

உரை ஆசிரியர்: மேல் என்றால் வானத்தை நோக்கி அண்ணாந்து பார்ப்பது இந்நாள் வழக்கம். இந்நாளில் ஏற் படும் நூற்களும் அதை அடிப்படையாகக் கொண்டுதான் உண்டாகும். கீழ்ப்புறத்திற்கும் மேல் என்பது பொருந்தும் என்று கொண்டு கீழ்நோக்கார். அதுபோலவே அக்காலத் தமிழர்கள் இந்த உலகம் என்றைக்கு உண்டானது என்று ஆராய்வது பயனற்ற வேலை என்பார், உலகம் ஆதியினின்று முதன்மையினின்று தோன்றிற்று என்றார்! அந்தக் கருத்தின், - பண்பாட்டின் அடிப்படையில்தான் அக்கால நூற்களும் அமைந்தன. உலகம் ஒருவனால் உண்டாக்கப்பட்டது என் பதை அடிப்படையாகக் கொண்டு நூல் அமையாது. இது தான் சாங்கியத்தின் அடிப்படையில் குறள் உண்டாயிற்று எனப்பட்டது. சாங்கியம் மதமன்று. அது எவராலும் உண் டாக்கப்பட்டது அன்று. அக்கருத்துக்களின் தொகுதியே எழுதாக்கிளவி எனப்பட்டது. எழுதியபின் எண்ணூல் என்றார்கள்.

எண்ணூல் பல மொழியில் பெயர்க்கப்பட்டது. ஆரியர் - திபேத்தியர் முதலியவர்களால் பலவாறு திரித்து எழுதப் பட்டது. சாங்கியக் கருத்துக்கள் இயற்கையோடு இயைந் தவை. பகுத்தறிவுக்கு ஒத்தவை. ஆதலால்தான் அக்கருத்துக் கள் தத்துவ நூற்கள் என எழுந்த அனைத்திற்கும் அடிப்படை யாகி மிளிர்கின்றன.

மதம், சமையம் என்று சொல்லப்படுவன அனைத்தும் ஒருவனால் - ஒரு கொள்கையை நோக்கிமக்களை இழுக்க உண்டாக்கப்படுவன. சாங்கியம் - கருத்துக்கள் - பண்பாடுகள் எவராலும் - எவரைத் தம்பக்கம் இழுக்கவும் ஆக்கப்பட்டன அல்ல என்பதை உணர்வார் அதை மதம் என்றார் என்பதை நீவிர் இங்கு நினைவிற் கொள்க.

ஆத்திகன்: எழுத்தெல்லாம் அகரத்தை முதலாகக் காரண மாகக் கொண்டவை. அதாவது அகரத்தனன்றே மற்ற எழுத் துக்கள் உண்டாயின, இது பெரியோர் கொள்கை யல்லவா?

உரை ஆசிரியர்: எழுத்துக்கள் அனைத்தும் ஓம் என்றதி னின்று தோன்றியவை என்று விளக்கிய மாணிக்க நாயக்கர் சிறியோரா? அன்றியும், அ முதல் ஒள வரைக்குமுள்ள உயிர் கள் பன்னிரண்டு. அவற்றில் ஓர் எழுத்திலிருந்து மற்றவை தோன்றின என்பது எப்படிப் பொருந்தும்? காலில் விலங்கும் கையில் விலங்கும் உடல் மறைய ஒரே வகைச் சட்டையுமாய்ச் சிறையில் இருக்கும் பன்னிரண்டு குற்றவாளிகளில் ஒருவன் மற்றவரை ஆக்கினான் எனில் அதற்கு என்ன அடையாளம்? என்ன ஆதாரம்? சொல்லத்தான் வேண்டும் என்று மதமக்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவையெல்லாம் ஊற்றுக்கு நிற்காது.

ஆத்திகன்: எழுத்துக்களில் நான் அகரமாய் இருக்கி றேன் என்று கண்ணபிரானே சொல்லவில்லையா?

உரை ஆசிரியர்: ஆமாம் கண்ணபிரான் மக்களை இருட் டில் வருக என்று அழைக்கிறான். நாம் ஏன் போக வேண்டும்? வள்ளுவரைப் பின்பற்ற வேண்டுவது வையத்தின் கடனன்றோ?

ஆத்திகன்: இந்த அதிகாரத்திற்குக் கடவுள் வாழ்த்து என்று இருந்ததை நீவிர் உலகின் தோற்றம் என்றது என்ன?

உரை ஆசிரியர்: இதுதான் வள்ளுவர் உள்ளம். கடவுள் வாழ்த்து இடையில் ஏற்பட்ட வேலை.

நாத்திகன்: முதல் நான்கு அதிகாரங்கள் வள்ளுவர் அருளிச் செய்தனவா?

உரை ஆசிரியர்: இல்லை என்று வ.உ. சிதம்பரனார் எண்ணுகின்றார். நான் அவ்வாறு எண்ணவில்லை. உரை முழுவதும் நீர் படித்தபின் நான் சொல்லுவது உண்மை என்று உமக்கே தோன்றலாம்.

(குயில் 1.12.59)

ஆத்திகன்: உலகு பகவன் முதற்று என்பதன் பொருளைத் தெளிவுபடுத்த முடியுமா?

உரை ஆசிரியர்: உலகு - உலகினர், பகவன் முதற்று - பகவனை முதன்மையாகக் கொள்ளத்தக்கவர். இங்கு முதன்மை என்பது காரண முதன்மையன்று, இடமுதன்மை. எனவே அறிவை உலக மக்கள் முதலிடத்ததாகக் கொள்ளத் தக்கவர். மக்கள் பெறத்தக்கது அறிவே ஆகும் என்றாம். அறிவு ஒன்றை ஆக்கத்தக்கதன்று. எவற்றிற்கும் மேலானது; சிறந்தது; பெறத்தக்கது என்க.

- (குயில் 8.12.59)

# 25

# வள்ளுவர் காலம்

**1956**

**சாமி. சிதம்பரனார்**

வள்ளுவர் வாழ்ந்த காலத்தைப் பற்றிப் புலவர்களுக்குள் பலதிறப்பட்ட கருத்துக்கள் உலவுகின்றன. 'இன்றுள்ள தமிழ் இலக்கியங்களிலே திருக்குறள்தான் முற்பட்டது. தொல் காப்பியத்திற்கு அடுத்தது திருக்குறள்தான். ஏனைய சங்க இலக்கியங்கள் எல்லாம் திருக்குறளுக்குப் பிற்பட்டவை தாம்.' என்று கூறுவோர் உண்டு.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களுக்குப் பிறகு தான் திருக்குறள் தோன்றியிருக்க வேண்டும். பழைய இலக் கிய வரிசைகளைப்பற்றிப் பேசும்போது 'பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு' என்றுதான் உரைக் கின்றனர். பத்துப் பாட்டும், எட்டுத்தொகையுமே சங்க இலக் கியங்கள் என்று கருதப்படுகின்றன. பதினெண் கீழ்க் கணக்கு அவைகளுக்குப் பிற்பட்ட காலத்தனவாகவே எண்ணப்படு

கின்றன. திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே ஒன்று; முப்பால் என்னும் பெயருடன் இவ்வரிசையில் காணப் படுகின்றது.

திருக்குறள் ஐம்பெருங் காப்பியங்களுக்கு முன்னும், சங்க நூல்களுக்குப் பின்னும் தோன்றியிருக்கவேண்டும். சிலப்பதி காரம், மணிமேகலை முதலிய நூல்களில் திருக்குறளின் சொற்றொடர்கள் காணப்படுகின்றன.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்ற அப்
பொய்யில் புலவன் பொருள்உரை தேறாய்

என்பது மணிமேகலை.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுவாளைத்
தெய்வம் தொழும் தகைமை திண்ணிதால்

என்பது சிலப்பதிகாரம். இவைகள்,

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்
பெய்எனப் பெய்யும் மழை

என்ற திருக்குறளைப் போற்றும் பகுதிகள்.

சங்கஇலக்கியங்களிலே திருவள்ளுவரைப் பற்றிய குறிப்பே இல்லை. சங்க இலக்கியக் கருத்துக்கள் பலவற்றைத் திருக் குறளிலே காணலாம்.

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பினும்
நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்

பழைமையான நட்புள்ளவர்கள் நஞ்சைக் கொடுப்பாரா யினும் கண்ணோட்டமுள்ளவர்கள் அதை உண்பார்கள் (நற்றிணை 355) என்பது நற்றிணைச் செய்யுள், இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டதே.

பெயக்கண்டும் நஞ்சு உண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்

*என்னும் குறள். (நாகரிகம் - கண்ணோட்டம்)*

பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ ஆகன்மாறே

*பிறர்க்குப் பகுத்துக்கொடுத்து உண்பதற்காகவே செல்வத்தைத் தொகுத்த ஆண்மையையுடைய நீ பிறர் நன்மைக்காகவே இவ்வுலகில் வாழ்வாயாக (பதிற்றுப்பத்து 38)*

*இப்பதிற்றுப்பத்தின் கருத்தை அடிப்படையாகக் கொண்டதே.*

பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை

*என்னும் திருக்குறள்.*

செம்மையின் இகந்து ஒரீஇப்
பொருள் செய்வார்க்கு அப்பொருள்
இம்மையும் மறுமையும்
பகையாவது அறியாயோ

*தீயவழியிலே பொருள்தேடுவார்க்கு, அப்பொருள், இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தைத்தான்தரும் என்பது கலித்தொகை. (14)*

அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்
புல்லார் புரள விடல்

*என்பது குறள். இக்குறள் மேற்கண்ட கலித்தொகைக் கருத்தைக் கொண்டதே.*

ஈதல் இரந்தார்க்கு ஒன்று ஆற்றாது வாழ்தலின்
சாதலும் கூடுமாம் மற்று

ஈதலை விரும்பி இரந்தவர்க்கு உதவாது வாழ்வதைவிட சாதலே சிறந்ததாகும் என்பது கலித்தொகை. (61)

சாதலின் இன்னாதது இல்லை; இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை

என்ற திருக்குறளிலே அக்கருத்தைக் காணலாம்.

இவ்வாறு சங்ககாலக் கருத்துக்கள் பல திருக்குறளிலே அமைந்திருக்கின்றன.

பழைய சங்கஇலக்கியங்கள் பெரும்பாலும் ஆசிரியப்பாவிலேதான் ஆக்கப்பட்டன. முதலில் ஆசிரியப்பாவிலும், பின்னர், வஞ்சிப்பாவிலும், அதன்பின்னரே, கலிப்பா, பரிபாடல், வெண்பா ஆகியவைகளிலும் நூல்கள் இயற்றினர். சங்க நூல்கள் எல்லாம் ஆசிரியப்பா, கலிப்பா, பரிபாடல் களிலே ஆக்கப்பட்டிருக்கின்றன. திருக்குறள் வெண்பாவினால் ஆகியது. இதுவும் சங்க நூல்களுக்குப் பிற்பட்டதே திருக்குறள் என்பதற்கு ஒரு சான்று.

திருக்குறள் சங்க நூல்களுக்குப் பிற்பட்டது என்பதற்கு மற்றும் பல காரணங்கள் உண்டு. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய நூல்களிலே மதுவும் மாமிசமும் கடியப்படவில்லை. இவை இரண்டையும் விலக்கவேண்டும் என்று கூறப்படவும் இல்லை. சங்க இலக்கியச் செய்யுட்களில் எல்லாம் இவைகள் பாராட்டிப் பாடப்படுகின்றன. ஔவையார், கபிலர் போன்ற பெரும் புலவர்கள் எல்லாம் மதுவும் மாமிசமும் உண்டவர்கள்.

திருக்குறளிலே. இவை இரண்டும் கண்டிக்கப்படுகின்றன; விலக்கப்பட வேண்டியவை என்று வலியுறுத்தப்படுகின்றன.

சங்க காலத்திலே பலதார மணம் ஆதரிக்கப்பட்டு வந்தது. திருக்குறளில் பலதார மணம் ஆதரிக்கப்படவில்லை. 'வாழ்க்

கைத் துணைநலம்' என்னும் அதிகாரத்தைப் படிப்போர் இவ் வுண்மையைக் காணலாம்.

சங்க காலத்திலே, ஆடவர்கள் பரத்தையர்களுடன் கூடி வாழ்வது குற்றமாக எண்ணப்படவில்லை. காதல் பரத்தையர் சேரிப்பரத்தையர் என்பவர்களுடன் ஆண்கள் கூடிக் குலவி வந்தனர். இவைகள் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

திருக்குறளில், காமத்துப்பாலில்கூடப் 'பரத்தையர்ப் பிரிவு' என்று தனியதிகாரம் காணப்படவில்லை. பொருட் பாலில் 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரத்தில் வேசையர் நட்பு வன்மையாகக் கண்டிக்கப்படுகின்றது.

மது; மாமிசம்; பல தார மணம்; வேசையர் நட்பு இவை கள் சங்க காலத்தில் தண்டிக்கப்படவில்லை. இவைகள் ஒழுக்கக் குறைவு என்று எண்ணப்படவும் இல்லை. சங்க காலத்திற்குப் பின்னர்தான் இவைகள் கண்டிக்கப்பட்டன. ஆதலால் இவை களைப் பற்றிக்கூறும் திருக்குறள் சங்க நூல் களுக்குப்பின் தோன்றியதாகவேயிருக்க வேண்டும். இதில் ஐயமில்லை.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலே திருக்குறளே காலத் தால்முற்பட்ட நூலாக இருக்கலாம். திருக்குறள் கி.பி.6ஆம் நூற்றாண்டில் தோன்றியதாக இருக்கலாம் என்பதே பேரா சிரியர் வையாபுரிப் பிள்ளை போன்றவர்கள் கருத்து.

திருவள்ளுவர் காலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்; மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்; என்று கூறுவதுதான் வள்ளுவர்க்குப் பெருமையென்று சிலர் எண்ணுகின்றனர்; இப்படிக் கூறுவதுதான் தமிழர்க்குப் பெருமை; தமிழர் நாக ரிகத்திற்கு உயர்வு; என்றும் கருதுகின்றனர் சிலர்.

ஒரு புலவர்க்குப் பெருமை ஏற்படுவது காலத்தின் பழை மையைப் பொறுத்தது அன்று; ஒரு நூலுக்கு மதிப்பு உண்டா வது மிகப்பழைமையான நூல் என்பதால் மட்டும் அன்று.

பிற்காலத்திலே பிறந்த நூலானாலும், முற்காலத்திலே தோன்றிய நூலானாலும் மக்கள் வாழ்க்கையோடு இணைந்து நின்று அவர்களுக்கு வழிகாட்டும் நூலே சிறந்த நூலாகும். அத்தகைய நூலை ஆக்கிய அரும்புலவரே முதற் புலவர் ஆவார். இந்த உண்மையை உள்ளத்திலே கொண்டவர்கள் திருவள்ளு வர் காலத்தைப்பற்றிக் கலக்கம் கொள்ள வேண்டியதில்லை.

திருக்குறள் சங்க இலக்கியங்களுக்குப் பின்னே பிறந்த தாயினும் இது ஒப்பும் உவமையும் அற்ற உயர்ந்த நூல். இது போன்ற நூல் திருக்குறளுக்கு முன்னும் தோன்றியதில்லை; பின்னும் பிறந்தது இல்லை. இது அறிஞர்கள் அனைவரும் ஒப்புக்கொள்ளும் உண்மை.

# 26

# வள்ளுவரின் உள்ளம்

*1956*

**நாமக்கல் கவிஞர்**

உலகத்தின் தலைசிறந்த இலக்கியங்களுள் ஒன்று நம்முடைய திருக்குறள். காலம், இடம், நிறம், மதம் என்ற வேறுபாடுகளைக் கடந்து எங்கெங்கும் உள்ள எல்லா மனிதருக்கும் எக்காலத்திலும் பயன்தரக்கூடிய அறிவுரை நிரம்பிய அறநூல் திருக்குறள். மனித வர்க்கத்தின் இயற்கையமைப்பில் எந்தக்காலத்திலும் மாறுதல் இல்லாதனவாகிய தத்துவங்களையே அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டிருப்பதால், திருக்குறள் என்றென்றும் அழிவில்லாதிருக்கும். அது மட்டுமன்றி எப்போதும் இளமையும் புதுமையும் உள்ளதாகவே இருக்கும். மனித சமூகத்துக்கு இன்றியமையாதஎல்லா நல்லறிவையும் இப்படித் தொகுத்து வகுத்துத் தந்துள்ள ஒருநூல் வேறு எந்த மொழியிலும் இல்லையென்று உலகத்தின் பேரறிஞர்கள் எல்லாரும் ஒருமுகமாகப் போற்று

கின்றார்கள் என்பது திருவள்ளுவர் தமிழ் மக்களுக்கு வைத்துச் சென்ற அழியாத செல்வம்.

அத்தகைய திருவள்ளுவர் தோன்றிய காலம் கி.பி. முதல் நூற்றாண்டில் என்று சில ஆராய்ச்சிக்காரரும், கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் என்று வேறு சில ஆராய்ச்சிக்காரரும் சொல்லுவர். எது எப்படியானாலும் திருவள்ளுவர் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தவர் என்பது எல்லாரும் ஏற்றுக் கொள்ளுகிற உண்மை. இரண்டாயிரம் ஆண்டுகள் என்றால் இலேசான காலமா! இந்த இரண்டாயிரம் வருடங்களாகத் தமிழ் மக்கள் திருக்குறளை எவ்வளவு பயபக்தியோடு பாதுகாத்து வந்திருக்கிறார்கள் என்பதற்கு, திருக்குறள் பாக்களில் பாடபேதம் என்றோ இடைச்செருகல் என்றோ ஒன்றும் இல்லாததே போதிய சான்றாகும். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்டவை என்று சொல்லப்படுகிற திருக்குறளின் மூலப்பிரதிச் சுவடிகள் இன்னும் பல அங்கங்கே இருக்கின்றன. அவைகள் அனைத்தும் ஒன்றுக்கொன்று எந்தவித பேதமும் இல்லாமல் இருக்கின்றன. பிற்காலத்திய பிரதிகளில்தான் சிற்சில பேதங்கள் காணப்படுகின்றன. அந்தப் பேதங்களும் கூடக் குறட்பாக்களில் அல்ல. பாக்களின் வரிசைக்கிரமத்திலும் சில அதிகாரங்களின் பெயர்களிலும் மட்டும் தான் பேதங்கள் காணப்படுகின்றன.

ஆகவே திருக்குறளின் அறம் (380), பொருள் (700), இன்பம் (250) என்ற மூன்று பகுதிகளிலும் உள்ள 1330 குறள் பாட்டுகளும் எந்தவிதமான பாடபேதமும் இல்லாமலேதான் எல்லா ஏட்டுப்பிரதிகளிலும் காணப்படுகின்றன.

திருக்குறள் மூலப் பாட்டுகளில் பாட பேதம் உண்டாக்கும் முயற்சிகளெல்லாம் இந்த நூற்றாண்டில் ஆங்கிலம் கற்ற சில தமிழ் அறிஞர்கள் செய்த குற்றமே. அக்குற்றம் ஆங்கில மொழியின் பிழையல்ல. இந்த ஆங்கிலம் படித்த தமிழர்கள்

தாங்கள் அந்த ஆங்கிலமொழி இலக்கியங்களில் படித்து அனுபவித்த 'சமத்துவம்', 'சகோதரத்துவம்', 'ஜனநாயகம்', 'பெண்களின் உரிமை' முதலான புதுமைக் கருத்துக்களைத் திருக்குறளில் புகுத்த விரும்பியதால் திருவள்ளுவரின் நோக்கையும் திருக்குறளின் போக்கையும் தெரிந்துகொள்ள முடியாமல் திருக்குறட்பாக்களுக்குப் பாடபேதம் கற்பிக்கத் துணிந்துவிட்டார்கள். பல்லாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து பரவி வந்திருக்கிற தமிழ்ச் சமுதாயத்தின் பண்புகளைப் படமெழுதிக் காட்டுவன திருக்குறள் முதலான இலக்கியங்களே. அவற்றில் இக்காலத்தியல்புக்கு விரும்பத்தகாதன என்று கருதக்கூடிய பகுதிகள் இருக்கலாம். அல்லது அந்தப் பகுதிகள் நமக்கு விளங்காமலும் இருக்கலாம். அதற்காக நிச்சயமான ஆதாரமில்லாமல் எவ்வளவு திறமையான பாட பேதத்தைப் புகுத்தினாலும் அது வியக்கத்தக்க சாமர்த்திய மானாலும் சத்தியமாகாது. 'திருவள்ளுவர் அப்படித்தான் சொல்லியிருப்பார், இப்படிச் சொல்லியே இருக்கமாட்டார்' என்று வெகு அழுத்தமாகப் பாடபேதம் கற்பிக்கிறவர்களையும் இக்காலத்தில் காணலாம். ஆனால் நமக்கு முன்னாலிருந்த தமிழர்கள் திருக்குறளைத் திருவள்ளுவர் எழுதிக் கொடுத்துவிட்டுச் சென்ற அந்தப் பாடத்திலேயே அதன் பொருளை உணர்ந்து அனுபவித்துப் போற்றிவந்திருக்கிறார்கள். அதனால் அவர்கள் பாடபேதங்களைக் கருதி யிருக்கக் காரணமில்லை.

இப்போதுள்ள சமுதாயத்தில் காணப்படுகிற சீர்கேடுகளைக் கருதியோ இனிமேல் வரவேண்டுமென்று விரும்புகிற சீர்திருத்தங்களைக் கருதியோ திருக்குறளை ஆராய்வது சரியல்ல. காலப்போக்கில் தாமாகவே மாறிப்போகிற பழக்க வழக்கங்களையோ அல்லது காலம் கருதித் தாமாகவே மாற வேண்டிய அரசியல் சட்ட திட்டங்களையோ நினைத்துக் கொண்டு எழுதப்பட்டதல்ல திருக்குறள். இப்போது, அப்போது என்றில்லாமல் எப்போதும் மனித சமூகத்தின் நல்

வாழ்விற்கு வழிகாட்ட நிற்கும் பொது அறிவே திருக்குறள். எக்காலத்துக்கும் பயனளிக்கும் அந்தப் பொது அறிவை உணராமல் அப்போதைக்கப்போது காணப்படுகிற குழப்பங்களை மட்டும் மனதில் வைத்துக்கொண்டு திருக்குறளிற்குப் பொருள் காண முயன்றவர்கள் குறள் பாட்டுகளின் மூலத்தையே மாற்றிவிட முனைந்துவிட்டார்கள். மூலத்தை மாற்ற முயலாதவர்களும் திருவள்ளுவர் நினைத்திருக்கவே முடியாத பொருள்களைத் திருக்குறளில் புகுத்தி அவரவர்கள் விரும்பியபடிக்கெல்லாம் திரித்துரைக்கத் தலைப்பட்டு விட்டார்கள்.

இவர்களுக்குள் குறட்பாக்களின் மூலத்தை மாற்ற முயன்றவர்களையும் இனி முயலுகின்றவர்களையும் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில் மூலத்தை மாற்றுவதற்கு ஏட்டுப் பிரதிகளும் இடங்கொடுக்கமாட்டா. உலகமும் ஒத்துக்கொள்ளாது. அப்படி முயன்றவர்கள் எல்லாரும் படுதோல்வியுற்று அவமதிப்பிற்கே ஆளானார்கள். அதற்கு உதாரணமாகப் பாண்டித்துரைத் தேவர் காலத்தில் ஒரு ஐரோப்பியர் திருக்குறள் பாக்கள் சிலவற்றை மாற்றி அச்சிட்டு அவமானமடைந்ததைக் கேட்டிருக்கிறோம். அதாவது தென்னாட்டில் மிகப் பெரிய உத்தியோகத்திலிருந்த ஒரு ஆங்கிலேயர் தமிழ்மொழி மிகவும் இனிமையானது என்பதைக் கேள்விப்பட்டு அதை மிக்க ஆர்வத்தோடு கற்றுக்கொண்டார். திருக்குறளையும் படித்து அதிலுள்ள மிக உயர்ந்த கருத்துகளைப் பாராட்டி அனுபவித்தார். தமிழில் உள்ள நல்ல இலக்கியங்கள் பெரும்பாலும் செய்யுள்களாகவே இருந்ததையும் கண்டு இன்புற்றார். தம்முடைய தாய் மொழியாகிய ஆங்கிலத்தில் காணமுடியாத எதுகை, மோனை முதலிய அழகுகள் தமிழ்ப் பாட்டுகளில் இருப்பதைக் கண்டு வியந்தார். அப்படிப்பட்டவர் திருக்குறளைப் படித்தறிந்த பின் மிக நல்ல அறிவுகள் அடங்கிய திருக்குறளிலுள்ள

பாட்டுக்கள் மற்ற தமிழ்ப் பாட்டுகளில் உள்ளதுபோல் எதுகை மோனை இல்லாதிருப்பதைக் கண்டு மிகவும் வருத்தப் பட்டார். திருவள்ளுவர் மிக உயர்ந்த அறிவாளியாக இருந் தாலும் பாட்டுக்களை எதுகை மோனையோடு அமைக்கத் தெரியாமலோ அல்லது கவனக் குறைவினாலோ அப்படி எழுதிவிட்டார் போலும் என்றும் பரிதாபப்பட்டு, தான் அந்தக் குறையை நீக்கிக் குறட்பாக்களை எதுகை மோனை அமையத் திருத்தினால் அது தமிழுக்குப் பெரிய சேவை செய்ததாகுமெனக் கருதினார். உடனே பல குறள்களை எதுகை மோனைகள் அமைய மாற்றி எழுதி அவற்றிற்கு ஆங்கிலத்தில் உரையும் எழுதி சுமார் இரண்டாயிரம் பிரதி களும் அச்சடித்துவிட்டார். அவர் மாற்றி எழுதி அச்சிட்ட மாதிரி எப்படி யென்றால்,

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

என்பதை,

அகர முதல வெழுத்தெல்லா மாதி
உகர முதற்றே உலகு

என்ற மாதிரி. இப்படி அச்சடிக்கப்பட்ட அந்தப் புத்தகத் தைத் தன்னுடைய உத்யோக செல்வாக்கின் எல்லைக்கு உட் பட்ட பலபேருக்குக் காட்டின்னாராம். அவர்களிற் பெரும்பா லாரும் துரையவர்களுடைய தமிழறிவை மிகவும் மெச்சி னார்களாம். அப்படி மெச்சினவர்கள் திருக்குறளை ஆராய்ந் தறிந்தவர்களாக இருந்திருக்கமுடியாதென்றாலும் அவர்க ளெல்லாரும் தமிழ்படித்தவர்கள். அவர்களுக்குள் திருக் குறளை ஓரளவு நன்றாகப் படித்தவர்களும் இருந்திருக்கலாம். அவர்கள் துரைசெய்தது சரியல்லவென்று நினைத்திருந் தாலும் துரைமகனாரின் உயர்ந்த உத்யோக பதவியைக் கருதி, தங்களுடைய உண்மையான கருத்தை வெளியிடாமல் இச்சக

மாக மெச்சியும் இருக்கலாம். எப்படியோ, இவர்கள் மெச்சி விட்டதில் மகிழ்ந்து மயங்கிவிட்ட துரை, தாம் செய்த காரியம் மிகவும் சிறந்த திருப்பணியென்றே தீர்மானித்துக் கொண்டு அந்தப் புத்தகத்தைத் தமிழ்ப் புலவர்களுடைய சங்கத்திலேயே அரங்கேற்றிவிட வேண்டுமென்று ஆசை கொண்டார்.

அக்காலத்தில் தமிழ்ப் புலமைக்குப் பேராதரவாக விளங்கியவர்கள் திரு. பாண்டித்துரைத் தேவரும் அவருடைய தமையன் திரு. பொன்னுச்சாமித் தேவருமாவார். திரு. பாண்டித்துரைத் தேவர்தான் பிற்காலத்திய 'தமிழ்ச் சங்கம்' என்ற தமிழ்ப் புலவர்கள் சங்கத்தை உண்டாக்கியவர். பாண்டித்துரைத்தேவரும் பொன்னுச்சாமித்தேவரும் மிகச் சிறந்த தமிழ் அறிஞர்கள். அவர்களைப் பற்றியும் அவர்கள் நடத்திவந்த 'தமிழ்ச்சங்க'த்தைப் பற்றியும் கேள்விப்பட்டி ருந்த இந்த ஆங்கிலேயே அதிகாரி, தம்முடைய புதுமாதிரித் திருக்குறள் புத்தகத்தைப் பற்றித் திரு. பாண்டித்துரைத் தேவருக்குத் தெரியப்படுத்தி அதை அரங்கேற்றுவதற்காகத் திரு. பாண்டித்துரைத்தேவரை தாம் சந்திக்க வேண்டும் என்று கடிதம் எழுதினார். திரு. பாண்டித்துரைத் தேவர் ஒரு சிற்றரசர் போன்ற பெருநிலக்கிழார். மிகுந்த செல்வமும் செல்வாக்கும் உள்ளவர். அரசாங்கத்தாரால் மிகவும் மதிக்கப் பெற்றவர். ஆங்கிலமும் கற்றவர். ஜில்லாவிற்கே தலைமை அதிகாரியான ஒரு ஆங்கிலேயர் தம்மைச் சந்திக்க விரும்பி னதை உடனே வரவேற்று ஒரு நாளையும் நேரத்தையும் குறிப்பிட்டுத் துரையவர்களுக்கு அழைப்பு அனுப்பினார்.

குறிப்பிட்ட நாளில் நியமித்த நேரத்தில் துரையவர்கள் திரு. பாண்டித்துரைத் தேவருடைய அரண்மனைக்கு வந்தார். முன் ஏற்பாடுகளுடன் துரையவர்களை வரவேற்கக்காத் திருந்த பாண்டித்துரைத்தேவரும் அவருடைய தமயன் பொன்னுசாமித் தேவரும் பிறரும் வெகுமரியாதையோடு

வரவேற்று உபசரித்தார்கள். உபசரிப்புகள் முடிந்தபின் துரை யவர்கள் தாம் அச்சடித்த திருக்குறள் புத்தகத்தில் சிலவற்றை எடுத்துத் திரு. பாண்டித்துரைத் தேவரிடமும் திரு. பொன்னுச் சாமித் தேவரிடமும் இன்னும் இரண்டொருவர்களிடமும் கொடுத்தார். வாங்கினவர்கள் எல்லாரும் வெகு ஆவலோடு அப்புத்தகத்தின் ஏடுகளைப் புரட்டிப் படித்துப் பார்க்க ஆரம்பித்தார்கள்.

மற்றவர்களெல்லாம் படித்தோ படிக்காமலோ புத்த கத்தில் உள்ளதைப் பார்த்துக் கொண்டே இருந்தார்கள். ஆனால் பொன்னுச்சாமித் தேவர் மட்டும் அதை விரித்துப் பார்த்த இரண்டொரு நிமிஷத்துக்குள் அதை மூடிவிட்டுத் துரையவர்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டு வெகுநேரம் மௌனமாக இருந்துவிட்டு, மறுபடியும் புத்த கத்தை விரித்து அதற்கு விலை ஏதேனும் போடப்பட்டி ருக்கிறதாவென்று பார்த்தார். விலை அச்சடித்திருப்பதைப் பார்த்தபின் துரையவர்களைப் பார்த்து,

'எத்தனை பிரதிகள் அச்சடித்தீர்கள்?' என்றார்.

'இரண்டாயிரம் பிரதிகள்' என்றார் துரை.

'எவ்வளவு பிரதிகள் விற்பனையாகியிருக்கின்றன?'

'சுமார் ஐநூறு பிரதிகள் இருக்கலாம்.'

'மீதி ஆயிரத்து ஐநூறையும் நான் வாங்கிக்கொள்கிறேன்' என்று சொல்லிவிட்டு உடனே அரண்மனைக்குள் சென்றார்.

பாலவனத்தம் ஜமீன் பாண்டித்துரைத் தேவருடையது. அந்த ஜமீனுக்குச் சொந்தக்காரரான ஒரு உறவினர் பாண்டித் துரைத் தேவரை ஸ்வீகாரப் புத்திரனாகக் கொண்டதனால் அவருக்கு உரிமையாயிற்று. என்றாலும் பாண்டித் துரையின் உடன் பிறப்புத் தமயனான பொன்னுச்சாமித் தேவரே அந்த ஜமீனை ஆண்டுவந்தது போல் காரியங்கள் நடந்துவந்தன. அதனால் கஜானாவுக்கும் பொறுப்பாளியான பொன்னுச்

சாமித் தேவர் உள்ளே போய் துரையவர்களுக்கு ஆயிரத்து ஐநூறு பிரதிகளுக்காகக் கொடுக்கவேண்டிய தொகை பூரா வும் எடுத்துக் கொண்டுவந்து துரையிடம் கொடுத்து,

'உடனே யாரையாவது அனுப்பி அந்தப் புத்தகத்தின் பிரதிகள் மிச்சமாக உள்ள எல்லாவற்றையும் எடுத்துவரச் செய்யுங்கள்' என்றார்.

துரையவர்களுக்கு மிகுந்த களிப்பும் வியப்பும் உண்டாகி விட்டது. தாம் நினைத்ததற்கு மிகவும் அதிகமாகவே தம்மு டைய புத்தகத்திற்குச் சிறப்பிருப்பதாக எண்ணிக் கொண்டு வாங்கின பணத்தைச் சட்டைப்பையில் போட்டுக் கொண்டு,

'மீதியுள்ள பிரதிகளையெல்லாம் நீங்களே வாங்கிக் கொண்டதற்கு மிக்க நன்றியுடன் வந்தனமளிக்கின்றேன். ஆனால் புத்தகங்களை வாங்கிக்கொண்டது மட்டும் போதாது. நான் வந்த காரியம் புத்தகங்களை விற்பதற்கல்ல. இந்தப் புத்த கத்தைத் தங்கள் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றிப் பாராட்ட வேண்டும்' என்றார்.

'தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்ற வேண்டாம்; இங்கேயே இப்போதே அரங்கேற்றிவிடுகிறேன். எல்லாப் பிரதிகளையும் இங்கே கொண்டுவரச் செய்யுங்கள்' என்று பொன்னுச்சாமித் தேவர் துரிதமாகச் சொன்னார்.

அதைக்கேட்ட பாண்டித்துரைத் தேவரும் மற்றும் அங்கிருந்த எல்லாரும் பொன்னுச்சாமித் தேவர் அப்படிச் சொன்னதின் மர்மத்தை அறியமுடியாமல் திகைத்தார்கள். உடனே புத்தகங்கள் விரைவில் வந்து சேரவேண்டிய ஏற்பாடு கள் செய்யப்பட்டன. துரையும் அங்கேயே இருந்தார்.

புத்தகங்களெல்லாம் வந்து சேர்ந்தன. அவை வந்து சேருவதற்கு முன்னால் பொன்னுச்சாமித் தேவர் தம்முடைய வேலைக்காரர்களிடம் சொல்லிவைத்திருந்தபடி அந்தப்

புத்தகங்கள் அரண்மனையின் ஒரு புறத்தில் திறந்தவெளியாக இருந்த இடத்தில் அடுக்கப்பட்டன. ஏன் புத்தகங்கள் அப்படி வெளியிடத்தில் அடுக்கப்படுகின்றன வென்பதை அறியாமல் அந்தத் துரையவர்களும் மற்றவர்களும் மலைத்துக் கொண்டிருக்கும்போதே அந்தப் புத்தகக் குவியலின்மேல் ஒரு டின் மண்ணெண்ணை கொட்டப்பட்டது. எண்ணெய் கொட்டப் படும் போதே பொன்னுச்சாமித் தேவர் துரையைப் பார்த்து 'இதோ உங்கள் புத்தகத்தை அரங்கேற்றுகிறேன்' என்று சொல்லிக் கொண்டே தயாராகத் தம் கையில் வைத்திருந்த தீக்குச்சியைக் கிழித்து அந்தப் புத்தகக் குவியலுக்கு நெருப்பு வைத்துவிட்டார்.

அதைக்கண்ட துரைக்குக் கடுங்கோபமுண்டாகித், தம்மை அப்படி அவமானப்படுத்தியதை சும்மா விடப்போவதில்லை என்று பலவிதமான கடுமொழிகளில் சபதம் செய்து ஆர வாரித்தார். அவருடைய ஆர்ப்பாட்டங்களை அடக்க வெகு நேரமாயிற்று. அதற்குள் அந்தப் புத்தகங்கள் அனைத்தும் வெந்து சாம்பலாகிவிட்டன. அந்த வேடிக்கையைப் பார்க்க ஏராளமான மக்கள் கூடிவிட்டார்களாம்.

வெகு நேரம் கூச்சல் போட்டுக் குமுறிக்கொண்டிருந்த ஆங்கிலேய அதிகாரியின் ஆத்திரங்கள் ஒருவாறு அடங்கிய பின் பொன்னுச்சாமித் தேவர் துரையவர்களை அணுகி,

'துரையவர்களே! கோபித்துக் கொள்ளவேண்டாம். நீங்கள் செய்த வேலை தமிழ் அறிஞர்களையும் தமிழ்த் தாயையும் மிகவும் அவமானப்படுத்துகிற காரியம். இனி இந்த மாதிரிக் காரியங்களில் தலையிட வேண்டாம். உங்களுடைய வேதமாகிய 'பைபிளை' நான் என் இஷ்டம் போல் மாற்றி அச்சிட்டால் உங்களுக்கு எப்படியிருக்கும்?' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே துரையவர்கள் சொல் லாமல் அங்கிருந்து போய்விட்டார்.

பிறகு அந்த துரை, தாம் ஒரு ஆங்கிலேயர் என்ற செல்வாக்கைக்கொண்டு சென்னை கவர்னர் மூலமாகப் பொன்னுச்சாமித் தேவருக்கும் அவர் அதிகாரம் நடத்திய பாலவனத்தம் ஜமீனுக்கும் தீங்கு செய்ய முயன்றதாகவும் கவர்னரிடத்தில் பாண்டித்துரைத் தேவருக்கிருந்த செல்வாக்கால் அது முடியவில்லையென்றும் சொல்லப்படுவதுண்டு.

இந்த நிகழ்ச்சியைப் பலபேர் பலவிதமாகச் சொல்லுகிறார்கள் புத்தகங்களிலும் வெவ்வேறு விதமாக அச்சடிக்கப்படுகிறது மேலே எழுதியிருப்பது, பல ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு மதுரை நண்பரிடத்தில் நான் கேள்விப்பட்ட நினைவிலிருந்து சொல்லப்படுகிறது. நிகழ்ச்சியின் நுணுக்கங்கள் எப்படியிருந்தாலும் சாரம் ஒன்றே தான். அது என்னவென்றால் திருக்குறளுக்குப் பாடபேதம் உண்டாக்க முயன்றது மிகவும் பலமாகக் கண்டிக்கப்பட்டது என்பதுதான் எனவே திருக்குறளுக்குப் பாடபேதங்கள் இல்லை யென்பதை நிச்சயமாகக் கொள்ளலாம் அதனால் பாடபேதங்களைப் பற்றிய விசாரத்தை விட்டுவிட்டுப் பொருள் பேதங்களைப்பற்றி ஆராய்வோம்.

'மூலத்துக்குப் பாடபேதம் இல்லை' என்று சொல்லுவதைப்போல் அவ்வளவு சுலபமான காரியம் அல்ல 'மூலத்துக்குப் பொருள் பேதம் இல்லை' என்பது. ஏன் எனில் தமிழ் மொழி மிகப் பரந்த சொல்லாட்சியும் பொருளாட்சியும் உள்ளது அன்றியும் தமிழுக்கே தனிச் சிறப்பான புணர்ச்சி விதிகளாலுண்டாகும் சந்தி, விகாரம் முதலியன ஒரு சொற்றொடரை வெவ்வேறு விதங்களில் பிரித்து ஒன்றுக்கொன்று முற்றிலும் மாறுபட்ட பொருள்களைக் கொள்ள இடங்கொடுக்கும். அப்படிப் பதம் பிரிப்பதில் எப்படி ஒரு சொற்றொடர் முற்றிலும் நேர்மாறான பொருளைக் கொடுக்க முடியும் என்பதற்கு ஒரு எளிய உதாரணம் பார்ப்போம்:

'வான்சிறப்பு' என்ற அதிகாரத்தின் முதற் குறள்,

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று

என்பது. இதை எப்படிப் பிரித்துப் பொருள் கொள்ளு கிறோம் என்றால்; வான் + நின்று + உலகம் + வழங்கி + வருத லால் + தான் + அமிழ்தம் + என்று + உணரல் + பாற்று - என்று பிரித்து அதற்கு வான் = மழை, நின்று = பெய்வதிலிருந்து, உலகம் = இந்த உலகத்திலுள்ள உயிர்கள், வழங்கி வருத லால்தான் = ஜீவித்து வருவதனாலேதான், அமிழ்தம் என்று = அந்த மழை அமிர்தம் என்று, உணரல்பாற்று = நினைக்க வேண்டிய தன்மையுடையது. இதைக் கூட்டிப் படித்தால் - மழை பெய்வதிலிருந்து உலகத்திலுள்ள உயிர்கள் ஜீவித்து வருவதனால்தான் அந்த மழை அமிர்தம் என்று நினைக்க வேண்டிய தன்மையுடையது. இதுதான் இந்தக் குறளின் சரி யான பொருள்

இனி இந்தக் குறளிலுள்ள ஒரு சொற்றொடரை முன் மாதிரி பிரிக்காமல் வேறு விதமாகப் பிரித்தால் எப்படிப் பொருள் முற்றிலும் எதிர்மறையாகி விடுகிறது என்பதைப் பாருங்கள்: வானின் றுலகம் - என்ற சொற்றொடரை முன்னே வான் + நின்று - என்று பிரிக்கப்பட்டது. இப்போது அதையே வான் + இன்று - என்று பிரிப்போம். புணர்ச்சி இலக்கணம் அதை இப்படியும் பிரிக்கப் பூரண அனுமதியளிக்கின்றது இப்போது 'வான் + இன்று' - என்பதற்கு பொருள் 'மழை இல்லாமல்' என்றாகிறது. அப்படியானால் இந்தக் குறளுக்கு அர்த்தம் - மழை இல்லாமல் உலகத்திலுள்ள உயிர்கள் ஜீவித்து வருவதனால்தான் அந்த மழையில்லாமை அமிர்தம் என்று நினைக்கவேண்டிய தன்மையுடையது - என்றாகிறது அல்லவா? இப்படிப் பிரித்துக் காட்டியிருப்பது, எப்படி ஒரு சொற் றொடரை வெவ்வேறு விதமாகப் பதம் பிரிப்பதால் முற்றி லும் மாறுபட்ட உரைகள் காணலாம் என்பதற்கு மட்டும்

தான் உதாரணம். இப்படிப் பல குறள்களிலுள்ள பதங்களைப் பலபேர் பலவிதமாகப் பிரித்து அவரவர்கள் விருப்பப்படிப் பொருள் சொல்லத் தமிழ் மொழியில் இடமிருக்கிறது. அதனாற்றான் குறளின் மூலத் துக்குப் பாடபேதம் உண்டாக்க முயல்கின்றவர்களைக் கண்டித்து வாயடக்க முடிவதைப் போல் பொருள்பேதம் சொல்லுகிறவர்களை உடனே கண்டித்து வாயடக்க முடிவ தில்லை.

ஆனால் எத்தனைபேர் எவ்வளவு சாமர்த்தியமாகப் பதம் பிரித்து எத்தனை விதமான பொருள் சொன்னாலும் குறளின் கர்த்தாவாகிய திருவள்ளுவர் ஒரு குறளுக்குக் குறிப்பிட்ட ஒரு பொருளைத்தான் கருதியிருப்பார் என் பதில் எள்ளளவும் ஐயமில்லை. நிரந்தரமாகிய அறங்களை வகுத்து, மனித சமுதாயத்தில் தனி மனிதனுடைய வாழ்க்கை விதிகளை வரையறுத்துச் சொல்லவென்றே ஆக்கப்பட்ட அற நூலில் அதன் ஆசிரியர் ஒரு குறளுக்கு இரண்டு பொருள்களோ மூன்று பொருள்களோ எண்ணியிருக்கமாட்டார். இக்காலத்தில் ஒரே குறளுக்குப் பலபேர் பல பொருள்களைச் சொல்லத் துணிவதற்குக் காரணம் 'திருவள்ளுவர் கருதிய உரை இதுதான்' என்று அறுதியிட்டுச் சொல்லுவதற்கு ஆதாரமாக அவர் கருதிய உரையை நமக்கு விளக்கக்கூடிய உரைப் பிரதிகள் கிடைக்காது போனதுதான்.

திருவள்ளுவர் திருக்குறளை அரங்கேற்றிய சபையில் நிச்சயமாக அவர் அவருடைய குறள்களுக்கு உரை சொல்லித் தான் இருப்பார். அரங்கேற்றிய அதே நாளில் தம்முடைய 1330 குறள்களுக்கும் பொருள் சொல்லியிராவிட்டாலும் முக்கியமான சில பகுதிகளுக்காவது அன்றைய தினத்தில் உரை சொல்லித்தான் இருப்பார். பிறகு கொஞ்சம் - கொஞ்சமாக எல்லாக் குறள்களுக்கும் சபைகளிலோ அல்லது தம்முடைய மாணவர்களிடையோ அல்லது அவரை ஆதரித்தவராகச் சொல்லப்படுகிற ஏலேலசிங்கருக்கோ எல்லாக்

குறள்களுக்கும் உரை சொல்லித்தான் இருக்கவேண்டும். அவராகவே எல்லாக் குறள்களுக்கும் விளக்கம் சொல்லி யிருப்பார் என்று நினைப்பதுதான் நியாயம். அப்படி அவரே சொல்லியிராவிட்டாலும் அவருடைய சீடர்களோ மற்றவர் களோ அவரை இரந்து கேட்டாவது உரை சொல்லச் செய் திருப்பார்கள். அல்லாவிட்டாலும் திருக்குறளுக்குச் சிறப்புப் பாயிரமாக அமைந்துள்ள பாராட்டுகளைப் பாடிய இறைய னார் முதலாக ஔவையார் ஈறாகச் சொல்லப்படுகிற 53 புலவர்களிற் சிலராவது திருவள்ளுவரை அவருடைய நூலுக்கு அவர்கருதிய உரையைக் கேட்டிருக்கமாட்டார்களா? திரு வள்ளுவர் தாம் செய்த குறள்களுக்குத் தாம் கருதிய உரை களைச் சொல்லித்தான் இருப்பார். அந்த உரையைச் சில பேராவது ஏடுகளில் எழுதிக்கொண்டுதான் இருப்பார்கள். அக்காலத்திலிருந்து புலவர்களெல்லாம் வியந்து புகழ்ந்து சிரமேற்கொண்டு வணங்கிய நூலாகிய அத் திருக்குறளுக்குச் சிலர் எழுதிக்கொண்ட உரையைப் பல பேர்கள் பிரதிகள் எடுத்துக்கொண்டுதான் இருப்பார்கள். அந்தப் பிரதிகளில் ஒன்றாவது நமக்குக் கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் திருக்குறள் தோன்றியபின் கழிந்துள்ள இரண்டாயிரம் ஆண்டுகளில் வாழையடிவாழையாகத் திருக்குறள் மூலத்தைப் பிரதியெடுத்துவைத்துப் பாதுகாப்பதே வெகு பாடாகப் போய் விட்டதால் உரைகளின் பிரதியெடுப்பது முற்றிலும் அற்றுப் போயிருக்க வேண்டும். 1330 குறள்களை மட்டுமே பிரதி யெடுத்துக்கொள்ளப் பெருமுயற்சி வேண்டும். அப்படியிருக் கும் போது 1330 குறள்களுக்கும் பதவுரையும் பொழிப் புரையும் கருத்துரையும் விளக்கமும் இலக்கணக் குறிப்புகளும் பனை ஏட்டில் எழுத்தாணி கொண்டு எழுதுவதென்றால் இலேசான காரியமா? அப்படியே எழுதினாலும் அது எவ்வ ளவு பெரிய சுவடிக்கட்டாக இருக்கும்! அப்படியும் எழுதி வைக்கப்பட்டிருந்த எத்தனை உரைப்பிரதிகள் கரையானுக்கு

இரையாயினவோ! அல்லது மக்கி உதிர்ந்து போயினவோ! அநேகம் பழந்தமிழ் நூல்களின் மூலங்களே கூட நமக்குக் கிடைக்காமல் கரையான் தின்னோ மக்கிப்போயோ மறைந்து விட்டன என்பதை நமது தமிழ்த் தாத்தா உயர்திரு உவே. சாமிநாதஐயரவர்களுடைய ஆராய்ச்சிகளால் அறிவோம். அப்படியிருக்கத் தெய்வத் திருவாக்கென்று உலகமெல்லாம் வணங்குகிற இந்தத் திருக்குறளின் உரை கிடைக்காவிட்டாலும் மூலமாவது சிதைவின்றிக் கிடைத்திருப்பது தமிழ்த் தாயின் தவம்தான்.

எனவே திருவள்ளுவர் வெளியிட்ட அவர் கருத்துகளைக் காட்டக்கூடிய அவர் காலத்து உரை நமக்குக் கிடைக்கவில்லை. அப்படிப்பட்ட உரைப் பிரதி ஒன்றாவது கிடைத்திருந்தால் இப்போது நினைத்தவர்கள் நினைத்தபடி உரை சொல்லத் துணியமாட்டார்கள்.

# 27

# குறளோவியம்

*1956*

கலைஞர் மு. கருணாநிதி

*மாலைக்குத் தூது!*

*மாலை நேரத்திலே - சோலை ஓரத்திலே - வேலை நிகர்த்த விழியினர் காதல் பயில்வர். அதுபோது ஆலையிட்ட கரும் பென அவதிப்பட்டு உழல்வர் ஆளன் அருகிலா மாதர் அந்தி வானத்தின் அழகு காண்பர் - அதனோடு தன் இதழை ஒப்பி டும் அழகன் அங்கு வரவில்லையே என அயர்வர். தென்றல் அவர்தம் ஆடை நகர்த்தும். அதற்கு வாழ்த்துக் கூறித் தன்னைக் கேலி செய்யும் இன்பலோக ஏந்தல் இன்னும் வரக்காணோமே என விம்முவர் பூங்கொம்பு மலரிதழைத் திறப்பதற்கு முன்பே தேன் வண்டு பறந்து வரும் தன்மை காண்பர். 'வண்டு தழுவும் மலர் பார் கற்கண்டே!' என இன்பம் மொண்டு தரும் எந்தன் துரையை இன்னும் காணோமே என ஏங்குவர். மனம் வீங்கு வர். மாலைப்பொழுது, அவர் தம் நெஞ்சில் படைகொண்டு*

தாக்குவதுபோல் தோன்றும். இன்பம் தரவல்ல காதலையே நோயென்று கூறுவர். அந்த மனோநிலையைத் தான் வள்ளுவர் அழகாகக் கூறுகிறார்.

காலைப்பொழுதிலே அரும்பாய்த் தோன்றி, பகலெல்லாம் பேரரும்பாகத் தழைத்து, மாலையில் மலராக மாறுகிறது இந்தக் காமநோய்.

அதற்கு இதோ குறள்:

காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்.

அந்நோய் மலருகிற மாலை நேரம் எப்படி இருக்கிறது தெரியுமா மங்கைக்கு? அவளைக் கொல்ல வருகிற சேனையானது நெருப்புப்போல உள்ள மாலை நேரத்திற்குத் தூதாக வருகிறதாம்.

'கொல்லும்படை, அழல் போலும் மாலைக்குத் தூதாகி' என்கிறார்.

அதுமட்டுமா? மாலை நேரத்திலே ஆயன் குழலூதிக் கொண்டிருக்கிறான். குழலிலேயிருந்து இனிமை அருவியெனக்கொட்டுகிறது. தென்றலுக்கே இன்பம் சேர்க்கிறது அந்த இசை. அசைந்தாடும் மலர்க்கொத்துகள் குழலிசைக்கு அபிநயம் காட்டுவதுபோல் காட்சி தருகின்றன. நாகத்தையும் மயங்க வைக்கும் என்பர் குழலோசை. அதுவும் ஆயர்பாடி இளைஞன் அந்த வாத்தியத்திலே திறமைசாலி. அந்தக் குழலோசையைப் பற்றிக் காதலனைக் காணாக் கட்டழகி என்ன கூறுகிறாள் தெரியுமா? 'என்னை வருத்தும் சேனை; மாலைக்குத் தூதாக மட்டுமல்ல - ஆயன் குழலாகவும் வருகிறது போலும்!' என்று புலம்புகிறாள்.

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை

## மதியும் மடந்தையும்!

வெள்ளிப் பாற்குடத்தின் வாய்போன்ற வட்ட நிலா. அல்லிக்குளமோ என ஐயுறும் வண்ணம் நட்சத்திர வானம். அவைகளைப்பற்றியெல்லாம் தேனிசை மீட்டிவிட்டு, உலகத் தையே மறந்து அசைவற்று இருக்கின்றன அந்த நல்யாழ்கள் இரண்டும் - அந்த உயிர் யாழ்களின் கனவுலகத்தைக் கலைத்து விடக் கூடாதேயென்ற பயத்தோடு, மென்காற்று - அவர் களைக் கீழ்ஸ்தாயியில் தாலாட்டுகிறது.

வானத்திலே உள்ள - விண்மீன்களோ, பெரியதோர் குழப்பமான ஆராய்ச்சியில் இறங்கி, கலங்கித் திரிகின்றன. என்ன அந்த ஆராய்ச்சி!

தாங்கள் எங்கேயிருக்கிறோம் - நிலவு எங்கேயிருக்கிறது என்பதுதான் அவைகளின் ஆராய்ச்சியாகும்.

வானத்திலே உள்ள கண்ணாடியில்தான் இவள் முகம் தெரிகிறதோ - அல்லது, பூமியில் உள்ள கண்ணாடியில்தான் நிலவு தெரிகிறதோ - என வியக்கும் அளவுக்கு நிலாமுகம் படைத்த பேரழகி அவள் - ஆகவேதான் - அவளுக்கும், நிலவுக்கும் வேறுபாடு தெரியாமல் விண்மீன்கள் கலங்கித் திரிகின்றன.

அதற்கு இதோ குறள்:

> மதியும் மடந்தை முகனும் அறியா
> பதியிற் கலங்கிய மீன்

இப்படி விண்மீன்களுக்கே கலக்கத்தை உண்டுபண் ணிய அந்தக் கட்டழகியின் தோளிலே ஒருவன் மெய்மறந்து சாய்ந்து கிடக்கிறான் என்பதைக் காணும்போது, இளம் உள்ளங்களில் பொறாமைக்கீறல் விழத்தான் செய்யும் - ஆனால் வள்ளுவர் உள்ளமோ, அறிவு மணக்கும் அழகான கேள்வியொன்றை எழுப்புகிறது - 'அந்த உலகம்' என்று எந்த உலகத்தைப் பற்றியோ பிதற்றித் திரியும் சூதர்களுக்குப் பதிலாக அமைகிறது அந்தக் கேள்வி.

"தான் விரும்பும் காதலியின் மெல்லிய தோளில் சாய்ந் திருந்து துயிலும் துயில்போல இனிமை வாய்ந்ததா அந்த தாமரைக்கண்ணான் உலகம்?"

இல்லை - இல்லை!

இதோ குறளோவியம் காணுங்கள்:

தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு?

## காதலன் தந்த அடையாளம்!

காதலர் பிரிந்து விட்டால் காதலியின் மேனியிலே பசலை நிறம் பாய்கிறதாம். பசப்புறு பருவரல் என்னும் அதி காரத்தில் வள்ளுவர் அந்தப் பசலை நிறத்திற்கு அடிமையான பாவையரின் வேதனைகளை மிக அருமையாகச் சித்திரித் திருக்கிறார்.

மஞ்சத்திலே கொஞ்சு மொழிகள் உதிரும் - ஆடல் பாடல் - ஊடல் - கூடல் - எல்லாமே ஒன்றையொன்று போட்டி யிடும் காலையிலே எழுந்திருந்து கண்ணாடி பார்க்கும் தலைவி: கண்ணாடியிலிருப்பதும் தன் உருவம்தான் என்பதை மறந்துவிட்டு, திடீரென்று, தன் கன்னத்தை மூடிக் கொள் வாள் பிறகு தான் அவளுக்கு நினைவு வரும்; எதிரேயிருப்பது கண்ணாடி - அதிலே தெரிவது தன்உருவம் என்று! யாரும் தன் கன்னத்தைப் பார்த்துவிடவில்லையென்றே திருப்தி ஏற்படும் அவளுக்கு - ஒவ்வொரு நாளும் காலையிலே இப் படி ஒரு நிகழ்ச்சியைச் சமாளித்துத் தீரவேண்டியிருக்கிறது என்று தெரிந்தும் கூட, இரவு நேரத்திலே அவள் அதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்வதுமில்லை; முன்ஜாக்கிரதை யாக இருப்பதுமில்லை. அதனால், கன்னத்திலே பசலை நிறம் பாய்ந்த ஒரு வட்டம் உதயமாகி விடுகிறது. யாராவது பார்த்து விடுவார்களே என்ற வெட்கம் இருந்தாலும் கூட, அந்தக் கன்னத்தை அவள் தனக்குள்ளாக ரசிக்கத் தவறுவ

தில்லை. மெல்லிய விரல்களால் தடவிப் பார்த்து - ஏதோ ஒரு நடந்துபோன நிகழ்ச்சியை எண்ணி அவளாகவே சிரித்துக் கொள்கிறாள் யாராவது வந்தால், கன்னத்தைத் தடவுவது போல மறைத்துக்கொள்கிறாள். வந்தவர் போனதும், கண்ணாடியில் கன்னத்தைக் கண்டு களிப்படைகிறாள். காதலன் பொறித்த முத்திரை அவள் கண்ணுக்கு விருந்தூட்டி, கருத்துக்கும் இனிமை சேர்க்கிறது

இவளைப் போலவே ஒரு எழிலரசியைப் பேச வைக்கிறார் திருக்குறளார். காதலன் பிரிந்து விட்டான் காதலியிடம் விடை பெற்று! நிலவு போனதும் வானத்திற்கு இருள் நிறம் வருகிறதே - அதுபோலவே இந்த நேரிழையாளுக்கும் பசலை நிறம் மேனியில் பரவி விடுகிறதாம். அந்தப்பசலை நிறம் தன் உடலில் ஏறிப் பரவுவதை அவள் காண்கிறாள். காதலரின் பிரிவால் அல்லவா இந்நிறம் ஏற்பட்டது என வருந்துகிறாள். அதே சமயம் அந்த வேதனையிலும் அவளுக்கோர் பெருமிதம் ஏற்படுகிறது.

கன்னத்தில் அடையாளம் பெற்ற காரிகை, வெட்கத்தால் வேதனையுற்றாலும், அது தன் காதலன் தந்த அடையாளம் என எண்ணி மகிழ்கிறாளே; அதுபோலவே இவளும் பிரிவுத்துயரால் என் உடலில் பரவும் இந்த நிறம், என் காதலரால் ஏற்பட்டது என எண்ணுவது பெருமைக்குரியது என்கிறாள்

அந்தக் குறள் இது:

அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்து என்
மேனிமேல் ஊரும் பசப்பு.

## நோயும் நாணமும்!

'நகை தந்தார் - நகை தந்தேன். தொட்டார் - சுட்டேன் தழுவினார் - நழுவினேன் தொடர்ந்தார் - படர்ந்தேன். பிரிந்தார் - இருக்கிறேன்'

வேதனையை விழிமூலம் விளக்கி நிற்கிறாள் அவள். இன்னொருத்தியோ இடுப்பொடியாமல் இருப்பதற்காகத்

தோழியின் தோளைப் பிடித்துக் கொண்டிருக்கிறாள். உயிரைக் காவடித் தண்டாகக் கொண்டு காம நோயும், நாணமும் இரு பக்கமும் தொங்குகின்றன; நான் என் செய்வேன்? - என்று துவளுகிறாள் அந்தத் தோகை.

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பி னகத்து.

அவள் குமுறலை உணர்த்துகிறது இந்தக் குறள். இருவர் நிலைதான் இதுவென்றால், எந்தன் நிலையோ அதைவிட மோசம் - என்று மழைக் கண்களைக் காட்டுகிறாள் மற்றொருத்தி.

காதலன் விடைபெற்றபோது அவள் கூறிய வார்த்தை என்ன தெரியுமா? 'நீ போகவில்லை யென்றால் என்னிடம் சொல்; போய்த் திரும்புகிறேன் என்று சொல்வதானால், நீ திரும்பும் வரையில் உயிரோடு இருப்பவரிடம் விடை பெற்றுப் போ!'

இப்படிச் சொல்லிக் காதலனைத் திணற அடித்தவள் அவள். பாவம்; அவளால் காமநோயைப் பிறர் அறியாமல் மறைக்கவும் முடியவில்லை; அந்த நோய் தந்த காதலனிடம், நோயின் கடுமை பற்றி விவரிக்கவும் வெட்கமாயிருக்கிறது. இப்படித் திண்டாடுகிறாள், அந்த வண்டாடும் மலர்க்குழலாள்.

கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும்.

உடலிற் பூசிய சந்தனத்தின் ஈரம் காய்வதற்குள் அவசரப் பட்டார்; பாடச்சொன்னார்; உடனே இதழ் மூடச்சொன்னார்; 'இசை கசக்கிறதோ?' என்றேன் 'இல்லை; இதழ் இனிக்கிறது' என்றார். விளக்கைக்காட்டி, 'அணையுங்கள்' என்றேன். அணைத்தார். உயிர், அணு ஒவ்வொன்றையும் தேனில் நனைத்தார். பக்கத்தே சிறிது நகர்ந்தேன். உடனே என் உடலெங்கும் பசலை நிறம் பரவிவிட்டது. அந்தப் பிரிவைக்கூட

என்னால் தாங்க முடியவில்லையே; இந்தப் பிரிவை எப்படி யடி தாங்குவேன்? என்று வருந்துகிறாள், அந்த வண்ணமணிச் சிலையாள்.

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு.

முக்கனியோ, முழுமதி மூன்றோ - என ஐயுறும் வகையில் அமைந்த அந்தப் பெண்ணரசிகள், கண்ணயரா நிலையில் காதலனுக்காகக் காத்திருக்கும் காட்சியைத்தான் வள்ளுவர், குறளோவியமாகத் தீட்டித் தந்திருக்கிறார், குறையாத அழ கோடு - குன்றாத ஒளியோடு!

## யாருள்ளி?

யாராவது நம்மை நினைக்கும்போது தும்மல் வருமென் றும், அப்படித் தும்மிடும்போது வாழ்த்துச் சொல்வது என் றும் ஒரு நம்பிக்கை பழங்காலந்தொட்டுத் தமிழகத்தில் பரவி நிற்கிறது. அந்தப் பழக்கத்தை வைத்து வள்ளுவனார் ஒரு அரிய காதல் காட்சியைச் சித்திரிக்கிறார்.

சோலைப் பசும் புற்றரையிலே - பால் வண்ண உடை உடுத்தி - காதல் மகனும், காதல் மகளும் இன்ப யாழை மீட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஆரத்தழுவி அகமகிழும்போது முகத்தில் பதிந்த முழுநிலவுப் பெண்ணின் கரிய கூந்தலின் சிறு தொகுப்பு அவனையுமறியாமல் அவன் மூக்கிலே பட்ட தாலோ என்னவோ தும்மிவிட்டான். உடனே அந்த அணங்கு, அவனை 'வாழ்க!' என்று வாழ்த்தினாள். வாழ்த்தியவளுக்கு திடீரென ஒரு நினைவு எழுந்தது.

'ஆமாம் - எந்தப் பெண்மயில் உம்மை நினைத்தாள்? அதனால் தும்மினீர்?' என்று ஒரு கேள்வியைப் போட்டு ஊடல் புரிந்தாள். செல்லமாக அழுதாள். காதலனுக்கு மீண்டும் தும்மல் வந்தது. காதலி, ஐயத்தால் அழுவாளே என்று அந்த முறை தும்மலை அவன் அடக்கிக்கொண்டான்.

அவளோ, காதலனை நினைத்து ஏங்குகிற இன்னொருத்தி இருக்கிறாள் என்பதை நிச்சயமாக முடிவு செய்து கொண்டவள் போல,

'ஓகோ! இன்னொருத்தி உம்மை நினைப்பதை, எனக்குக் காட்டிக் கொள்ளாமல், தும்மலை அடக்கி மறைக்கிறீரோ?' என்று மீண்டும் அழுதாள்.

அதை விளக்கும் குறளோவியங்கள் இரண்டு - இதோ!

வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

தும்முச் செறுப்ப வழுதாள் நுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

## தோற்றாய்! தோற்றாய்!

தும்மினால் அருகிலிருப்போர் வாழ்த்துவர். இது பழைய கால வழக்கம். அந்த வழக்கத்தை வைத்து வள்ளுவர், காதலர்களை ஊடல் புரியமட்டும் விடவில்லை; ஊடல் தீர்ப்பதற்கும் அந்தப் பழக்கத்தைப் பயன்படுத்துகிறார்.

துப்புரச் சிவந்த வாயாள் தூய பஞ்சணையின் மீது ஒப்புறக் கணவனுடன் இருந்த காலை இடையே எழுந்தது ஊடல் என்னும் காதல் திருவிளையாடல்! ஒன்பது முத்தம் தருவேன் என்று எட்டு தந்து நிறுத்தினானோ; அல்லது அவள்தான் எட்டி நின்றுவிட்டாளோ? - கட்டிக் கரும்பே என அழைத்து விட்டு, சுவைக்காமல் தயங்குகிறானே என்று ஊடல் புரிந்தாளோ? எண்ணி ஏன் ஒன்பது கேட்டாள்; எண்ணாமல் பெறுவதற்கு ஏன் அஞ்சினாள் என்று அவன் தான் மடிவிட்டு எழுந்தானோ? எப்படியோ உல்லாசபுரியில் ஊடல் நிலவு உதயமாகிவிட்டது. சில வினாடிகள் அமைதி!

காதலன் திடீரெனத் தும்மிவிட்டான். காதலியும், ஊடலை மறந்து 'வாழ்க!' என்று வாழ்த்திவிட்டாள்.

'தோற்றாய்! தோற்றாய்!' என்று தோகையின் சிவந்த கன்னத்தைச் சிவக்கவைத்தான். அவளும் பின்னிக் கொண்டாள். 'தும்மல்' அவர்கள் ஊடலைத் தவிர்த்து விட்டது. காதலன் சாதாரணமாகக்கூடத் தும்மியிருக்கலாம். ஆனால் அவளோ, மறுநாள் காலை தன் தோழியிடம், தன் காதலனின் திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டாக,

'நான் ஊடினேன் - அவர் வேண்டுமென்று தும்மினார் நான் ஊடலை மறந்து வாழ்த்திவிட்டேனடி!' என்று கன்னத்தைத் தடவிக்கொண்டே கனிமொழி சிந்துகிறாள்.

அந்தக் குறள் இதோ!

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

## நலிவுதரும் நனவு!

அவளோர் சித்திரப்பாவை உரித்தெடுத்த அல்லித் தண்டின் நிறம்பெற்ற உருக்குலையா மங்கை அவள் ஒளிமுகம் ஓராயிரம் நிலவுகளை ஒன்றாக அடுக்கிவைத்துக் கற்பனை செய்து போட்டிபோட்டுப் பார்த்தாலும் எதிர் நிற்கக்கூடிய ஆற்றல் வாய்ந்தது அத்தகைய - அழகின் வடித்தெடுத்த கூட்டு அவள்! காணக் கிடைக்காத தங்கம் தேடக் கிடைக்காத வைரம் களிப்பிலாடும் மயில் - காதாரப் பண்பாடும் குயில்! நடக்கும் பொன் வண்டு! நடனமிடும் நட்சத்திரம்!

அவள் அன்னத்தூவி பரப்பிய மஞ்சத்திலே ஆனந்த நித்திரை செய்துகொண்டிருக்கிறாள் தூங்கும் அந்தத் தோகையாளின் துடியிடை நெளிவதேன்? தூய்மை நிறை அவள் செவ்விதழ்களிலே அமுதம் நிறைவதேன்? மின்னித் தேங்கும் அந்த அமுதத்தை அவளது அரும்பு இதழ்கள் அவளையுமறியாமல் சுவை பார்ப்பதேன்? ஆகா - ரத்தினத்தின் நிறம் பழிக்கும் விதத்திலே அவள் கன்னங்கள் மாறுகின்றனவே; அது ஏன்? எத்தகைய மந்தகாசமான புன்னகை! முல்லைச் சிரிப்பா? முழுநிலாத் தோற்றமா? எல்லையிலா மகிழ்ச்சியின் கோடுகள்

அவள் வதனமெங்கும் அழகுக் கோலங்கள் போடுகின்றனவே! இதற்குக் காரணம் யாரைக் கேட்பது? வள்ளுவரைத் தான் கேட்கவேண்டும்.

'அய்யா வள்ளுவப் பெருந்தகையீர்! என்ன காரணம் இதற்கு?'

'தம்பீ! அவளே - அதோ எழுந்துவிட்டாள் - அவளையே கேள்!'

இப்போது அவள் தனக்குத்தானே பேசிக்கொள்கிறாள். அது நம் காதில் விழுகிறது - கேளுங்கள்!

'கனவிலே வந்து என்னை என் காதலர் கூடினார். இன்ப சுகந்தரும் அன்பு பொருந்தி ஆனந்தம் பெற்றேன். என்னை விட்டு நீங்காமல் கனவிலே கூடியிருந்த என்காதல் தேவனை, நனவு என்று சொல்லப்படுகிற ஒரு கொடியவன் ஓடிவந்து பிரித்துவிட்டானே!'

காரிகை கதறுகிறாள். நனவைத் திட்டுகிறாள்.

காதலனோடிருப்பதாகக் கனவு கண்டாளாம். விழித்துக் கொண்டாளாம். அதற்காக வருந்துகிறாள். அந்தச் சோகத்தை வள்ளுவர் நடையிலே கேட்டு இன்பம் பெறுங்கள்.

இதோ!

**நனவென ஒன்றில்லை யாயின் கனவினாற்**
**காதலர் நீங்கலர் மன்**

# 28

# வள்ளுவர் கண்ட காமம்

1957

தெ.பொ. மீனாட்சி சுந்தரம்

திருவள்ளுவரது திருக்குறள் அறம், பொருள், காமம் என்ற மூன்று பிரிவுகளாக இருப்பதால் முப்பால் எனப் பெயர் பெறுகிறது. இது 'த்ரிவர்க்கம்' என வடமொழியில் வழங்குகிறது. இந்தப் பாகுபாடு இன்றுள்ள தமிழ் நூல்களில் மிகப் பழையதாகிய தொல்காப்பியத்திலும் காண்பதொன்றாகும். 'இன்பமும் பொருளும் அறனும்' என்று அடுக்குகின்றார் தொல்காப்பியர் (தொல். 1037) ஆதலின், இதனைப் பழந்தமிழ் மரபு என்று கூறலாம். இந்திய நாட்டுக்கு வெளியே இந்த மரபு காணப்பெறாமையால் வடமொழி வழக்கு என்பதினும் இந்திய நாட்டுக்குரிய பொதுமரபு இஃது என்பதே உண்மையாம்.

'அறம் பொருள் எனத் தொல்காப்பியர் கூறியபடியே அறத்துப்பால், பொருட்பால் என முதல் இரண்டு பால்

களுக்கும் பெயரிட்ட திருவள்ளுவர், தொல்காப்பியர் கூறிய இன்பம் என்பதற்கு ஏற்ப இன்பத்துப்பால் என மூன்றாம் பிரிவிற்குப் பெயர் வையாது காமத்துப்பால் என்று பெயர் இடுவாரா?' - இந்நாளில் இவ்வாறு ஒரு கேள்வி பிறக்கின்றது. 'தர்மார்த்த காமம்' என்பது பழமொழித் தொடர். காமம் என்பது வடசொல். வடசொல்லினை வள்ளுவர் இவ்வாறு தலைப்பாக வழங்கார் என்று சிலர் முடிவுகட்டிக் காமத்துப் பால் என்ற பெயரினையே இன்பத்துப்பால் என மாற்றுகின் றனர்; அதுவே அவரிட்ட பெயர் என்று மன்றாடுகின்றனர். ஆனால், காமம் என்ற சொல், 'இன்பமும் பொருளும் அறனும்' என்று தொல்காப்பியர் கூறும் சூத்திரத்திலேயே 'காமக் கூட்டம்' என வரும் அழகிய தொடரின் உயிர்நிலையாக விளங்கக் காண்கிறோம். இது சங்கப்பாக்களில் மிகப் பயின்று வழங்கும் சொல்லாகும். 'சிறந்தது காதற் காமம்' என்று அறை கூவி அறிஞரை அழைக்கின்றது பரிபாடல் (9).

திருவள்ளுவர் வடநூல் அறியாரா? அறிவது தவறா? மொழிக்கெனக் கொள்கை ஒன்று உண்டா? இன்று நாம் ஆங்கிலம் அறிவது தவறா? ஆங்கிலத்தில் நாம் அறிவன இந் நாளைய கொள்கையாவன அன்றி ஆங்கில மொழிக் கொள் கையாமோ? வடமொழி நூல்களைத் தமிழரும் எழுதியுள்ள மையால் வடநூல்களில் காணப் பெறுவன அந் நாளைய இந்திய நாட்டுப் பொதுக் கொள்கைகளாகாவா? அவைகள் தமிழ்க் கொள்கைகளே ஆகாமல் முற்ற முடிய ஒழிந்து போகுமா? இங்குக் கொள்கையைப்பற்றித்தானும் ஆராய்ச்சி இல்லையே! காமத்துப்பால் என்ற பெயருண்மைக்குத் தடை, காமம் என்பது வடசொல் என்பதொன்றே அன்றோ? 'காமம் என்ற சொல் கேட்ட துணையானே காமம் தீமையா மாறு இல்லை; நன்றாமாறும் உண்டு' என்று நக்கீரர், இறையனாரகப் பொருளுரையில் வற்புறுத்துவதனைத் தமிழர் மறக்கப் போமோ? வடசொல்லே வள்ளுவர் வழங்கவில்லையா? இவ்வாறு வினாக்களை அடுக்கிக்கொண்டே போகலாம்.

ஆனால், 'இன்பத்துப்பால் என்பதே தலைப்பு' என்ற இந்த ஆராய்ச்சியின் அடிப்படை விளங்குவது அருமையாகிறது.

வள்ளுவரிடம் தஞ்சம் புகுதலே இங்குள்ள வழி. குறளில், காமம் என்ற சொல்லின் வழக்காறு என்னை? இன்பம், இன்பு, இன்பத்துள் என்ற முப்பெருவடிவ வேறுபாட்டோடும் இன்பம் என்ற சொல் திருக்குறளில் 26 இடங்களில் மட்டுமே வந்துள்ளது. ஆனால், காமம் என்பதோ காமத்தை, காமத்தால், காமத்தான், காமத்திற்கு, காமத்தின் என உரு பேற்றும், காமத்து எனச் சாரியை பெற்றும், காமக்கலன் என்பதிற் போலத் தொகைச்சொல்லில் முன்மொழியாய் நின்றும், காமன் என ஆண்பால் விகுதி ஏற்றும், காமுறுதல், காமுறுவர், காமுற்றார், காமுற்று என உறு என்ற துணை வினையோடு வெவ்வேறு வினைவடிவடைந்தும், காமம் என்றே நின்றும் குறளில் 46 முறை வழங்கி வரக்காண்கிறோம். இன்பம், பல்வகை இன்பத்திற்கும் பொதுவான பெயராய் வரக் காமம் காதலின்பத்திற்கே சிறப்பான பெயராய் வருகிறது. காமத்துப்பாலின் வழக்காற்றையே நோக்குதல் அன்றோ கற்றறிந்தோர் செய்யத்தக்க ஆராய்ச்சி!

> இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
> துன்பம் அதனிற் பெரிது. (1166)

என்ற குறளிலும்,

> ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்
> கூடி முயங்கப் பெறின். (1330)

என்ற குறளிலும் ஆக இரண்டே இடங்களில் இன்பம் என்ற சொல் திரிபின்றி வருகிறது; காமம் என்ற சொல்லோ திரிபின்றி 39 இடங்களில் வருகிறது. இந்த நிலையில், 'காமத்துப் பால் என்ற பெயர் திருவள்ளுவர் இட்ட பெயர் அன்று' என எவ்வாறு முடிவு கூறுவது? 'காமத்திற்கு இன்பம்' என்றீ தொடரே, வள்ளுவர் காமத்தினையும் இன்பத்தினையும் வேறுபடுத்துகின்றார் என விளக்கம் தரவில்லையா? காமம்

என்பது இன்ப அன்பு: அதன் பயன் இன்பம். இன்பமே முடிந்த பயன். இந்த முடிவினை வற்புறுத்துகின்ற தொல் காப்பியர், முடிவிலிருந்து தொடங்கி, இன்பமும் பொருளும் அறனும் என்றுமுறை செய்து, அறன் என்ற அடிப்படையை விளக்குகின்றார்; அனைத்து வகையாலும் இன்பமே வேண் டும் என இன்ப நாட்டத்தில் அலையும் உலகினை வழிப் படுத்துகின்றார். திருவள்ளுவரும், முடிவினை வற்புறுத்தும் இடத்தில், அறம் பொருள் இன்பம் (501) என்று கூறி, இன்பம் என்ற சொல்லினையே கையாளுகின்றார். மேலே கூறிய காமத்துப்பாலிலிருந்தும் காட்டிய இரண்டு குறள்களிலும் அந்த முடிவு நிலையையே வற்புறுத்துவாராய வள்ளுவர், இன்பம் என்று பேசி, அந்த இன்பம் காமத்தின் பயனாகும் இன்பம் என விளக்கி விடுகின்றார். முதலும் பயனுமாம் இந்த வேற்றுமையை அடிப்படையாகக் கொள்ளாக்கால், காமத் துப் பாலினை எவ்வாறு விளக்குதல் கூடும்? அனைத்து விளக் கமும் காரிய காரண விளக்கமே அன்றோ? அந்தக் காரண காரியம் முதற்காரண காரியமும் ஆகலாம்; பிறவகையான காரணகாரியமுமாகலாம். அந்த ஆராய்ச்சியில் புகவேண்டா. இன்பத்துப்பால் என்னாது காமத்துப்பால் என்ற நுட்பத் தினை உணர்ந்து துய்க்கவேண்டும் என்பதே இங்குக் கூறத்தக் கது. பரிமேலழகர் 'இன்பம் கூறுவான் எடுத்துக் கொண்டார்' எனத் தமதுரையைத் தொடங்குவதால், காமத்துப்பால் என்பது அவரிட்ட பெயர் எனச் சிலர் கூறுவது மெய்யாமா றில்லை. ஆனால், அவரே, 'ஈண்டு இன்பம் என்றது, ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைய தாம் காம இன்பத்தினை' என விளக்குகின்றார்.

> **கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்**
> **ஒண்டொடி கண்ணே உள. (1111)**

என்று புதுவதாக வள்ளுவர் கூறியதனையே, பிற இன்பங் களினும் காமஇன்பத்தினைப் பிரித்தறிவதற்குச் சிறப்பியல்

பாகப் பரிமேலழகர் கொள்வது அறிந்து இன்புறுவதற்கு உரிய நுட்பமாம். வள்ளுவர் இட்ட இந்தக் காமக்கடை காலின் மேலன்றோ இன்பக்கோயில்.

> மாசறு பொன்னே வலம்புரி முத்தே
> காசறு விரையே கரும்பே தேனே. (சிலப்.2.73.4.)

என்றெல்லாம் சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களில் எழுந்தோங்குகிறது! இதனைக் காம இன்பம் எனப் பிரியாது இன்பம் என்றே மொழிந்தால் சிறப்பாக இனிப்பது ஏது?

காமம் வடமொழி என்று கொள்வானேன்? இச்சொல் இருக்கு வேதத்தில் கண்டதே ஆனாலும், காலம் உலகம் என்பவைபோலத் தமிழ்ச் சொல்லும் ஆகாதோ? 'ஒண்ணு' என்று தமிழில் மருவி வழங்குவதும் 'ஒன்' என ஆங்கிலத்தில் வழங்குவதும் ஒன்றேயாதல் வேண்டுமோ? காமுறுதல் முதலான சொற்களில் 'காம்' என்றே அச்சொல் நிற்கக் காண்கிறோம். 'கமம் நிறைந்தியலும்' என்பது தொல்காப்பியம். இரு, ஈர் ஆதல்போல, அடிச்சொல் முதல் நீளுதலும் உண்டு. விரைந்து வழங்குகையில் ஈறுகெடுமானால், அந்தக் குறைவினை நிரப்ப, எடுத்தோதப்பெறும் முதல் நீளுவது தமிழ் மரபு. கமம் என்ற தமிழ்ச்சொல் முதலுயிர் நீண்டு, காமம் என்றும், ஈறு கெட்டுக் காம் என்றும் நின்று, ஆணும் பெண்ணுமாகத் தனித்தனி நிற்கும் குறைபாட்டினை, இருவரும் ஒன்றுஆகி, நிறைவாக்க முயலும் இன்பஅன்பினைக் குறிப்பதாகக் கொண்டு, காமம் என்ற வடசொல்லின் உறவால் காமம் என்ற வடிவம் நிலைத்து விட்டது' என விளக்குவர் சென்னைப் பல்கலைக் கழக விரிவுரையாளர் திரு.மொ.அ. துரையரங்கனார். 'காமம் என்பது வடமொழி யாயின் இழித்திடப்பட்ட பொருளையும், தமிழ் மொழியாயின் இவ்வாறு உயர்ந்ததொரு பொருளையும் குறிக்கும்' என்பர் அவர். தொல்காப்பியத்திற்கு முற்பட்ட காலத்தினைப் பற்றிய ஆராய்ச்சியாதலின் இங்கு முடிவுகூறப் போதிய கருவிகள்

இல்லை. எவ்வாறாயினும், பொருளின் நன்மை தீமையை ஆராயாது, சொல்லொலி கொண்டே வடமொழி என வெறுப்பது அறிவுக்கு அழகோ? வள்ளுவர் வகுத்த வழியோ? சம்பந்தர், மாணிக்கவாசகர், புத்தர், மஹா வீரர், ஏசு, மகமது என்ற சொற்கள் பிறமொழிச் சொற்கள் என்பது கொண்டே, இச் சொற்களின் பொருளாய் நிற்கும் உலகப் பெருவள்ளல் களை வெறுக்க முடியுமோ?

## 2

தங்கள் கடைவாயில் வழியாக அன்றி, வேறு எவ்வழியில் வெளிச்சம் கண்டாலும் கண்கூசி நிற்பார் ஒருபுறம். இவ்வாறு சிலர் காமத்துப் பால் என்ற சொற்றொடரின் ஒளியினையே வேற்றொளியும் மாற்றொளியும் என வெகுண்டு கண்கூசி நிற்ப, வடமொழியிலன்றி விளக்கமில்லை என்று கடபட என உருட்டி வெருட்டிக் குழறும் பகற்குருடர் மற்றொரு புறம் நிற்பர். குறளில் கண்டதனைத்தும் வடமொழி நூற்களின் மொழி பெயர்ப்பே என்று சிலர் மன்றாடுவர். இவர்களினும், இத்துறையில் கடைபோகக் கண்மூடியவர்கள் 'குறளும் பெருநூலோ?' 'ஞானம் பாடும் உபநிஷதங்களிருக்கக் காமம் பாடும் குறளினை ஓதிக் கெடுவதோ?' என்று எழுதியும் வருகின்றனர். இவர்கள், தமிழ் என்று கண்டு திருவாய்மொழிக்கும் தம் காதினைப் பொத்தி, அதனைப் பாடியவர் பார்ப்பனரல்லாதார் என்றதும் நம்மாழ்வார் வடிவினைக் காணாது தம் கண்ணினையும் பொத்தி வாழ்ந்த கூட்டத்தின் வழிவந்தவர்கள். பார்ப்பனப்பெருமகனாய்ப் பிறந்து உலகப் பெருமகனாக வாழ்ந்த அழகிய மணவாள நாயனார் தமது ஆசாரிய ஹ்ருதயத்தில் இவர்களைப்பற்றி நன்றாகப் பாடியுள்ளார். இன்று எழுந்தவர்களுக்கு, விபுலாநந்த அடிகள் தாம் 'இராமகிருஷ்ண விஜய'த்தின் ஆசிரியராக விளங்கியபோது நல்ல விடை தந்துள்ளார். தந்தும் பயன் என்னை? தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று மன்றாடுவாரிடம் மன்றாடவல்லார் யார்? கண்ணைத் திறந்

திருப்பாருக்கு எதையேனும் காட்டுதல் கூடும். 'கண்ணைத் திறவோம்' என்று இறுகமூடிக் கிடப்பாருக்கு எதனைக் காட்ட முடியும்?

பரிமேலழகர் முதலியோர் காலத்திலும் இத்தகையவர் இருந்தனர். அவர்களுக்காகவே இந்த உரையாசிரியர்கள் வடமொழி மரபுபற்றி உரைகூறி, 'அங்குள்ளதெல்லாம் இங் குள்ளது' எனக்காட்ட மிக முயல்கின்றார்கள். ஆனால் அந்த உரைகளை வேறொரு வழியாக இந்த நாளில் சிலர் பயன் படுத்துகின்றனர். வள்ளுவர் வடநூலைப் பார்த்தே திருக் குறள் முழுவதும் செய்தனர் என்ற கொள்கையைப் பின்பற்று வார் மனப்போக்கினை அறிவது அருமை. 'இதனை வட நூலார் காகு என்பர்' (1318); 'இவற்றை வடநூலார் ஈதிகள்' என்பர்.(732); 'மௌலம் என்பர்' (762); 'ஆததாயிகள் என் பர்' (550); 'இவை ஐந்தனையும் மந்திரத்திற்கு அங்கம் என்ப' (631); 'தானமும் காமமும் என்பர்' (525) எனப் பரிமேலழகர் கூறுவன தமிழ் நூலுக்கும் வடநூலுக்கும் உள்ள பொது மையை விளக்கும் கூற்றுக்களே ஆம். 'வடநூற் பொருண் மையை உட்கொண்டு ஓதியது' (501); 'இவர், பொருட்பாகு பாட்டினை அறம்பொருள் இன்பம் என வடநூல் வழக்குப் பற்றி ஓதுதலான்' (காமத்துப் பால் முன்னுரை); 'வடநூல் மதம்பற்றிக் குற்றமே அற்றந்தரும் பகை என்று கூறினார்' (434); 'ஈண்டுப் பிரிவினை வடநூல் மதம் பற்றிச் செலவு, ஆற் றாமை, விதுப்பு, புலவி என நால்வகைத்தாகக் கூறினார்' (1330): என்பவை போன்றவை வடநூல் மரபினை வள்ளுவரும் பின்பற்றுகின்றார் என்று பரிமேலழகர் சுட்டுவனவாகும்.

வடநூலார் கொள்கையொடு தம் கொள்கையையும் கூறுகின்றார் வள்ளுவர் என்பதனையும் பரிமேலழகர் காட் டாமல் இல்லை. 'ஊறு (பழுதுபடுவன) ஒரால் (நச்சுப் படாமை) உற்றபின் (பழுதுபட்டபின்) ஒல்காமை (மனந் தள ராமை) இவ்விரண்டின் ஆறு என்பர் ஆய்ந்தவர் கோள்' என்ற குறள், வினைத்திட்பம் என்ற அதிகாரத்தில் வருவது.

இங்கே பரிமேலழகர் எழுதியதாக ஒரு குறிப்பு வருகிறது: 'தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளி களது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறிய வாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத்தூய்மை யையும் உடன் கூறினார்' என்பது ஒரு சொற்றொடர். ஈது ஒரு வியப்பு! இதற்கு முன்னைய அதிகாரம் 'வினைத்தூய்மை' என்ப தாகும். வினைத்தூய்மை என்ற அதிகாரம் கூறியதற்கு இத் தகைய முகவுரை பொருந்தும். அங்குக் கூறாது இங்குக் கூறுவது ஏன்? 'வினைத் தூய்மையும்' என்ற உம்மை எத னைத் தழுவுகின்றது? 'வினைத் திட்பம்' என்பதனையே ஆதல் வேண்டும். எனவே, வினைத்திட்பத்தினையே கூறுவார் பலர். ஆனால், அறநூல் போல, வினைத்தூய்மையைப் பொருள் நூல் கூறுமிடத்திலும் வள்ளுவர் வற்புறுத்துகின்றார் என்பதே இங்குள்ள சிறப்பு. இவ்வாறு பலதிறக் கொள்கை களையும் வள்ளுவர் கூறுவது இந்திய நாட்டின் அருத்த சாத்திர ஆராய்ச்சியின் இயல்பு என்பதனைப் பரிமேலழகர் எடுத்துக் காட்டுகின்றார். வியாழ வெள்ளிகளுடைய துணிபு களைத் தொகுத்துக் கூறுவார் அவர்களுக்குப் பின்வந்த நீதி நூலுடையார் அனைவருமே ஆவர். 'பின் நீதி நூலுடையார்' என்பதற்கு இந்தச் செம்பொருள் நேரே விளங்கவும், காமாந் தகம் ஒன்றினையே குறிப்பதாகப் கூறிக் காமாந்தகத்திற்கும் வள்ளுவர் நூல் பிந்திய நூல் என மன்றாடுவாரும் உண்டு. எவ்வாறு பொருள் கொண்டாலும், 'வினைத் தூய்மையும்' உடன் கூறினர் என்பது இந்த இடத்தில் விளங்காத பாடமே ஆம். 'வினைத்தூய்மை' யோடு வினைத்திட்பத்தையும் உடன் கூறினர் என்று இத்தொடர் இருப்பின் பொருந்தும்.

அப்போதும் இத்தொடர் இந்த அதிகாரத்தின் முறை வைப்பு அழகினைக் கூறியதன் பின்னர் வரும் முன்னுரையாக அமைதல் வேண்டும். இல்லையேல், இப்போது இருக்கின்ற வடிவிலேயே முன்னதிகாரத்தின் முகவுரையில் இடம் பெற் றிருக்கலாம். ஏடுகளின் முறை பிறழ்ச்சியால் இடப் பிறழ்ச்சி

ஏற்பட்டு இவ்வாறு இந்தச் சொற்றொடர் இப்போதுள்ள இடத்தில் எழுதப் பெற்றிருக்கலாம். எவ்வாறாயினும் திரு வள்ளுவர் பல கொள்கைகளையும் வற்புறுத்துபவர் என்பது இதனால் நன்கு விளங்குகிறது.

ஐயத்திற்கு இடமான இந்தச் சொற்றொடரேயன்றித் தெளிவான பிறசொற்றொடர்களும் நம் கொள்கையை வற் புறுத்திப் பரிமேலழகர் உரையில் வரக்காண்கிறோம். 'வட நூலார் இவ்விரு வகையாருடன் (தானே வகுத்துக் கூறுவார், கூறுவது கூறுவார்) ஓலை கொடுத்து நிற்பாரையும் கூட்டித் தூதரைத் தலை இடை கடை என வகுத்துக் கூறினார் ஆக லின், அவர் மதமும் தோன்றத் தலை என்றார்.' எனவரும் பகுதி காண்க. ஓலை கொடுத்து நிற்பாரைத் தூதுவர் என வள்ளுவர் ஒப்புக்கொள்ளவில்லை. 'அப்படிக் கூறுவாரும் உண்டு என்பதனை நினைப்பூட்டுகின்றார் வள்ளுவர்' என் பது பரிமேலழகர் கொள்கை. பெருந்தேவனார் பாரதம், இந்த வடநூல் மரபினைத் தமிழில் பாடியுள்ளது: 'தானறிந்து கூறும் தலை; மற்றுஇடையது, கோன் அறைந்தது ஈது என்று கூறுமால் தானறியாது, ஓலையே காட்டும் கடை என்று ஒரு மூன்றும் மேலையார் தூது உரைத்தவாறு' வடநூல் மர பினைச் சுட்டினாலும் வள்ளுவர். தம் கொள்கையாக அதனைக் கூறவில்லை என்பதே பரிமேலழகர் முடிபு.

அம்மட்டுமோ! வள்ளுவர் வடநூல் முடிபினை மறுத்துக் கூறுவதாகவும் பரிமேலழகர் எடுத்துக்காட்டவில்லையா? 'இன்றியமையாச் சிறப்பின ஆயினும், குன்ற வருப விடல்' என்பது குறள். 'இறப்ப வரும்வழி இளிவந்தன செய்தாயினும் உய்க' என்னும் வட நூல் முறையை மறுத்து உடம்பினது நிலையின்மையையும் மரணத்தினது நிலையுடைமையையும் தூக்கி 'அவை செய்யற்க என்பதாம்' என்பது பரிமேலழகர் உரை. காமத்துப் பாலிலும் இவ்வாறு வடநூல் மரபின்வழிச் செல்லாதுபோதலை இந்த உரையாசிரியரே சுட்டுகின்றார். பிரிவினை நால்வகைத்தாக வடநூலார் கூறுகின்றார் எனப்

பரிமேலழகர் சுட்டியதனை மேலே கண்டோம். 'அஃதேல், வடநூலார் இவற்றுடனே சாபத்தினானாகிய நீக்கத்தினையும் கூட்டிப் பிரிவினை ஐந்து என்றாரால் எனின், அஃது அறம் பொருள் இன்பம் என்னும் பயன்களுள் ஒன்று பற்றிய பிரி வன்மையானும் முனிவராணையான் ஒரு காலத்து ஓர் குற்றத்து உளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண்டு ஒழிக்கப்பட்டது என்க' என அவர் எழுதுகிறார் (1330 ஆம் குறள் உரைப்பகுதி). சகுந்தலையின் பிரிவு இந்த வகையின் பாற்படும் என்பதனை நினைவில் வைப்போமானால் பரிமேலழகர் கூறும் 'ஒழிக்கப்பட்டது' என்பதில் குதித்தோங்கும் வள்ளுவர் துணிபு வெளியாகும்.

இங்குச் சில இடங்களில் பரிமேலழகர் வலிந்து பொருள் கொள்ளுதல் யாருக்கும் புலனாகும். மேலே தூதுபற்றிக் கூறுவதில் வரும் 'தலை' என்ற சொல்லுக்குக் கொண்ட பொருளைக் கண்டோம். 'நாண் என்னும் நல்லாள் - பெண் பாலாக்கியது வடமொழி முறைமை பற்றி' என்று அவர் எழுதுவதனை என் என்பது? நாண் என்னும் நல்லாள் என்பது உருவக அணிபட வள்ளுவர் பாடும் பாட்டு. 'லஜ்ஜா என்ற சொல் வடமொழி இலக்கணப் பால்வகையில்' பெண்பாற் சொல்லாதலின், அங்கு உருவகமோ பாட்டோ இல்லை. வடமொழியிற் காண்பன வள்ளுவரிலும் உண்டு என்று காட்டி வடமொழி வெறியரைத் திருக்குறள் அன்பராக மாற்றுவதற்கு எடுத்த முயற்சியில், இவ்வாறு, தம்மையும் மறந்து, நலிந்து, பரிமேலழகர் உரை எழுதுகிறார்.

வடநூல் மரபே குறளில் இல்லையென்று கூறுவதும் அடாததாம். இந்திய நாட்டாராய்ச்சி ஒருமுகப்பட்டுக் காஞ்சியிலும், நாளந்தாவிலும், மதுரையிலும், தக்ஷசீலத்திலும் நடந்த காலம் ஒன்று உண்டு என்பதனை நாம் மறத்தலாகாது. அந்த ஆராய்ச்சியில், பிறநாட்டார் போலத் தமிழ் நாட்டுத் திங்நாகர் முதலியோரும் ஈடுபட்டமை பண்டைய சீனரும் அறிந்த உண்மை. ஆங்கில நூல்களை அறிந்து எழுதும்

நாம், வள்ளுவர், தம் நாளைய வடநூல்களை அறியார் என்றோ, அவற்றின் போக்கினை அறியார் என்றோ எவ்வாறு கூறமுடியும்? 'பனுவற்றுணிபு' (21). 'நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை' (322) என்று கூறுவது வள்ளுவர் வழக்கம். 'வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்தற் பயத்தவாவது அல்லது ஒழுக்கம் போல மக்களுக்கு உறுதி பயத்தற் சிறப்பில ஆகலானும், அவைதாம் நூலானே அன்றி உணர்வு மிகுதியானும் தேய இயற்கையானும் அறியப்படு தலானும், அவற்றை ஒழித்து ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது. அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடு உடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகள் ஒழித்து எல்லார்க்கும் ஒத்தலின் பெரும்பான்மையாகிய பொதுவியல்பு பற்றி இல்லறம் துறவறம் என இருவகை நிலையாற் கூறப்பட்டது' என்று ஸ்மிருதி வழியே சென்று, வள்ளுவர் தனிப்பெருமையினையும் விளக்கித் தெய்வப் புலவர் என, வடமொழிவெறியர் எதிரே பரிமேலழகர் நிலைநாட்டுகின்ற அருமைப்பாடு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது. 'எல்லா நூல்களிலும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுபடக் கூறுதல் இவர்க்கு இயல்பு' என மிக அழகாகப் பரிமேலழகர் விளக்கியுள்ளார். இதுவே முடிந்த முடிபு. தம் கொள்கையினையும் நிலைநாட்டுகின்றார் வள்ளுவர் என நாம் மேலேகாட்டியதனை மறத்தல் ஆகாது.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (குறள் 423)

என வள்ளுவரே தமது கொள்கையை விளக்க வில்லையா?

3

காமத்துப்பாலைப் பொறுத்த அளவில், வடமொழி மரபினை வள்ளுவர் பின்பற்றினாரோ என்பதே கேள்வி. பரிமேலழகர், 'ஈண்டு இன்பம் என்றது' ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காம இன்பத்

திணை இது புணர்ச்சி, பிரிவு என இருவகைப்படும். இவர் பொருட்பாகுபாட்டினை அறம் பொருள் இன்பம் என வட நூல் வழக்குப்பற்றி ஓதுதலான், அவ்வாறே அவற்றைப் (இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவற்றை) பிரிவின்கண் அடக்கினார்' என்று காமத்துப்பாலுக்கு உரை எழுதத் தொடங்குகிறார்; பிரிவாற்றாமை என்ற ஓரதிகாரத் தலைப்பே பிரிவெனப் பேசப் பல அதிகாரங்கள் இரங்கல், பருவரல் முதலாகப் பேசுவது நோக்கி மேலே எழுதுகிறார்: 'இனி அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச் சியைக் களவு என்றும், பிரிவைக் கற்பென்னும் பெரும்பான்மை பற்றி வகுத்து அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலகநடை யோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக் கிக் கூறுகின்றார்' என்று கூறித் தப்பித்துக்கொள்கின்றார். 'பிரிவொடு புணர்த் துக் கற்பெனப்படுமே' என்பது தொல் காப்பியமன்றோ? களவு, கற்பு என்பது தொல்காப்பியர் கண்ட பாகுபாடு. வட நூலோடு உள்ள ஒற்றுமையையும் அந்த வடநூல் முடிபு தமிழ் மரபாக வள்ளுவர் நூலில் வருவதனையும் பரிமேலழகர் உள்ளங்கை நெல்லிக்கனி ஆக்கியுள்ளார்.

பிரிவினைக் கூறுவது வடநூல் மதம் பற்றி எனப் பரி மேலழகர் கொண்டதாக 1330ஆம் குறளின் உரையின் கடைப் பகுதி சுட்டும். இதனை முன்னும் எடுத்துக் காட்டினோம். 'அவற்றுட் செலவு (ப்ரவாஸம்) பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை (விரஹம்) படர் மெலிந்திரங்கல் முதல் நிறையழி தலீறாயவற்றுள்ளும் (10 அதிகாரம்), விதுப்பு (அபிலாஷம்) அவர்வயின் விதும்பல் முதல் புணர்ச்சி விதும்பல் ஈறாய வற்றுள்ளும் (3 அதிகாரம்), புலவி (ஈர்ஷ்யா) நெஞ்சொடு புலத்தல் முதல் ஊடலுவகையீறாயவற்றுள்ளும் (3 அதி காரம்) கண்டு கொள்க' என்பது அப்பகுதி. இதனைக் காமத் துப்பால் உரையின் முதலில் பரிமேலழகர் கூறாமை ஏன் என விளங்கவில்லை?

# 29

# திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்

*1959*

**ஜீவபந்து T.S. ஸ்ரீபால்**

நமது தமிழ் மறையாகிய திருக்குறள் போற்றும் ஆதி பகவன் கண்கண்ட கடவுளா? காணாத கடவுளா? என்பதைப் பற்றிப் புலவர்களிடையே கருத்து வேற்றுமைகள் வளர்ந்து வருகின்றன. திருக்குறளுக்கு உரை எழுதிய பேராசிரியர்கள் பலர். அவர்களில் பெரும்பாலோரார் முதற் குறளுக்கு உரை எழுதிய காலை மற்ற ஒன்பது குறட்பாக்களில் காணும் உட் கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டே உரை எழுதிப் புகழ் பெற்றுள்ளனர். வேறு சிலர் மற்ற ஒன்பது குறட்பாக் களை மறந்து தங்கள் தங்கள் சமயக்கொள்கைக் கேற்ப உரை எழுதிப் போந்தனர். இவ்விருசாரர் புலவர்களும் அறிவான் மிக்கவர்கள். ஆராய்ச்சி வல்லுநர் எனினும் தங்களுக்குள் மாறுபடுகின்றனர். இதனால் திருக்குறளாசிரியரின் கடவுட்

கொள்கை மக்களிடையே மயக்கத்தை அளிக்கின்றது. உண்மை காணவியலாமல் தவிக்கின்றனர். எனவே இந்நிலையை வளர விடாமல் இருசாராரின் கொள்கைகளையும் நடுநின்றாய்ந்து உண்மை காண்பதே இக்கட்டுரையின் நோக்க மாகும்.

திருக்குறளாசிரியர் இறைவனை வாழ்த்தும் பத்துக் குறட் பாக்களிலே ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், அறவாழி அந்தணன், எண்குணத்தான், வேண்டுதல் வேண் டாமையிலான், தனக்குவமையில்லாதான், பொறிவாயில் ஐந்தவித்தான். இறைவன் என்னும் சொற் பொருள்களால் போற்றிப் புகழ்கின்றார். இச்சிறப்புப் பெயர்களிலே ஆழ்ந்த கருத்துக்கள் இருக்கின்றன. பொருள் செறிவும் நுட்பமும் நிறைந்து காணப்படுகின்றன. எனவே முதற்குறளை ஆராய் வோம்:

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

இக்குறட்பாவுக்கு எழுத்துக்கள் யாவும் அகரத்தை முதலாக உடையன, உலகம் ஆதிபகவனை முதலாக உடையது என்பதே நேரான பொருளாகும். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே பண்டைய உரையாசிரியர்களில் பெரும்பாலோர் உரை எழுதியுள்ளனர். குறிப்பாக மணக்குடவர், 'எழுத்துக்க ளெல்லாம் அகரமாகிய எழுத்தைத் தமக்கு முதலாக உடை யன. அவ்வண்ணமே உலகம் ஆதியாகிய பகவனைத் தனக்கு முதலாக உடையது' எனவும், கவிராஜ பண்டிதர், 'எழுத்துக் களுக்கெல்லாம் அகர எழுத்து முதலாய் இருப்பது போன்று, உலகத்துக்கெல்லாம் சருவக்ஞனான சுவாமியே (ஆதிபகவன்) முதல்' என்றவாறு எனவும் எழுதியுள்ளார்கள். இனி பிற்கால உரையாசிரியராகிய பரிமேலழகரைக் காண்போம். 'எழுத் துக்கள் அகரமாகிய முதலையுடையன. அதுபோலவே உலகம் ஆதிபகவானாகிய முதலையுடைத்து' என்பதாகும். இவ் வுரையை நோக்கின் மேலே கூறிய இரு உரைகளின் கருத்துக்

கள் போலவே காணினும், பரிமேலழகர் தமது விளக்க உரை யில் மாறுபடுகின்றார். அதையுங் காண்போம்.

'இது தலைமைபற்றி வந்த எடுத்துக்காட்டு உவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாத மாத்திரை யாகிய இயற்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கை உணர்வானன்றி இயற்கை உணர்வான் முற்றும் உணர்தலானுங் கொள்க. தமிழ் எழுத்திற்கேயன்றி வட வெழுத்திற்கும் முதலாதல் நோக்கி எழுத்தெல்லாம் என்றார். ஆதிபகவன் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வட நூலின் முடிபு. உலகென்றது ஈண்டு உயிர்கண்மேன் நின்றது. காணப் பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின் ஆதிபகவன் முதற்றே என்று உலகின் மேல் வைத்துக் கூறினார். கூறினாரேனும் உலகிற்கு முதல் ஆதி பகவன் என்பது கருத்தாகக் கொள்க. ஏகாரம் தேற்றத் தின் கண் வந்தது. இப்பாட்டால் முதற்கடவுளது உண்மை கூறப் பட்டது.'

இவ்விளக்க உரையை நுணுக்கமாக ஆராயின் பரிமேலழ கரின் குழப்பநிலை வெளியாகிறது. உலகப் பொதுமறையாம் திருக்குறளை ஒரு சமயச் சார்புடையதாகக் கொள்ளவேண்டி, அவர் அறிவு படும்பாடு, அப்பப்பா! அளவிடற்பாலதன்று. "விகாரத்தானன்றி", "நாதமாத்திரை", "இயற்பாற் பிறந்தது", "செயற்கை உணர்வு", "காணப்பட்ட உலகம், காணப்படாத கடவுள்", "கூறினாரேனும்", "கருத்தாகக் கொள்க", "முதற் கடவுள் உண்மை" ஆகியவை போன்ற சொற்களாகிய மயக்க மருந்தால் நமது அறிவைச் சுழற்றுகின்றார் பரிமேலழகர். அம்மருந்தை அருந்தி மயக்கமுற்றோர் பலருண்டு. அச்சமய வாத மருந்து நமக்கு வேண்டா.

சமயக் கணக்கர் மதிவழி கூறாது உலகியல்கூறி
பொருள் இதுவென்ற வள்ளுவர்

எனத் திருக்குறளாசிரியரின் கடவுட்கொள்கையைக் களங்க மறக் கண்ட கல்லாடனார் கருத்து வழிநின்று ஆராய்வோம்.

'அகரமுதல' வென்பதில் 'முதல'வெனும் பன்மைச் சொல் முதல் எனும் ஒருமையினின்றே பிறந்தது. முதல் எனும் சொல் லிற்குப் பல பொருள்கள் உண்டெனினும் இங்கே எண் வரிசை யைக் கொண்டு விளங்குகிறது. இக்கருத்தின்படி எழுத்துக்க ளெல்லாம் அகரத்தைத் தமக்கு முதலாக அல்லது தலைமை யாக உடையன. அவ்வண்ணமே உலகம் ஆதிபகவனைத் தனக்கு முதலாக அல்லது தலைவராக உடைய்து என்னும் பொருளி லேயே அமைகின்றது. எனவே, தலைமை பற்றி வந்த எடுத் துக்காட்டு உவமை என்பது தெளிவாகிறது. என்னே தேவர் பெருமானின் பேரறிவு! தாமே முழுதுணர்ந்த தனிஅறிவு! உவமையின் வாயிலாக இறைவன் வாழ்த்து! உவமையின் வாயிலாக வரலாற்று உண்மை! உவமையின் வாயிலாக எழுத் தின் பெருமை! உவமையின் வாயிலாக உலகுக்கு அறிவுரை! உவமையின் வாயிலாக மெய்ப்பொருள் விளக்கம்! இவ்வாறு உவமையின் பெருமையைப் பேசிக் கொண்டே போகலாம். இனி, 'பகவன்' என்னும் சிறப்புப் பெயரின் பொருளை ஆராய் வோம்.

'பகவன்' என்பது வடமொழிச் சொல்லாகும். வடமொழி யில் சர்வக்ஞன், கேவலக்ஞானி என்றெல்லாம் அழைப்பர். பகவன் எனில் கேவலஞானி எனச் சிலப்பதிகாரத்தில் அடி யார்க்கு நல்லார் எழுதிய உரையாலும் காணலாம். தமிழ் மொழியிலே வாலறிவன், முழுதுணர்ந்தோன், கடையிலா ஞானி, அறிவன், அறிவுவரம்பிகந்தோன் எனப் பல பொருள் களுண்டு. கேவலஞானம் எனும் சொல் பண்டைய தமிழ் இலக்கியங்களில் விரவிக் காணப்படுகின்றன. எனவே பகவன் எனில் வாலறிவன் அல்லது கேவலஞானி என்பதை அறிந் தோம். கேவலஞானம் என்பது ஞானங்களிலே தலை சிறந்தது. ஞானம் ஐந்து வகைப்படும். இயற்கை அறிவு (மதிஞானம்),

நூல் அறிவு (சுருதஞானம்), தன்னுடைய முற்பிறப்பை அறியும் அறிவு (அவதிக் ஞானம்), பிறருடைய உள்ளங்களையும் அவர்கள் முற் பிறப்பையும் அறியும் அறிவு (மனப்பர்யை ஞானம்), மூவுலகங்களையும் ஒருங்கே அறியும் அறிவு (கேவல ஞானம்) என்பவைகளாம். இவற்றில் இயற்கை அறிவும் கல்வி அறிவும் அவரவர் பண்பாட்டிற்கும் கல்வி அறிவிற்கும் ஏற்ற வாறு அமையும். மற்ற மூன்று ஞானங்களும் செயற்கரிய செய் தவத்தால் அமைவது. ஐம்பொறிகளையும் தம்வயப்படுத்திப் பற்றற்ற நிலையை எய்தும் முனிவர்களுக்கே அம்மூன்று ஞானங்களும் முறையே வளர்ந்து கேவலஞானம் எனும் கடையிலா ஞானம் விரிவடைகின்றது.

இவ்விரிந்த ஞானம் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் நுண் பூதங்களையும், அவற்றின்வழி விரிந்த நீர், நிலம், தீ, வான், வளி என்னும் ஐம்புதங்களையும் அவற்றின் வழி விரிந்த நடப்பன, பறப்பன, நீந்துவன போன்ற பல்லுயிர் களையும், இவ்வுயிர்கள் வாழும் எல்லா உலகங்களையும் ஒருங்கே அறியும் இயல்புடையதாகிறது.

குழுவன பிரிவன குறைவில நிலையின
வெழுவன விழுவன விறுதியிலியல்பின
வழுவில பொருள்களை மலர்கையின் மணியென
முழுவதும் முணருமெம் முனைவரனறிவே

நிறைபொறி யுளவவை யறிதலி னெறிமைய
முறைபொரு ணிகழினு முரைபடு மறிவிலன்
மறைபொரு ளுளவவ னறிவினைமறையல
விறைபொருள் முழுவது மறிதிறமிதுவே

எனவரும் நீலகேசிச் செய்யுட்களாலும் கேவலஞானத்தின் தன்மை விளங்கும்.

இப்பெறலரும் பேரறிவு வரப்பெற்று வினைகளை வென்றுயர்ந்தோரையே ‘பகவான்! பகவான்!’ எனப் புலவர்

பெருமக்கள் போற்றி வணங்கினர். மக்கள் மட்டுமா? ஆயிரங் கண்ணுடைய இந்திரனும் இக் கேவலஞானிகளின் பேராற் றலைக் கண்டு வியப்புற்றுப் பகவான் என வாழ்த்தி அடி பணிந்து செல்வான்.

## மனிதனின் ஆற்றல்

இந்நிகழ்ச்சிகளினின்றும் ஆத்மீக முன்னேற்றங்களால் மனிதனிடத்துத் தேக்கப்பட்டுள்ள ஆற்றல்கள் வெளியா கின்றன. அவ்வாற்றல்கள் அதியற்புதமான தெய்வீக அதிசயங் களைக் கொண்டு விளங்கும் நிலையையும் காண்கின்றோம். மனிதனிடத்தே புதைந்துள்ள இப்பேராற்றலின் பெருமையை உலகுக்கு உணர்த்தவே 'நீத்தார்பெருமை' எனும் அதிகாரத்தின் வாயிலாகக் குணம் எனும் குன்றேறி நின்ற அறவோர்களை! செயற்கரிய செய்யும் செம்மல்களை! ஒழுக்கத்தாலுயர்ந்த உத்தமர்களை! இருமை வகைதெரிந்து ஈண்டறம் பூண்ட இருடிகளை! எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் முனிபுங்கவர்களை! சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தின் வகை தெரிந்த அறிவர்களை உரனென்னுந் தோட்டி யால் ஓரைந்துங் காக்கும் ஒப்பற்ற ஞானிகளைப்படம் பிடித்துக் காட்டுகின்றார் நம் பொய்யா மொழித்தேவர். அது மட்டுமா? பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறியாம் அறனை வலியுறுத்துகின்றார் அடுத்த அதிகாரத் திலே! எனவே திருக்குறளாசிரியர் மனித வாழ்க்கைக்குப் பேரிலக்கியமாய் விளங்கும் அருளறத்தை முதன்முதல் உல குக்கு வழங்கிய ஓர் அறிவனையே அக்கால மக்கள் நன் கறிந்து போற்றிய ஆதிபகவன் என்னும் ஆட்சிச் சொல்லால் முதற்குறளிலேயும், 'வாலறிவன்' எனத் தமிழ் மொழியால் இரண்டாம் குறளிலேயும் போற்றியுள்ளார் என்பது கலங் கரை விளக்கம் போல் காட்சியளிக்கின்றது. நமது பாரத நாட்டு உதவி ஜனாதிபதி டாக்டர் இராதா கிருஷ்ணன் அவர் கள் தாம் எழுதிய இந்தியத்தத்துவங்கள் **(Indian Philosophy)**

என்னும் ஆங்கில நூலில் 'கி.மு. முதல் நூற்றாண்டிலேயே முதல் தீர்த்தங்கரர் பகவான் விருஷப தேவரை மக்கள் வழிபட்டு வந்தனர் என்பதைக் காட்ட ஆதாரங்கள் இருக்கின்றன' என எழுதியுள்ள வரலாற்றுச் செய்தியாலும் நமது கருத்து உறுதிப்படுகின்றது.

இதுபோன்று மற்ற குறட்பாக்களில்வரும் "எண்குணத்தான்", "தனக்குவமையில்லாதான்", "பொறிவாயிலைந்தவித்தான்", "வேண்டுதல் வேண்டாமையிலான்" போன்ற சிறப்புப் பெயர்கள் அனைத்தும் தவ ஒழுக்கத்தால் வளர்ந்த தனிப்பெரும் பண்புகளாகும். "அறவாழி அந்தணன்" எனப் போற்றியது பகவான் உலகுக்கு அறவுரை பகர்வதையே பெரும்பணியாகக் கொண்ட சிறப்பியலில் அமைந்ததிருப் பெயராகும். இனி "மலர் மிசை ஏகினான்" என்பதன் கருத்தை ஆராய்வோம். "மலர் மிசை ஏகினான்" என இறந்த காலத்தில் கூறப்பட்டுள்ளதை நினைவுகூர்தல் வேண்டும். நாம் இந்திரனைப் பற்றி இலக்கிய வாயிலாக அறிந்திருக்கின்றோம். அவன் ஆயிரங் கண்ணுடையவன், பேரறிவாளன், அருளறத்தின் வழி நின்றவன், நற்பண்பும், நற்பணியும் மேற்கொண்டவன். ஐந்தவித்துயர்ந்த கேவல ஞானிகளை அடிபணிந்து போற்றும் அன்பும் ஆர்வமும் உடையவன். அது மட்டுமல்ல! அத்தூயோர்களின் திருவடிகளிலே தாமரை மலர்களால் பூஜித்து, அறவுரை மண்டபம் (சமவ சரணம்) அமைத்து வழிபாடு செய்பவன். இத்தகு சிறப்புக்களைப்பெறும் பேராற்றலை உலகுக்கு அறிவிக்கவே நமது திருக்குறளாசிரியர் தேவர்,

ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி

என இந்திரனின் திருப்பணியைச் சான்றாக அமைத்துக் காட்டுகின்றார். இந்திரன் வழிபாடியற்றிய தாமரை மலரிலே பகவான் தமது திருவடிகள் பதியாது நடந்து செல்வார்.

பாரணையா அடிதாங்கச் செந்
தாமரைப் பாரித்ததே

என்னும் திருநூற்றந்தாதியாலும்,

"கானிலந்தோயாக் கடவுளை" என்னும் நாலடியார் கடவுள் வாழ்த்து வெண்பாவாலும் அறியலாம். இவ்வரலாற்றையே "மலர்மிசை ஏகினான்" என இறந்த கால நிகழ்ச்சியாகப் போற்றியுள்ளார். இனி விசும்பரசனின் அரும்பெரும் செயலை மெய்ப்பிக்கும் மற்றைத் தமிழ் இலக்கியங்களைக் காண்போம்.

## இந்திரன் வழிபடுதல்

வெந்துயர் அருவினை வீட்டிய அண்ணலை
இந்திர உலகம் எதிர் கொண்டாங்கு

– பெருங்கதை.15வது வரி

வானோர்த முலகுடைய மாநீல வண்ணன்
மகிழ்ந்திறைஞ்சு மாலையணி மணிமுடிமேல் வைகா
ஊனாரு மறவாழி யோடமால் யானை
யுடையான்றன் ஒளிமுடியின் மேலுரையே நிற்கத்
தேனாரு மரவிந்தஞ் சென்றேந்தும்போழ்து
திருவடிகள் செந்தோடு தீண்டாவேயாகில்
ஆனாவிம் மூவுலகு மாளுடைய பெம்மான்
அடியுறு வாரின்மைதா மறிவுண்டதன்றே

– சூளாமணி 1909.

மால்யானை யுடையான் – இந்திரன்.

களியானை நாற்கோட்டத் தொன்றுடைய செல்வன்
கண்ணொராயிர முடையான் கண்விளக்க மெய்தும்
ஒளியானை..........................

– சூளாமணி 1907.

அந்தரவகடு தொட்டணவும் நீள்புகழ்
வெந்தெரி பசும் பொனின் விழையும் வெல்லொளி

மந்திர வாய்மொழி மறுவின் மாதவர்
இந்திரர் தொழுமடி யினிதி னெய்தினான்.

– சீவகசிந்தாமணி 1239

காமாதி.............................

.........................................

..................தேவர் கோமான்
தாமாதி யணிந்துபணிந் தெழுந்ததுவும்
தத்துவமென் றகவோ வென்ன – மேருமந்தரபுராணம்.

புரந்தரரும் வானவரும் புகழ்ந்தடியேங்
குற்றேவல் கொள் கென்றேத்தி
நிரந்தரம் வந்தனை செய் விருந்தருளும்
அருந்தவரே – திருக்கலம்பகம் 23.

அரிய வாயின செய்திட்டு அமரர்துந்துபி அறைந்து
புரிய பூமழைப் பொழிய பொன்னெயில் மண்டிலம் புதைந்த

– நீலகேசி 156

.......................................

பதநூ புரத்தி னளகேசன்
நாடித் தேடிப் பாடஎயில்
பரமாமுனிநாயகர் தமக்கும்
பாரில் மனித ரனைவோர்க்கும்
முதனூலுரைத்த கனிவாயால்
முத்தந்தருக முத்தமே

– ஆதிநாதர் பிள்ளைத்தமிழ் 43.

கேவலமுற்பத்தி யாமளவே கிளர்பூசனைக் கென்
றேவலியற்றுமவ் விந்திரனுக்கு முன்னெண்குணத்தெம்
காவலனைக் கவிப்பார் வளைப்பார் முளைப்பார்களைப் போன்
மூவுலகத்துள்ள நால்வகைத்தேவர் முன்னுவரே

– திருநூற்றந்தாதி

என்னும் பாக்களால் இந்திரன் பண்பும் பணியும் அன்பும் ஆர்வமும் வெளியாகிறது. அவைகளுடன் ஆயிரம் கண்களை உடையவன் என்பதையும் அறிகின்றோம்.

## ஆயிரங்கண்களின் தோற்றம்

பகவான் அடைந்த கேவலஞானப் பேரொளியைக் கண்டு களிக்கும் இந்திரன், ஆனந்த மேலீட்டால் பகவானைக் காண இரு கண்களும் போதாவென எண்ணுகின்றான். ஆயிரங் கண்களால் கண்டு களிக்க வேண்டுமென விழைகின்றான். எண்ணி எண்ணியவாறு எய்தும் தனக்குரிய வைக்கிரம சரீரத் தின் ஆற்றலால், இந்திரன் தன் உடலெங்கும் கண்களை உண் டாக்கிக் கொண்டு பகவானைப் போற்றி மகிழ்கின்றான். இக் காட்சியைக் கண்ட புலவர் பெருமக்கள் இந்திரனை ஆயிரங் கண்ணுடையான் எனப் புகழ்ந்து வாழ்ந்தனர். இவ்வரலாற்று நிகழ்ச்சி ஆதிபுராணம் என்னும் வட நூலில் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது:

தவரூபஸ்ய சௌந்தர்யம் திருஷ்டியாதிருப்திம்
ஆனாயி வான்
ஹயக்ஷ: சக்ர சஹஸ்ரீக்ஷ: பபூப பஹுசௌ விஸ்மைய:

(இ-ள்) இறைவனே! தவத்தாலுயர்ந்து ஞான ஒளி வீசும் நினது பேரழகினைத் தனது இரு கண்களால் பருகியும் திருப் தியடையாத இந்திரன், பலரும் வியக்கத்தக்க முறையில் ஆயிரங்கண்களை யுண்டாக்கிக்கொண்டு உன்னைப் போற்றி வழிபடுகின்றான் என்பதாகும். இவ்வாறே தமிழ் நூலாகிய தோத்திரத் திரட்டில்,

இன்றே அருளென இந்திர ரெண்ணில வாய்க் கண்கொண்டு
நின்றே துதித்துப் பெற வரும் பேற்றினை நீயுமென்ன
நன்றே யென்நெஞ்சமே பாகையின் முக்குடை நாய்கன்றன்
குன்றே குணத்தன்பின் சாதுக்களலாலாற்றலைக் கொள்ளுதியே

என வாழ்த்தப்பெற்றுள்ளது. இதனால் இந்திரன் ஆயிரங் கண்களைத் தாற்காலிகமாகப் பெற்றான் என அறிகின்றோம். இத்தகு சிறப்பமைந்த உண்மை நிகழ்ச்சியை மறைத்து இந்திரன் கௌதமமுனிவரின் மனைவியைக் கற்பழித்ததன்

காரணமாக, அம் முனிவரின் சாபத்திற்குள்ளாகி உடலெல்லாம் சொல்லொணாக் குறிகளை யுடையவனானான் என வைதிக சமய நூல்கள் கூறுகின்றன. இக்கொள்கையைப் பரிமேலழகரும், தற்கால உரையாசிரியர் சிலரும் ஏற்றுக் கொண்டுள்ளது வருந்தத்தக்க செய்தியாகும்.

## ஐந்தவித்தோரின் மாண்பு

வைதிகச்சமயக் கூற்றால் ஐந்தவித்துயர்ந்தோரின் தூய தவநெறியும், அறவோரைப் போற்றும் இயல்புடைய இந்திரனின் எழில் நிலையும் மாசடைகின்றன. ஐந்தவித்தானெனில் ஐம்புலன்களால் ஏற்படும் உலகியல் ஆசைகளை அறவே அகற்றி ஐம்புலன்களையும் தன்வயப் படுத்தியவன் என்பது பொருளாகும். இப் பெறலருந் தவத்தோரையே ஐந்தவித்தான் ஆற்றல் எனத் தேவர் போற்றினார். இவ்வரலாற்றின் மேன்மையை உலகோர் அறியவே, பொறிவாயிலைந் தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடு வாழ்வார் என்னும் கடவுள் வாழ்த்தின் வாயிலாக முற்றுந்துறந்த முனிவர்களின் தவநெறியையும், அவர் கடவுளரோடொப்பர் எனும் கருத்தையும் அறியவைத்துள்ளார். இங்கே வைதிக சமயத்துறவுக்கு இடமில்லை. அத்துறவுக் கோலத்தைக் கொண்டு குறளில் காணும் ஐந்தவித்தோரைக் காதல் வாழ்க்கையில் சித்திரித்துக் காட்டுவது தமிழர்தம் பண்பாட்டையே இழிவுபடுத்துவதாகும். எனவே திருக்குறளாசிரியர் கூறும் மாசற்ற முனிவர்களையும், அவர்களை வழிபடும் இந்திரனின் பக்திச் சிறப்பையும் வரவேற்று வாழ்த்தி வணங்குவோம். இதுவரை நமக்குப் பல உண்மைகள் கிடைத்தன. மனிதனின் ஆற்றல், இந்திரனின் வழிபாடு, அவன் திருப்பணியால் தாமரை மலரில் நடந்த ஆதிபகவன் ஆகியவைகளைக் கண்டோம். இவ்வாறே மனிதனின் ஆத்மீக வாழ்க்கைக்கு இன்றியமை யாத அறநெறிகளை அன்று வழங்கிய ஆதிபகவன் பெற்ற கேவலஞான நிலையை உலகுக்கு அறிமுகப்படுத்தும் அரும் பெரும் குறட்பாக்களை

நமது நுண்ணறிவின் துணை கொண்டு ஆராய்ந்து மேலே செல்வோம்.

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்

சென்ற விடத்தான் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு

ஒழுக்கம் விழுப்பந் தரலால் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்

செயிரிற் றலைப் பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரிற் றலைப் பிரிந்த ஊன்

தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாம் தொழும்

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்

என்பன போன்ற குறட்பாக்களை நோக்கின் திருக்குறளாசிரியர் போற்றும் ஆதிபகவன் என்னும் பெயரும் மற்ற ஒன்பது குறட்பாக்களில் காணும் ஆதி பகவனின் சிறப்புச் சொற்களும், நம்மைப் போன்று உலகில் தோன்றி அறநெறிவழுவாது ஒழுகி உயர்ந்த ஒரு மகானின் காரணப் பெயரே என்பது தெளிவாகப் புலப்படுகின்றது. திருக்குறள் நீதி நூல் மட்டுமன்று. இலக்கியப் பண்புகளும் நிறைந்த நூல் என்பதை அறிய வேண்டும். அதனாற்றான் திருக்குறளாசிரியர் தேவரை உலகெலாம்

போற்றுகின்றது. சுமார் 1500 ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கருதப்படும் சூளாமணி எனும் காவியத்தின் ஆசிரியர் தோலா மொழித் தேவர் திருக்குறளைப் போற்றுகையில், புகழ்ச்சி நூல்' (The Famous Book) எனப் பாராட்டியுள்ளார். 'இந் நிகழ்ச்சியிற் கெடுவார்களை யெண்ணுக' யென்னும் சூளா மணிச் செய்யுளில் காண்க.

நீலகேசி ஆசிரியர் 'தேவன் உரைப்பத் தெளிந்தேன்' என்றும் அதன் உரையாசிரியர் சமயதிவாகரமாமுனிவர் திருக் குறளை மேற்கோள் காட்டி, 'இஃது எம்மோத்தாதலால்' என்றும் புகழ்ந்து போற்றியுள்ளார்கள். இவைகளால் திருக் குறளாசிரியரின் நுண்மாண் நுழைபுலன் நன்கு விளங்கு கிறது. ஓவியக்காரன் உருவத்தைச் சித்திரத்தால் தீட்டிக் காண்பிப்பான். நமது பொய்யாமொழித் தேவரோ ஆதிபக வானின் அறப்பண்புகளைச் சொல்லோவியங்களால் தீட்டி நமது அகக் கண்களால் அறியவைத்துள்ளார். ஆம்! நாம் ஆதிபகவனைக் காண்கின்றோம். அருளுருவம் காட்சியளிக் கிறது! தவ நிலை தெரிகிறது! அறிவொளி வீசுகிறது! பூமிசை நடக்கின்றார்! அறவுரை கேட்கின்றோம். இவ்வாறெல்லாம் ஆதிபகவனைக் காணுமாறு குறட்பாக்களிலே அமைத்துள் ளார். இனி இத்தவச் செல்வனின் இயற்கை வரலாற்றைக் காண்போம்.

## ஆதிபகவன் வரலாறு

உலகின் நிலையை நோக்கின் அஃது அடிக்கடி மாறும் இயல்புடையதென்பதை அறிகின்றோம். கடல் நாடாவதும், நாடு கடலாவதும் உண்டு. பூகம்பங்களாலும் மற்றும் பல இயற்கை நிகழ்ச்சிகளாலும் சிதறுண்டுபோவதும் உண்டு. இத்தகைய இயற்கைச் சூழலின் வயப்பட்டு நமது நாடும் ஒரு காலத்தில் சீர்குலைந்திருந்தது. மக்கள் வாழ்க்கைக்குரிய வழி தெரியாது மனம்போல் வாழ்ந்து வந்தனர். அக்காலத்தில்

அயோத்தி மாநகரில் நபிராஜா என்பவருக்கும் அவர் மனைவி மருதேவிக்கும் ஒரு ஆண் மகவு பிறந்தது. அதற்கு விருஷப தேவர் எனப் பெயரிட்டனர். அக்குழந்தை நாளுக்கு நாள் வளர்ந்து காளைப்பருவம் அடைந்தது.

இயற்கை அறிவால் மிகுந்த விருஷபதேவர் உலகை நோக்கினார். அறிவுக்குப் பொருந்தாத சமுதாயம் அமைந் திருப்பதைக் கண்டார். மக்களெல்லாம் மாக்களாகக் காட்சி யளித்தனர். எங்கும் பயங்கர நிலை! எங்கும் துன்பம்! எங்கும் சோம்பல்! எங்கும் அறியாமை! இத்தகைய சீர்கேட்டினின் றும் மக்களை விடுவிப்பதெவ்வாறு என இரவு பகலாய்ச் சிந்தித்தார். அவர் சிந்தனையில் பல்வேறு திட்டங்கள் உரு வாயின. அத்திட்டங்களைக் கொண்ட ஒரு புது சமுதாயத்தை உண்டாக்கினார். வாள், வரைவு, வாணிபம், உழவு, கல்வி, சிற்பம் போன்ற தொழில்களைப் பயிற்றுவித்தார். இவை களைச் சரிவர நடத்திவர அரசர், வணிகர். வேளாளர் எனும் மூன்று பிரிவினரை வகுத்தார். இம்மூன்று குலங்களும் செய் தொழில் வேற்றுமையின்றிப் பிறப்பினால் ஏற்பட்டவை அல்ல. அறிவு வளர்ச்சிக்காக அகர முதலாகிய எழுத்துக் களையும் ஒன்று முதலாகிய எண்களையும் தோற்றுவித்துக் கல்வியையும் பல கலைகளையும் வளர்த்தார். இந்நிகழ்ச்சி களைச் சூடாமணி நிகண்டில்,

வரைவொடு தொழிலே வித்தை வாணிக முழவே சிற்பம்
உரைசெய்யும் போகபூமி யொழிவினி லாதிகாலம்
விரைசெறி பிண்டிவேந்தன் விதித்த லினஃதேயம்ம
கருமபூமி யென்னும்பேர்கண்ட தொன்றுண்டுநூலில்

எனவும்,

திருக்கிளர் தேவர்கோமான் ஏவலிற்குப்பேரன் செய்த
விருப்புறு பொன்னெயிற்குள் விளங்க வெண்ணெழுத்திரண்டும்
பரப்பிய ஆதிமூர்த்தி

எனவும்,

சொல்வகை யெழுத்தெண் ணெல்லாந்தொல்லை
நாளெல்லையாக
நல்வகையாக் கும்பிண்டி நான்முகன்

*எனவும்,*

செல்வளம் பிண்டிவேந்தன் சினேந்திரன் ஆதிகாலம்
பல்வளம் பெற்றஆதிப் பரதனே முதல்வராகச்
சொல்லிய நூற்றுவர்க்குத் துறைவழாக் கலைகள் யாவும்
கல்வியே பயில்களப்பேர் கழகம் கல்லூரியாமே

*எனவும் விளக்கப்பெற்றுள்ளன.*

*ஆதிநாதர் பிள்ளைத் தமிழ் என்னும் நூலில்,*

சசிகளாதித்த ரொருகோடி வந்தோருருக்
கொண்டாடி கண்ட பரமனே,
சமவசர ணேசனே இமையவர்களீசனே
சார்ந்தவர்க் கைந்தாருவே
இசையினா லெண்ணெழுத் தியம்புவித்தாயுநீ

*எனப் புகழ்ந்து பாடியுள்ளார்.*

*இவ்விலக்கியச் சான்றுகளை மெய்ப்பிக்க வரலாற்றுத் துறைப் பேராசிரியர் திரு.* N.N. *பாஸு* (N.N. Basu)*அவர்கள் ஹிந்தி விஸ்வகோஸா* (Hindi VisyaKosa) *என்னும் நூலில் 'முதன் முதல் எழுத்துகளையும் எழுதும் கலையையும் பகவான் விருஷப தேவரே தோற்றுவித்தார். பிராமி எழுத்துக் களைக் கண்டுபிடித்தவரும் அவரே' என வரைந்துள்ள வரலாற்றுரைகள் பெருந்துணை செய்கின்றன. மேலும் பகவான் விருஷபதேவர் மக்கள் அனைவரும் ஒற்றுமையும் அன்புங் கொண்டு வாழ அஹிம்ஸா தருமம் என்னும் அருள றத்தைப் படைத்தார். கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறர் மனைநயவாமை, மிகுபொருள் வெஃகாமை என்னும் ஐம் பெரும் ஒழுக்கங்களின் வழியில் இல்லறம் துறவறம் என்னும் இரு பேரறங்களை வகுத்தார்.*

சோலைதாழ் பிண்டிக்கீழ்ச்
சூர்ந்தவர்தம் சொன்முறையான்
மனையறமுந் துறவறமும்
மன்னவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து
வீடொடு கட்டிவை யுரைத்த
தொன்மைசால் மிகுகுணத் தெம்
துறவரசைத் தொழு தேத்த
நன்மைசால் வீடெய்து மாறு

– யாப்பருங்கலக்காரிகை மேற்கோள் உரை.

என்பதனாலும் அறியலாம்.

இவ்விரு அறங்களில், இல்லறம் மக்கள் மேம்பாட்டிற்கும் பண்பாட்டிற்குமுரிய அறவாழ்க்கையில் அமைந்தது. துறவறம் ஆத்மீகத்துறையில் வீடுபேறு பெறும் தூய தவ வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்டது. இவ்விரு அறநெறிகளில் இல்லறமே துறவறத்திற்குத் தாயகமானது. இல்லறம் இரும்புச் சுரங்கம். துறவறம் பொன்சுரங்கம். பொன் சுரங்கத்தினின்றும் பொன்னையெடுக்க இரும்பு இன்றியமையாததுபோல, துறவறம் மேற்கொள்வோர் இல்லறநெறியில் வெற்றி காண வேண்டும். இல்லையேல் துறவறம் புகக்கூடாது. இல்லறத்திலேயே நின்றுவிடலாம் என்பது அவர் திருவறம். இவ்வறநெறிகள் மக்கள் அனைவருக்கும் உரியதாகும். செய்தொழில் வேற்றுமையன்றிப் பிறப்பினால் அனைவரும் ஒன்றேயென்னும் சகோதர உணர்ச்சியை வளர்த்தார். மக்களனைவரும், பசி, பிணி, நோய், பகையின்றி வாழப் பொருளாதார சமத்துவம் இன்றியமை யாததென அன்றே அறிந்து பொதுவுடைமைத் தத்துவமாகிய மிகுபொருள் விரும்பாமை எனும் பகுத்துண்டு வாழும் பண்பினை ஐம்பெரும் அறங்களில் ஒன்றாக அமைத்தார்.

கண்கள் எவ்வாறு புறப்பொருள்களைத் தெளிவாக அறிகின்றனவோ அவ்வாறே நூற் பொருள்களின் உண்மை

களை நன்கு ஆராய்ந்து தெளிய வேண்டும் என்னும் பகுத்தறி வியக்கத்தினைத் (Rationalism) தோற்றுவித்தார். அக்கொள் கையை நற்காட்சி என அழைத்தார். இப்பேரறங்களை மத மென்றோ சமயம் என்றோ அழையாமல் அறம், அறம் என்றே அழைத்து உலகுக்கு உரை செய்தார். இவ்வாறு அருளறத்தின் அடிப்படையில் பொதுவுடைமைத் தத்துவங் கொண்ட புது சமுதாயத்தைப் படைத்தருளினார். இப் பெருமகனை மக்க ளேயன்றி மன்னுயிரும் தேவர்களும் போற்றி மகிழ்ந்தனர். கண்கண்ட தெய்வமெனக் கொண்டாடினர். வாழ்வுக்கு வழி காட்டிய வள்ளல் என வாழ்த்தினர். அவர்தம் திருமொழி யைச் சிரமேற் கொண்டனர்! அவர் வகுத்த ஒழுக்க நெறியில் நின்று வாழ்க்கையில் வளம்பெற்று விளங்கினர். இவ்வர லாற்று நிகழ்ச்சியையே 'ஆதிபகவன் முதற்றே உலகு' எனத் தேற்றேகாரத்தால் கூறினார்.

ஊழி மூன்றாவதி னிறுதி மன்னுயிர்
சூழ்துயர் பலகெடச் சோதி மூர்த்தியாய்
ஏழுய ருலகுடன் பரவ வீண்டருள்
ஆழியங் கிழமையெம் அடிகள் தோன்றினார்

ஆரருள் தழுவிய ஆழிக்காதியாம்
பேரருள் மருவிய பிரான்றன் சேவடி
காரிருள் கழிதரக் கண்க வின்றரோ
சீரருள் சரணென வுலகஞ் சேர்ந்ததே

எனவும்,

ஆதி நாளரசர் தங்கள் அருங்குல மைந்துமாக்கி
ஓத நீருலகின் மிக்க ஒழுக்கமுந் தொழிலுந் தோற்றித்
தீது தீர்ந்திருந்த பெம்மான் திருவடிச் சாரச் சென்று
நீதி நூற்றுலங்காத்து நிலந் திரு மலரநின்றார்

எனவும் சூளாமணி ஆசிரியர் தோலாமொழித்தேவர் பக வான் விருஷப தேவரைப் புகழ்ந்துள்ளார்.

## விருஷப தேவரின் துறவு

புத்துலகச் சிற்பியாம் நமது விருஷப தேவர் இல்லற நெறியிலே மக்கள் மனைவியுடன் பல காலம் வாழ்ந்தார். இப்பெரியாரின் முதல் மகன் பரத சக்கரவர்த்திக்குப் பட்டம் சூட்டித் தனது முதிய பருவத்தில் தாம் வகுத்த துறவற நெறியிலே நின்று கடுந்தவம் புரிந்தார். ஐந்தவித்துயர்ந்தார். கேவல ஞானம் பிறந்தது. அகல்விசும்புளார் கோமான் பக வான் என வாழ்த்தி வணங்கினார். தேவர் குழாம்கூடி சிறப்புச் செய்தனர். மக்கள் பலரும், 'பகவான் விருஷப தேவர் வாழ்க! பகவான் விருஷப தேவர் வாழ்க!' என்ற கோஷத்துடன் அவர் திருவடிகளை வணங்கி நின்றனர். இறுதியாகக் கைலாய மலையிலே வினைகளைவென்று வீடுபேறு பெற்றார். அப்புனித நாளையே சிவராத்திரி என இன்றும் கொண்டாடுகின்றோம்.

இவ்வுலக வரலாற்றில் முதன்முதல் பகவான் எனப் போற்றப் பெற்றவர் பகவான் விருஷப தேவரேயாவர். அவ்வறிவனே உலக முதல் தொண்டர்! உலக முதல் தலைவர்! உலக முதல் பேராசிரியர்! உலக முதல் நூலாசிரியர்! உலக முதல் முனிவர்! உலக முதல் இறைவராவார். இப்பெருமகனையே ஆதிபகவன் என்னும் சிறப்புப் பெயரால் போற்றியுள்ளார் நமது தமிழ்மறை தந்த பெரியார்.

# 30

# வள்ளுவர் வாசகம்

**1960**

**ராஜாஜி**

முனிவர் எழுதிய பாட்டுக்களை இரண்டாயிரம் வருஷங்களுக்குப் பின் படித்து, அவற்றில் நான்கண்ட பொருளை எழுதுகிறேன். குற்றங்கள் பல இருக்கும். பெரியோர்கள் மன்னிப்பார்கள்.

ஒரு காலத்தில் எழுதியது அநேகமாக மற்றொரு காலத்துக்குப் பொருந்தாது. ஆயினும் சில விஷயங்கள் எக்காலத்துக்கும் உண்மை. அதிலும் சில மேதாவிகளின் கருத்துக்கள் பல்லாண்டுகள் கழிந்தும் உண்மையாகவே நிற்கும் கருத்துக்களாக இருக்கும்.

முனிவர் வள்ளுவரின் வாசகம் இத்தகையது. அவர் பாதங்களை மனத்தால் தொட்டு வணக்கம் செலுத்தி ஆரம்பிக்கிறேன்.

# 1

நாம் சம்பாதித்துச் சேர்த்து வைக்கும் எந்தச் செல்வமும், தர்மத்துக்கு ஈடாகாது, அறநெறியில் நடத்திய வாழ்க்கையினால் நாம் அடையும் நலனுக்கு ஈடாகாது. தருமமே செல்வத்தில் செல்வம். தருமத்தை ஒருவன் மறந்து விட்டால் அதனால் அவனுக்கு உண்டாகும் தீமையைப் போல் வேறு எந்தத் துரதிர்ஷ்டமும் இல்லை.

**அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை – அதனை**
**மறத்தலி னூஉங்கு இல்லை கேடு.**

அறத்தினை 'மறத்தல்' என்றார். புறக்கணித்தல் என்று சொல்லவில்லை. மறந்து விடுவதனால் அல்லவோ நாம் அநீதியெல்லாம் செய்கிறோம். கொஞ்சம் நினைப்பில் வைத்தோமானால் அநீதிக்குள் செல்லமாட்டோம் என்று முனிவர் எண்ணுகிறார்.

செல்வத்தை இழந்தால் அதனால் வரும் கேட்டைவிட மிகப் பெருங்கேட்டை அடைவோம் - அறத்தை மறந்து விட்டால்.

**ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும்வாய் எல்லாம் செயல்.**

'செயல்' என்பது வியங்கோள் வினைமுற்று. 'செய்' என்று இந்தக் காலத்தில் சொல்லுவோம்.

"அற வழியினின்று தப்பிச் செல்லாதே; உன்னுடைய பொருளுக்கும் சக்திக்கும் எவ்வளவு முடியுமோ அந்த அளவில் அந்தப் பாதையைப் பிடித்துச் செல்!" என்கிறார் முனிவர். இதற்குமேல் அவர் நம்மிடம் எதிர்பார்க்கவில்லை.

தருமம் என்றால் பயப்பட்டுத் தூர நிற்க வேண்டியதில்லை. நம்மால் அந்த மார்க்கத்தில் எவ்வளவு தூரம் முடியுமோ, அவ்வளவு தூரம் சென்றால் முனிவருக்குத் திருப்தி.

வள்ளுவரின் சிறப்பு என்னவென்றால், குறிக்கோளை விட்டுவிடாமல் அதை இளக்கி, சாதாரண மக்களும் வாழ்க்கையில் கடைப்பிடித்துச் செல்லும் வகையில் உபதேசிப்பார். நம்மால் ஆகாத காரியம் அல்ல என்பதை உணரும்படி உபதேசிப்பார். 'ஒல்லும் வகையான்' செய், 'செல்லும் வாய் எல்லாம்' செய். 'அதற்கு மேல் நான் கேட்கவில்லை' என்கிறார்.

## 2

பக்தியும் பூஜையும் எவ்வளவு நீடித்தாலும், அதற்கெல்லாம் வேண்டியது, தீய கருத்துக்களுக்கு இடம் கொடுக்காமல் உள்ளத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வது. இது செய்து விட்டால் எல்லாம் நிறைவேறி விடும். உள்ளத்தைப் பரிசுத்தமாக வைப்பதில் தருமம் முழுதும் அடங்கும். இந்தச் சுத்த நிலை ஏற்பட்டுவிட்டால் பக்தியும், பூஜையும் வெறும் ஆரவாரமும், சத்தமும் பகட்டும் தடபுடலுமே - என்கிறார் முனிவர்.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற.

செயல்களுக்கு வித்து, மனத்தில் தோன்றும் எண்ணங்கள். மனம் சுத்தமாக இருந்தால் செயல் தானாக அறவழியில் செல்லும். பக்தியும் பூஜையும் உள்ளத்தை அழுக்கின்றிக் காப்பாற்றிக் கொள்வதற்காகத்தான். மாசற்ற உள்ளத்தைப் பெறுவதற்காகவே பக்தியும் பூஜையும். உள்ளத்தைத் துப்புரவாக வைப்பதற்குப் படாடோபம் ஏதும் வேண்டியதில்லை. 'ஆகுலம்' என்றால் ஆரவாரம், படாடோபம்.

தர்ம வாழ்க்கை என்பது நான்கு குற்றங்களை விலக்குவதாகும். பொறாமை, துராசை, கோபம், கடுஞ்சொல் பேசுதல், - இவற்றை விலக்க வேண்டும். பிறர் சுகத்தைக் கண்டால் தனக்குள்ளும் மகிழ்ச்சி உண்டாக வேண்டும். உடல் வழி உண்டாகும் சரீர சுகங்களை எண்ணி ஆசைப்படலாகாது. யாரேனும் தீமை செய்தால் கோபித்துக் கொள்ளலாகாது.

பொறுத்துக் கொள்ள வேண்டும். மனம் நோகும் சொற்கள் பேசலாகாது.

அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்றது அறம்.

எது தருமம், எது அதருமம் என்று புஸ்தகங்களைப் புரட்ட வேண்டியதில்லை. இந்த நான்கையும் ஒழிக்க முயல்வதே அறநெறி வாழ்க்கை

## 3

தருமம் ஒன்றே நமக்குத் துணையாக நிற்கும். மற்றதெல்லாம் ஏமாற்றத்தில் முடியும். எதெதையோ நம்புகிறோமே, அவையெல்லாம் ஒன்றுமில்லாமல் மறைந்துபோகும். தருமம் ஒன்றே அழியாமல் துணை நிற்பதை அந்திக் காலத்தில் காண்போம்.

"இப்போதும் முடியவில்லை, பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று ஒத்திப் போட வேண்டாம். இன்றே இப்பொழுதே தரும மார்க்கத்தில் நடக்க முயல வேண்டும்" என்கிறார் திருவள்ளுவர்.

அன்றுஅறிவாம் என்னாது அறம்செய்க மற்றுஅது
பொன்றுங்கால் பொன்றாத் துணை

(பொன்றுதல் - அழிதல், சாதல்; பொன்றுங்கால் மரண காலத்தில், பொன்றாத் துணை - அழியாத் துணை.)

தரும மார்க்கத்தில் நின்று அதனால் உண்டாகும் மகிழ்ச்சியே உண்மையான மகிழ்ச்சி. மற்ற வகையான மகிழ்ச்சி அவமானத்தில் முடியும். துன்பமே உண்டாகும்.

அறத்தான் வருவதே இன்பம்,மற் றெல்லாம்
புறத்த, புகழும் இல.

இன்பம் இரு வழியில் அடையலாம். அறம் செய்து அடையும் இன்பம் உண்மையானது. அதாவது துன்பத்தில்

முடியாது. தருமத்தைப் புறக்கணித்து அடையும் மகிழ்ச்சி துன்பமாக முடியும் முதலில் சுகமாகத் தோன்றும்; சீக்கிரமே வெட்கமும் துன்பமும் தரும்.

எந்த இன்பத்தைத் தேடினாலும் அறவழியில் அடைய முயற்சி செய்ய வேண்டும். இல்லையேல், வந்தது போல வந்து துன்பமாக முடியும். மக்கள் பழிப்பார்கள்.

அறநெறியானது கடமை மட்டும் அல்ல; விவேகமும் ஆகும். இதை இந்த இரண்டு பாட்டுக்களில் விளக்குகிறார். தருமத்தைப் புறக்கணித்து அடையப் பார்க்கும் எந்த இன்பமும் அவிவேகமாகும். தருமத்தைப்புறக்கணிப்பது மடமை. இந்தக் காரணத்தைக் கண்டாவது பாவத்தை ஒழித்து அற நெறியில் வாழ்க்கை நடத்த வேண்டும். "அறத்தால் வருவதே இன்பம், மற்ற எல்லாம் துன்பம்" என்று எச்சரிக்கை செய்கிறார் முனிவர்.

## 4

துறவிகளையும், உலக வியாபாரத்தைத் துறந்து விட்டு வனம் சென்று தவம் இருக்கும் பெரியோர்களையும், இல் வாழ்க்கை நடத்தும் சம்சாரிகள் காப்பாற்றி வருகிறார்கள். அவர்கள் வாழ்க்கைக்கு வேண்டிய சௌகரியங்களையெல்லாம் இவர்கள் செய்து தருகிறார்கள். ஆனபடியால், உலக சுகங்களைத் தேடாமல் வாழும் அவர்களைப் போலவே, இவர்களும் பாராட்டத்தக்கவர்கள். இல்லற வாழ்க்கை நடத்துகிறவர்களுடைய உழைப்பினாலும், அவர்கள் சம்பாதிக்கும் பொருளைக் கொண்டும், உலக வாழ்க்கையில் ஈடுபடாத மாணவர்களும், வனம்சென்று தவம் இருக்கும் வயோதிகர்களும், அனைத்தும் துறந்த சந்நியாசிகளும் தங்கள் தங்கள் தருமத்தைக் காப்பாற்றி வாழ முடிகிறது. உலகத்தைத் துறவாமல் நல்ல வழியில் இல்வாழ்க்கை நடத்தும் மக்களின் உபகாரத்தினால்தான், முற்றும் துறந்தவர்கள் அவர்களுக்கு உரிய கடமைகளையும் தவங்களையும் நடத்தி வருகிறார்கள்.

ஆனபடியால், இல்வாழ்க்கையில் ஈடு பட்டிருப்பவர்களைக் குறைவாக எண்ணுதல் முறையாகாது. பற்றற்றவர்களாகிய துறவிகளும் மாணவர்களும் வான ப்ரஸ்தர்களுமே உயர்ந் தோர். சம்சாரிகள் எல்லாம் நன்னலத்தில் காலம் கழிப்பவர் கள் என்று கருதுவது தவறு. மெய்வருந்திப் பிழைக்கும் சம்சாரிகள் துறவிகளைக் காப்பாற்றி வருகிறார்கள்.

> இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை.

'என்பான்' என்று குறிப்பிட்டிருப்பது. அவனும் மற்ற மூவரைப் போலவே மேம்பட்ட தருமத்தைச் செய்து வருப வன் என்று காட்டுகிறது. தனக்காக மட்டும் அவன் மெய் வருந்தவில்லை. துறவிகளுக்காவும் மாணவர்களுக்காவும் பாடுபடுகிறான். அவர்களுடைய உயர்ந்த தரும வாழ்க்கைக்கு இவனுடைய துணை வேண்டியதாகிறது. இவன் இல்லை யேல் அவர்களுடைய தவநெறி நடக்காது. 'இல்வாழ்வான்' என்று அவனுக்குப் பெயர் ஆயினும், தன் இல்லத்தைக் காப் பது மட்டுமல்லாமல், துறவிகளுடைய நல்லாற்றின் துணை யும் ஆகிறான். அவர்களுடைய தருமங்கள் சரியான வழியில் நடைபெறுவதற்குத் துணையாகிறான். நிலையான துணை யாக நிற்கிறான். இதையே 'நின்ற துணை' என்றார். எந்தச் சமயத்திலும் கைவிட மாட்டான். இது சம்சாரிகளுடைய கடமை என்கிற பொருள்படும்படிக் குறிப்பிடுகிறார். தத்தம் குடும்பங்களை மட்டும் காப்பாற்றினால் போதாது. துறவிகள் முதலியோரையும் கவனித்து வர வேண்டும்.

இல்வாழ்க்கை சுக வாழ்க்கையாக இருக்க வேண்டும் என்று விரும்பினால் - பயன்பட்ட வாழ்க்கையாக இருக்க வேண்டும் என்று விரும்பினால் - அந்த வாழ்க்கையின் உண் மையான பண்பை உணர்ந்து நடந்துகொள்ள வேண்டும். அதற்கு இரண்டு குணங்கள் அமைய வேண்டும். ஒன்று அன்பு; மற்றொன்று தருமம். அதாவது குற்றமற்ற வாழ்க்கை.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

இல்வாழ்க்கை பயனும் பண்பும் கொண்டதாகும்; - எப்பொழுது? அன்பும் அறனும் உடைத்தாயின். தன் பண்பை முற்றிலும் கொண்டிருக்கும் பழமே பழமாகும். அதைப் போல் அன்பும் நல்வாழ்க்கையும் கொண்டு பழுத்த இல் வாழ்க்கையே இல்வாழ்க்கை. அவை இல்லையேல் அது இல்லறம் ஆகாது. அன்பும் அறனும் நிறைந்து நிற்கும் இல் வாழ்க்கையே பயனுடைய வாழ்க்கையாகும். இல்லாவிடில் பயனற்ற வாழ்க்கையாகிவிடும்.

அன்பானது இல்லறத்துக்கு அழகு தருகிறது. அறம் அதைப் பயன்படும் வாழ்க்கையாகச் செய்கிறது. அன்பும் தரும வாழ்க்கையும் இணைந்த குடும்பங்கள் பொலிவும் பயனும் பெற்று விளங்கும். ஒரு குடும்பத்தில் அன்பு இல்லா மல் போனால் அந்த வீட்டில் என்ன சுகம் இருக்க முடியும்? தரும வாழ்க்கையை விட்டு அதருமத்தில் இறங்கிக் காலம் கழிக்கும் குடும்பத்தினால் மக்களுக்குத் துன்பமே ஒழியப் பயனில்லை. அந்த வீடு துஷ்ட மிருகங்கள் இருக்கும் முள் காடேயாகும்.

## 5

நெறி தவறாமல் குடும்ப வாழ்க்கை ஒருவன் நடத்தி வந் தால், அதுவே அவனுக்கு எல்லாப் பயனையும் தரும். துறவி யாகத் தவம் செய்ய வேண்டும் என்றில்லை.

அறத்துஆற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்துஆற்றின்
போஒய்ப் பெறுவது எவன்.

இல்லறத்தைச் சரியாகத் தருமநெறியில் நடத்திவிட் டால், துறவு பூண்டு அதிகமாக அடையும் பயன் ஒன்று மில்லை.

{அறத்து ஆற்றின் - தரும மார்க்கத்தில், இல்வாழ்க்கை ஆற்றின் - இல்வாழ்க்கை நடத்தினால். புறத்து ஆற்றின் - துறவு மார்க்கத்தில். பெறுவது எவன். பெறுவது ஒன்றுமில்லை.} நெறி தவறாத இல்லறத்தில் கிடைக்காத பயன், துறவறத்தில் ஒன்றுமில்லை.

அதிகப் பயன் இல்லை என்பது மட்டுமல்ல, மேன்மையும் இல்லை. முறைப்படி இல்வாழ்க்கை நடத்துவது, மற்ற விரதங்களைவிட மேம்பட்டதேயாகும்.

**இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை.**

இயல்பினான்: முறைப்படி, அதற்கு இட்ட நியதியின்றி பிறழாமல். என்பான்: முறைப்படி இல்லறம் நடத்துகிறான் என்று எல்லாரும் சொல்லும்படி நல்ல பெயர் சம்பாதித்தவன். 'முயல்வது' என்றால் தவம் முதலிய முயற்சிகளை எடுப்பது. இந்த முயற்சிகள் கடினம் என்பது குறிப்பாகக் காட்டப்படுகிறது.

இல்லறத்தை முறைப்படி நடத்துவது எளிது என்று எண்ண வேண்டாம். துறவிகளின் நோன்பைப் போலவே, அதாவது பசி, காமம், குரோதம் முதலியவற்றை அடக்கியாள்வதில் துறவிகள் எவ்வளவு, வைராக்கியம் காட்ட வேண்டியதாகிறதோ அவ்வளவு, இல்லறத்தை நடத்துகிறவனும் தன்னுடைய கடமைகளைச் செலுத்துவதில் காட்ட வேண்டியதாகிறது. தருமம் வழுவாமல் நடத்தப்படும் இல்லற வாழ்க்கையில் பெருந்தவமுயற்சி இருக்கிறது. துறவிகளுக்கு வேண் டிய ஆன்ம சக்தி நெறி தவறாத குடும்பஸ்தனுக்கும் வேண் டும். இல்லறமும் தவநிலைக்கு ஈடாகும்.

**ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து.**

செய்ய வேண்டிய கடமைகளைக் குறைவறச் செய்தல் 'ஆற்றின் ஒழுக்கி' என்பதில் அடங்கும் 'அறன் இழுக்கா'

என்றும் சொன்னது, நல்வழியினின்று பிறழாமல், அதாவது பாபம் ஏதும் செய்யாமல் இல்வாழ்க்கையும் நடத்த வேண்டும் என்பதற்காக.

சரியான முறையில், செய்ய வேண்டியதையெல்லாம் செய்தும், செய்யக்கூடாததை யெல்லாம் செய்யாமல் விலக்கியும், நடத்தப்படும் குடும்ப வாழ்க்கையில் துறவிகளின் தவப்பண்பெல்லாம் உண்டு. குடும்ப வாழ்க்கையும் ஒரு தவமே - சரியாக நடந்தால். அப்படிப்பட்ட குடும்பத் தலைவன் தேவர்களுக்குச் சமானமாவான்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

வாழ வேண்டிய முறையில் வாழும் இல்லறத்தான், தேவர்களுக்குச் சமானமாகக் கருதப்படுவான்.

'வானுறையும்' என்று நான்காவது சீரில் நிறுத்திப் பாடியிருப்பது, மேலோங்கி அடைந்த தெய்வநிலையைக் காட்டுகிறது.

## 6

மனைவி எப்பேர்ப்பட்டவளாக இருந்தால் வாழ்க்கைத் துணையாவாள் - அதாவது கணவனுடைய வாழ்க்கையில் உண்மையான துணையாவாள்?

இல்வாழ்க்கை நடத்துவதில் பிரியமும், அதற்கு வேண்டிய குணமும், அறிவும் படைத்தவளாக இருக்க வேண்டும். இல்லாவிடில் இடையூறும் இடுக்கணும் ஆவாள். இல்வாழ்க்கைக் கடமைகளை நடத்துவதில் உள்ளத்திலும் உழைப்பிலும் கணவனுக்கு உதவியாக இருக்கும் மாண்பு அவளிடம் இருக்க வேண்டும்.

கணவனுடைய பொருள் நிலையும் அந்தஸ்தும் உணர்ந்து அவற்றுக்கு இயைந்த முறையில் வீட்டைப் பார்த்துக் கொள்ளும் திறமை இருக்க வேண்டும்.

**மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

*(மனைத்தக்க - தன் வாழ்க்கை இயைந்த. தன்கொண் டான் வளத்தக்காள் - தன்னைக் கொண்டவனுடைய வளம், அதாவது பொருள் நிலைக்குத் தகுந்தவாறு - தன்னை மாற் றிக் கொள்ளும் திறமையைக் கொண்டவள்)*

எந்தக் குடும்பத்தில் மணமாகிப் புகுந்து வாழ்க்கை நடத்துகிறாளோ, அந்தக் குடும்பத்தின் பண்பாட்டுக்கும் செல்வநிலைக்கும் தகுந்தபடி மனைவி நடந்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் குடும்ப வாழ்க்கையில் சுகம் உண்டா காது. பிறந்த அகத்தின் நிலைக்கும் புத்தகத்தின் நிலைக்கும் ஏற்றத் தாழ்வு இருக்கும். தன்னுடைய பிறந்தகத்தை முற்றிலும் மறந்துவிட்டு, கணவனுடைய பொருள் நிலைக்குத் தக்கவாறு நடந்து கொள்ள வேண்டும். கணவன் மனைவி இருவரும் மனம் ஒன்றிய பண்பாட்டில் வாழ்க்கை நடத்த வேண்டும்.

மாண்பு, வளம் இரண்டிலும் புருஷனுடைய அளவுக்கு மனைவி இருக்க வேண்டும். மிஞ்சவும் கூடாது. குறையவும் கூடாது. இல்லற இன்பத்துக்கு இது இன்றியமையாதது. ஏழையின் குடும்பத்தில் அதிகச் செலவாளியான மனைவி வந்து சேர்ந்தால் ஆபத்து. அதுபோலவே பொருள் படைத்த குடும்பத்தில் வந்து சேர்ந்த மனைவி, தரித்திரத்தினால் தனக்கு ஏற்பட்ட வழக்கங்களை மாற்றிக் கொள்ள வேண் டும். இல்லாவிடில் வாழ்க்கை அழகு பெறாது. செல்வத்தைப் போலவே பண்பாடும். சுற்றத்தார், ஊரார், நண்பர், விருந் தினர் - இவர்களிடம் நடந்து கொள்வதில் இருவரும் ஒரே பண்பாட்டை அனுசரிக்க வேண்டும். 'மாண்பு' என்று முனி வர் குறிப்பிட்டது பண்பாட்டை. 'வளம் என்றது செல் வத்தை. இப்படியெல்லாம் இருவரும் ஒன்றுபட்டால் தான், மனைவி வாழ்க்கைத் துணையாவாள். இல்லாவிடில் துணை யாகாத மனைவியாகத்தான் இருப்பாள்.

இல்வாழ்க்கையில் பல கடமைகள் உண்டு. அவற்றை யெல்லாம் சரியாக நிறைவேற்றினால்தான் இல்லறம் பூரண அழகு பெறும். இவற்றில் ம்னைவியின் பங்கு பெரிய பங்கு. இதற்கு வேண்டிய பண்பாடும், அறிவும், மனமும் வீட்டு எஜமானியிடம் இல்லாவிடில், எவ்வளவு செல்வம் இருந்தாலும் வாழ்க்கை மாண்படையாது.

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

மனைவியானவள் மனைமாட்சி படைத்திராதவளாக ஆயின் அந்தக் குடும்பத்துக்கு வேறு வகையில் எவ்வளவு மாட்சியிருந்தும் இல்லாதது போலவே முடியும்.

மனைமாட்சி என்பது பெண்களுக்கு உரிய ஒரு தனிப் பண்பு. புருஷனுடன் ஒன்றுபட்டு இல்லறத்துக்கு உரிய உயர்ந்த கடமைகளைச் செய்து முடிக்கும் திறமை. இந்தத் திறமை மனைவிக்கு இல்லையாயின் புருஷன் எவ்வளவு பண்பட்டவனாயினும், பொருள் படைத்தவனாயினும், அந்தக் குடும்பத்தின் வாழ்க்கை அதற்குரிய மாண்பை அடையாது. 'வாழ்க்கை எனைமாட்சித்தாயினும், இல்' என்பது திருவள்ளுவரின் தனி நடை.

## 7

இல்லறம் சிறப்படைவதற்குப் புருஷனுடைய குணங்களைக் காட்டிலும் மனைவியின் நற்குணங்கள் முக்கியம். புருஷனுடைய குறைகளை மனைவி சரிக்கட்டலாம். மனைவியின் குறைகள் இல்லறத்தைக் கெடுத்து விடும். புருஷன் அதற்கு ஒன்றும்செய்து சீர்படுத்த இயலாது.

வீட்டின் எஜமானி தகுந்தவளாயின், எந்தக் குறையும் நீங்கி இல்லறம் அழகு பெற்று நடைபெறும். வாழ்க்கைத் துணைவிக்கு வேண்டிய குணம் அவளிடம் இல்லையாயின், கணவன் என்ன செய்தும் பயனில்லை.

**இல்லதுஎன் இல்லவள் மாண்பானால்? உள்ளதுஎன்**
**இல்லவள் மாணாக் கடை?**

*'இல்' என்பதை வைத்து முனிவர் தமக்கே உரிய தனி நடையில் மிக அழகான குறளை யாத்திருக்கிறார். இல்லவள் என்பது மனையாள். அவள் மாண்பு பெற்றவளாக இருந்து விட்டால் அந்த இல்லத்தில் இல்லாதது என்ன? குறை யென்பதைக் காணவே முடியாது. எல்லாக் குற்றமும் குறை யும் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போகும். அவளிடம் அந்த மாண்பு இல்லாவிட்டால், அந்தக் குடும்பத்துக்கு என்ன இருந்தும் இல்லைதான். பெண் குலத்துக்கு வள்ளுவர் மதிப்புத் தரவில்லை என்று யார் சொல்ல முடியும்?*

*ஒருவனுக்குள்ள செல்வங்களில் பெருஞ்செல்வம் கற் புடைய மனைவி. கற்பு என்பதில் அனைத்தும் அடங்கும். பிற புருஷரை விரும்பாமல் இருப்பது மட்டும் கற்பு ஆகிவிடாது. பூரண அன்பும், ஆசையும் நம்பிக்கையும், அனைத்தும் நீயே என்னும் பக்தியுமே கற்பாகும். அத்தகைய பக்தியைத் தன் னிடம் காட்டும் மனைவியை அடைந்த ஒரு வனுக்கு, அவளே எல்லாவற்றைக் காட்டிலும் பெருத்த செல்வம்.*

**பெண்ணின் பெருந்தக்க யாவுள, கற்பு என்னும்**
**திண்மைஉண் டாகப் பெறின்.**

*'கற்பு' என்று சொல்லப்படும் திண்மை என்றார். கற்பின் முக்கியமான இலக்கணம் திண்மை. ஒரு சமயம் பொங்கி வழிந்து, ஒரு சமயம் தாழ்ந்து போகும் பக்தி கற்பாகாது. அசையாததும் அழியாததுமான பக்தியே கற்பு.*

*நம்முடைய நாட்டினுடைய சமயத்தின் படியும், வழக் கத்தின் படியும், கடவுளை எந்தப் பொருளிலும் வைத்து வழிபடுவோம். எந்த லிங்கத்தையேனும் முன்வைத்துக் கொண்டு, பகவானை அன்பும் ஆர்வமும் செலுத்தி வழிபடு கின்றோம். லிங்கம் என்பது சுவாமி பூஜைக்காக வைத்துக்*

கொள்ளும் ஒரு அடையாளப் பொருள். ஆனபடியால், மனைவி தன் கணவனைப் பகவத் சொரூபமாகவே பாவித்து வழிபடலாம். அத்தகைய பண்பை அடைந்த மனைவிக்கு, வேறு கோவில் வேண்டியதில்லை. காலை கண் விழித்ததும் கொழுநனைத் தொழுவாள். கணவன் உருவத்தில் கடவுளைக் காண்பாள். சமயாசாரப்படி ஒரு மூர்த்திக்குச் செலுத்த வேண்டிய அன்பும் ஆர்வமும் பூசையும் கணவனையே ஆண்டவனாகப் பாவித்து அவனுக்குச் செலுத்துவது எளிதான சாதனம் ஆகிவிடும். இதை முனிவர் சொல்லுகிறார்:

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதுஎழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

கடவுள் வழிபாட்டினால் அடையக் கூடிய பயனை, மனைவி தன் கணவனிடம் செலுத்தும் கற்பினால் அடைவாள். சித்தர்கள் பெறும் சித்திகளைக் கற்புடைய மனைவி எளிதில் அடைவாள்.

## 8

பர புருஷர்களிடம் மனம் செல்லாதவாறு மனைவியை வீட்டில் அடைத்து வைப்பதும், பிற நிர்ப்பந்தங்களுக்கு உட்படுத்துவதும் பயன்தரமாட்டா. பெண்ணாகப் பிறந்தவளுக்கு உறுதியான துணையும் காப்பும் அவளுடைய மன நிறை ஒன்றே. 'நிறை' என்றால் அந்தரங்க உறுதி. வெளிநிர்ப்பந்தங்களினால் பயனில்லை. அந்தராத்மாவின் காப்பே காப்பு.

சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.

புற நிர்ப்பந்தங்களினால் உண்டாகும் சுத்தம் கற்பாகாது. தன் உள்ளத்தூய்மையால் அடையும் சுத்தமே கற்பு.

கணவன் ஏற்படுத்திய நிர்ப்பந்தங்களினாலும், தானாக வைத்துக் கொள்ளும் நிர்ப்பந்தங்களினாலும் ஒருத்தி கஷ்டப்

பட்டு அடையும் பரிசுத்த நிலை, உண்மைக் கற்பு ஆகாது. தன் மன உறுதியினாலும் பண்பட்ட இயல்பினாலும் தானாகவே நிற்கும் சுத்த நிலையே, உண்மைக் கற்பு. அத்தகைய கற்பு டைய மனைவி யாருடன் பேசிப் பழகினாலும், எங்கே சென் றாலும் அவளுடைய கற்புக்குக் குறைவில்லை. காப்பு உள்ளே இருக்கிறது. வெளியே காப்பு வேண்டியதில்லை.

காலப் போக்குடன் சமூக வாழ்க்கை முறைகள் மாறு படும். ஒரு காலத்தில் குற்றமாகக் கருதக்கூடிய செயல்களை இக்காலத்தில் தவறாக எண்ணமாட்டோம். ஆனால் வழக் கங்கள் எவ்வளவு மாறிய போதிலும், சில உண்மைகள் எக் காலத்திலும் மாறாத உண்மையாகும். மகளிரைப் பற்றிய வழக்கங்களும் கட்டுப்பாடுகளும் இக்காலத்தில் மிகவும் மாறுபாடு அடைந்து விட்ட போதிலும், கற்பின் சிறப்பும் அந்தக் கற்புக்குக் காப்பாக அமையும் உள்ளத்தின் தூய நிலை யும் இக்காலத்திலும் உண்மையேயாகும். முனிவர் சொன்னவை பழைய காலத்துப் பேச்சு என்று தள்ளிவிட வேண்டிய தில்லை. தள்ளினால் துக்கமும் துயரமும் விளையும்.

பெண் குலத்துக்கு வள்ளுவர் கொடுக்கும் மதிப்பையும், மன நிறைக்கு அவர் தரும் சிறப்பையும் இந்தக் காலத்திலும் நாம் தந்து, குடும்ப வாழ்க்கையை மாண்புறச் செய்ய வேண் டும். நல்லொழுக்கத்தோடு வாழும் குடும்பங்கள் நிறைந்த நாடே, இன்பமும் புகழும் அடையும்.

## 9

பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை அறிவுஅறிந்த
மக்கட்பேறு அல்ல பிற.

இல்லற வாழ்க்கை அதன் முழுப் பண்பை எப்போது அடையும்? நல்ல மக்களைப் பெற்றால் தான் அடையும். சாதாரண நடையை மாற்றி, 'யாம் அறிவது இல்லை' என்று சாட்சி முத்திரை போட்டுப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஒருவன் அடையக் கூடிய எல்லாப் பாக்கியங்களுக் குள்ளும் பெரும் பாக்கியமாகும்- தான்பெற்ற மக்கள் அறிவடைந்து வளர்வதைப் பார்க்கும் மகிழ்ச்சி. இதற்குச் சமானமான வேறு எந்த இன்பமும் ஒருவன் அடையக்கூடும் என்று எனக்குத் தெரியவில்லை என்கிறார் முனிவர். மக்களைப் பெற்றால் மட்டும் போதாது. அவர்கள் எல்லா விதத்திலும் அறிவை அடைந்து நல்ல மக்களாக விளங்க வேண்டும். இல்லாவிடில் துன்பத்துக்குக் காரணமாவார்கள் அல்லவா? அதைக் குறிப்பாகச் சொல்லியிருக்கிறார்.

இல்லற சுகம் என்பது தனக்காக மட்டும் அல்ல. அதன். பயன் சமூகத்துக்கும் உண்டாக வேண்டும். அதனாலேதான் மக்கட்பேற்றுக்கு இல்லற வாழ்க்கையில் சிறப்பான இடம். மக்களைச் சமூகத்துக்குத் தந்துவிட்டு, இல்லறம் நடத்தியவன் மறைகிறான். அவர்கள் 'அறிவு அறிந்தவர்'களாக இருக்க வேண்டும்.

இனி, தான் பெற்ற குழந்தைகளோடு குடும்ப வாழ்க்கையில் ஒருவன் காணும் இன்பத்தைச் சித்திரிக்கிறார்.

> அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
> சிறுகை அளாவிய கூழ்.

செல்வ நிலையில் தன் வாழ்க்கை எவ்வளவு தாழ்ந்ததாயினும், உண்பது கூழாயினும், தன் மக்களின் சிறு கை அந்தக் கூழில் அளாவியதனால், அந்தக் கஞ்சியானது அமிழ்தத்தைவிட மிக இனிதே ஆகும். அமிழ்தத்துக்கு மேல் இனிப்புக்குச் சொல்லக் கூடிய பொருள் வேறு இல்லை!

> குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
> மழலைச்சொல் கேளா தவர்.

தாம் பெற்ற மக்களுடைய மழலைச் சொல்லைக் கேட்டு அந்த இன்பத்தை அனுபவித்த தாயும் தகப்பனும் அதை விட்டுக் குழலையும் யாழையும் கேட்கப்போக மாட்டார்கள். அவற்றின் இசையொலியில் அந்த இன்பத்தைக் காண மாட்

டார்கள். பேசப் பக்குவம் அடையாத குழந்தைகளின் மழலைச் சொல் பெற்றோருக்குத் தரும் இன்பத்தை, இதை விட அழகாக ஒரு கவிஞன் பாட முடியாது. சிறந்த வாத்தியங்களின் ரஸம் கண்டு, மழலைச் சொல்லில் ரஸம் காணாதவர் மடையர்கள் என்கிறார். குழந்தைகளைப் பெறாமல் அவர்கள் மழலைச் சொல்லைக் கேட்கும் பாக்கியம் இல்லாதவர்களைக் கண்டு, முனிவர் இரங்குகிறார். மழலைச் சொல்லில் உள்ள இசையைப் பெற்றோர்கள் காண்பது போல் மற்றவர்கள் காண மாட்டார்கள். ஏன் இதை இவ்வளவு அனுபவிக்கிறார்கள் என்று கூட வியப்பார்கள். குழந்தையைப் பெற்ற தாயும் தகப்பனும், பேச முயலும் குழந்தையின் மழலைச் சொல்லைக் கேட்டு அடையும் இன்பத்தை முனிவர் உணர்ந்து, அதை வாத்தியங்களின் இன்னோசைக்கு ஒப்பிட்டுச் சித்திரிக்கிறார். இந்த இன்பம் அவற்றில் இல்லை என்றும் சொல்லி விடுகிறார்!

## 10

மகனுக்குத் தகப்பன் என்ன செய்ய வேண்டியது? 'சொத்து வைத்திருக்கிறேன். அவனுக்கு ஒன்றும் குறை வில்லை' என்று எண்ணுவது தவறு. சொத்தைவிடக் கல்வியும் பண்பாடும் அதிகமாகப் பயன்படும். கல்வி கேள்வியடைந்த மக்களிடையில் மதிப்புப் பெறும்படியாக மகனை வளர்க்க வேண்டும். பெரியோர்கள் கூடும் சபையில் முன்னணியில் இருக்கத் தகுதியைத் தரக்கூடிய கல்வியையும் பண்பாட்டையும் மகன் அடைவதற்கு வேண்டியதைச் செய்ய வேண்டும். அதுவே பெருஞ் செல்வத்தை வைத்துப் போனதாகும்.

தான் பெற்ற குழந்தைகள் சுகம் அடைய வேண்டும் என்றால் கல்வி கற்பிப்பதே தகப்பனுடைய கடமை. கல்வி கற்ற பெரியோர்களின் நன்மதிப்பை அடையச் செய்வது தகப்பனுடைய தனிப் பொறுப்பு. வள்ளுவர் காலத்தில் கல்விக்கும் கல்வி கற்றவர்களுடைய மதிப்புக்கும் உயர்வு தந்தார்.

தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.

(மகற்கு ஆற்றும் நன்றி: மகனுக்குச் செய்யும் நன்மை)

*மக்கட்பேற்றில் தாய் அடையும் மகிழ்ச்சி மிகப் பெரிது. இது இயற்கையமைப்பு. இந்த மகிழ்ச்சியையும் விட அதிக மகிழ்ச்சியைத் தாய் அடைவது எப்பொழுது? - தான் பெற்ற மகன் உலகத்தில் நல்ல பெயர் எடுத்தால்.*

ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

*'சான்றோன்' என்றால் சால்பு உடையவன். சால்பு என்பதில் கல்வி, ஒழுக்கம், பண்பாடு அனைத்தும் அடங்கும்.*

*மகனைப் பற்றிய புகழ்ச்சொல் தாயின் காதில் விழும் போது உண்டாகும் இன்பத்தைச் சொல்லுகிறது இந்தக் குறள்.*

*பிறப்பது மட்டும் போதாது, நற்புகழ் பெறவேண்டும். அதற்கு உரிய கல்வியும் ஒழுக்கமும் அடைந்து வாழ்க்கை நடத்த வேண்டும்.*

*புகழைப் பற்றி இன்னும் சொல்லுகிறார் முனிவர். இதையும் தமது தனிநடையில் சொல்லுகிறார்.*

மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்என்னும் சொல்.

*'தந்தையானவன் என்ன தவம் புரிந்து, என்ன தானதருமம் செய்து, இப்படிப்பட்ட மகனைப் பெற்றான்' என்று உலகம் வியந்து பேசும்படியான பண்பு மகனிடம் இருக்க வேண்டும். அப்போது தான் பெற்று வளர்த்த தகப்பனுக்கு மகன் தன் கடமையைச் செய்தவன் ஆகிறான். மகனிடம் தகப்பன் வேறேதும் எதிர்பார்ப்பதில்லை. அவன் உலகில் நல்ல பெயர் சம்பாதித்தால் போதும்.*

# 11

அன்பிலார் எல்லாம் தமக்குஉரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு

மக்களுக்கு இருக்க வேண்டிய குணங்களுக்குள் அன்புக்கு வள்ளுவர் முதல் இடம் தருகிறார். அந்தக் குணம் இருந்தால் மனிதன் எத்தகையவன் ஆகிறான், அது இல்லாவிடில் எத்தகையவன் ஆகிறான் என்னும் இரண்டையும், இந்தப் பாட்டில் சொல்லுகிறார்.

அன்பு இல்லாதவர்களுடைய வாழ்க்கை முற்றிலும் சுயநல வழியில் தமக்கே செலவழிந்து பயனற்றுப் போகும். அன்பு என்னும் குணம் நிறைந்த உள்ளத்தைப் படைத்தவர்கள் உலகத்தின் செல்வம் ஆகிவிடுகிறார்கள். அவர்களுடைய எலும்பும் பிறருடைய சொத்து ஆகிவிடுகிறது என்கிறார். அதாவது தமக்கென்று ஒன்றும் வைத்துக் கொள்வதில்லை.

# 31

# திருவள்ளுவர் காலம்

1963

மா. இராசமாணிக்கனார்

*சங்க நூல்களின் இறுதிக் காலம்*

புறநானூறு முதலிய எட்டுத்தொகை நூல்களும் பத்துப் பாட்டும் சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் காவிய நூல்களும் சங்க நூல்கள் என்று ஒருசார் அறிஞர் கூறுவர். எட்டுத்தொகை நூல்களும் பத்துப்பாட்டும் சங்க நூல்கள் என்றும், சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சங்க கால மாகிய கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளையும் அடுத்துச் செய்யப்பட்ட 'சங்கம் மருவிய' நூல்களென்றும் பிறிதொரு சார் ஆராய்ச்சியாளர் கூறுவர். கால ஆராய்ச்சியைப் புரி வோர் மறுக்க முடியாத வரலாற்று உண்மைகட்கு முதலிடம் தருதல் வேண்டும்; அடுத்து, நூலில் கூறப்படும் சமயஉண்மை கட்கும் அகச்சான்றுகட்கும், புறச்சான்றுகட்கும் மதிப்பளித் தல் வேண்டும். இவ்வுண்மைகளை உளங்கொண்டு, மேற் சொன்ன இரு சார் அறிஞர் கூறும் நூல்களின் இறுதிக்கால

எல்லை எதுவாக இருத்தல் கூடும் என்பதை ஈண்டு ஆராய்தல் நலமாகும்.

வட இந்தியாவில் கி.பி. நான்காம் நூற்றாண்டின் முற்பாதியில் பேரரசனாக இருந்த சமுத்ர குப்தன் தட்சிணத்தின் மீது படையெடுத்து வந்து அரசர் பலரை வென்றனனென்றும், அவருள் காஞ்சியை ஆண்ட விஷ்ணுகோபன் என்ற பல்லவன் ஒருவன் என்றும், அக்குப்தனது அலகாபாத் தூண் கல்வெட்டுக் கூறுகின்றது.[1] அக்காலம் ஏறத்தாழ கி.பி.340 - 350 எனலாம்.[2] இதனால் கி.பி.3ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழகத்தின் வடபகுதியாகிய தொண்டை மண்டலம் பல்லவர் என்ற அரசமரபினர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்பது திட்டமாகத் தெரிகிறது.[3]

காஞ்சியிலிருந்து முதல்முதல் பட்டயம் விடுத்த சிவஸ்கந்த வர்மன் என்ற முதற் பல்லவன் ஏறத்தாழ கி.பி.3ஆம் நூற்றாண்டினன் என்று ஒருசார் ஆராய்ச்சியாளர் கூறுவர்.[4] பிறிதொரு சார் ஆராய்ச்சியாளர் வேறு சில காரணங்களைக் காட்டி, சிவஸ்கந்தவர்மனே காஞ்சியைக் கைப்பற்றிய குமார விஷ்ணு, அவன் காலம் ஏறத்தாழக் கி.பி.325- 350 என்பர்.[5] வேறொருசார் ஆராய்ச்சியாளர் வேறு சில காரணங்களைக் காட்டிச் சிவஸ்கந்தவர்மன் காலம் ஏறக்குறையக் கி.பி.300 - 325 என்பர்.[6] இவை அனைத்தையும் காண, தொண்டை நாட்டில் பல்லவராட்சி ஏறத்தாழக் கி.பி.300இல் தொடங்கியிருக்கலாம் என்று கொள்வது பொருத்தமாகும்.

சுமார் கி.பி.300இல் தொண்டைநாட்டைக் கைப்பற்றி ஆளத் தொடங்கிய பல்லவர் கி.பி900 வரை தென்னிந்தியாவில் பேரரசராக இருந்தனர்; அடிக்கடி சேர சோழ பாண்டியரோடும் போரிட்டனர் என்பன வரலாறு கண்ட உண்மைகள். ஏறத்தாழக் கி.பி.575 முதல் 900 வரை அப்பல்லவர் பேரரசு கிருஷ்ணை முதல் காவிரிவரையும் பரவியிருந்தது.[6] இங்ஙனம் பல நூற்றாண்டுகளாகத் தமிழகத்தில் இருந்த பல்லவரைப் பற்றி மிகப் பழைய தமிழ் நூல்களென்று கருதப்படும் மேற்சொன்ன தொகை நூல்களிலும், காவியங்களிலும் ஒரு குறிப்

பும் காணப்படவில்லை.[7] சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் இரண்டு காவியங்களும் காஞ்சியைப் பற்றிப் பல இடங்களில் குறித்தாலும், பல்லவ அரசருள் ஒருவரைப் பற்றியேனும் குறிப்பிடாதது கவனிக்கத்தக்கது. இது ஒன்றே இக்காவியங்கள் பல்லவர்க்கு முற்பட்டவை என்பதை நன்கு விளக்குவதாகும்.[8]

கி.பி.300 முதல் 550 வரையில் தென்னாட்டு வரலாற்றின் இருண்ட காலமென்று கூறலாம். இது சங்ககாலத்திற்குப் பிறகு ஏற்பட்ட இருண்ட காலம். இவ்விருண்ட காலத்தில் அளப்பரிய அதிராஜர்களை முடிதுறக்கச் செய்து களப்பிரர் என்னும் இனத்தார் தமிழகத்தை ஆண்டதாகத் தெரிகிறது.[9] அவருள் அச்சுத விக்கந்தன் என்னும் அரசன் சோழநாட்டை ஆண்டு பௌத்த சமயத்தை நன்கு ஆதரித்ததாக, ஏறத்தாழக் கி.பி.450இல் வாழ்ந்த புத்ததத்தர் என்ற பௌத்த நூலாசிரியர் தம் நூல்களில் குறித்துள்ளார். இவ்வாறு தமிழரசரை முடி துறக்கச் செய்த களப்பிரர் ஆட்சி, வடக்கே சிம்மவிஷ்ணு பல்லவனாலும் தெற்கே கடுங்கோன் என்ற பாண்டியனாலும் கி.பி.6ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொலைக்கப்பட்டு, வடக்கே பல்லவர் ஆட்சியும் தெற்கே பாண்டியர் ஆட்சியும் ஏற்படுத்தப்பட்டன.[10] இக்களப்பிரரைப் பற்றிய குறிப்புச் சிறிதேனும் மேற்சொன்ன சங்ககால நூல்களில் இல்லை என்பது கவனிக்கத்தக்கது. இங்ஙனம் கி.பி.300க்குப் பிறகு தமிழகத்தில் நுழைந்து ஆதிக்கம் கொண்ட பல்லவரைப் பற்றியோ, களப்பிரரைப் பற்றியோ மேற்சொன்ன நூல்களில் ஒரு குறிப்பேனும் காணப்படாமை கொண்டே, அவை யாவும் கி.பி. 300க்கு முற்பட்டன என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளிதில் புலனாகும். சங்ககாலம் எதுவாயினும் ஆகுக; சங்கம் மருவிய காலம் எதுவாயினும் ஆகுக. இவ்விரு காலங்களும், மேற்சொன்ன வரலாற்றுண்மைகளால், கி.பி.300க்கு முற்பட்டவை என்பது தெளிவு.

## திருக்குறளும் மணிமேகலையும்

மேற்கூறிய சங்கநூல்களில் காலத்தாற் பிற்பட்டவை சிலப்பதிகாரமும் மணிமேகலையும் என்பது அனைவரும்

ஒப்புக்கொண்ட உண்மை. எனவே, மணிமேகலையும் சிலப்பதி காரமும் சங்ககாலத்தின் இறுதிப் பகுதியில் செய்யப்பட்ட பெரு நூல்கள் என்று கருதுதல் பொருந்தும். இவற்றுள் ஒன்றான மணிமேகலையில் திருவள்ளுவரால் செய்யப்பட்ட திருக்குறட்பாக்களுள் ஒன்று அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளது காண்க.

> தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை.[11]

இக்குறட்பா மணிமேகலையில்,

> தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றவப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேராய்.[12]

என்று மணிமேகலை பாடிய மதுரைக் கூலவாணிகன் சாத்தனாரால் எடுத்தாளப்பட்டது. பரசுராமன் காலத்தில் வாழ்ந்த ககந்தன் என்ற பழைய சோழன் மகன் ஒருவன், மருதி என்ற பார்ப்பன மங்கையைக் காவிரிக் கரையில் கண்டு காம உணர்ச்சியால் அழைத்தான். அவள் மனம் கலங்கி, “உலகில் மழை வளந்தரும் பத்தினிப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகார். நான் இவன் உள்ளம் புகுந்தேன். இதற்குக் காரணம் யாது?” என்று சதுக்கப் பூதத்தை அணுகித் தன் மனக் கவலையை வெளியிட்டாள். அதற்கு அப்பூதம் மேற்சொன்ன மூன்று வரிகளையும் கூறியது என்பது வரலாறு.

இவ்வாறு திருக்குறட் செய்யுள் ஒன்றை வெளிப்படையாகத் தம் நூலில் கூறி, அதனைச் செய்த ஆசிரியரைப் ‘பொய்யில் புலவன்’ என்று வியந்து பாராட்டிய மணிமேகலை ஆசிரியர் காலம் யாது என்பதை முதற்கண் ஆராய்வோம்.

## மணிமேகலையின் காலம்

1. மணிமேகலை ஆசிரியரான சாத்தனாரும் சிலப்பதிகார ஆசிரியரான இளங்கோ அடிகளும் நண்பர்கள் என்ப

தும், செங்குட்டுவன் காலத்தவர் என்பதும், சிலப்பதிகாரக் காவியத்தின் தொடர்ச்சியே மணிமேகலைக் காவியம் என்பதும் இவ்விருநூல் பாயிரங்களாலும் சிலப்பதிகார அகச் சான்றுகளாலும் அறியலாம். இச் சாத்தனார் வாய்மொழியால் கண்ணகியின் சிறப்பறிந்த செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் கட்டி வழிபட்டதற்கும் அதற்கு இலங்கை அரசனான கஜபாகு (கயவாகு) மன்னன் வந்திருந்தானென்பதற்கும் சிலப்பதிகாரமே சான்று பகர்கிறது. கயவாகு என்னும் பெயருடைய அரசர் இருவர் முறையே கி.பி. இரண் டாம் நூற்றாண்டிலும் கி.பி.12ஆம் நூற்றாண்டிலும் ஆண்டனர் என்று இலங்கை வரலாறு கூறுகின்றது. இவற்றுள் கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் ஆண்ட கயவாகுவே (கி.பி.171-193)[13] செங்குட்டுவன் காலத்து அரசனாதல் வேண் டும். அவனே பத்தினி விழாவில் கலந்துகொண்டு, தன் நாட்டிலும் பத்தினிக்குக் கோயில் கட்டியவனாவான். இன்றைக்கும் சிங்களவர் 'பத்தினி தெய்யோ' என்று கண்ணகியைக் கொண்டாடுகின்றனர். இலங்கையிலிருந்துதான் பத்தினியின் உருவச்சிலை லண்டன் பொருட்காட்சிச் சாலைக்குக் கொண்டு செல்லப்பட்டது.

2. மணிமேகலை 27ஆம் காதையில் 'கிருதகோடி' என்னும் உரையின் ஆசிரியர் வேத வியாசருடனும் சைமினி என்னும் ஆசிரியருடனும் பிரமாணங்கள் கூறும் இடத்தில் குறிக்கப் பட்டுள்ளார். கிருத கோடி என்பது மீமாம்ச சாத்திரமாகிய வேதாந்த சூத்திரத்திற்குப் போதாயனர் இயற்றிய உரை ஆகும் என்பது 'பிரபஞ்ச ஹிருதயம்' என்னும் வடமொழி நூலில் கூறப்பட்டுள்ளது. அந்நூலில், இவ்வுரை மிக விரிவாக இருந்தது பற்றி உபவர்ஷர் என்பவர் அதனைச் சுருக்கி அமைத்தனர் என்பதும் குறிக்கப்பட்டுள்ளது. இந்த உபவர்ஷர் கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் என்பதுஆராய்ச்சியாளர் முடிவு. எனவே அவருக்கு முற்பட்ட 'கிருதகோடி' உரை எழுதிய போதாயனர் அவருக்கும் முற் பட்டவர், ஏறத்தாழக் கி.பி. முதல் நூற்றாண்டில் அல்லது இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராவர் என்று அறிஞர் கருதுகின்

றனர்.[14] இதனால் 'கிருதகோடி' ஆசிரியரைக் குறிப்பிடுகின்ற மணிமேகலை, அவ்வுரை பெரிதும் வழக்கில் இருந்த கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருத் தல் வேண்டும் என்று கருத இடம் தருகிறது.[15]

3. மணிமேகலை 29ஆம் காதையிலும் பிற காதைகளி லும் குறிக்கப்பட்டுள்ள பௌத்த சமயக் கொள்கைகள், ஏறத் தாழக் கி.பி.200-250 ஆண்டுகட்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவராக ஆராய்ச்சியாளரால் துணியப்படும் நாகார்ச் சுனரால் உண்டாக்கப்பட்ட மகாயான பௌத்த மதக் கொள் கைகள் அல்ல. அவை ஹீனயான பௌத்த மதக் கொள்கைகள். எனவே, மணிமேகலை காலத்தில் இருந்த தமிழகத்துப் பௌத் தம், ஹீனயானத்தைச் சேர்ந்த சௌத்ராந்திகப் பிரிவினது என்பது தெளிவாகும்.[16] எனவே நாகார்ச்சுனர் கொள்கைகள் தமிழகத்தில் பரவுதற்கு முற்பட்ட காலத்தது மணிமேகலை என்று கருதுதல் பொருந்தும்.

4. பௌத்த சமயத்துச் 'சாத்தியசித்தி' பிரிவினரான அரிவர்மர் ஏறக்குறைய கி.பி.250இல் வெளிப்படுத்திய அனாத்ம வாதக்கொள்கை மணிமேகலையில் இல்லை. மணி மேகலையில் விஞ்ஞான வாதக் கொள்கைகளே குறிக்கப்பட் டுள்ளன. இந்த விஞ்ஞான வாதக் கொள்கைகளே ஏறத்தாழக் கி.பி.400இல் வாழ்ந்தவராகக் கருதப்படும் திந்நாகர் என்னும் புகழ்பெற்ற பௌத்த ஆசிரியரால் பரப்பப்பட்டன. மணி மேகலையில் கூறப்பட்டுள்ள பௌத்தக் கொள்கைகள் அனைத்தும் சௌத்ராந்திகப் பிரிவுக் கொள்கைகள் ஆகும்.[17]

5. மணிமேகலை ஆசிரியர் சாத்தனார்க்கு நண்பனான செங்குட்டுவன் பத்தினிச் சிலைக்கு கல் எடுக்க வடநாடு சென் றான் என்று சிலப்பதிகாரம் செப்புகின்றது. அவன் எவ்வித எதிர்ப்புமின்றிக் கங்கையைக் கடந்து உத்தரகோசலத்தில் மட்டும் ஆரிய அரசரை வென்றான் என்று அந்நூல் கூறுகிறது. இங்ஙனம் தமிழரசனொருவன் வடக்கே படையெடுத்துச் செல்லத்தக்க வசதி கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில் இருந் ததா? எனின், ஆந்திரர் ஆட்சி குன்றிய கி.பி.2, 3ஆம் நூற்

றாண்டுகளில் இப்படையெடுப்பு நிகழ்ந்திருக்கலாம்.[18] கி.பி.163 இல் இறந்த கௌதமீபுத்ர சதகர்ணியின் மகனான புலுமாயிக்குப் பின் வந்த ஆந்திர அரசர் வலியற்றவர்[19] ஆதலின் கி.பி.163 முதல் ஆந்திர அரசு மறைந்தவரை (கி.பி.300 வரை) உள்ள இடைக்காலத்தில் செங்குட்டுவன் படையெடுப்பு நிகழ்ந்திருக்கலாம். கயவாகுவின் காலம் கி.பி.171-193. ஆதலால் செங்குட்டுவன் படையெடுப்பும் இக்காலத்திலேயே நிகழ்ந்ததாதல் வேண்டும். இப் படையெடுப்பில் செங் குட்டுவன் நண்பரான நூற்றுவர் கன்னர் அவன் கங்கையைக் கடக்க உதவி புரிந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. நூற்றுவர் கன்னர் என்பது ‘சதகர்ணி’ என்னும் வடமொழித் தொடரின் மொழிபெயர்ப்பு என்பதை எளிதில் உணரலாம். உணரவே, அக்காலத்து ஆந்திரப் பெருநாட்டை ஆண்ட சதகர்ணி அரசன் செங்குட்டுவனுக்கு நண்பன் என்பது பெறப்படும். அக்கால ஆந்திர அரசன் யக்ஞஸ்ரீ சதகர்ணி என்பவன். இவன் காலம் கி.பி.166-196.[20] எனவே, சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்ட நூற்றுவர் கன்னர், வரலாற்றுப் புகழ்பெற்ற சதகர்ணி அரசர் என்பது அறியத்தக்கது. இங்ஙனம் வரலாறு கொண்டும், சமய உண்மைகள் கொண்டும் அறிஞர் கூறியுள்ள முடிவுகளைக் காணின், சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் செய்யப்பட்டவாதல் வேண்டும் என்பது நன்கு தெளிவாகும்.

## திருக்குறளின் பழமை

கி.பி.2ஆம் நூற்றாண்டில் செய்யப்பெற்றதாகத் துணியப்படும் மணிமேகலையில் திருக்குறள் ஆட்சி பெற்றது எனின், திருக்குறள் நூல் சாத்தனார் போன்ற புலவர்கள் படித்தறியத் தக்க நிலையில் நாட்டில் பெருமை பெற்றிருந்தது என்பது தெளிவாகும். ஆசிரியர் இக்குறளை ஆண்டுள்ள இடம் நன்கு கவனித்தற்குரியது. சோழ அரசருள் மிகப் பழையவனான (கரிகாலனுக்கும் முற்பட்ட) ககந்தன் காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த சதுக்கப்பூதம் மருதி என்னும் பார்ப்பனியை நோக்கி,

தெய்வம் தொழாஅள்......

.......................................

பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்

என்று கூறியதாகச் சாத்தனார் கூறியுள்ளார். ஒரு சாதாரணப் பார்ப்பனப் பெண்ணான மருதி, இத் திருக்குறளின் கருத்தை அறிந்திருக்க வேண்டுமென்று சதுக்கப்பூதம் எதிர்பார்த்தது என்பது சாத்தனார் கருத்தாதல் தெளியலாம். இவ்வாறு, ககந்தன் காலத்திலேயே திருக்குறள் அனைவராலும் அறியத் தகும் நிலையில் இருந்தது (அதாவது, மணிமேகலையின் காலத்துக்கு மிக முற்பட்டது திருக்குறள்) என்பதைச் சாத்தனார் சதுக்கப் பூதத்தின் வாயிலாக நமக்கு உணர்த்தும் திறன் வியந்து பாராட்டற்குரியது அன்றோ? சாத்தனார் உணர்த்துவது உண்மை என்பதை, மணிமேகலைக்கு முற்பட்டனவாகக் கருதப்படும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய நூற் பாடல்களைக் கொண்டும் நன்கு அறியலாம்.

தமிழகத்தில் கி.பி.300க்கு முற்பட்ட பல்வேறு காலங்களில் பல்வேறு ஊர்களில் வாழ்ந்த புலவர் பலர், பல்வேறு சந்தர்ப்பங்களில் பாடிய பாக்களின் தொகுதியே எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஆகும். இவை கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்குள்ளேயோ, அல்லது அதற்குப் பிற்பட்ட காலத்திலேயோ தொகுக்கப்பெற்றவை. இப் பாடல்களைப் பாடிய புலவர் பலர் தம் பாக்களில் திருக்குறட் கருத்துக்களையும் சொற்களையும் சொற்றொடர்களையும் ஆண்டுள்ள உண்மை, சங்கநூற் பயிற்சியுடையார்க்கு நன்கு விளங்கும். இடச்சுருக்கம் கருதி, ஒவ்வொரு நூலுக்கும் சில எடுத்துக்காட்டுக்களைக் காட்டிச் செல்லுதலே சாலும்.

## நற்றிணை

1. நீரின் றமையா துலகெனின் யார்யாக்கும்
   வானின் றமையா தொழுக்கு. குறள், 20

   நீரின் றமையா உலகம் போலத்
   தம்மின் றமையா நந்நயந் தருளி. நற்றிணை, 1.

2. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. – குறள், 791

............. ............. ............. பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் மொட்டியோர் திறத்தே. – நற்றிணை, 32.

3. பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். – குறள், 580.

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர். – நற்றிணை, 355.

## *குறுந்தொகை*

1. மலரினும் மெல்லிது காமம் சிலரதன்
செல்வி தலைப்படு வார். – குறள், 1289.

ஐதே காமம் – க்காமநோய் நுண்ணியது, மெல்லியது.
– குறுந்தொகை, 217.

2. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். – குறள், 805.

பேதை மையாற் பெருந்தகை கெழுமி
நோதகச் செய்ததொன் றுடையேன் கொல்லோ.
– குறுந்தொகை, 230.

3. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். – குறள், 1261.

வீங்கிறை நெகிழ விம்மி யீங்கே
எறிகட் பேதுற லாய்கோ டிட்டுச்
சுவர்வாய் பற்றுநின் படர்... – குறுந்தொகை, 358.

## *பதிற்றுப்பத்து*

1. நின் மறங்கூறு குழாத்தர். – நான்காம் பத்து, 9.

*வீரர் தம் தலைவரது வீரத்தையே எடுத்தோதி மேம் படுத்தல் இயல்பு. இதனை,*

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்

*என்று வீரர் தம் தலைவனது சிறப்பைக் கூறும் குறளில் (771) காண்க.*

2. தொலையாக் கொள்கைச் சுற்றம். ஏழாம் பத்து, 10.

*தம்மால் சுற்றப்பட்ட தலைவன் செல்வம், வலிமை முதலியன அற்றபோதும் அவனை நீங்காது பழமை பாராட்டும் பண்பினர் ஆதலின் சுற்றத்தார் இங்ஙனம் சிறப்பிக்கப்பட்டனர். இக்கருத்தை,*

பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள

*என்னும் குறளில் (521) காண்க.*

3. நனவினான் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் னுயிர்.

...கனவினும் பிரியா வுறையுளொடு...
மீனொடு புரையுங் கற்பின்
வாணுதல் அரிவை... ஒன்பதாம் பத்து, 9..

*பரிபாடல்*

1. காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. குறள், 1251.

காமக் கணிச்சியாற் கையறவு வட்டித்துச்
சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்
– பரிபாடல், 10: 33–4.

2. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. – குறள், 223.

இல்லது நோக்கி இளிவரவு கூறாமு
னல்லது வெஃகி வினைசெய்வார். – பரிபாடல், 10: 87–88.

3. ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண். – குறள், 581.

புடைவரு சூழல் புலமாண் வழுதி
மடமயி லோரு மனையவ ரோடுங்
கடனறி காரியக் கண்ணவ ரோடுநின்
சூருறை குன்றிற் றடவரை யேறி. – பரிபாடல். 19: 20 – 23.

## கலித்தொகை

1. காமமும் நாணு முயிர்காவாத் தூங்குமென்
நோனா உடம்பி னகத்து. – குறள், 1163.

நலிதரும் காமமுங் கௌவையு மென்றிவ்
வலிதின் உயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழுமம் இரண்டு. – கலி. 142.

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. – குறள், 1131.

காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா. – கலி, 139.

2. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். – குறள், 549.

குடிபுறங் காத்தோம்புஞ் செங்கோலான் வியன்றானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கு அவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே. கலி. 130.

3. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து.– குறள், 1218.

தெற்றெனக் கண்ணுள்ளே தோன்ற இமையெடுத்துப்
பற்றுவென் என்றியான் விழிக்குங்கால் மற்றுமென்
நெஞ்சத்துள் ளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யு மறனில் லவன். – கலி. 144.

## அகநானூறு

மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. – குறள், 60.

கடவுட் கற்பொடு குடிக்குவிளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டி....... – அகநானூறு, 184.

2. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. – குறள், 1103.

செய்வுறு விளங்கிழைப் பொலிந்த தோள்சேர்பு
எய்திய கனைதுயில் ஏற்றொறுந் திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்
மிகுதிகண் டன்றோ இலனே. – அகநானூறு, 379.

3. செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. – குறள், 1151.

வருவீர் ஆகுதல் உரைமின் மன்னோ
..... ..... ..... ..... .....
நின்றாங்குப் பெயருங் கானம்
சென்றோர் மன்னென இருக்கிற் போர்க்கே.
– அகநானூறு, 387.

*புறநானூறு*

1. சிறப்பீனும் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு. – குறள், 31.

அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழு மில. – குறள், 39.

சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல. – புறம்.31.

2. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. – குறள், 110.

நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ. – புறம். 34.

3. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். – குறள், 528.

வரிசை யறிதலோ அரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் டோன்றல்
அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. – புறம். 121.

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். – குறள், 528.

வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த. –
– சிறுபாணாற்றுப்படை, 217–218.

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு. – குறள், 231.

உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ். – குறள், 232.

..... ..... ..... ..... விழுநிதி
ஈத லுள்ளமொ டிசைவேட் குவையே.
– மதுரைக்காஞ்சி, 204 – 205.

3. வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். – குறள், 85.

விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவதென் றாங்கு.
– குறிஞ்சிப் பாட்டு, 206–207.

இங்ஙனம் குறட்பாக்களையும், அவற்றின் தொடர்களை யும், கருத்துக்களையும் தம் பாக்களில் எடுத்தாண்டவர்கள் பல்வேறிடத்தவர், பல்வேறு காலத்தவர். ஆதலின், அவர்தம் காலத்திற்கும் முன்னரே திருக்குறள் அறப்பெருநூலாக நாட்டில் வழக்குப் பெற்றிருந்தது என்னும் உண்மை தெற்றென விளங்கும். இங்ஙனமே, சங்க காலத்திற்குப் பிற்பட்ட பெருங்கதை[21], இறையனார் களவியலுரை, சைவத் திருமுறைகள், ஆழ்வார்களின் அருட்பாடல்கள் முதலிய அனைத்திலும் குறட்பாக்களும் அவற்றின் தொடர்களும் கருத்துக்களும் தாராளமாகக் கையாளப்பட்டுள்ளன. இவையனைத்தையும் நோக்க, இன்றுள்ள சங்கநூற் பாடல்கள் முதல், பின்னூல்கள் அனைத்திற்குமே திருக்குறள் போற்றத்தக்க அறநூலாக

விளங்கி வந்தது என்பது எளிதிற் புலனாகும். ஆயினும், திரு வள்ளுவர் ஏறக்குறைய எந்த நூற்றாண்டைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்னும் கேள்வி எழுதல் இயல்பு. இதற்கு ஒரு வாறு விடைகாணல் நமது கடமையாகும்.

1. திருவள்ளுவர் காலம் சங்க காலத்தின் முற்பகுதியைச் சேர்ந்தது என்று கூறுவோரும், சங்க காலத்துக்குப் பிற்பட்ட காலத்தது என்று கூறுவோரும் இன்றுள்ள சங்கப் பாடல் களிற் பல ஏறத்தாழக் கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை என்பதை ஒப்புகின்றனர். இதை நோக்க, திருவள் ளுவர் காலம் இம் முதலிரண்டு நூற்றாண்டுகட்கும் முற்பட்ட தெனக் கருதலாம்.

2. ககந்தன் என்ற பழைய சோழ அரசன் காலத்திலேயே திருக்குறள் அறிவைப் பொது மக்களிடம் சதுக்கப்பூதம் எதிர் பார்த்தது என்று கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சாத்தனார் கூறுவதால்,[22] திருக்குறளின் பழமை நன்கு புலனா கும். ஆகவே, வரலாற்றின் துணை கொண்டு காலம் கூறமுடி யாத ககந்தனுக்கும் முற்பட்டது திருக்குறள் எனக் கருத இட முண்டாகிறது.

3. திருக்குறளைப் பாராட்டிச் சங்கப் புலவர்கள் பாடிய னவாகக் கருதப்படும் "திருவள்ளுவ மாலை ஆராய்ச்சிக் குரியது; அப்புலவர்கள் பாடிய தொகை நூற்பாக்களை ஆரா யின், அவர்கள் பல்வேறு காலத்தவர் என்பது அறியக்கிடக் கின்றது. எனவே, பல்வேறு காலத்தில் வாழ்ந்த புலவர் பாடிய பாக்கள் பிற்காலத்தில் புறநானூறு போன்ற தொகை நூல் களாகத் தொகுக்கப்பட்டாற்போல, திருக்குறளைப் பாராட் டிப் பல்வேறு காலங்களிற் பல புலவர் பாடிய பாக்களையும் பிற்காலத்தவர் திருவள்ளுவ மாலை என்னும் தலைப்பில் தொகுத்தனர் என்றே கருதுதல் பொருந்தும். அத்திருவள் ளுவ மாலையில் காணப்படும் பழம் புலவர்க்கு வள்ளுவர் சமகாலத்தவர் என்று கொள்ளுதலினும், அவர்க்கு முற்பட்ட வராகக் கொள்வதே சால்புடைத்தாம். புலவர் எவரும் தம்

காலத்தவரால் தலைநின்ற தேவ நாவலராய் மதிக்கப்படும் வழக்கம் யாண்டும் இல்லை. பெரும்பாலும் சமகாலத்தவ ரால் அவமதிப்பும், தாம் இயற்றிய நூலின் மெய்ப்பெரு வலியால் பிற்காலத்தவரால் மேம்பாடும் அடைவதே புலவ ருலகு இயல்பு. தெய்வப் பாவலராக வள்ளுவரைச் சங்கப் பழம் புலவர்கள் கூறுவதால், அவர்தமக்கு வள்ளுவர் நீண்ட காலத்துக்கு முற்பட்டவராகவும், அவர் அறநூலின் இறவாச் சிறப்பு அங்கீரிக்கப்படுவதற்குப் போதிய அவகாசம் அக்குற ளுக்கும் அதனடிகளைப் பாராட்டி எடுத்தாளும் சங்கப்பனு வல்களுக்கும் இடையே ஏற்பட்டிருத்தல் வேண்டும்.[23]

4. கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த கௌடில்யர் இயற்றிய பொருள் நூலிற் கண்ட சில செய்திகளும் திருக் குறள் பொருட்பால் பகுதிகள் சிலவும் கருத்தில் ஒன்றுபட்டி ருத்தலால், திருவள்ளுவர் கௌடில்யரது பொருள் நூலைப் படித்திருக்கலாம் என்று ஒருசார் ஆராய்ச்சியாளர் கருதுகின் றனர்; கருதித் திருவள்ளுவர் கி.மு. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டினர் எனக் கூறுவர்.[24] 'வடமொழிச் சொற்களையே யன்றி வடமொழிக் கருத்துக்களையும் வள்ளுவர் எடுத்தாண் டுள்ளார்' என்று கூறி, அதற்கு எடுத்துக்காட்டாகக் காமந் தகம், அர்த்த சாஸ்திரம், காம சூத்திரம் என்பவற்றில் ஒருசில கூற்றுக்களுக்கும் சிற்சில குறளுக்கும் ஏகதேச ஒற்றுமை உண் டென்று அவர்கள் காட்டுகிறார்கள்.

"கருத்துக்கள் ஒரு மொழிக்கும் சொந்தம் இல்லை; பல மொழியாளருக்கும் பொதுவுடைமை. ஒரு கருத்து இரு மொழி நூல்களில் வருவது இயல்பு. ஒரு நாட்டு இரு மொழி நூல்களில் ஒத்த கருத்து வருவது அருமையன்று. பிறநாட்டுப் பல மொழி நூல்களிலும் ஒத்த ஒரு கருத்து வருவதைக் காண லாமே! அது கொண்டு அவற்றிடைத் தொடர்புடைமை ஊகிக்க இயலாதே! இனி, அதற்குமேல் தமிழ்க் குறளின் காலத்தை ஒத்த கருத்துள்ள வடநூற்குப் பிறகென்று கருது தற்கு இடன் உண்டோ?

"முதலில் அந்நூல்களின் காலத்தை வரலாற்று முறையில் ஆன்ற சான்று கொண்டு அளந்து அறுதியிடல் வேண்டும். பிறகு அவற்றிடை இன்றியமையாத தொடர்பியைபு துணிய வேண்டும். இவை எதுவும் இல்லாமல், வடமொழி நூல்களில் வருவதெல்லாம் தமிழ்ப் பனுவல்களுக்கு மூல முதல் என்பது விதண்டையாகும்.[25]

கௌடில்யர் காஞ்சிபுரத்தினர் ஆதலால் தமிழிலும் பயிற்சி பெற்றவராதல் வேண்டும். அவர் தம் காலத்தில் தமிழகத்தில் பெரு வழக்காக இருந்த திருக்குறளை நன்கு கற்றிருக்கலாம்; பின்னர் வடநாட்டு நிலைக்கேற்பப் பொருள் நூல் எழுதும்போது, எந்நாட்டு அரசியலுக்கும் ஒத்தவையான திருக்குறட் கருத்துக்களைத் தம் நூலில் ஆங்காங்கே அமைத்துக் கொண்டிருக்கலாம். கௌல்டியர் தமிழகத்தவராதலால் இம் முடிபு கொள்வதே பொருத்தமாகும்" என்று கூறும் ஆராய்ச்சியாளரும் நம்மிடையே உளர். இது பொருந்துவதாயின், திருவள்ளுவர் கி.மு. 4ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கௌடில்யருக்கு முற்பட்டவர் எனக் கூறுதல் தவறு ஆகாது.

இங்ஙனம் அறிஞர் பலர் காலக்கணக்கில் வேறுபடினும், திருவள்ளுவர் கிறிஸ்துபெருமானுக்கு முற்பட்ட காலத்தவர் என்றே கருதுகின்றனர்[26] என்பது கவனிக்கத்தக்கது.[27]

## திருக்குறளுக்கு மூல நூல்கள்

'திருக்குறள் இன்றுள்ள சங்கப் பாக்கட்கு முற்பட்டதாயின், அதற்குரிய மூல நூல்கள் யாவை?' என்னும் கேள்வி அடுத்து எழுவதாகும். இதற்கு விடை காண்பதற்குமுன், இன்றுள்ள இலக்கண நூல்களும் காலத்தால் முற்பட்ட தொல்காப்பியத்தின் காலத்தை அறிதல் நன்றாகும். தொல்காப்பியம் ஏறத்தாழ 1600 சூத்திரங்களைக் கொண்டது. அதனில் தொல்காப்பியர் நூற்றுக்குப் பதினாறு இடங்கள் வீதம் (சுமார் 260 இடங்களில்) தமக்கு முன்னரும் சமகாலத்திலும் வாழ்ந்த பல திறப்பட்ட இலக்கண ஆசிரியர்களைக் குறித்துள்ளார் என்பது

அறியத்தகும். அறியவே, தொல்காப்பியம், பலர் நினைத்தல் போலத் தமிழ் இலக்கணத்தை விரித்துரைக்கும் நூலன்று, காலத்திற்கு ஏற்றாற் போலத் தொகுத்துக் கூறும் நூலே யாகும் என்பதை நன்குணரலாம்.[28] இத்தொல்காப்பியத்தின் காலத்தைப்பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் கீழ்வருமாறு கூறி யுள்ளனர்: "இலக்கண ஆசிரி யர்கள், தம் காலத்தனவும், முந் தியனவுமான செய்யுட்களைக் கொண்டு இலக்கணம் செய்தல் மரபு. பரணர், கபிலர், நக்கீரர் இவர்கட்குப் பிற்பட்டவர் தொல்காப்பியராயின் அவர்தம் பாடல்கட்கு முரணாக விதிகள் செய்திரார் அல்லவா? தொல்காப்பியச் சூத்திர விதி கட்கும் அப்புலவர்களின் செய்யுட்களில் காணப்படும் சொற் களுக்கும், சொற்றொடர்களுக்கும் சிறந்த இலக்கண மாறு பாடுகள் இருத்தல் ஒன்றே, தொல்காப்பியர் கடைச்சங்கப் புலவராய பரணர் முதலியோர்க்குப் பல நூற்றாண்டுகட்கு முற்பட்டவராவர்"[29], "இவர் செய்யுள் பற்றியும் வழக்குப் பற்றியும் கூறியுள்ள இலக்கணங்களில் பலவற்றிற்கு இலக் கியம் காட்டுதல் இப்போது வழங்கும் நூல்களைக் கொண்டு இயலாமை யானும், இவர் கூறிய இலக்கணங்களின் வேறாய்ச் சில சொற்களும் கொள்கைகளும் இந்நூல்களிற் காண்டலா னும், இவர் இந்நூற்கெல்லாம் முந்தியவர் என்று துணிதல் ஒரு தலையாயது",[30] "இவற்றால் தொல்காப்பியனார் தம் இலக்கணத்திற்குக் கருதிய இலக்கியங்கள் எத்துணையோ பல அவர்க்கு முன்னே இத்தமிழ் நாட்டில் வழங்கியன என்றே ஒருதலையாகத் துணியலாம்."[31]

இங்ஙனம் தொல்காப்பியத்திற்கு முன்னரும் சம காலத் திலும், இன்றுள்ள சங்கப்பாக்களுக்கு முன்னரே இலக்கண ஆசிரியர் பலர் இருந்தனர் என்பதையும் இலக்கிய நூல்கள் பல இருந்தன என்பதையும் அறிகின்றோம். எள்ளிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுதல் போல இலக்கியத்திலிருந்து எடுக்கப்படுவது இலக்கணம். ஆதலால் தொல்காப்பியத்திற்கு முற்பட்ட இலக்கண நூல்களுக்குக் கருவூலங்களாகப் பல இலக்கிய நூல்கள் இருந்திருத்தல் வேண்டும் என்பது தேற்றம்

அன்றோ? அவை பரந்துபட்ட காலத்தனவாதல் வேண்டும். அவற்றுட் சிலவே இறையனார் களவியலுரை முதலியவற்றில் பெயரளவில் சுட்டப்படும் நூல்கள். அப்பழைய இலக்கிய நூல்களே அறம், பொருள், இன்பம் பற்றிய பல குறிப்புகளைத் திருக்குறளுக்கு உதவியிருக்கலாம்.

மிகப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்து தமிழ்கத்தை ஆண்டு வந்த சேர சோழ பாண்டியருடைய ஆட்சி முறைகளைக் கொண்டும், சான்றோர் வரைந்த மேற்சொன்ன பண்டை இலக்கியங்களைக் கொண்டும் உலகத்தார் அனைவரும் மன முவந்து ஏற்றுக்கொள்ளும் முறையில் திருவள்ளுவர் தம் அற நூலைச் செய்து முடித்துள்ளார் என்று கொள்ளுதலே இது காறும் கண்ட உண்மைகளை நோக்கப் பொருத்தமாகக் காணப்படுகிறது.

அடிக்குறிப்புகள்

1. Pallavas of Kanchi by R. Gopalan, Appendix No. 7.
2. Ibid, p. 33.
3. Ibid, pp. 35-36.
4. Ibid, p. 36.
5. Studies in Pallava History by Fr. H. Heras, pp. 9-14, 22.
6. Successors of the Satavabhanas by D. Sircar, pp. 164-166, 247-248.
7. Pallavas of Kanchi, pp. 83-84 and 142.
8. Pandyan Kingdom by K.A.N. Sastry, p. 19.
9. V.R.R. Dikshitar's Int. to Silappadikaram by R.K.S., p. 13.
10. History of India by K.A.N. Sastry, Part I, p. 147.
11. History of Pali Literature by B.C. Law, Vol. II, pp. 384, 385 & 389.
12. History of India by K.A.N. Sastry, Part I. p. 148.
13. குறள், 55.

14. மணி, 22: 59-61.

15. Archaeological Survey of Ceylon, xiii, 1896, pp. 47-48.

16. Vedanta Commentator before Sankaracharya by P.V. Kane, Proceeding, Fifth Oriental Conference, Vol. II.

17. Manimekalai in its Historical Setting by Dr. S.K. Ayyangar, pp. 61-67.

18. Buddhistic Studies compiled by B.C. Law, pp. 11-17.

19. Manimekalai in its Historical Setting, pp. 79-95.

20. The Sangam Age by T.G. Aravamudan, pp. 56-57.

21. A History of India by C.S. Srinivasachari, p. 49.

22. Early History of India by V.A. Smith, p. 223.

23. குணாட்டியர், பைசாச மொழியில் செய்த பிருகத் கதையைக் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் இடையில் கங்க நாட்டு அரசனாக இருந்த துர்விநீதன் வடமொழியில் இயற்றினான்.

அதனைப் பின்பற்றியே கொங்கு வேளிர் என்பவர் தமிழில் பெருங்கதையைப் பாடியுள்ளார். எனவே, அந்நூலின் மேலெல்லை ஏறத்தாழக் கி.பி. 6 அல்லது 7ஆம் நூற்றாண்டு என்னலாம்.

24. சாத்தனார் தாம் அறிந்த குறட்டபாவைச் சதுக்கப் பூதத்தின் வாயிலாகத் தெரிவித்தாரே யன்றி வேறன்று எனக் கருதுவோரும் உளர். அங்ஙனம் கருதுதல் சாத்தனார் போன்ற பெருங்காவியப் புலவர்களுக்குக் காலவுணர்ச்சி இல்லை என்று கருதுதற்கு ஒப்பாகும்.

25. நாவலர் சோமசுந்தர பாரதியார்: "திருவள்ளுவர்", ப. 4.

26. Studies in Tamil Literature and History by V.R.R. Dikshitar, pp. 133, 150-176.

27. ச.சோ. பாரதியார்: "செந்தமிழ்", தொகுதி, 45. ப. 29-30; "திருவள்ளுவர்" ப. 11-14.

28. V.R.R. Dikshitar's Studies in Tamil Literature and History, pp. 133-135; ச. சோ. பாரதியார், "திருவள்ளுவர்", பக். 14. 'திருவள்ளுவர் கி.மு. இன்ன நூற்றாண்

டினர் என்று உறுதியாகக் கூறத்தக்க சான்றுகள் கிடைக்கும் வரை, 'அவர் கிறிஸ்து பெருமானுக்கு முற்பட்ட காலத்தவர்' என்று கூறுதலே இன்றுள்ள சான்றுகளை நோக்கப் பொருத்தமாகத் தெரிகிறது.

29. திருக்குறளில் காணப்படும் ஒரு சில சொற்களையும் வடமொழிச் சொற்களையும் தொடர்களையும் கொண்டும், குறளில் காணப்படும் கருத்துக்கள் சில வடமொழி நூல்களில் காணப்படுதல் கொண்டும், குறள் மேலே கூறப்பெற்ற சங்க காலத்திற்கும் பிந்தியது என்று ஒருசார் அறிஞர் கூறுவதனைத் தக்க சான்றுகள் காட்டிப் பேராசிரியர் சோமசுந்தர பாரதியார் அவர்களும், திருப்பதிக் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கூடத்துத் தமிழாராய்ச்சித்துறை அறிஞரான பழநியப்ப பிள்ளை அவர்களும் மறுத்து எழுதியுள்ள கட்டுரைகள் போதியன. ("செந்தமிழ்" vol. 45, pp. 21-30; திருக்குறள், பொருட்பால் Int. pp. 6-11; Journal of Sri Venkateswara Oriental Institute, 1949, "திருவள்ளுவர் கால ஆராய்ச்சிப் போக்கு," pp. 1-25). ஆதலால், ஈண்டுச் சொல்லாராய்ச்சியோ தொடர் ஆராய்ச்சியோ இடம் பெறவில்லை. இவற்றை யறிய விரும்புவோர், மேற்குறிக்கப்பெற்ற கட்டுரைகளைப் படித்துத் தெளிக.

30. "தமிழ்ப்பொழில்", துணர் 15, (1939) பக். 320-331. "மணிமலர்", (1941) ச. சோ. பாரதியார்: "தொல்காப்பியன்" பக். 22-33.

31. Paranar by V.V. Reddiar, pp. 172-173.

32. தமிழ் வரலாறு, ரா. இராகவையங்கார், ப. 208.

33. மேற்படி, ப. 273.

32

# குறள் காட்டும் இயற்கை

*1969*

**ச. தண்டபாணி தேசிகர்**

*மர இயற்கை*

*திருக்குறள் உலக மலரிலிருந்து ஊறியெழுந்த தேன் துளியாதலின் உலகத்தில் உள்ள எல்லா மணமும் இதனிடத்தில் இருப்பது இயல்பே. இதனிடத்து எல்லா இயற்கை நுணுக்கங்களும் எடுத்து விளக்கப் பெறுகின்றன. முறையே அவற்றை அகச் சான்றுகளுடன் தெரிதலே இப்பகுதியின் நோக்கமாகும்.*

*திருக்குறளில் அனிச்சம், மூங்கில்மரம், வற்றல்மரம், முள் மரம், நச்சுமரம், மருந்துமரம், பழமரம் முதலிய மரவகைகளும், தாமரை குவளை முதலிய நீர்ப் பூக்களும், நெருஞ்சி, பசும்புல் முதலிய படர் செடிகளும், கரும்பு, எள் முதலிய செடி வகைகளும், குன்றியாகிய கொடியும் பேசப் படுகின்றன.*

இவற்றுள் அறத்துப்பாலில் அனிச்சப்பூவின் இயற்கையை மோப்பக் குழையும் அனிச்சம்' என மொழிகின்றார். தொட்டாற் சுருங்கிபோல இதன் மலர் மோந்தவுடனே வாடிவிடும் என்பது இதனால் அறிவிக்கப்படுகிறது, பூ மிகவும் மென்மையானது. இது கருதியே அரசர்கள் தம் படுக்கையில் பரப்பிக் கொள்வது வழக்கம். வள்ளுவர் இதன் இயல்பை நன்கு வலியுறுத்தத் தலைவியின் மென்மையைக் கருதுகின்ற காலத்து, 'நின்னினும் மென்னீரள்' என்றும் மாதரடிக்கு நெருஞ்சிப் பழம் போல உறுத்துவது என்றும் கூறுகிறார். காம்பு கிள்ளாமல் அனிச்சப் பூவை அணிந்ததால் தலைவியின் இடை ஒடிந்தது என்று, இதன் மென்மை மூலமாக இடையின் மென்மை விளக்கப் பெறுதல் காண்க. அனிச்சம் கோட்டுப் பூவா? நீர்ப் பூவா? என்பதே பலர்க்கு ஐயம். இதனைப் பற்றி மன்னார்குடி இலக்கண ஆசிரியர் சோம சுந்தரம் பிள்ளை அவர்கள் இது கோட்டுப் பூவே என்றும் குரவப்புலம் புகைவண்டி நிலையத்தின் பக்கத்தில் உள்ள ஐயனார் கோயிலில் இருக்கிறதென்றும் கூறினார்கள். தோற்றம் இலை கிளை இவற்றால் இது, சிறுசண்பகம் போல இருக்கும்; மாசி பங்குனியில் பூக்கும்; பூ சரமாகத்தொங்கும்; மாலையில் மலரும்; விடியலில் பொடியாக உதிர்ந்து விடும்; மலர், வெண் கடம்பு போல மணம் உள்ளது; சிவந்த கோடுகள் படர்ந்த வெள்ளைப்பூ; காயின் மேலோடு வலியது; என்பன, அவர்கள் எழுத்தால் அறியக் கிடப்பன.

### மூங்கில் மரம்

இது இலக்கிய உலகில் மாதர்களது தோளுக்கு உவமையாக எடுத்துக் காட்டப்படுவது. அங்ஙனமே இந்நூலிலும் 'அமையார் தோள்', 'வேய்த்தோள்' என்று எடுத்தாளப்பட்டுள்ளது. அமை என்பது மூங்கிலின் மறு பெயராயினும் அதனுள் ஒருசாதி என்று அறியப்படுகிறது. 'அமையொடு வேய்கலாம் வெற்ப' என்று பழமொழி நானூறு பேசுகிறது.

அதன் பழைய உரை, அமை என்பது முள்ளில்லா மூங்கில் என்று அறிவிக்கிறது.

### முள்மரம்

இது ஒரு மரப்பெயரன்று. முள்ளுள்ள மரங்கள் எல்லா வற்றையுமே அறிவிக்கும். பகையை முளைக்கும் போதே களைய வேண்டும் என்பதற்குப் பிறிது மொழிதலாக 'இளை தாக முண்மரம் கொல்க' என்கின்றார். முற்றின் வயிரங் கொண்டு, கீறியும் குத்தியும் கையை வருத்தும் என்று அதன் இயற்கை அறிவிக்கப்படுகிறது.

இவ்வாறே மருந்து மரங்கள், பழமரங்கள், நச்சு மரங்கள் முதலியனவும் அறிவிக்கப்படுகின்றன. மருந்து மரத்தைப் பற்றித் 'தப்பாமரம்' என்று அதன் இலை, தளிர், பட்டை, வேர் முதலிய எல்லாம் மருந்தாகப் பயன்படுவதை அறிவிக்கி றார். பழமரங்களும் ஊர் நடுவில் பழுத்து விட்டால் எல் லார்க்கும் எஞ்ஞான்றும் பயன்படும் என்று அறிவிக்கப்படு கின்றது. 'அதிலும் கனிந்த மரத்தில் கல்லெறி சில்லெறி' என் றார் போல அம்மரம் வருந்தியும் அனைவர்க்கும் பயன்படும் அருமைப்பாடு இதில் அடங்கிக் கிடக்கின்றது.

இங்ஙனமே நச்சுமரத்தைப் பற்றி நன்றியில் செல்வம் என்னும் அதிகாரத்தில், பலர்க்குப் பயன்படாதவன் செல்வம் நடுவூருள் நச்சுமரம் பழுத்தது போல யாவர்க்கும் பயன்படாது என்கின்றார்.

குவளைப் பூக்கள் மேல்நோக்கி மலர்தலையும் வெள்ளத் தனைய மலர்நீட்டம் என்பதால் நீர்ப்பூக்கள் அனைத்துமே நீரளவாக வளர்ந்து மலர்தலையும் குறிப்பிடுகின்றார். நெருஞ்சி முள்ளை நெருஞ்சிப் பழம் என்றல் மரபு என்பது விளக்கப் படுகிறது. நசுக்கிப் பயன் கொள்ளும் கரும்பு, கீழ்மக்கட்கு உவமிக்கபடுகிறது. சிறப்பாக 'உரம் ஒருவர்க்கு' என்ற குறளில் 'உள்ள வெறுக்கையில்லார் மரம்' என்று, மரத்திற்கு உள்ள

மின்மை உணர்த்தப்படுகின்றது. ஊறுணர்ச்சி அதற்கு உண்டா யினும் அதனான் விளையும் நன்மை தீமைகளை உள்ளி ஒதுங்கி நடக்கும் உள்ளம், மரங்களுக்கு இல்லை என்பது வெளிப் படை. அதனாலேயே உள்ளமில்லா மக்களுக்கு மரம் ஒப்பா கிறது. மற்றும் மரத்தின் உறுப்புக்களாகிய கொம்பு, மலர், இணர், காய், தளிர், என்பவைகளும் குறிக்கப்படுகின்றன.

## விலங்கு இயற்கை

விலங்குகளில் யானை, குதிரை, பசு, காளை, ஆடு, நரி, புலி முதலியன குறிக்கப்படுகின்றன. அவற்றுள் யானையே திருக்குறளில் பெரும்பாலான இடங்களில் பேசப்படுகின்றது. அதனைப் பிடிப்பதற்காகக் காடுகளில் படுகுழிவெட்டி அதன் மேல் மெல்லிய குச்சிகளைப் பரப்பி மண்ணிட்டு மூடி, வாழை முதலிய உணவுப் பொருள்களை நட்டு வைப்பார்கள். அதன் பக்கத்தில் பழக்கப்பட்ட யானையொன்றை உலாவ விடுவார்கள். அதனைக் கண்ட காட்டு யானை, நம்மினம் வாழையை உண்கிறதே என்றெண்ணித் தானும் உண்ண விரைந்து வந்து படுகுழியில் விழுந்து விடும். அதன் பிறகு இதனைக் கொண்டு அதனைப் பழக்கிப் படுகுழியை இடித்துக் கரையேற்றிப் பிடிப்பார்கள். அதனைத் திருக்குறள், 'யானை யால் யானையாத் தற்று' என்று அறிவிக்கிறது. இந்த யானை களுக்குள் காட்டிலே கடுமையான போர் வந்து விடும். அப் போது யாரும் அந்த இடத்தில் அணுக முடியாது. பெரிய மலைகளின்மேல் இருந்து தான் பார்க்க வேண்டுமாம். யானை பெரிய வலியுள்ள விலங்காயினும் சேற்றில் அகப்பட்டுக் கொள்ளுமாயின், நரி அதனைப் பிடுங்கித் தின்று விடும். புலி தாக்கினால் யானை அஞ்சும். வேடர்கள் யானையை அம்பா லும், வேலாலும் வேட்டையாடுவர். அம்பு தைத்தாலும் சோராது; கடமையில் தவறாது; பெருமையை நிலை நாட்டும்.

நன்கு பயிற்றப்பட்ட குதிரை போரில் சளைக்காது என்பதும், பயிற்றப் பெறாத குதிரையே கடும்போரில் தலை

வனை வீழ்த்திவிட்டு ஓடும் என்பதும் குதிரையின் இயல்பு களாக உணர்த்தப் பெறுகின்றன.

மான் வகைகளில் ஒன்றாகிய கவரி மானுக்குப் பின் பக்கத்தில் மயிர் நிறைந்திருக்கும். அதில் ஒன்று எங்காவது மாட்டி வீழினும் அது தன் உயிரையே விட்டுவிடும். தகர் சண்டையிடும்போது, முட்டுவதற்காகப் பின்வாங்கி முன்னேறிச் சென்று தாக்கும் தன்மையது. நரி, தானாகக் கொல்லும் வலியின்மையால் சேறு முதலியவற்றில் அகப்பட்டுக் கொண்ட யானை முதலியவற்றைப் பிடுங்கித்தின் னும் தந்திரமுள்ளது.

பசு வீட்டில் வளரும் விலங்கு. இதற்கு நீர், உணவு முதலியன கொடுக்காமலிருத்தல் கூடாது என்ற இன்றியமையாமையும், காளை வண்டியிழுக்கப் பயன்பெறுவதும் குறிக்கப் பெறுகின்றன. ஊர்வனவற்றுள் பாம்பு மிகக் கொடியது. அதற்கு என்ன நன்மை செய்தாலும் அதனுடன் இருக்கவே முடியாது. அது எலியை விரும்பித் தின்னும். புழு என்பில்லாதது, வெயிலைக் கண்டால் வாடியிறக்கும் என்பன விளக்கப் பெறுகின்றன.

நீர் வாழ்வனவற்றுள் ஆமை, முதலை, மீன் முதலியனவும் குறிக்கப் பெறுகின்றன. அவற்றுள், ஏதாவது இடையூறு நேரின் தன் கால்களையும் தலையையும் ஓட்டுக்குள் அடக்கிக் கொண்டு தன்னைக் காத்துக் கொள்ளும் இயல்புடையது ஆமை என்பதும், உணவு விருப்பால் தூண்டிற் புழுவை விழுங்கி மீன்கள் உயிரைவிடும் என்பதும் பேசப்படுகின்றன.

பறவைகளில் கோட்டான், காகம், கொக்கு முதலியன குறிக்கப் பெறுகின்றன. கோட்டானுக்கும் காகத்திற்கும் பிறவிப்பகை. கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. காகம் அதனைப் பகலில் வென்றுவிடும். இரவில் கோட்டான் காகத்தை வெல்லும். காகத்தினிடம் உள்ள ஐந்து அருமையான குணங்களில் ஒன்றான, சிறிது உணவு கிடைப்

பினும் தன் இனத்தாரை அழைத்துப் பகுத்துக் கொடுத்து உண்டலைத் திருவள்ளுவர் பாராட்டுகிறார். கொக்கு, நல்ல வாய்ப்பான உணவு கிடைக்கும் வரை ஒற்றைக் காலில் நின்று கொண்டிருக்கும். கிடைத்தால் ஒரே குத்தாகக் குத்தித் தின்று விடும். பறவைக் குஞ்சுகள் இறகு முளைக்கிற வரையில் கூட்டில் இருக்கும்; பறக்கக் கூடிய நிலைவந்தால் பறந்து விடும் என்று பறவைகளின் பொதுக் குணமும் பேசப்பெற்றுள்ளது. பீலி, அன்னத்தின் தூவி முதலியனவும் அறிவிக்கப் பெறுகின்றன.

## மக்கள் இயற்கை

திருவள்ளுவர் மக்களை மக்கள், மாக்கள் என இருவகையாகப் பிரித்தார். தொல்காப்பியரும் 'மக்கள் தாமே ஆறறிவுயிரே', 'மாவும் மாக்களும் ஐயறி வினவே' என்பர். மக்களோடு மாக்களுக்கு உள்ள வேறுபாடு. அறிவை ஆராய்ச்சியால் வளர்த்து, நன்மை தீமைகளைப் பகுத்துப் பயன்படுத்தும் முறையாலேயே அமைகின்றது. இயற்கையறிவும் கல்வியறிவும் இருந்தாலும் அவற்றிற்கு ஒளிதந்து விளக்குவது கேள்வி ஞானமே என்பர். 'செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள், அவியினும் வாழினும் என்' என்று மாக்கள் இயல்பை விளக்குகிறார். இதனோடு 'கொலை வினையராகிய மாக்கள்' என்பதனையும் நினைவு கூர்ந்தால் மக்களியற்கை, கொலையும் புலையும் இன்றி எல்லா உயிர்களிடத்தும் இரக்க குணமுடையராய் இருத்தல் என்பதும், அஃது இல்லாதார் பிற உயிர்களின் துன்பங்கண்டு வருந்தாத - அதனை மனங்கொள்ளவும் செய்யாத விலங்கியற்கை உடையார் என்பதும், விலங்கு மறுப்பிறப்பு உண்டு; புண்ணிய பாவம் உண்டு என்று கருதும் மனவன்மையில்லாதது என் பதும் விளக்கப் பெறுகின்றன.

மக்களுக்கு உள்ள இயற்கையறிவை விளக்கம் செய்வது கல்வியறிவு. அஃது இல்லாதார் மக்களாகார்; மாக்களாவர்

என்று கூற வந்த திருவள்ளுவர். மாக்கள் என்பது மக்கட் பண்பு இழந்து உருவத்தால் மக்களாகியவர்களையே உணர்த் தும் என்பதை உள்ளத்துக்கொண்டு, அந்த நிலையையும் அவர்களுக்கு அளிக்கலாகாது என்ற கருணையால் 'விலங் கனையர்' என்று விதந்தார். எல்லாரையும் சிந்திக்கச் செய்வது ஊக்கமுடைமை; அதனையுடையவரே மக்கள். இதனை விளக்குவது 'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃதிலார், மரம் மக்களாதலே வேறு' என்ற குறள். மக்களுக்கென்று தனித்த பண்பாடுகள் உண்டு. அவை இன்ன என்றும் இத் துணைய என்றும் வரையறுக்க முடியாதபடி, எல்லார் இயல் புகளையும் அறிந்துகொண்டு, அவற்றோடு ஒத்து ஒழுகுகிற வன்மையாக விளங்குவன; நல்ல குணங்களெல்லாம் பண்பு அல்லது இயற்கை என்ற பொதுச்சொல்லுக்கு இலக்காவன. வள்ளுவர், அன்புடைமையும் குடிப்பிறப்புமே பண்புடைமை என்று உலகம் உரைப்பதாகத் தாம் உரைக்கின்றார். இதனை ஊன்றி நோக்கும்போது அன்பு புதிதாகக் கொள்ளும் பொரு ளென்றால், உயிர்க்குணமாய் அனாதியே அமையாது. குடிப் பிறத்தல் முற்பிறவியிற் செய்த புண்ணிய பாவங்கட்கு ஈடாக நலமுற்ற குடியிலே தோன்றுதல். இதுவும் வேண்டுமென்றே எய்தப்படுவது அன்று, இயற்கையிலே அமைவது. பொது வாகக் கூறினால் பலர் வெறுக்கத்தக்க குணங்களை அடையா மல், நடுநெறி பிறழாமல், கண்டொன்று சொல்லாமல், எல் லார்க்கும் இன்பம் பயப்பதே மக்கட்பண்பு என்பது திருவள் ளுவர் கூறும் வரையறை. இந்தப் பண்பு இல்லாதவர் கயவர் என அழைக்கப்படுவார்கள். 'மக்களே போல்வர் கயவர்' என்கிறது இந்நூல்.

மக்கள், பால்வேறுபாட்டால் ஆண், பெண், பேடி என முத்திறப்படுவர். ஆண்மக்கள் தம்மையும் தம் இந்திரியங் களையும் பிறரையும் ஆளும் வன்மையினாலேயே இப்பெயர் பெறுவர். எல்லாவற்றிலும், தன்னையும் தன் பொறிகளையும்

ஆளுதலே சிறந்த ஆணியற்கை என்பார், 'பிறன் மனை நோக்காத பேராண்மை' என்றார். இவ்வாறே 'பேராண்மை என்பதறுகண்' என்று அஞ்சாமையை ஆண் இயற்கையாக வழங்குவர். புகழுக்காக எதனையும் செய்வது ஆண்மையாகாது; பழியொடு படாதவற்றைச் செய்வதே ஆண்மை என்பது 'பேராண்மை வேண்டுபவர் சீரினும் சீரல்ல செய்யார்' என்பதால் வலியுறும். இவ்விலக்கணங்களால் ஆண் இயற்கையானது, இந்திரிய வயப்பட்டுத் தனக்கு உரியள் அல்லாதாரை நோக்காமையும், பழிப்படுவ செய்யாமையும், அஞ்சாமையுமே என்பது தெளியப்பெறும். ஆண்மைக்கு அழகு பெண் விரும்ப நடத்தலேயன்றிப் பெண்ணுக்கு ஏவல் செய்வது அன்று என்பது திருவள்ளுவர் முடிவு.

விருப்பால் வாழவைப்பவள் பெண், பெண்ணுக்குக் கற்பு அணி, பெண்ணின் கடமை தன்னைக் காப்பாற்றிக் கொள்வதும், கணவனைப் பாதுகாப்பதும், அனைவரும் புகழ நடப்பதுமாம். 'இனம் போன்று இனமல்லார் கேண்மை மகளிர், மனம் போல வேறுபடும்' என்று குறளில், மகளிர் மன நிலையைத் தெள்ளிதின் அறிவிக்கிறார். இதனை 'ஓராயிர மனத்தவாகும்' என்ற சிந்தாமணிச் செய்யுளாலும் தெளியலாம், தற்காத்துக் கொள்ளும் கற்புடை மகளிர்க்கு 'ஒருமை மகளிர்' எனத் திருவள்ளுவர் சிறப்புப் பெயர் தந்து அழைப்பர். இவர்களை ஒருமை மகளிர் என்றமையான் இனம் பற்றி இருமை மகளிரும் இருத்தல் வேண்டும். அவர்களை இருமனப் பெண்டிர் என்பர்.

மகளிரின் நல்லியல்புகளை விளக்க வந்த ஆசிரியர் அவற்றை வற்புறுத்த, இருமை மகளிராகிய வரைவின் மகளிரைப் பற்றியும் சொல்கின்றார். அவர்கள் நோக்கம் முழுவதும் பொருளிலேயே. அவர்களுக்கு மன ஒருமைப்பாடு இல்லை. அன்பு இல்லை. அவர்களின் வாழ்வே வஞ்சனை, அவர்களுக்கு வள்ளுவர் இடும் பெயர்கள் மாய மகளிர், பொது நலத்தார்,

பொருட் பெண்டிர், பண்பில் மகளிர் என்பன. இங்ஙனம் ஒருமை மகளிர் இயல்புகள், பணி பூண்டு கணவனைக் காத்து, அளவறிந்து வாழ்தல் என்பதும், இருமனப் பெண்டிர் இயல்பு, பொருளுக்காகப் பொருளல்லாதாரிடத்தும் புன்னலம்விற்று அவர்களையும் நரகத்தில் அழுத்தி நலிவு செய்தல் என்பதும் விளக்கப்படுகின்றன. பெண்ணியல்பாவன - நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என் பன, இவையில்லாதாள் பெண்ணா காள் என்பதும் வற்புறுத் தப்படுகிறது.

ஆண்மை குறைந்து பெண்மை மிகுந்திருப்பவள் பேடி. பேடிக்கு வீரமும் ஆண்மையும் இரா. இந்த நிலைமையைப் ‘பேடிகை வாளாண்மை போலக் கெடும்’ என்றும், ‘பகைய கத்துப் பேடிகை ஒள்வாள்’ என்றும் திருக்குறள் தெரிவிக் கிறது.

மக்களுடைய பொதுஇயல்பைத் தனித்தனியே விதந் தெடுத்துக் கூறியன போக, எல்லாவற்றையும் தொகுத்து, கடமையறிந்து இயற்றலும், நற்குணம் உடைமையும், அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையாகிய இவைகளை உடைமையும் வேண்டும் என்கின்றார். மேலும் கொல்லாமை, புறங்கூறாமை, பொறையுடைமை, இன்னாசெய்யாமை, நிலை யிற் கலங்காமை முதலியனவும் இன்றியமையாதன எனக் கூறுகின்றார். இவற்றைத் தனித் தனியே அவ்வதிகாரங்களில் பரக்கக் காணலாம்.

### பழக்க வழக்கங்கள்

மக்களுடைய நாகரிகம், பழக்க வழக்கங்களால் அறியப் படுவது. குடித்தனம் செய்பவர்களுக்குக் குடும்பப் பொருள் தட்டுப்படுவது வழக்கம். அவற்றை மகளிர் ஓர் அளவு குறித்து வாங்கித் திரும்பவும் கொடுத்து விடுவார்கள். இதற்குக் ‘குறி யெதிர்ப்பை’ என அருமையான பெயர் சூட்டுகிறார் திருவள் ளுவர். இது எளிய குடும்பத்து வாழ்க்கை. அவ்வாறே வீட்டில்

லாத எளியவர்கள் ஒண்டுகுடி இருப்பது வழக்கம் உண்டு. அதிலும் வீட்டுக்காரனோடு இருந்து விட்டால் வேறு வினையே வேண்டாம். அதிலும் அவர் பொல்லாத் துணை வர்களை உடையனாயின் ஒண்டுகுடித்தனக்காரன் பாடு திண்டாட்டந்தான். வேறு வீடு கிடைக்காவிட்டால் சொல்ல வேண்டியதில்லை. அந்த நிலையைப் 'புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள், துச்சில் இருந்த உயிர்க்கு' என்ற குறளால் சித்தரிக்கிறார்.

நெடுந்தூரத்தில் உள்ள காதலர்களில் ஒருவர் நினைத் தால், நினைக்கப்பட்டவருக்குத் தும்மல் வருவது வழக்கமாம். தலைவன் தலைவியுடன் இருந்த காலத்துத் தும்மல் வர அதனைக் கண்டு தலைவி 'என்னைக் காட்டிலும் உம்மைக் காதலிப்பவர் யார்? அவர் நினைப்பதனால் அல்லவா உமக்குத் தும்மல் வருகின்றது' எனச் சொல்லி அழுதாளாம். இதனைக் கண்ட தலைவன், மற்றொருகால் அவள் முன் தும்மல் வர, மூக்கைக் கசக்கி அதனை அடக்கிக் கொண்டானாம்; அதற் கும் அவள் புலந்தாள்; என்று இரு குறள்களால் தும்மல் உண் டாவதன் அடிப்படைக் காரணத்தையும், தலைவி ஊடுதலை யும் அறிவதன் அடிப்படைக் காரணத்தையும், தலைவி ஊடு தலையும் அறிவிக்கின்றார். இந்தத் தும்மல், முன்குறிப்பு இன் றியே தானாகத்தோன்றுவது என்பதனைக் 'குறிப்பின்றித் தும்மல்போல் தோன்றிவிடும்' என்ற பகுதி அறிவிக்கிறது. காதலர் தும்மினால் காதல் மிகுதியினால் நீடு வாழ்க' என வாழ்த்துதல் மரபு. இக்காலத்தும் தாய்மார்கள் குழந்தைகள் தும்மினால் ஒரு தும்மலை நூறாக வாழ்த்துவார்கள்.

'இருட்டறையில் ஏதில் பிணம்தழீஇ யற்று' என்பதனால் ஒரு நாட்டில், மணமாகாத பெண்களை எரித்தல் கூடாது என்னும் மரபு பற்றிக் கூலிக்காக மணந்து கொண்ட கணவன் அவளைத் தழுவுவது வழக்கம் என்ற உண்மையைப் 'பொருட் பெண்டிர்' என்ற திருக்குறளுக்குக் கல்குளம் குப்புசாமி முதலி

யார், செந்தமிழ்த் தொகுதியில் எழுதிய குறிப்புத் தெரிவிக்கின்றது. அதன் உண்மை, எம்போலியர்க்கு அறியப்படாத ஒன்று. நினைவுறுத்தத் தக்கவைகளைச் சுவரில் கோடிட்டு வைத்து அதனை விரலால் தொட்டு எண்ணி வரையறுத்தல் மகளிருடைய இயல்பு. அதனை 'நாளொற்றித் தேய்ந்த விரல்' என்கின்றது: குறள்.

## தொழில்கள்

இந்நூல் உழவும் வாணிகமுமாகிய இரு தொழில்களையே விரித்துச் சொல்கின்றது. அவற்றுள்ளும் உழவுக்கே தனிமதிப்புத் தந்திருக்கிறது. பொருள்களை உற்பத்தி செய்வது உழவு. அந்தப் பொருள்களை எங்கும் எடுத்துச்சென்று அனைவர்க்கும் பகிர்ந்தளித்துப் பயனுறச் செய்வது வாணிகம். உழவிற்கு இன்றியமையாத கருவி ஏர், நீர், எரு, பகடு என்பன. இவற்றைப் பற்றி வள்ளுவர் 'ஏரின் உழாஅர் உழவர் புயல் என்னும், வாரி வளம்குன்றிக் கால்' என்ற குறளால் ஏருக்கு நீர் இன்றியமையாதது என்பதை எடுத்துக்காட்டுகிறார். அல்லாமலும் 'மடுத்தவா யெல்லாம் பகடன்னான்' என்றதால் எத்துணைச்சேற்று நிலத்தில் உழுதாலும் சளைக்காமல் செல்வது காளை எனப் பேசப்படுகிறது. உழவில் சேற்றுழவைக் காட்டிலும் புழுதி உழவை வள்ளுவர் போற்றுகின்றார். புழுதியை உழுத பிறகு நிலத்தை நன்றாகக் காய வைக்க வேண்டுமாம். ஒருபலப் புழுதி காற்பலப் புழுதியாகக் காய வைக்கவேண்டும் என்றால் மண்ணை எவ்வளவு அணுக்களாகப் பிரிக்க வேண்டும். உழவு, இறுகிய மண்ணை உடைத்து விடுவதற்கு. காய்ச்சல் உடைந்த மண் அணுக்களில் சூரிய வெப்பமும் பிராணவாயுவும் ஊடுருவிச் செல்வதற்கு. மேல் மண் கீழ்மண்ணாகப் புரண்டு கலந்திருக்குமானால் தழையும் வண்டலும் படிந்து மக்கிய எருமண் எங்கும் கலந்து பயிருக்கு நல்லுரமாகும். அதனால் எரு இட வேண்டாம்.

ஏரைக் காட்டிலும் எரு இடுதலும், பிறகு களை பிடுங்குதலும், நீர் பாய்ச்சுதலும், நீர் பூமி சாரத்தோடு பக்கங்களில்

வழிந்தோடாதவாறு பாதுகாத்தலும் மிக இன்றியமையாதன. உழவன் நாள் தவறாமல் நிலத்தைச் சுற்றிப் பார்த்து வர வேண்டும். அப்படி இல்லாவிட்டால் நிலம் ஊடிவிடும். உழவு, உலகிற்கு ஆணி போல்வது. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றையோரெல்லாம் அடிமைகள். உழவர் கைம் மடங்கினால் துறவிகளுக்கும் சோறில்லை. ஆதலால் தொழில் களில் உயர்ந்தது உழவே. எருவும் நீரும் பயிருக்கு இன்றியமை யாதன என்பதைப் பின்வரும் 'ஊரவர் கவ்வை' என்ற குறள் அறிவிக்கிறது. வளரும் பயிர் மேலும் நீராலேயே வளரும் என்பதனை 'வளர்வதன் பாத்தியுள் நீர்சொரிந்தற்று' என்பத னாலும், யாப்பினுள் அட்டிய நீர்' என்பதனாலும் அறியலாம்.

## வாணிகம்

வாணிகத்திற்கு முதல் இன்றியமையாதது. இதனை முத லிலார்க்கு ஊதியம் இல்லை என்பது விளக்குகிறது. அளவு கடந்த ஊதியத்திற்கு ஆசைப்பட்டு முதலையே இழக்கும் படியாக வாணிகம் செய்தல் ஆகாது. பிறர் பொருளையும் தமது பொருள்போல் எண்ணிக் கொள்முதல் செய்யும்போது மத்தளம் மரக்காலாகவும் விற்று முதல் செய்யும்போது உழக்கு மரக்காலாகவும் ஆக்காமல், நேர்மையான இலாபத் தோடு வாணிகம் செய்யவேண்டும். முதல் என்பதால் கைம் முதலாகிய பொன்னையும் மணியையும் கொடுத்துக் கொண் டும் விற்றும் வந்தமை குறிக்கலாம்.

இவையன்றி அமைச்சு, ஒற்று, தூது, பரத்தைமை என்ற தொழில்களும் குறிக்கப்பெறுகின்றன.

ஆட்சிக்கு அமைச்சு மிக இன்றியமையாதது. அது அரசி னுடைய பொருளாக்கத்திற்குக் காரணமாதலேயன்றி நாட்டு நலத்திற்கும் வேண்டப்படுவது. உயிருக்குப் பயந்தோ பொருள் விருப்பாலோ பொறியுணர்ச்சியாலோ நாட்டிற்கும் அரசுக் கும் பழுது எண்ணுதல் ஆகாது. இத்தகைய அமைச்சை, அரசன் வேண்டிய பொருளைக் கொடுத்து அயர்ச்சி இன்றி ஐயப்படாது நடாத்துதல் வேண்டும்.

அமைச்சுப் போலவே தூதும் அரசுக்கு இன்றியமை யாதது. அதுவும் தன்னரசனுக்குக் கேடுவராமல் பகையரசன் நாட்டுள் புகுந்து அவன் பண்புகள் யாவற்றையும் அறிந்து வந்து சொல்லும் பொறுப்பு வாய்ந்த தொழிலாம். அவனுக் குத் தூய்மையும், சொல்வன்மையும், அன்பும், அறிவும், ஆராய்ந்த கல்வியும் இருத்தல்வேண்டும். தன் உயிர்க்கே அழிவு வந்தாலும் அரசுக்கு அழிவுவராமல் பாதுகாப்பது அவன் கடமை. அங்ஙனமே ஒற்றும்.

## மக்கள் நாகரிகம்

நாகரிகம் வேறு; நாகரீகம் வேறு. திருவள்ளுவர் பெயக் கண்டும் நஞ்சுண்டு அமைவதாகிய கண்ணோட்டம் நாகரி கம் என்பர். நாகரீகம், மக்கள் சமுதாய வாழ்வில் வளர்ந்த - ஆடை, அணி முதலியவற்றைத் தரித்தலால் விளைந்த சீர் திருத்தம். அவைகளைப் பற்றியும் திருவள்ளுவர் கூறாமல் இல்லை. 'கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம்', 'அணியல்ல மற்றுப் பிற', 'மாறாநீர் வையக் கணி' என்பன, அணியின் இன்றியமையாமையை விளக்குவன. நல்ல மக்களை நல்ல கலமாக உருவகித்தார். அதனாலும் பெண்களுக்கே அணிகள் இன்றியமையாதன என்பது காட்டப் பெறுகின்றது. 'மங்கலம் என்ப மனைமாட்சி எனக் கற்புடை மகளிர்க்குத் தாலியின் இன்றியமையாமையைத் தெரிவிக்கிறார். தாலி அடிமைச் சின்னம்; மகளிரை அடிமைப்படுத்த அமைத்த அடையாளம் என்று இக்காலத்துச் சிலர் கூறுவர். பழந்தமிழ் நூல்களில் மறக்குடிக் காளையர் தாம் கொன்ற புலிப் பல்லைத்தாலி யாகக் கட்டி மகிழ்ந்தனர் என்று சிலம்பு பேசுகின்றது. அப் பகுதி "புலிப்பல் தாலி நிரை பூட்டி" என்பது. தாலி என்பதற்குத் தொங்குதலையுடையது என்பது பொருள். தான் ஒரு வீர னுக்கு வாழ்க்கைப்பட்டவள் என்று தன் கணவனது வெற்றிச் சின்னமாகவே மகளிர் அணிந்து மகிழ்ந்தனர். ஆதலால் இது சிறந்த மங்கலப் பொருளாக மதிக்கப் பெற்றது. மங்கலமென்றே வழங்குவதாயிற்று. அதனாலேயே வாழ்க்கைத் துணைநலம்

என்று கற்புடை இல்லாளது நலத்தைப்பேசவந்த திருவள்ளுவர், இறுதியாக 'மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன் மக்கட்பேறு' என்றார். நல்ல பிள்ளைகளை நல்லணியாகக் கண்ட திருவள்ளுவர். மனையாளது மாட்சியையும் அதனோடு ஒருங்குவைத்து எண்ணத்தக்க அணியாகவே கருதியிருக்க வேண்டும் என்பது தெளிவு. ஆதலால் மனையாளது மாட்சியைத் தாலியாக உருவகித்தார். தாலி அணிந்தவளுக்கு மற்றைய அணிகளும் இன்றியமையாதன ஆதலின் நன்மக்களை வளையும் தோடும் கழுத்தணியும் சீதேவியுமாகக் கண்டார் என்பதே சிறந்த பொருளாதல் காண்க. மங்கலம் என்பது தாலியை உணர்த்தும் என்பதைக் கம்பரும் உருக்காட்டுப் படலத்தில் "மற்றை நல்லணிகள் காண்நின் மங்கலங் காத்த மன்னோ" என்று கூறுகிறார். இளங்கோவடிகளும் 'மறுவின் மங்கல அணியே அன்றியும், பிறிதணியணியப் பெற்றதை எவன்கொல்' என்று கூறியுள்ளார்.

ஆகவே, திருவள்ளுவர் என்றும் பிரியாத நலம்பயக்கும் குணங்கட்குத் தாலியை ஒப்பிட்டதிலிருந்து மகளிர்க்கு அணிக்கெல்லாம் அணியாக இருப்பது தாலியே என்பது கருத்தாதல் தெளியலாம். வீரசுவர்க்கம் விரும்பும் வீரர்கள் கழலணிதல் அழகுக்கே என்பதால், வீரர்கள் கழலணிதலை விளக்கியவாறு.

வேந்தர்கள் தமது ஆட்சியின் நேர்மைக்கு அறிகுறியாகச் செங்கோலை ஏந்துவர் என்பது பல இடங்களிற் குறிக்கப் பெறுகின்றது. உடையினது இன்றியமையாமையை 'உடுக்கை இழந்தவன் கைபோல' என்ற உவமையால் விளக்குவர்.

## மக்களின் பாகுபாடு

மக்கள் அனைவரும் பிறப்பால் ஒப்பர்; தொழிலால் மாறுபடுவர் என்பது குறளின் பொதுக்கருத்து. ஆகவே தொழிலால் மக்களுள் பாகுபாடுகள் ஏற்பட்டன, இந்நூலில் பார்ப்பார். அந்தணர், உழவர், அரசர், ஆயர் முதலிய பெயர்கள்

குறிக்கப்பெறுகின்றன. இவற்றுள் அந்தணர் என்ற சொல்லாட்சி மக்களைக் குறிப்பதாக இரண்டிடங்களில் வந்துள்ளன. முதலாவது அந்தணர் இயல்பு இதுவென இலக்கணம் வரையறுக்கின்றது. 'அந்தணர் என்போர் அறவோர்' என இச்சொல் காமவெகுளி மயக்கங்களை முற்றத்துறந்த முனிவர்களைக் குறிப்பதாகும். பின் பாதியில் அதன் காரணத்தை விளக்குகிறார் 'எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகலான்' என. இவ்வுயிர் எம்போன்ற மக்களுயிர் மாட்டுயிர் என வேறுபாடு கருதாது எல்லா உயிர்களிடத்தும் ஒத்த கருணையைக் காட்டி ஒழுகுதலால் அந்தணர் எனப்பட்டனர் என்று தெரிகிறது. இவ்வந்தணர்கள் தற்காப்பிற்காகவாவது தந்நலத்தைச் சிறிதும் பேணாது உலக உயிர்களையே கருணையால் காப்பவர்களாதலின் அவர்களையும் அவர்களால் வரையறுக்கப் பெற்ற அறநூல்களையும் பாதுகாக்க மன்னன் வேண்டும். இதனை 'அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல்' என்கிறார். இரண்டிடங்களிலுமே அந்தணர் முனிபுங்கவர்களே என்பதும் அவர்களது சிறப்பியல்பு தண்ணளி உடையராதல் என்பதும் தெரிவிக்கப்பெற்றன. நச்சினார்க்கினியர் 'அந்தத்தை அணவுவார் அந்தணர் என்றாயிற்று' என்பர். அங்ஙனமாயின் அந்தம் என்ற மகர ஈற்று வடசொல் மகரம் கெட்டு அந்த அணர் என்பன தமிழ் விதிப்படி புணருமாயின் அந்தவணர் என்றும், வட மொழிவிதி பெறுமாயின் அந்தாணர் என்றும் புணர வேண்டும். ஈண்டு வருமொழி அகரம் விகாரத்தால் தொக்கு அந்தணர் என்றாயிற்று என அமைதி எண்ணத்தகும். எல்லார் கருத்தினும் அந்தணர் ஞானானுபூதி யுடையவர்களையே உணர்த்தி நிற்றல் தெளிவு. இச்சொல், பிறர் யாருக்கும் இல்லாத அழகிய தட்பத்தினை யுடையவராதல் பற்றியே கடவுளுக்கும் பெயராயிற்று. கடவுளை 'அறவாழி யந்தணன்' என்றது காண்க.

பார்ப்பான் என்பது சாதிப் பெயராகவே காட்டப் பெறுகின்றது. அவர்களுக்கு உரிய கடமைகள் வேதம் ஓதுதலும்,

ஒழுக்கம் உடையராதலும். வேதத்தை மறந்தாலும் ஓதிக் கொள்ளலாம்; ஒழுக்கந் தவறின் பிறப்பானாம் உரிமை இல்லை. ஆகவே பார்ப்பான், அரசன், வணிகன் முதலியன பிறப்பினால் வந்தன என்பதும் அவை ஒழுக்கம் தவற இழிவு படும் என்பதும் தெளிவுறுத்தப்படுகின்றன.

ஆயர் குழலூதும் இயல்பினர். உழவரே உலகத்திற்கு அச்சாணியாக இருப்பவர்கள். மன்னனின் கடமைகள் பல அரசியலில் அறிவிக்கப் பெறுகின்றன. அவனுடைய தொழில் பற்றியும் அரசன், வேந்தன், மாநில மன்னன் என்ற பெயர்கள் வழங்குகின்றன.

# 33

# திருவள்ளுவர் – தமிழகத்தின் முதல் புரட்சியாளர்

*1970*

**சி. இலக்குவனார்**

உலக மக்கள் உயர்ந்த நெறியில் வாழ்ந்து இன்பம் பெறுவதற்காக வழிவகைகளை வகுத்துக் கூறியவர் திருவள்ளுவர். அவர் தோன்றி இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. அவருடைய ஈராயிரம் ஆண்டு நிறைவு விழா இன்று தமிழகமெங்கும் கொண்டாடப்பட்டு வருகின்றது. தமிழ் மக்கள் அவரை என்றும் போற்றிப் புகழக் கடமைப்பட்டுள்ளனர். வள்ளுவன்தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் பெற்றுள்ளோம் அன்றோ!

கி.மு. ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தொல்காப்பியர் பிற மொழித் தாக்குதலால் தமிழ் அழிந்து போவதைத்தடுத்து நிறுத்தினார். திருவள்ளுவர், அயல் மக்கள் செல்வாக்கால் தமிழ்ப் பண்பாடு அழிந்து போவதைத் தடுத்து நிறுத்தினார்.

தமிழ் மக்களின் பழைய பண்பாட்டில் காணப்பட்ட நல் வாழ்வுக்குப் பொருந்தாதவைகளையும் களைந்தெறிய அறிவுரை கூறியுள்ளார்.

புரட்சி என்பது மக்கள் வாழ்வில் காணப்படும் பொருந்தாத மூட நம்பிக்கைக் கொள்கைகளை எதிர்த்துப்போர் முழக்கம் செய்து மாற்றி அமைக்க முயலுவதே ஆகும். பழமையைப் புரட்டிவிட்டு அகற்றிவிட்டு - புதுமையைப் புகுத்துவதுதான் புரட்சி. புரட்சி என்றால் பூசலும் போரும், கொள்ளையும், கொலையும் தோன்றுமென்று கருதலாம். மேல்நாடுகளில் அவ்வாறுதான் புரட்சிகள் நடந்துள்ளன. ஆனால் திருவள்ளுவர் செய்துள்ளது எண்ணப் புரட்சியாகும். எண்ணமே செயலின் அடிப்படையாகும். அதனால் செயலின் தாய் எண்ணம் என்பர் மேனாட்டார்.

எண்ணம் திண்ணியதாக உருவானால் செயல்தானே தோன்றிவிடும். எண்ணம் தோன்றுமிடம் மனம். அம்மனம் தூய்மையாக இருக்க வேண்டுமென்று வள்ளுவர் கூறுவதே ஒரு புரட்சியாகும். மனம் தூய்மையாக இருத்தலே அறம் என்கின்றார். மனம் தூய்மையற்று என்ன நற்செயல்கள் செய்தாலும் அவை பயன்படா. வெறும் ஆர்ப்பரவ வேட்கைக்கு உரியனவாகிவிடும். மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்; ஆகுலநீர பிற என்பதை நோக்குமின்.

எவ்வகையினும் சாதியாலோ நிறத்தாலோ பொருளாலோ, வேறுபாடு அற்று வாழ்ந்த தமிழ் மக்களிடையே சாதி வேறுபாடுகள் புகத்தொடங்கின. அச்சாதி வேறுபாடுகள் இன்றும் அகன்றுவிடவில்லை. மக்களை அலைக்கழித்து வருகின்றன. வள்ளுவர் அன்றே பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்றார்.

தமிழ் நாட்டில் இரக்கத்திற் சிறந்து அருள் உளம் கொண்டு மக்களுக்கும் பிற உயிர்களுக்கும் தொண்டாற்றுகின்றவர்களை அந்தணர் என்று அழைத்து வந்தனர். அவர்களே மக்களின் தலைவர்களாகவும் மதிக்கப்பட்டனர். வெளி

நாட்டிலிருந்து வந்த சிலர் தம்மைப் பிறப்பால் உயர்ந்த வராகக் கூறிக்கொண்டு அந்தணர் என்றும், ஐயர் என்றும் அழைத்துக்கொண்டனர். ஆனால் செயலில் வன்கண்மை பூண்டு தம் கூட்டத்தினர் அல்லாதவரை ஒடுக்கியும் இழித் தும் விலங்கினும் கீழாக நடத்தி வந்தனர். அதனால் வள்ளுவர் அந்தணர் யார் என்று விளக்கம் கொடுத்துப் போலி அந்தணர் களைப் புறக்கணிக்க வழிகோலினார். 'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக லான்' என்று முழக்கம் விடுத்துள்ளமை காண்க.

பிறப்பால் உயர்வு தாழ்வு பேசுதல் பேதமை. ஒழுக்கத் தால் உயர்ந்தோரே நல்ல குடியில் பிறந்தோர் ஆவார். ஒழுக்கக் கேடர்களே இழிந்த பிறப்பினர் ஆவார்கள். ஆதலின் ஒழுக் கம் உடைமை குடிமை இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும் என்று இடித்துரைத்தார். ஒழுக்கத்தால் உயர்வு படுத்தும் நெறி வெற்றி பெற்றிருக்கு மேல், இன்று நாட்டில் பூசல்கள் தோன்றுமா? ஒழுக்கம் உடையாரை ஒதுக்கிப் புறக் கணிப்ப தனால் அன்றோ இன்று எங்கு நோக்கினும் பூசற் களமாகக் காணப்படுகின்றது. மக்களாட்சி வெற்றிபெற வேண்டுமென் றால் ஒழுக்கமுடையோர் உயர்ந்தோராகக் கருதப்பட்டு உயர் வாகப் போற்றப்படுதல் வேண்டும்.

மக்களில் கல்விப்பேறு அடைதற்குரியவர் சிலரே என் றனர். சில நாடுகளில் படிப்பவர் வேறு உழைப்பவர் வேறு என்று வகைப்படுத்தினர். உயர்ந்தோரே படித்தல் வேண்டும். உழைப்பவர் படித்தல் வேண்டாம் என்றும் விதியாக்கினார். ஆனால் வள்ளுவர் கூறியது என்ன? கல்வி அனைவர்க்கும் பொது; கண்கள் அனைவர்க்கும் இயல்பாக உரியன; அது போலக் கல்வியும் எல்லார்க்கும் உரியதாகும். கண்களோடு பிறத்தல் போலக் கல்வியோடு வளர்தல் வேண்டும். கண்ணில் லாது வாழ முடியாதது போல் கல்வியில்லாதும் வாழ முடி யாது. கல்வி பெறாதிருத்தல் பெருங்குற்றம். பெற முடியாது

தடுத்தல் அதனினும் பெருங்குற்றம். கல்வியைப் பறிப்பது கண்ணைப் பறிப்பது போலாகும் என்று கல்வி, கல்லாமை என்னும் இயல்களில் தெளிவுறக் கூறியுள்ளார். எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழு முயிர்க்கு என்று கூறுவதில் ஒரு புரட்சியையும் செய்துள் ளார். கல்வி என்றால் வெறும் காப்பியங்களை மட்டுமோ இலக்கண நூல்களை மட்டுமோ கற்றல் அன்று. அறிவியலை (எண்)யும் கலை (எழுத்து)களையும் ஒருவர் கற்றால் தான் முழுமைக் கல்வியாகும் என்கிறார். இரு பகுதிகளையும் கற்பவர் தாம் மக்களாக வாழ்வர். பிறர் மாக்களாகிவிடுவர் என முன்னறிவிப்புக் கொடுத்துள்ளார். இன்று கல்லூரிகளில் வள்ளுவர் கருத்துக்கேற்பக் கலையும் (Arts) அறிவியலும் (Science ) சேர்த்துக் கற்பிக்கத் திட்டம் வைத்திருப்பினும் செம்மையான முறையில் செயல்படவில்லை.

ஒருவனுடைய ஏற்றத்தாழ்வு அவன் போன பிறவியில் செய்துள்ள புண்ணிய பாவங்களுக்கேற்பவே உண்டாகும். சிலர் பல்லக்கில் (அக்காலத்தில் மகிழ் உந்து இல்லை) ஏறிச் செல்லுகின்றனர். என்றால் அவர்கள் போன பிறவியில் புண் ணியம் செய்தவர்கள் ஆவார்கள்; அதனைச் சுமந்து செல் பவர்கள் போன பிறவியில் பாவம் செய்தவர்கள் ஆவார்கள் என்று கூறி வந்தனர். இக்கூற்று மிகமிகக் கொடியது; உண் மைக்கு மாறுபட்டது. இன்று காண்கின்றோம். அறஞ்சாரா நெறியில் அளவு கடந்து பொருளீட்டியவர் அழகார்ந்தவியன் உந்தில் ஆர்ப்பரவுடன் செல்கின்றார். அறநெறி கோடாது வாழ்கின்றவர் அடக்கமாக நடக்கின்றார். வியன் உந்தில் வீறு தோன்றச் செல்லுகின்றவர் புண்ணியம் செய்தவர் என்றும், கால் நோவ நடந்து செல்லுகின்றவர் கடும் பாவம் செய்தவர் என்றும் கழறுதல் பொருந்துமா? பொருந்தாது அன்றோ? ஆகவே திருவள்ளுவர் அறத்தாறு இதுவென வேண்டா; சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை எனச் சினந்து உரைத்தார். இதன் உண்மைப் பொருள்: பல்லக்கில் ஏறியிருப்

பவரையும் அதனைச் சுமந்து செல்பவரையும் காட்டி இது தான் அறவழியென்று கூறற்க என்பதாகும். பிற்காலத்தார் அவ்வுண்மைப் பொருளை மறைத்து வேறுவகையாகக் கூறி விட்டனர். ஏனெனில் உண்மைப் பொருளை அறிந்த மாந்தர் பல்லக்கில் செல்லுபவரை வாளாவிட்டுவிட மாட்டார் என்று அஞ்சியே ஆகும். உண்மைப் பொருளுணரின் பல்லக்கில் செல்லுபவரைக் கீழே இறக்கிப் பல்லக்கைச் சுக்கு நூறாக உடைத்துத் தள்ளி விடுவரன்றோ.

கொடுத்தல் நன்றுதான். ஆனால் ஆளறிந்து கொடுக்க வேண்டும். சிலருக்குக் கொடுத்தால்தான் வீடுபேறு கிட்டும். வேறு சிலருக்குக் கொடுத்தால் நரகம்தான் கிட்டும் என்றனர். கொடுத்தலால் வீடு அடைதல் போன்றே பெறுதலாலும் வீடு அடையலாம் என்ற கொள்கை பரப்பப்பட்டு வந்தது. ஆனால் பழந்தமிழர் கொள்கையோ இதனின்றும் வேறுபட்டது. ஈயென இரத்தல் இழிந்தது; ஈயேன் என்றல் அதனினும் இழிந்ததாகும்; கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தது; கொள் ளேன் என்றல் அதனினும் உயர்ந்ததாகும். இவ்வாறு கூறி ஒழுகி வந்தனர் பழந்தமிழர். திருவள்ளுவர் இத்தமிழ்க் கொள் கையில் ஊறி முதிர்ந்தவர். ஆகவே அவர் கூறினார் நல்லாறு எனினும் கொளல் தீது; மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று. பிறரிடம் ஒன்றைப் பெறுவது சிறந்த வாழ்வு நெறி யாகும் (யாசகம் புருட இலட்சணம்) என்று சிலர் கூறினா லும் பிறரிடம் ஒன்றைக் கொள்ளுதல் கொடுங்குற்றமே. கொடுப்பதனால் வீடு கிட்டாது எனத் தெரிந்தாலும் கொடுத் தலே நல்ல செயலாகும்.

வீடு (மோட்சம்) கிட்டாது என்றாலும் கொடு; வீடு கிட்டுமென்றாலும் வாங்காதே என்பது எத்தகைய புரட்சிக் கொள்கையாகும் என்பதை எண்ணுமின்!

வேள்விகளைச் செய்து ஆற்றலைப் பெறலாம்- அடைதற் கரியனவற்றை அடையலாம் என்ற கூற்றில் மயங்கி வேள்வியை

அறியாத் தமிழ் நாட்டில் வேள்வி செய்தலைப் பெருங் கடனாகச் செய்தனர் சிலர். தமிழரசர்களில் சிலர் எளிதில் எதையும் பெறலாம் என்று எண்ணி வேள்விகளைச் செய் வதற்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்தனர். பல வேள்விகளைச் செய்த அரசர்க்குப் பல்வேள்வி செய்தோன் என்ற பட்டமும் கொடுக்கப்பட்டது. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பதே சான்றாகும்.

அவ்வேள்விகளில் ஆடு மாடு குதிரைகளைக் கொன்ற னர். மக்கள் நலன் அடைய மாக்களைக் கொல்லுதல் அற மாகுமா? பேரருளாளர் வள்ளுவர் தம் எதிர்ப்புக் குரலை எழுப்பினார். அரச சீற்றத்திற்கு ஆளாவோமே என்று அஞ்சி னார் இலர். அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர்செகுத்து உண்ணாமை நன்று என ஓங்கி முழங்கினார். வேள்விகளைச் செய்யாதே; வீணில் உயிரைக் கொல்லாதே என்பது வியத்தகு புரட்சி அன்றோ? வேந்தரை எதிர்ப்பது அக்காலத்தில் சாகும் தண்டனைக்கு ஆட்படுத்துமே!

மாந்தர்களில் பலர் மனத்தின்கண் மாசுகொண்டு புறத்தில் மாண்புடையார் போன்று நடித்துப் பொய்க் கோலம் பூண்டு வாழ்ந்து வருகின்றனர். வள்ளுவர் காலத்திலும் வாழ்ந்தனர். இவர்கள் பொதுமக்களை ஏமாற்றித் தம் வலைக்குள் சிக்க வைத்துத் தாம் எண்ணியபடி ஆட்டி வைத்தனர். அவர்களால் பூசனையும் பொருளும் பூவையரும் பெற்றனர். அணிந்திருந்த வேடத்திற்கும் துணிந்திடும் செயலுக்கும் பொருத்தமின்றி ஒழுகி வந்தனர். வஞ்ச மனத்தினராய்க் கரவொழுக்கம் பூண்டு வாழ்வதைக் கண்டு அவர்களின் ஐம்பூதங்களும் கூட அகத்தே நகா நிற்கும். அக்காலத் தில் துறவிகட்கு மக்களிடையே நல்ல செல்வாக்கு இருந்தது. துறவிகள் கடவுளைவிட உயர்ந்தவரா கக் கருதப்பட்டனர். உண்மைத் துறவிகள் மக்களுக்காக உயிர் வாழ்ந்ததனால் அத்தகைய மதிப்பை அவர்கள் பெற முடிந் தது. எங்கு மதிப்பும் மாண்பும் கிட்டுகின்றனவோ அங்குக்

கயவர்கள் புகுவர் அன்றோ? ஆதலின் துறவிகளின் கூட்டத்திலும் கயவர்கள் புகுந்தனர். துறவிகள் போல் உருக்கொண்டனர். அக்காலத் துறவிகளில் சிலர் தலைமயிரை நீளமாக வளர்த்துச் சடையாகப் பின்னி, முடியாகக் கொண்டிருந்தனர். சிலர் தலை மயிரைப் போக்கி மொட்டையாக இருந்தனர். உண்மைத் துறவிகள் தலைமயிரால் அழகு செய்து கொள்ள விரும்பிலர். தலைமயிரைப் பேணாது விடின் சடையாய்ப் பின்னலுறுவது இயல்பு. இதனைப் பொருட்படுத்தாது வாழ்ந்தனர் சிலர். சடைமுடித் தொல்லையைத் தாங்க இயலாதவர்கள் தலைமயிரைக் களைந்து கொண்டனர். இவர்களே மொட்டையாகக் காட்சி அளித்தவர்கள்.

கரந்துறை மாந்தர்கள் - துறவிகள் இவ்வாறு இருப்பதனால் தான் மதிப்புப் பெறுகின்றனர் என்று கருதினர். அவர்களில் சிலர் தலைமயிரைச் சடையாக வளர்த்தனர். சிலர் மழித்துக்கொண்டு மொட்டையாயினர். துறவிகள் போல் தோற்றம் கொண்டு நடித்ததனால் பொதுமக்கள் மயங்கி அவர்களைப் பூசித்துப் பொன்னும் பொருளும் அளித்துப் போற்றினர். அவர்களோ போலித் துறவிகள். தவம் மறைந்து அல்லவை செய்தனர். பெற்றம் புலித்தோல் போர்த்திப் பசும் பயிரை மேய்வதுபோல் அஞ்சத்தகும் வடிவம் பெற்றுத் துறவி போல் காட்சி அளித்து நெஞ்சில் துறவாது படிற்றொழுக்கம் கொண்டிருந்தனர். திருவள்ளுவர் அவர்கள் வாழும் முறையைக் கண்டு வெறுப்புற்றார். இத்துறவிகளை, அவர்களுடைய செல்வாக்கினைக் கண்டு அஞ்சாது எதிர்க்கத் தொடங்கினார். மன்னரினும் வலிமை வாய்ந்த அவர்களைக் கண்டு வள்ளுவர் அஞ்சினார் இலர். உலகம் - உயர்ந்தோர் - பழிக்கும் குற்றங்களை நீக்கி வாழ்ந் தால் அஃதே உயர்ந்தோர் ஆக்கும்; சடையை வளர்த்தலும் மொட்டையடித்தலும் எற்றுக்கு? என்று அவர்களை நோக்கி அறைகூவல் விடுத்தார் மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்துவிடின்.

மகளிரின் உயர்வுக்காகப் போராட்டம் தொடங்கிய முதல் புரட்சியாளரும் வள்ளுவரே. பெண்களின் சமநிலைக் காக அவர் கூறியுள்ள கருத்துக்கள் இன்றும் என்றும் பொன் போலப் போற்றத்தக்கன. மனைவியை வாழ்க்கைத் துணை என முதல் முதலாக அழைத்தவரும் அவரே. கணவனும் மனைவியும் நண்பர் போன்று வாழ்தல் வேண்டும் என்று கட்டுரைத்தவரும் அவரே. ஆண்மகனுடைய ஒழுக்கத்திற்குப் பெண்மகளை எடுத்துக்காட்டாகக் கூறியவரும் இப்பெரி யாரே. ஒருமை மகளிரேபோல் பெருமையும் தன்மைத்தான் கொண்டொழுகின் உண்டு என்பதை நோக்குக. இல்லவள் மாண்பானால் இல்லது என் என்று எல்லாம் மனைவியால் தான் என மகளிரை உயர்த்திக் கூறினார். இவ்வாறு மகளிரை உயர்வுபடுத்தும் வள்ளுவர் மகளிரைச் சிறுமைப்படுத்தினால் வாளாயிருப்பாரா?

சிலர் தம் மனைவியின்பால் ஐயங்கொண்டு தாம் இல் லாத காலத்தில் கெட்டுவிடுவாள் என்று அஞ்சி, தம் இனிய நல்வாழ்வுத் துணையைக் காவலுக்கு ஆட்படுத்தினர். வீட்டி னுள் பூட்டி வைத்தனர். மகளிர் விரும்பின் எக்காவலையும் கடந்து எதனையும் செய்யும் ஆற்றலுடையவர். இதனை அறி யாது ஏன் அவர்களைச் சிறுமைப்படுத்திச் சிறையிட வேண் டும்? அவர்கள் உள்ளத்தை அறிந்து உள்ளம் ஒன்றுபட வாழ முற்படின் அவர்களே தம்மைக் காத்துக் கொள்வர். ஆதலின் திருவள்ளுவர் ஆடவரை நோக்கிச் சிறைகாக்கும் காப்பு என்ன செய்யும்? மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை என்று கழறினார்.

மக்கட் பேறு எற்றுக்கு என்ற வினாவுக்கு விடையாகப் பரிமேலழகர் கூறுகின்றார்: புதல்வரைப் பெறுதல், அஃதா வது இரு பிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படும் கடன் மூன்றனுள், முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும் தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லாது இறுக்கப்படாமையின், அக்கடன்

இறுத்தற்பொருட்டு நன்மக்களைப் பெறுதல். ஆகவே மக்களின் கடன் தென்புலத்தார்க்குக் கடன் செலுத்துதல் ஆகும் என்று நம்பி வந்தனர் என்று தெரிகின்றது. தென் புலத்தார் என்பவர் பிதிரர் ஆவார். படைப்புக்காலத்து அயனால் படைக்கப்பட்டது கடவுட்சாதி. அவர்க்கிடம் தென்திசையாதலின் தென்புலத்தார் என்றார். இவ்வாறு கூறுபவர் பரிமேலழகர். பிதிரர் என்பார் இறந்து போன முன்னோர் அல்லர் என்பது அவர் கருத்து. ஆனால் இன்று பெற்றோர் இறந்துபோனால் அவரை நினைத்து அவர்தாம் பிதிரர் என்று கருதி அவர்தம் மக்கள் அவர் இறந்த நாளில் புரோகிதரை அழைத்துப் பொன்னும் பொருளும் கொடுக்கின்றனர். இதனை, திதி, திவசம், சிரார்த்தம் என்றெல்லாம் அழைப்பர். மக்கள் தம் தந்தைக்குச் செய்யும் கடன் இதுதான் என்று இன்றும் பலர் கருதுகின்றனர். ஆனால் வள்ளுவரோ இதனை ஏற்றுக்கொண்டார் இலர். வெளிப்படையாகவே மறுத்துள்ளார். மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னும் சொல் என்று முழங்கினார். மகன் தந்தைக்குச் செய்யும் கடனாவது எல்லா வகையாலும் சிறந்து விளங்கும் இவனைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தானோ? என்று உலகத்தார் சொல்லும் சொல்லை உண்டாக்குதல் ஆகும் என்பது இக்காலத்திற்கும் எக்காலத்திற்கும் பொருந்துமன்றோ?

இவ்வாறு பல புரட்சிகளைத் திருவள்ளுவர் ஆற்றியுள்ளார். ஊன் உண்ணுதலை எதிர்த்தார். கள் உண்ணுதலைக் கடிந்தார். கவறாடுதலை இகழ்ந்தார். இவர் செய்துள்ள புரட்சிகளை விரிப்பின் பெருகும். இவரைத் தமிழகத்தின் - ஏன் உலகத்தின் முதற்புரட்சியாளர் என்று வாயார வாழ்த்தி நெஞ்சார நினைந்து அவர் வழிமுறைகளில் வாழ்ந்து அவருக்கு நன்றி செலுத்துவோமாக!

இப்புரட்சிக் கருத்துக்களைத் தம் இனிய பாக்களின் மூலம் மக்களிடையே பரப்பிப் புரட்சிக் கவிஞர் எனப் பெயர்

பெற்றார் பாரதிதாசனார். பெரியார் அவர்கள் இருபதாம் நூற்றாண்டுத் திருவள்ளுவரெனக் கருதுமாறு மன்பதைப் புரட்சியைத் தொடங்கிப் பல போராட்டங்களை நிகழ்த்தி னார். பேரறிஞர் அண்ணா அவர்கள் வள்ளுவர் நெறியைப் பின்பற்றிப் பெரியார் அவர்களின் தலைமைத் தளபதியாக இருந்து தம் நாவன்மையால் புரட்சிக் கருத்துக்களைப் பரப்பி ஆட்சியரியணையில் அமர்ந்து நல்ல புரட்சித் திட்டங் களைச் சட்டம் மூலம் கொண்டு வந்தார். வள்ளுவர் முதல் அண்ணா வரை வையகம் தழைக்கத் தோன்றிய தமிழகப் புரட்சியாளர்களை வாழ்த்தி வணங்குவோம்!

# 34

# திருக்குறள் மணி விளக்கவுரை

1971

கா. அப்பாத்துரை

## நடுவுநிலைமையின் சால்பு

நடுவு நிலைமையின் சால்பு என்னும் இவ்வதிகாரம் அறத்துப் பாலின் பாயிரங் கடந்த நான்காம் அதிகாரமாகவும், அறத்துப்பால் பொதுவறவியலின் பாயிரத்தில் அறத்துப் பாற்கூறான கடைசி அதிகாரமாகவும் கொள்ளத்தக்கது ஆகும். இருவழிகளிலுமே அது பொருத்தமாக அமைந்துள்ளது. ஏனெனில் திருக்குறட்பாயிரத்தின் கடைசி அதிகாரமாகிய அறன் வலியுறுத்தலின் விரிவாகவே அது தொடர்ந்த இல் வாழ்க்கைச் சிறப்பு, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு, அன்புடைமையின் சால்பு ஆகிய அறத்துப்பாற் பாயிர அதிகாரங்கள் அமைந்தது போல, அவ்வறத்துப்பாற் பாயிரத்தின் கடைசி அதிகாரமாகிய அன்புடைமையின் சால்பின் விரிவாகவே பொதுவறவியலின் பாயிர அதிகாரங்களாகிய விருந்

தோம்பல் மாட்சி, இனியவை கூறற் சிறப்பு, நன்றி நலம், நடுவு நிலைமையின் சால்பு ஆகியவை அமைந்துள்ளன. அதே சமயம் திருக்குறட் பாயிரத்தில் அறன் வலியுறுத்தல் அதிகாரம், அறத் துப்பாற் பாயிரத்தில் அன்புடைமையின் சால்பு அதிகாரம் ஆகியவற்றைத் தொடர்ந்து அறத்துப்பாற் பொதுவறவியற் பாயிரக்கூறாகவும் இவ்வதிகாரம் திகழ்கின்றது. இம்மூன்று அதிகாரங்களும் விளக்கும் பண்புகளின் மரபிலும் நாம் இத் தொடர்பினைக் காணலாம். ஏனெனில் வாழ்வின் வளர்ச்சிக் குரிய உயிர்நிலைக் கூறாக அறம் விளங்குதல் போல, அறத் தின் வளர்ச்சிக்குரிய உயிர் நிலைக் கூறாக அன்புடைமையின் சால்பு அமைகிறது. இதனை ஒப்ப அறத்தின் வளர்ச்சிக்குரிய உயிர்நிலைக்கூறு அன்புடைமையின் சால்பேயாதல் போல, அறம், அன்புடைமையின் சால்பு ஆகிய இரண்டின் வளர்ச் சிக்குரிய திட்டநிலைக் கூறாகவே நடுவு நிலைமையின் சால்பு அமைவுறுகின்றது.

திருவள்ளுவரது முப்பாற் கோட்பாட்டில் மட்டுமன்றி முப்பால் கடந்த நாற்பாற் கோட்பாட்டிலும் அறமே அடிப் படைப் பண்பு. அம்முறையிலேயே அறம் என்பது பொது வறம், சிறப்பறம் என இருதளங்களாகக் கருதப்படுகிறது. முப் பால் வாழ்வில் பொருள் வாழ்வையும் இன்பவாழ்வையும் ஆக்கும் திட்டமாகிய அறம், பொதுவறம், இன்ப வாழ்வின் அகமும், முப்பால் வாழ்வின் அகமுமாகிய வீட்டுப் பாலை ஆக்கும் திட்டமாகிய அறமே சிறப்பறம். இந்த இரண்டையும் ஒரே அறமாகக் கொண்ட பண்பு, திருவள்ளுவர் அறக்கோட் பாட்டுக்குரிய தனிச்சிறப்பாகும். இந்த இரண்டறத்தையும் ஒரே தொடர்ச்சியுருவாக[1] ஆக்கிய பண்புகள் அன்புடைமை யின் சால்பும், நடுவுநிலைமையின் சால்புமேயாகும். ஏனெனில் பொதுவறம் என்பது அன்புடைமையின் சால்புடன் நடுவு நிலைமையின் சால்பும், நடுநிலைமையின் சால்புடன் அன்பு டைமையின் சால்பும் பின்னிப் பிணைந்த ஒருவளர்திறத்திட்ட மேயாகும். சிறப்பறத்தில் அன்புடைமையின் மலர்ச்சியாக அருளுடைமையும், நடுநிலைமையின் மலர்ச்சியாக அந்தண்மை

அதாவது வேண்டுதல் வேண்டாமையிலாப் பண்பும் இடம் பெறுகின்றன. இவ்விரண்டு மலர்ச்சிப் பண்புகளின் பின்னாகவே, பொதுவறத்தின் மலர்ச்சியாகிய சிறப்பறம் அமைகின்றது.

**நடுவு நிலைமையின் சால்பு என்பது வேண்டுதல் வேண்டாமை இன்மையாகிய இறைப்பண்பின் சிறுமணிப் படிவமேயாகும்**

இனம், சமுதாயம் ஆகிய இரண்டும் அளாவப் படர்ந்து பரந்து செல்லும் பண்பு அன்பு. அதன் அருளுடைமை வடிவில் அது புற எல்லையாகிய இனஎல்லையிலிருந்து தொடங்கிச் சமுதாய, குடும்ப, தனி உயிர்எல்லைகள் நோக்கி உள்முகமாகச் செறிவுற்று வளர்வது. அதன் பிறப்பிடம், திட்டமூலம் தனிஉயிரன்று; இன முதலாகிய கடவுட்பண்பே. வேண்டுதல் வேண்டாமை இன்மையாகிய இறைப்பண்புக் கூறே அதன் படர்ச்சிக்குரிய பற்றுக் கோடாகிய கொழுகொம்பு ஆகும். இதற்கு நேர்மாறானது, திசைமாறானது அன்பின் அன்புடைமைத்திறம். அது வாழ்வின் அக எல்லையாகிய தனி உயிரின் தன்னத்திலிருந்து தொடங்கி, குடும்ப சமுதாய இன எல்லைகள் அளாவி, இறைப்பண்பு நோக்கி, இறைப் பண்புக்கூறான வேண்டுதல் வேண்டாமை இன்மை நோக்கி படர்ந்து பரவுகிறது. இதன் பிறப்பிடம் இனஎல்லையன்று, இறைப்பண்பன்று; தனி உயிரும் அதன் தன்னலப் பண்புமேயாகும். அதன் படர்ச்சிக்குரிய பற்றுக் கோடாகிய கொழுகொம்பு நடுவு நிலைமையின் சால்பு என்னும் பண்பே.

நடுவு நிலைமையின் சால்பு என்பது இவ்வாறாகப் பேருயிரான இறைவனின் வேண்டுதல் வேண்டாமை இன்மை பண்பின் ஓர் எதிர் நிழற் கூறு, ஒரு சிற்றுயிர்ப் பண்புக் கூறு ஆகும். அளவில் குறைந்தாலும் நெடிய பனையின் உருவைத் தன் எல்லையளவுக்குள் குறுக்கி உருக்கெடாமல் அழகுபட நிழற்படுத்திக் காட்டும் சிறுபனித் துளிபோல, எல்லையற்ற பேருயிராகிய இறைவனிடம் நீக்கமற நிறைவுற்றுக் காணப்படும் வேண்டுதல் வேண்டாமை இன்மைப் பண்பினை எல்லையுட்பட்ட சிற்றுருவாகிய தனி உயிர் தன் சிற்றெல்லையினிடமாக

நிழற்படுத்திக் காட்டும் சிறுமணிப் பண்புருவே நடுவு நிலைமையின் சால்பு.

நடுவு நிலைமையின் சால்பு என்பது வெளிப்பார்வைக்கு வேண்டுதல் வேண்டாமை இன்மை என்பதைப் போலவே ஓர் எதிர்மறைப் பண்பாகத் தோற்றக் கூடும். ஆனால் வேண்டுதல் வேண்டாமை இன்மை என்பதே ஓர் எதிர் மறைப் பண்பன்று. சொற்கடந்த பொருள் நுணுகிக் காண்பதற்குரிய ஆய்வுப் பட்டுணர்வு (அனுபூதி) இல்லா நிலையில் சில சமயவாணர்கள் இதனை எதிர்மறைப் பண்பாகவே கருதிவிடுவதுண்டு. இது தவறு. வேண்டுதல் வேண்டாமை இன்மை என்பது தனக்கெனத் தனிநல வகையான வேண்டுதல் வேண்டாமை இன்மை மட்டுமே. பொதுநல, இனநல வகையில், எல்லார்க்கும் என்றென்றைக்கும் எல்லா வழியும் இன்பமூட்டும் கலப்பற்ற பொதுநல இன்பமாகிய பேரின்ப வகையில், அது வேண்டுதல் வேண்டாமையின் உடைமையேயாகும் - பேரின்பவழியில் எல்லா உயிர்களையும் உய்த்தலை வேண்டுதலும், அதனின்று விலகியழிதலை வேண்டாமையும் உடைமையே இறைவன் மெய்ப்பண்புருவாகும். இறைவனின் 'தனிப் பெருங் கருணை' எனப் பத்தர் பராவும் பண்பு இதுவே. இப்பேரிறைப் பண்பின் சிற்றுயிர்ப் படிவமான நடுவுநிலையின் சால்பும் இது போன்றதேயாகும், இப்பண்பு எல்லா உயிர்களையும் இனநலத்தில் உய்க்கும் குறிக்கோளுடைய நடுவு நிலைமையின் சால்பாகிய அருநெறியில் தனி உயிர் பிறதாது நிற்றலை வேண்டும்; அதனின்று தனிஉயிர் பிறழ்தலை வேண்டாது. இதன்படி நடுவுநிலைமையின் சால்பு என்பது உயிர்கள் தம் தன்னலம், குழுநலம், தம்இயல்பு, தம் சூழல் இயல்பு, தம் உணர்ச்சி, தன் அறிவறியாமைகள் ஆகியவற்றால் இயக்கப் படும் இடத்தில், இனமுதல்வராகிய சான்றோரால் காட்டப் படும் இனநல நெறியாகிய இந்நடுவு. நிலைமையின் சால்பினின்று விலகாமல் தம்மைக் காத்துக் கொள்ளுதலும், விலக நேர்ந்த விடத்திலும் திரும்பவும் அந்நெறி நோக்கித் தம்மை மீட்பித்துக் கொள்ளுதலும் ஆகிய பண்பு ஆகும்.

இந்நெறி சான்றோரால் காட்டப்பட்டு அவரைப் பின் பற்றியே கண்டு மேற்கொள்ளப்படுவது என்பதைக் குறிப்ப தற்கே அதிகாரத் தலைப்பு நடுவுநிலைமை என்று அமைக்கப் பட்டு விடாமல், நடுநிலைமையின் சால்பு என அமைக்கப் பட்டது என்னலாம். இந்நெறி செயலுக்குரிய நெறி மட்டு மன்று; எண்ணம், சொல், செயல் ஆகிய முத்திறங்களுக்கும் உரிய நெறி ஆகும்.

நடுவு நிலைமையின் சால்பு என்பது நிலையாமை யூடாக நிலைநெறி காட்டும் திசை காட்டிப் பொறி போன்றதாகும்

இனவாழ்க்கை என்பது ஓர் எல்லையில்லாப் பயணம் ஆகும். கால இட எல்லையற்ற இயற்கையிலிருந்து, கால இட எல்லையற்ற கடவுட் பண்பு நோக்கி, கால இட எல்லையற்ற உயிர்வாழ்வு ஆகிய செயல்வெளியினூடாகச் சென்று கொண்டே, இயங்கிக் கொண்டே, வளர்ந்து கொண்டே இருக்கும் ஓர் எல்லையற்ற, தொடக்கமிலா முடிவிலா இயக்க மாக அது இயல்கின்றது.

நிலப்பயணம் செய்வோர் நிலமீதேயுள்ள ஒரு நிலையான தொடங்கிடத்திலிருந்து, நிலமீதேயுள்ள ஒருநிலையான செல்லிடமே நோக்கி, நிலமீதே கிடக்கும் ஒரு நிலையான நெறி யூடாகச் செல்வர். ஆனால் கடல்வழி வான்வழி செல்வோர் நிலமீதேயுள்ள ஒரு நிலையான செல்லிடமே நோக்கிப் பய ணம் செய்தாலும், அவர்கள் வழி நிலையற்ற கடலிலோ, நிலையற்ற வானிலோதான் அமைவது. புறப்படும் திசையும் சேர வேண்டும் திசையும்தான் அவர்களுக்கு வழி வரையறை யாக உதவுகின்றன.

கடல், வான் பயணிகளுக்கு வழிகாட்டுவது திசை காட்டிக் கருவி. அதாவது வடக்கு நோக்கிப் பொறியாகும். வாழ்க்கைப் பயணத்தில் உயிர்களுக்கு இத்தகைய திசை காட்டிக் கருவி அல்லது வடக்கு நோக்கிப் பொறியாக நடுவுநிலைமையின் சால்பு விளங்குகின்றது.

நிலப்பயணம், கடற்பயணம், வான்பயணம் ஆகியவை கூட வாழ்க்கைப் பயணத்துக்கு நேர் உவமைகள் ஆக மாட்டா. ஏனெனில் இப்பயணங்கள் குறிப்பிட்ட தொடக்க இறுதி எல்லைகளை உடையன. இதனால் அவற்றின் ஊடுவழியும் தொலைவரையறை உடையதே. ஆனால் இனவாழ்க்கையோ, எல்லையிலாப் பயணம் மட்டுமன்று. அதற்குத் தொடக்கமும் முடிவும் கிடையாது. அது தொடங்காத் தொடக்கத்திலிருந்து முடியா முடிவு நோக்கித் தொடக்கமிலாது முடிவு மிலாது என்றும் இடையறாது இயங்கிக் கொண்டே இருக்கும் பயணம் ஆகும். மேலே குறிப்பிட்டபடி அதன் தொடக்கம் ஓர் இட மன்று, ஒருதிசை, இயற்கை என்னும் திசை. இதைக் கீழ் என்று நாம் குறிக்கலாம். அதன் முடிவு ஓர் இலக்கு. அதுவும் ஓர் இட மன்று, ஒரு திசை; கடவுட் பண்பு என்னும் திசை. இதனை நாம் மேல் என்று குறிக்கலாம்.

வாழ்க்கை கீழிருந்து மேற் செல்லும் ஓர் இயங்கேணி என்னலாம். அது அலையிலிருந்து அலைக்கு, அலைகளூடாக கவே செல்வதால், அதன் ஒவ்வொரு சிறுபடியும் ஒரு சிறு திருகு சுழலாக, ஒவ்வொரு பெரும்படியும் அத்திருகு சூழலின் திருகு சுழலாகச் செல்கிறது என்னலாம். ஒவ்வொரு சிறு முழுப் படியும் ஒரு சிறு திருகு சுழலாக, தொடங்கிய இடத் திலிருந்து சுற்றிவட்டமிட்டு வந்து தொடங்கிய இடத்திலேயே முடிந்து, முடிந்த இடத்திலேயே மீண்டும் தொடங்குகிறது. ஆயினும் ஒவ்வொரு தொடக்கமும் ஏணியின் ஒரு தளத்திலிருந்து அடுத்த மேல் தளத்துக்கு இட்டுச் செல்கிறது. சிறு முழுப்படி போலவே பெரு முழுப்படியும், பின் அதனிற் பெருமுழுப் படியும் ஒவ்வொரு சிறு சுழற்சி பெருஞ்சுழற்சி மூலம் படிப் படியாகக் கீழ்த்தளச் சுற்றுக் கடந்து மேல் தளச்சுற்றுக்குச் செல்கின்றது.

இவ்வாறாக, வாழ்க்கை என்னும் பல்திருகுச் சுழல் திரு கேணியில், இயங்கும் பல் திருகுச் சுழல் திருகேணியில் செல் வோர் ஒரு திசையில் செல்லாமல் ஒவ்வொரு படியிலும் சுற்றிச் சுற்றி எல்லாத் திசைகளிலும் செல்வது போலத் தோற்றி

னாலும், அவர்கள் போக்கு உண்மையில் ஒவ்வொரு சுற்றின் மையத்திலிருந்து அடுத்த சுற்றின் மைய நோக்கிய ஒரு கீழ் மேலான மையவரையேயாகும். சிறுபடிச் சுற்றுகளில் இந்த மைய வரையும் ஒரு திருகுவரையாகவே அமையும். ஆனால் எல்லாப்படிகளிலும் எல்லாச்சுற்றுக்களிலும் ஏறிச் செல்பவரது முன்னேற்றம் அத்திருகுவரையின் சுற்றுக்களது மையங்களை இணைக்கும் மற்றொரு நடுமையவரையாகவே, இயற்கைப் பண்பிலிருந்து கடவுட் பண்பு நோக்கிய ஒரு கீழ் மேல் வரையின் கூறாகவே அமையும்.

நடுவு நிலைமையின் சால்பு என்பது வாழ்க்கைப் பயணமாகிய இத்தகைய இயங்கும் பல்திருகுச் சுழல் திருகேணியின் மையவரை அல்லது நடுமையவரை நோக்கிய பண்பேயாகும். எங்கெங்கு சுற்றினாலும் கீழிருந்து மேல், இயற்கைப் பண்பிலிருந்து கடவுட் பண்பு நோக்கிச் செல்லுதல் என்ற அடிப்படைத் திறமும்; எங்கெங்கு சுற்றினாலும் நடுமையவரை அல்லது மையவரையை விட்டு விலகிக் கிளைத் திருகு சுழல்களில் சிக்கிச் சிதைவுறாது மீளல் என்ற கிளைப்பண்புத் திறமும் நடுவு நிலைமையின் சால்பு என்பதன் இரு பண்புத் திறங்கள் ஆகும்.

கடவுட்பண்பு மேலேயானாலும் அதை நோக்கி நேரே மேலே குதிப்பவன் திருகேணியிலிருந்து விழுந்தழிவான். அது போலவே இயற்கைப் பண்பு கீழேயானாலும், திருகுமையவரை தழுவாது படிக்குப்படியோ, திருகுழி சுழலுக்குத் திருகு சுழலோ தாவுபவனும் உடல் முறிவுற்று அழியவே நேரும். ஆகவே திருகேணி வழிச் செல்பவர் நடுமையவரை அளாவிய மையவரைகளும் சுற்று வரைகளும் தழுவி வட்டஞ் சுற்றி வழியே நடந்தே மேற் சென்று முன்னேறுவது போல, இன வாழ்க்கை வாழ்பவரும் இயற்கைப் பண்பும் கடவுட்பண்பும் அளாவுவதுடன்றி, சான்றோர் ஒழுகிக் காட்டிய வழியும் தழுவி ஒழுகக்கடவர் - நடுவு நிலைமையின் சால்பு, வாழ்க்கையாகவோ வாழ்க்கைநெறியாகிய அறமாகவோ கூடக் காட்டப் பெறாமல் அறத்தின் தோன்றா உயிர்த்திறமாகக் காட்டப்படுவது இதனாலேயே.

அதிகாரப் பொருளாகிய நடுவுநிலைமையின் சால்பு தலைப்பிலன்றி, குறட்பாக்களில் நேரிடையாகச் சுட்டப் பெறாமல், அப்பண்பை உயிர்த்திறமாகக் கொண்ட உடல் திறங்களான பண்புருக்களாகவே சுட்டப்படுவதும் இதனாலேயே யாகும். அறம் இது என அறவோர் ஓரளவு விளக்கிவிடலாம்; அறத்தின் வளச்சிப்பண்பான, இலக்குப் பண்பான அன்புடைமை இதுவெனக் கூட அறவோர் விளக்கிடலாம்; ஆனால் அறத்தின் வழிகாட்டிப் பண்பான நடுவுநிலைமையின் சால்பினை உணர்ந்தவர் தாம் உணர்ந்த வழி நடந்து காட்டுவதன்றி, வேறெவ்வழியிலும் விளக்குதல் சாலாது.

இயற்கைப்பண்பு அளாவி, கடவுட்பண்பு நோக்கிச் சான்றோர் வகுத்த அறவழி விலகாது தழுவிச் செல்லும் நெறியே நடுவுநிலைமையின் சால்பு நெறி ஆகும். அதிகாரக் குறட்பாக்களில் தகுதி, செப்பம், நடு, கோடாமை என்ற சொற்களால் சுட்டப்பட்டபண்பு நடுவுநிலைமையின் சால்பை உயிர்த்திறமாகக் கொண்ட இந்த நடுவு நிலைமையின் சால்பு நெறிக் கூறுகளேயாகும்.

## திருவள்ளுவரது ஒழுக்க முறையும் நடுவு நிலைமையின் சால்பும்

ஒழுக்க முறைகள் பல, பலவகையின, பலபடியின. அவைகளை இலக்கியல் ஒழுக்கமுறை, செயல்நிலை ஒழுக்க முறை என்றும்; சார்பிலி ஒழுக்கமுறை, சார்பியல் ஒழுக்க முறை என்றும்; பன்முக ஒழுக்க முறை, தொடர்பியல் ஒரு முக ஒழுக்க முறை என்றும்; நயன் முறை ஒழுக்க முறை பயன் முறை ஒழுக்கமுறை என்றும் வகுத்துரைக்கலாம் இவை இணை இணையாக அமைவன, இணையில் ஒன்று மற்றொன்றை விலக்குவது. இணைகளும் ஒவ்வொன்றும் ஒழுக்க முறையின் ஒவ்வொரு பண்பையே வலியுறுத்துவது.

திருவள்ளுவர் ஒழுக்கமுறை இவ்வெதிர் மறைகளையும் பன்மைகளையும் எல்லாவற்றையும் தழுவி உட்கொண்டு ஒருமைப்படுத்தி விடுகிறது. அது இந்த இணைகள் எல்லாவற்றுக்

குமே பொருந்தும் வகையிலும், ஒவ்வொர் இணையிலும் இணையுட்பட்ட இரண்டனையும் தழுவி உட்கொள்ளும் வகையிலுமே அமைந்துள்ளது. திருவள்ளுவரின் எல்லா ஒழுக்க முறைகளும் தூய இலக்கியல் முறைகளாகவும் அமைந் துள்ளன. அதே சமயம் அவை செயல் முறை கடந்தவையா கவோ, செயல்முறைக்கு ஒவ்வாதனவாகவோ இல்லை. அவை தனித்தனித் தொடர்பற்ற சார்பில் ஒழுக்க முறைகள் அல்ல, ஒன்றுடனொன்று தொடர்பும் இசைவும் உடைய சார்பியல் ஒழுக்க முறைகளே. அதேசமயம் அவை ஒன்றைக்கெடுத்து அல்லது அடக்கி அல்லது தணித்து மற்றொன்றை மிகுத்துக் கூறுபவையல்ல. அவை தனித்தனி முக்கியத்துவம் உடைய பன்முக ஒழுக்க முறைத் தொகுதியாகவும் இயல்கின்றன. அவை வெறும் பயன்முறை ஒழுக்க முறைகளல்ல, நயன்முறை ஒழுக்க முறைகளே; அதே சமயம் அவை வாழ்க்கை வளமாகிய பயனு டன் தொடர்பற்றவையல்ல, அதனுடன் இரண்டறப் பிணைக் கப்பட்டவையேயாகும்.

திருவள்ளுவர் ஒழுக்க முறையின் ஆழ அகல உயர்வு இத் துடன் அமையவில்லை. உலகின் மிகப் பெரும்பாலான ஒழுக்க முறைகள் சமய வாழ்வுடனோ, கடவுட் கருத்துடனோ, சமு தாய வாழ்வுடனோ, அறிவாராய்ச்சித் துறைகளுடனோ, கலை இலக்கியப்பண்புகளுடனோ தொடர்புடையனவாய் இருப்பதில்லை. திருவள்ளுவர் ஒழுக்கமுறை ஒன்றே இவை எல்லாவற்றையும் ஊடுருவிப் பின்னி நிற்கிறது.

திருவள்ளுவரது ஒழுக்கமுறை அல்லது அறக்கோட் பாட்டின் இத்தனித்திறத்துக்கு, தனிப்பெருஞ்சிறப்புக்குக் காரணம் அவ்வொழுக்க முறையும் அதன் பின்னணியான இன சமுதாய சமய அரசியல் வாழ்க்கை முறைகளும் இரண் டுமே அக்கடவுட் பேருள்ளத்தால் திட்டமிடப்பட்டவை என்பதே. அத்திட்டமே அறம். இதனால் அவர் சமுதாயம், அறச்சமுதாயம்: அவர் சமயம், அறச்சமயம்; அவர் அரசியல், அற அரசியல்; அவர் வாழ்க்கைமுறை, அற வாழ்க்கை முறை; அவர் அறிவு கலை ஆகியவை அற அறிவு, அறக்கலை ஆகும். அவர் கடவுள்கூட அறக்கடவுளாய் விளங்குகிறார்.

திருவள்ளுவரின் ஒழுக்கமுறைக்குப் பின்னணியான சமுதாயம் ஒரு சிறு தனிச் சமுதாயமன்று. ஒரு குறிப்பிட்ட கால இடச்சூழல் அல்லது சில பல குறிப்பிட்ட கால இடச் சூழல்களுக்கு உட்பட்ட சமுதாயங்களன்று. அது இடவரையறையற்ற, சூழல் வரைறறையற்ற முழு மனித சமுதாயத்தையே பின்னணியாகக் கொண்டது. இது மட்டுமன்று. அது அம்மனித சமுதாயத்துடன் அமையாமல், மனிதசமுதாயத்தின் முக்காலத் தலைமுறைகளையுமுட் கொண்ட முக்காலத்துக் குமுரிய முழு மனித சமுதாயத்தையே, அதாவது மனித இனத்தையே - அம்மனித இனத்தையே உறுப்பாகக் கொண்ட உயிர்ப்பேரினத்தையே - தன் ஆதாரச் சட்டமாகக் கொண்டதாகும். ஊழி கடந்து ஊழி பெயரினும், இன்றைய மனித நாகரிகம் அழிந்து இனியொரு புது நாகரிகமே தோற்றினும், அப்போதும் நின்று நிலை பெறும் மனித இன வேதமாகத் திருவள்ளுவர் அறமுறை விளங்குவதன் காரணம் இதுவே.

திருவள்ளுவரது அறமுறை பயன் நோக்காதது, இலக்கியலானது. ஆனால் வள்ளுவ விளக்கத்தின்படி, இலக்கியல் என்பது வரையிலாத நிலைத்த இனப்பயன் குறித்த பண்பேயாதலால், அது செயல்முறைக் கொத்தாய், பயன்களெல்லாம் கடந்த பயனிறை முழுமையாகிய இனப்பயன் அளாவியதாகவும் அமைந்துள்ளது.

மனித இன சமுதாய முழுவதன் நீடு நிறை நலத்துக்குரிய நெறியே, நெறிப்பண்பே, திருவள்ளுவரது நடுவு நிலைமையின் சால்பு. பயன் கடந்த இனப்பயனளாவி, இலக்கியலாகவும், அதே சமயம் எல்லா அறங்களையும் அறமுறையுடன் வாழ்க்கைத்துறைகளையும் ஒருங்கிணைத்த அறத்தின் அடிப்படைத் திட்டப்பண்பாகவும் அது இயல்கின்றது.

### அறம், அன்புடைமை, நடுவுநிலைமை

அன்புடைமையோடு நடுவு நிலைமையின் சால்பு அளாவிய பண்பே அறம், சிறப்பாகப் பொதுவறம் என்பது மேலே

கூறப்பட்டது. அந் நடுவு நிலைமை வேண்டுதல் வேண்டாமை இன்மை நோக்கி விரிவுறும் போது, அன்புடைமையும் அருளுடைமையாக மலர்வுறுகிறது. பொதுவறமாகிய அறமும் இதனாலேயே மலர்ச்சியுற்றுச் சிறப்பறமாய் விடுகிறது. இவற்றின் விளக்கம் சிறப்பறவியலின் முன்னுரையிலும் அவ்வியற் பாயிர அதிகாரமாகிய அருளுடைமை மாண்பிலும் விரிக்கப் படவிருக்கிறது.

அறத்தின் உயிர்க்கூறு, வளர்ச்சிக் கூறு அன்புடைமை யானால், அதன் உயிராதாரமான உடற்கூறு, உரவளக்கூறு நடுவு நிலைமையின் சால்பேயாகும். அன்புடைமை வானோக்கி வளரும் பயிர். நடுவு நிலைமையின் சால்பு அதனை வானோக்கி நிமிர்ந்து நிற்கச் செய்து, வான் புயலிலும் சிதைவுறாது நிறுத்தும் வேர்த்திறம் ஆகும். அன்புடைமை இல்லாவிட்டால் உயிர்வளமாகிய அறம் 'வன்பாற்கண் வற்றல் மரமாய்விடும் (78). நடுவு நிலைமையின் சால்பு இல்லாவிட்டால் அது ஆழ் கடற் புயலின் சுழலில் அலைக்கழிவுற்றுச் சிதைந்தழியும் கடற்பாசியாய் விடும்.

வள்ளுவ அறமாகிய தேருக்கு அன்புடைமையே குதிரை யாற்றலும் சக்கரங்களுமானால், நடுவு நிலைமைச் சால்பே அவற்றின் இயக்கத்தை அடக்கி ஒழுங்குபடுத்தி ஆட்கொள்ளும் இருசும் அச்சாணியும் ஆகும்.

அறச் செயல்கள், பண்புகள் மனிதருள் இருபாலாருக்கும் சரி ஒப்பானவையே ஆகும். ஆயினும் அறத்தின் அன்புடைமைக் கூறு பெண்பாலர்க்கே தனிச் சிறப்புடையது. அதன் நடுவு நிலைமைக் கூறோ, ஆண்பாலர்க்குரிய தனிப் பொறுப்பு ஆகும். முன்னதன் மறுமலர்ச்சிக் கூறாகிய அருளுடைமை, பின்னதன் மலர்ச்சியாகிய வேண்டுதல் வேண்டாமை இன்மை ஆகியவை முறையே அந்தணர்க்கும் கடவுளுக்கும் உரிய பண்பு களாகும் என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது. ஏனெனில் அறத்துப்பாற் பாயிரமும் அறத்துப்பாற் பொதுவறவியற்பாயிரமும் முன்னிரண்டும் வலியுறுத்தின. அறத்துப்பாற் சிறப்பறவியல் பாயிரம் பின்னிரண்டும் வலியுறுத்தவிருக்கிறது.

ஒரு கிடைவரை மேல் நிமிர் நேர்வரை அமைந்த வடிவத்தை நாம் 'தட்டுவம்' என்னலாமானால், அறத்தை நாம் இத்தகைய ஒரு தட்டுவ வடிவமாகவும், அன்புடைமையின் சால்பை அதன் நிமிர் நேர் வரையாகவும், நடுவு நிலைமையின் சால்பை அதன் கிடைவரையாகவும், குறிக்கலாம். நிமிர் நேர் வரையின் முகடாகவே நாம் இன்ப இலக்கைக் கொள்ளலாம். அறத்துப்பாற் பாயிர மரபு விளக்கும் அதிகாரங்களுள், பாயிரத்தின் அறமரபுக் கூறான அறன் வலியுறுத்தல் அதிகாரம் 'மனத்துக்கண் மாசிலனாதல்' என்ற குறிப்பால் அறமாகிய தட்டுவத்தின் அடிவரையாகிய நடுவு நிலைமையின் சால்பையும்; 'அறத்தான் வருவதே இன்பம்' என்ற குறிப்பால் அதன் நிமிர் நேர்வரை நுனியாகிய இன்ப இலக்கையும் வலியுறுத்திற்று. அறத்துப்பாலின் பாயிரத்துக்குரிய இதே மரபதிகாரமான அன்புடைமையின் சால்போ, நிமிர் நேர்வரையாகிய அன்புடைமையையே அதிகார முற்றிலும் வற்புறுத்தி, 'இன்புற்றார் எய்தும் சிறப்பு' என அவ்விலக்கு முகடும் வலியுறுத்திற்று. பொதுவறவியலின் பாயிரத்தில் அதே மரபுக்கூறான இவ்வதிகாரம் மீண்டும் அடிவரைப் பண்பான நடுவுநிலைமையையே விளக்க விரிவாக வலியுறுத்துவது காணலாம்.

நடுவு நிலைமையின் சால்பு என்பது என்ன? நடுவு நிலைமையின் சால்பு என்பது அந்தண்மை அல்லது இறைப் பண்பாகிய வேண்டுதல் வேண்டாமை இன்மைப் பண்பன்று; ஆனால் அது அவ்வேண்டுதல் வேண்டாமை இன்மைப் பண்பைக் குறிக்கோளாக நோக்கிய பண்பு. அது விருப்பு வெறுப்பற்ற தன்மையன்று; ஆனால் அது விருப்பு வெறுப்புக்களால் சாய்ந்து தடம் பிறழ்ந்து விடாத இனப்பொது நல உணர்வு ஆகும். அது இன்ப துன்பங்களற்ற நிலையன்று; ஆனால் இன்ப துன்ப உணர்ச்சிகளால் ஏற்படும் வேறுபாடுகளிடையே பொருள்களின் மெய்த் தன்மையை, உயிர்களின் மெய்ப் பண்பை, செயல்களின் தகுதி, தகுதி கேடுகளை உணரும் உணர்வு ஆகும். அது நட்பு, பகை நொதுமல் ஆகியவற்றின் வேறுபாடு உணராத தன்மையன்று; ஆனால் நட்பாலும்

பகையாலும் திரிபுறாத பொது நேர்மை உணர்வு ஆகும். இந்த மூன்று நிலைகளையும் நாம் முறையே தகுதி, நடுமை உணர்வு, செப்பம் என்று தனித் தனியாகக் குறிக்கலாம். இம்மூன்றும் தொகுதியான விரிபண்பாகவே, மூன்றன் உள்ளுயிர்ப் பண்பாகவே திருவள்ளுவர் இவ்வதிகாரத்தில் நடுவு நிலைமையின் சால்பு என்பதைக் கருத்துருப்படுத்திக் காட்டுகிறார் என்னலாம்.

நடுவு நிலைமைச் சால்பின் இம் முக்கூறுகளுக்கும் ஒரு பொதுத் தன்மை உண்டு; அம்மூன்றையும் ஒரு பண்பாக்குவது; அதுவே. பொருள், ஆள், எண்ணம், சொல், செயல் ஆகிய ஐந்து பகுதிகளிலும் செய்பவர், செய்யப் பெறு பவர், சூழுறவு ஆகிய முத்திறங்களிலும் கால இடச் சூழல்கள் காரணமான தற்காலிக வேறுபாடுகள் கடந்து, அவ்வைந்தன் மூன்றன் வேறுபாடற்ற தன்மை உணர்ந்து, அதற்கியைய நடப்பதே அப் பொதுப் பண்பு ஆகும்.

நடு நேர்மை நெறி, அடிப்படை மெய்ம்மை மூலம், கோடா உணர்வு எனவும் நாம் இப்பொதுப் பண்பை விளக்குதல் ஆகும்.

விருப்பு, வெறுப்பு, இன்ப துன்பம், நட்பு பகை போன்ற தற்காலிக வேறுபாடுகளால் ஏற்படும் மாறுபடும் தன்மை உணர்ந்து, அவற்றை ஒப்பிட்டாய்ந்து கண்ட ஆராய்ச்சி அறிவாலோ, அன்போடு அன்பின் விரிவாகிய அருளுடைமை இழைந்த இன உணர்வாலோ, அவ்வுணர்வுடைய இனத்தலைவராகிய சான்றோர் வழி நின்றோ, மாறுபடா மெய்ம்மை, மாறுபடாப் பண்பு, மாறுபடா நெறி உணர்ந்து, எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் அவை கடைப்பிடித்தலே நடுவு நிலைமையின் சால்பு நெறி ஆகும்.

நிறங்களை உள்ளவாறு அறிய, ஒருவன் முதலில் கண்ட நிறங்களின் உணர்விலிருந்து கண்களை விலக்கி, நடுவு நிலைமை உணர்வு பெற்றாக வேண்டும். கருமையைக் கண்டு பழகியவன் வெண்மையை மிகு வெண்மையாகவும், வெண்மையைக் கண்டு பழகியவன் கருமையை உறுகருமையாகவும் பிறழக்

காண்பான், இது போலவே சிறிய உருவின் அருகே பெரிய உரு உறுபேருருவாகவும், பெரிய உருவின் அருகே சிறிய உரு உறுசிற்றுருவாகவும் தோற்றும். இது போலவே ஒளிக்குப் பின் அரையிருள் செறியிருளாகவும், செறியிருளுக்குப் பின் சிற்றொளியே கண்கூசவைக்கும் பேரொளியாகவும் காட்சி தரும். மற்றப் புலனுணர்வுகளும், உணர்ச்சிகள், அறிவு, இன்பம் முதலிய பிற திறங்களும் நிறம், அளவு ஆகிய இவற்றின் தன்மையே உடையன. இரைச்சலில் பழகியவன் இரைச்சலையோ, நாற்றத்தில் பழகியவன் நாற்றத்தையோ, இனிப்பு முதலிய சுவைகளில் ஒரே சுவையில் பழகியவன் அச்சுவையையோ அறிவதில்லை. வெயிலின் பின்னரே நிழலின் அருமையும், நிழலின் பின்னரே வெயிலின் கடுமையும் அறியப்படுதல் போல, துன்பத்தின் பின்னரே இன்பத்தின் அருமையும், இன்பத்தின் பின்னரே துன்பத்தின் கடுமையும் உணரப்படுகின்றன. இது போல, அறிந்த அறிவிலிருந்து விடுபடும் வரை ஒருவன் புத்தறிவின் பக்கம் நாட முடியாது, ஒப்பீட்டினால் வரும் பகுத்தறிவினால், அறிந்த அறிவான பழைய அறிவின் குறைபாடு கண்ட பின்னரே ஆராய்ச்சியாளன் கூட மெய்யறிவின் திசையில் திரும்புதல் சாலும் (1110).

நன்மை தீமைகளைத் தன்னல அடிப்படையில் விருப்பு வெறுப்புக்களாகக் காணும் மனிதன் ஒப்புணர்வு மூலமே அத் தன்னலப்படியான நன்மை தீமை கடந்து சமுதாய நன்மை தீமைகளையும்; தற்காலிக நன்மை தீமைகள் கடந்து நிலையான நன்மை தீமைகளையும் படிப்படியாக உணர்கிறான். இவ்வாறு தன்னலம், விரி தன்னலமாகிய குழு நலம், சமுதாய நலம் எனவும்; உடனடி நலம், தற்காலிக நலம், குறுகிய கால நலம், நீள் நலம், நிலை நீள் நலம் எனவும் மலர்ச்சியுற்று, இடகால எல்லை கடந்த இனநல உணர்வாகிய நடுவு நிலைமையின் சால்பாக நுனித்துணரப் பெறுகிறது. இதை நேரடியாகத் தாமே உணர்பவர் சான்றோர். அதன்வழி நின்று பின்பற்றுதற்குரியவர் நன்மக்கள்.

நிறங்களுக் கெல்லாம் அடிநிறமாகிய வண்ணம் எளிதில் எல்லா வண்ணமும் ஏற்பது போல; இசை நரம்பு (சுரங்)களுக் கெல்லாம் அடி நரம்பாகிய கேள்வி (சுதி) எளிதில் எல்லா நரம்பதிர்வுகளையும் எடுத்துக் காட்டுவது போல; ஓவியரின் வரை படங்களுக்கு எல்லாம் நிலவரையும் நடுவரையும் சட்ட மாய் அமைவது போல; சுழல் பொருள்களின் சுழற்சிகளுக் கெல்லாம் நிலைத்த உருக்கொடுக்கும் மைய அச்சு வரை போல, எல்லா நலன்களுக்கும் எளிதொத்த நிலை நடுநலமாக நடுவு நிலைமையின் சால்பு அமைகின்றது.

நிலையற்ற தற்காலத் தோற்றங்களிடையே, பண்புகளி டையே, நலன்களிடையே நிலைத்த பகுதித்குணர்ந்து அதற்குத் தக நினைத்தலும், பேசலும், நடத்தலும் செயல் செய்தலுமே நடுவு நிலைமையின் சால்பு எனும் பண்பின் பாற்படுவதாகும்.

## திருவள்ளுவர் சொல் வழக்காறுகள்

நடுவு நிலைமையின் சால்பு என்னும் இவ்வதிகாரத்தில் திருவள்ளுவர் உணர்வு, சொல், செயல் என்ற முத்திறங்களிலும், பொருட் பண்பு, ஆட் பண்பு, செயற் பண்பு வாழ்க்கைப் பண்பு, வாழ்க்கை நெறி ஆகிய ஐம்பகுதிகளிலும் நடுவு நிலைமையின் சால்பை விரித்துரைக்கிறார். இவ்வகையில் நடுவு நிலைமை யின் சால்பு என்ற பண்பின் புற உடற்கூறுகளாக அவர் தகுதி, தகவு தக்கார் (111, 124); செப்பம் (112, 119); நடு (113, 116, 117); கோடாமை, கோட்டமின்மை (118, 119); வாணிகத்தின் வாணி கம் (120) ஆகிய பல சொற்களை வழங்கியுள்ளார்.

இச் சொற்களில் சில மேலே விளக்கப்பட்டுள்ளன. அவற் றுடன் பிறவும் இங்கும் குறட்பாக்களிலும் விளக்கப்படுகின்றன.

திருவள்ளுவர் நன்றி என்ற சொல்லை எவ்வளவும் விரிந்த வீறிய, சீரிய பொருளில் வழங்கியுள்ளார் என்பதை முன் அதி காரக் குறட்பாக்களே காட்டின. அதுபோல, அதனினும் சிறப் பாக, நடுவு நிலைமையின் சால்பு என்பது அவர் கருத்தின்படி எவ்வளவு விரிந்த, அரிய பெரிய பொருளை உட்கொண்டது

என்பது இவ்வதிகாரத்தின் குறட்பாக்களில் அத்தலைப்புப் பொருளைச் சுட்டுவதற்கு அவர் பயன்படுத்தியுள்ள மேற் குறிப்பிட்ட வெவ்வேறு சொற்களே காட்டும். எடுத்துக் காட்டாக, தகுதி என்பது பொருள்கள், ஆட்கள், செயல்கள் வகையின் தோற்றம் கடந்த உள்ளார்ந்த தன்மை, தோற்றம் கடந்த உள்ளார்ந்த மெய்ப் பெருமை சிறுமைகளின் அலகு குறித்தது. தகுதி, தகவு இது உணர்ந்து நடக்கும் தன்மையையும் குறிக்கும். தக்கார் இத்தகுதி, தகவு உடையவர்கள் மட்டுமல்லர்; பிறரிடம், பிறபொருள்களிடம், பிற செயல்கள் பண்புகள் வகையில் இத்தகுதி உணர்ந்த, தம் எண்ணம், சொல், செயல்களில் அதற்கியைய நடப்பவர். செப்பம் என்பது வேண்டியவர் வேண்டாதவர், நண்பர் பகைவர் நொதுமலர்; அணியர் சேயர், தமர் பிறர் ஆகியோர் வகையிலும் தம் பொருள் பிறர் பொருள், தம்குணம் குறை, பிறர்குணம் குறை ஆகியவற்றின் வகையிலும் அவ்வேறுபாடுகள் கடந்த, இன நலத்தோடொத்த நடு நேர்மை நெறி பிறழாத எண்ணம் சொல், செயல் குறிப்பது ஆகும். நடு என்பது எத்தகைய மாறுபடும் சூழல்களிலும் ஒருவன் தன் பண்பு, சொல், செயல், சூழல் காரணமாக எப்பக்கடும் சாயாமல் தன்னைத் தடுத்துக் காத்து நிற்கும் பயிற்சியின் பயனான நிலை குறிக்கும். கோடாமை, கோட்டமின்மை என்பவை தனி நலன் குழு நலன் ஆகியவற்றின் சூழல்களை, தன்னலத்தை, உணர்ச்சியை, விருப்பு வெறுப்புக்களை, சிலசமயம் தன் இயல்பையே அடக்கி நிறுத்தலும், அதன் காரணமாக நேர் நெறி பிறழ்தலைத் தடுத்தாளலும் குறிக்கும்.

வாணிகத்தின் வாணிகம் என்பது தன்னலம் குழுநலம் முதலிய எல்லா நலங்களுக்கும் மேம்பட்ட இன நலம் குறிக்கின்றது. நன்றி என்ற வள்ளுவச் சொல் குறித்த விழுமிய பொருள் இதுவே என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

நடுவு நிலைமையின் சால்பு என்ற பண்பு நன்றி நலமன்றாயினும், அந்நன்றிச் செயலின் பயனான நலம் அதாவது இன நலமே நடுவுநிலைமையின் சால்புக்குரிய இலக்கு ஆகும். இதுவே மேற்குறிப்பிட்ட இறுதிச் சொல் சுட்டிய மெய்ம்மை

ஆகும். திருவள்ளுவரே அதிகார ஏழாம் குறட்பாவில் (117) நன்றி என்ற சொல்லை வழங்கி, இம் மெய்ம்மையை வலியுறுத்தி யுள்ளார் என்னலாம்.

## அறத்தின் அறம்:

### முக்கூட்டுக்குழம்பின் மருந்துப் பண்பு

நடுவு நிலைமையின் சால்பை நாம் அறத்தின் அறம் என்ன லாம். ஏனெனில் அறச் செயல்களை அறச் செயல்களாக நிறுத் துவது, அறச்செயல்களின் அறத்தன்மை அதுவே, கலையைக் கலையாக்கும் கலைத்திறம் போல, இலக்கியத்தை இலக்கிய மாக்குவதற்குரிய தமிழ் இலக்கணம் போல, இசையை இசை யாக்கும் இனிமைத்திறம் போல அது எல்லா அறங்களையும் ஒருபொது வறத்தின் திசை நோக்கி ஒருவழிப்படுத்துகின்றது. நடுவு நிலைமைச் சால்பற்ற அறம், அறத்தின் பிற பண்புக ளெல்லாம் அமையப் பெற்றதாயினும் அறமாகாது: போலியற மாய் விடும்.

நடுவு நிலைமையின் சால்பு என்பது பாயிரம் கூறிய முக் கூட்டுக்குழம்பின் தன்னல விருப்பமாகிய தின்பண்டப் பண்பு, சமுதாய நலனாகிய உணவுப் பண்பு ஆகிய இரண்டும் கடந்த இனநலனாகிய மருந்துப் பண்பைச் சுட்டுவதாகும். முக்கூட்டுக் குழம்பு தின்பண்ட இனிமையும், உணவுப் பயனும், இன் நல மாகிய மருந்துப் பண்பும் மூன்றும் ஒருங்கே அமையப் பெற்ற நன் மருந்து ஆகும். அறம் அறச்செயல்கள் இம்முக் கூட்டுப் பண்பு: நடுவு நிலைமையின் சால்பு அதன் இன நலக்கூறான, உயிர்க் கூறான மருந்துப் பண்பு ஆகும்.

இவ்வதிகாரக் குறட்பாக்களில் நடுவு நிலைமையின் சால்பு என்ற அதிகாரத் தலைப்புச் சொல் நேரடியாக எந்தக் குறட்பாவிலும் குறிக்கப்படவில்லை. தகுதி, செப்பம் நடு, கோடாமை, வாணிகத்தின் வாணிகம் என அதனைத்தம் உயிர்த்திறமாகக் கொண்ட பண்புருக்களே கூறப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. நடுவு நிலைமையின் சால்பு இவை யன்று, இவை கடந்த உருவிலாத் தூய பண்புத்திறன் என்ப

தும், சான்றோர் வழி நின்றே அது செயற் பண்புருவில் உய்த்துணர்ந்து மேற்கொள்ளத் தக்கது என்பதும் இவ்வாறு சுட்டி உணர்த்தப்பட்டன.

உலக உயிர்கள் அனைத்துமே நடிக்கும் ஒரு நாடகம் முப்பால் வாழ்வு. ஆனால் பொதுமுறை நாடகத்துக்கும் இம் முப்பால் நாடகத்துக்கும் வேறுபாடுகள் உண்டு. முப்பால் நாடகத்தில் நடிப்பவர் வேறு, பார்ப்பவர் வேறு என்ற வேறுபாடு கிடையாது. நடிகரே பார்ப்பவராகவும், பார்ப்பவரே நடிகராகவும் அமைவர். பொது நாடகத்தில் நல்ல நடிகர்கள் நாடகப் பொருளிலே தம்மை முற்றிலும் ஒன்றுபடுத்தி, அதிலேயே தம்மை மறந்து விடுவர். இவ்வாறு மறக்கும் அளவிலேயே அவர் உயர் நடிகர் ஆவர். முப்பால் நாடகத்தின் நிலை இதற்கு மாறானது. அதில் நடிகரே பார்வையாளராதலால், இயல்பாகவே தாம் பார்வையாளர் என்பதை முற்றிலும் மறந்து விடுகின்றனர். இதனாலேயே நாடகப் பொருளை முழுதுற மனங்கொள்ளுதலும் அவர்களால் இயலாதாகின்றது. ஆனால் பொது நாடகத்திலேயே நடிப்பாசிரியர் நாடக மேடை ஆசிரியர் தாம் தம்மை மறந்த நடிப்புக்கலையை உணர்ந்தவராயிருப்பதுடன், பார்வையாளர் நோட்டமும், நாடகப் பொருளை முழுதுறக் கண்டு மதிப்பிடும் திறனும், அதனை வேண்டிய இடங்களில் தம் குறிக்கோள் நோக்கின் உதவியால் திருத்தி அமைக்கும் திறனும் உடையவராயிருத்தல் வேண்டும். முப்பால் நாடகத் தில் இத்தகு திறனுடையவரே - வாழ்க்கை நாடகத்தில் நடிப்பவராக நிற்பதுடனன்றி, அதனைப் புறநிலையில் நின்று முழுதுறக் காண்பவராகவும், அதனைச் சீர் செய்ய, ஆக்க உதவும் குறிக்கோள் நோக்கு உடையவராகவும் அமைபவரே சான்றோர். அவருக்கு முழுமைக் காட்சியும் தரமறி திறனும் சீராக்க ஆற்றலும் தரும் அவரது குறிக்கோள் நோக்கே நடுவுநிலைமையின் சால்பு ஆகும்.

# 35

# மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடைமை

*1973*

**ஞா. தேவநேயப் பாவாணர்**

### *1. வள்ளுவர் கூட்டுடைமை*

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் இல்வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல். (குறள்:44)

பொருளீட்டும்போது தீவினைக்கு அஞ்சி நல்வழியில் ஈட்டியும், பிறருக்குதவாவிடின் ஈயாத புல்லன் கன்னெஞ் சன் தன்னலக்காரன் மக்கட்டன்மையில்லாதவன் என்று பல வாறு பிறர் தன்னைப் பழித்தற்கஞ்சியும், தன் பொருளை அஃதில்லாத பலரொடும் பகிர்ந்துண்ணும் இயல்புடைய இல்வானனது குடிவழி, எதிர்காலமெல்லாம் தொடர்ந் தியங்கும்.

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்
தீப்பிணி தீண்டல் அரிது (மேற்படி 227)

*எப்போதுந் தன்பொருளைப் பலரொடு பகிர்ந்துண் டலை இயல்பாகக் கொண்டவனை, பசியென்னும் கொடிய நோய் ஒருபோதுந் தாக்காது.*

இறைக்க வூறும் மணற்கேணி, ஈயப்
பெருகும் பெருஞ்செல்வம். (பழ)

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாம் தலை. (மேற்படி 322)

*ஒருவன் தன்பொருளை அல்லது உணவைப் பலரொ டும் பகிர்ந்துண்டு பலவகை யுயிர்களையும் பாதுகாத்தல், அற நூலார் இருவகையறத்தார்க்குந் தொகுத்த அறங்களெல்லா வற்றுள்ளும் தலையாயதாம்.*

*பொருள் ஒருவர் துறக்குமுன் கொண்டிருந்ததாகவோ, துறந்தபின் பெற்ற நன்கொடையாகவோ இருக்கலாம். இனி, மடத்துச் செல்வம் போன்று ஒருவர் ஆட்சிக்குட்பட்டதாகவு மிருக்கலாம்.*

*துறவறவியலிற் கூறப்பட்டுள்ள அறங்களுட் சில இல்லறத் தார்க்கும் பொதுவென்பதை, கள்ளாமை, வாய்மை, வெகு ளாமை, இன்னாசெய்யாமை என்னும் அதிகாரங்கள் தெரி விக்கும். ஓரறம் ஈரறத்திற்கும் பொதுவாயினும், இல்லறத்தில் எளியதாகவும் செயல் பற்றியதாகவும், துறவறத்தில் அரிய தாகவும் கருத்துப்பற்றியதாகவும் இருக்கும். எ-டு; களவு செய் யாமை இல்லறம்; களவு செய்யக் கருதாமை துறவறம்.*

தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. (மேற்படி 1107)

*என் அழகிய காதலியின் தழுவின்பம், ஒருவர் தம் சொந்த வீட்டிற் குடியிருந்து தாம் தேடிய பொருளைப் பலரொடும் பகிர்ந்துண்ணும் இன்பத்தை ஒத்ததாகும்.*

*இந்நாற் குறளாலும், திருவள்ளுவர், உடையவர் தம் பொருளை இல்லாரொடு பகிர்ந்துண்ணும் கூட்டுடைமையைத்*

தெரிவித்தார். அவர் காலத்தில் மக்கட்டொகை மிக மிகக் குறைவு. நிலப்பரப்பில் முக்காற்பங்கு மரமடர்ந்த காடு; காற் பங்கு மக்கள் வாழும் நாடு. முத்தமிழ்நாட்டிலும் மக்கள் முக் கோடிக்குமேல் இருந்திருக்க முடியாது. நெட்டிடையிட்டு அரிதாக நேரும் பஞ்சந்தவிர, ஆண்டுதோறும் கோடைமழை யும் காலமழையும் அடைமழையும் தப்பாது பெய்யும். நில வளமும் நீர்வளமும் மிக்கிருந்தது. ஆகவே, உணவுத்தட்டும் வேலையில்லாத் திண்டாட்டமும் நலக்குறைவும் ஒரு சிறிது மில்லை. ஆதலால், வறுமையால் வருந்தும் சோம்பேறியை நோக்கி,

> இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
> நிலமென்னும் நல்லாள் நகும். (குறள் 1040)

என்று கண்டித்தார் திருவள்ளுவர்

இனி, உழவதிகாரத்தையடுத்து, நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை என்னும் நாலதிகாரங்களை வரிசையாக வைத்திருப்பதால், உழவை மேற்கொள்ளாவிடின் வறுமையும், வறுமையால் இரப்பும், இரப்பால் அஞ்சத்தக்க துன்பமும், அத்துன்ப மிகுதியால் கயமையும் (போக்கிரித்தனமும்) ஏற் படுமென்று குறிப்பாற் பெறவைத்தாரேனும்,

> இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்
> இன்மையே இன்னா தது (குறள். 1041)

> இன்மை எனஒரு பாவி மறுமையும்
> இம்மையும் இன்றி வரும். (மேற்படி 1042)

> தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
> நல்குர வென்னும் நசை. (மேற்படி 1043)

என வறுமையைக் கடுமையாகக் கண்டித்தும்,

> இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
> அவர்பழி தம்பழி அன்று. (மேற்படி 1051)

என்று ஒருசார் வறியரை ஒருசார் நன்மக்களிடம் இரக்க ஏவியும் இருப்பதால், தனிப்பட்டவன் தவற்றாலன்றி வேறு

வழிகளாலும் வறுமை நேருமென் றும், அத்தகைய வறுமையை நன்மக்களும் அரசனுமே நீக்கவேண்டுமென்றும் அறிந்து அவ்வறத்தைச் செய்யுமாறு ஆங்காங்குத் தனிக் குறள்களால் ஏவியது மட்டுமன்றி, ஒப்புரவறிதல், ஈகை என்னும் ஈரதிகாரங்களையும் அமைத்தார் திருவள்ளுவர் என்று தெரிகின்றது.

### வறுமையடையும் வகைகள்

#### இயற்கை

களைகண் (ஆதரவு) இன்மை, உறுப்பின்மை, தீராநோய், சேதநேர்ச்சி, (வெள்ளம், கடல்கோள், தீப்பிடிப்பு, நில நடுக்கம்).

#### செயற்கை

சோம்பல், கல்லாமை அல்லது தொழில்பயிலாமை, குடி; விலைமகள் கூட்டு, சூது, களவு, கொள்ளை, போர், கடன்படல், கடன்கொடுத்தல், வீண் செலவு, பன்மக்கட் பேறு, பகைவர் செயல், வழக்கீடு, அரசு கவர்வு, வணிக இழப்பு, போட்டி, கூலி அல்லது சம்பளக்குறைவு, செய்பொருள் விலையாகாமை, நேர்மைக் கொள்கை, தாய்மொழி தாழ்த் தப்படுகை, வைப்பக (Bank) நொடிப்பு, தொழில் தாழ்வு, தீண்டாமை, ஒழுக்கமின்மை, வேலையின்மை, அழி பொருளாக மாற்றிய உடைமையைப் பேணாமை.

இவற்றுட் சில இடைக்காலத்தன; சில இக்காலத்தன. அழிபொருளாக மாற்றிய உடைமையைப் பேணாமை என்பது. முழுச் சொம்மையும் (சொத்தையும்) தாட்காசாக (Currency Notes) மாற்றிக் கறையான் (செதில்) அரிக்கவிடுதல் போல்வது.

இன்மை, எளிமை என வறுமை இருதிறப்படும்; முன்னது ஒன்றுமின்மை; பின்னது சிறுவீட்டிற் குடியிருந்து குறைவாக உண்டுடுத்துவருந்தி வாழ்தல்.

இன்மை உழைக்க வியலாமையால் ஏற்படுவது. அது உறுப்புக்குறைவு, நோய், முதுமை களைகணில்லாச் சிறுபருவம், துறவு ஆகிய ஐந்நிலைமைகளில் நேரக்கூடும். அந்நிலை

மையர் களைகணில்லாக்கால் உயிர்வாழ வேண்டின், இரப் பெடுத்தல் இன்றியமையாததாகும்.

இக்காலத்தில் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் பல தொழிலாளர், சிறப்பாக நெசவாளர், செல்வரையும் பெருஞ் சம்பளக்காரரையும் இரக்க நேர்கின்றது, இரப்பு உயர்திணை மகனின் மதிப்பையும் மானத்தையும் கெடுத்தலால்,

> இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
> கெடுக வுலகியற்றி யான். (குறள். 1062)

என்று, உலகத்தைப் படைத்த இறைவன் மேலும் தம் சினத் தைக் காட்டினார் திருவள்ளுவர்.

இரத்தலைத் தவிர்க்கவேண்டுமென்றே, இக்கால நன்மக் களும் அரசும் களைகண் இல்லம் (Orphanages) தொழு நோயர் விடுதி (Leper Home), முதியோர் மனை (House for the old) முதலியன ஆங்காங்குக் கட்டியும் அமைத்தும் உள்ளனர்.

ஆயினும், அளவிற்கு மிஞ்சி இருமடங்கும் மும்மடங்கும் மக்கட்டொகை பெருத்தும் ஆயிரக்கணக்கானவரும் இலக் கக்கணக்கானவரும் வேலையின்றியும் இருக்கும் இக்காலத் தில், வள்ளுவர் வகுத்த பாத்துண்டலே எல்லா மக்களும் பண் பாட்டுடன் வாழ்தற்கு இன்றியமையாததாகின்றது.

### மக்கட் பண்பாடு

ஆறறிவு படைத்த மாந்தன் உயிரினங்களெல்லாவற்றுள் ளும் தான் உயர்திணை அல்லது உயர்குலம் என்று அறிவ தால், பாத்துண்ணும் இயல்புடைய காக்கை போலும் சில அஃறிணையினங்களினும் பண்பாட்டில் தாழாவாறு, பாத் தூணறத்தைச் சிறப்பாகக் கடைப்பிடிக்கக் கடமைப்பட்டுள் ளான்.

### 1. மன்பதை முழுதும் ஓரினம்

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்றார் பூங்குன்றனார் (புறநா. 192). "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றார்

*திருமூலர் (திருமந். 2104). ஆதலால் ஒவ்வொருவனும் தன்னுயிர் போல் மன்னுயிரைக் கருதல் வேண்டும்.*

*2. அடிப்படைத்தேவை அனைவர்க்கும் பொது*

தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவும் எல்லாம் ஒரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே. (புறநா.189)

உடுப்பவை யிரண்டே என்றது கீழாடை மேலாடைகளை,
உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்

*3. செல்வத்தின் பயன் அஃதில்லார்க் கீதல்*

*4. இறக்கும்போது செல்வம் உடன்வராது*

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைபிறந்துமண்மேல்
இறக்கும்பொழுது கொடுபோவ தில்லை (திருவேகம்ப. 7)

காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே
(திருத்தில்லை. 10)

அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே (மேற்படி 13)

*5. அகக்கரண புறக்கரண ஆற்றல்கள் இயற்கையில் வேறுபட்டுள்ளமையால், ஒருவரைப் புகழ்தலும் இகழ்தலும் கூடாது.*

நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பத றிவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆதலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே. (புறநா. 192)

முறையென்பதை இங்கு இறைவன் ஏற்பாடு அல்லது இயற்கையென்று கொள்க.

உயர்நிலைக் கல்விக்கு வேண்டும் மதிநுட்பம் இல்லாமையால் ஒருவன் உழைப்பாளியாகின்றான். அது அவன் தவறன்று. ஆதலால் அவனை இகழக்கூடாது. அவன்தன் உடல் வலிமையால் அஃதில்லாத உயர்கல்வியாளனுக்கு உதவுவதைப் பாராட்டல் வேண்டும்.

*6. மக்கட்பிறப்பு பண்பாட்டையே பெரிதுந்தழுவியது*

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யு யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு. (குறள். 79)

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. (மேற்படி 993)

அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். (மேற்படி 997)

ஆதலால், பாத்துண்டலை அடிப்படையாகக் கொண்ட கூட்டுடைமை யாட்சியே, இந்தியா போன்ற மக்கட்பெருக்க வறுமை நாட்டிற்கு ஏற்றதாம்.'

## வள்ளுவர் கூட்டுடைமையின் தனிச்சிறப்பு

*1. எல்லார்க்கும் ஏற்றது*

காரல் மார்க்கசு தம் கூட்டுடைமைக் கொள்கையைத் தொழிலாளர்க்கென்றே வகுத்தார். இரசிய சீனநாடுகளின் கூட்டுடைமையாட்சியிற் கைத்தொழிலருங் கல்வித்தொழிலருமான எல்லா வகுப்பினரும் வாழினும், தொழிலாளர் கையிலேயே அதிகாரம் அமைந்துள்ளது. அவ்விருநாடுகளையும் தழுவியுள்ள இந்தியக் கூட்டுடைமைக் கட்சிகளும், தொழிலாளர் ஒன்றியங்களாகவே இயங்கி வருகின்றன.

இன்று இந்தியாவில் வேலையில்லாத் திண்டாட்டத்தால் தாக்குண்டவர் தொழிலாளர் மட்டுமல்லர்; பல்லாயிரக் கணக்கான பொறிவினைஞரும் மருத்துவரும் ஆசிரியரும்

பிறரும் ஆவர். ஆதலால், கூட்டுடைமையாட்சி கற்றோரும் மற் றோருமான அனைவர்க்கும் பொதுவானதே.

**2. ஈகையாளர்க்கும் புதுப்புனைவாளர்க்கும் தமிழ்ப் புரவலர்க்கும் கல்விவள்ளலர்க்கும் செல்வ வரம்பிடாதது**

சிலர்க்குப் புதுப்புனைவாற்றலோ புதுச் செய்முறை கண்டு பிடிப்பாற்றலோ இருக்கலாம். அவர் விருப்பப்படி விட்டு விடின், அவ்வாற்றலை மேன்மேலும் வளர்த்துப் பெரும் பொரு ளீட்ட வழியுண்டாகும். பெரும் பயன்விளையும். அதனால் "ஆடு கொழுத்தால் ஆயனுக்கு ஊதியம்" என்பதை உணர்தல் வேண்டும்.

மேனாடுகளில், சிறப்பாக வட அமெரிக்காவில், பல் வேறு சூழ்ச்சிப் பொறிகளைப் புதுப்புனைந்தவர்க்கு அரசு உரிமையளித்து ஊக்கியதனால், அவரும் செல்வத்திற் சிறந் தோங்கினர்; அவர் நாடுகளும் செழித்துப் பொருள் வளங் கொழித்தன; கொழிக்கின்றன.

இங்கே இந்தியாவில் அதற்கு நேர்மாறாக நேர்ந்துள் ளது. கோவைக் கோ. துரைச்சாமி நாயக்கரை (G.D. Naidu) நடுவணரசும் ஊக்கவில்லை; நாட்டரசும் ஊக்கவில்லை. அவரை ஊக்கியிருந்தால் உலக முழுவதற்கும் பயன்படும் ஒரு ஏடிசனாகி யிருப்பார். நடுவணரசு, அவரை ஊக்குவதற்கு மாறாக, அன்முறையான அளவிறந்த வருமானவரி சுமத்தி அவர் உள்ளந் தளரவும் நெஞ்சம் புண்படவும் செய்தது. அதனால் அவர் தம் மன நோவின் கடுமையை, தம் புதுப் புனைவுகளையுங் கண்டுபிடிப்புக்களையும் வெளிப்படை யாகச் சுட்டெரித்துக் காட்டினார்.

இக்காலத்திற் பொன்னும் எண்ணெயும் போன்ற கனியப் பொருள்கள் இல்லா நாடுகளெல்லாம், புதுப்புனைவுகளா லும், கண்டுபிடிப்புக்களாலுமே தழைத்தோங்கமுடியும். ஆதலால், அவ்வாற்றலுள்ளாரை வரியும் செல்வ வரம்பும்

இடாது அரசு ஊக்குதல் வேண்டும். புதுப்புனைவுகளால் மக்கள் வாழ்க்கை ஏந்தும் (வசதியும்) இன்பமும் பெறுவ தால், புதுப்புனைவாளரை யெல்லாம் குல - மத -கட்சி வேறு பாடின்றி நாட்டுவளம் பெருக்கியவராகவும் உலகப் பொது நலத் தொண் டராகவும் போற்றுதல் வேண்டும்.

இனி, தன்னலமின்றி மன்னலமே பேணித் தம் பொரு ளையெல்லாம் வரையா தீயும் வள்ளல்கட்கும் செல்வவரம் பிருத்தல் கூடாது.

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு.(குறள். 215)

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். (மேற்படி 216)

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். (மேற்படி 217)

வள்ளன்மார் நாட்டுவறுமையைப் போக்குவதால், அரசின் கடமையை ஆற்றுபவரும் அதன் சுமையைக் குறைப் பவரும் ஆவர்.

ஈகையாளர்க்கு ஈதலே இன்பம். ஈயாமை அவர்க்கு இறப்பினுங் கொடிய துன்பம்.

ஈத்துவக்கும் இன்பம் அறியார் கொல் தாமுடமை
வைத்திழக்கும் வன்க ணவர். (குறள்.228)

சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை. (மேற்படி 230)

முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே. (புறநா. 110)

ஈகை யரிய யிழையணி மகளிரொடு
சாயின் றெனப ஆஅய் கோயில்

சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
யுரைசா லோங்குபுகழ் ஒரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே. (மேற்படி 127)

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. (குறள். 220)

இந்நூற்றாண்டிலும், தம் செல்வம் முழுவதையும் இரப்போர்க்கீந்த செண்டத்தூர் வள்ளல் ஐயாத்துரை முதலியாரும், கல்விக் கீந்த காரைக்குடி வள்ளல் அழகப்பச் செட்டியாரும் இருந்தனர்.

*3. மதத்தில் தலையிடாதது*

மதம் மக்கள் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை யென்றும், கூட்டுடமைக் கொள்கைக்கு முரணானதென்றும், தவறான கருத்து இருந்துவருகின்றது. அதற்கு மாறாக, மதமே மக்கள் பண்பாட்டிற்கு அடிப்படையான தென்பதையும், கூட்டுடமைக்கு ஏதுவானதென்பதையும், பலர் அறிந்திலர்.

அச்சமே கீழ்கள தாசாரம் எச்சம்
அவாவுண்டேல் உண்டாம் சிறிது. (குறள். 1075)

ஒரு நாட்டில் அல்லது ஊரில் கொலை களவு கொள்ளை கற்பழிப்பு முதலியன பெரும்பாலும் இல்லாதிருத்தற்கு, அரசன் அல்லது அரசு தண்டிக்கும் என்னும் அச்சமேயன்றி வேறொன்றும் கரணியமன்று. அங்ஙனமே, பலர் தீயொழுக்கத்தை விட்டு நல்லொழுக்கத்தை மேற்கொண்டிருத்தற்கும், மறுமையில் இறைவன் எரிநரகிலிட்டுத் தண்டிப்பான் என்னும் அச்சமே கரணியமாகும். பண்பாடின்றி மக்கள் முன்னேற முடியாது. ஆதலால், மதம் மக்கள் முன்னேற்றத்திற்கு அடிப்படையாகும்.

இறைவன் எல்லாவுயிர்கட்கும் தந்தையென்பதும், அறவாழி யந்தணன் என்பதும், மதத்தின் அடிப்படைக் கொள்கை.

அறிவும் அன்பும் நிரம்பாத உலகத் தந்தைக்குத் தன் மக்கள் எல்லாரும் வயிறார வுண்டு வாழவேண்டுமென்பதே பெரு விருப்பம். அங்ஙனமாயின், முற்றறிவனும் அன்பே வடிவான வனுமான பரமத்தந்தைக்கு, மக்களெல்லாரும் கவலையின்றி உண்டுடுத்து வாழ்வதையே குறிக்கோளாகக் கொண்ட கூட்டு டமையாட்சியே, மகிழ்ச்சிதரும் என்பதைச் சொல்ல வேண் டுவதில்லை.

கூட்டுடமை யாட்சியில், கல்வித்தொழிலரும் கைத் தொழிலரும் சமமாகக் கூடிவாழும் உடன்பிறப்புணர்ச்சிக்கு, மதக்கொள்கையே பெரிதும் துணைசெய்யும்.

கிறித்தவர் நம்பும் எதிர்கால ஆயிரவாண்டுலகவர சாட் சிக்குக் கூட்டுடமைக் கொள்கையே தோதாகும்.

மதம் என்பது, இம்மை மறுமை கடவுள் என்னும் மூன் றையும் பற்றி, ஒருவன் மதித்துக்கொள்ளுங் கருத்தேயன்றி வேறன்று. அதற்கென்று தனியாகப் பொருட்செலவுங் காலச் செலவும் வினை முயற்சியும் இடவொதுக்கீடும் அரசு மேற் கொள்ள வேண்டியதில்லை. ஒருவன் காலையில் எழுந்தவுட னும், பின்னர் உண்ணுமுன்னும், ஓரிடத்திற்குப் புறப்படு முன் னும், ஒருவினையைத் தொடங்குமுன்னும், ஒரு நன்மை கிட்டியபோதும், தீங்கு நேர்ந்தபோதும், உறங்கப் புகுமுன்னும், இறைவனை நன்றியறிவோடு அல்லது முறையீட்டுணர்ச்சி யோடு கைதொழுது ஒரு நிமையம் எண்ணினாலும், இறை வழிபாடு செய்ததாகும். இங்ஙனம் மனநிலையிலேயே இருக் கக்கூடிய மதத்தை எவரும் அழிக்கமுடியாது. இனி, கூட்டு வழிபாடும், ஓய்வு நாளில் அல்லது நேரத்தில், பொதுவிடத் தில் அல்லது ஒருவர் இல்லத்தில், பலர் கூடிச் செய்யலாம். இங்ஙனம் எளிய முறையில், அரசிற்கு எவ்வகை இடர்ப் பாடும் விளைக்காது இயங்கக்கூடியது மதம்.

படிமைமேற் படிக்கணக்காய்ப் பாலைக்கொட்டுவதும், பெருங்கலத்திற் கலக்கணக்காய் நெய்யை வார்த்து விளக்

கெரிப்பதும் போன்ற வினைகளே பொருளழிப்பும் வீண் செயலுமாகும்.

கடவுளை கட்புலனாகக் காணமுடியாமை பற்றியே, கடவுளுண்மையை மறுத்துவிடமுடியாது. உயிரில்லாத, அதனால் அறிவுமில்லாத, நாள்களும் கோள்களும் தத்தம் நிலையில் நின்றும் நெறியிற் சென்றும் ஒழுங்காகத் தத்தம் தொழிலைச் செய்து வருகின்றன. இத்தகைய நிகழ்ச்சி அவற்றை இயக்குவான் ஒருவனின்றி நிகழ இயலாது. மாந்தனறிவு அளவிலும் ஆற்றலிலும் மிக மட்டுற்றிருப்பதால், எல்லா இயற்கை நிலைமைகளையும் உணர்ந்துகொள்ளவியலாது.

கடவுளுண்மையை எல்லாரும் நம்புமாறு நாட்டிற்குப் போதிய சான்றுகள் இல்லையெனின், அதை மறுத்தற்கும் போதிய சான்றுகள் இல்லையென்பதை உணர்தல் வேண்டும்.

இனி, எங்ஙனமிருப்பினும் மதமே கூடாதெனின், கடவுள் இல்லையென்பதும் உலகியம் (லோகாயதம் அல்லது சார்வாகம்) என்னும் மதமாதலின், மதத்தைப் பற்றி ஒருவரையொருவர் தாக்கா திருத்தலே மதியுடைச் செய்தியாம்.

திருவள்ளுவரும் ஞா. தேவ நேயப்பாவாணர் தம் நூலைக் கடவுள் வாழ்த்தொடு தொடங்குதலின், வள்ளுவர் கூட்டுடமை மதத்தை விலக்குவதன்று என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

இரசிய சீன நாடுகளிலும், கிறித்தவர், சிறுபான்மையரேனும், இடர்ப்பாடின்றி யிருந்துவருவதும் கவனிக்கத் தக்கதாகும்.

ஆகவே, வள்ளுவர் கூட்டுடமையே தலைசிறந்ததும் எல்லார்க்கும் எக்காலத்திற்கும் ஏற்றதுமாகும்.

# 36

# சான்றோர் கண்ட திருவள்ளுவர்

1979

க. த. திருநாவுக்கரசு

## பிறர் உணர்த்திய பெருமை

தமிழகம் இன்று மறுமலர்ச்சியுற்று வருகிறது. தமிழருடைய எண்ணத்தில் எழுச்சியும், இதயத்தில் மலர்ச்சியும் உண்டாவற்கு உதவிய உந்துதல் சக்திகள் பல. அவற்றுள் தம்முடைய மரபுவழிச் செல்வத்தின் மாட்சியை உணருமாறு தமிழரைத் தூண்டிய சக்தி முதன்மையானதாகும். ஐரோப்பிய அறிஞர்களின் நடுவுநிலை பிறழாத ஊக்குவிப்பே இத்தூண்டுதல் சக்தியாகும். "தங்களுடைய மொழியைப் பற்றியும் இலக்கிய மரபுவழியைப் பற்றியும் தமிழர்கள் வெட்கப்பட வேண்டியது இல்லை" என்பதை அவர்கள் அறிவுறுத்தினர். இதனால் ஒரு வகை விழிப்புணர்ச்சி தமிழகத்தில் உண்டாயிற்று.

இந்நாட்டிற்குச் சமயப் பணியாற்ற வந்த ஐரோப்பியப் பாதிரிமார்கள், தமிழகத்தின் இலக்கியச் செல்வத்தையும், கலைக் கருவூலத்தையும் கண்டு வியந்தனர்; அவற்றின் அருமை பெருமைகளை உலகிற்கு உணர்த்தினர். இதனால், தமிழ் மக்கள் ஒருவகைப் புத்துணர்ச்சியையும் அகத்து எழுச்சியையும் பெற்றனர். முதன் முதல் இலக்கியத்துறையிலேயே மறுமலர்ச்சி இயக்கத்தின் அலைகள் மோதத் தொடங்கின.

## அறிமுகம் செய்த அறவோர்

தங்கள் சமயப் பணிகளோடு, சிறப்புமிகு தமிழ் நூல்களைத் தங்கள் மொழிகளில், ஐரோப்பியப் பாதிரிமார்கள் மொழி பெயர்க்கத் தொடங்கினர். பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வீரமாமுனிவர், திருக்குறளின் முதல் இரு பால்களையும் இலத்தீன் மொழியில், மொழிபெயர்த்து ஐரோப்பிய நாடுகளுக்கு நம் தமிழ் மறையை அறிமுகப்படுத்தினார். இவருக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே, மேற்கு நாடுகளில் திருக்குறள் வழங்கியதாகக் கூறுவர்.

கி.பி. நான்காம் நூற்றாண்டில், திருக்குறளின் சிறப்புமிகு பகுதிகள் பல கிரேக்க மொழியில், மொழிபெயர்க்கப் பட்டிருந்ததாகக் கூறுவர்.[1] ஆனால் இதை உறுதிப் படுத்துவதற்குரிய சான்றுகள் இப்பொழுது கிடைக்கவில்லை. எனவே, இன்றைய நிலையில், வீரமாமுனிவரே முதன் முதல் (கி.பி. 1730) மேற்கு நாடுகளில் திருக்குறளைத் தம் இலத்தீன் மொழிபெயர்ப்பு மூலம் அறிமுகப்படுத்தி வைத்தார் எனக் கருதலாம். கி.பி. 1747 அளவில், 'திருக்குறள் திரட்டு' ஒன்று பிரஞ்சு மொழியில் இருந்ததாக அறியப்படுகிறது.[2] ஆங்கிலத்தில், கிண்டர்சிலி என்பவரால் மொழிபெயர்க்கப்பட்ட திருக்குறள் பாடல்கள் பலவற்றைக் கொண்ட நூல் கி.பி.1794-ல் இங்கிலாந்தில் 'அறிவுக் கடல்' எனும் பெயரில் வெளியிடப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.[3] இம்மூன்று மொழிபெயர்ப்புகளுமே காலத்தால் மிகவும் முற்பட்டனவாகும். பதினெட்டாம் நூற்றாண்டில், ஐரோப்பிய மக்கள் திருக்குறளை அறிவதற்கு இவை உறுதுணையாக இருந்தன.

## வள்ளுவரைச் சான்றுகாட்டிய சான்றோர்

இலங்கையில், கோட்டே பகுதியைப் புவனேகபாகு எனும் அரசன் (கி.பி.1521 - 1551) ஆண்ட காலத்தில், அவனுடைய அரசவையில், சமய வாதிகள் தத்தம் சமயமே உயர்ந்தது' என்பதை நிலை நாட்டச் சொற்போரில் ஈடுபட்டனர். அந்த அவையில், பிரான்சிசிய சமயத் தொண்டரான பிராஜோம்டி விலா கோந்தே (Fra Joma de vila conde) எனும் போர்ச்சு கீசியப் பாதிரியார் "நீங்கள் உங்களிடையே மறைத்து வைத்து இருக்கும் திருநூலை, மயிலாப்பூரைச் சேர்ந்த வாளுவரின் (வள்ளுவரின்) நூலைப் படித்துப் பாருங்கள்! என்னுடைய கருத்தின் உண்மையை அப்பொழுது உணர்வீர்கள்![4] என்று அறிவித்ததாகக் கூறுவர். இதனால், கி.பி. பதினாறாம் நூற் றாண்டில் போர்ச்சுகீசியப் பாதிரியார் திருக்குறளினைச் சிறப்புமிகு நூலாகப் போற்றி யமை புலனாகின்றது.

இவ்வாறு, கடந்த நானூறு ஆண்டுகளாக வள்ளுவரின் சிறப்பினை, உலகம் உணர்ந்து போற்றி வருகிறது. முப்பது மொழிகளில் எண்பதுக்கு மேற்பட்ட மொழி பெயர்ப்புகளை யுடைய ஒரே தமிழ் இலக்கியம் திருக்குறள் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இந்த நூலினைத் தமிழருடைய சிந்த னையின் பிழம்பாக உலகம் போற்றிவருகிறது. இந்நிலையில், உலகச் சான்றோர்கள், திருவள்ளுவரைப் பற்றிக் கொண்டுள்ள கருத்துகளையும் திருக்குறளைப் போற்றிப் பாராட்டுவதற் குரிய காரணங்களையும் முறையாக அறிவதற்கு முயன்றதன் பயனாக அரும்பியதே இச்சிந்தனை ஓட்டமாகும்.

## உலகப் பேரிலக்கியம்

தத்தம் மொழிகளில் உள்ள இலக்கியங்களையே சிறப் புடையனவாகப் போற்றுவது மரபு. அவற்றுள்ளும், தங்கள் இனப்பண்புகளையும், பண்பாட்டுச் சிறப்புகளையும் சிறப் பாக எடுத்துரைக்கும் இலக்கியங்களைத் 'தேசிய இலக்கியம்' எனப் பாராட்டுவது வழக்கம். நான்கு நூற்றாண்டுகளாக மேற்குநாடுகளில் இவ்வழக்கம் இருந்து வருகிறது. நாட்டு விடுதலைக்காகப் போராடிய பொழுது - இந்தியர்களாகிய

நாம் இராமாயணத்தையும், பாரதத்தையும் 'தேசிய இலக்கியம்' என்று போற்றத் தொடங்கினோம்; தமிழக மறுமலர்ச்சி இயக்கத்தின் உந்துதலால், திருக்குறளைத் தமிழருடைய தேசிய இலக்கியமாகக் கடந்த ஐம்பது ஆண்டுகளாக நாம் போற்றி வருகிறோம்.

கெதே (Goethe) எனும் ஜெருமானியப் பெருங்கவிஞர் (கி.பி.1749 - 1832), கி.பி 1827 - ஆம் ஆண்டு, ஜனவரி, 31 ஆம் நாள், தம்முடைய நண்பரான ஜெ.பி.எக்கர்மண் (J.P Ecker mann) என்பவரிடம், பின்வருமாறு கூறியுள்ள கருத்து, நம் சிந்தனையைக் கவருவதாகும்;

> தேசிய இலக்கியம் என்னும் தொடர் இப்பொழுது பொருளற்றுப் போய் விட்டது. உலக இலக்கிய யுகம் பிறக்கத் தொடங்கி விட்டது. அதன் வளர்ச்சியை விரைவுபடுத்த நாம் ஒவ்வொருவரும் முயலுவோமாக![5]

எனும் எண்ணம் பேராற்றல் பெற்று அறிஞர்களுடைய எண்ணங்களை இயக்கத் தொடங்கிய நிலையிலேயே, மேற்கு நாடுகளின் அறிஞர் பெருமக்கள் திருக்குறளை உலகப் பேரிலக்கியமாகப் போற்றத் தொடங்கினர்.

கி.பி.1848 - ஆம் ஆண்டு, பிரஞ்சு நாட்டு நல்லறிஞர் எம். ஏரியல் (M. Ariel)

> திருக்குறள் தமிழ் இலக்கியத்துள் தலை சிறந்த படைப்பு; மனித இனத்தின் சிந்தனையில் முகிழ்த்த உயர்வும் தூய்மையும் வாய்ந்த இலக்கியப் பெட்டகம். அதனுடைய ஆசிரியர் சாதி, சமய, இன வேறுபாடுகளையெல்லாம் கருத்தில் கொள்ளாமல், மனித இனம் முழுமைக்கும் பொருந்தக் கூடிய கட்டற்ற சிந்தனையையும், பெருஞ் சிறப்பு வாய்ந்த அறங்களையும் அறிவுறுத்துவது நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.[6]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இவருக்குப் பிறகு, திருக்குறளை முழுமையாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, 1886 இல் டாக்டர் ஜி.யூ. போப்பு வெளியிட்டார். அந்நூலில், திருவள்ளுவரைப் போற்றிப்பாடும், ஆங்கிலக் கவிதையை அவர் அமைத்துள்ளார். அதில், "பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் குருவாகப் பேரறிஞர் திருவள்ளுவர் விளங்குகிறார். உலகில் உள்ள பொருள்கள் எல்லாம் மாறுகின்றன; மறைகின்றன. ஆனால், அவருடைய புகழ் குன்றவில்லை; பெருகிக் கொண்டே போகிறது. அனைத்துலக மனிதனைப் பாடிய பாவலன் ஆயிற்றே வள்ளுவன்![7] எனப் பெருமிதத்தோடு அவர் கூறுகிறார். ஒரு நாட்டைச் சேர்ந்த மக்களையோ, ஒரு காலத்தைச் சேர்ந்த மக்களையோ திருவள்ளுவர் பாடவில்லையாம்! 'உலகப் பனை'[8] அனைத்துலக மனிதனை, இவ்வுலகில் நேற்று வாழ்ந்த, இன்று வாழும், நாளை புதியதாக வரப்போகும் - மனிதனைப் பாடியுள்ள பெருமைக்கு உரியவர் திருவள்ளுவர் என்பது போப்பின் பாடலால் வெளிப்படுகிறது.

1925 அளவில் திருக்குறளின் ஜெருமானிய மொழிபெயர்ப்பைப் படித்து, வள்ளுவரைப் புரிந்து கொண்டவர் ஆல்பர்ட் சுவைட்சர் எனும் ஜெருமானிய நாட்டுச் சான்றோராவார். 'இந்தியச் சிந்தனையும் அதன் வளர்ச்சியும்.' எனும் நூலினை, 1935 இல் அவர் ஜெருமானிய மொழியில் வெளியிட்டுள்ளார். அந்நூலில் வள்ளுவருடைய வாழ்வியல் தத்துவத்தையும், அறவியல் கொள்கையையும் கண்ணன், புத்தர், மனு போன்ற இந்தியச் சிந்தனையாளரின் கொள்கைளோடு ஒப்பிட்டுக் காட்டி, திருவள்ளுவருடைய சிந்தனைப் போக்கின் சிறப்பைப் பின்வருமாறு அவர் நிலை நாட்டியுள்ளார்;

> 'ஒழுக்கமே மனிதனுடைய உயர்ந்த குறிக்கோளாக இருக்க வேண்டும்' என்பதை மிகுந்த உறுதிப்பாட்டோடு வள்ளுவர் அறிவிக்கிறார். 'ஒவ்வொருவரும் தனக்குத் தானே செய்து கொள்ள வேண்டிய கடமை என்ன? மற்றவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன?

> என்பனவற்றை யெல்லாம் சிறந்த பண்பாட்டோடும், மதிநுட்பத்தோடும் வள்ளுவர் பேசுகிறார். உலக இலக்கியத்தில் இத்தகைய மாண்பு மிக்க மெய்யறிவு, வேறு எந்நூலிலும் இத்துணைச் சிறப்பாகப் பொலிவுறவில்லை[9]

சோவியத் ருஷியாவில் அறிஞர்களுடைய கருத்தினையும் திருக்குறள் கவர்ந்துள்ளது. 1963 இல் பேராசிரியர் ஜே.ஜே. கிளசோவு (J.J. Glazov)ம், பேராசிரியர் ஏ. கிருஷ்ண மூர்த்தியும் இணைந்து, திருக்குறளின் ருஷிய மொழி பெயர்ப்பை வெளியிட்டனர். சைவ சித்தாந்தத்தில் வல்லுநரும், சோவியத் ருஷியாவின் மெய்ப்பொருள் இயல் அறிஞருமான டாக்டர் அலக்சாண்டர் பியாதி கோர்ஸ்கி (Dr. Alexander M. Pyatigorsky), இந்நூலிற்கு ஒரு முன்னுரை வழங்கியுள்ளார். அதனுள்,

> திருவள்ளுவரின் குறள், இந்திய் இலக்கியங்களில் மட்டுமன்றி, உலக இலக்கியங்களிலேயும் சிறந்தது எனக் கருதப்படுகிறது. இந்தக் கருத்து முற்றிலும் பொருத்தமானதேயாகும். ஏனெனில், குறளின் கலையழகு ஈடிணையற்றது! அதைவிட முக்கியமானது, அந்நூலில் ஒளிரும் சிறப்புமிகு மனித இனத்தின் நலத்தை நாடும் கருத்துகளாகும். அவை எல்லா நாட்டுக்கும் எல்லா மக்களுக்கும் பயன்படத்தக்க விலை மதிப்பிடற்கரிய கருவூலமாக உள்ளன[10]

என்று திருக்குறளின் சிறப்பினை அவர் எடுத்துரைத்துள்ளார்.

இவற்றை எல்லாம் தொகுத்துக் காணுகின்றபொழுது,

> வள்ளுவன் தன்னைஉ லகினுக் கேதந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு!

என்று சுப்பிரமணிய பாரதியார் பாடியமை உண்மை; வெறும் புகிழ்ச்சி இல்லை என்பது உறுதியாகிறது.

### வள்ளுவர் வரலாறு

வான்மறை தந்த வள்ளுவரின் வரலாற்றைத் தெளிவாக நாம் அறிய இயலவில்லை. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமிழர்கள் ஆட்சி உரிமையை இழந்தனர். அதனோடு சிந்திக்கும் பழக்கத்தையும் மறந்தனர். இதனால் பதினேழாம் பதினெட்டாம் நூற்றாண்டுத் தமிழர்கள் இடையே, திருவள்ளுவரைப்பற்றிப் பலவகையான புராணக் கதைகள் வழங்கி வரலாயிற்று. அக்கதைகளுக்கு முழுமையான வடிவம் கொடுக்கும் பணியில் 'கபிலர் அகவல்' எனும் கற்பனையான நூலினை யாரோ படைத்து விட்டனர். அந்நூலும் மக்களை சிந்திக்க வொட்டாமல், 'மறைவாக நமக்குள்ளே பழங்கதை களைப்' பேசிப்பேசி, அவற்றையே உண்மையென நம்புமாறு செய்து விட்டது. இவற்றோடு மரபுவழிச் செய்திகளையும் சேர்த்து அறிவிற்குப் பொருந்தாத, ஆராய்ச்சிக்கு உதவாத முறையில் 'வள்ளுவரின் வரலாற்றை'ச் சிலர், மக்களிடையே நன்கு பரப்பி விட்டிருந்தனர். சிந்திக்கும் திறமை அற்றிருந்த மக்களும், அவற்றையெல்லாம் உண்மையென்று நம்பினர்.

இத்தகைய காலக்கட்டத்தில், தமிழகத்தில் சமயப் பணி புரிய ஐரோப்பியப் பாதிரிமார்கள் வந்தனர்; நாட்டு மக்கள் இடையே, திருவள்ளுவரைப் பற்றி வழங்கிவந்த கதைகளை எல்லாம் உண்மை யென்று கருதினர்; வள்ளுவர் எனும் பெயர், 'தாழ்த்தப்பட்ட மக்களின் குருவிற்குரிய பெயர்' என்றே நம்பினர். வள்ளுவச் சாதியினர் அக்காலத்தில் அரிசன மக்களின் குருவாகவும், சோதிடக் கலைஞர்களாகவும் இருந்து வந்ததை அவர்கள் நேரில் கண்டனர். எனவே, இவ்வாறே, திருவள்ளுவரும் இருந்திருக்க வேண்டும் என்னும் முடிவிற்கு அவர்கள் வந்தனர். 'அரசரின் உள்படு கருமத் தலைவருக்குரிய பதவிப் பெயரே வள்ளுவன்' என்பது அவர்கள் அறியாத ஒன்று.[9] எனவே, வள்ளுவரைத் 'தெய்விகப் பறையன்' என்றே அவர்கள் சுட்டியுள்ளனர்.[11] இதனை ஜி.யூ. போப்பு போன்றவர்களும் நம்பியுள்ளனர்.

திருவள்ளுவரின் பெற்றோரைப் பற்றிய ஆதி, பகவன் கதையே, இவர்கள் இவ்வாறு எண்ணுமாறு செய்துள்ளது. வள்ளுவர் நெசவுத் தொழில் செய்து வாழ்ந்தார் என்பதும் மரபுவழிச் செய்தியின் பாற்பட்டதே யாகும்.

வள்ளுவர் மயிலாப்பூரில் வாழ்ந்தவர் என்பதை அவர்கள் எல்லாரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். இதற்குமேல், சாந்தோமில் கிறித்துவ சமயப் பணிபுரிந்த புனிதத் தாமசிடம் (St. Thomas) நெருங்கிப் பழகியும், ஞான உபதேசம் பெற்றும், இயேசு பெருமானின் கொள்கைளை நன்கு உணர்ந்தும் இருந்ததினாலேயே, திருவள்ளுவர் இத்தகைய சிறப்புமிகு அறநூலை இயற்ற முடிந்தது என்றும் அவர்கள் கூறுகின்றனர். தாமசுடைய தொடர்பு இல்லாமல் இருந்தால், இத்தகைய அருளற நூலைத் திருவள்ளுவரால் இயற்றி இருக்க இயலாது எனும் கருத்தினைக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் அவர்களுள் பெரும்பாலோர் தெரிவித்துள்ளனர்.[12]

இதனை, அக்காலத்திலேயே ஆங்கிலேய அறிஞர் சிலர் மறுத்துள்ளனர். 'திராவிடரின் சிந்தனையில் இத்தகைய சீரிய கருத்துகள் தோன்ற இயலாது எனக் கூறுவது அறிவுடைமை யாகாது. தமிழ்ப் புலவர் ஒருவரைக் கிறித்தவராக்கிக் காட்டும் நேர்மையற்ற செயலை நான் எதிர்க்கிறேன்'[13] என்று சார்லஸ் இ. கோவர் குறிப்பிட்டுள்ளமை இங்கு நினைவுகூர் தற்கு உரிய தாகும். இவ்வாறே ரெவரண்ட் ட்ரூ (H.Drew) வும் கண்டித்துள்ளார்.

திருவள்ளுவருடைய காலம் கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டாக இருக்கலாம் என்பதை, இராபர்ட் கால்டு வெலும், ஜி.யூ போப்பும் தவிர, மற்றவர்கள் எல்லாரும் உடன்படுகின்றனர். ஆனால், ஜி.யூ போப்பும், டாக்டர் கால்டுவெலும் கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்கும் பத்தாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் திருக்குறள்[14] தோன்றி இருக்கவேண்டும் என்று கருதுகின்றனர்.

இத்தகைய கருத்துகளை எல்லாம், மறைமலையடிகளும் நாவலர் ச. சோமசுந்தர பாரதியாரும் நன்கு ஆராய்ந்து அவற்றின், பொருத்தமற்ற போக்குகளை முறையே, 'திருக்குறள் ஆராய்ச்சி, 'திருவள்ளுவர்' எனும் நூல்களின் மூலம் உலகிற்கு உணர்த்தியுள்ளனர்[15] திருவள்ளுவரின் காலத்தையும் கி.மு. முதல் நூற்றாண்டு எனவும், கி.மு. முதல் நூற்றாண்டிற்கும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டது எனவும் இவர்கள் நிறுவியுள்ளனர்.

"திருவள்ளுவர் யார் என்பது தெரியவில்லை, மயிலாப்பூரைச் சேர்ந்த ஞானி எனக்குறிப்பதே பொருந்தும்' எனும் கருத்தினை விண்ட்டர் நீட்சு எனும் ஜெருமானிய அறிஞர் மறுக்கின்றார். 'தம் தாய்நாட்டு எல்லைகளுக்கு அப்பால், நெடுங்காலமாக நன்கு அறியப்பட்டவராக உலகப்புகழ் பெற்றுள்ள திருவள்ளுவரை, இவ்வாறு சுட்டக்கூடாது"[16] என்று அவர் தெரிவித்துள்ளார்.

இவையாவும் திருவள்ளுவரின் பெயர், குடி, வாழ்ந்த பகுதி, செய்த தொழில், வாழ்ந்த காலம் போன்றவற்றைப் பற்றிச் சென்ற சில நூற்றாண்டுகளில் தவறான கருத்துகள் நிலவியதையும், அவற்றிற்கு மாறாகத் தெளிவுமிக்க, நடுவு நிலை பிறழாத அறிஞர்கள் அறிவுறுத்தியுள்ள முடிவுகளையும் நம் சிந்தனைக்கு விட்டுவிடுவதைக் காணலாம்.

### தொகை நூல் அன்று!

திருக்குறள் 'ஒரு தொகை நூல்' எனும் கருத்தினை எம். யூலே வின்சென் (M. Jules Vinson) என்பவர் தெரிவித்துள்ளார். பரந்துபட்ட பல்வேறு துறைகளுக்குரிய விழுமிய கருத்துகளை ஒரு புலவரால் எடுத்துரைக்க இயலுமா என இவர் ஐயுறுகிறார். மற்றும். 'நூலின் அமைப்பில் காமத்துப்பால், மற்ற இருபால்களின் அமைப்பில் இருந்து வேறுபட்டுள்ளமைக்குக் காரணம் யாது? என இவர் வினவுகிறார். இக்காரணங்களால், நாலடியாரைப் போல, பல முனிவர்கள் ஒரு காலத்தில் இயற்றிய பாடல்களை, பிற்காலத்தில் யாரோ ஒருவர் தொகுத்து இருக்கலாம் என இவர் துணிகிறார்.[17]

இவருடைய கருத்து, பொருத்தம் அற்றது என்பதை டாக்டர் ஜி.யூ. போப்பு முதலிய அறிஞர்கள் எடுத்துரைத்துள் ளார். "தம்முடைய நூலைத் தாம் திட்டமிட்ட வகையில் வள்ளுவர் அமைக்காமல் இருக்கலாம்[18] ஆனால், திருக்குறள் ஒரு தொகைநூல் அன்று என்று உறுதியாகக் கூறலாம். விரி வாகவும், செம்மையாகவும் ஒரே ஆசிரியரால் இயற்றப்பட்ட நூல் திருக்குறள் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை! மூன்றா வது பாலாகிய காமத்துப்பாலின் நோக்கும் போக்கும் மற்ற இருபால்களில் இருந்து வேறுபட்டு இருக்கலாம். ஆனால் அங்கும் அறம்பாட வந்த அறவோராகிய திருவள்ளுவரின் முத்திரையைக் காணுகின்றோம்"[19] என்பது போப்பு அவர்கள் கூறும் அமைதியாகும்.

### காமத்துப்பால் வெறுக்கத் தக்கதா?

பண்டைத் தமிழரின் அகப்பொருள் மரபின் மாட்சியைப் புரிந்து கொள்ளத்தக்க வாய்ப்பு வசதிகள், சென்ற நூற்றாண் டின் இடைப் பகுதியிலோ, அதற்கு முன்போ தமிழறிஞர் களுக்குக் கிடைக்கவில்லை. சங்கத் தமிழ் நூல்கள் யாவுமே, சென்ற நூற்றாண்டின் பிற்பகுதி முதல்தான், ஓலைச் சுவடி களில் இருந்து நூல்களாக அச்சிடப் பெற்றன. 'திராவிட மொழிகளின் ஒப்பு இலக்கணத்தின்' ஆசிரியரான கால்டுவெ லுக்கு (1856) பழைய தமிழ் இலக்கியங்களுள் திருக்குறளைத் தவிர, வேறொன்றும் தெரியாது. எனவே, அக்காலத்திய ஐரோப்பியர்கள் 'அகப் பொருள் இலக்கியங்களை' அறியாத வர்களாவர்.

இதனால்தான், திருக்குறளின் மூன்றாவது பாலாகிய காமத்துப்பாலைக் கண்டவுடனே, அவர்கள் மருட்சி அடைந் துள்ளனர். இதனைச் சார்லஸ் இ. கோவர், "கிறித்துவ உடையை அணிவதற்கு ஏற்றவகையில் மூன்றாவது (காமத்துப்) பால் அமையவில்லை"[20] என்று நகைச் சுவையுடன் மொழிந்துள்ளார்.

ஆங்கிலத்தில் திருக்குறளை மொழி பெயர்த்தவர்களுள் திருத்தந்தை ட்ரூ (Rew W. H. Drew.)வும் ஒருவராவர். அவர்

"காமத்துப்பாலை மொழி பெயர்த்தால், மொழி பெயர்ப்ப வரைப்பற்றி உலகம் தவறாக நினைக்கும்; பழிக்கும்"[21] என்று அஞ்சினார் 'காமம்' எனும் சொல்லைக் கண்டு, அதனைக் 'காமசாத்திரம்' என்று தவறாகப் புரிந்து கொண்டமையால் உண்டான குழப்பமாகும். அருவருக்கத் தக்க நிலையில் காமத் துப்பால் காணப்படவில்லை என்பதை மேற்கு நாட்டு மக்க ளுக்குப் போப்பு போன்றவர்கள் எடுத்துரைத்துள்ளனர்.[22]

## மெய்யுணர்வுக் காதல் நெறி

காமத்துப் பாலில் பேசப்படுவது மானிடக் காதல் அன்று!. ஆன்மாவாகிய தலைவி, அனைத்து ஆன்மாக்களுக்கும் தலை வனாக உள்ள இறைவனை அடையத் துடிப்பதையே. திருவள் ளுவர் உருவகமாக்கியுள்ளார் எனக் கூறும் கருத்து, சென்ற நூற்றாண்டில் செல்வாக்குப் பெற்றது. சைவ வைணவ சமயங் களில் மானிடக் காதலை, தெய்விகக் காதலாக மாற்றி. இத்த கைய எண்ணப் போக்கினை வளர்த்து வந்துள்ளதைக் காணு கின்றோம். பண்டைத் திருக்குறள் உரையாசிரியர்கள் யாரும், திருக்குறள் காமத்துப்பாலிற்கு இத்தகைய நோக்கில் விளக்கம் கொடுக்கவில்லை.

கிறித்துவ சமயத்தில் இத்தகைய மரபு ஒன்று உண்டு. அதனை 'மணமகள் மெய்யுணர்வுக் காதல் நெறி' (Bridal Mysiticism) என்பர். திருக்குறளை அறிந்த ஐரோப்பியப் பாதிரி மார்களிடையே, இத்தகைய எண்ணம் எழலாயிற்று. பின்னர், இந்தியப் பாதிரிமார்களும் இந்த நோக்கத்தோடு திருக்குறளை அணுகலாயினர்.[23] வீரமாமுனிவர், கார்ல் கிரால் (Karl Graul), டாக்டர் ஜி. யூ. போப்பு முதலியோர் இக்கருத்து உடையவர் களாகவே காணப்படுகின்றனர்.

எனினும், பாதிரிமார்களாசப் பணிபுரியாத மற்ற ஐரோப் பிய அறிஞர்கள், இத்தகைய விளக்கத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றனர். காமத்துப் பாலில் வரும் 250 குறள்களில் உலக நிலைக் காதல் (வாழ்க்கை நிலைபேறு) போற்றப் பெறுகிறது.

இவை கண்ணை உறுத்தியதால், 'இறைவன் மீது ஆன்மா கொள்ளும் காதல்' என இவற்றிற்கு உட்பொருள் கூற முன் வந்தனர்[24] என்பது சுவைட்சரின் கருத்தாகும்.

## அறிஞர்களைக் கவர்ந்த அருங்குறள் மணிகள்

திருக்குறளின் போதனைகள் பல, புத்துலகச் சிந்தனைப் போக்கு உடையனவாக உள்ளன. அதனைக் கற்ற உலகச் சான்றோர்கள் பலர், சிறப்பாக அதனுடைய குறட்பாக்கள் சிலவற்றில் தங்கள் உள்ளத்தைப் பறிகொடுத்துள்ளனர்.

ஜெருமானிய அறிஞர் டாக்டர் கால் கிரால் என்பவரிடம்,

> இருநோக்கு இவள் உண்கண்உள்ளது; ஒருநோக்கு
> நோய்நோக்கு; ஒன்று அந்நோய் மருந்து (1091)

எனும் திருக்குறளை ஆங்கிலத்தில் யாரோ எடுத்து உரைத்த பொழுது, அதைக் கேட்டு, இக்குறளின் பொருள் ஆழத்திலும், கலையழகிலும் தம் உள்ளத்தை இவர் பறிகொடுத்துவிட்டார். பிறகு, தொடர்ந்து இவர் திருக்குறளைப் படித்து வந்தார். இதன் பயனாக, 1854 இல் ஜெருமானிய மொழியிலும் 1856 இல் இலத்தீன் மொழியிலும் டாக்டர் கிரால் திருக்குறளை மொழிபெயர்த்து ஐரோப்பியர் இடையே வள்ளுவத்தைப் பரப்பும் அரும்பணியைச் செய்துற்றார்.[25]

திருவள்ளுவரின் நகைச்சுவை உணர்வு கோபன்ஹறவர்[26] (A. Scophenhauer) எனும் மற்றொரு ஜெருமானிய அறிஞரைக் கவர்ந்து உள்ளதைக் காணுகின்றோம்.

> மக்களே போல்வர் கயவர்; அவரன்ன
> ஒப்பார் யாங்கண்டது இல் (1071)

இக்குறட்பாவில், 'கயவர்கள் யார்? அவர்களும் மனிதர்களைப் போன்றவர்களே' என்று வள்ளுவர் கயவர்களை எள்ளி நகையாடுகிறார். 'வடிவத்தால் மனிதர்களே ஒழிய', அறிவால், உணர்வால் அவர்கள் மனிதர்கள் அல்லர்' என்பதை வள்ளுவர் தெளிவுறுத்துவதில் நுட்பமாக நகைச்சுவை வெளிப்படு

வதைக் காணலாம்.[27] இந்தக் குறள் இவரைப் பெரிதும் கவர்ந்த தாகத் தெரிகிறது.

இங்கர்சால் (Ingersol) [28] எனும் பகுத்தறிவாளர் திருக் குறளிடத்துப் பேரீடுபாடு கொண்டு இருந்தார். திருவள்ளு வருடைய கட்டற்ற சிந்தனைப் போக்கும், அறிவை முதன்மை யாகப் போற்றும் பண்பும் இங்கர்சாலின் உள்ளத்தைப் பெரி தும் கவர்ந்தன.

அறிவு அற்றம் காக்கும் கருவி (421)

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (355)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (423)

எனும் குறட்பாக்களை இங்கர்சால் அடிக்கடி மேற்கோ ளாகக் காட்டி எழுதியும், பேசியும் வந்துள்ளார்.[29]

காந்தியடிகளின் குருநாதர் தால்ஸ்தாய். அவரிடமிருந்தே அறப்போரின் (சத்தியாக் கிரகம்) அருமைபெருமைகளை யும், நெறிமுறைகளையும் காந்தியடிகள் கற்றதாகக் குறிப்பிட் டுள்ளார்.[30] தால்ஸ்தாய் 'இந்து ஒருவருக்கு எழுதப்படும் கடிதம்' என்பதைக் கி.பி. 1906 இல் எழுதியுள்ளார். அதில் "இந்துக்களின் குறள் காட்டும் வாழ்க்கை நெறியைத்" தால் தஸ்தாய் விளக்கியுள்ளார். அக்கடிதத்தில், பெரிதும் தம்மு டைய உள்ளத்தைக் கவர்ந்த சில குறட்பாக்களை அவர் மேற் கோளாகக் காட்டியுள்ளார்.[31]

சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கு இன்னா
செய்யாமை மாசு அற்றார் கோள் (311)

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும் (313)

கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசு அற்றார் கோள் (312)

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல் **(314)**

அறிவினான் ஆகுவது உண்டோ? பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை **(315)**

பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும். **(319)**

*எனும் இந்த ஆறு குறட்பாக்களும். திருக்குறளில் 'இன்னா செய்யாமை' எனும் அதிகாரத்தில் (32) இடம் பெற்றுள்ளன வாகும். இவை யாவும், கிறித்துவ சமயத்தின் அருட்கொள் கை'யை உணர்த்துவனவாகத் தால்ஸ்தாய் கருதுகிறார்.*

*தால்ஸ்தாயின் கட்டுரையில் இருந்தே, நம் அண்ணல் காந்தியடிகள், திருக்குறளின் சிறப்பை உணர்ந்து, அதனைப் படிக்கத் தொடங்கினார் என்பதை அவருடைய எழுத்துகளில் இருந்து அறிகிறோம்.*

*இந்நூற்றாண்டின் இடைப் பகுதி வரை (1856 - 1950) சிறப்பு மிகு ஆங்கில நாடக ஆசிரியராகவும், உலகப் பேரறிஞ ராகவும் ஜார்ஜ் பெர்னாட்ஷா விளங்கினார். அவர் புலால் உணவை வெறுத்தவர்; 'காய்கறி உணவு முறையே நல்லது; சிறந்தது!' என்பதைத் தம் வாழ்க்கையின் மூலம் உலகிற்கு உணர்த்தியவர். அடிக்கடி,*

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும் **(260)**

*எனும் திருவள்ளுவரின் கருத்தினை, அறிஞர் ஷா எடுத் துரைப்பார்.*

*1948 ஆம் ஆண்டு, கிறிஸ்மஸ் சமயத்தில் 'டைம்ஸ் ஆப் லண்டன்' (Times of London) எனும் பத்திரிகையில், ஒரு கேலிச் சித்திரம் வெளியிடப்பட்டது. அறிஞர் பெர்னாட் ஷா நாற் காலியில் அமர்ந்து இருக்கும் காட்சி அது! அவருடைய கால் அடியில் ஆடு, மாடு, மான், பன்றி, கோழி, புறா போன்ற விலங் குகளும் பறவைகளும் நன்றியுணர்வோடு அவரை நோக்கிய*

வண்ணம் படுத்துக் கொண்டும், நின்று கொண்டும் உள்ளன. அவரைச் சுற்றி, கொடிய விலங்குகளான புலி, கரடி, சிங்கம் போன்றவை அமைதியாக நின்று கொண்டு, அவரை ஆர்வத் தோடு நோக்குகின்றன. இந்தக் கேலிச் சித்திரம் வள்ளுவ ருடைய 'கொல்லான் புலாலை மறுத்தானை' எனும் குறட்பா விற்கு வரையப்பட்ட நல்ல தொரு கருத்து விளக்கப்படமாகும்.

இந்தப்படத்தை, 1949 ஆம் ஆண்டு, சனவரி மூன்றாம் வார இதழில், தில்லியிலிருந்து வெளிவந்துகொண்டு இருந்த 'ஷங்கர்ஸ் வீக்கிலீ' (Shankar's Weekly) அப்படியே வெளி யிட்டு, படத்தின் கீழே, மேற்கண்ட திருக்குறளைக் குறிப்பிட் டிருந்தது. "புலால் உணவை உண்பதை வாழ்க்கைப் போக் காகக் கொண்டுள்ள மேற்குநாட்டு மக்கள் இடையே 'புலால் உண்ணாமை'யே சிறந்த வாழ்க்கை நெறி என்பதனைப் பெர் னார்ட் ஷா, திருக்குறளைச் சான்று காட்டி விளக்கிவந்தார்" என்பதன்னை உணர்த்தவே இந்தக் கேலிச்சித்திரம் வெளி யிடப்பட்டது.

நம் தேசத் தந்தை காந்தியடிகள் உள்ளத்தைத் திருக் குறள் எவ்வாறு கவர்ந்து இருந்தது என்பதை நாம் முன்னரே கண்டோம். இறப்பு[32] என்பது என்ன? என்பதைப்பற்றி விளக்க ஓர் இடத்தில்,

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு (339)

என்னும் திருக்குறளை எடுத்துக் காட்டி, 'இதை விடத் தெளி வாக இறப்பைப்பற்றிக் கூற இயலுமா?' என்று அவர் அறிவித் துள்ளார். மேலும் இந்தக் குறட்பாவின் கருத்தினை,

உறக்கமும் மறதியும் அன்றி
இறப்பு என்பது வேறொன்றும் இல்லை.

எனும் ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்தின் (Wordswoth) கவிதை அடியோடு, ஒப்பிட்டுப் பார்க்குமாறு அவர் வேண்டு கிறார்.[33] அகிம்சை நெறிக்கும், அறப்போருக்கும் திருக்குறளை, நம் காந்தியடிகள் பின்பற்றியதோடு, சிறப்புமிகு சிந்தனைத்

தெளிவிற்கும் வள்ளுவத்தைப் பயன்படுத்தியுள்ளார் என்பது இதனால் புலனாகின்றது.

## அரவிந்தரின் அருண்மொழி

இந்நூற்றாண்டின் சிறப்புமிகு இந்தியத் தத்துவஞானி தவத்திரு அரவிந்தராவார். அவர்,

திட்டமிட்ட நல்ல அமைப்பும், சிறப்புமிகு கருத்து வளமும், கவச்சிமிகு உணர்த்தும் திறனும் வாய்ந்தது தமிழ் முனிவரான திருவள்ளுவர் அருளிய திருக்குறளாகும். இதைப் போன்ற நீதி நூலினை இதுவரையாரும் இயற்றியது இல்லை.[34]

என்று அறிவித்துள்ளமை வள்ளுவருக்குச் சூட்டப் பட்டுள்ள சிறப்புமிகு புகழ்மாலையாகும்.

## பொதுமை நெறி

இப்பொழுது ஹவாய்த் தீவில், கபா (Kapàa) எனும் ஊரில் 'சைவ சித்தாந்த திருச்சபை' (Saiva Siddhanta Church) எனும் நிறுவனத்தை 'மாஸ்டர்' சுப்பிரமுனியா (Master Subra muniya) எனும் அமெரிக்கர் நடத்தி வருகிறார். அவர் "புனிதக் குறள்: சைவ இந்து சமயத்தின் வேதம்" எனும் சிறு நூல் ஒன்றை எழுதியுள்ளார். அந்நூலில்,

> எல்லாச் சமயங்களும் சந்திப்பதற்குரிய இடமாக, பொது இடமாகப் புனிதக் குறள் இன்று சிறப்புடன் விளங்குகிறது. திருவள்ளுவர் காட்டும் வாழ்க்கை நெறி, இன்றைய புத்துலகிற்கு உரிய 'பொதுமை (அற) நெறி' எனத் துணிவுடன் கூறலாம்[35]

என்று உலகிற்கு ஆசிரியர் சுப்பிரமுனியா அறிவிக்கின்றார்.

இவ்வாறு சான்றோர்கள் பலர் - உலகப் பேரறிஞர்கள் பலர் - திருவள்ளுவரைப் பல கோணங்களில் கண்டுள்ளனர்; இன்றும் திருக்குறளைப் படித்துப் பயன்பெறுவதோடு, உலகின் பல பகுதிகளில் அதைப் பரப்பியும் வருகின்றனர்.

அடிக்குறிப்பு


1. T. Lakshmana pillai: `Christ and Tiruvalluvar Tamilian Antiquary 1918, p. 57.
2. திருக்குறள் நூலடைவு,
3. Xavier, Thani Nayagam, Tamil Studies Abroad, p. 55.
4. K. K. Pillay: South India and Sri Lanka, Univ. of Madras, 1975; . 142
5. Fritz Strich, Goethe and World Literature, Routledge kegan paul, London, 1945; . 349
6. Journal of Asiatic Society, Calcutta, 1848, Vol. VI, p. 172
7. Rev. G.U.pope, The `Sacred Kurral, `Henry Frowde London, 1886; .XVI
8. பாவேந்தர் பாரதிதாசனாரின் 'உலகப்பன் பாட்டினைக் காண்க
9. Albert Schweitzer, Indian Thought and Its Develop ment, Wilco, Bombay, 1960; p. 199.
10. Glazov. J.J. & Krishnamurti, A; Tirukkural, Moscow. 1963, preface.
11. Edward Jewitt Robinson, Tamil Wisdom, Kazhagam, Madras, 1957; p. xvii

    Louis Jacolliot, Le pariah dans I' humanite, paris 1876.

    Robert Coldwell, A Comparative Grammar of the Dravidian Languages, Univ. of Madras, p. 1956
12. Edward Jewitt Robinson op. cit; p. xviii G.U. pope, The `Sacred' Kurral, .p .iii
13. Charles E. Gover, The Folk Songs of Southern India, kazhagam, madras, 1959; PP. xvi-xvii.
14. G.U. pope, op. cit, . iv.; R.Caldwell, op. cit, 2nd edn; Appx. No-2.
15. மறைமலையடிகள், திருக்குறள் ஆராய்ச்சி, பாரி, சென்னை, 1957.

    ச. சோமசுந்தரபாரதியார், திருக்குறள் ஆராய்ச்சி, நாவலர் புத்தக நிலையம், மதுரை, 1971.
16. M. Winternitz, A History of Indian Literature, Univ. of Calcutta, 1963, Vol.ii; p. 128.

17. M. Jules Vinson, Me' Langes Orientaux paris, Leroux, Se. 1883, p. 12
18. வீடுபேற்றினைக் கூறாமையால், போப்பு இவ்வாறு கருது கிறார்.
19. G.U. pope, po. cit. p. iv.
20. Charles E. Gover, po. cit. p.211
21. W.H. Drew, The Cural of Tiruvalliuvar, Madras 1840, p. V.
22. G.U.pope, op. cit. p. xiii.
23. Dr. R. Arulappa, God: the Bridegroom, Tirukkural Inbattupal commentary pathipagam. Madras, 1976
24. Albert Schweotzer, op. cit: p. 197.
25. திருக்குறள் நூலடைவு, சென்னைப் பல்கலைக்கழகம், 1974, பக், 80-81.
26. ஜெருமானிய தத்துவஞானி (கி.பி. 1786 - 1860) யாகிய கோபன்ஹவர், இந்திய மெய்ப் பொருள் இயலில் பேரீடு பாடு கொண்டு இருந்தார்.
27. A. Schopenhauer,·The Two Fundamental problems of Ethics, Luzac & Co,. London. 1878; p.146
28. இராபர்ட் இங்கர்சால் (1833 - 99). அமெரிக்காவின் சிறப்பு மிகு வழக்கறிஞர்; எழுத்தாளர்; பேச்சாளர்; கிறித்துவ சம யத்தின் சீர்கேடுகளைக் கண்டித்த காரணத்தால், 'நாத்தி கர்' எனும் பழிக்கு ஆளானவர்.
29. Collected Works of Robert Green Indgersol. Vol.2, `Ramblings on Rationalism Thomas & Co,. New York, 1886, P. 274-75.
30. சத்திய சோதனை, தமிழ்நாடு காந்தி நினைவுநிதி, மதுரை, 1960; பக். 139.
31. Recollections and Essays of Leo Tolstoy, London, 1932, p. 421.

    இதன் விளக்கத்தை, இந்நூலின் பக். 60-67 இல் காண்க,
32. இந்நூலின் 65 ஆம் பக்கத்தைக் காண்க.
33. Slected Writings from `The Young India Navajivan Trust, Ahmedabad, 1937, p.326.
34. Sri Aurobimdo, The Foundations of Indian Culture Sri. Aurobidu Ashram, Pondicherry, 1954, p. 358.
35. Master Subramuniya Holy Kural : Scripture of Saivite Hindusim, Saiva Siddhanta Church Hawaii, 1979, P. 6

# 37

# உலகப் பொதுமறை

1983

**திருக்குறளார் வீ. முனிசாமி**

திருவள்ளுவர் அருளிய திருக்குறள், உலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் பொருந்தும். சாதி, சமய, மத வேறுபாடுகள் ஏதுமின்றி, நிலைத்து நிற்கின்ற பொதுத்தன்மையான அறநெறிகளைக் கூறுவதால் இதனை உலக அறிஞர் பெருமக்கள் 'உலகப் பொதுமறை' என்று போற்றுகின்றனர்.

உலகிற்கு அறம் வகுத்த பெரியார் பலர் அரிய நீதி நூல்களை வழங்கியுள்ளனர். அத்தகைய எல்லா நூல்களையும் விடப் பொதுத் தன்மையில் சிறந்து விளங்குவதால் திருக்குறள் முதலிடம் பெறுகின்றது.

அன்று முதல் இன்று வரை மனித வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டியாகத் திருக்குறள் போற்றப் பெறுகிறது; ஆதலால், உலகில் வழங்கிவரும் பெரும்பான்மையான மொழி

களில் மொழி பெயர்க்கப்பட்டு உலக மக்களுக்கு நல்வழி காட்டியாகத் திகழ்கிறது.

திருக்குறள் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு பொருள்களையும் அடிப்படையாகக் கொண்டு மக்களின் அன்றாட வாழ்க்கைக்குப் பயன் தருகிறது. ஈராயிரம் ஆண்டு கள் சென்றாலும் இந்நூலில் கூறப்பட்ட மறைமொழிகள் அன்றுபோல் இன்றும் போற்றப்பட்டு வருகின்றன; மேலும், மனித குலம் இவ்வுலகில் உள்ளவரை போற்றப்பெறும் என்ப தும் உண்மை.

இஃது ஓர் இலங்கு நூல்; அறநூல்; மறைநூல்; மனித வாழ்க்கையினை உயர்ந்த வாழ்க்கையாக அமைத்துக் கொள் ளுவதற்கு அடிகோலும் நூல்!

பொதுவாக உலகில் வழங்கிவரும் சமய நூல்களும் மத நூல்களும், எல்லாம் வல்ல இறை வழிபாட்டினை மட்டும் உணர்த்துபவை. ஆனால், திருவள்ளுவர் அருளிய திருக்குறள், வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு வகுக்கப்பட்ட நெறி கள் அனைத்தையும் கூறுவதாகும்.

ஆட்சி முறைகள், அமைச்சர் இயல்புகள், மறவர் போர்த் திறன், உழவர் பெருமை, காதலர் வாழ்க்கை, கற்பின் திறம், பொருள் செயல்வகை, ஈகையின் உயர்ச்சி, சான்றாண்மை, இல்லற மேன்மை என்றெல்லாம் அனைத்தும் நிறைந்து செறிந் திருப்பது திருக்குறள். மனிதன் குறிக்கோளோடு வாழவேண் டும் என்பதையும் அக்குறிக்கோளினை எவ்வாறு நிறைவேற்ற வேண்டும் என்பதையும் அன்றாட வாழ்க்கையில் இந்நூல் போதிக்கின்றது.

உலகில் வாழ்ந்து வரும் மக்கள் அனைவரும் ஒரே துறை யில் வாழ்ந்து வருபவர்களாக இருத்தல் இயலாது. பற்பல துறைகளிலும் வாழ்க்கை நடத்துகின்றவர்களுக்கு அந்தந்தத் துறைக்கு ஏற்ற முறையில் அறம் வகுத்துக் கொடுக்கும் தனிச் சிறப்பு, ஆசிரியர் திருவள்ளுவர் ஒருவருக்கே உரியது. வாழ்

கின்ற வாழ்க்கையில் இயல்பாக பற்பல நேரங்களில் நமக்குத் தோன்றுகின்ற மனக்குழப்பத்தை நீக்கி, மயக்கங்களைப் போக்கி, ஐயப்பாடுகளிலிருந் [illegible] டுவித்துத் தெளிவினைப் புகட்டுவது இந்நூலாகும். இரு [illegible] ல் ஒளி அளிக்கும் சுடர் விளக்காகத் திருக்குறள் அமை [illegible] ாது.

வாழ்க்கையைத் திறமை [illegible] ன் நடத்தி வெற்றி காண்பதற்கு ஊக்கமளித்து, முயற்சி என்னும் குன்றின்மேல் நிறுத்தி, புகழேந்தியாக வாழ வழி வகுக்கின்றது திருக்குறள். காலச் சூழ்நிலைகளால் தளர்ந்திருக்கும் உள்ளத்தில் ஆண்மையைப் புகுத்தி, எதற்கும் அஞ்சாமல் கவலை நீக்கி வாழ்கின்ற வாழ்க்கையினை உணர்த்துகின்றது; மனக் கவலைக்கு மருந்தாகவும் இந்நூல் அமைந்துள்ளது.

நம் வாழ்க்கையை நாமே உயர்த்திச் செப்பனிட்டு, ஓங்கி உயர்ந்து சிறப்புள்ளதாகச் செய்து கொள்ளுதல் வேண்டும். முயற்சி எக்காலத்திலும் உயர்ச்சியினை அளிக்கும். விடா முயற்சியை மேற்கொண்டவர்கள் செல்வப் பெருக்கில் நிலைத்து நிற்பார்கள். இந்த உண்மையினைக் குறட்பாக்கள் நன்கு வலியுறுத்துகின்றன.

இயற்கையாகவும் இயல்பாகவும் பல பிறவிகளில் தொடர்ந்து வரும் நம் வினைப்பயன்களால் ஏற்படும் தாக்குதல்களையும் எதிர்த்து நின்று வெற்றி காணும் வழியைத் திருக்குறள் போதிக்கிறது.

மனித வாழ்க்கையில் உண்டாகின்ற தாழ்வுகளையும் குறைபாடுகளையும் எண்ணிக் கொண்டு வேதனைப் படாமல் இடைவிடாத முயற்சியால், அறிவின் துணையால் இன்பம் எய்தி வாழ வேண்டுமென்று திருக்குறள் உணர்த்துகின்றது.

பிறந்த பிறப்பினாலும், கற்ற கல்வியினாலும், பெற்றிருக்கின்ற அறிவினாலும் மேம்பாடு அடைய வேண்டுமென்றால், அவன் செய்கின்ற செயல்களையே அடிப்படையான காரணங்களாகக் கொள்ளுதல் வேண்டும். பல குறட்பாக்கள் சீரிய

இந்த உண்மையினைப் போதிக்கின்றன. 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' என்னும் குறள் இதற்கு எடுத்துக்காட்டாகும்.

இல்லறத்தை மேற்கொண்டு வாழ்பவர்கள், அந்த அறத்திலேயே நின்று நிலைத்துக் கடமையாற்றி வாழ்தல் வேண்டும். இக்கருத்தினை, 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை', 'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்', 'நோற்பாரின் நோன்மையுடைத்து', 'புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன்?' என வருகின்ற குறளடித் தொடர்கள் வற்புறுத்துகின்றன.

துறவறத்தினை மேற்கொண்டுள்ள ஒருவன் அதே வாழ்க்கையில் அதே நெறியில் நிற்றல் வேண்டும். 'மறந்தார் கொல் மற்றையவர்கள் தவம்', 'எண்ணின் தவத்தான் வரும்', 'ஈண்டு முயலப்படும்', 'அவம் செய்வார் ஆசையுட்பட்டு' என்பன போன்ற குறட்பாத்தொடர்கள் தவத்தின் சிறப்பினை உணர்த்துவன. இவற்றின் மூலம் அவரவர் தாங்கள் மேற்கொண்ட நெறியில் நின்றே கடமையாற்ற வேண்டும் என்ற பேருண்மை உணர்த்தப் பெறுகிறது.

இல்லற வாழ்க்கையில் வாழ்பவனுக்கு 'அன்பு' என்கின்ற உயர் பண்பினைக் கூறிய ஆசிரியர், அந்த அன்பு வளர்ந்து பெருகி உலகில் உயிர் வாழ்கின்ற இனங்கள் அனைத்திடத்தும் கருணை நிறைந்து இருக்கவேண்டிய சிறந்த தவசிகளுக்கு 'அருளுடைமை' என்பதனைப் போதித்தார்.

மறவன் ஒருவன் போர்க்களத்தில் எதிர்த்து வருகின்ற பகைவர்களைக் கொல்லுதல் வேண்டும். அதுவே அவனுடைய கடமையாகும்; அவன் செய்ய வேண்டிய அறமும் ஆகும். அவ்வாறின்றி, அந்த இடத்தில் அன்பினைக் காட்டிப் பகைவர்களைக் கொல்லவில்லையென்றால், அவன் கடமையை மறந்தவனாவான். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக வேண்டிய அந்தணாளனாகிய துறவியோ, எல்லா உயிர்களிடத்தும் எல்லாக் காலத்திலும் அருளுடைமை கொண்டவனாக இருத்தல் வேண்டும்.

தமக்கென்று விதிக்கப்பட்ட வாழ்க்கை நெறிகளை அறிந்து புரிந்து, கடமையாற்றுபவனே அறம் செய்பவனாவான். 'துறந்தார்கொல்' என்று கூறப்படுகின்ற தவவாழ்க்கையினை மேற்கொண்ட முனிவர்களைத் தவிர, உலகில் பல வகையான துறைகளில் வாழும் ஏனையோர் அனைவருமே இல்லறத்தார்கள் என்று கொள்ளுதல் வேண்டும்.

திருவள்ளுவருடைய அறநெறிகளை வாழ்க்கையில் பின்பற்றி வெற்றி கண்டு, மேலான வாழ்க்கையில் பயனடைந்து வருபவர்கள் இன்றும் பலருண்டு. எண்ணியதை எண்ணியபடியே அடைய முடியும் என்ற மறை மொழியினை மனத்திற் கொண்டு, 'துன்பம் உறவரினும் செய்க' என்ற பொன்னுரையைப் பின்பற்றி இன்ப வாழ்க்கை வாழ்தல் வேண்டும்.

மனித மனத்தில் எத்தகைய சூழ்நிலையிலும் 'மடி' என்று சொல்லப்படுகின்ற.சோம்பல் தன்மையே வருதல் கூடாது என்பது ஆசிரியரின் உறுதியான 'மறைஉரை' யாகும்.

உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளினை மிகுந்த முயற்சியினால் ஈட்டுதல் வேண்டும் என்று வற்புறுத்தி, வலியுறுத்திக் கூறுகின்ற ஆசிரியர், அவ்வாறு ஈட்டிய பொருளினை எவ்வாறெல்லாம் நன்முறையில் செலவு செய்தல் வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றார். இவ்வாறு ஈடு இணையற்ற பெருமை வாய்ந்த உண்மைகளையெல்லாம் கொண்டிருப்பதால்தான் உலகப் பெரியார்கள் 'இது போன்ற நூல் ஒன்று இதுவரை தோன்றியதில்லை' என்று கூறுகின்றார்கள்.

குறட்பாக்களின் அருமையினை உணர்ந்த உலகோர் இந்நூலாசிரியரை 'தெய்வப் புலவர் திருவள்ளுவர்' என்று உயர்த்திக் கூறினார்கள். திருவள்ளுவ மாலை என்னும் நூலில் உள்ள ஐம்பத்தொரு பாடல்களும் திருக்குறளின் அரிய சிறப்பியல்புகளை ஓதுகின்றன.

பல்வேறு வகையான கொள்கைகளை உடையவர்களும் பொதுமறையான இந்நூலினை வழிபாட்டுக்குரிய நூலாக ஏற்றுக் கொண்டுள்ளனர்.

மனம் எப்போதும் தூய்மையான அறவழியில் நிலைக்க வேண்டும் என்ற பொன்னான உண்மையினைக் கூறுகின்ற பொழுது, 'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செயல்' என்ற குறட்பாவினை அமைத்துக் காட்டினார்.

பற்பலவகையான உயர்ந்த அறநெறிகளைச் செம்மை யான அறங்களாகக் கூறுகின்றார். என்றாலும், அவற்றில் ஏதாவது ஓர் அறத்தினை, உறுதியாகப் பின்பற்றி வருவானே யானால், ஏனைய அறங்கள் இயல்பாகவே அவனைச் சார்ந்து நிற்கும். இது அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய உண் மையாகும்.

உலகில் வாழ்கின்ற மக்களின் மனிதத்தன்மை நிறைந்த உள்ளங்களில் தோன்றக் கூடிய எண்ணங்கள் அனைத்தையுமே குறிப்பாக ஆசிரியர் திருவள்ளுவனார் பற்பல இடங்களில் உணர்த்துகின்றார். இந்நூலுக்கு ஒப்பாகக் கூறுவதற்கோ அல்லது இந்நூலைவிட உயர்வாகக் கூறுவதற்கோ உலகில் பிறிதோர் நூல் இல்லை என்பது எக்காலத்தும் உண்மையாகும்.

சிந்திக்கச் சிந்திக்கப் பெருகி வரும் எண்ணங்களைத் தரக்கூடிய குறட்பா சுருக்கமான வடிவத்தில் அமைக்கப் பட்டிருப்பது பெருஞ் சிறப்பாகும்.

திருவள்ளுவர் ம்றை மொழிகள் அருளிய நிறைமொழி அந்தணராவார். அவர் அருளிய கருத்துக்கள் எல்லாம் உல கில் எங்கணும் புகழ்மணம் வீசிப் பெருமிதத்துடன் விளங்கிக் கொண்டிருக்கின்றன.

திருக்குறளுக்கு இணையான ஒரு நூல் இவ்வுலகில் இனித் தோன்றுதல் அரிது என்று பேரறிஞர்கள் நன்கு உணர்ந் துள்ளார்கள்; நமக்கும் உணர்த்தியுள்ளார்கள். 'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்று கற்றறிந்த புலவர் பெரு மான் ஒருவர் கூறிய சொற்கள் எவ்வளவு உண்மையாக அமைந்துவிட்டன!

இந்நூலினை 'ஒழுக்க நூல்' என்றே கூறுகின்றனர்; 'முதல் நூல்' என்றும் போற்றுகின்றார்கள். பல பெயர்களைக் கொண்ட இந்நூலுக்குப் 'பொய்யா மொழி' என்பதும் அரிய தொரு பெயராகும். தீமைகளை நிரப்பிக் கொள்ளுகின்ற மனத்தினைக் 'குறளடிச் சொற்கள்' திருத்தி அமைக்கும் ஆற்றல் படைத்தவையாகும்.

பொல்லாத மக்கள் உள்ளங்களிலே தோன்றுகின்ற தீய எண்ணங்களை யெல்லாம் சுட்டிக் காட்டி, நல்லபடி வாழ் வதற்கு வழி செய்கின்ற நூலாகவும் இஃது அமைந்துள்ளது.

இந்நூல் தமிழ் மொழியில் எழுதப்பட்டாலும் குறிப் பிட்ட ஒரு மொழியினர்க்கோ அல்லது நாட்டினர்க்கோ அமைந்த நூலாக எழுதப்படவில்லை. தேமதுரத் தமிழ் மணம் உலகமெலாம் பரவும் பணியினை இந்நூல் செய்கின்றது. 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து' என்ற வாய் மொழி உண்மையிலும் உண்மையாகும்.

ஒரு நூலின் பெருமையினைப் புகழ்ந்து பாடுவதற்கு மற்றொரு நூல் தோன்றியது என்ற உண்மை, அக்காலத்தில் திருக்குறள் ஒன்றிற்கே உரியதாகும். இவ்வாறு வேறு எந்த நூலுக்கும் அமைந்ததில்லை. பேராசிரியர்கள் பத்துப் பேர் களுக்கு மேல் உரை எழுதிய தனிச் சிறப்புமிக்க நூல் திருக் குறள் ஒன்றேயாகும். இவ்வாறு பிற நூல்களுக்குப் பல உரைகள் தோன்றியதாகத் தெரியவில்லை.

தமிழ் மக்கள் உலகப் புகழ் எய்தி, பெருமைப்பட்டுக் கொள்வதற்கு முதற் காரணமாக அமைந்த திருக்குறளினை அருளிய திருவள்ளுவனாருக்கு, நாம் என்றென்றும் கடமைப் பட்டவர்களாவோம்.

உண்டவர்களுக்கு இறவாத இன்பத்தை அளிப்பது 'அமிழ்தம்' என்று கூறுவார்கள். அதுவே போன்று, கற்று உணர்ந்தவர்களுக்கு அழியா அமைதியினையும், அறிவினை யும், இன்பத்தினையும் கொடுத்து வருவது இந்நூலேயாகும்.

வேற்றுமைகளைப் பல்வேறு முறைகளில் உண்டாக்கிக் கொண்டிருக்கும் உலகியல் தன்மைகளில், ஒற்றுமையினை நிலைநிறுத்தி ஒன்றுபட்டு வாழ்தற்கு வழி வகுக்கும் நூல் இஃது ஒன்றே.

திருவள்ளுவர் அருளிய பொன்னுரையான 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் அரிய உண்மை திருவள்ளுவர் ஒருவருக்கே பொருந்துவதாகும். உலகில் உயர்வாகக் கருதப் படுகின்ற நூல்களையெல்லாம் ஆசிரியர் திருவள்ளுவர் நன்கு கற்றறிந்து, அக்கருத்துக்களைத் தழுவி எழுதுகின்றார். தமக்கு முன்னேயிருந்த பேரறிஞர்கள் கருத்துக்களையும் தாம் ஏற்றுக் கொண்டு நூலினை அமைத்திருக்கின்றார்.

அறநெறிகளைக் கூறிக் கொண்டு வருகின்ற பொழுது மக்க ளிடையே பரவி இருக்கின்ற அறமல்லாத முறைகளையும் கண்டிக்கிறார். ஒவ்வொருவருக்கும் செயற்கை அறிவுடன் இயற்கை அறிவும் நிறைந்திருக்க வேண்டும் என்பது ஆசிரி யரின் கோட்பாடாகும். மனிதப் பிறவி எடுத்தவர்கள் மிருகத் தன்மையுடனும் மற்றும் தாழ்ந்த உயிரினங்கள் போலவும் வாழ்ந்து வருகிறார்களென்றும் சுட்டிக் காட்டுகின்றார்.

மக்கள் சமுதாயம் பெருமை பெற்று வாழ்வதற்கு, ஒழுக் கத்தினைப் பற்பல இடங்களிலும் பற்பல முறைகளிலும் ஆசிரி யர் சுட்டிக் காட்டத் தவறவில்லை. ஆதலால் தான் எல்லா வகையான பேரறிஞர்களும் ஒரே குரலில் திருவள்ளுவரைப் புகழ்ந்து பேசலாயினர். வடமொழியில் காணப்படுகின்ற வேதங்களில் உள்ள நன்மை பயக்கும் அரிய உண்மைகளெல் லாம் ஒன்றாகக் காணப்படுகின்ற நூல் திருக்குறளே என்று கூறுகின்றார்கள்.

மக்கள் அனைவரும் நாள்தோறும் தம் நடைமுறை வாழ்க் கையில், திருவள்ளுவர் உணர்த்திய நெறிகளில் வாழ ஆரம் பித்துவிட்டால், உலகில் காணப்படுகின்ற பலவகைப் பட்ட தீமைகளும் கொடுமைகளும் மறைந்தோடிவிடும். அது மட்டு

மல்ல; இனி, அவை நிகழ்வதற்கும் இடம் இராது என்றே சொல்ல வேண்டும்.

திருக்குறள் மனித குலத்திற்கே ஒளி வீசுகின்ற முழுமையான, நிறைவான, பேரறநூல் என்று உலகப் பெரியார்கள் கூறுகின்றார்கள். இந்நூல் மிகமிகப் பழமையான உலக நூல் என்று பாராட்டப்பட்டு வருகின்றது.

இந்நூலாசிரியர் ஓர் அறவோர்; செந்தண்மை பூண்ட அந்தணாளர்; இலங்கு நூல்கள் பலவற்றையும் கற்றுத்தேர்ந்த பேராசிரியர்; கற்றறிந்த பெரியார்களுக்கெல்லாம் தாம் வரம் பாகிய தன்மையாளர்!

இவரைப் போற்றாத தேசமில்லை; புகழாத மக்கள் இலர். இன்றைய உலகம் திருவள்ளுவரை நன்றாகப் புரிந்து கொண்டது என்று கூறவேண்டும். திருக்குறளைப் பல்வேறுபட்ட கொள்கையினரும் உரிமையோடு தங்கள் நூலாகப் போற்று கின்றனர். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற சமத்துவத்தை வேரூன்றச் செய்யும் அரிய பொன்னுரை போல நூல் முழுதும் மனித குலத்தைச் செப்பனிடும் செம்மொழிகள் பரவலாகக் காணப்படுகின்றன. சிந்தனை செய்யும் பெரும் சிந்தனையாளர்க்கு இந்நூல் சிந்தனைச் சுரங்கமாக அமைந் திருக்கின்றது. திருக்குறள் காலத்திற்குக் கட்டுப்பட்ட நூல் அல்ல!'

வாழ்க்கைக்குத் தேவையான நெறிமுறைகளையெல்லாம் தட்டுப்பாடின்றி இந்நூல் வழங்கிக் கொண்டிருக்கிறது. திருவள்ளுவரும், தாம் கற்பனை நிறைந்த பேரறிஞர் என்பதைப் பல இடங்களில் வெளிப்பட உணர்த்துகின்றார். உலகில் வாழும் மக்களின் உள்ளம் நல்ல பண்புகளைப் பெற்று, நல்ல ஒழுக்கம் நிறைந்ததாக, உணர்ச்சி மிகுந்ததாக, அறிவுடைமையுடன் எல்லா இன்பமும் பெற்று, பிறருக்குப் பயன்பட்டு வாழ்வதையே ஆசிரியரின் உள்ளம் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது.

திருவள்ளுவர் குறிப்பாக நாடு, மொழி, இனம் என்பன வற்றையெல்லாம் கடந்து நிற்கும் பேராசிரியர் ஆவார். உலகில் இன்று போற்றப்பெறும் அறிவு நூல்கள் அனைத்தையும் விட இந்நூல் மேலானதாகத் திகழ்கின்றது. இவ்வாசிரியர் சொல் வளத்திலும், பொருள் வளத்திலும், அனுபவத்திலும் தலை சிறந்தவராகத் திகழ்கின்றார். உலகில் நற்கருத்துக்கள் வழங்கி உள்ள மற்ற பேராசிரியர்களின் கருத்துக்களையெல் லாம் இவர் அறிந்திருக்கின்றார்.

உலக மக்கள் அனைவரையும் ஒன்றாக ஒப்பு நோக்கி அனைவருக்கும் பொதுத் தன்மையான கருத்துக்களை இவர் வழங்கி இருக்கின்றார். உலகில் பலதரப்பட்ட வாழ்க்கையினை நடத்துகின்ற பற்பல துறைகளிலும் மேம்பாடான தெளிந்த அறிவும், நிறைந்த அனுபவமும், எடுத்துக் கூறும் ஆற்றலும் திருவள்ளுவரிடம் நிரம்பக் காணப்படுகின்றன; உலகின் இயற்கை, செயற்கை என்பனவற்றில் அடங்கியுள்ள தத்து வங்கள் அனைத்தையும் நன்கு புரிந்துகொண்டிருக்கின்றார். குறிப்பிட்ட ஒரு மதத்தையோ சமயத்தையோ சேர்ந்தவர் என்று இவரைக் கூற முடியாது.

இவ்வாசிரியர்கள் கருத்துக்களை நன்கு புரிந்து கொள் வதற்குப் பொது அறிவும், சிந்தனா சக்தியும் நிறைந்திருக்க வேண்டும். எல்லா உயிரினங்களையும் தம் உயிர்போலக் கருதி, மனிதப் பண்புடன் பழகி, இயன்றவரை பிறருக்கு ஆதரவு தந்து வாழ்வதே மனிதப் பிறவிக்கு அடையாளமென்பது இவருடைய கருத்தாகும்.

அருமையான குணங்களையும், மேலான ஒழுக்க நெறி களையும் பின்பற்றி வாழ்வதே இறைவழிபாடாகும் என்பதனை இவர் நன்கு எடுத்துக் காட்டுகின்றார். இந்த நூலினை அறிவுச் சுரங்கம், கரையிலாக் கல்விக் களஞ்சியம், வற்றாத ஊற்று, சிந்தனைச் சேமிப்பு என்றெல்லாம் அறிஞர் போற்று கின்றனர். வேறுபட்டுக் கிடக்கும் இந்த உலகினை ஒன்று படுத்தும் 'சக்தி' இந்த ஒரு நூலில் தான் நன்கு அமைந்துள்ளது.

உலகில் வாழ்கின்ற மக்களின் உள்ளங்களில் எல்லாம் தோன்றுகின்ற எண்ணங்கள் அனைத்தையும் உணர்ந்து அறிந்த நிறைமொழி மாந்தர் இவரே ஆவார். திருவள்ளு வரை நன்கு ஆராய்ந்தறிந்த பேரறிஞர்கள் இவரை 'அனுபவக் கடல்' என்று குறிப்பிடுகின்றனர். மிகப் பெரிய தத்துவங்களையும் ஆழ்ந்த கருத்துக்களையும் சுருக்கமாகச் சொல்லும் தனிச் சிறப்பு இவர் ஒருவருக்குத்தான் உண்டு. இந்த நூலுக்கு ஒழுக்க நூல், அறிவு நூல், சமரச நூல், அரசியல் நூல் என்றெல்லாம் பல பெயர்களைச் சூட்டி மகிழ்கின்றனர். எல்லா மக்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய, ஒற்றுமையான ஓர் இறைவழிபாட் டினைத் திருவள்ளுவர் ஒருவர்தான் உலகிற்குத் தந்திருக்கின் றார். இந்த உலகம் பொருளாதாரத்திலும் மற்ற இன்றியமை யாத் தேவைகளிலும் சிறந்து விளங்குவதற்குக் கடினமான உழைப்புத்தான் அடிப்படைக் காரணமென்று பற்பல முறை களிலும் அவர் கூறுகின்றார்.

எனவேதான், பிற்காலத்தில் வந்த பேரறிஞர்கள் பலரும் தம் கருத்துக்களை வலியுறுத்தக் குறட்பாக்களை மேற்கோள் காட்டினர். 'நவில்தொறும் நூல் நயம்' என்று கூறுவதற்கிணங்க இந்நூலினைப் பன்முறையும் படித்து உண்மை உணர்தல் வேண்டும்.

இந்நூலினை ஓர் 'செயல் நூல்' என்றே புலவர்கள் கூறு கின்றார்கள். இது ஒரு 'தாய்மை நூல்' என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். உலக இன்பங்கள் அனைத்தையும் நன் முறை யில் துய்த்து வாழ வேண்டுமென்பதே இவர் குறிக்கோளாகும். கொடியதான கொடுமைகள், நோய் நொடிகள், வறுமை, பசிப்பிணி, உயர்வு தாழ்வு முதலானவை இல்லாத சமுதாயத்தை உண்டாக்கிக் கொடுத்தவர் திருவள்ளுவப் பெருமான் ஆவார். ஆதலால்தான், திருக்குறளை உலகத்தில் ஒப்பில்லாத 'உலக நூல்' என்றும், ஈடு இணையிலாத 'பெருநூல்' என்றும் பெரும் புலவர்கள் கூறுகின்றார்கள்.

இதுவரை இவ்வுலகில் தோன்றிய அறிஞர்களுக்கெல் லாம், சான்றோர்களுக்கெல்லாம், முனிவர்களுக்கெல்லாம்

மாமேதைகளுக்கெல்லாம் திருவள்ளுவர் முதன்மையான வராகத் திகழ்கின்றார். இந்த உலகம், திருவள்ளுவர் போன்ற எல்லாம் நிறைந்த மாமேதை ஒருவரை வருங்காலத்தில் சந்திக்க முடியாது என்று கூறுவது மிகையாகாது. உலகம் முழுவதை யுமே பொதுப் பார்வையில் நோக்கி, பொதுத் தன்மையில் பொதுவான மறை மொழிகளை வாரிவழங்கிய, விரிந்து பரந்த கடல் போன்ற உள்ளம் இவர் ஒருவருக்குத்தான் இருந்திருக்க முடியும்; இவர் வானளாவிய நிறை அறிவு பெற்றவர்; ஆராய்ந் தறியும் இயற்கையறிவு நிறைந்தவர்; எண்ணிறந்த நூல்களைக் கற்றவர்; சிந்தனை ஆற்றல் நிறைந்த தெள்ளியர்; இவருடைய ஆற்றலுக்கு எல்லையில்லை என்றே கூறவேண்டும். செயல் படுத்தி வாழ்வதே வாழ்க்கை என்பதைப் பன்முறையும் இவர் வற்புறுத்துகின்றார்.

உலகில் உள்ள மக்கள் பலவகையான முறைகளில், வெவ் வேறு வகைகளில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். ஆதலால், அவரவர்களை அந்தந்த நெறிகளில் இருக்கச் செய்து, அற நெறிகளைப் போதிக்கும் திருவள்ளுவனாரின் ஆற்றல் தனிச் சிறப்பான ஆற்றலாகும். ஆசிரியர் வள்ளுவனாரின் நெறி வழிப்படி வாழ்பவர்கள் ஓங்கி உயர்ந்து சிறப்படைவார்கள் என்பது திண்ணம்.

நம் உள்ளத்தில் தோன்றுகின்ற எண்ணங்களெல்லாம் உயர்ந்த எண்ணங்களாக இருக்கட்டும்; நாம் இடைவிடா முயற்சி என்னும் ஏணிப் படிகளில் ஏறிச் செல்வோமாக! பிறருக்குப் பயன்பட்டு வாழ்வோமாக! உயர்ந்த ஒழுக்கம், பண்புடைமை என்பவையெல்லாம் நம் வாழ்க்கையின் மூச் சாக இருப்பனவாகுக! வையத்துள் வாழ்வாங்கு வாழவேண் டும் என்ற கடமை உணர்ச்சி தோன்றி, புகழுடன் வாழ்வதே ஆசிரியர் பெருமானுக்கு நாம் காட்டுகின்ற செய்ந்நன்றி யாகும்.

# 38

# வாக்காளர்களுக்கு வள்ளுவரின் அறிவுரைகள்

*1988*

**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

மனித சமுதாயத்தில் சொத்துரிமை பற்றிய கருத்து தோன்றிய காலத்திலிருந்து அரசியல் சிந்தனை, ஆட்சிமுறை,ஆட்சிக் குரிய விதிமுறைகள் முதலியன தோன்றி வளர்ந்து வந்துள் ளன. இவை காலத்திற்குக் காலம் படிமுறையில் வளர்ந்து வந்துள்ளன. ஆட்சிமுறை, கூட்டாட்சியில் தொடங்கித் தனி மனித ஆட்சிக்குமாறி மீண்டும் கூட்டாட்சிக்கு - மக்களாட்சி முறைக்கு மாறி வளர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

இன்றைய உலகில் பெரும்பான்மையான நாடுகள் சுதந் திரத் தன்மையுடைய தன்னாட்சி முறையில் இயங்குகின்றன. மக்களாட்சி முறையில் இயங்கும் நாடுகள் பலப்பல. அவற் றுள் நமது நாடும் ஒன்று. 1947 ஆம் ஆண்டு அடிமைத்தளையி லிருந்து மீண்ட இந்தியாவில் இப்போது மக்களாட்சி முறை நடைபெறுகிறது. ஆம். இந்தியா இன்று ஒரு குடியரசு நாடு.

நமது இந்திய நாட்டில் பிறந்தவர்கள் 21 வயதை அடைந்த அனைவரும் சாதி, இன, சமய, பொருளாதார ஏற்றத்தாழ்வு ஆகிய எந்த வகை வேறுபாடுமின்றி அரசியலில் பங்குபெறும் உரிமையுடையவர்கள். அவர்களுக்கு ஆள்பவர்களைத் தேர்ந் தெடுக்க உரிமையுண்டு. அவர்களில் எவரும் ஆள்பவராகவும் வரமுடியும். குடியுரிமை என்பதை ஒரு தகுதி - உரிமை - கடமை என்றெல்லாம் கூறலாம்.

திருவள்ளுவர் சிறந்த ஓர் அரசியலறிஞர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன், அரசியலும் ஆட்சியியலும் வளர்ச்சி யடையாதிருந்த காலத்தில் திருவள்ளுவர் இயற்றிய திருக் குறள் சிறந்த அரசியலை மானுட உலகத்திற்கு அறிமுகப்படுத் தியது. திருக்குறள் தோன்றிய காலத்தில் மன்னராட்சி முறையே நிலவியது. ஆனால், திருக்குறள் முதல் முதலாக மக்களைத் தழுவிய குடியாட்சி முறையை அறிமுகப் படுத்துகிறது.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. (குறள் 544)

இந்தத் திருக்குறளுக்குச் செவ்விதாகப் பொருள் கொள் ளாவிடில் பிழைகள் நேரிட வாய்ப்பிருக்கிறது. அஃதாவது குடிகளைத் தழுவிய அரசு என்றால் குடிகளினுடைய ஆசை களைத் தழுவிய அரசு என்று பொருள்கொண்டு குடிகளுக்குத் தீங்கு செய்துவிடக்கூடாது. பிரெஞ்சு மொழியில் (Gentleman Corruption to the poor) என்று ஒரு பழமொழி உண்டு. அஃதா வது இலவசம், தானம், தருமம் என்பதெல்லாம் பணக்காரர் கள் ஏழைகளுக்குக் கொடுக்கும் இலஞ்சம் ஆகும். இங்ஙனம் வழங்கப்பெறும் இலஞ்சம் காலப்போக்கில் மனிதனைத் தற்சார்பு இல்லாதவனாக்கி வெறும் பிழைப்பு அஃதாவது நாய்ப்பிழைப்புக்காரனாக ஆக்கிவிடும். எனவே, குடிகளின் நலனைத் தழுவிய அரசு அமைதல் வேண்டும். திருவள்ளுவர் காலத்திலும் மக்கள் நலனுக்கு மாறான அரசுகள் இருந்தன. கொடுங்கோன்மையும் நடந்தது. இதனை விலக்கிச் செங்கோல் செலுத்தும் அரசைக் காண்பதே திருக்குறளின் குறிக்கோள்.

இன்று நமது நாட்டில் நடப்பது குடியாட்சி. ஆட்சியாளர்கள் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப் பெறுகிறார்கள். வாக்காளர்களின் அரசியல் அறிவுத் தகுதிக்கேற்ப ஆட்சி அமையும். ஆதலால், வாக்காளர்களுக்கு அரசியல் அறிவும் தெளிவும் தேவை. இவ்வகையில் நமது நாட்டின் வாக்காளர்களுக்கு ஒரு சிறந்த வழிகாட்டும் நூல் திருக்குறள் ஆகும்.

மனிதன் நாட்டுக்குச் சொத்து. இதுதான் உண்மை. ஆனால் இன்றுள்ள நிலை வேறு. இன்று நாம் நமது நாட்டை நம் சொத்தாக நினைக்கின்றோம். அதனால் நம்மால் நாட்டுக்கு எட்டுணையும் பயன் இல்லை. நாட்டைச் சுரண்டுகின்றோம். நாடு வறுமையிலும், உள்நாட்டு வெளிநாட்டுக் கடன்களிலும் மூழ்கித் தவிக்கிறது. இன்றைய நிலையில், ரூ. 2,24,180 கோடி கடன் இருப்பதாக அறிகிறோம். நமது நாடு சுரண்டப்படுதலையும், நாட்டின் பொருளாதாரச் சீரழிவுகளையும் கடன் சுமைகளையும் நமது வாக்காளர்கள் அறிதல் வேண்டும்; உணர்தல் வேண்டும். நாம் அனைவரும் இந்த நாட்டினுடைய சொத்து. ஆதலால் நாட்டைப் பொருளாதாரச் சீரழிவிலிருந்து மீட்க வேண்டும், மேலும் இந்த நாட்டை வளம் கொழிக்கும் நாடாக மாற்ற வேண்டும். இந்தப் பணியைச் செய்து முடிக்கக்கூடிய ஆட்சியை அமைக்க வேண்டும் என்றெல்லாம் - நாள் தோறும் எண்ணவேண்டும். வாக்களிப்பதற்கு முன் ஒரு முறைக்கு மூன்றுமுறை எண்ண வேண்டும். நம்முடைய இலட்சியமாக உள்ள நாட்டினை அமைக்கக்கூடிய திறனாளர்களுக்கு மட்டுமே வாக்களிக்க வேண்டும். திருக்குறள் காட்டும் நாடாக நமது நாடு அமைய வேண்டும்.

நம்முடைய நாடு எப்படி அமையவேண்டும்? நமது நாட்டில் வெறும் சோற்றுக்குப் பஞ்சம். மக்கள் பசியால் வருந்துதல் கூடாது. உயிர் இயக்கம் உணவினாலாயது. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' என்றமை உணர்க. பசி வந்திடின் எல்லாவிதமான ஆக்கமும் கெடும்; அவலங்கள் அடுக்கடுக்காக வரும். அதனால், நாட்டின் இயற்கை வளமும் பயனற்றுப் போகும்; மனித வளமும் பயனற்றுப் போகும்.

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும் (குறள் 1045)

பசித் துன்பம் இல்லாத நாடே நாடு. மற்றவையெல்லாம் நாடல்ல; காடே. இன்று நமது நாடு எப்படி இருக்கிறது? வறுமைக் கோட்டிற்குக் கீழ் 27.1 கோடி மக்கள் வாழ்கிறார்கள். வறுமைக்கோடு என்பதன் பொருள் என்ன? ஒரு வேளை கூட வயிறார உண்ண முடியாதவர்கள் என்பதாகும். நமது நாட்டில் 17 விழுக்காட்டுக் குழந்தைகளுக்குத்தான் நல்ல சத்துணவு கிடைக்கிறது. இந்த அவலம் தொடரக்கூடாது.

பசிக்கு அடுத்தது பிணி. மனித குலத்திற்குப் பகையாக விளங்கும் பிணிகள் ஒன்றா இரண்டா? பலப்பல! நோய், இயற்கையா? இல்லை, இல்லை. செயற்கை! ஆம்! மானுடம் வாழ்வாங்கு வாழாத போது - வாழ இயலாத போது நோய் வருகிறது. தூய்மையான நல்ல காற்று, குடிக்க நல்ல தண்ணீர், சமநிலைச் சத்துள்ள உணவு ஆகியன கிடைத்துவிட்டால் நோயே வாராமல் வாழலாம். நோயற்ற வாழ்வுக்கு முதல் தேவை, காற்று. தூய்மையான காற்று தேவை. மானுடத்திற்குப் பயன்படும் உயிரிக் காற்றை நல்கி உதவும் இயல்புடைய மரங்கள், மரங்கள் அடர்ந்து நிற்கும் காடுகள் உள்ள நாடாக விளங்க வேண்டும். மாசுபடாத காற்றுக் கிடைக்கும் நாடாக விளங்கவேண்டும். ஆலைப்புகை, புழுதி, தூசிகள் முதலியன காற்றோடு கலக்காத பாதுகாப்பு உள்ள நாடாக அமைய வேண்டும். இன்று நம்முடைய நாட்டில் காற்று மாசுபடுத்தப்பட்டுள்ளது. மிகவும் மாசுபடுத்தப்பட்டுள்ளது. நாள் தோறும் மேலும் மேலும் மாசுறுகிறது. காற்றுக்கேடு செய்யும் தீமை, முற்றாகத் தடுக்கப் பெறவில்லை. மரங்களும் போதிய அளவு இல்லை. இருந்தவையும் வெட்டப்பட்டுவிட்டன. தூய காற்று வழங்கும் நாடாக நமது நாடு அமைய வேண்டும். அடுத்து வாழ்க்கைக்குத் தேவை குடிதண்ணீர். நல்ல குடி தண்ணீர் நாலு காதத்திற்குப் பிணியை விரட்டும். குடிப்பதற்கு ஊற்று நீரே நல்லது. அஃதாவது பாதுகாக்கப்பெற்ற கிணற்று நீர்

நல்லது. இத்துறையில் நமது நாடு எவ்வளவோ பணி செய்திருக்கிறது. ஆனாலும் இன்னமும் பற்றாக்குறை தான்.

அடுத்தது உணவு. உணவு கிடைத்தால் மட்டும் போதாது. நல்ல உணவு - சமநிலைச் சத்துணவு கிடைக்க வேண்டும். காய்கள், கனிகள், பால் மற்றும் எல்லாவகையான உணவுப் பண்டங்களும் தாராளமாகக் கிடைக்கவேண்டும். ஒவ்வொருவரும் சராசரித் தேவையான 2400 கலோரி ஆற்றல் கிடைக்கக்கூடிய அளவு உண்டால் நல்லது. அங்ஙனம் நமது நாட்டில் இப்போது கிடைப்பதில்லை. கிடைத்தாலும் உண்ணும் பழக்கம் வரவில்லை. நமது உணவுப் பழக்கம் மாற வேண்டும். அதற்கு உரியவாறு நாட்டில் உணவு வசதிகள் அமையவேண்டும். சராசரி மனிதனும் சீரான உணவு வசதியைப் பெறத்தக்க வகையில் வருவாய் வரவேண்டும். விலைகளும் கட்டுப்படியானதாக அமைய வேண்டும்.

குடிமக்களின் வருவாய்க்கும் அவர்கள் வாங்கி நுகரக் கூடிய உணவுப் பொருள்களின் விலைக்குமிடையே இன்றுள்ள இடைவெளி மிகவும் கூடுதல். நுகர்பொருள்கள் கட்டுப் படியான விலையில் மக்களுக்குக் கிடைக்கவேண்டும். மக்கள் நுகர் பொருள்களின் விலைகளை அரசு, கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும். நாட்டின் பொருளாதாரப் புழக்கத்தின் காரணமாக உற்பத்திச் செலவு கூடி, விலை கூடவேண்டிய அவசியம் ஏற்பட்டால் மக்களின் வருவாய் உயர்வுக்கும் உரிய ஏற்பாடுகளை அரசு செய்யவேண்டும். அதற்கு வாய்ப்பில்லாது போனால் குறைந்த வருவாய் உள்ளவர்களுக்குக் கூடுதல் விலைப்படியை வழங்கவேண்டும்.

நல்ல உணவினால் மட்டும் பிணியே வாராமல் போகாது. கெட்ட பழக்கங்கள் காரணமாக நோய்வரும். கள், போதைப் பொருள்கள், பொருந்தா உணவுகள், பகல் நள்ளிரவுக் காட்சிகள் முதலியன தவிர்க்கப் பெறுதல் வேண்டும். இவை நாட்டில் எளிதாகவோ மலிவாகவோ கிடைத்தல் கூடாது. நமக்கு இன்று தேவை, பிணியில்லா மக்கள் வாழுகின்ற நாடு!

மானுட வாழ்வு, முயற்சிகள் நிறைந்த வாழ்வாக அமைய வேண்டும். அம்முயற்சிகளும் ஆக்கவழியிலான முயற்சிகளாக அமையவேண்டும். அங்ஙனம் அமைய ஒரு நாடு பகைவர்களின் அச்சுறுத்தலிலிருந்து மீட்கப்பட்டிருக்க வேண்டும். அதாவது பகை இருத்தல் கூடாது. அண்டை நாடுகளுடனும் உலக நாடுகளுடனும் நல்ல வண்ணம் உறவு அமையவேண்டும். நமது நாட்டின் நிலைக்குப் பாகிஸ்தான் ஒன்றே போதும்! உலகெங்கணும் படைக்கலத்தளங்கள் அமைக்கும் அமெரிக்காவைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? நாம் நடுநிலைக் கொள்கை - அணி சேராக் கொள்கை என்றெல்லாம் ஏற்றுக் கொண்டிருந்தாலும் இந்த நாடுகள் நம்மிடம் பகைமை காட்டாமல் இல்லை. அதன் காரணமாக ஏழை நாடாகிய நம்முடைய நாட்டின் வரவு செலவுத்திட்டத்திலும் படைப் பெருக் கத்திற்கு ரூ. 13000 கோடி ஒதுக்கீடு செய்யவேண்டியிருக்கிறது. எண்ணற்றவர்கள் படைத்துறையில் பணி செய்கின்றனர். இவையெல்லாம் அவசியமானவைதாமா? இவற்றைத் தவிர்க்க நாம் தயாராக இருந்தாலும் நம்மிடம் பகை பாராட்டும் நாடுகள் உடன் பட்டு வருவதில்லை. ஆயினும் சமாதானமும் அமைதியும் தழுவிய நாடாக அமைதல் வேண்டும் என்ற உணர்வை இழத்தலாகாது.

நமது நாடு பசி, பிணி செறுபகை ஆகியவற்றிலிருந்து விடுதலை பெற்று விளங்கும் நாடாக அமைதல் வேண்டும். இது பொதுவான தன்மை. அதாவது நாடு தழுவிய கொள்கை.

நமது நாட்டின் மனித ஆற்றல் அளப்பரியது. ஆனால் மனித ஆற்றலை முறையாக வளர்த்துப் பயன் பெறவில்லை. அறிவுத் திறனும் செயல்திறனும் உடைய மக்களை நாம் நமது கல்விச் சாலைகளில் உருவாக்க வேண்டும். இதற்குக் கல்வி நிலையங்கள், நூலகம், அறிவியல் ஆய்வகம் (Science Laboratory) தொழில் பயிலுதற்குரிய தொழிலகம் முதலியன அமைத்திடுதல் வேண்டும். ஆரம்பப் பாடசாலைகளில் தரமான கல்வி தரவேண்டும். ஆரம்பப் பாடசாலைகளில் ஆசிரியர் - மாணவர் விகிதாசாரம் 1:35 என்றே அமைய வேண்டும்.

தமிழ்நாட்டில் மொழிச் சிக்கல் தீர்ந்தபாடில்லை. அரசியல் கட்சிகள் மொழிச் சிக்கலுக்குத் தீர்வு காண்பதில் காலங் கடத்துகின்றன. மொழிப் பிரச்சனையை உணர்ச்சி நிலையில் அணுகுதல் பிழை என்பதை உணரவேண்டும். தமிழ் நாட்டில் அனைத்து மட்டத்திலும் துறைதோறும் தமிழே பயிற்று மொழியாக அமைதல் வேண்டும். தமிழே எல்லாத்துறைகளிலும் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும். ஆட்சியிலும் கல்வியிலும் மட்டுமல்லாமல் - வாணிபம், தொழில், கோயில் வழிபாடு, இசை போன்ற அனைத்தும் தமிழிலேயே நடைபெறவேண்டும்.

ஆங்கிலம் ஒரு மொழியாக மட்டும் வகுப்பில் கற்பிக்கப் பெறுதல் வேண்டும். மற்றும் மாணவர்கள் விரும்பிக் கற்கக் கூடிய நிலையில் விருப்பப்பாடமாக ஒன்பதாவது வகுப்பிலிருந்து இந்தி மொழி, உருசிய மொழி, சமஸ்கிருத மொழி ஆகியன கற்பிக்கப் பெறலாம். இம்மொழிகளின் பயிற்சி, எழுத, படிக்கத் தெரியுமளவுக்கேயாம்.

ஆங்கிலம் மூலமே கற்பிக்கும் பள்ளிகள் தமிழ் நாட்டில் கூடவே கூடா. தமிழகத்தின் அனைத்து மாணவர்களும் ஒரே மாதிரியான கல்வியைப் பெற வேண்டும். இன்று கல்வித் துறையில் நிலவும் இரண்டு ஜாதி முறை அகற்றப்பட்டாக வேண்டும்.

நம் நாட்டில் பிறந்து வளர்ந்து வாழும் குடிமக்கள், முறை மன்றங்களில் தாம் தொடுக்கும் வழக்குகளிலும் தமக்கு எதிராகத் தொடுக்கப்படும் வழக்குகளிலும் என்ன வாதிடப்படுகின்றதென்பதே புரியாமல் ஊமையர்களாகவும் செவிடர்களாகவும் நிற்கும் அவலநிலை இன்னும் முற்றிலும் தீர்ந்தபாடில்லை. காரணம், இன்று முறைமன்றங்களில் தமிழில் வழக்காடுதல் இல்லை; தமிழில் ஆணைகள் இடப்படுவதில்லை. இந்த இழிநிலையை உடனடியாக நாம் நீக்க வேண்டும். தமிழ் நாட்டில் உள்ள எல்லா முறை மன்றங்களிலும் இனி தமிழ் மொழியில்தான் வழக்கு விசாரணை நடைபெறல் வேண்டும். தமிழ் மொழியில் மட்டுமே ஆணைகள் பிறப்பிக்க வேண்டும்.

அடுத்து, குடிமக்களிடத்தில் நிலவ வேண்டிய நல்லியல்புகள் சில உண்டு.

**பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு (735)**

அதாவது, நாட்டு மக்களிடையில் குழு மனப்பான்மை வளரக் கூடாது. சாதிகளின் பெயராலும் மதங்களின் காரணமாகவும் அரசியல் ஆதிக்கப் போட்டிகளின் காரணமாகவும் பல குழுக்கள் தோன்றுகின்றன. அங்ஙனம் தோன்றாமல் தவிர்ப்பது இன்றியமையாக் கடமை. இன்று நாட்டின் நிலை என்ன? எங்கும் குழுக்கள் அமைந்துள்ளன. இந்தக் குழு மனப்பான்மையால் ஒருவரை ஒருவர் முன்னேற விடாமல் தடை செய்து கொண்டிருக்கின்றனர். இந்தப் பல்குழு மனப்பான்மை மாறினாலே நமது நாடு உருப்படும். பல்குழுக்களின் அமைப்பு அந்த அளவோடு நின்றுவிடுவதில்லை. கண்டால் சிரித்துப் பேசிக் கொள்வர். ஆனால், உட்பகை இருக்கும். இந்த உட்பகையின் காரணமாகப் பலவீனங்களுக்கு வாய்ப்பு ஏற்படும் போதெல்லாம் கலகம் செய்வார்; ஒருவரை ஒருவர் அடித்துக் கொலை செய்து கொள்வர். இதனால் நாட்டில் உருப்படியான எந்தக் காரியமும் நடக்காது. வெறும் போலீசு அரசே நடக்கும்; சிறைச்சாலைகள் நிரம்பி வழியும். இங்ஙனம் விளங்குவது நாடல்ல. நாட்டில் பலகுழுக்கள்- குழுக்கள் வழிப்பட்ட கலகங்கள் என்றால் நாட்டில் எப்படி அமைதி நிலவும்? அரசிற்கு, பொழுது விடிந்து பொழுது போனால் கலகங்களை அடக்குவதிலேயே ஆற்றல் முழுதும் செலவாகும். அரசு, அதன் பணியைச் செய்ய இயலாது. அதன் காரணமாக வளம் பொருந்திய நாடாக அமைக்கும் முயற்சியில் நாடு பின்தங்கிவிடும். இன்று நமது நாட்டின் நிலை - எங்கும் குழுக்கள் - வெளிப்படையாக நிலவும் சாதி, மத, இன, அரசியல் வேறுபாட்டுப் பிரிவினைகள் ஒருபுறம் - ஓரணிக்குள்ளேயே புறத்தே தோன்றாது அகத்தே முரணிய சிந்தையுடன் கூடிய குழுக்கள் எண்ணற்றவை. இவை பெருங்கேடு விளைவிப்பன. ஒரு நாட்டிற்கு வேண்டாதன என்று திருவள்ளுவர் கூறிய கருத்துக்கள் இவை.

இனி, ஒரு நாடு எப்படி இருக்கவேண்டும் என்று திருவள்ளுவர் கூறுகின்றார். எதிர்மறையில் கூறியதையே உடன் பாட்டிலும் கூறலாம். திருவள்ளுவர் பிணியின்மையை மட்டும் எதிர் மறையாலும் கூறுகின்றார்; உடன்பாட்டாலும் கூறுகின்றார். ஆம்! நோயற்ற வாழ்வுதானே ஒப்பற்ற செல்வம்! அடுத்து, செல்வம் கொழிக்கும் நாடாக அமைய வேண்டும். செல்வம் சில நாடுகளில் இயற்கையாகவே அமையும். நமது நாட்டில் இயற்கை வளமும் உண்டு. ஆனால் நமது நாட்டின் இயற்கை வளத்தை நாம் முற்றாக இன்னமும் அனுபவத் திற்குக் கொண்டுவரவில்லை. செல்வம் என்று பொதுவாகக் கூறியதால் அனைத்துச் செல்வங்களும் அடங் கும். செல்வம் படைக்கப்படுவதே. அதனால்தான் திருக்குறள், 'செய்க பொருளை' என்று கூறியது. நாட்டின் அரசு, செல்வச் செழிப் பிற்குத் திட்டமிட்டு, அத்திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பை மக்களிடம் தந்து ஓயாது மக்களை உயிர்ப்புடன் இயக்கிக் கொண்டேயிருக்க வேண்டும். செல்வ வளம் வருதலுக்குரிய வாயில்கள் புதியன புதியனவாகக் காணப் பெறுதல் வேண்டும். இதனைத் திருவள்ளுவர்,

> **இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
> **வகுத்தலும் வல்ல தரசு (குறள் 385)**

என்று கூறுவார். செல்வத்தை ஈட்டவேண்டும். ஈட்டிய செல் வம் தொகுக்கப்பெறுதல் வேண்டும்: செல்வம் தொகுக்கப் பெற்றால்தான் அது மூலதன வடிவத்தைப் பெற்றுத் திரும்பவும் செல்வ உற்பத்திக்குரீய முதலீடாக அமையும் தகுதியைப் பெறும். இங்ஙனம் உருப்பெறும் மூலதனம் தான் திட்டங் களுக்குரிய முதலீடாக அமைய முடியும். அங்ஙனமின்றிக் கருவூலத்திற்குச் செல்வம் வருவதற்கு முன்பே கண்டபடித் திட்டமில்லாத செலவுகளைச் செய்தால் செல்வம் சேராது. நமது நாட்டில் இயல்பாகத் திட்டம் இல்லாத செலவுகள் அதிகம். தனி மனித வாழ்க்கையிலிருந்து நாட்டு வாழ்க்கை நிலை வரை திட்டமில்லாத செலவுகள் மிகுதி என்பதை மறந்து விடக்கூடாது. இந்தமுறை கூடாது. அறவே தவிர்க்கப்பெறு

தல் வேண்டும். அவசியமாயின் திட்டமில்லாத செலவுகள் 10 முதல் 20 விழுக்காடு வரை வர லாம். செல்வம் தொகுக்கப் பெற்ற பின்பு நாட்டின் வளர்ச்சிக்கு - மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுக்குத் திட்டமிட்டுச் செலவு செய்ய வேண்டும், செல்வம் வளர்ந்து நுகர்பொருள்கள் சந்தைக்கு வரத் தொடங் கிய நிலையில் அந்த நுகர் பொருள்கள் எல்லா மக்களுக்கும் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். நமது நாட்டில் பலர், நல்ல சத்துணவு வகைகளை நுகர்ந்தறியாதவர்கள். எல்லா ருக்கும் எல்லாம் கிடைக்கும் நாடாக அமைய வேண்டும். யாரானாலும் அதிகாரத்தாலும், பணத்தாலும் பெறும் சலுகை களை அறவே நீக்க வேண்டும்.

வாழ்க்கையென்பது துன்பமானதன்று. பொதிசுமையு மன்று. வாழ்க்கை இன்புறு நலன்கள் கூடியதாக மக்களுக்குக் கிடைத்து, மக்கள் களிப்பாக இன்பமாக வாழ்தல் வேண்டும். இன்புறு நலன்கள் என்று கூறின் அவை ஒன்றா? இரண்டா? பலப்பல; அவை உலக அரங்கில் நாளும் வளர்ந்து வருகின் றன. இவையனைத்தையும் மக்கள் ஆர்ந்து அனுபவிக்கும் நாடே நல்ல நாடு.

அடுத்து, பாதுகாப்பு நிறைந்த நாடாகவும் இருக்க வேண் டும். எங்கே பாதுகாப்பு இல்லையோ, அங்கே உற்பத்தி இல்லை; செல்வம் இல்லை; இன்பம் இல்லை;கடைசியாக ஆட்சியும் இல்லை என்றாகி விடும். நாட்டு மக்களுக்கு அரசு வழங்க வேண்டிய பாதுகாப்பைப் பற்றிச் சேக்கிழார் கூறுவதை அறிந்து கொள்ளுதல் நலம்.

மாநிலம் காவலனாவான் மன்னுயிர்காக்கும் காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால் தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும் தீர்த்தறம் காப்பான் அல்லனோ?

என்பது சேக்கிழார் வாக்கு.

நாட்டை ஆள்பவர்களால், அவர்களுடைய ஆட்சியால் மக்களுக்குத் துன்பம் வருதல் கூடாது. ஆட்சியால் மக்களுக்கு

நேரிடக்கூடிய துன்பத்தில் தலையாயது பயம். பயத்திற்கு மக்கள் இரையாகக் கூடாது. தாய்ப்பசுவினைக் கன்று அணைந்து செல்லுமாப் போல் மக்கள், ஆட்சியை அணைந்து செல்லவேண்டும். ஆட்சியினரால் துன்பம் வருவது ஒருபுறம் இருக்க, அவர்களுடைய படை, பரிவாரங்களால் துன்பம் வரக் கூடாது. இன்று நம்முடைய நாட்டில் இத்தகு துன்பம் மிகுதி யாக இருப்பதை நடைமுறையில் அனுபவிக்கிறோம். ஏன்? தன் எதிரியை ஒழித்துக்கட்டவே அரசியல் கட்சிகளில் சேர்கிறார் கள். ஒருவர், தன் பகைவரைக் கூட எளிதாகப் பழிவாங்கக் கூடிய வாய்ப்பு நாட்டில் அமைதல் கூடாது. அத்தகைய பழி வாங்கும் செயல் நிகழாதவாறு அரசு பாதுகாப்பு வழங்க வேண்டும். கள்வரால் வரும் துன்பம் அறவே கூடாது. இன்று கள்வர் எங்கு இல்லை! மற்றும் கொடிய விலங்குகளாலும் நச்சுயிர்களாலும் கூட ஆபத்து வராமல் பாதுகாப்பு வழங்கப் பெறுதல் வேண்டும். இத்தகைய பாது காப்பு நிறைந்த நாடே நல்ல நாடு.

அடுத்து, திருவள்ளுவர் தள்ளா விளைநிலம் உள்ள நாட்டை வரவேற்கிறார். நிலம் பொதுவே. நிலம், தள்ளா விளையுளாக மாறவேண்டுமானால் அங்கு நல்ல அறிவறிந்த ஆள்வினையுடையவர்கள், உற்பத்தி சார்ந்த உழைப்புடைய வர்கள் வாழ்தல் வேண்டும். தள்ளாவிளையுளை முறையாகப் பயன்படுத்தி, பயன்கொண்டு வையகம் பயனுற வாழ்வோரே தக்கார். ஒரு நாட்டில் செல்வர்கள் வாழ்வார்கள். அந்தச் செல்வர்கள் தாழ்விலாச் செல்வர்களாக விளங்குதல் வேண் டும். வஞ்சனையான வழிகளில் பொருள் செய்வோரும், பிறர் அழக்கொள்பவர்களும், பிறர் பங்கைத் திருடுபவர்களும் சமு தாய விரோதிகள். தாமே உழைத்துப் பொருளீட்டுபவர்கள் தாழ்விலாச் செல்வர்கள். இங்ஙனம் ஒரு நாடு சிறந்து விளங்கு தலுக்குரிய இயல்பினைத் திருவள்ளுவர் நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

**தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு (குறள் 731)**

இத்தகு நாடாக நமது நாட்டை நாம் உருவாக்க வேண்டும்.

மக்கள் வாழ்வின் அனைத்துத் துறைகளையும் இன்று இறுக்கிக் கொண்டுள்ள அதிகாரச் செல்வாக்கு, பணச் செல் வாக்கு ஆகியவற்றின் பிடி விடுபட்டு, எல்லோருக்கும் எல்லாம் என்ற கொள்கை வழியில் ஆட்சி அமைவதற்குரிய எல்லா முயற்சிகளிலும் மக்கள் ஈடுபடவேண்டும்.

மீண்டும் தொகுத்து இக்கால வழக்கியல் வார்த்தைகளில் ஒரு நாடு எப்படி இருக்கவேண்டும் என்பதைப் பார்ப்போம்:

1. நாட்டை வளப்படுத்தி வாழக்கூடிய - நாட்டுக்குச் சொத்தாக இருக்கக்கூடிய குடிமக்கள் வேண்டும்.

2. பல குழுக்களாகப் பிரிந்து உட்பகையை வளர்த்துக் கொண்டு நல்லாட்சிக்கு இடையூறு செய்யும் மக்கள் கூடாது. சாதி, மதம், கட்சிகள் பெயரால் சண்டை யிட்டுக் கொள்ளாத மக்களாக இருத்தல் வேண்டும். அதாவது, சாதிகள் வளரக் கூடாது. பொது வாழ்க்கை யில் மதங்கள் தலையிடக்கூடாது. (இந்தத் தீமையை அரசியல் கட்சிகள் நேரிடையாகவோ மறைமுக மாகவோ வளர்க்கக் கூடாது.)

3. மக்கள் நுகர்வுக்குரிய உணவு, உடை முதலியவற்றின் விலை கட்டுப்படுத்தப் பெறுதல் வேண்டும்.

4. வறுமை இருக்கக்கூடாது. தனி ஒருவர் வருவாய் வாழ்க்கைக்கு ஏற்றதாக அமையவேண்டும். (தனி ஒருவர் வருவாய் பற்றிய இன்றுள்ள கணக்கு முறை தவறானது. அதாவது கோடீசுவரனையும் கூழுக்கு அழுபவனையும் ஓரணியில் நிறுத்திச் சராசரி பார்க்கக்கூடாது.)

5. வேலை வாய்ப்பு வேண்டும். அதாவது உழைப்ப தற்கு உரிமையும் வாய்ப்பும் வேண்டும். வேலைக்கு உத்தரவாதம் தருதல் வேண்டும். வேலை தரும் வரை அரசு, ஒரு வாழ்நிலைப்படி தரவேண்டும்.

6. நல்ல சுகாதார, மருத்துவ வசதிகளை ஏற்படுத்து வதன் மூலம் மக்களின் சராசரி வாழ்நாளைக் கூட்டு தல் வேண்டும்.

7. கற்க இயலும் அளவுக்குக் கல்வி கற்கும் உரிமை அனைவருக்கும் வேண்டும். எந்த நிலையிலும் கல்வி இலவசமாகவே வழங்கப் பெறுதல் வேண்டும்.

8. சமாதானமும் அமைதியும் தழுவிய வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிக்கவேண்டும்.

இத்தகு வாழ்க்கை வசதி நிறைந்த நாட்டை உருவாக்கு வது நமது கடமை. நாட்டுப் பணியில் ஈடுபட எல்லாருக்கும் இயலாது. ஆதலால், நாம் இவற்றை நிறைவேற்றக்கூடிய பிரதி நிதிகளைத் தேர்வு செய்து அவர்களிடம் நாட்டு ஆட்சியை ஒப்படைக்க வேண்டும்.

நல்லாட்சியை அமைக்க, மக்களுக்கு உரிமை வழங்கு வதே வாக்குச் சீட்டு. இந்த வாக்குச் சீட்டு ஆற்றல்மிக்கது; புனிதமானது. நாம் ஒவ்வொரு வரும் 21 வயது நிறைந்தவுட னேயே வாக்காளராகப் பதிவு செய்து கொள்ள வேண்டும். இது நமது கடமை; தலையாய உரிமையும் கூட. அதுமட்டு மல்ல, வாக்காளரும் ஒரு வகையில் ஒரு பதவியுடையவர் என்று கூடக் கூறலாம்.

நமது நாட்டில் கட்சி ஆட்சி நடைமுறைகள் தான் இருக் கின்றன. ஆதலால், தனி ஒருவர் தேர்தலில் கணிப்புக்குரியவர் அல்லர். கட்சியின் அமைப்பு, கட்சியின் கொள்கை, கட்சியின் தலைமை, கட்சியின் சென்ற கால வரலாறு ஆகியனவே கவனத்திற்குரியன; ஆய்வுக்குரியன. அதோடு இந்தக் கட்சி கள் வெளியிடும் தேர்தல் அறிக்கைகள் ஆய்வுக்குரியன. நாம் தேர்ந்தெடுப்பவர்கள் ஆட்சியாளர்களாக வருபவர்கள். அவர் களுக்கு என்ன தகுதி வேண்டும்? சிறந்த செயல்களைச் செய் வதற்குரிய திறமை வேண்டும். மக்கள் நலனுக்குரியவற்றை நாடிச் செய்யும் அறிவும் தெளிவும் வேண்டும்; உறுதியும்

வேண்டும். மக்கள் விரும்புவதைச் செய்து மலிவான விளம்பரத்திற்காகவும் தொடர்ந்து அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகவும் மக்களின் அறிவு பூர்வமில்லாத ஆசாபாசங்களுக்கு இரையாகிக் கெடுதல் செய்யக் கூடாது. சிறந்த பணிகளைச் செய்வதற்குரிய கருவிகளைத் தேடி அமைத்துக் கொள்ளும் திறமை வேண்டும். திறமை மட்டும் போதாது. காலமறிந்தும் செய்ய வேண்டும். அதாவது, ஆட்சியில் அமர்பவர்கள் நோய்க்கு மருந்துபோடும் திறமையுள்ளவர்களாக இருந்தால் போதாது. நோயின் காரணத்தையே மாற்றும் செயல் செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதற்குரிய அகக் கருவிகளாகிய அறிவு, திறன் ஆகியன பெற்றிருக்க வேண்டும். புறக்கருவிகளாக விளங்கக் கூடிய தக்காரைத் துணையாகப் பெறுதல் வேண்டும். எல்லாவற்றையும் உரிய காலத்தில் செய்தல் வேண்டும்.

நாட்டை வளப்படுத்தும் முயற்சியில் ஈடுபடும் பொழுதும், நல்லாட்சி நடத்தும் பொழுதும் சில தனி நபர்கள் பாதிக்கப் படலாம். அவர்கள் பெரியவர்களாகவும் கூட இருக்கலாம். ஆயினும் தயக்கம்கூடாது. நாட்டின் நலனுடன் சம்பந்தப் பட்ட காரிய சாதனையே குறிக்கோளாக அமைதல் வேண்டும். அடுத்த தேர்தலும் தொடர்ந்து அதிகாரத்தில் இருக்க வேண்டும் என்பதும் குறிக்கோள்களாக இருக்கக்கூடாது. அதனால் எதிர்ப்புக்கு அஞ்சாது எடுத்த பணியைச் செய்து முடிக்கவேண்டும். நாள்தோறும் ஆட்சியியலுக்குரிய அரசியல், குடி மக்களியல், தொழிலியல், பொருளியல், நிதியியல் நூல்களைக் கற்றறிதல் வேண்டும். நாட்டு மக்களின் உள்ளத்து இயல்புகளையும், மனப் போக்குகளையும் நாள்தோறும் கற்றறிதல் வேண்டும். தொடங்கிய பணியைச் செய்து முடிக்கும் திறனுடைய ஆளுமைவேண்டும்.

அடுத்து, ஆள்பவர்களுக்குத் தமது ஆட்சி இயற்றும் செயல்முறைகளில் மக்களை ஒத்துழைக்கும்படி செய்து கொள்வதற்குரிய சொல்லாற்றல் இருக்கவேண்டும். ஆளுமைத்

திறன் வேண்டும். நன்றாற்றும் பொழுது எதிர்ப்படக்கூடிய இடர்பாடுகளைத் தாங்கிக் கொள்ளவும் தொடர்ந்து செயற் படவும்கூடிய ஆற்றலும் உளப்பாங்கும் தேவை. செய்யும் பணிகளில் தூய்மை வேண்டும். திருக்குறளில் நேரிடையாகக் கையூட்டு (இலஞ்சம்) பேசப்படவில்லை. ஆனாலும் திருக் குறள், கையூட்டைப்பற்றியும் பேசுகிறது. நாடாளும் பொறுப் பினை ஏற்றுக் கொண்ட அமைச்சர்களுக்கு வறுமை வந்துற்ற போதும் அவர்கள் பழிக்கப்படுவனவற்றைச் செய்யக் கூடாது என்று கூறுகிறது.

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை (656)

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை (657)

கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும் (658)

ஆகிய குறள்கள் கையூட்டைப் பற்றியனவேயாம், நாடாள் வோரின் தாய்க்குப் பசி என்றால் வறுமை என்பது தானே பெறப்படுகிறது. ஈன்ற தாயின் பசி நீக்க இழிவாயின செய்யக் கூடாது என்றால் கையூட்டு வாங்கக் கூடாது, நாட்டின் நிதியை -மக்களின் நிதியைத் தவறாகப் பயன்படுத்தக்கூடாது என்பது தானே பொருள்! பழியுடன் கூடியதாகிய கையூட்டு, கள்ளக் கணக்கு முதலியவற்றால் வரும் ஆக்கத்தைவிட, நாட்டை ஆள்பவர்களுக்கு வரும் வறுமையே நல்லது என்று கூறியத னாலும் அரசைப் பயன்படுத்தி, நாட்டை ஆளும் பொறுப்பி லிருப்பவர்கள் பொருள் சேர்ப்பதை விலக்குகிறது திருக்குறள்,

மற்றும், நீதி நூலோர் ஆகாது என்று கூறிய கள், சூது முதலியவற்றால் பொருளீட்டல் - ஆளப்படும் மக்களிடத்தில் அச்சத்தினையும் ஆசையையும் காட்டிப் பொருளீட்டல் - அதாவது பரிசுச் சீட்டுக்கள் மூலம் பொருளீட்டல் முதலியன தவறு என்று திருக்குறள் கூறுகின்றது. ஏன், ஆள்பவர் - ஆளப்

படுபவர்களிடம் இரந்து கேட்டு வாங்குதலையும் கூட ஆகாது என்று திருக்குறள் மறுக்கிறது. இரப்பவர் ஆட்சியாளர். அவர் கையில் வேல் இருக்கிறது. அதனால் அது இரத்தல் போலத் தோன்றினாலும் மறைமுகமான கையூட்டேயாகும். இல்லை இது கொள்ளையாகக் கருதப்படும். அரசிடம் ஆளப்படு பவர்கள் - மக்கள் இரந்து உயிர் வாழ்தல் கூடாது - ஆகாது என்பதையும் இந்தக் குறள் வலியுறுத்துகிறது. ஆகவே தகுதி யுடையவர்களை ஆள்பவர்களாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

சாதி, மதம், உறவினர் என்ற அடிப்படையில் வாக்களிப்பது நல்ல மரபன்று; நன்மையும் பயவாது; தீமையே வளரும். வாக்களிப்பில் பணம் விளையாடக்கூடாது; வாக்கு விற்கப்படு தல் கூடாது. தேர்தலில் வாக்குகளை வழங்குவதில் பணத்தின் செல்வாக்கு, ஆதிக்கம் செலுத்துமானால் எப்போதும் நல்லாட் சியே வாராது. அடுத்து, கூட்டங்களைக் கூட்டிக் காட்டிப் பிரமிக்க வைத்து இவர்களே வெல்வார்கள் என்ற முடிவை எடுத்துக் கொள்ளச் செய்து தேர்தலில் வெற்றி பெற முயல் பவர்களுக்கு வாக்காளர்கள் வாக்களிக்கின்ற அறியாமை அகல வேண்டும். அதோடு கவர்ச்சி முதலியவற்றினாலும் வாக்குகள் வாங்குவதற்கு முயலக்கூடாது. வாக்காளர்கள் அறிவார்ந்த முறையில் சிந்தித்து தெளிவான முடிவை எடுத் துக்கொண்டு வாக்களித்தல் வேண்டும். இத்தகு அறிவார்ந்த செயல்முறைக்கு அரசியல் கட்சிகள் துணை செய்ய வேண்டும்.

**இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல் (குறள் 517)**

என்ற திருக்குறளின் படி நாட்டின் நலிவை நீக்கி, நல்வளந்தர, மொழி வளர, கல்வி - அறிவு பெருகி வளர, ஆள்வினையும் தொழில் வினையும் பெருகி வளரத் தக்க வகையில் எந்தக் கட்சியால் ஆட்சி செய்ய இயலுமோ அந்தக் கட்சிக்கே வாக் களிக்க வேண்டும். இது வாக்காளர்கள் கடமை.

# 39

# வள்ளுவர் வகுத்த நெறியில் வாழ்ந்த அறிஞர்

*1999*

**பேராசிரியர் க. அன்பழகன்**

*உலக மக்கள் அவரைப் பற்றிப் பரவலாக அறியக்கூடிய வகையில், விளம்பரமும் அரசியல் செல்வாக்கும் பெறாதவர் எனினும், அறிஞர்களின் போற்றுதலைப் பெற்ற ஓர் ஞானி யாக, காலத்திற்கும் நிலைபெறத்தக்க புகழுடைய சீலராக, இருபதாம் நூற்றாண்டில் பிறருக்கென வாழ்ந்த செம்மலாகச் சிறப்பிக்கும் முறையில் அவருக்கு நோபல்பரிசும் பாராட்டும் வழங்கப்பட்டன.*

*விஞ்ஞான வித்தகராகவும், பல்கலைச்செல்வராகவும், கவியரசராகவும், அரசியல் அறிஞராகவும், தத்துவ மேதை யாகவும் புகழ்பெற்று விளங்கியவர்கள் மிகப்பலர். ஆனால் மனித இனத்தின் வாழ்க்கை நல மேம்பாட்டிற்கெனவே தமது வாழ்வை ஒப்படைத்து, மருத்துவத் தொண்டை மேற்கொண்டு, தமது சிந்தனையையே ஓர் ஆராய்ச்சி நிலையமாக்கிக் கொண்டு,*

ஓய்வு என்னும் சொல்லுக்கே இடமின்றி, மனித வாழ்வின் சிறந்த பயனும் உயர்ந்த குறிக்கோளும் எதுவெனக் காண்பதி லேயே ஈடுபட்டிருந்த சுவைட்சரைப் போன்றொரு பெருந் தகையைக் காணுதல் அரிதாகும்.

எண்ணம், சொல், செயல் மூன்றும், கருக்கொள்ளும் நிலையிலிருந்து கனிந்து பயன் தரும் நிலைவரை, ஒன்றுக் கொன்று வேறுபட்டியங்க இடனின்றித் தூய உள்ளத்தினின்று பிறக்கும் தீங்கற்ற இனிய சொற்களையே நாளும் பேசி, பிறருக்கு நன்மைதரும் செயலாகும் தொண்டிலேயே திளைத் தவர் சுவைட்சர். அகவை எண்பதைக் கடந்த முதிர்ந்த நிலை யிலும், நாற்பது வயது ஆடவரை ஒத்த எழுச்சி தரும் மனநிலை யில், தொண்டினில் ஆர்வத்தோடும், பிறர் நலம் காண்பதில் மகிழ்ச்சியோடும் அயராது செயலாற்றி வாழ்ந் தவர் அவர்.

'என் கடன்பணி செய்து கிடப்பதே' என்னும் அடிப் படையில் தனக்கு வரும் பயனைக் கருதாது, வரும் துன்பமும், தொல்லையும் இயல்பென உளங்கொண்டு 'என் கடன் பணி செய்து களிப்பதே' என்னும் உறுதிகொண்டவராய் வாழ்ந் தவர் அவர். அவரது எண்ணங்கள் அன்பிலே அரும்பி, அன் பிலே ஆர்வங்காட்டும் சொல்லாக மலர்ந்து, பிறருக்கு நன்மை யாம் செயலாகக் காய்த்து மனித நேயத் தொண்டாகக் கனிந்து, அதன் பயனைப் பெற்றோர்க்கெல்லாம் இதமான இன்பம் வழங்கிக் கொண்டிருந்தது.

தனக்கென வாழும் நோக்கத்திற்கு ஆட்படாமல், பிறர்க் கென வாழும் குறிக்கோளை எண்ணித் துணிந்து ஏற்றுச் செயற்பட்ட சுவைட்சர்,

> அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு

என்னும் குறளுக்கு இலக்கணமாக வாழ்ந்தார். உயிரன்பி னால், அவற்றின் துன்பம் துடைப்பதே உயர்ந்த இறைப்பணி என்னும் கருத்தினைக்கொண்டவராய், வாழ்ந்து காட்டியவர் அப்பெருந்தகை.

அப்படிப்பட்ட பண்பாளரின் வாழ்க்கையில், பிறர் வியந்து காணத்தக்க நிகழ்ச்சிகள் பலவாக இல்லையெனினும், அவரது வாழ்க்கையே வியப்பளிப்பது. அவரது தனிச் சிறப்பியல்பு உருவாவதற்குக் காரணமாக அமைந்த நிகழ்ச்சிகள் நாம் அறிதற்குரியன. அவரது அன்பு வழிப்பட்ட பண்பு மேம்பாட்டினையும் அவரது குறிக்கோளின் ஒப்பற்ற பெருமையையும் நாம் உணர அவை துணையாம்.

ஐரோப்பாவில் பிரான்சுக்கும், செர்மானிக்கும் இடையிலான எல்லைக்கோடு அமையும் அல்சாக் பகுதியில் 1875 ஆம் ஆண்டில் அவர் பிறந்தார். அவ்விரு நாட்டு மக்களின் நாகரிகங்களும், பண்பாடுகளும் கலந்த சூழலிலேயே அவரது இளமைப் பருவ எண்ணங்கள் வளர்ந்தன.

அதனால் தன் நாடு என்னும் அடியாகப் பிறக்கும் நாட்டுப்பற்று அவரிடம் அழுத்தமாகப் பதியவில்லை எனலாம். அவர் தன்னை ஒரு பொது மனிதனாக நிறுத்திச் சிந்திப்பதற்கும், பிற்காலத்தில் ஒரே உலகக் குடிமகன் ஆகத் தனது சிந்தனையை உயர்த்திக் கொள்ளுதற்கும், அவர் பிறந்த இடத்தின் சூழல் துணைநின்றது.

தம்முடைய நண்பர்களிடத்தில் நீங்காத பற்றும், கலந்து பழகி அளவளாவும் ஆர்வமும் உடையவராகவே வளர்ந்தவர் அவர். நண்பர்களது மகிழ்ச்சியிலே தாம் இன்புறுவதும், அவர் தம் துன்பங்கண்டு இரங்குவதும் அவருக்கு இயல்பாகவே அமைந்தன. பிற்காலத்தில் மன்னுயிர்த்துன்பத்தை நீக்கும் தொண்டிலே மகிழ்ச்சியும், எல்லோரையும் இன்புற்றிருக்கச் செய்வதிலே உறுதியும் பிறக்க, அவரது மனத்தின் நட்பு உணர்வு வளர்ச்சியும் துணையாயிற்று.

அவரது பெற்றோர் இளமையிலேயே அவரிடம் கடவுட் பற்றையும் கிறித்துவ சமய உணர்ச்சியையும் வளர்த்தனர். அவர் கடவுளை வழிபடும்போதும் ‘கடவுளே, உயிருள்ள அனைத்தையும் துன்பம் நேராது காப்பாற்று! அவைகள் நல்ல உறக்கம் கொள்ள அருள் செய்’ என்று வேண்டுவாராம். இது அவரது இளைய மனம் எந்த அளவு அன்பில் குழையும்

இளகிய மனமாக இருந்தது என்பதைப் புலப்படுத்தும். அவரது சமயப் பற்று, சமயத்தின் அடிப்படை உண்மை எதுவெனக் காணும் ஆராய்ச்சியில் அவரை ஈடுபடுத்தியது. இயேசுவைப் பற்றியும் பால்முனிவரது வாழ்க்கையைப் பற்றியும் அவர் ஆராய்ந்து, அவர்தம் கருத்துக்களினின்றும் ஒளிவிடும் உயர்ந்த நெறியைத் தெளிந்தார். இது பின்னர், பல்வேறு சமயக்கருத்துக்களையும், உலகில் வளர்ந்துள்ள தத்துவங்களையும் ஆராய்வதில் அவரை ஆர்வமுடன் ஈடுபடச் செய்தது.

பள்ளியில் படிக்கும் நாட்களிலேயே மற்ற எளிய குடும்பத்துப் பிள்ளைகளோடு தன்னை வேறுபடுத்திக் காட்டும் எடுப்பான உடுப்பு அணிவதை அவர் விரும்பாமல் எளிய உடையையே அணியலானார். மற்றவர்களிடமிருந்து தன்னைப் பிரித்துக்காட்டும் எதுவும் அவருக்குப் பிடிப்பதில்லை. எல்லோருடனும் எள்ளளவும் வேற்றுமைக்கு இடமின்றி ஒக்க நின்று, ஒத்துப் பழகுவதிலேதான் அவருக்கு மகிழ்ச்சியும் மனநிறைவும் ஏற்பட்டது.

பள்ளிப்படிப்பை முடித்த சுவைட்சர், சமயத் துறையிலும் தத்துவத் துறையிலும் உயர்நிலைக் கல்வி பெற்றார். இளம் வயது முதலே இசையில் ஆர்வம் கொண்டு பயின்ற அவர், உயர்கல்வி பெறும் அதே காலத்தில் இசைத்திறனிலும் ஒரு விற்பன்னரானார். அவரது அறிவு வேட்கை அளவிட முடியாதது. புதியபுதிய உண்மைகளைக் கண்டறிவதிலும், அவற்றின் பயனைத் தெளிவதிலும், கண்டவற்றை முறைப்படுத்துவதிலும், ஆராய்ந்ததை வெளியிடுவதிலும் அயராத முயற்சி உடையவரானார். அவர் அமர்ந்து படிக்குமிடத்தில், அவர் கண்பார்வையில், எப்போதும் படுமாறு ஒரு பாடலைக் கண்ணாடிச் சட்டமிட்டு மாட்டி வைத்திருந்தார். அதன் கருத்து இது:

உயர்க உயர்க நாளும் உயர்க
உள்ளத்து உறும் நனவிலும் கனவிலும்
உயர்க உயர்க நாளும் உயர்க
உள்ளம் கொண்ட நுந் தொண்டுக் குறிக்கோள்
உயர்க உயர்க மேலும் உயர்க

**வாழ்வினிற் புயலென மேகங்கள் திரளும் போதும்!**
**உயர்க உயர்க மேலும் உயர்க**
**உறுதிகொள் எண்ணமாம் விண்மீன் ஒளியினால்!**

இந்தப் பாடலைக் காணும்போது, கல்வி கற்குங் காலத்தி லேயே அவர் கொண்டிருந்த குறிக்கோளின் உயர்வு புலனாகும்.

ஆப்பிரிக்க நீக்ரோவின் சிலை ஒன்றை இளமைப்பருவத் தில் இவர் கண்டார். அவரது மனம் அதிலே பதிந்தது. அந்தச் சிலை உயர்ந்ததொரு சிற்பியால் செதுக்கப்பட்டது. நீக்ரோ மக்களின் வேதனை பெருகும் துன்பச்சூழல் அவர் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்திட அந்தச் சிலை ஏதுவாயிற்று.

பின்னர், நீக்ரோ இன மக்கள் தொன்றுதொட்டு வாழும் இருண்ட கண்டமான ஆப்பிரிக்கா பற்றியும், அவர்கள் வெள் ளையினத்தவரால் கொடுமைக்கு ஆளாக்கப்படும் நிலையைப் பற்றியும், அவர்கள் தமது கடும் அறியாமை, மூட நம்பிக்கை கள் ஆகியவற்றால், தீராப் பிணிக்கும் கடுநோய்க்கும் ஆளாகி நாளும் படும் வேதனையைப் பற்றியும் அறிந்தார். அக்காலத் தில் அவரது உள்ளம், மனிதனாகப் பிறந்து வாழ்வதன் சிறந்த பயன் யாது? அதன் ஈடேற்றம் என்பது என்ன? என்னும் கேள் வியிலே தோய்ந்து நின்றது. அதன் பயனாக அவருக்குப் பிறந்த எண்ணங்களே இவை.

'இறைவனிடத்திலே ஒருவன் கொள்ளும் பற்று, இந்த உயிரை (தாம் உயிருடன் வாழ்வதை) மதிப்பதே. உயிரையும் வாழ்வையும் மதிப்பவன், பிற உயிர்கட்கும் மற்ற மக்கட்கும் தன்னுடைய கடமையைத் தவறாது செய்ய வேண்டும். அவ் வாறு கடமையைச் செய்வதே, மனித வாழ்வில் உயர்ந்ததும் பயனுள்ளதுமான குறிக்கோள் ஆகும்.'

பல்வேறு வகையான இழிவுக்கும் நோய்த்துன்பங்கட்கும் ஆளாகியுள்ள மக்களான நீக்ரோக்களுக்கும் அவர்தம் பிணி போக்கும் மருத்துவத் தொண்டிற்குத் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொள்வதே தன் வாழ்வின் குறிக்கோளை நிறை வேற்றும் வழி என்று உறுதி பூண்டார் சுவைட்சர்.

அதுகாறும் அவர் சமயத்துறையிலும், இசைத் துறையிலும் பெற்ற பயிற்சிகளால் புகழ் எய்தும் அளவுக்கு உயர்ந்திருந்த போதிலும் புகழும், பெருவாழ்வும் அவருக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. தாம் பெறத்தக்க சிறப்புகளை எல்லாம் ஒதுக்கிவிட்டு, புதியதொரு துறையான மருத்துவத்துறையில் அடிவைத்து, மருத்துவக்கல்வி கற்கத் தீர்மானித்தார். அவ்வாறு ஏழாண்டுகள் பயின்றார்.

நோய் நீக்கும் கல்வியிலே அவர் ஈடுபட்டிருந்தபோதே, அவர் கற்றுத் தேர்ந்த இசை, தத்துவம், சமயம் முதலான துறைகளில் அவர் நிகழ்த்திய ஆராய்ச்சியின் பயனாகப் பல நூல்களையும் இயற்றி முடித்தார்.

மருத்துவத் தொண்டாற்றத் தன்னைத் தயார் செய்து கொண்ட அவர் அதற்குரிய இடம் ஆப்பிரிக்காவின் காடு செறிந்த உள்நாட்டுப் பகுதியில் அமைந்த 'லேம்பரேன்' எனவும் தீர்மானித்துக்கொண்டார்.

அவரது 38ஆவது வயதில், தமது அருமைத்துணைவியாரோடும் புறப்பட்டு அங்குச் சென்றவர், தம்முடைய வாழ்நாளில் பெரும் பகுதியான ஐம்பது ஆண்டுக்காலமும் அத் தொண்டிற்கே தன்னை வழங்கினார்.

நீக்ரோ மக்களை அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்தும் காலனி ஆட்சி முறையை அவர் வெறுத்தார்.

தம்முடைய ஐரோப்பிய இனத்தவர்கள், தாம் நடத்தும் தொழிற்சாலைக்கு வேண்டிய மூலப் பொருள்களை உற்பத்தி செய்யும் அடிமைகளாகவே நீக்ரோக்களை நடத்தியதுடன், அவரது ஆண்டைகளாகத் தம்மைக் கூறிக் கொள்வதை அவர் கண்டித்ததோடு, நீக்ரோ மக்கள் நல்வாழ்வு நடத்துவதற்கேற்ற, புதியதொரு சமுதாய வாழ்வை அமைத்துத் தருவது ஆட்சியாளர் கடமை ஆதலின், அந்தக் கடமையை நிறைவேற்றி அவர்களுக்கு நன்மை தேட முடியாதவர்கட்கு, அவர்களை ஆளும் உரிமையும் கிடையாது என்றும் தெரிவித்துள்ளார்.

அறியாமைக்குப் பலியான நீக்ரோ மக்களின் பிணிநீக்கும் பெரும்பணியில் அவர் ஈடுபட்டிருந்த காலத்தில், அல்லும் பகலும் ஆற்றிவந்த ஓயாத தொண்டுக்கிடையிலும் அவரது சிந்தனை, மனித வாழ்க்கையின் குறிக்கோளைக் குறித்து ஆராய்ந்து தெளிவதிலேயே முனைந்திருந்தது.

'நாகரிகத்தின் தத்துவம்' என்னும் நூலை 1900ஆம் ஆண்டிலேயே எழுத முற்பட்டார் அவர். அதன் பின்னர், அவர் உலகத்தில் தோன்றி வளர்ந்துள்ள தத்துவங்கள் அனைத்தையும் ஒப்பீட்டு நோக்கில் கற்றுத் தெளிந்து சில முடிவுகளையும் கண்டார். ஆனால் அவர் தாம் கொண்ட முடிவுகளே-முடிந்த முடிவானவை என்று அறுதியிட்டுக் கூறவில்லை. மற்றவர்கள் சிந்தனைக்கு அவை உரியவை என்றே கருதியுள்ளார்.

1935 ஆம் ஆண்டில், அவர் 'இந்திய எண்ணமும் அதன் வளர்ச்சியும்' என்னும் ஒரு நூலையும் எழுதி முடித்தார். மேல்நாட்டவர் சிந்தனைக்குக் கீழ்நாட்டுத் தத்துவத்தை விருந்தாக்கும் அளவிலே மட்டுமன்றி, இந்தியாவின் நல்லறிவாளர்களே, இந்திய எண்ண வளர்ச்சியின் உள்ளீடாக உள்ள உண்மைகளையும் - அதன் ஏற்றத்தாழ்வுகளையும், பயன் பாட்டு நன்மை தீமைகளையும் உணருதற்கு ஏற்ற கருவியாக விளங்குவது அந்நூல். அது மட்டுமேயன்றி, சமய ஏடுகள், தத்துவ நூல்கள் என்னும் பட்டியலிலே இடம் பெறாமலும், சமசுகிருதத் தழுவல் சாயல் இல்லாமலும் - மானுடத்தின் வாழ்வைப் பக்குவப்படுத்தும் இலக்கியமாகவே வழங்கும் தமிழ் அற நூலாகிய திருக்குறள் - அது தாங்கி நிற்கும் கருத்துக்களால், அது ஏற்றிருக்கும் உலக வாழ்வு உண்மைக் கொள்கையால், உலகோரை அறவழிச் செயற்பாட்டில் ஈடுபடச் செய்யும் கோட்பாட்டால், வாழ்க்கைப் பயன் விளக்கும் ஈடு இணையற்றதொரு, நூலாக விளங்கும் அதன் தனிச் சிறப்பு, அவரால் போற்றி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

அத்தகு தூய தொண்டுள்ளத்தில் உயர்ந்த பண்பாளரின் சிந்தனையில் பிறந்த ஒளி முத்துக்கள் பலப்பல.

"மனிதன் தன் பிறப்பு, ஏதோ நிகழ்ந்துவிட்ட ஒன்று என்று மட்டும் கருதாமல், அது ஏதோ விவரிக்க முடியாததும், திட்டவட்டமாகக் கூறமுடியாததுமான மறைந்துள்ளதொரு ஏதுவைக் கொண்டது என்று எண்ணும்போது தான் (தத்துவம்) சிந்தனை பிறக்கிறது. அந்தச் சிந்தனைதான், உலகில் வாழும் உயிர் உண்மையே; பொய்யல்ல என்று தெளிந்தபின் அவனை நினைத்தவாறு எல்லாம் நடக்கவிடாமல் தடுத்து, தன்னுயிரின் உண்மையான உயர் மதிப்பைக் காணும் ஆர்வத்தைத் தூண்டி, அறநெறியில் இலட்சியத்துடன் நடக்கச் செய்கிறது."

"தன்னைத்தானே எண்ணிப்பார்க்கும்போதுதான், தன்னுயிரின் விலையில்லா மதிப்பு, வாழ்வின் நோக்கம் ஆகியவை பற்றிச் சிந்திக்கத் தொடங்கி, பிற உயிர்களை மதிக்கவும், பிறரை உறவினராகக் கொள்ளவும், எல்லோரும் ஓர் சமம் என்று உணரவும் மனிதன் முற்படுகிறான்."

"இயேசுவின் உரையிலும், பால் துறவியாரின் உரையிலும் காணப்படுமாறு, மற்ற மாந்தர் ஒவ்வொருவருக்கும், மனிதன் ஒவ்வொருவனும் கடமைப்பட்டவனாகவே இருக்கிறான் என்பதே அடிப்படையான உண்மையாகும்."

'மனிதன், மனித இனம் முழுமைக்கும் உரியவன்'

'ஒவ்வொருவனும் மற்றவனுக்குக் கடமைப்பட்டவன்'

'நாம் கொண்டுள்ள இயல்பான அன்பைக்கூட வெளிப்படுத்தும் துணிவின்றிப் பழக்கத்திற்குக் கட்டுப்பட்டவர்களாய், உணர்ச்சியற்றவர்களாகவே வாழ்கிறோம்'

"உயிரிடத்து மதிப்பு வைக்கும் நன்னெறியில், எந்த ஒரு வழியிலாவது, நாமெல்லாம் மற்றவர்களிடத்தும் உயிர்களிடத்தும் மனிதத்தன்மை (அன்பு) உடையவர்களாய்ச் செயற்பட வேண்டும் என்றே வலியுறுத்தப்படுகிறது."

"உங்களுடைய நேரத்தில் ஒரு சிறுபொழுது நல்லுரை, தோழமை, அன்புப்பார்வை, சிறு உழைப்பு தேவைப்படும்

*நிலையிலுள்ள முன்பின் அறியாத ஒருவனைத் திறந்த மனத்தோடு வரவேற்றிடுங்கள்! அருவருக்கக்கூடிய நோய்க்காளாகி, வாழ்வினில் கசப்படைந்து, தனித்துக் கிடக்கும் யாரோ ஒருவனுக்கோ, ஓருயிருக்கோ உதவுவதால், நீ ஒரு பயன்செய்யும் பொருளாகலாம். நீ உதவும் வாய்ப்பு இருக்கலாம். ஒரு வேளை உதவி வேண்டுவோர் ஒரு கிழவனாக அல்லது குழந்தையாக இருக்கலாம். உதவும் வாய்ப்பு நீ பெறலாம். அதற்காகவே ஒருவன் எந்நாளும் ஆர்வமுடன் தன்னைத்தயார் நிலையில் நிறுத்த வேண்டும்."*

*"நம்மிலே எவருக்கும், நாம் என்ன சாதிக்கிறோம், மனித குடும்பத்துக்கு நாம் என்ன வழங்குகிறோம் என்பது தெரிவதில்லை. நம்மிடமிருந்து அது மறைந்து நிற்கிறது. சில வேளைகளில் அந்தப் புதைபொருளின் சிறுபகுதியைத்தான் நாம் காண்கிறோம்."*

*இவ்வாறு அரும்பெரும் உண்மைகளை நாம் சிந்திக்குமாறு எடுத்து வைத்துள்ளார் ஆல்பர்ட் சுவைட்சர்.*

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து

*எனவும்,*

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி

*எனவும்,*

வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து

*எனவும்,*

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு

*எனவும்,*

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து

*எனவும்,*

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்

எனவும்,

அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு

எனவும்,

அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு

எனவும்,

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்

எனவும்,

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

எனவும், திருவள்ளுவர் முப்பாலில் மொழிந்த கருத்துக்களை ஒத்த சிந்தனையைத் தமது மானுட நேய உணர்வினால் உள்ளம் கொண்டவராய்த் தமது வாழ்நாள் எல்லாம் உறுதியுடன் செயற்பட்ட தனிப்பெருமைக்குரியவர் ஆல்பர்ட் சுவைட்சர். மானுடத்தினை மிகவும் மதித்து, மாந்தர்தம் உயிர்காக்கும் தொண்டுக்குத் தம்மைத் தகுதியுடையவராக்கிக்கொண்டு, அறியாமையால் நோயிலும் துன்பத்திலும் அல்லலுற்ற நீக்ரோ மக்களுக்கு - அதுவும் ஐரோப்பியர்களால் தம்மை ஒத்த மனித இனமாகவே மதிக்கப்படாமல், அடிமைகளாகவே நடத்தப்பட்டு, விலங்குகளைப் போன்று கொடுமைப்படுத்தப் பட்ட அம்மக்களுக்குத் தொண்டு செய்யத்தாமேவிரும்பிச் சென்ற புனிதரான சுவைட்சர் - வள்ளுவர் குறளுக்கு வாய்த்த இலக்கியமாக விளங்குபவர் அன்றோ?

'அனைத்துயிரும் ஒன்றென்றெண்ணி, அரும்பசி எவர்க்கும் ஆற்றி, எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவர், அவர்தம் உள்ளந்தான் தூய நல்அறிவு நடமிடும் உள்ளம்' என்னும் வள்ளலார் வாக்கும் தமிழ் நெறியன்றோ? அப்படிப்பட்ட நெறியின் நடமாடும் வடிவமாகத் திகழ்ந்தவரன்றோ சுவைட்சர்!

வாழ்க அவர்நினைவு! வளர்க தொண்டு நெறி!

# 40
# உன்னைத் திருத்து

*1999*

**முனைவர் மு. தமிழ்க்குடிமகன்**

*உலக அரங்கில் ஒளிரும் மணிகளில் உருப்படியானதாய், உயர்வுமிக்கதாய்; உண்மை நிலைக்க உழைத்த பெருமை உடையதாய் உள்ள ஒப்பில்லா மணியை, வள்ளுவரை உலகினுக்கே தந்து சிறப்புப்பெற்றது இந்தநாடு. இன்று அவரது உணர்வுகள், அவரது விருப்பங்கள் எந்த அளவுக்கு வேரூன்றிச் செழித்து வெற்றிக்கனிகளைத் தந்திருக்கின்றன என்று நினைத்துப் பார்க்கின்ற நேரம். அதுவும், விளைந்த மண்ணுக்கு வள்ளுவம் விளைத்த பயன் என்ன என்பதை மதிப்பிட்டுப் பார்க்க வேண்டியது நம் கடமை.*

*வள்ளுவன் தன் சிந்தனைகளைத் தொகுத்து வெளியிட்டு இரண்டாயிரம் ஆண்டுகள் முடிந்துவிட்டன. அவனது முதிர்ந்த பட்டறிவும், பரந்த சிந்தனையும், உயர்ந்த குறிக்கோளும் 1330 சிமிழ்களுக்குள் அடங்கிவிட்டன.*

அந்த அருங்குறளின் பெருமைகளைச் சிறப்பித்து வள்ளுவம் பிறந்த தமிழகத்தில் பல குறிப்பிடத்தக்க வேலைகள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு பல்கலைக்கழகமும் குறள் ஆய்வுக்கென மூன்று இலக்கம் உருபாயைப் பெற்றிருக்கிறது. அது பெரும் பணி. மதி நுட்பம் நூலோடு உடை யார்க்கு மட்டும் மாபயன் அளிக்கும் பெரும்பணி. தமிழ்நாடு அரசு வள்ளுவர் கோட்டத்தையே உருவாக்கிச் சிறப்பித்திருக்கிறது. கேட்டுப் புரிந்துகொள்ளும் நாட்டம் உடைய நல்லோர், கல்வியறிவு மிக்க சான்றோர் ஆகிய அனைவருக்கும் செவிக்கும் சிந்தைக்கும் இன்பமூட்டும் கருத்தரங்குகளும் பட்டி மன்றங்களும் இன்று கணக்கின்றிப் பெருகிவிட்டன.

முப்பாலில் சிறந்தது எப்பால்? இப்படியொரு வினா. வள்ளுவர் பெரிதும் போற்றப்படுவதற்குக் காரணம் அவர் பாவலர் என்பதாலா? சிந்தனையாளர் என்பதாலா? அல்லது அறநெறியாளர் என்பதாலா? - இப்படி ஒரு நுணுகிய ஆய்வு. அருளுக்கும் பொருளுக்கும் மோதல்; அறிவுக்கும் அன்பிற்கும் ஈரணிகள். ஏன்? ஆடவரும் மகளிரும்கூடத் தங்கள் சிறப்புக்கும் பெருமைக்கும் வள்ளுவரைச் சான்றுகாட்டிப் போரிடும் சிறப்பு. வள்ளுவர் பெரிதும் வலியுறுத்துவது சமுதாய அறமா? தனிமனித அறமா? என்றோர் ஆய்வு. இத்தனையும் நடைபெறுகின்றன. சூடான தருக்கங்கள்; சுவையான செய்திகள்; இன்று நாடு வள்ளுவச் சுவையையும் பயனையும் பல்வேறு வகையிலும் மாந்திமாந்தித் திளைத்துக் கொண்டிருக்கிறது.

இவற்றிற்கிடையில் புதிய வினா ஒன்று புறப்படுகிறது. குறள் நூலின் உள்நோக்கிப் போகும் ஆய்வு வினாக்களையும் அழுத்திக் கொண்டு மேலெழும் அந்த வினாவில் பொருள் இருக்கிறது; புரட்சி இருக்கிறது; மேலே கூறிய மோதல்களில் ஈடுபட்டிருக்கும் அனைவரும் வியந்து திரும்பிப் பார்த்துத் திகைக்கும் அளவுக்கு அதில் ஆழம் இருக்கிறது. அது சில பேர்க்கு வரவுசெலவுக் கணக்குப்போலத் தோன்றலாம்.

ஆனால், 'ஆகாறு', 'போகாறு' என்ற இரண்டையும் ஒரே சீராக வைத்திருப்பதே பெரிய வேலையல்லவா? 'ஆகாறு' என்பதன் கை ஓங்கிவிட்டால் நன்மையன்றித் தீமையே இல்லை. 'போகாறு' வேகம் பெற்று ஆகாற்றை மேய்ந்து விடும் அளவுக்கு வந்தால் விளைவு என்ன? அதையும் வள்ளுவனே கூறிச்சென்றிருக்கிறான். அதனால் எழுந்திருக்கும் புதுவினா ஏற்புடையதானதே!

அந்த வினா இதுதான். 'வள்ளுவர் நெறி வென்றதா? தோற்றதா?'

ஏன் திடீரென இந்த ஐயம்? சில பேர் வியப்போடு இப் படிக் கேட்கிறார்கள். இந்த வினாவே வள்ளுவனை இழிவு படுத்துவதாகும். சிலர் இப்படியும் தெரிவிக்கிறார்கள்.

இந்த ஐயம் திடுமென வெடித்ததன்று. நெடுங்கால மாகப் புகைந்துகொண்டிருந்தது. இன்று நெருப்பாகத் தெரி கிறது. வள்ளுவனைப் பெற்ற நாம் அவனால் பெற்ற பயன் என்ன என்று நம்மை நாமே அளந்து பார்த்துக் கொள்வ திலே எந்தத் தவறுமில்லையே! தன் குற்றம் நீக்குதல், தன்னைத் தானே அறிதல் ஆகியவை வள்ளுவன் நெறிகளல்லவா!

அதனால் வள்ளுவன் நெறியின் வெற்றியின் அளவும், தோல்வி கண்டிருந்தால், அப்படி மன்பதையில் சோரம் போய் விட்ட பகுதிகளின் தன்மையும் கணக்கிடப்பட்டு ஒப்பிட்டுப் பார்க்கப்பட வேண்டியது முறையானதுதான்.

ஆனால் நாம் இப்போது இந்த வினாவுக்கான விடையை ஆராய்வதைச் சற்று ஒதுக்கிவிட்டு, இப்படியொரு வினா இரண்டாயிரம் ஆண்டுகட்குப் பின்னர் எழும் என்று வள்ளு வன் எதிர்பார்த்திருப்பானா என்பதை எண்ணிப்பார்த்தால் அது நமது சிந்தனைக்குப் புதிய விருந்தளிக்கும்.

இந்த வினா ஒவ்வொரு காலக்கட்டத்திலும் கட்டாயம் எழும் என்பது வள்ளுவனுக்கு உறுதியாகத் தெரியும். இந்த வினா எழும் என்பது தெரிந்துதான் அதற்கு - வெற்றிக்கும்

தோல்விக்கும் காரணமும், சான்றும் தேடிப் புறப்படுபவன் திகைத்துத் திண்டாடக்கூடாது என்றுதான் வள்ளுவனே அந்த வினாவிற்குரிய விடையையும் சொல்லாமல் சொல்லி விட்டுப் போயிருக்கிறான்.

அப்படியா! இந்த வினாவுக்கான விடையே திருக்குற ளில் இருக்கிறதா? சொல்லுங்கள். வெற்றியா? தோல்வியா? இரண்டில் ஒன்று தெரிந்து கொள்ளத் துடிக்கிறோம். ஆனால் நம் துடிப்பைக் கொஞ்சம் அடக்கிக் கொண்டு சற்றுத் துருவிப் பார்க்க வேண்டும். ஒரே வரியில் விடை சொல்லக்கூடிய அளவுக்கு இடம் காட்டாமல், அந்த விடையை ஒளித்து வைத்து விட்டுச் சென்றிருக்கிறான் திறமைமிக்க வள்ளுவன். விடையை மூன்றாகப் பிரித்து மூன்று இடங்களில் ஒளித்து வைத்தான். ஆனாலும் அடையாளம் கண்டு கொண்டு மூன்றையும் ஒட்ட வைத்து முழுவிடை காணும் அளவுக்கு ஒரு குறியும் காட்டி யிருக்கிறான். இந்த நுணுக்கத்தைப் பார்த்துத்தான் சில திரைப்படக் கதைகள் அமைந்தனவோ என்னவோ!

விடைகாணும் வேலையை இனியும் தள்ளிப் போட மாட்டோம். உடனே தொடங்குவோம்.

வள்ளுவன் இந்த உலகைப் பற்றி நன்கு தெரிந்து கொண் டான். பட்டறிந்து, பட்டறிந்து உலகியலறிவு என்பதை முழுமையாகப் பெற்றவன். அவன், இந்த உலகு .செப்பம் பெற, சீரிய வாழ்க்கை காண முதலில், மாந்தனை விலங்காகக் காட்டும் தீய உணர்ச்சிகளை அவனிடமிருந்து போக்க வேண் டும் என்று விரும்பினான். தன் வாழ்வின் நோக்கமே உலகத் தில் உள்ள ஒவ்வொருவனையும் திருத்துவதற்கு உருப்படி யான வழியைச் சொல்வதுதான் என்று நினைத்தான். ஒரு வனை முன்னிறுத்தி அவனுக்கு அறிவுரை சொல்லித் திருத்த நினைத்தால் உடனே என்ன செய்கிறோம்? அவனது நல்லியல் புகளைப் புகழ்ந்து கொண்டே குறைகளை நயமாகச் சுட்டிக் காட்ட வேண்டியுள்ளது. அப்பொழுது தான் அவனது மன மும் குளிர்கிறது; திருந்தலாம் என்ற விருப்பமும் பிறக்கிறது.

வள்ளுவன் இந்த உளவியல் அடிப்படையில்தான் தன் சீர் திருத்தப் பணியைச் செய்திருக்கிறான்.

வள்ளுவன் அறம்பாட வந்த அறிஞன். அறநெறி என்றால் என்ன என்பதை உலகிற்குத் தெளிவாக உணர்த்தி விட வேண்டும் என்று துடித்தவன். அறத்துப்பால், மாந் தனிடம் காணும் சிறப்பியல்புகளை அவனது உச்சி குளிரப் பாராட்டு வது; தூக்கிப் பேசுவது. இல்லறம் என்பது மாந்தனுக்கு இயற் கையே அமைத்துக் கொடுத்த ஒரு துறை. அதனால் தானே ஆண், பெண் தோற்றம்! இல்லறத்தின் சிறப்புப் பற்றி நுணுகிப் பேசி, மாந்தன் காட்டும் அன்பின் சிறப்பு, விருந்து மாண்பு, இன்சொல் இனிமை, செய்ந்நன்றி மறவாமையால் ஏற்படும் செம்மாந்த நிலை, நடுவு நிலையில் ஏற்படும் மன அமைதி, அடக்கத்தில் தோன்றும் பெருமிதம் - இவ்வளவு சொல்லிய பின் அவை அத்தனைக்கும் உச்சமான, ஒரு வகையில் இத் தனைப் பண்புகளையும் உள்ளடக்கக் கூடிய ஒழுக்கம் உயிரி னும் ஓம்பப்படும் என்று கூறிவிட்டான். பண்புகளின் பிறப் பிடமாக உள்ள மாந்தன் ஏன் சில நேரம் கீழ்மனம் படைத்த வனாகிறான்? இதை எண்ணுகிறான். மாந்தனின் பண்புகளைப் பாராட்டி அவனைக் குளிரவைத்து விட்டு, மெல்ல அவன் றன் குறைகளைச் சுட்டுகிறான். ‘பிறனில் விழையாதே!’ என்கி றான். ‘ஒழுக்கம்’ வரை உவந்து கேட்ட மாந்தன், ஒரு குறையைச் சொன்னதும் வெகுண்டெழுகிறான். வள்ளுவனுக்கு நிலைமை புரிந்துவிட்டது. உடனே பொறுமையின் பெருமைபற்றிப் பேசினான். வெகுண்டெழுந்த மாந்தனுக்கோ சற்று வெட்க மாகப் போய்விட்டது. மெல்லத் தலைகுனிந்தான். தேவை யில்லாமல் சினந்து கொண்டோமோ என்று அவன் மனம் நினைத்தது. வள்ளுவன் இதுதான் வாய்ப்பு என்று கருதி அடுத்தடுத்துத் தாக்குதல்களை வேகமாக வீசுகிறான்.

பொறாமை, திருட்டுத் தன்மை, புறங்கூறல், வெட்டிப் பேச்சு ஆகிய குறைகளை அடுக்கிவிட்டு ‘மறந்தும் பிறன் கேடு சூழற்க’ என்று அன்போடு கேட்டுக் கொள்கிறான்.

கேட்டுக் கொண்டிருந்தவனுக்கோ மனம் உறுத்துகிறது. எதிர்த்துப் பேசிவிடுவோமா? என்று நினைக்கிறான். என்றாலும் ஒரு பெரியவர் கூறும்போது அடிக்கடி தலையை நீட்டுவது நல்லதன்று என்ற ஒரு மனப்பக்குவம் மின்னல் போல வெட்டிச்செல்கிறது. பொறுமையோடு வள்ளுவனையே பார்த்துக் கொண்டிருக்கிறான்.

மாந்தன் ஓரளவு பக்குவமான மன நிலையைப் பெற்று விட்டான் என்று தெரிந்ததுமே வள்ளுவன் அவன் கடைப் பிடிக்க வேண்டிய நெறிகளைச் சுருக்கிக் காட்டுகிறான். 'ஒப்புரவறி'- ஈகையுணர்வு வேண்டும்.- அப்பொழுதுதான் புகழ் வரும்; அருள் வேண்டும். அது இருந்தால் புலால் மறுக்கலாம்; இப்படிக் கூறிக்கொண்டே வாய்மையின் வலிமையை, சினத்தின் கேட்டை, இன்னா செய்யாமையால் வரும் ஏற்றத்தையெல்லாம் கூறிப் 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக' என்று முடித்தான். உலகில் துறவு வாழ்வும் சரிசம இடம் பெறுவது என்பதை உணர்ந்து தவமும் செய்யலாம் என்று சுட்டினான். இதுதான் நெறியென்பதைத் தெளிவு படுத்தினான்.

இவ்வளவு செய்திகளே போதும் என்று கருதிய வள்ளுவன் மாந்தனை அனுப்பிவிட்டு அப்பால் செல்கிறான். ஓரிடத்தில் உட்கார்ந்து எண்ணிப் பார்க்கிறான். அவனோ சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லிவிட்டான். இனி, உலகில் எந்தத் தவறும் நடக்காது என்று முழு நம்பிக்கை கொள்கிறான். சிலநாள் கழித்துப் பார்த்தால் அவன் எவையெவை கூடாவென்று அழுத்தந்திருத்தமாகக் கூறினானோ அவையெல்லாம் அந்த 'மாந்தன்' தலைமையிலேயே வேகமாக நடைபெறுவதைக் கண்டான். வள்ளுவனுக்கு அழுகையே வந்துவிட்டது. 'அடடா' வாழ்க்கை பற்றிச் சொன்னோம். மாந்தன் மெய்யுணர்ந்திருப்பான் என்றல்லவா நினைத்தோம்! எல்லாம் விழலுக்கு நீர் பாய்ச்சியது போலாகி விட்டதே! இனி மாந்தன் திருந்தவே மாட்டானா? வியப்பும் வினாவுமாக வள்ளுவன் தடுமறினான். பிறகுதான் வள்ளுவனே மெய் யுணர்வு பெற்றான்.

*ஆம்! மாந்தன் திருந்த மாட்டான்!*

*இந்த எண்ணம் அதிகமாக, அதிகமாக உலகைத் திருத்த வேண்டும் என்ற அவாவே வள்ளுவனுக்கு இல்லாமல் போய் விட்டது. அதனால்தான் மாந்தனுக்காக அறத்துப் பாலைத் தொடங்கி, கடைசி மூன்று அதிகாரத்தையும் தன் மன நிலையை எதிரொலிப்பதற்காக எழுதிக் கொண்டானோ என்று எண்ணத் தோன்றுகிறது. அதனால்தான் 'மெய்யுணர் தல்' 'அவா அறுத்தல்' என்ற தலைப்புக்கள் அமைகின்றன. தன் அறிவுரைகளைக் கேட்டு மாந்தன் திருந்தவில்லையே, அதற்கு மாறாகத் தவறுகளை மேலும்மேலும் செய்து கொண்டு போகி றானே என்ற மனவருத்தம் பெரிய சோர்வாக உருவெடுக் கிறது. இனிமேல் இந்த மாந்தன் எப்படியோ போய்விட்டுப் போகிறான்; நான் இவ்வளவு பக்குவமாகப் பாடுபட்டு எடுத் துச் சொல்லியும் கேட்கவில்லையே இவன்' என்று வேதனை யடைகிறான். அதனால் 'சரி இனி எதுவும் அவனவன் விதிப் படிதான் நடக்கும்' என்ற முடிவுக்கு வந்துவிட்டான்.*

*அறத்துப்பால் முடிக்கும்பொழுது வள்ளுவன் மனச் சோர்வோடு, உள்ளத்தில் கப்பிக் கொண்டிருக்கும் வேதனை யோடு தன்னால் ஆவது எதுவுமில்லை என்ற நினைவோடு தன்னம்பிக்கையிழந்துதான்,*

**ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று**
**சூழினும் தான்முந் துறும்**

*என்று முடிக்கிறான்.*

*மதி வலிமையோ, அறத்தின் மீது கொண்ட பற்றோ, தன் சொல்லைக் கேட்டே மாந்தன் திருந்திவிடுவான் என்ற நம்பிக்கையோ - இவற்றில் எதுவும் பயன்படவில்லை. விதி வழியே உலகம் செல்வதைத் தடுக்க முடியாது என்றல்லவா வள்ளுவன் கூறியிருக்கிறான்! இதை நன்றாக எண்ணிப் பார்க்க வேண்டும்.*

*அறம் உரைக்க வந்த நிலையில் தோல்வியுற்ற வள்ளுவன் எந்தச் செயலிலும் ஈடுபட மனமின்றி ஒதுங்கியிருந்தான்.*

அவன் ஒதுங்கியிருந்தாலும் அவன் மனம் வாளாவிருக்குமா! அது எத்தனையோ சிந்தனைக் கோலங்களைப் போடுவதும் அழிப்பதுமாகத் தொடர்ந்து ஏதையாவது செய்து கொண்டிருந்தது. இந்த நிலையில் வள்ளுவனுக்குத் திடுமென ஓர் எண்ணம் உண்டாகிறது. தனித்தனியாக மாந்தனைத் திருத்துவது நல்லது என்றாலும் அது முழு வெற்றியளிக்காது. அதனால், பொதுவாழ்வில் இறங்கி அரசு, அதன் ஆணை வலிமை இவற்றைக் கையாண்டு, இவற்றோடு பொருளாட்சியையும் செம்மைப்படுத்திவிட்டால், நாடு நலிவு நீங்கிப் பொலிவு பெற்று விளங்கும். அந்தப் பூரிப்பான காட்சியில் தனி மாந்தனின் சிறு குறைகள் தென்படாமலே மறைந்துவிடும் என்ற புது நம்பிக்கை கொண்டான். உடனே அரசியலில் இறங்கி விட்டான். இறைமாட்சியைப் புகழ்ந்துவிட்டு நாடு முழுவதும் நல்ல கல்வியைப்பெற முயற்சி மேற்கொள்ளுகிறான். பல கூட்டங்கள் நடத்தி உரையாகவும் பாட்டாகவும் கேள்விச் செல்வத்தைப் பரப்புகிறான். அறிவு பரவுகிறது. அரசுப் பொறுப்பும் அவனிடத்து வந்துவிட்டதால் நாட்டில் ஏற்படும் குற்றங்களை அவ்வப்போது கடிந்து கொள்கிறான்.

இவனது இந்த முயற்சிக்கு அறிவறிந்து மூத்த அறிவுடைய பெரியாரின் துணை கிடைக்கிறது. அரசியலில் ஊதிய வேட்கைக்காக ஒட்டிக் கொண்டிருந்த சிற்றினம் ஓடி ஒளிகிறது. பிறகு, தெளிவான செயற்பாடுகள் மேற்கொள்ளப்படுகின்றன. நாட்டில் சிலபேர் - தங்கள் ஊதிய நோக்கிற்கு இடமில்லையே என உருகிய கொள்ளையர் சிலர் - வள்ளுவச் சான்றோனைக் கண்மூடி எதிர்க்கின்றனர். இந்நிலையில் தன் வலியும் மாற்றான் வலியும் எந்த அளவு என்பதைக் கணக்கிட்டே அடியெடுத்து வைக்கிறான். காலம், இடம் பார்த்து, திட்டங்களில் தெளிவும் செய்துகொண்டு வினையாற்றுகிறான். 'சுற்றம் தழுவிச் சோர்வைத் துறந்ததால் அரசியலில் வள்ளுவன் விரைந்தபுகழோடு வளர்கிறான். செங்கோல் அரசோச்சுகிறது. கொடுங்கோலை மனத்தாலும் நினைக்கவில்லை. சட்டங்களை நிறைவேற்றுவதிலும் வெளிக்காட்டாமல் தெளி

வான அமைதிப் போக்கைக் கடைப்பிடிக்கிறான். உரிய நேரங்களில் கண்ணோட்டமும் கருதுகிறான்; ஒற்றர் துணையுடன் ஊக்கம் தளராமல், மடியின்றி ஆள்வினை கொண்டு அரசியலில் மேலோங்கி நிற்கிறான்.

இவன் தலைமையில் சிறந்த அமைச்சரவை அமைகின்றது. அரசின் கொள்கைகளைச் செயற்படுத்தச் சொல் வன்மை பயன்படுத்தப்படுகிறது. வினையில் தூய்மையும், திட்பமும் இருக்கின்றன. அவ்வினைகளைச் செய்யும் வகை தெரிந்து தூதுவர்களைக் கொண்டே பிறரோடு தொடர்பு கொண்டு ஆட்சி செய்து வருகிறான். இந்நிலையில் கூட இருந்தே யாரும் குழிபறித்துவிடாமல் தன்னைச் சேர்ந்தொழுகுவாரிடம் கூட அளவோடு தொடர்பு வைத்துக் கொள்கிறான். பின் நாட்டின் அரண் முதலானவற்றை வலிமைப்படுத்தி வைத்துக் கொண்டு மக்களின் பொருளியல் வாழ்வைச் சரி செய்யப் புறப்படுகின்றான். படை பலம் பெருக்கி, நட்பும், பழைமை போற்றலுமாகிய சிறப்புத் துணைகளோடு சிறந்து நிற்கின்ற வள்ளுவனுக்கு அவனையறியாமலே எதிர்ப்பு கிளம்புகிறது. தீ நட்பும், கூடா நட்பும் ஒதுக்கியதால், அரசியல் புல்லுருவிகளாகவும் புல்லறிவாளர்களாக வும் உள்ள பேதையர் சிலர் 'இகல்' பெருக்கி வருகின்றனர். உட்பகை ஒருபுறம் வளர்கின்றது.

என்றாலும் இவற்றைத் துச்சமெனத் தள்ளி, வள்ளுவன் சமுதாயச் சீர்திருத்தத்தில் இறங்குகிறான். பெரியாரைப் பிழையாத நெறியிருப்பதால் தெம்போடு நடைபோடுகின்றான். சில ஆடவர் பெண் வழிச் சார்ந்து போகும் பேதைமையைக் கண்டிக்கிறான். வரைவின் மகளிரால் ஏற்படும் ஒழுக்கக் கேடுகளைப் போக்கப் பாடுபடுகிறான். கட்குடியை நிறுத்த முயற்சி மேற்கொள்கிறான். நெடுநாட்களாக இப்பழக்கம் வேரூன்றியிருந்ததால் சமுதாயத்தின் ஒரு பகுதியினர் முணுமுணுப்பதும், எதிர்ப்பு கிளப்புவதும் அவன் காதுக்கு எட்டுகின்றன. என்றாலும் தொடர்ந்து செயற்படுகிறான். சூதாட்டத்தைத் தடை செய்கிறான். நாடெங்கும் உடல் நலத்தோடு

அனைவரும் உளநலமும் பெறவேண்டுமென்று மருந்தகங் கள் நிறுவுகிறான்.

வள்ளுவனுக்கே ஒரு பெரிய மனநிறைவு. தனி மனிதனைத் திருத்தும் முயற்சியில் சோர்வு ஏற்பட்டாலும் பொதுவாழ் வில் மக்களுக்காகப் பாடுபடுவதிலே பூரிப்பு ஏற்படுவதை உணர்ந்தான். அரசியல், பொருளியல், சமுதாய சீர்திருத்தங் களில் நாடு பெரிதும் செம்மையுற்று விட்டதாக நினைத்து உளம் மகிழ்ந்தான். குடிமையின் சிறப்பு, மானத் தின் மாண்பு, சான்றாண்மையின் உயர்வு, பண்பின் பாங்கு ஆகியவற்றை உரத்த குரலில் உரைக்கின்றான். கடமைகளைச் செய்வதிலே ஏற்படும் பெருமிதம் கண்டு அவனுக்கே ஓர் இனம் புரியாத உணர்ச்சி, அடடா! குடிசெயல் வகையின் சிறப்புத்தான் என்னே! ஏறக்குறைய எல்லாம் செய்துவிட்ட மனநிறை வோடு ‘உலகத்தார்க்காணி’யாகிய உழவரைப் போய்ப் பார்க்கிறான். அவன் உழைக்கிறான். மாடாய் உழைக்கிறான். ஓடாய்த் தேய்கிறான். ஆனால் ஊடுருவிப் பார்த்த பிறகுதான் சில உண்மைகள் விளங்கின. நாட்டில் வறுமைப் பிணி தலை தூக்கிப் பலரை வாட்டிக் கொண்டி ருப்பது தெரிகிறது.

அவன் திகைத்தான்; திடுக்கிட்டான். அப்படியானால் தான் இதுவரை செய்துவந்த அரசியல், பொருளியல், சமுதாயப் பணிகளின் விளைவு? நல்குரவு நாட்டில் வேரூன்றி நிற்கிறது, இரத்தல் தொழில் எங்கும் நடக்கிறது. வைத்துக் கொண்டே இல்லையென்னும் வண்கணாளர்கள் கல்மனத் தோடு காட்சியளிப்பதை வள்ளுவன் பார்க்கிறான். உள்ளம் வெதும்புகிறான். இதுவரை தன் உழைப்பெல்லாம் உருப் படியான பயன் விளைவிக்கவில்லை என்பது தெளிவாகி விடுகிறது. சிலபேர் நாட்டின் செல்வத்தைச் சேர்த்துக் கொண் டனர்; பலரது வாழ்வையும் வளத்தையும் உறிஞ்சி விட்டனர்; அதனால் பலர் நடுத்தெருவுக்கு வந்து பல்லிளித்து வாழும் நிலைக்கு வந்துவிட்டனர்.

இந்நிலைக்கு யார் காரணம்? படைத்தவன் குற்றமோ என்று நினைத்தான் வள்ளுவன். அவன் மேல் பாய்ந்தான். அதுவும் சில நொடிகள் தாம். அந்த உணர்ச்சி தணிந்ததும் வள்ளுவன் உண்மை உணர்ந்துவிட்டான். நாட்டில் எங்கு நோக்கினாலும் மேலோங்கி நிற்பது கயமை; கொடிகட்டிப் பறப்பது கயமை.

இதற்கு மேலும் அவன் பொது வாழ்வில் நீடிக்க விரும்ப வில்லை. புளித்துப் போய்விட்ட பொதுவாழ்வை, தன்னையே சாற்றைப் பிழிந்துவிட்டுச் சக்கையை எறிந்தது போலத் தள்ளி விட்ட பொதுவாழ்வை, மன்பதையைச் சீர்திருத்தும் பணியை உதறிவிட்டான். அவன் உள்ளம் சோர்ந்து பொது வாழ்வை விட்டு வெளியே வரும்போது இப்படி முணுமுணுத்தான்.

எற்றிற் குரியர் கயவர்ஒன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து

பொருட்பாலை ஆர்வத்தோடு தொடங்கிய வள்ளுவன், எவ்வளவோ முயற்சி செய்து பார்த்துவிட்டு 700 பாக்களும் இயற்றிவிட்டு இறுதியில் கயமை கண்டு மனம் கைத்து எரிச்ச லோடு முடிக்கிறான் என்பதை மறந்துவிடக்கூடாது.

அறத்துப்பாலின் முடிவில் தன்னம்பிக்கை இழந்து, பொருட்பாலின் இறுதியில் எரிச்சலுற்ற வள்ளுவன் ஊரை, உலகைத் திருத்த முற்படுவதைவிடத் தன்னை, தன் மனைவி மக்களைச் செம்மைப்படுத்தி இல்லறத்தை இனிய அறமாக் கினாலே போதும் என்று மனநிறைவு கொண்டான். தனியொரு குடும்பம் பண்பில் மிளிர்ந்து, அறிவில் ஒளிர்ந்து, இன்பத்தில் திளைத்தாலேயே நாடு உருப்பட்டுவிடும் என்று அலைந்து நலிந்த வள்ளுவன் ‘அலைந்து அலைந்து வீணே அழிதல் அழகன்று’ என்பதை உணர்ந்து வீட்டின் பக்கம் கவனம் செலுத்தினான். அவன் நினைத்தபடியே அவனது இல்லறம் சிறப்பாக அமைந்தது. அற முயற்சியில் அவன் அடைந்தது சோர்வு; பொருள் முயற்சியில் அவன் எய்தியது எரிச்சல்;

ஆனால் இல்லறம் சுவைத்து இன்பத்துப் பாலை முடிக்கும் பொழுது அவன் அடைந்தது இன்பம்; எல்லையற்ற இன்பம்.

அதனால் வள்ளுவன் காமத்துப்பாலை 'இன்பம்' கொண்ட பூரிப்போடு முடிக்கிறான்.

**ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்**
**கூடி முயங்கப் பெறின்**

இதிலே 'இன்பம்' 'இன்பம்' என்றே இரு தடவை உரைப் பதைக் காணலாம். தனி வாழ்வில் அவன் பெற்ற மனநிறைவில் அவனை அறியாமலே இன்பம் இரட்டிப்பாகிறது.

**ஊரைத் திருத்துமுன் உலகைத் திருத்துமுன்**
**உன்னைத் திருத்தடா முதலில்**

என்று யாரோ பாடுவது கேட்கிறது.



